தி. பா. நி. (க. வெ.) வரிசை எண்—631

# உயர் கணக்கியல்

## (இரண்டாம் பகுதி — முதல் புத்தகம்)

(பட்டப் படிப்பிற்குரியது)

(திருத்தப்பட்ட பாடத்திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகின்றது)

ஆசிரியர்

அ. குமாரராசு, பி.காம். (ஹானர்சு),
வணிகவியல் பேராசிரியர்,
அறிஞர் அண்ணு அரசினர் ஆண்கள் கலைக்கல்லூரி,
நாமக்கல்



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—June, 1975

T.N.T.B.S. (C.P.) No. 631



**ADVANCED ACCOUNTANCY—Part II (Book I)**

A. KUMARA RAJ

**Price Rs. 24-60**

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

*Printed by*
**Nathan & Co.,**
**Velachery Main Road,**
**Madras—600042**

# அணிந்துரை

## திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினைந் தாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பட்டப் படிப்பு வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தை யும் தமிழிலேயே கற்று வருகின்றனர். 1969ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய் துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளில் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்களுக்குத் தமிழிலேயே பயிற்று விப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக் கழகமும், சென்னைப் பல்கலைக் கழகமும் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், மெய்ப் பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டம் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூல நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான **'உயர் கணக்கியல்'—இரண்டாம் பகுதி (முதல் புத்தகம்)** என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் **631** ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான **35** நூல்களையும் சேர்த்து இதுவரை **666** நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக் கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும், கலையியற் பாடங்களை யும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களை யும் பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயில வேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளர வேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளி தாக, விரைவாக வளரவேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ் எங்கும் தமிழ்' என்ற குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு, தமிழகத்து ஆசிரியப் பெருமக்களையும் மாணவர்களை யும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரியதாகுக.

**இரா. நெடுஞ்செழியன்**

# பொருளடக்கம்


பக்கம்

**1. வாடகைக் கொள்முதல் முறையும் தவணைக் கொள்முதல் முறையும் ... 1**

*விளக்கம்—இரண்டு முறைகளுக்கும் உள்ள வேறுபாடுகள்—வட்டி கணக்கிடுதல்—தேய்மானம்—ரொக்க விலையைக் கண்டுபிடித்தல்—தவணைத் தொகை செலுத்தத் தவறுதல்—வாடகைக் கொள்முதல் வாணிகக் கணக்கு—தவணை முறை—வினாக்கள்—பயிற்சி.*

**2. விற்பனைத் திருப்ப அடிப்படையில் சரக்கு அனுப்பல் 64**

*ஒரோவழி நடவடிக்கைகளைப் பதிதல்—அதிக நடவடிக்கைகளைப் பதிதல்—மிக அதிக நடவடிக்கைகளைப் பதிதல்—மாதிரி ஏடுகள்—வினாக்கள்—பயிற்சி.*

**3. உரிமை ஊதியம் அல்லது உரிமைத் தொகை ... 74**

*விளக்கம்—குறைந்தளவுக் குத்தகை—குறை உற்பத்தியை மீட்டல்—வேலை நிறுத்தம் போன்ற சூழ்நிலைகளால் உற்பத்தி பாதிக்கப்படும்போழ்து—உரிமை ஊதியம்—கீழ்க் குத்தகை—வினாக்கள்—பயிற்சி.*

**4. துறைவாரிக் கணக்குகள் ... 136**

*செலவினங்களைப் பிரித்தல்—துறைகளிடையே சரக்கு மாற்றம்—வினாக்கள்—பயிற்சி.*

பக்கம்

**5. கிளைக் கணக்குகள்** ... 166

கிளைகளின் வகைகள்—ரொக்க விற்பனைக் கிளைகள்—ரொக்கத்திற்கும் கடனுக்கும் விற்கும் கிளைகள்—விற்பனை விலையில் கிளைக்குச் சரக் கனுப்பல்—சரக்கிருப்பு—கடனாளிகள் முறை—தனித்தியங்கும் கிளைகள்—கிளைகட்கிடையே நட வடிக்கைகள்—கிளையின் இருப்பாய்வைத் தலைமை யகத்தின் ஏடுகளில் இணைத்துக் கொள்ளுதல்—வெளிநாட்டுக் கிளைகள்—வினுக்கள்—பயிற்சி.

**6. கூட்டுப் பங்குக் கம்பெனிக் கணக்குகள்** ... 299

கம்பெனி இலக்கணம்—கூட்டாண்மைக்கும் கூட்டுப் பங்குக் கம்பெனிக்கும் உள்ள வேறுபாடு—கூட்டுப் பங்குக் கம்பெனியின் வகைகள்—கம்பெனி அமைப்பு—அமைப்பு முறையேடு—செயல்முறை விதிகள்—தகவலறிக்கை—பங்கு ஒதுக்கீடு—தொழில் தொடக்கச் சான்றிதழ்கள்—பங்குகளின் வகைகள்—கடனீட்டுப் பத்திரங்கள்—மேலாண்மை—கூட்டங்கள்—சட்டமுறை அறிக்கை—படிவங்கள்—அட்டவணை 'ஏ'—ஆண்டறிக்கைப் படிவம்—கணக்கேடுகள்—பங்கொதுக்கீட்டுப் பதிவு கள்—அழைப்புத் தொகையைக் கோருதல்—முன் கூட்டிச் செலுத்தப்பட்ட அழைப்பு—அதன்மீது வட்டி—முனைமத்தில் பங்கு வெளியீடு—பங்கு ஒறுப்பிழப்பு—ஒறுப்பிழப்புப் பங்குகளை மீண்டும் வெளியிடல்—பங்குகளைத் தள்ளுபடியில் வெளி யிடுதல்—தோற்றுவிப்பாளர்கட்குப் பங்குகளை வெளியிடல்—உரிமைப் பங்குகளை வெளியிடல்—மீள்தகு முன்னுரிமைப் பங்குகள்—வினுக்கள்—பயிற்சி.

**7. கம்பெனிக் கணக்குகள்—கடனீட்டுப் பத்திரங்கள்** 568

கடனீட்டுப்பத்திர வெளியீடு—முனைமத்தில் வெளியிடல்—தள்ளுபடியில் வெளியிடல்—பல வகை நிபந்தனைகளில் வெளியிடல்—கடனீட்டுப்

பக்கம்

பத்திரங்களைத் துணைப் பிணையமாக வெளியிடல்—கடனீட்டுப் பத்திர மீட்பு—கழிவுநிதி முறையில் மீட்டல்—காப்பீட்டுத் திட்டாவண முறையில் மீட்டல்—சீட்டெடுக்கும் முறையில் மீட்டல்—வெளிச் சந்தையில் வாங்கும் முறையில் மீட்டல்—தன் கடனீட்டுப் பத்திரங்கள்—மாற்றிக் கொள்ளுதல்மூலம் கடனீட்டுப் பத்திரங்களை மீட்டல்—ஒப்புறுதி—நிலை ஒப்புறுதி—ஏடுகளில் பதிதல்—பகுதி ஒப்புறுதி—பயிற்சிகள்.

**8. கம்பெனிக் கணக்குகள்—தொழிலை வாங்குதல் ... 728**

தொழிலை வாங்குதல்—வாணிக நற்பெயர்—விற்குநர் பொருட்டுக் கடனுளிகளையும், கடனீந்தோரையும் வாங்கும் கம்பெனி எடுத்துக் கொள்ளல்—வாங்கும் கம்பெனியின் ஏடுகளில் தொழிலை வாங்கும்பொழுது அதே கணக்கேடுகளில் பதிதல்—கூட்டுருவாக்கத்திற்கு முந்தைய இலாபம்—கணக்கிடும் முறை—விற்பனை விகிதத்தைக் கணக்கிடல்—எடை ஏறிய விகிதம்—பயிற்சிகள்.

**9. இறுதிக் கணக்குகள் ... 840**

இலாப-நட்டக் கணக்கு—கடனீட்டுப்பத்திர வட்டி—தேய்மானம்—மேலாண்மை ஊதியம்—இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கு—இருப்புநிலைக் குறிப்பு — படிவம்—அட்டவணைகள் — இயக்குநர் அறிக்கை — தணிக்கை அறிக்கை — வினாக்கள் — பயிற்சிகள்.

# 1. வாடகைக் கொள்முதல் முறையும் தவணைக் கொள்முதல் முறையும்

## (Hire Purchase System & Instalment Purchase System)

பொருளின் விலையை ஒரே தடவையாகக் கொடாமல் பல தவணைகளில் செலுத்துவதைக் காண்கின்றோம். இவ்வாறு தவணை வழி விலை செலுத்துவதில் இரு முறைகள் உள்ளன. ஒன்று வாடகைக் கொள்முதல்முறை (Hire purchase system). பிறி தொன்று தவணைக் கொள்முதல்முறை (Instalment system). முதலில் ஒப்பந்தம் செய்து, தொகை செலுத்தியவுடன் பொருள் வாங்குபவ ரிடத்தில் தரப்படுகிறது. ஆனால், உரிமை மாற்றித் தரப்படுவதில்லை. இறுதித் தவணையைச் செலுத்தவில்லையாயினும், விற்றவர் அப் பொருளை மீண்டும் பெற்றுக் கொள்ளும் உரிமையைப் பெறுகிறார். இதுகாறும் வாங்கியவர் செலுத்திய தவணைத் தொகைகள் பொருளிற்கான வாடகையாகக் கருதப்படும். எனவே, அவர் செலுத்திய தொகையைத் திருப்பித் தர வேண்டுவதில்லை. இறுதித் தவணையும் செலுத்திவிடின், அப்பொருளின் உரிமை வாங்குபவரைச் சார்கிறது. இம்முறை வாடகைக் கொள்முதல் (Hire purchase) எனப்படும்.

தவணைக் கொள்முதல் முறையிலும், விலை பல தவணை களாகச் செலுத்தப்படுவது உண்மையாயினும், பல வழிகளில் அது வாடகைக் கொள்முதல் முறையினின்றும் மாறுபடுகிறது. தவணைக் கொள்முதல் முறையில் ஒப்பந்தம் எழுதப்பட்டவுடன், பொரு ளுடன் உரிமையும் மாற்றித் தரப்படுகிறது. இதனால் வாங்குநர் பொருளின் உரிமையாளராக மாறிவிடுகிறார். பின்னர், தவணை களைச் செலுத்தவில்லையாயினும், விற்குநர் பொருளை மீண்டும் பெற முடியாது. அதன் விலையைத்தான் கோர முடியும். அதா வது தரவேண்டிய தொகைக்காக வழக்குப் போடலாம்.

வாடகைக் கொள்முதல் முறையில் வாங்குநர் பொருளின் உரிமையைப் பெறவில்லையாதலால், அதனைப் பிறர்க்கு மீண்டும்

விற்கவோ, மாற்றித் தரவோ முடியாது. ஆனால், தவணை முறையில் வாங்குநர் பொருளின் உரிமையாளராகி விடுவதால் அதனை விற்கவும், பிறர்க்கு மாற்றித் தரவும் முடியும்.

இவ்விரு முறைகளிலும், பொருளின் விலை சாதாரணமாக ரொக்கங் கொடுத்து வாங்குதலினும் கூடுதலாகவே இருக்கும். காரணம் விலை முழுவதையும் உடனடியாகப் பெறுவதில்லை. எனவே அதற்கான வட்டியையும் அவ்விலை உள்ளடக்கியிருக்கும்.

எனவே, இவ்விரு முறைகளிலும் பதியும்போழ்து ரொக்க விலையையும், அதன்மீது கூட்டியிருக்கும் வட்டியையும் உணர்தல் இன்றியமையாததாகிறது. வாங்குநர் ஏடுகளில், கொடுக்கும் விலை முழுவதையும் சொத்துக் கணக்கில் பற்று வைக்கக்கூடாது. காரணம் அதில் வட்டியும் அடங்கியிருக்கிறது. எனவே, ரொக்க மதிப்பினை மட்டிலுமே சொத்துக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். கூடுதலாகக் கொடுக்கும் தொகையானது வட்டிக்காக ஆதலால், வட்டிக் கணக்கில் அதனைப் பற்று வைக்க வேண்டும். ஒவ்வொரு தவணைத் தொகையிலும் இவ்வாறு ரொக்க மதிப்பினையும், அதில் அடங்கியுள்ள வட்டித் தொகையினையும் கண்டு பிடித்துச் சொத்துக் கணக்கிலும் வட்டிக் கணக்கிலும் பகிர்ந்து பதிதல் இன்றியமையாததாகின்றது.

### வட்டி கணக்கிடுதல்

சொத்தின் மதிப்பினையும் வட்டி விகிதத்தையும் கொடுத்திருப்பின், வட்டி கணக்கிடுதல் எளிதாகின்றது. கொடுக்க வேண்டிய தொகைமீதுதான் வட்டி செலுத்தப்பட வேண்டும்.

### எடுத்துக்காட்டு 1

*1971* சனவரி, 1-ல் பொறியொன்று ரூ. 20,000-க்கு வாடகைக் கொள்முதல் அடிப்படையில் வாங்கப்படுகிறது. ஒப்பந்தம் செய்யும்போழ்து ரூ. 5,000-மும் ஒவ்வோராண்டு இறுதியிலும் ரூ. 5,000-மும்மாக மூன்று ஆண்டுகளில் இதன் விலையைச் செலுத்த வேண்டும். அப் பொறியின் ரொக்கவிலை ரூ. 18,625. ஆண்டு வட்டி 5% வீதம் கணக்கிடப்படுகிறது. ஒவ்வோராண்டும் செலுத்தப்படும் தவணைத் தொகை ரூ. 5,000-த்தில் அடங்கியுள்ள வட்டித் தொகையைக் கண்டுபிடி.

### விடை :

குறிப்புக் கணக்கொன்று (Memorandum account) தயாரித்து இதனைத் தெரிந்து கொள்ளலாம்.

**வாடகை முறை விற்குநர் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 | | | | 1971 | | | |
| சன. 1 | வங்கி ... | | 5,000 | சன. 1 | பொறிக் க/கு ... | | 18,625 |
| திச. 31 | வங்கி ... | | 5,000 | திச. 31 | வட்டி ... | | 681 |
| ,, | இருப்பு கீ/இ ... | | 9,306 | | | | |
| | | | 19,306 | | | | 19,306 |
| 1972 | | | | 1972 | | | |
| திச. 31 | வங்கி ... | | 5,000 | சன. 1 | இருப்பு கீ/கொ ... | | 9,306 |
| ,, | இருப்பு கீ/இ ... | | 4,771 | திச. 31 | வட்டி ... | | 465 |
| | | | 9,771 | | | | 9,771 |
| 1973 | | | | 1973 | | | |
| திச. 31 | வங்கி ... | | 5,000 | சன. 1 | இருப்பு கீ/கொ ... | | 4,771 |
| | | | | திச. 31 | வட்டி ... | | 229 |
| | | | 5,000 | | | | 5,000 |

**விளக்கம் :**

1. முதலாண்டில் ஒப்பந்தம் கையெழுத்தானதும் ரூ. 5,000 கொடுக்கப்பட்டு விடுகிறது. எனவே இன்னும் செலுத்தப்பட வேண்டிய தொகை ரூ. 13,625. (ரூ.18,625 – ரூ.5,000). இத்தொகை மீது ஓராண்டு வட்டி கணக்கிடப் படுகிறது.

2. இறுதியாண்டில், செலுத்தப்படும் தொகை ரூ. 5,000த்திலிருந்து செலுத்த வேண்டிய தொகை ரூ. 4,771-ஐக் கழித்துக் கிடைக்கும் தொகை வட்டியாகக் கொள்ளப்படுகிறது.

**வட்டி வீதம் கொடுக்கப்படா நிலையில் வட்டியைக் கணக்கிடுதல்**

வட்டிவீதம் கொடுக்கப்படவில்லையெனில், ஒவ்வோராண்டும் நிலுவையிலிருக்கும் தொகை விகிதத்தில் வட்டித் தொகையிருக்குமெனக் கொள்ள வேண்டும். மேற்சொன்ன எடுத்துக் காட்டில், வட்டிவீதம் கொடுக்கப்படவில்லையெனக் கொள்வோம். மூன்றுண்டுகளிலும் நிலுவையிலுள்ள தொகை வருமாறு :

| | | | |
|---|---|---|---|
| 1971 | (மொத்தம் கொடுக்க வேண்டிய தொகை ரூ. 20,000 - த்தில் ஒப்பந்தத்தின் போது கொடுத்தது ரூ. 5,000போக மீதியுள்ளது.) | ... | ரூ. 15,000 |
| 1972 | ரூ. 15,000 – ரூ. 5,000 (1972-ல் கொடுத்தது) | ... | ரூ. 10,000 |
| 1973 | ரூ. 10,000 – ரூ. 5,000 | ... | ரூ. 5,000 |

மொத்த வட்டி ரூ. 1,375. (ரூ. 20,000 – ரூ. 18,625.) இவ்வட்டித் தொகையான ரூ. 1,375-ஐ மூன்று ஆண்டுகட்கு 15,000 : 10,000 : 5,000 விகிதத்தில், அதாவது 3 : 2 : 1 எனும் விகிதத்தில் பிரிக்க வேண்டும். அவ்வாறாயின்,

| | | |
|---|---|---|
| 1971-ல் வட்டி | ... | ரூ. 688 |
| 1972-ல் வட்டி | ... | ரூ. 458 |
| 1973-ல் வட்டி | ... | ரூ. 229 |

## பதிவுகள்

**வாடகை முறையில் வாங்குநரின் ஏடுகளில்** (In the books of the Hire-purchaser)

இறுதித் தவணைத் தொகை செலுத்தும்வரை சொத்தின் மீதான உரிமை வாங்குநர்க்கு மாற்றப்படுவதில்லையாதலால், சொத்தின் முழுத்தொகையையும் ஒப்பந்தத்தின்போழ்து சொத்துக் கணக்கில் பற்று வைக்கக்கூடாது. தவணைத்தொகை செலுத்தும் போழ்தெல்லாம் அதில் அடங்கியுள்ள பொருள் மதிப்பிற்கு (வட்டி நீங்கிய தொகைக்குப்) பற்று வைக்க வேண்டும்.

பதிவு :

சொத்துக் க/கு ப.
வட்டிக் க/கு ப.
விற்குநர் க/கு

தவணைத் தொகை செலுத்தும்போழ்து :

விற்குநர் க/கு ப.
வங்கிக் க/கு

**தேய்மானம் (Depreciation)**

வாடகைக் கொள்முதல் முறையில் சொத்தை வாங்கினுலும் அதன் முழு ரொக்க மதிப்பின் மீது ஒவ்வோராண்டும் தேய்மானம் நீக்குதல் நன்று. சொத்தின் உரிமை விற்குநரிடமிருப்பினும், தவணைகள் செலுத்தப்பட்ட பின் அதன் உரிமை இவரிடமிருந்து வாங்குநர்க்கு மாறுவது உறுதி. மேலும், அச் சொத்தைத் தொழிலில் பயன்படுத்தி வருகிறோம். அடுத்து, தேய்மானம் நீக்கப்படாமலிருக்குமாயின், தவணைகள் செலுத்தப்பட்டுச் சொத்தின் உரிமை கிடைக்கும்போழ்து, சொத்து அதன் முழு மதிப்பில் வாங்குநர் ஏடுகளில் காண்பிக்கப்பெறும். ஆனுல், பல ஆண்டுகளாக அது பயன்படுத்தப்பட்டு வந்திருப்பதால் அதன் அன்றைய மதிப்பு ஏட்டு மதிப்பினும் மிகவும் குறைந்தே யிருக்கும். எனவே, தேய்மானம் நீக்கப்படுதல் இன்றியமையாதது என்பது புலப்படும்.

பதிவு :

தேய்மானக் க/கு ப
சொத்துக் க/கு

**எடுத்துக்காட்டு 2**

பல்லவன் பதிப்பகத்தினர் 1971 சனவரி 1ஆம் நாள் அச்சுப் பொறியொன்றைப் பாண்டியன் கம்பெனியிடமிருந்து ரூ. 20,000-க்கு வாடகைக் கொள்முதல் முறையில் வாங்கினர். ஒப்பந்தத்தின்போழ்து ரூ. 5,000-மும் பின்னர் ஒவ்வோராண்டும் ரூ. 5,000 தவணைத் தொகையாகவும் தர வேண்டியது. வட்டி 5 சதவீதம் கணக்கிடப்படுகிறது. தேய்மானம் 10 சதவீதம் குறைந்துசெல் இருப்பு முறையில் (Diminishing Balance Method) நீக்கப்பட வேண்டும். அப் பொறியின் மொத்த மதிப்பு ரூ. 18,625 எனக் கொண்டு, பல்லவன் பதிப்பகத்தின் ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகளையும், பேரேட்டுக் கணக்குகளையும் தயாரிக்கவும்.

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| 1971<br>சன. 1 | அச்சுப் பொறிக் க/கு ப<br>பாண்டியன் கம்பெனி<br>(அச்சுப்பொறி வாங்க, ஒப்பந்தத்தின் போழ்து கொடுக்க வேண்டிய தொகை) | | 5,000 | <br>5,000 |
| ,, | பாண்டியன் கம்பெனி ப<br>வங்கி<br>(ஒப்பந்தத் தொகை செலுத்தியது.) | | 5,000 | <br>500 |
| திச. 31 | அச்சுப் பொறிக் க/கு ப<br>வட்டிக் க/கு ப<br>பாண்டியன் கம்பெனி<br>[ரூ. 5,000 பாண்டியன் கம்பெனிக்குச் செலுத்த வேண்டியது; அதில் ரூ. 681 வட்டிக்கானது (13,625 மீது 5 சதவிகிதம்) ; மீதித் தொகை பொறிக் கணக்கில் பற்று வைக்கப்படுகிறது.] | | 4,319<br>681 | <br><br>5,000 |
| ,, | பாண்டியன் கம்பெனி ப<br>வங்கி<br>(தவணைத் தொகை செலுத்தியது) | | 5,000 | <br>5,000 |
| | தேய்மானக் க/கு ப<br>அச்சுப் பொறிக் க/கு<br>(ரூ. 18,625 மீது 10 சதவீதம் தேய்மானம் நீக்கப்படுகிறது.) | | 1,863 | <br>1,863 |

குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| 1972 திச. 31 | அச்சுப் பொறிக் க/கு ப | | 4,535 | |
| | வட்டிக் க/கு ப | | 465 | |
| | பாண்டியன் கம்பெனி | | | 5,000 |
| | (ரூ. 5,000 செலுத்த வேண்டியது; அதில் அடங்கியுள்ள வட்டி ரூ. 465. அதாவது ரூ. 9,306 மீது 5 சதவிகிதம்.) | | | |
| ,, | பாண்டியன் கம்பெனி ப | | 5,000 | |
| | வங்கி | | | 5,000 |
| | (தவணைத் தொகை செலுத்தியது.) | | | |
| ,, | தேய்மானக் க/கு ப | | 1,676 | |
| | அச்சுப் பொறிக் க/கு | | | 1,676 |
| | [ரூ. 16,762 மீது (ரூ. 18,625—ரூ. 1,863) 10 சதவிகிதம் தேய்மானம் நீக்க.] | | | |
| 1973 திச. 31 | அச்சுப் பொறிக் க/கு ப | | 4,771 | |
| | வட்டிக் க/கு ப | | 229 | |
| | பாண்டியன் கம்பெனி | | | 5,000 |
| | (ரூ. 5,000 செலுத்த வேண்டியது ரூ. 229 வட்டி இதில் அடங்கி உள்ளது.) | | | |
| ,, | பாண்டியன் கம்பெனி ப | | 5,000 | |
| | வங்கி | | | 5,000 |
| | (தவணைத் தொகை செலுத்தியது.) | | | |
| ,, | தேய்மானக் க/கு ப | | 1,509 | |
| | அச்சுப் பொறிக் க/கு | | | 1,509 |
| | [ரூ. 15,086 மீது (ரூ. 16,762—ரூ. 1,676) 10 சதவிகிதம் தேய்மானம் நீக்க.] | | | |

## பேரேட்டுக் கணக்குகள்

### அச்சுப் பொறிக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 | | | | 1971 | | | |
| சன. 1 | பாண்டியன் கம்பெனி ... | | 5,000 | திச. 31 | தேய்மானம் ... | | 1,863 |
| திச. 31 | பாண்டியன் கம்பெனி ... | | 4,319 | ,, | இருப்பு கீ/இ ... | | 7,456 |
| | | | 9,319 | | | | 9,319 |
| 1972 | | | | 1972 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ ... | | 7,456 | திச. 31 | தேய்மானம் ... | | 1,676 |
| திச. 31 | பாண்டியன் கம்பெனி ... | | 4,535 | ,, | இருப்பு கீ/இ ... | | 10,315 |
| | | | 11,991 | | | | 11,991 |
| 1973 | | | | 1973 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ ... | | 10,315 | திச. 31 | தேய்மானம் ... | | 1,509 |
| திச. 31 | பாண்டியன் கம்பெனி ... | | 4,771 | ,, | இருப்பு கீ/இ ... | | 13,577 |
| | | | 15,086 | | | | 15,086 |
| 1974 | | | | | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ ... | | 13,577 | | | | |

**பாண்டியன் கம்பெனி (விற்குநர்)**

பற்று | வரவு

| நாள் | விவரம் | | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1971 | | | | | 1971 | | | | |
| சன. 1 | வங்கி | ... | | 5,000 | சன. 1 | அச்சுப் பொறி | ... | | 5,000 |
| திச. 31 | வங்கி | ... | | 5,000 | திச. 31 | அச்சுப் பொறி | ... | | 4,319 |
| | | | | | ,, | வட்டி | ... | | 681 |
| | | | | 10,000 | | | | | 10,000 |
| 1972 | | | | | 1972 | | | | |
| திச. 31 | வங்கி | ... | | 5,000 | திச. 31 | அச்சுப் பொறி | ... | | 4,535 |
| | | | | | ,, | வட்டி | ... | | 465 |
| | | | | 5,000 | | | | | 5,000 |
| 1973 | | | | | 1973 | | | | |
| திச. 31 | வங்கி | ... | | 5,000 | திச. 31 | அச்சுப் பொறி | ... | | 4,771 |
| | | | | | | வட்டி | ... | | 229 |
| | | | | 5,000 | | | | | 5,000 |

## வட்டிக் கணக்கு

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 திச. 31 | பாண்டியன் கம்பெனி | | 681 | 1971 திச. 31 | இலாப-நட்டக் க/கு—மாற்றம் | | 681 |
| 1972 திச. 31 | பாண்டியன் கம்பெனி | | 465 | 1972 திச. 31 | இலாப-நட்டக் க/கு—மாற்றம் | | 465 |
| 1973 திச. 31 | பாண்டியன் கம்பெனி | | 229 | 1973 திச. 31 | இலாப-நட்டக் க/கு—மாற்றம் | | 229 |

**விற்குநர் ஏடுகளில்**

வாடகைக் கொள்முதல் முறையில் விற்குநரைப் பொறுத்த வரை, இதை அவர் ஒரு கடன் விற்பனையாகவே கருதுகிறார். வாங்குநர், தான் செலுத்த வேண்டிய தொகை மீது வட்டி தர வேண்டியதையும் கணக்கிலெடுத்துக் கொள்வார். எனவே, ஒப்பந்தம் கையெழுத்தானவுடன், வாடகைக் கொள்முதல் முறையில் வாங்குநரின் கணக்கில் சொத்தின் இன்றைய மதிப்பிற்குப் (ரொக்க மதிப்பிற்குப்) பற்றும், விற்பனைக் கணக்கில் வரவும் வைக்கிறார். கீழ்க்கண்ட பதிவுகளைச் செய்வார்.

**1. ஒப்பந்தம் கையெழுத்தானதும் :**

வாடகைமுறை வாங்குநர் க/கு ப.

விற்பனைக் க/கு.

**2. ஒப்பந்தத் தொகை பெற்றதும் :**

வங்கி ப.

வாடகைமுறை வாங்குநர் க/கு.

**3. (அ) ஒவ்வோராண்டும் தவணைத் தொகை மீது வட்டி பெற வேண்டியதைக் காட்ட :**

வாடகை முறை வாங்குநர் க/கு ப.

வட்டி க/கு.

**(ஆ) தவணைத்தொகை பெறும்போழ்து :**

வங்கிக் க/கு ப.

வாடகைமுறை வாங்குநர் க/கு.

தவணைகளையெல்லாம் செலுத்திய பின், வாடகை முறை வாங்குநரின் கணக்கு இருப்பொன்றையும் காட்டாது.

2-ஆம் எடுத்துக்காட்டை இப்பொழுது செய்யலாம்.

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| 1971 | | | | |
| சன. 1 | பல்லவன் பதிப்பகம் ப | | 18,625 | |
| | விற்பனைக் க/கு | | | 18,625 |
| | (அச்சுப் பொறியொன்றை வாடகை முறை விற்பனையில் பல்லவன் பதிப்பகத்திடம் விற்றது.) | | | |
| ,, | வங்கிக் க/கு ப | | 5,000 | |
| | பல்லவன் பதிப்பகம் | | | 5,000 |
| | (ஒப்பந்தத்தின்போது தொகை பெற்றது). | | | |
| திச. 31 | பல்லவன் பதிப்பகம் ப | | 681 | |
| | வட்டிக் க/கு | | | 681 |
| | [ரூ. 13,625 மீது (ரூ. 18,625—ரூ. 5,000) 5 சதவிகிதம் வட்டிபெற வேண்டியது.] | | | |
| ,, | வங்கிக் க/கு ப | | 5,000 | |
| | பல்லவன் பதிப்பகம் | | | 5,000 |
| | (தவணைத் தொகை பெற்றது.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| 1972 திச. 31 | பல்லவன் பதிப்பகம் ப | | 465 | |
| | வட்டிக் க/கு | | | 465 |
| | [ரூ. 9,306 மீது (ரூ. 13,625+681–5,000) 5 சதவிகிதம் வட்டி பெற வேண்டியது.] | | | |
| ,, | வங்கிக் க/கு ப | | 5,000 | |
| | பல்லவன் பதிப்பகம் | | | 5,000 |
| | (தவணைத் தொகை பெற்றது.) | | | |
| 1973 திச. 31 | பல்லவன் பதிப்பகம் ப | | 229 | |
| | வட்டிக் க/கு | | | 229 |
| | (மீதித் தொகைக்குப் பெற வேண்டிய வட்டி.) | | | |
| ,, | வங்கிக் க/கு ப | | 5,000 | |
| | பல்லவன் பதிப்பகம் | | | 5,000 |
| | (தவணைத் தொகை பெற்றது.) | | | |

## பேரேட்டுக் கணக்குகள்

பற்று **பல்லவன் பதிப்பகம்** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 | | | | 1971 | | | |
| சன. 1 | விற்பனைக் க/கு ... | | 18,625 | சன. 1 | வங்கி ... | | 5,000 |
| திச. 31 | வட்டி ... | | 681 | திச. 31 | வங்கி ... | | 5,000 |
| | | | | ,, | இருப்பு கீ/இ ... | | 9,306 |
| | | | 19,306 | | | | 19,306 |
| 1972 | | | | 1972 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ ... | | 9,306 | திச. 31 | வங்கி ... | | 5,000 |
| திச. 31 | வட்டி ... | | 465 | ,, | இருப்பு கீ/இ ... | | 4,771 |
| | | | 9,771 | | | | 9,771 |
| 1973 | | | | 1973 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ ... | | 4,771 | திச. 31 | வங்கி ... | | 5,000 |
| திச. 31 | வட்டி ... | | 229 | | | | |
| | | | 5,000 | | | | 5,000 |

## விற்பனைக் கணக்கு

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 திச. 31 | வாணிகக் க/கு ... | | 18,625 | 1971 சன. 1 | பல்லவன் பதிப்பகம் ... | | 18,625 |

## வட்டிக் கணக்கு

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 திச. 31 | இலாப–நட்டக் க/கு—மாற்றம் ... | | 681 | 1971 திச. 31 | பல்லவன் பதிப்பகம் ... | | 681 |
| 1972 திச. 31 | இலாப–நட்டக் க/கு—மாற்றம் ... | | 465 | 1972 திச. 31 | பல்லவன் பதிப்பகம் ... | | 465 |
| 1973 திச. 31 | இலாப–நட்டக் க/கு—மாற்றம் ... | | 229 | 1973 திச. 31 | பல்லவன் பதிப்பகம் ... | | 229 |

வாடகைக் கொள்முதல் முறை நடவடிக்கைகளைப் பதிவதிலும் இன்னொரு முறை பின்பற்றுவதும் உண்டு. அதாவது, வாடகை முறையில் சொத்துகளை வாங்குவதாயினும், சாதாரணமாக வாங்குதல் போன்றே கொண்டு பதிந்து வருதலாகும். அதாவது, கொடுக்க வேண்டிய வட்டிக்கான பதிவு மட்டில் கூடுதலாக இருக்கும். இம் முறையில் சொத்துக் கணக்கில் அதன் ரொக்க மதிப்பிற்குப் பற்றும், விற்குநர் கணக்கில் வரவும் வைக்க வேண்டும். தவணைத் தொகை செலுத்தும்போழ்தெல்லாம் விற்குநர் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்கப்படும். ஒவ்வோராண்டின் இறுதியிலும் வட்டிக் கணக்கில் பற்றும், விற்குநர் கணக்கில் வரவும் வைக்கப்படும்.

இம் முறையைச் சிலர் ஆதரிப்பதில்லை. காரணம், வாடகைக் கொள்முதல் முறையில் சொத்து வாங்கும்போழ்து, உரிமை கிடைப்பதில்லை. எனவே, முழுத் தொகையையும் சொத்துக் கணக்கில் பற்று வைப்பது வழுவாகும் என்கின்றனர். ஆயினும் தவணைகள் முழுவதும் செலுத்தப்பட்டவுடன் சொத்தின் உரிமை கிடைப்பது உறுதி என்பதால் இம் முறையைப் பின்பற்றுவதும் தவறில்லை என்கிறார் ரூப்ராம் குப்தா (பக்கம் 956-Advanced Accounting by Rupram Gupta and Vaidysaran Gupta). இவ்வழியில் பதிவதையும் ஒரு முறையாக எம். சி. சுக்லா (M. C. Shukla) அவர்களும் ஏற்றுக் கொள்கின்றனர். ஆனால், தேர்வுகளில் மாணவர்கள் இவ் விரண்டாம் முறையைப் பின்பற்ற வேண்டா. இம் முறையில் எடுத்துக்காட்டு 2-ல் கொடுக்கப்பட்ட கணக்கிற்கான பேரேட்டுக் கணக்குகள் அடுத்துக் காட்டியவாறிருக்கும்.

## அச்சுப் பொறிக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 | | | | 1971 | | | |
| சன. 1 | பாண்டியன் கம்பெனி ... | | 18,625 | திச. 31 | தேய்மானம் ... | | 1,863 |
| | | | | ,, | இருப்பு கீ/இ ... | | 16,762 |
| | | | 18,625 | | | | 18,625 |
| 1972 | | | | 1972 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ ... | | 16,762 | திச. 31 | தேய்மானம் ... | | 1,676 |
| | | | | ,, | இருப்பு கீ/இ ... | | 15,086 |
| | | | 16,762 | | | | 16,762 |
| 1973 | | | | 1973 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ ... | | 15,086 | திச. 31 | தேய்மானம் ... | | 1,509 |
| | | | | ,, | இருப்பு கீ/இ ... | | 13,577 |
| | | | 15,086 | | | | 15,086 |
| 1975 | | | | | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ ... | | 13,577 | | | | |

அச்சுப் பொறிக் கணக்கு இரு முறைகளிலுமே மூன்றுண்டுகட்குப் பின்னர் ஒரே இருப்பைத்தான் காட்டுகின்றது என்பதை உணர வேண்டும்.

### பாண்டியன் கம்பெனி

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 | | | | 1971 | | | |
| சன. 1 | வங்கி ... | | 5,000 | சன. 1 | அச்சுப் பொறி ... | | 18,625 |
| திச. 31 | வங்கி ... | | 5,000 | திச. 31 | வட்டி (ரூ. 13,625 மீது 5%) | | 681 |
| ,, | இருப்பு கீ/இ ... | | 9,306 | | | | |
| | | | 19,306 | | | | 19,306 |
| 1972 | | | | 1972 | | | |
| திச. 31 | வங்கி ... | | 5,000 | சன. 1 | இருப்பு கீ/கொ ... | | 9,306 |
| ,, | இருப்பு கீ/இ ... | | 4,771 | திச. 31 | வட்டி (ரூ. 9,306 மீது 5%) ... | | 465 |
| | | | 9,771 | | | | 9,771 |
| 1973 | | | | 1973 | | | |
| திச. 31 | வங்கி ... | | 5,000 | சன. 1 | இருப்பு கீ/கொ ... | | 4,771 |
| | | | | திச. 31 | வட்டி (சரிக் கட்டும் தொகை)... | | 229 |
| | | | 5,000 | | | | 5,000 |

## வட்டிக் கணக்கு

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 திச. 31 | பாண்டியன் கம்பெனி ... | | 681 | 1971 திச. 31 | இலாப-நட்டக் க/கு—மாற்றம் ... | | 681 |
| 1972 திச. 31 | பாண்டியன் கம்பெனி ... | | 465 | 1972 திச. 31 | இலாப-நட்டக் க/கு—மாற்றம் ... | | 465 |
| 1972 திச. 31 | பாண்டியன் கம்பெனி ... | | 229 | 1972 திச. 31 | இலாப-நட்டக் க/கு—மாற்றம் ... | | 229 |

**ரொக்க விலையைக் கண்டுபிடித்தல் (Ascertainment of Cash value)**

சில வேளைகளில் சொத்தின் ரொக்க மதிப்பினைக் கொடுக்காமலிருப்பர். அந் நிலைகளில் ரொக்க மதிப்பை உணர, இறுதித் தவணைத் தொகையிலிருந்து தொடங்கி ஒவ்வொரு தவணையிலுமுள்ள வட்டி கழிக்கப் பெறுதல் வேண்டும்.

**எடுத்துக்காட்டு 3**

1971, சனவரி 1-ல் தமிழ்நாடு மோட்டார் கம்பெனி கார் ஒன்றை வாடகைக் கொள்முதல் முறையில் ரூ. 25,000-க்கு விற்கின்றனர். கீழ்க்கண்டவாறு விலை தரப்பட வேண்டியது.

ஒப்பந்தத்தின் போழ்து ரூ. 4,900 தர வேண்டியது. முதலாண்டு இறுதியில் ரூ. 8,700-ம், இரண்டாமாண்டின் இறுதியில் ரூ. 7,000-ம் மூன்றுமாண்டின் இறுதியில் ரூ. 4,400-ம் தர வேண்டும். ரூ. 25,000-த்தில் அடங்கியுள்ள வட்டியானது ரொக்க மதிப்பில் ஆண்டு வட்டி 10 சதவிகிதம் கணக்கிடப் படுகிறது. மோட்டாரின் ரொக்க மதிப்பைக் கண்டு பிடித்து, வாங்குநரின் கணக்கை மோட்டார் கம்பெனியின் ஏடுகளில் தயாரிக்கவும்.

**விடை :**

**ரொக்க மதிப்பை உணர்தல் :**

**இறுதித் தவணையில் அடங்கியுள்ள வட்டி :**

$$\text{ரூ. } 4{,}400 \times \frac{10}{110} = \text{ரூ. } 400$$

(ரூ. 110 அசலும் வட்டியும் சேர்ந்தது, வட்டி மட்டும் ரூ. 10.

$$\therefore \text{ ரூ. } 4{,}400 \quad \ldots \quad \frac{4{,}400 \times 10}{110} = \text{ரூ. } 400$$

என்ற முறையில் கணக்கிடப்படுகிறது).

**இரண்டாந் தவணையில் அடங்கியுள்ள வட்டி :**

| | | |
|---|---|---|
| இறுதித் தவணையின் ரொக்க மதிப்பு (ரூ. 4,400—400) | ரூ. | 4,000 |
| கூட்டு : இரண்டாம் தவணைத்தொகை | ரூ. | 7,000 |
| அசலும் வட்டியும் | ரூ. | 11,000 |

∴ வட்டி = ரூ. $11{,}000 \times \frac{10}{110}$ = ரூ. 1,000

**முதல் தவணையில் அடங்கியுள்ள வட்டி :**

| | | |
|---|---|---|
| முதல் தவணைத் தொகை | ரூ. | 8,700 |
| கூட்டு : செலுத்த வேண்டிய ரொக்க மதிப்பு | ரூ. | 10,000 |
| அசல் + வட்டி | ரூ. | 18,700 |

வட்டி = $18{,}700 \times \frac{10}{110}$ = ரூ. 1,700

| | | |
|---|---|---|
| முதல் தவணைத் தொகைக்கு முன் உள்ள ரொக்க மதிப்பு (ரூ. 18,700—ரூ. 1,700) | ரூ. | 17,000 |
| கூட்டு : ஒப்பந்தத்தின் போழ்து செலுத்திய தொகை | ரூ. | 4,900 |
| காரின் ரொக்க மதிப்பு | ரூ. | 21,900 |

**தமிழ்நாடு மோட்டார் கம்பெனியின் ஏடுகளில் வாங்குநரின் கணக்கு**

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 | | | | 1971 | | | |
| சன. 1 | விற்பனை ... | | 21,900 | சன. 1 | வங்கி ... | | 4,900 |
| திச. 31 | வட்டி ... | | 1,700 | திச. 31 | வங்கி ... | | 8,700 |
| | | | | ,, | இருப்பு கீ/இ ... | | 10,000 |
| | | | 23,600 | | | | 23,600 |
| 1972 | | | | 1972 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ ... | | 10,000 | திச. 31 | வங்கி ... | | 7,000 |
| திச. 31 | வட்டி ... | | 1,000 | ,, | இருப்பு கீ/இ ... | | 4,000 |
| | | | 11,000 | | | | 11,000 |
| 1973 | | | | 1973 | | | |
| திச. 31 | இருப்பு கீ/கொ ... | | 4,000 | திச. 31 | வங்கி ... | | 4,400 |
| ,, | வட்டி ... | | 400 | | | | |
| | | | 4,400 | | | | 4,400 |

பற்று — வரவு

**வாங்குநர் தவணைத் தொகை செலுத்தத் தவறுதல்** (Default by the hire purchaser)

வாடகைக் கொள்முதல் முறையில் சொத்தை வாங்குநர் தவணைத் தொகையைச் செலுத்தத் தவறின், சொத்தை விற்குநர் மீட்டுக் கொள்வார்; அத்துடன் அதுவரை வாங்குநர் செலுத்தியிருந்த தவணைத் தொகைகள் அதற்கான வாடகையாகக் கொள்ளப்பட்டுப் பறிமுதல் செய்யப்படும். இவ்வாறு சொத்தை விற்குநர் மீண்டும் எடுத்துக் கொள்ளும் போழ்து, வாங்குநர் அதனை நட்டமாகக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. இப்பொழுது செய்ய வேண்டிய பதிவுகள், சொத்தை வாங்கிய நேரத்தில் செய்த பதிவைப் பொருத்து அமையும். முதன் முறையைப் பின்பற்றியிருப்பின்—அதாவது முழுத் தொகையையும் சொத்துக் கணக்கில் பற்று வைக்காது, தவணைத் தொகை செலுத்துங்கால் பற்று வைத்துக் கொண்டு வருவதாயின் - சொத்துக் கணக்கை நட்டமாகக் கருதி முடித்திட வேண்டும். அதாவது, இலாப-நட்டக் கணக்கில் பற்று வைத்துச் சொத்துக் கணக்கில் வரவு வைத்து முடித்திட வேண்டும். இரண்டாம் முறையைப் பின்பற்றுவதாயின் — முழுத் தொகையையும் ஒப்பந்தத்தின் போழ்தே சொத்துக் கணக்கில் பற்று வைப்பதாயின் — விற்குநர் கணக்கை முதலில் சொத்துக் கணக்கிற்கு மாற்றிப் பின்னர் சொத்துக் கணக்கின் இருப்பை இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் சென்று முடிக்க வேண்டும்.

**எடுத்துக் காட்டு 4**

அழகு உலர் சலவை நிறுவனம் 1972 சனவரி 1-ல் பொறியொன்றை வாடகைக் கொள்முதல் முறையில் வாங்கியது. அதன் ரொக்க மதிப்பு ரூ. 15,000. ரூ. 4,000 வீதம் நான்கு அரையாண்டுத் தவணைகளில் அதன் விலை செலுத்தப்பட வேண்டும். முதல் தவணை 1972 சூன் 30-ல் செலுத்தப்பட வேண்டும். ஆண்டு வட்டி 5 சதவீதம் கணக்கிடப்படுகிறது. அழகு உலர் சலவை நிறுவனத்தினர் 10 சதவீதம் குறைந்து செல் இருப்பு முறையில் தேய்மானம் நீக்குகின்றனர். சூன் 30-ல் ஒவ்வோராண்டும் கணக்குகளை முடிக்கின்றனர். 1973 சூன் 30-ல் தவணைத் தொகையைச் செலுத்தாமற்போகவே, அதன் விற்குநர் பொறியை மீட்டுக் கொண்டனர் என்று கொண்டு, பொறிக் கணக்கையும், விற்குநர் கணக்கையும் தயாரிக்கவும்.

**விடை :**

**பொறிக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 | | | | 1972 | | | |
| ஜூன் 30 | விற்குநர் ... | | 3,625 | ஜூன் 30 | தேய்மானம் ... | | 750 |
| | | | | ,, | இருப்பு கீ/இ ... | | 2,875 |
| | | | 3,625 | | | | 3,625 |
| 1972 | | | | 1973 | | | |
| ஜூலை 1 | இருப்பு கீ/கொ ... | | 2,875 | ஜூன் 30 | தேய்மானம் ... | | 1,425 |
| திச. 31 | விற்குநர் ... | | 3,716 | ,, | இலாப-நட்டக் க/கு—மாற்றம் ... | | 5,166 |
| | | | 6,591 | | | | 6,591 |

விற்குநர் கணக்கு

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 | | | | 1972 | | | |
| சூன் 30 | வங்கி ... | | 4,000 | சூன் 30 | பொறி ... | | 3,625 |
| | | | | ,, | வட்டி ... | | 375 |
| | | | 4,000 | | | | 4,000 |
| 1972 | | | | 1972 | | | |
| திச. 31 | வங்கி ... | | 4,000 | திச. 31 | பொறி ... | | 3,716 |
| | | | | ,, | வட்டி ..., | | 284 |
| | | | 4,000 | | | | 4,000 |

**விளக்கக் குறிப்பு :**

1. 1972 ஜூன் 30-ல் தேய்மானம் பொறியின் ரொக்க மதிப்பு மீது (ரூ. 15,000) அரையாண்டிற்குக் கணக்கிடப் படுகிறது.

2. முதல் தவணை ரூ. 4,000-த்தில் ரூ. 375 வட்டி அடங்கியுள்ளது. (ரூ. 15,000 மீது 5 சதவிகிதம் வீதம் அரையாண்டு வட்டி) வட்டி நீங்கப் பெற்ற தொகையே பொறிக் கணக்கில் பற்று வைக்கப்படுகிறது.

3. திசம்பர் 31-ல் செலுத்தும் தவணைத் தொகை ரூ. 4,000-த்தில் ரூ. 284 வட்டி அடங்கியுள்ளது. (ரூ. 15,000 – ரூ. 3,625 = ரூ. 11,375. ரூ. 11,375 மீது 5 சதவிகிதம் அரையாண்டு வட்டி).

4. 1973 ஜூன் 30-ல் தேய்மானம் ஓராண்டிற்கு (ரூ. 15,000 – ரூ. 750 = ரூ. 14,250 மீது 10 சதவிகிதம்) கணக்கிடப்படுகிறது.

5. 1973 ஜூன் 30-ல் பொறி பறிக்கப்பட்டு விடுவதால் பொறிக் கணக்கை முடித்திட வேண்டும். அதனை நட்டமாகக் கொண்டு இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்லப்படுகிறது.

**இரண்டாம் முறையில் :**

**பொறிக் கணக்கு**

பற்று　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　வ

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 சன. 1 | விற்குநர் ... | | 15,000 | 1972 சூன் 31 | தேய்மானம் ... | | 750 |
| | | | | ,, | இருப்பு கீ/இ ... | | 14,250 |
| | | | 15,000 | | | | 15,000 |
| 1972 சூலை 1 | இருப்பு கீ/கொ ... | | 14,250 | 1973 சூன் 31 | தேய்மானம் ... | | 1,425 |
| | | | | ,, | விற்குநர்— மாற்றப்படுகிறது ... | | 7,659 |
| | | | | ,, | இலாப—நட்டக் க/கு— மாற்றம் (இருப்புக் கட்டுத் தொகை) ... | | 5,166 |
| | | | 14,250 | | | | 14,250 |

## விற்குநர் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 | | | | 1972 | | | |
| சூன் 30 | வங்கி ... | | 4,000 | சன. 1 | பொறி ... | | 15,000 |
| ,, | இருப்பு கீ/இ ... | | 11,375 | சூன் 30 | வட்டி ... | | 375 |
| | | | 15,375 | | | | 15,375 |
| 1972 | | | | 1972 | | | |
| திச. 31 | வங்கி ... | | 4,000 | சூலை 1 | இருப்பு கீ/கொ ... | | 11,375 |
| | | | | திச. 31 | வட்டி ... | | 284 |
| 1973 | | | | | | | |
| சூன் 30 | பொறிக் க/கு—பணஞ் செலுத்த இயலாமையால் மாற்றப்படுகிறது... | | 7,659 | | | | |
| | | | 11,659 | | | | 11,659 |

**எடுத்துக்காட்டு 5**

பொதிகை அச்சகத்தினர் இரு பொறிகளை ரூ. 20,000 வீதத்தில் வாடகைக் கொள்முதல் முறையில் வாங்குகின்றனர். வாங்கும்போழ்தே ரூ. 7,000மும், மீதித் தொகையை மூன்று சம ஆண்டுத் தவணைகளில் ஆண்டு வட்டி 6 சதவிகிதம் சேர்த்துத் தர வேண்டும். 20 சதவிகிதம் தேய்மானம் குறைந்து செல் இருப்பு முறையில் நீக்குகின்றனர். பொதிகை அச்சகத்தினர் இரண்டாந் தவணைத் தொகையைச் செலுத்தத் தவறி விடுகின்றனர். விற்குநர் ஒரு பொறியை அச்சகத்திடம் விட்டுவிட்டு, மற்ற பொறியைக் கொடுக்க வேண்டிய தொகைக்குச் சரிக் கட்டிக் கொள்கின்றனர். இவ்வாறு சரிக்கட்டும் போழ்து, பொறிகளை 30 சதவிகிதம் தேய்மானம் குறைந்துசெல் இருப்பு முறையில் கணக்கிட்டு மதிப்பிடுகின்றனர்.

பொதிகை அச்சகத்தினர் ஏடுகளில் கணக்குகளைத் தயாரிக்கவும்.

**விடை :**

ஒவ்வொரு தவணையிலும் அடங்கியுள்ள வட்டித் தொகையைக் கீழ்க்கண்ட பட்டியல் மூலம் உணரலாம்.

| | மொத்த ரொக்க மதிப்பு | தவணைத் தொகை | வட்டி | தவணைத் தொகையில் ரொக்க மதிப்பு |
|---|---|---|---|---|
| | ரூ. | ரூ. | ரூ. | ரூ. |
| பொறிகளின் மதிப்பு | 40,000 | | | |
| **கழி :** | | | | |
| ஒப்பந்தத்தின் போழ்து செலுத்துவது | 7,000 | 7,000 | — | 7,000 |
| | 33,000 | | | |
| முதல் தவணை | 11,000 | 12,980 | 1,980 | 11,000 |
| | 22,000 | | | |
| இரண்டாந்தவணை | 11,000 | 12,320 | 1,320 | 11,000 |
| | 11,000 | | | |
| மூன்றுந்தவணை | 11,000 | 11,660 | 660 | 11,000 |
| | | 43,960 | 3,960 | 40,000 |

## பொறிக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பெ. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பெ. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| முதல் ஆண்டு | விற்குநர் ... | | 7,000 | முதல் ஆண்டு | தேய்மானம் ... | | 8,000 |
| | விற்குநர் ... | | 11,000 | | இருப்பு கீ/இ ... | | 10,000 |
| | | | 18,000 | | | | 18,000 |
| 2ஆம் ஆண்டு | இருப்பு கீ/கொ ... | | 10,000 | 2ஆம் ஆண்டு | தேய்மானம் ... | | 6,400 |
| | விற்குநர்— தரவேண்டியதற்குப் பொறுப்பு ... | | 13,520 | ,, | இலாப—நட்டக் க/கு— இருப்புக் கட்டுத் தொகை | | 4,320 |
| | | | | ,, | இருப்பு கீ/இ ... | | 12,800 |
| | | | 23,520 | | | | 23,520 |

### விற்குநர் கணக்கு

பற்று வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| ஆண்டு 1 | வங்கி ... | | 7,000 | ஆண்டு 1 | பொறிகள் ... | | 7,000 |
| | வங்கி ... | | 12,980 | ,, | வட்டி ... | | 1,980 |
| | | | | ,, | பொறிகள் ... | | 11,000 |
| | | | 19,980 | | | | 19,980 |
| ஆண்டு 2 | இருப்பு கீ/இ ... | | 13,520 | ஆண்டு 2 | பொறிக் கணக்கு—தரவேண்டியதற்குப் பொறுப்பு ... | | 13,520 |
| | | | | ஆண்டு 3 | இருப்பு கீ/கொ ... | | 13,520 |

**குறிப்புகள் :**

**திருப்பி எடுத்துக் கொள்ளும் பொறியின் மதிப்பை உணர்தல் :**

| | ரூபாய் |
|---|---|
| பொறியொன்றின் ரொக்க மதிப்பு | 20,000 |
| முதலாண்டுத் தேய்மானம் 30% அளவில் | 6,000 |
| | 14,000 |
| இரண்டாமாண்டுத் தேய்மானம் 30% அளவில் | 4,200 |
| மீட்டுக் கொள்ளும் பொறியின் மதிப்பு | 9,800 |

பொதிகை அச்சகத்தில் விட்டிருக்கும் பொறியின் மதிப்பை உணர்தல் :

| | |
|---|---|
| பொறியின் ரொக்க மதிப்பு | 20,000 |
| **கழி :** முதலாண்டுத் தேய்மானம் 20% | 4,000 |
| **கழி :** இரண்டாமாண்டுத் தேய்மானம் 20% | 3,200 |
| பொறியின் மதிப்பு | 12,800 |

விற்குநர்க்குச் சேரவேண்டிய தொகையை அறிதல்:

| | |
|---|---|
| 2 பொறிகளின் மதிப்பு | 40,000 |
| **கழி :** ஒப்பந்தத்தின்போழ்து கொடுத்தது | 7,000 |
| | 33,000 |
| **கூட்டு :** வட்டி 6% | 1,980 |
| | 34,980 |
| **கழி :** முதலாண்டிறுதியில் செலுத்தியது | 12,980 |
| | 22,000 |
| **கூட்டு :** வட்டி 6% | 1,320 |
| | 23,320 |
| **கழி :** எடுத்துக் கொண்ட பொறியின் மதிப்பு | 9,800 |
| இன்னும் செலுத்த வேண்டியது | 13,520 |

**இரண்டாம் முறை :**

பற்று **பொறிகள் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| ஆண்டு 1 | விற்குநர் ... | | 40,000 | ஆண்டு 1 | தேய்மானம் ... | | 8,000 |
| | | | | ,, | இருப்பு கீ/இ ... | | 32,000 |
| | | | 40,000 | | | | 40,000 |
| ஆண்டு 2 | இருப்பு கீ/கொ ... | | 32.000 | ஆண்டு 2 | தேய்மானம் ... | | 6,400 |
| | | | | ,, | விற்குநர்— | | |
| | | | | | பொறி எடுத்துக் கொண்டது | | 9,800 |
| | | | | ,, | இலாப-நட்டக் க/கு— | | |
| | | | | | இருப்புக் கட்டுத் தொகை ... | | 3,000 |
| | | | | ,, | இருப்பு கீ/இ ... | | 12,800 |
| | | | 32,000 | | | | 32,000 |
| ஆண்டு 3 | இருப்பு கீ/கொ ... | | 12,800 | | | | |

## விற்குநர் கணக்கு

பற்று வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| ஆண்டு | | | | ஆண்டு | | | |
| 1 | வங்கி .. | | 7,000 | 1 | பொறிகள் .. | | 40,000 |
| ,, | வங்கி .. | | 12,980 | ,, | வட்டி .. | | 1,980 |
| ,, | இருப்பு கீ/இ .. | | 22,000 | | | | |
| | | | 41,980 | | | | 41,980 |
| ஆண்டு | | | | ஆண்டு | | | |
| 2 | பொறிகள் .. | | 9,800 | 2 | இருப்பு கீ/கொ .. | | 22,000 |
| ,, | இருப்பு கீ/இ .. | | 13,520 | | வட்டி .. | | 1,320 |
| | | | 23,320 | | | | 23,320 |

## விற்குநரின் ஏடுகளில்

விற்குநர் மீட்ட பொருளை மதிப்பிடுகின்றார். மீட்ட சரக்கிருப்புக் கணக்கு (Stock Repossessed) என்று ஒன்று தொடங்கி, அதில் பற்றும், வாங்குநரின் கணக்கில் வரவும் வைக்க வேண்டும். வாங்குநரின் கணக்கு காட்டும் இருப்பை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்றி முடிக்கவேண்டும்.

பின்னர் இப் பொருட்களை நல்ல நிலைக்குக் கொண்டு வர—பழுது பார்க்க வேண்டியிருப்பின் பார்த்து, உறுப்புக்கள் மாற்ற வேண்டியிருப்பின் மாற்றி, மீண்டும் விற்றிட முனைவது வழக்கம். இவ்வாறு ஆகும் செலவுகளை இக் கணக்கில் (மீட்ட சரக்கிருப்புக் கணக்கில்) பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

இதனை விற்கும்போழ்து வங்கிக் கணக்கில் பற்றும், மீட்ட சரக்கிருப்புக் கணக்கில் வரவும் வைக்கப்படும்.

இக் கணக்கு இறுதியில் காட்டும் இருப்பு இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்றப்படும்.

## எடுத்துக்காட்டு

5 - ல் கொடுக்கப்பட்டுள்ள எடுத்துக்காட்டைத் தொடர்ந்து மீட்ட பொறியைப் பழுதுபார்க்க ரூ. 700 செலவானது என்றும், அது பின்னர் ரூ. 12,300-க்கு விற்கப்பட்டது என்றுங்கொண்டு, விற்குநரின் ஏடுகளில் கணக்குகளைத் தயாரிக்க.

**விடை :**

**பொதிகை அச்சகம்**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| ஆண்டு 1 | விற்பனை .. | | 40,000 | ஆண்டு 1 | வங்கி .. | | 7,000 |
| ,, | வட்டி .. | | 1,980 | ,, | வங்கி .. | | 12,980 |
| | | | | ,, | இருப்பு கீ/இ .. | | 22,000 |
| | | | 41,980 | | | | 41,980 |
| ஆண்டு 2 | இருப்பு கீ/கொ .. | | 22,000 | ஆண்டு 2 | மீட்ட சரக்கிருப்புக் க/கு .. | | 9,800 |
| | வட்டி .. | | 1,320 | ,, | இருப்பு கீ/இ .. | | 13,520 |
| | | | 23,320 | | | | 23,320 |
| ஆண்டு 3 | இருப்பு கீ/கொ .. | | 13,520 | | | | |

**குறிப்பு :** பொதிகை அச்சகத்தின் கணக்கு முடிக்கப் பெறுவதில்லை, தொடர்ந்து இருப்பதால், இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்லவில்லை.

## மீட்ட சரக்கிருப்புக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| ஆண்டு 2 | பொதிகை அச்சகம் .. | | 9,800 | ஆண்டு 2 | இருப்பு கீ/இ .. | | 9,800 |
| ஆண்டு 3 | இருப்பு கீ/கொ .. | | 9,800 | ஆண்டு 3 | வங்கி — விற்பனை .. | | 12,300 |
| | வங்கி — செலவு .. | | 700 | | | | |
| | இலாப-நட்டக் க/கு— இலாபம் மாற்றப் படுகிறது .. | | 1,800 | | | | |
| | | | 12,300 | | | | 12,300 |

**எடுத்துக்காட்டு 6**

கடலூர் லாரி கம்பெனி, லாரி ஒன்றை ரூ. 60,000-க்கு வாடகைக் கொள்முதல் முறையில் 1—7—1971-ல் வாங்கினர். ஒப்பந்தத்தின்போழ்து ரூ. 12,000 தருவது என்றும் ரூ. 16,000 வீதம் மூன்று ஆண்டுத் தவணைகளில் செலுத்துவது என்றும் ஒப்புக் கொள்ளப்பட்டது. (தவணைத் தொகையில் ஆண்டு வட்டி 5 சதவீதம் அடங்கியுள்ளது.) லாரி மீது 20 சதவீதம் தேய்மானம் குறைந்துசெல் இருப்பு முறையில் நீக்கப் பெறுகிறது. 5 சதவீதம் வட்டி வீதத்தில் மூன்றுண்டுகட்கான ஆண்டுத் தொகை ரூ. 1-இன் இன்றைய மதிப்பு ரூ. 2·72325 என்பதை வாய்ப்பாடு உணர்த்துகிறது என்றும், கணக்குகளை ஒவ்வோராண்டும் சூன் 30-ல் முடிக்கின்றனர் என்றும் கொண்டு வாங்குநரின் ஏடுகளில் கணக்குகளைத் தயாரிக்கவும்.

**விடை :**

| | ரூ. |
|---|---|
| லாரியின் வாடகைக் கொள்முதல்விலை | 60,000 |
| **கழி :** ஒப்பந்தத்தின்போழ்தே கொடுப்பது | 12,000 |
| வாடகைக் கொள்முதல் விலையில் உள்ளது | 48,000 |

மூன்றுண்டுகளில் 5 சதவீதம் வட்டியில் ரூ. 1 வீதம் (மொத்தம் ரூ. 3) கொடுப்பதற்கு மாறுகத் தற்பொழுது கொடுக்கவேண்டிய தொகை ரூ. 2·72325

மூன்று ஆண்டுகளில் 5 சதவீதம் வட்டியில் ரூ. 48,000 கொடுப்பதற்கு மாறுகத் தற்பொழுது தரவேண்டிய தொகை—

$$\frac{2 \cdot 72325 \times 48,000}{3} = \text{ரூ. } 43,572$$

| | |
|---|---|
| தவணைத் தொகைகளுக்கான ரொக்க மதிப்பு | 43,572 |
| **கூட்டு :** ஒப்பந்தத்தின்போழ்து கொடுப்பது | 12,000 |
| லாரியின் ரொக்க மதிப்பு | 55,572 |

ஒவ்வொரு தவணைத் தொகையிலும் அடங்கியுள்ள வட்டியையும் அசல் தொகையையும் பட்டியல் தயார் செய்து அறிந்து கொள்ளலாம்.

| | மொத்த ரொக்க மதிப்பு ரூ. | செலுத்திய தவணைத் தொகை ரூ. | வட்டி ரூ. | செலுத்திய ரொக்க மதிப்பு ரூ. |
|---|---|---|---|---|
| மொத்த ரொக்க மதிப்பு | 55,572 | | | |
| ஒப்பந்தத்தின் போழ்து கொடுத்தது | —12,000 | 12,000 | — | 12,000 |
| | 43,572 | | | |
| முதல் தவணை | —13,821 | 16,000 | 2,179 | 13,821 |
| | 29,751 | | | |
| இரண்டாந்தவணை | —14,512 | 16,000 | 1,488 | 14,512 |
| | 15,239 | | | |
| மூன்றுந் தவணை | 15,239 | 16,000 | 761 | 15;239 |
| | | 60,000 | 4,428 | 55,572 |

## பேரேட்டுக் கணக்குகள்

பற்று — லாரி கணக்கு — வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 ஜூலை 1 | வங்கி .. | | 12,000 | 1972 ஜூன் 30 | தேய்மானம் .. | | 11,114 |
| 1972 ஜூன் 30 | வங்கி .. | | 13,821 | ,, | இருப்பு கீ/இ .. | | 14,707 |
| | | | 25,821 | | | | 25,821 |
| 1972 ஜூலை 1 | இருப்பு கீ/கொ .. | | 14,707 | 1973 ஜூன் 30 | தேய்மானம் .. | | 8,892 |
| 1973 ஜூன் 30 | வங்கி .. | | 14,512 | ,, | இருப்பு கீ/இ .. | | 20,327 |
| | | | 29,219 | | | | 29,219 |
| 1973 ஜூலை 1 | இருப்பு கீ/கொ .. | | 20,327 | 1974 ஜூன் 30 | தேய்மானம் .. | | 7,113 |
| 1974 ஜூன் 30 | வங்கி .. | | 15,239 | ,, | இருப்பு கீ/இ .. | | 28,453 |
| | | | 35,566 | | | | 35,566 |
| 1974 ஜூலை 1 | இருப்பு கீ/கொ .. | | 28,453 | | | | |

விற்குநரின் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 | | | | 1971 | | | |
| சூலை 1 | வங்கி .. | | 12,000 | சூலை 1 | லாரி க/கு .. | | 12,000 |
| 1972 | | | | 1972 | | | |
| சூன் 30 | வங்கி .. | | 16,000 | சூன் 30 | லாரி க/கு .. | | 13,821 |
| | | | | ,, | வட்டிக் க/கு .. | | 2,179 |
| | | | 28,000 | | | | 28,000 |
| 1973 | | | | 1973 | | | |
| சூன் 30 | வங்கி .. | | 16,000 | சூன் 30 | லாரி க/கு .. | | 14,512 |
| | | | | ,, | வட்டிக் க/கு .. | | 1,488 |
| | | | 16,000 | | | | 16,000 |
| 1974 | | | | 1974 | | | |
| சூன் 30 | வங்கி .. | | 16,000 | சூன் 30 | லாரி க/கு .. | | 15,239 |
| | | | | ,, | வட்டி .. | | 761 |
| | | | 16,000 | | | | 16,000 |

**வாடகைக் கொள்முதல் வாணிகக் கணக்கு** (Hire Purchase Trading Account)

குறைந்த மதிப்புடைய பல பொருட்களை வாடகைக் கொள்முதல் அடிப்படையில் விற்கும் நிறுவனம் இவற்றைத் தனியாகப் பதிந்து வருதல் இன்றியமையாதது. சாதாரண விற்பனையினும் வாடகை முறையில் விற்பதை வேறுபடுத்திப் பதிந்துவர வேண்டும். தனியொரு ஏட்டில் பல பத்திகளிட்டு யாருக்கு விற்றது, விற்பனைத் தொகை, தவணைகளின் எண்ணிக்கை, தவணைத் தொகை, அவர்கள் செலுத்தியது போன்ற விவரங்களை எழுதி வரின் பின்னர் கணக்குகளில் எடுத்தெழுதிக் கொள்ளலாம். வாடிக்கையாளர்கள் ஒவ்வொருவருக்கும் தனித் தனிக் கணக்கு வைத்திருந்தால்தான், தவணைத் தொகை தண்டல் செய்யப்பட்டு விட்டதா, அல்லவா, தொகை வசூலாகாவிடின் விற்ற பொருளை மீட்க நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டதா போன்ற விவரங்கள் எளிதில் கிடைக்கும். வாடகைக் கொள்முதல் அடிப்படையில் விற்பனவற்றைக் கீழ்க்கண்ட வகையில் பதியலாம்.

(i) வாடகைக் கொள்முதல் அடிப்படையில் விற்கும் போழ்து :

விற்பனை விலைக்கு 'வாடகைக் கொள்முதல் வாணிகக்' கணக்கில் (Hire Purchase Trading Account) பற்றும், 'வாடகைக் கொள்முதல் சரக்கு விற்பனை' (Goods sold on Hire Purchase Account) எனும் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(ii) தவணைத் தொகைகள் வசூலாகும்போழ்து :

வங்கிக் கணக்கில் பற்றும், வாடகைக் கொள்முதல் வாணிகக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

(iii) தவணைத் தொகை செலுத்தத் தவறிய வாடிக்கையாளர்களிடமிருந்து விற்ற சொத்தை மீட்கும் போழ்து :

'மீட்ட சரக்கிருப்புக் கணக்கில்' (Stock Returned Account or Stock Repossessed Account) பற்றும், 'வாடகைக் கொள்முதல் வாணிகக்' கணக்கில் வரவும் வைக்க வேண்டும். பொருட்களை மீட்கும்போழ்து, அவற்றின் மதிப்பளவிற்கே பற்று, வரவு வைக்கவேண்டும்.

(iv) ஆண்டிறுதியில் தவணை நாள் முடிந்தும் தவணைத் தொகை பெறவில்லையெனில் :

'பெற வேண்டிய தவணைகள்' கணக்கில் (Instalments Due Account) பற்றும், 'வாடகைக் கொள்முதல் வாணிகக்' கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(v) தவணை நாள் வராத சரக்குகள் வாடிக்கையாளர் களிடம் இருப்பதைப் பதிய :

'வாடகைக் கொள்முதல் சரக்கிருப்பு' (Hire Purchase Stock) எனும் கணக்கில் பற்றும், 'வாடகைக் கொள்முதல் வாணிகக்' கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

(vi) வாடகைக் கொள்முதல் அடிப்படையில் நிகழ்ந்த விற்பனையிலும், சரக்கிருப்பிலும் கூடுதலாக அடங்கியுள்ள விலையைக் குறைக்க :

அடக்க விலைக்கும், வாடகைக் கொள்முதல் விலைக்கும் உள்ள வேறுபாட்டுத் தொகைக்கு வாடகைக் கொள்முதலில் சரக்கு விற்பனைக் கணக்கில் பற்றும், வாடகைக் கொள்முதல் வாணிகக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

அதேபோன்று, இறுதியிலுள்ள சரக்கிருப்பில் உள்ள கூடுதல் விலையைச் சரிக்கட்ட வாடகைக் கொள்முதல் வாணிகக் கணக்கில் பற்றும், சரக்கிருப்புக் காப்புக் கணக்கில் (Stock Reserve Account) வரவும் வைக்கவேண்டும்.

வாடகைக் கொள்முதல் சரக்கு விற்பனைக் கணக்கு சாதா ரண வாணிகக் கணக்கிற்கு மாற்றப்படும். வாடகைக் கொள்முதல் வாணிகக் கணக்கு இப்பொழுது இலாப-நட்டத்தை உணர்த்தும். இதனை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்றி முடிக்கவேண்டும்.

பெற வேண்டிய தவணைகள் கணக்கு, வாடகைக் கொள் முதல் சரக்கிருப்புக் கணக்கு, சரக்கிருப்புக் காப்புக் கணக்கு ஆகியவை அடுத்த ஆண்டின் வாடகைக் கொள்முதல் வாணிகக் கணக்கிற்கு மாற்றப்பெறும்.

**எடுத்துக்காட்டு 7**

'புதுமை நிறுவனம்' வாடகைக் கொள்முதல் முறையில் பல பொருட்களில் வாணிகஞ் செய்கின்றனர். அடக்கவிலை மீது 25 சதவீதம் சேர்த்து வாடகைக் கொள்முதல் முறையில் விற்கின்றனர். 1973ஆம் ஆண்டின் நடவடிக்கைகள் கீழே

கொடுக்கப்பட்டுள்ளன. வாடகைக் கொள்முதல் வாணிகக் கணக்கைத் தயாரித்து, இலாப-நட்டத்தைக் கண்டுபிடி.

| 1973 | | ரூ. |
|---|---|---|
| சனவரி 1 | வாடிக்கையாளர்களிடமுள்ள சரக்கு (வாடகைக் கொள்முதல் விலையில்) | 15,000 |
| சன.1 முதல் திச.31வரை | 1973-ல் வாடகைக் கொள்முதல் அடிப்படையில் சரக்கு விற்றது | 75,000 |
| ,, | வாடிக்கையாளர்களிடமிருந்து பெற்ற ரொக்கம் | 60,000 |
| சன.1 முதல் திச.31வரை | தவணைத் தொகை செலுத்தாத வாடிக்கையாளர்களிடமிருந்து மீட்ட சரக்கின் மதிப்பு | 1,000 |
| திச.31 | வாடிக்கையாளர்களிடமுள்ள சரக்கு | 18,000 |
| | பெற வேண்டிய தவணைத் தொகைகள் | 4,000 |

விடை :

**வாடகைக் கொள்முதல் வாணிகக் கணக்கு**

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 | | | | 1973 | | | |
| சன. 1 | தொடக்கச் சரக்கிருப்பு | | 15,000 | சன. 1 முதல் திச. 31 வரை | வங்கி .. | | 60,000 |
| சன. 1 முதல் திச. 31 வரை | வாடகைக் கொள்முதல் விற்பனை | | 75,000 | சன. 1 முதல் திச. 31 வரை | மீட்ட சரக்கு .. | | 1,000 |
| திச. 31 | சரக்கிருப்புக் காப்பு .. | | 3,600 | திச. 31 | பெற வேண்டிய தவணைத் தொகை .. | | 4,000 |
| ,, | இலாப-நட்டக் க/கு— இலாபம் .. | | 7,400 | ,, | வாடகைக் கொள்முதல் சரக்கிருப்பு .. | | 18,000 |
| | | | | ,, | சரக்கிருப்புக் காப்பு— தொடக்கச் சரக்கிருப்பு | | 3,000 |
| | | | | ,, | வாடகைக் கொள் முதல் விற்பனை .. | | 15,000 |
| | | | 1,01,000 | | | | 1,01,000 |

**விளக்கக் குறிப்பு :**

தொடக்க சரக்கிருப்பில் உள்ள கூடுதல் விலையை உணர்தல்:
ரூ. 125 விற்பனை விலையாயின், அடக்கவிலை ரூ 100

ரூ. 15,000 ,, ,, ,, $15{,}000 \times \frac{100}{125} = 12{,}000$

கூடுதல் விலை ரூ. 15,000—ரூ. 12,000 = ரூ. 3,000

இதே போன்று வாடகைக் கொள்முதல் அடிப்படையில் விற்ற தொகையிலும் கண்டுபிடிக்கப்படுகிறது.

ரூ. $75{,}000 \times \frac{100}{125}$ = ரூ. 60,000

$\therefore$ ரூ. 75,000—ரூ. 60,000=ரூ.15,000

வாடகைக் கொள்முதல் சரக்கிருப்புப்பில் உள்ள கூடுதல் விலை :

ரூ. $18{,}000 \times \frac{100}{125}$ = ரூ. 14,400

$\therefore$ ரூ. 18,000 — ரூ. 14,400 = ரூ. 3,600

## பிற பேரேட்டுக் கணக்குகள்

### வாடகைக் கொள்முதல் விற்பனை கணக்கு

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 திச. 31 | வாடகைக் கொள்முதல் வாணிகக் க/கு— கூடுதல் விலை .. | | 15,000 | 1973 சன. 1 முதல் திச. 31 வரை | வாடகைக் கொள்முதல் வாணிகக் க/கு .. | | 75,000 |
| ,, | வாடகைக் கொள்முதல் க/கு— (அல்லது வாணிகக் க/கு) .. | | 60,000 | | | | |
| | | | 75,000 | | | | 75,000 |

## பெறவேண்டிய தவணைகள் தொகைக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 | | | | 1973 | | | |
| திச. 31 | வாடகைக் கொள்முதல் வாணிகக் க/கு .. | | 4,000 | திச. 31 | இருப்பு கீ/இ .. | | 4,000 |
| 1974 | | | | | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 4,000 | | | | |

## வாடகைக் கொள்முதல் சரக்கிருப்புக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 | | | | 1973 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 15,000 | சன. 1 | வாடகைக் கொள்முதல் வாணிகக் க/கு— .. மாற்றப்படுகிறது .. | | 15,000 |
| திச. 31 | வாடகைக் கொள்முதல் வாணிகக் க/கு .. | | 18,000 | திச. 31 | இருப்பு கீ/இ .. | | 18,000 |
| 1974 | | | | | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 18,000 | | | | |

பற்று **மீட்ட சரக்குக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 சன. 1 முதல் திச. 31 வரை | வாடகைக் கொள்முதல் வாணிகக் க/கு .. | | 1,000 | | | | |

பற்று **சரக்கிருப்புக் காப்புக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப, எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 திச. 31 | வாடகைக் கொள்முதல் வாணிகக் க/கு— மாற்றம் .. | | 3,000 | 1973 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 3,000 |
| ,, | இருப்பு கீ/இ .. | | 3,600 | திச. 31 | வாடகைக் கொள்முதல் வாணிகக் க/கு .. | | 3,600 |
| | | | | 1974 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 3,600 |

## தவணை முறை (Instalment System)

முன்னர் விளக்கியவாறு, தவணை முறைக் கொள்முதலில் பொருளை வாங்கும்போழ்தே உரிமையும் வாங்குநரைச் சார்கிறது. இதனை உணர்த்தும் வகையில் பதிவுகளைச் செய்யவேண்டும். எனவே, வாங்குநர் ஏடுகளில், சொத்துக் கணக்கில் முழு ரொக்க மதிப்பிற்கும் பற்று வைக்கப்படுகிறது; ரொக்க மதிப்பிற்கும் தவணை முறை விலைக்குமுள்ள வேறுபாட்டுத் தொகை வட்டிக்காக அன்றோ? எனவே, 'வட்டி இடைநிலைக் கணக்கு' (Interest Suspense A/C) எனுங் கணக்கில் இத் தொகைக்குப் பற்று வைக்கப்படுகிறது. விற்குநர் கணக்கில் முழுத் தொகைக்கும்—தான் தவணை முறையில் செலுத்த வேண்டிய முழு மதிப்பிற்கும்—வரவு வைக்கப்படுகிறது.

பின்னர் ஒவ்வொரு முறையும் தவணைத் தொகை செலுத்தும் போழ்து விற்குநர் கணக்கில் பற்றும் வங்கிக் கணக்கில் வரவும் வைக்கப்படும். அவ்வாண்டு அல்லது அக்காலத்திற்குரிய (period) வட்டி, வட்டி இடைநிலைக் கணக்கிலிருந்து வட்டிக் கணக்கிற்கு மாற்றப்படுகிறது. அதாவது, வட்டிக் கணக்கில் பற்றும், வட்டி இடைநிலைக் கணக்கில் வரவும் வைக்கப்படுகிறது. தேய்மானம் வழக்கம்போன்றே ரொக்க மதிப்பின்மீது கணக்கிடப்பட்டுக் கழிக்கப்பெறும். வட்டி இடைநிலைக் கணக்கு காட்டும் இருப்பு ஒவ்வோராண்டும் இருப்புநிலைக் குறிப்பில் சொத்துக்கள் பகுதியில் காட்டப்பெறும்.

விற்குநரைப் பொருத்தவரை அவரது ஏடுகளில் வாங்குநரின் கணக்கில் தவணை விலை முழுவதற்கும் பற்று வைத்து, விற்பனைக் கணக்கில் ரொக்க மதிப்பிற்கும், வட்டி இடைநிலைக் கணக்கில் தவணை விலை, ரொக்க விலை இரண்டிற்குமுள்ள வேறுபாட்டுத் தொகைக்கு வரவும் வைக்கிறார். தவணைத் தொகை பெறும் போழ்தெல்லாம், வங்கிக் கணக்கில் பற்றும், வாங்குநரின் கணக்கில் வரவும் வைக்கிறார். வட்டி இடைநிலைக் கணக்கிலிருந்து வட்டிக் கணக்கிற்கு அவ்வாண்டுக்குரிய வட்டித் தொகை மாற்றப்படுகிறது; அதாவது, வட்டி இடைநிலைக் கணக்கில் பற்றும், வட்டிக் கணக்கில் வரவும் வைக்கப்படும். வட்டி இடைநிலைக் கணக்கு காட்டும் இருப்பு, இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகள் பகுதியில் காண்பிக்கப்பெறும்.

**எடுத்துக்காட்டு 8**

முத்தமிழ்ப் போக்குவரத்துக் கழகம் 1—1—1972-ல் வங்க ஊர்திக் கம்பெனியிடமிருந்து பேருந்து ஒன்றைத் தவணை முறையில்

வாங்கியது. ஒப்பந்தத்தின்போழ்து ரூ. 20,000-மும், ஆண்டுத் தவணை ரூ. 20,000 வீதம் மூன்று தவணைகளிலும் அதன் விலை செலுத்தப்பட வேண்டும். பேருந்தின் ரொக்க மதிப்பு ரூ. 74,500. வங்க ஊர்திக் கம்பெனி 5 சதவீதம் வட்டி கணக்கிடுகிறது. குறைந்துசெல் இருப்பு முறையில் 10 சதவீதம் தேய்மானம் நீக்கப்படுகிறது என்று கொண்டு, இரு கம்பெனிகளின் ஏடுகளிலும் குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக. பேரேட்டுக் கணக்குகளையும் தயார் செய்க.

**விடை :**

ஒவ்வொரு தவணைத் தொகையிலும் அடங்கியுள்ள வட்டியை உணர ஒரு பட்டியல் தயார் செய்து கொள்ளலாம்.

| | மொத்த ரொக்க மதிப்பு ரூ. | செலுத்திய தவணைத் தொகை ரூ. | வட்டி ரூ. | செலுத்திய ரொக்க மதிப்பு ரூ. |
|---|---|---|---|---|
| மொத்த ரொக்க மதிப்பு | 74,500 | | | |
| ஒப்பந்தத் தொகை | −20,000 | 20,000 | | 20,000 |
| | 54,500 | | | |
| முதல் தவணை | −17,275 | 20,000 | 2,725 | 17,275 |
| | 37,225 | | | |
| இரண்டாந் தவணை | −18,139 | 20,000 | 1,861 | 18,139 |
| | 19,086 | | | |
| மூன்றாந் தவணை | 19,086 | 20,000 | 914* | 19,086 |
| | | 80,000 | 5,500 | 74,500 |

*இறுதித் தவணைக்கு வட்டி கணக்கிட வேண்டுவதில்லை. தவணைத் தொகைக்கும் இருப்புத் தொகைக்கும் உள்ள வேறுபாடே வட்டியாகும்.

## முத்தமிழ்ப் போக்குவரத்துக் கழகத்தின் ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விபரம் | பெ. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| 1972 சன. 1 | பேருந்து க/கு ப<br>வட்டி இடைநிலைக் க/கு ப<br>வங்க ஊர்திக் கம்பெனி<br>(பேருந்து தவணை முறையில் வாங்கியது — ரொக்க மதிப்பு ரூ. 74,500 தவணை விலை ரூ. 80,000.) | | 74,500<br>5,500 | <br><br>80,000 |
| ,, | வங்க ஊர்திக் கம்பெனி ப<br>வங்கி<br>(ஒப்பந்தத்தின்போழ்து செலுத்தியது.) | | 20,000 | <br>20,000 |
| திச. 31 | வங்க ஊர்திக் கம்பெனி ப<br>வங்கி<br>(முதலாண்டிறுதியில் தவணைத் தொகை செலுத்தியது.) | | 20,000 | <br>20,000 |
| ,, | வட்டிக் க/கு ப<br>வட்டி இடைநிலைக் க/கு<br>(முதலாண்டு வட்டியை வட்டிக் கணக்கிற்கு மாற்றியது.) | | 2,725 | <br>2,725 |
| ,, | தேய்மானக் க/கு ப<br>பேருந்து க/கு<br>(ரூ. 74,500 மீது 10 சதவீதம் தேய்மானம் நீக்கியது.) | | 7,450 | <br>7,450 |

## குறிப்பேட்டுப் பதிவுகள் (தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பெ. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| 1973 திச. 31 | வங்க ஊர்திக் கம்பெனி ப | | 20,000 | |
| | வங்கி | | | 20,000 |
| | (இரண்டாமாண்டுத் தவணை செலுத்தியது.) | | | |
| ,, | வட்டிக் க/கு ப | | 1,861 | |
| | வட்டி இடைநிலைக் க/கு | | | 1,861 |
| | (இரண்டாமாண்டு வட்டியை வட்டிக் கணக்கிற்கு மாற்றியது.) | | | |
| ,, | தேய்மானக் க/கு ப | | 6,705 | |
| | பேருந்து க/கு | | | 6,705 |
| | (ரூ. 67,050 மீது 10 சதவீதம் தேய்மானம் நீக்கியது.) | | | |
| 1974 திச. 31 | வங்க ஊர்திக் கம்பெனி ப | | 20,000 | |
| | வங்கி | | | 20,000 |
| | (மூன்றுமாண்டுத் தவணை செலுத்தியது.) | | | |
| ,, | வட்டிக் க/கு ப | | 914 | |
| | வட்டி இடைநிலைக் க/கு | | | 914 |
| | (மூன்றுமாண்டு வட்டி, வட்டிக் கணக்கிற்கு மாற்றப்படுகிறது.) | | | |
| ,, | தேய்மானக் க/கு ப | | 6,035 | |
| | பேருந்து க/கு | | | 6,035 |
| | (ரூ. 60,345 மீது 10 சதவீதம் தேய்மானம் நீக்கியது.) | | | |

## பேரேட்டுக் கணக்குகள்

### பேருந்து கணக்கு

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 | | | | 1972 | | | |
| சன. 1 | வங்க ஊர்திக் கம்பெனி .. | | 74,500 | திச. 31 | தேய்மானம் .. | | 7,450 |
| | | | | ,, | இருப்பு கீ/இ .. | | 67,050 |
| | | | 74,500 | | | | 74,500 |
| 1973 | | | | 1973 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 67,050 | திச. 31 | தேய்மானம் .. | | 6,705 |
| | | | | ,, | இருப்பு கீ/இ .. | | 60,345 |
| | | | 67,050 | | | | 67,050 |
| 1974 | | | | 1974 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 60,345 | திச. 31 | தேய்மானம் .. | | 6,035 |
| | | | | ,, | இருப்பு கீ/இ .. | | 54,310 |
| | | | 60,345 | | | | 60,345 |
| 1975 | | | | | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 54,310 | | | | |

ஒவ்வோராண்டும் தேய்மானம் இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்லப்படும்,

**வங்க ஊர்திக் கம்பெனி கணக்கு**

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 | | | | 1972 | | | |
| சன. 1 | வங்கி .. | | 20,000 | சன. 1 | பேருந்து க/கு .. | | 74,500 |
| திச. 31 | வங்கி .. | | 20,000 | ,, | வட்டி இடைநிலைக் க/கு .. | | 5,500 |
| ,, | இருப்பு கீ/இ .. | | 40,000 | | | | |
| | | | 80,000 | | | | 80,000 |
| 1973 | | | | 1973 | | | |
| திச. 31 | வங்கி .. | | 20,000 | சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 40,000 |
| ,, | இருப்பு கீ/இ .. | | 20,000 | | | | |
| | | | 40,000 | | | | 40,000 |
| 1974 | | | | 1974 | | | |
| திச. 31 | வங்கி .. | | 20,000 | சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 20,000 |

**வட்டி இடைநிலைக் கணக்கு**

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 | | | | 1972 | | | |
| சன. 1 | வங்க ஊர்திக் கம்பெனி | | 5,500 | திச. 31 | வட்டிக் க/கு— | | |
| | | | | | மாற்றம் .. | | 2,725 |
| | | | | ,, | இருப்பு கீ/இ .. | | 2,775 |
| | | | 5,500 | | | | 5,500 |
| 1973 | | | | 1973 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 2,775 | திச. 31 | வட்டிக் க/கு— | | |
| | | | | | மாற்றம் .. | | 1,861 |
| | | | | ,, | இருப்பு கீ/இ .. | | 914 |
| | | | 2,775 | | | | 2,775 |
| 1974 | | | | 1974 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 914 | திச. 31 | வட்டிக் க/கு— | | |
| | | | | | மாற்றம் .. | | 914 |

**குறிப்பு :** *தவணைகள் அனைத்தும் செலுத்தப்பட்ட நிலையில் வட்டி இடைநிலைக் கணக்கு முற்றுப்பெறும் என்பது நோக்கற்பாலது.*

## 1972 திசம்பர் 31-ற்கான இருப்பு நிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. | ரூ. |
|---|---|---|---|---|
| வங்க ஊர்திக் கம்பெனி | 40,000 | பேருந்து | 74,500 | |
| | | கழி : தேய்மானம் | 7,450 | 67,050 |
| | | வட்டி இடை நிலைக் க/கு | | 2,775 |

## 1973 திசம்பர் 31-ற்கான இருப்பு நிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. | ரூ. |
|---|---|---|---|---|
| வங்க ஊர்திக் கம்பெனி | 20,000 | பேருந்து | 67,050 | |
| | | கழி : தேய்மானம் | 6,705 | 60,345 |
| | | வட்டி இடை நிலைக் க/கு | | 914 |

## 1974 திசம்பர் 31-ற்கான இருப்பு நிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. | ரூ. |
|---|---|---|---|---|
| | | பேருந்து | 60,345 | |
| | | கழி : தேய்மானம் | 6,035 | 54,310 |

## வங்க ஊர்திக் கம்பெனியின் ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| 1972 சன. 1 | முத்தமிழ்ப் போக்கு வரத்துக் கழகம் ப | | 80,000 | |
| | விற்பனை | | | 74,500 |
| | வட்டி இடைநிலைக் க/கு | | | 5,500 |
| | (பேருந்து விற்றது; ரொக்கமதிப்புரூ. 74,500 தவணை விலை ரூ. 80,000.) | | | |
| ,, | வங்கி ப | | 20,000 | |
| | முத்தமிழ்ப் போக்கு வரத்துக் கழகம் | | | 20,000 |
| | (ஒப்பந்தத் தொகை பெற்றது.) | | | |
| திச. 31 | வங்கி ப | | 20,000 | |
| | முத்தமிழ்ப் போக்கு வரத்துக் கழகம் | | | 20,000 |
| | (முதலாண்டிறுதியில் தவணைத் தொகை பெற்றது.) | | | |
| ,, | வட்டி இடைநிலைக் க/கு ப | | 2,725 | |
| | வட்டிக் க/கு | | | 2,725 |
| | (முதலாண்டு வட்டியை வட்டிக் கணக்கிற்கு மாற்ற.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள் (தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பெ. ப. எ, | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| 1973 திச.31 | வங்கி ப | | 20,000 | |
| | முத்தமிழ்ப் போக்கு வரத்துக் கழகம். (இரண்டாமாண்டிறுதியில் தவணைத் தொகை பெற்றது.) | | | 20,000 |
| ,, | வட்டி இடைநிலைக் க/கு ப | | 1,861 | |
| | வட்டிக் க/கு (இரண்டாமாண்டின் வட்டியை வட்டிக் கணக்கிற்கு மாற்ற.) | | | 1,861 |
| 1974 திச.31 | வங்கி ப | | 20,000 | |
| | முத்தமிழ்ப் போக்கு வரத்துக் கழகம் (மூன்றாமாண்டிறுதியில் தவணைத் தொகை பெற்றது.) | | | 20,000 |
| ,, | வட்டி இடைநிலைக் க/கு ப | | 914 | |
| | வட்டிக் க/கு (மூன்றாமாண்டின் வட்டியை வட்டிக் கணக்கிற்கு மாற்ற.) | | | 914 |

## பேரேட்டுக் கணக்குகள்

### முத்தமிழ்ப் போக்குவரத்துக் கழகம்

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 | | | | 1972 | | | |
| சன. 1 | விற்பனை .. | | 74,500 | சன. 1 | வங்கி .. | | 20,000 |
| | வட்டிஇடைநிலைக் க/கு.. | | 5,500 | திச. 31 | வங்கி .. | | 20,000 |
| | | | | ,, | இருப்பு கீ/இ .. | | 40,000 |
| | | | 80,000 | | | | 80,000 |
| 1973 | | | | | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 40,000 | 1973 | | | |
| | | | | திச. 31 | வங்கி .. | | 20,000 |
| | | | | ,, | இருப்பு கீ/இ .. | | 20,000 |
| | | | 40,000 | | | | 40,000 |
| 1974 | | | | 1974 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 20,000 | திச. 31 | வங்கி .. | | 20,000 |

பற்று **வட்டி இடைநிலைக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 | | | | 1972 | | | |
| திச. 31 | வட்டிக் க/கு— மாற்றம் .. | | 2,725 | சன. 1 | முத்தமிழ்ப் போக்கு வரத்துக் கழகம் .. | | 5,500 |
| ,, | இருப்பு கீ/இ .. | | 2,775 | | | | |
| | | | 5,500 | | | | 5,500 |
| 1973 | | | | 1973 | | | |
| திச. 31 | வட்டிக் க/கு— மாற்றம் .. | | 1,861 | சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 2,775 |
| ,, | இருப்பு கீ/இ .. | | 914 | | | | |
| | | | 2,775 | | | | 2,775 |
| 1974 | | | | 1974 | | | |
| திச. 31 | வட்டிக் க/கு— மாற்றம் .. | | 914 | சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 914 |

**குறிப்பு :** 1. தவணைகள் அனைத்தையும் பெற்றதும், வட்டி இடைநிலைக் கணக்கு முற்றுப்பெறும்.

2. வட்டி இடைநிலைக் கணக்கிலிருந்து ஒவ்வோராண்டும் மாற்றப்படும் வட்டி, மீண்டும் அந்த ஆண்டு இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்றப்படும் என்பதை மறத்தலாகாது.

## வினாக்கள்

1. வாடகைக் கொள்முதல் முறை என்றால் என்ன ? அது எங்ஙனம் தவணைக்கொள்முதல் முறையினின்றும் மாறு படுகின்றது ?
2. வாடகைக் கொள்முதல் முறையில் தவணைத் தொகை செலுத்தத் தவறியதால் விற்ற பொருளை மீட்கும் பொழுது கணக்கை முடிக்கத் தேவையான பதிவுகளைத் தருக.
3. தவணைக் கொள்முதல் முறையில் பொருள்கள் விற்கப் படும்பொழுது, வாங்குநர் ஏடுகளிலும் விற்குநர் ஏடு களிலும் செய்யும் பதிவுகள் யாவை ?
4. வாடகைக் கொள்முதல் முறை, தவணைக் கொள்முதல் முறை—ஆகியவற்றின் நன்மை, தீமைகளை ஆய்க.

## பயிற்சி

1. 1961 சூலை 1-ல் சிம்சன் கம்பெனி சத்தியன் என்பவருக்குக் குளிர்சாதனப் பெட்டி (Refrigerator) ஒன்றை வாடகைக் கொள்முதல் முறையில் கொடுத்தது. அதனைக் கொடுக்கும் பொழுது ரூ. 400 தரவேண்டும். மீதித் தொகையை ரூ.600 வீதம் 5 தவணைகளில் செலுத்த வேண்டும். தவணைகள் ஒவ்வொரு ஆண்டும் சூன் 30-ல் செலுத்தவேண்டும். ஆண்டிருப்புக்களின் மீது 5% வட்டி விற்பனையாளர் கணக்கிடுகின்றனர். குளிர் சாதனப் பெட்டியின் ரொக்க மதிப்பு ரூ. 3,000.

1966 சூன் 30 வரை முடியும் 5 ஆண்டுகட்கான பேரேட்டுக் கணக்குகளை விற்பனையாளரின் ஏடுகளில் காட்டவும்.

(M. U. B.Com., April, 1967)

2. 1966 சனவரி 1-ல் நிலக்கரிச் சுரங்கக் கம்பெனி வாடகைக் கொள்முதல் முறையில் இரயில் பெட்டிகளை வாங்கியது. இரயில் பெட்டியின் ரொக்க மதிப்பு ரூ. 22,350. அதன் விலையைக் கீழ்க்கண்டவாறு செலுத்த வேண்டும்.

ஒப்பந்தம் கையெழுத்தானவுடன் ரூ. 6,000 செலுத்த வேண்டும். மீதித் தொகையை ரூ. 6,000 வீதம் 3 தவணைத் தொகைகளாக ஒவ்வொரு ஆண்டிறுதியிலும் செலுத்தவேண்டும். இரயில் பெட்டிக் கம்பெனி ஆண்டு வட்டிவீதம் 5% கணக்கிடுகிறது. இரயில் பெட்டியின் குறைந்துசெல் இருப்பு மதிப்பில் 10% ஆண்டுத் தேய்மானம் நீக்கப்பட வேண்டும்.

சுரங்கக் கம்பெனி ஏட்டிலாவது, இரயில் பெட்டிக் கம்பெனி யின் ஏட்டிலாவது குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

(M. U. B.Com., September, 1969)

3. பம்பாய் மோட்டார் கம்பெனியிடமிருந்து சென்னைப் போக்குவரத்துக் கம்பெனி லாரிகளை 1960 சனவரி 1-ல் பின் செலுத்தும் முறையில் (Deferred Payment System) வாங்கியது. ஒப்பந்தம் கையெழுத்தானவுடன் ரூ. 10,000 கொடுத்தது. மீண்டும் 3 தவணைகளில் ரூ. 10,000 வீதம் ஒவ்வோராண்டும் திசம்பர் 31-ல் செலுத்துவதாக ஒப்புக்கொண்டது. லாரியின் ரொக்க மதிப்பு ரூ. 37,250. ஆண்டு ஒன்றுக்கு 5 சதவீதம் மோட்டார் கம்பெனி வட்டி கணக்கிடுகிறது. 10 சதவீதம் தேய்மானம் நீக்கி, வாங்குநர் ஏடுகளில் தேவையான கணக்கு களைக் கீழ்க்கண்ட நிலைகளில் தயாரிக்கவும்.

(1) லாரியைக் கொடுத்தவுடன் உரிமை மாறுவதாகக் கொண்டு.

(2) இறுதித் தவணைத் தொகை செலுத்தியவுடன்தான் உரிமை மாறுவதாகக் கொண்டு.

(M. U. B.Com., September, 1966)

4. 1952 சனவரி 1-ல் ஶ்ரீராம் கம்பெனி மோட்டார் கார்களைத் தவணைக் கொள்முதல் முறையில் வாங்கியது. கார் களின் ரொக்க மதிப்பு ரூ. 29,800. கீழ்க்கண்டவாறு அவற்றின் விலை செலுத்தப்பட வேண்டும்.

ஒப்பந்தம் கையெழுத்தானவுடன் ரூ. 8,000 செலுத்தப்பட வேண்டும். மீதித் தொகையை ரூ. 8,000 வீதம் 3 தவணைகளில் செலுத்தவேண்டும். மோட்டார் கம்பெனி 5 சதவீதம் ஆண்டு வட்டி கணக்கிடுகிறது. ரொக்க மதிப்பின் மீது குறைந்த செல்லிருப்பு முறையில் 10 சதவீதம் தேய்மானம் நீக்க ஶ்ரீராம் கம்பெனி முடிவு செய்கிறது.

மேற்கண்ட அதே நிபந்தனைகளின் பேரில் தவணைக் கொள் முதல் முறையில் ஶ்ரீராம் கம்பெனி மோட்டார் கார்களை வாங்கிய தாகக் கொண்டு ஶ்ரீராம் கம்பெனி ஏடுகளில் தேவையான பேரேட்டுக் கணக்குகளை 1952, 1953, 1954 ஆகிய ஆண்டுகட்குத் தரவும். (M. U. B. Com., September, 1961)

# 2. விற்பனைத்திருப்ப அடிப்படையில் சரக்கு அனுப்பல் அல்லது ஒப்புதலுக்குப் பின் விற்பனை

(Goods on Sale or Return Basis Sale on or Approval)

சில வேளைகளில் வாடிக்கைதாரர்கட்கு விற்பனை அல்லது திருப்ப அடிப்படையில் சரக்கு அனுப்பப்படுகிறது. அதாவது, வாடிக்கையாளர் அச்சரக்கினை ஏற்றுக் கொண்டால் அது விற்பனை யாகும். அவர் அதை ஏற்றுக் கொள்ளவில்லையாயின், அதனை அவர் திருப்பி அனுப்பிவிடலாம். குறிப்பிட்ட காலத்திற்குள் வாடிக்கையாளர் இவ் விருப்புரிமையைப் பயன்படுத்தி ஏற்றுக் கொள்ளவேண்டும்; அல்லது திருப்பி அனுப்பிவிடவேண்டும். இவ்வாறு விற்பதை விற்பனை அல்லது திருப்ப அடிப்படையில் விற்பனை என்கிறோம்; அல்லது 'ஒப்புதலுக்குப் பின் விற்பனை' என்கிறோம். விற்பனையை அதிகரிக்க வேண்டுமெனும் நோக்குடன், வாடிக்கையாளர்கட்கு இவ்வுரிமை கொடுக்கப்படுகிறது. இவ் வடிப்படையில் சரக்கை அனுப்பும்போழ்து அதனை விற்பனை யாகக் கொள்ளல் தவறாகும். காரணம் உடைமை மாற்றப் படுகிறதேயொழிய உரிமை மாற்றப்படுவதில்லை. இவ்வாறு அனுப்பப்பட்ட சரக்கை ஏற்றுக்கொள்வதாக வாடிக்கையாளர் தனது ஒப்புதலை அளித்த பின்னரே இந்நடவடிக்கை விற்பனை நடவடிக்கையாக மாறுகிறது.

**கணக்கு எழுதுதல்**

இவ்வகை நடவடிக்கைகளைப் பதிய மூன்று முறைகள் பின் பற்றப்படுகின்றன.

(1) ஒரோ வழி நடவடிக்கைகள் (Exceptional transactions) (எப்பொழுதாவது இவ்வகை நடவடிக்கைகள் நிகழும் போழ்து பதியும் முறை);

(2) அதிக நடவடிக்கைகள் நிகழும்போழ்து பதியுமுறை;

(3) மிக அதிகமாக இத்தகைய நடவடிக்கைகள் நிகழும் போழ்து பதியுமுறை.

**(1) ஒரோ வழி நடவடிக்கைகளைப் பதிதல்** (Exceptional transactions) :

'ஒப்புதலுக்குப் பின் விற்பனை' நடவடிக்கைகள் அடிக்கடி நிகழாதபோழ்து இவற்றைப் பதிய தனி ஏடுகள் வைத்திருக்க வேண்டுவதில்லை. இவற்றை விற்பனையாகவே கொண்டு பதிவது வழக்கம். எனவே, வழக்கம் போன்றே வாடிக்கையாளர் கணக்கில் பற்றும், விற்பனைக் கணக்கில் வரவும் வைத்துப் பதியப்படும்.

பின்னர் வாடிக்கையாளர் தனது ஒப்புதலைத் தெரிவிப்பின், அதாவது, அனுப்பிய சரக்கை ஏற்றுக்கொள்வதாகத் தெரிவிப்பின் மீண்டும் இதனைப் பதிய வேண்டுவதில்லை. காரணம் முன்னரே இதனை எதிர்பார்த்து விற்பனையாகப் பதிந்துவிட்டோம்.

அனுப்பிய சரக்கை வாடிக்கையாளர் திருப்பி அனுப்பின் இந் நடவடிக்கை விற்பனையாக முற்றுப்பெறவில்லையென்று பொருளாகிறது. முன்னர் விற்பனையாகக் கருதி செய்த பதிவினை இப்பொழுது நீக்கவேண்டும். அதாவது, இதனை விற்பனைத் திருப்பமாகக் கருதிப் பதிந்துவிட்டால் போதும் (விற்பனைத் திருப்பக் கணக்கில் பற்றும், வாடிக்கையாளர் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்).

ஆண்டிறுதியில் சில வாடிக்கையாளர்கள் தங்கள் இசைவினைத் தெரிவிக்காது இருப்பின், அவர்களிடமுள்ள சரக்கை அடக்கவிலை அல்லது சந்தைவிலை இதில் எது குறைவாகவுள்ளதோ அதில் மதிப்பிட்டு இறுதிச் சரக்கிருப்பாகக் கொள்ளவேண்டும். அச்சரக்குகளின் இடாப்பு விலையில் விற்பனைக் கணக்கில் பற்றும், திரும்ப வரக்கூடிய சரக்கு ஒதுக்குக் கணக்கில் வரவும் (Provision for Returnable Goods) வைக்கவேண்டும். இருப்புநிலைக் குறிப்பில் திரும்பி வரக்கூடிய சரக்கு ஒதுக்குக் கணக்கினைக் கடனாளிகள் கணக்கில் கழித்துக் காட்டவேண்டும். அடுத்த ஆண்டுத் தொடக்கத்தில் இப்பதிவினை எதிர்மாறான முறையில் செய்து நீக்கிவிட வேண்டும்.

கீழ்க்கண்ட வேறு முறையும் பயன்படுத்தப்படுகிறது :

1. விற்பனைக் கணக்கில் பற்றும், வாடிக்கையாளர் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

இப்பதிவினால் விற்பனை விலையில் விற்பனையாகப் பதிந்த நடவடிக்கை நீக்கப்படுகிறது.

2. வாடிக்கையாளரிடமுள்ள சரக்குக் கணக்கில் பற்றும், வாணிகக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

இதனால் வாடிக்கையாளர் வசமுள்ள சரக்கு, கணக்கில் கொண்டுவரப்பட்டு இருப்புநிலைக் குறிப்பில் இடம் பெறுகிறது. இச் சரக்கு நம்மிடம் இல்லாக் காரணத்தால் இறுதிச் சரக்கிருப்பிலும் இது சரிக்கட்டப்படுவதில்லை. (அடக்கவிலை அல்லது, சந்தைவிலை இதில் எது குறைவோ அதில் பதியப் படுகிறது.)

## (2) பல (அதிக) நடவடிக்கைகளைப் பதிதல்

ஒப்புதலுக்குப் பின் விற்பனை நடவடிக்கைகள் ஓரளவு நிறைந்திருக்கும்போழ்து மேற் சொன்ன முறை பின்பற்றப்படுவதில்லை. காரணம், சரக்கினை ஏற்றுக் கொள்ளாமல் திருப்பியனுப்பும்போழ்தெல்லாம் முதலில் செய்த பதிவினை நீக்கும் பதிவுகளையும் செய்யவேண்டும். எனவே, இதற்காகத் தனி ஏடுகள் வைத்துக்கொள்ளப்படுகின்றன.

**விற்பனை அல்லது திருப்ப நாளேடு** (Sale or Return Day Book) எனும் ஒரு குறிப்பு ஏட்டினை வைத்திருப்பது வழக்கம். இது மாதிரியில் (பக்கம் 72) காட்டியுள்ளவாறு கோடுகள் இடப்பட்டிருக்கும். இது ஐந்து பத்திகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. முதல் பத்தியில் மொத்தம் அனுப்பப்பட்ட சரக்கும், நாளும், வாடிக்கையாளரின் பெயரும் குறிப்பிடப்படுகின்றன. அனுப்பப்பட்ட சரக்கை, வாடிக்கையாளர் ஏற்றுக்கொள்வதாக ஒப்புதல் தெரிவித்தபின்னர் இரண்டாம் பத்தியில் எழுதப்படுகிறது. வாடிக்கையாளர் திருப்பியனுப்பும் சரக்கு பற்றிய விவரம் மூன்றுவது பத்தியில் எழுதப்படுகிறது. வாடிக்கையாளரிடமுள்ள சரக்கு பற்றிய விவரம் நான்காவது பத்தியில் எழுதப்படுகிறது. இச் சரக்கின் அடக்கவிலை ஐந்தாவது பத்தியில் எழுதப்படுகிறது.

சரக்கு அனுப்பும்போழ்து, விற்பனை விலையில் முதல் பத்தியில் எழுதப்படுமென்று கூறினோம். கணக்கேடுகளில் இது குறித்து

வேறு பதிவு ஒன்றும் செய்யப்படுவதில்லை. இது நாம் நினைவில் வைத்துக்கொள்ளவே பயன்படுகிறது. வாடிக்கையாளரைக் கடனாளியாகவோ அல்லது அனுப்பிய சரக்கை விற்பனையாகவோ இவ்வாறு பதிவதன்மூலம் நாம் காட்டுவதில்லை.

அனுப்பிய சரக்கை வாடிக்கையாளர் ஒப்புக்கொள்ளும் போழ்து, இது குறித்த விவரம் இரண்டாவது பத்தியில் பதியப் படுகிறது என்றோம். இப்பத்தியிலிருந்து வாடிக்கையாளர்களின் கணக்குகள் தனித்தனியாகப் பற்றுவைக்கப்படுகின்றன. இப் பத்தி அவ்வப்போழ்து (திங்கள்தோறும்) கூட்டப்பட்டு இக் கூட்டல் தொகை பேரேட்டிலுள்ள விற்பனைக் கணக்கிற்கு எடுத்துச் செல்லப்பட்டு வரவு வைக்கப்படும்.

சரக்கு திருப்பியனுப்பப்படும்போழ்து, இது பற்றிய விவ ரங்கள் மூன்றாவது பத்தியில் எழுதப்படுகின்றனவென்று கூறி யிருக்கிறோம். இவ் விவரங்களைக் கணக்கேடுகள் எதிலும் மீண்டும் பதியத் தேவையில்லை. காரணம், சரக்கை அனுப்பும்போழ்து கணக்கேடுகள் எதிலும் பதியவில்லையாதலால், அவ்வாறு அனுப்பப் பட்ட சரக்கு திரும்பி வரும்போழ்தும், கணக்கேடுகளில் பதியத் தேவையில்லையென்பது புலனாகும்.

ஆண்டின் இறுதியில் நான்காவது பதிவு நிறைவு செய்யப் படும். வாடிக்கையாளர்கள் ஒப்புதல் தெரிவிக்காமல் வைத்துள்ள சரக்கின் மதிப்பு இப்பத்தியில் பதியப்படுகிறது. முதலாவது பத்தியின் தொகைக்கும், இரண்டாவது, மூன்றாவது பத்திகளின் கூட்டல் தொகைக்கும் உள்ள வேறுபாட்டுத் தொகையே நான் காவது பத்தியின் கூட்டல் தொகையாகும். இப்பதிவைக் கவனத்துடன் பதிய வேண்டும். வாடிக்கையாளர் கைவசமுள்ள சரக்கின் அடக்கவிலை ஐந்தாவது பத்தியில் எழுதப்படுகிறது. இது இறுதிச் சரக்கிருப்பில் சரிக்கட்டப்பட்டு இருப்புநிலைக் குறிப் பில் காட்டப்படுகிறது ; அல்லது முன்னர் கூறிய இரண்டாவது முறைப்படி பதியும்போழ்து, வாடிக்கையாளர் வசமுள்ள சரக்குக் கணக்கில் பற்றும், வாணிகக் கணக்கில் வரவும் இத் தொகைக்கு வைக்கப்படும்.

### (3) மிக அதிகமான நடவடிக்கைகளைப் பதிதல்

இதற்காக கீழ்க்கண்ட மூன்று வகை ஏடுகள் வைத்திருக்கப் படுகின்றன.

1. விற்பனை அல்லது திருப்ப நாள் ஏடு (Sale or Return Day Book);

2. விற்பனை அல்லது திருப்பக் குறிப்பேடு (Sale or Return Journal);

3. விற்பனை அல்லது திருப்பப் பேரேடு (Sale or Return Ledger).

சரக்கு அனுப்பப்படும்போழ்து முதன் முதலாக அது விற்பனை அல்லது திருப்ப நாள் ஏட்டில் பதியப்படுகிறது. சாதாரணக் கடன் விற்பனையை விற்பனை ஏட்டில் பதிவது போன்று அல்லது சரக்கு கடனுகை வாங்குவதைக் கொள்முதல் ஏட்டில் பதிவது போன்று விற்பனை அல்லது திருப்ப நடவடிக்கைகளை இதில் பதிய வேண்டும். விற்பனை ஏட்டிலிருந்து பேரேட்டிலுள்ள வாடிக்கையாளர் கணக்கில் பற்றும், விற்பனை ஏட்டின் மொத்தத் தொகை விற்பனைக் கணக்கில் வரவும் வைக்கப்படுகிறதென்பதை நாம் அறிவோம். அவ்வாறே, விற்பனை அல்லது திருப்ப நாளேட்டிலிருந்து விற்பனை அல்லது திருப்பப் பேரேட்டிலுள்ள கணக்குகளில் எடுத்து எழுதவேண்டும். அதாவது விற்பனை அல்லது திருப்பப் பேரேட்டிலுள்ள

வாடிக்கையாளர் கணக்கில் தனித்தனியாகப் பற்றும்,

விற்பனை அல்லது திருப்பச் சரக்குக் கணக்கில் வரவும் வைக்கப்படுகிறது.

அனுப்பிய சரக்கை வாடிக்கையாளர்கள் ஏற்றுக் கொள்ளும் போழ்து, அதாவது, விற்பனை அல்லது திருப்ப நடவடிக்கை விற்பனையாகக் கனியும்போழ்து, இது முதன் முதலாக விற்பனை அல்லது திருப்பக் குறிப்பேட்டில் பதியப்படுகிறது. (இதன் மாதிரி பின்னர் பக்கம் 71-ல் கொடுக்கப்பட்டிருக்கிறது.) விற்பனை அல்லது திருப்பக் குறிப்பேடு என்பது இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. முதல் பகுதியில் விற்பனை அல்லது திருப்ப அடிப்படையில் அனுப்பிய சரக்கு ஏற்றுக்கொள்ளப்படுவது குறிப்பிடப்படுகிறது. இரண்டாவது பத்தியில், வாடிக்கையாளர் ஏற்றுக்கொள்ளாது திருப்பியனுப்பும் சரக்கு பற்றிய விவரங்கள் கூறப்படுகின்றன. இதிலிருந்து **விற்பனைப் பேரேட்டிலுள்ள வாடிக்கையாளர் கணக்கில் பற்றும்** விற்பனை அல்லது திருப்பப் பேரேட்டிலுள்ள வாடிக்கையாளர் கணக்கில் வரவும் வைக்கப்படுகிறது. திங்கள் தோறும் இக்குறிப்பேட்டின் விற்பனைப் பத்தியின் கூட்டல் தொகை, விற்பனை அல்லது திருப்பச் சரக்குக் கணக்கில் பற்றும் **விற்பனைப் பேரேட்டிலுள்ள விற்பனைக் கணக்கில் வரவும் வைக்கப்படுகிறது.**

சரக்கு திருப்பி அனுப்பப்படும்போழ்து மேற்சொன்ன விற்பனை அல்லது திருப்பக் குறிப்பேட்டில் இரண்டாவது பத்தியில் எழுதப்படுகிறது. இப்பத்தியின் கூட்டல் தொகை விற்பனை அல்லது திருப்பச் சரக்குக் கணக்கில் பற்றும், விற்பனை அல்லது திருப்பப் பேரேட்டிலுள்ள வாடிக்கையாளர் கணக்கில் வரவும் வைக்கப்படுகிறது.

இவ்வாறு பதிவதன் மூலமாக விற்பனை அல்லது திருப்பப் பேரேடு தாமே இருப்பு காட்டிக் கொள்ளும் முறையில் அமைகிறது.

விற்பனை அல்லது திருப்ப சரக்குக் கணக்கின் இருப்பு, வாடிக்கையாளர் வசமுள்ள சரக்கிருப்பின் மதிப்பை உணர்த்தும். இச்சரக்கின் அடக்க விலையைக் கணக்கிட்டு இறுதிச் சரக்கிருப்பில் சேர்த்துக் கொள்ளவேண்டும். (இவ்வாறு விற்பனை அல்லது திருப்பப் பேரேட்டிலுள்ள வாடிக்கையாளர்களும் கணக்குகளும் விற்பனை அல்லது திருப்ப அடிப்படையில் அனுப்பிய சரக்குக் கணக்கும் இருப்பாய்வில் இடம் பெறுவதில்லை.)

மேற்சொன்னவற்றை இப்பொழுது மீண்டும் நினைவு கூறுவோம் :—

(1) விற்பனை அல்லது திருப்ப அடிப்படையில் சரக்கை அனுப்பும்போழ்து, (விற்பனை அல்லது திருப்பப் பேரேட்டிலுள்ள) வாடிக்கையாளர் கணக்கில் பற்றும் (விற்பனை அல்லது திருப்பப் பேரேட்டிலுள்ள) விற்பனை அல்லது திருப்ப சரக்குக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

(2) அனுப்பிய சரக்கை வாடிக்கையாளர்கள் ஏற்றுக் கொள்ளும்போழ்து, வழக்கமாகவுள்ள விற்பனையேட்டில் பதிவாகிப் பேரேட்டுக் கணக்குகட்கு எடுத்துச் செல்லப்படுகிறது. எனவே,

அ. பேரேட்டிலுள்ள வாடிக்கையாளர் கணக்கில் பற்றும்,

விற்பனை அல்லது திருப்ப பேரேட்டிலுள்ள வாடிக்கையாளர் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

ஆ. விற்பனை அல்லது திருப்பப் பேரேட்டிலுள்ள விற்பனை அல்லது திருப்பப் சரக்குக் கணக்கில் பற்றும்

விற்பனைப் பேரேட்டிலுள்ள விற்பனைக் கணக்கில் வரவும் வைக்கப்படுகிறது.

(3) அனுப்பிய சரக்கை ஏற்றுக் கொள்ளாமல், வாடிக்கையாளர்கள் திருப்பியனுப்பும்போழ்து, விற்பனை அல்லது திருப்பப் பேரேட்டிலுள்ள விற்பனை அல்லது திருப்ப சரக்குக் கணக்கில் பற்றும், அப்பேரேட்டிலேயேவுள்ள வாடிக்கையாளர் கணக்கில் வரவும் வைக்கப்படும்.

## விற்பனை அல்லது திருப்பக் குறிப்பேடு
## (Sale or Return Journal)

| | விற்ற சரக்குக்காக | | | | | திருப்பி அனுப்பப்பட்ட சரக்குக்காக | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| நாள் | விவரம் | விற்பனைப் பேரேட்டுப் பக்க எண் | விற்பனை அல்லது திருப்பப் பேரேட்டுப் பக்க எண் | தொகை | | நாள் | விவரம் | விற்பனை அல்லது திருப்பப் பேரேட்டுப் பக்க எண் | தொகை | |
| | | | | ரூ. | கா. | | | | ரூ. | கா. |
| | | | | | | | | | | |

## விற்பனை அல்லது திருப்ப நாளேடு
## (Sale or Return Day Book)

| 1. அனுப்பப்பட்ட சரக்கு | | | | 2. விற்கப்பட்ட சரக்கு | | | | 3. திருப்பியனுப்பப் பட்ட சரக்கு | | | 4. இருப்பு | | 5. இருப்பு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| நாள் | விவரம் | தொகை | | நாள் | பே. ப. எ. | தொகை | | நாள் | தொகை | | விற்பனை விலையில் மதிப்பு | | அடக்க விதியில் மதிப்பு | |
| | | ரூ. | கா. | | | ரூ. | கா. | | ரூ. | கா. | ரூ. | கா. | ரூ. | கா. |
| | | | | | | | | | | | | | | |

## வினாக்கள்

1. விற்பனை அல்லது திருப்ப அடிப்படையில் நேரிடும் நடவடிக்கைகளைப் பதிய சிறந்ததொரு முறையை விளக்குக.

2. எப்பொழுதாவது ஒரு முறை விற்பனை அல்லது திருப்ப நடவடிக்கைகளைப் பதிய தனி ஏடுகள் தேவையா ? அவற்றை எவ்வாறு பதிவது ?

3. ஒப்புதலுக்குப் பின் விற்பனை எனும் அடிப்படையில், நடவடிக்கைகள் நிறைந்து இருக்கும்போழ்து, வைத்திருக்க வேண்டிய ஏடுகள் யாவை ? பதியும் முறையை விளக்குக.

## பயிற்சி

மோட்டார் உற்பத்தி செய்யும் நிறுவனம் தான் உற்பத்தி செய்த கார்களை தங்களுடைய வாடிக்கையாளர்கட்கு விற்பனை அல்லது திருப்ப அடிப்படையில் அனுப்புகின்றது. ஆயினும், இந் நடவடிக்கைகள் அனைத்தும் விற்பனையாகவே கருதப்பட்டு நாளேட்டின் (Day Book) மூலம் பதிவு செய்யப்படுகின்றன. நிதி ஆண்டின் இறுதிக்கு முன்னர் ஒன்று ரூ. 11,000 மதிப்புடைய இரண்டு கார்கள் விற்பனை அல்லது திருப்ப அடிப்படையில் அனுப்பப்பட்டு, வாடிக்கையாளர்கள் கணக்குகளில் ஒவ்வொன்றும் ரூ. 15,000 வீதம் பற்று வைக்கப்பட்டிருக்கின்றன. கம்பெனியின் இலாப-நட்டக் கணக்கினையும், இருப்புநிலைக் குறிப்பையும் பொருத்தவரை, இந் நடவடிக்கைகளை எவ்வாறு சரிக்கட்டுவாய் ?

கணக்குகளைச் சரிக்கட்ட தேவையான குறிப்பேட்டுப் பதிவினைக் கொடுத்து, இறுதிக் கணக்குகளில் இவை எவ்வாறு எழுதப்படும் என்பதை விளக்குக.

(M. U. B. Com. April, 1969.)

# 3. உரிமை ஊதியம் அல்லது உரிமைத்தொகை

## (Royalties)

ஒருவர் பெற்றிருக்கும் உரிமையைப் பிறிதொருவர் பயன் படுத்திக் கொள்வதற்கு உரிமையாளருக்குத் தரப்படும் தொகை உரிமைஊதியம் அல்லது உரிமைத்தொகை (Royalty) எனப் படும். எடுத்துக்காட்டாக, சுரங்கம் ஒன்றின் முழு உரிமையை யும் பெற்றிருப்பவர் அந்நிலத்தின் உரிமையாளராவார். அவர் நிலக்கிழார் (Landlord) எனப்படுவார். சுரங்கக் கம்பெனி யொன்று நிலத்தில் கிடைக்கும் கனிப் பொருள்களை வெட்டி எடுக்கவேண்டுமாயின், அந் நிலக்கிழாரிடம் தொகை கொடுக்க வேண்டும். பொதுவாக, வெட்டி எடுக்கக்கூடிய கனிவளத்தின் அளவினை ஒட்டி — உற்பத்தியின் அடிப்படையில் — இத்தொகை அமையலாம். அவ்வாறே நூல் ஒன்றினை அச்சிட்டு வெளியிடும் பதிப்பகத்தார் நூல் ஆசிரியருக்கு விற்பனை அடிப்படையில் குறிப் பிட்ட சதவிகிதத் தொகை தருவர். அவ்வாறே, புனை பொருள் உரிமையாளருக்கு அவ்வுரிமையைப் பயன்படுத்தும் தொழில் அதி பர் உற்பத்தியின் அடிப்படையில் தொகை தரலாம். **இவ்வாறு உற்பத்தி அல்லது விற்பனை அடிப்படையில் பிறரின் உரிமையைப் பயன்படுத்திக்கொள்பவர் உரிமையாளருக்கு வழங்கும் தொகையே உரிமைஊதியம் அல்லது உரிமைத்தொகை** (Royalty) எனப்படும். சுரங்கத்தையோ, நூலினையோ, புனைபொருள் உரிமையையோ விற்பதால் கிடைக்கும் தொகை உரிமைத்தொகையைக் குறிக்காது என்பதை முதலிலேயே உணர்தல் நலம்.

## குறைந்தளவு குத்தகை
## (Minimum Rent or Dead Rent)

உற்பத்தி அல்லது விற்பனை இல்லாக் காலத்திலும் அல்லது உற்பத்தி மிகவும் குறைந்திருக்கும் காலத்திலும் ஒரு குறிப்பிட்ட தொகையாவது உரிமைத்தொகையாகக் கொடுக்கப்பட வேண்டுமென்று ஒப்பந்தத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும். இதனைக் குறைந்தளவு குத்தகை (Minimum Rent) அல்லது தெண்டக் குத்தகை என்கிறோம். இதனால் நிலக்கிழார் ஒவ்வொரு ஆண்டும் குறைந்தது இத் தொகையையாவதுப் பெற வழி ஏற்படுகிறது. எடுத்துக்காட்டாக, சுரங்கக் கம்பெனி ஒன்றில் உற்பத்தியாகும் ஒவ்வொரு டன் நிலக்கரிக்கும் ரூ. 2 உரிமைத்தொகையாகவும், குறைந்தளவு குத்தகை ரூ. 5,000 கொடுக்கவேண்டும் எனவும் கொண்டால், நிலக்கரி உற்பத்தி அறவே இல்லாவிட்டாலுங்கூட குறைந்தளவு குத்தகைக்கான ரூபாய் ஐந்தாயிரத்தை அந் நிலக்கிழாருக்குக் கொடுத்தாக வேண்டும். முதலாண்டில் இரண்டாயிரம் டன் நிலக்கரியைச் சுரங்கக் கம்பெனி வெட்டி எடுத்ததாகக் கொண்டால், உற்பத்தியின் அடிப்படையில் செலுத்த வேண்டிய உரிமைத்தொகை ரூ. 4,000. ஆயினும், குறைந்தளவு குத்தகைக்காக ரூ. 5,000 கொடுத்தாக வேண்டும். இவ்வாறு தர வேண்டிய உரிமைத் தொகையினும் கூடுதலாகவுள்ள குறைந்தளவு குத்தகைத் தொகையைக் 'குறை உற்பத்தி' (Short working) என்கிறோம். மேலே சொல்லப்பட்ட எடுத்துக்காட்டில், குறை உற்பத்தி ரூ. 1,000 ஆகும். (குறைந்தளவு குத்தகை ரூ. 5,000—தரவேண்டிய உற்பத்தித் தொகை ரூ. 4,000.)

## குறை உற்பத்தியை மீட்டல்
## (Recoupment of Shortworking)

தொழில் தொடங்கிய சில ஆண்டுகள் வரை போதுமான உற்பத்தி இருக்காது. காரணம் பலவகைப் பொறிகளைப் பெற்று நிறுவ வேண்டியுள்ளன. கட்டடங்கள் அமைக்கப்பட வேண்டியுள்ளன. இதனால், தொடக்க காலத்தில் எத்தொழிலும் காணக்கூடிய குறைவான உற்பத்திக்குக் குத்தகைதாரர் காரணம் அல்லர். என்றாலும், அவர் குறைந்தளவு குத்தகையாவது கொடுக்கவேண்டியுள்ளது. இதனால், ஏற்படக்கூடிய நட்டத்தைப் பின்வரும் ஆண்டுகளில், உற்பத்தி கூடுதலாக இருக்கும்போது ஈடு கட்டிக்கொள்ள உரிமைத்தொகை ஒப்பந்தம் வழி செய்யும். இதனைக் குறை உற்பத்தியை மீட்டுக் கொள்ளுதல் என்கிறோம்.

இந்த உரிமை இரு வகையில் அமையலாம். தொழில் தொடங்கிய சில ஆண்டுகட்குள் இக் குறைஉற்பத்தியை மீட்டுக்கொள்ள வேண்டியிருக்கலாம். அதாவது, தொழில் தொடங்கிய முதல் ஐந்தாண்டுகட்குள் குறைஉற்பத்தியை ஈடு செய்துகொள்ள வேண்டுமென்று இருப்பின் இந்தக் குறிப்பிட்ட ஐந்தாண்டுக்குப் பின்னர் இவ் வுரிமையைப் பயன்படுத்த முடியாது; அல்லது குறை உற்பத்தி ஏற்படும் ஆண்டிற்கு அடுத்த இரண்டு அல்லது மூன்று ஆண்டுகட்குள் இவ்வுரிமையைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்றும் அமையலாம். அவ்வாறாயின், எந்த ஆண்டில் குறை உற்பத்தி காணப்படினும், அந்த ஆண்டிற்கு அடுத்த இரண்டு அல்லது மூன்று ஆண்டுகட்குள் இவ்வுரிமையைப் பயன்படுத்திக் கொள்ளும் வாய்ப்பு குத்தகைதாரருக்குக் கிடைக்கிறது.

## கணக்குப் பதிவு

### குத்தகைதாரர் ஏட்டில்

**(1) குறைந்தளவு குத்தகையை விட உரிமைத்தொகை குறைந்திருக்கும் ஆண்டுகளில், உற்பத்தி அடிப்படையில்** கணக்கிடப்படும் தொகைக்கு உரிமைத்தொகைக் கணக்கில் பற்று வைக்கப்படும். உரிமைத்தொகையை விட அதிகமாய் இருக்கும் குறைந்தளவு குத்தகைத் தொகைக்குக் குறை உற்பத்தி கணக்கில் பற்று வைக்கப்படும். இவ்விரண்டு தொகையும் சேர்த்து நிலக் கிழார் கணக்கில் வரவு வைக்கவேண்டும். கீழ்க்கண்டவாறு பதிவு இருக்கும்.

| | | |
|---|---|---|
| உரிமைத்தொகைக் | க/கு | ப |
| குறை உற்பத்திக் | க/கு | ப |
| நிலக்கிழார் | க/கு | |

உரிமைத்தொகை செலுத்தும்போழ்து, நிலக்கிழார் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் அல்லது ரொக்கக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும் (குறைந்தளவு குத்தகைத் தொகைக்கு).

ஆண்டின் இறுதியில், உரிமைத்தொகையை இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்லவேண்டும்.

உற்பத்தியின் அடிப்படையில் கணக்கிடப்படும் உரிமைத் தொகையளவில் இலாப-நட்டக் கணக்கில் பற்றும், உரிமைத்

தொகைக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். இந்தக் குறை உற்பத்திக் கணக்கு பற்று-இருப்பைக் காட்டுகிறது. இது இருப்பு நிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் காட்டப்பெறும்.

குறைந்தளவு குத்தகைக் கணக்கை ஏடுகளில் கொண்டுவர வேண்டுமாயின் பின் கண்டவாறு பதிவு செய்யவேண்டும்.

முதலில் குறைந்தளவு குத்தகைக் கணக்கில் பற்றும், நிலக் கிழார் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

அடுத்து, உரிமைத்தொகைக் கணக்கில் பற்றும், (உற்பத்தி அடிப்படையில் கணக்கிடப்படும் தொகை) குறை உற்பத்திக் கணக்கில் பற்றும், (கூடுதலாக கொடுக்கப்படும் தொகை), குறைந் தளவு குத்தகைக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

**(2) குறைந்தளவு குத்தகையைவிட உரிமைத்தொகை கூடுதலாக இருக்கும்பொழுது, செய்யவேண்டிய பதிவுகள் :**

(அ) உற்பத்தி அடிப்படையில் கணக்கிடப்படும் தொகையளவில் உரிமைத்தொகைக் கணக்கில் பற்றும், நிலக்கிழார் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

(ஆ) குறைந்தளவு குத்தகையைவிட உரிமைத்தொகை இப்பொழுது அதிகமாக இருப்பதால், முன் ஆண்டுகளில் ஏற்பட்ட குறையளவு உற்பத்தியை இப்பொழுது மீட்டுக் கொள்ளலாம் அல்லவா ? இதற்கான பதிவு :—

குறைந்தளவு வாடகையினும் (குத்தகையினும்) கூடுதலாகவுள்ள உரிமைத் தொகைக்கு நிலக்கிழார் கணக்கில் பற்றும், குறை உற்பத்திக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(இ) குறைந்தளவு குத்தகைத் தொகைக்கு நிலக்கிழார் கணக்கில் பற்றும், வங்கி அல்லது ரொக்கக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(ஈ) ஆண்டின் இறுதியில் உரிமைத்தொகையை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்ற, இலாப-நட்டக் கணக்கில் பற்றும், உரிமைத்தொகைக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

குறிப்பிட்ட காலத்திற்குள் குறை உற்பத்தியை ஈடுசெய்து கொள்ள முடியவில்லையென்றால் குறை உற்பத்திக் கணக்கிலுள்ள

மீதித் தொகை ஒரு நட்டமாகும். இந்த உரிமை இவ் வாண்டில் காலாவதியாவதால், குறை உற்பத்திக் கணக்கை இந்த ஆண்டுடன் முடித்துக் கொள்ளவேண்டும். குறை உற்பத்திக் கணக்கு காட்டும் இருப்பினை இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல வேண்டும். அதாவது, இலாப-நட்டக் கணக்கில் பற்றும், குறை உற்பத்திக் கணக்கில் வரவும் வைத்து இதனை முடித்து விடலாம்.

## எடுத்துக்காட்டு 9

வங்கச் சுரங்கக் கம்பெனி குப்தாவிடமிருந்து நிலக்கரியுள்ள ஒரு இடத்தை 25 ஆண்டுக் குத்தகைக்கு 1961 சனவரி 1-ல் எடுத்துக் கொண்டது. ஒரு டன் நிலக்கரிக்கு ரூ. 1 வீதம் உரிமைத்தொகை தரவேண்டும். குறைந்தளவு வாடகை ஆண்டு ஒன்றுக்கு ரூ. 10,000 ஆகும். குறை உற்பத்தியை முதல் ஐந்தாண்டுகளில் திரும்பப் பெற்றுக்கொள்ள உரிமையுண்டு. ஒவ்வொரு ஆண்டும் எடுக்கப்பெற்ற நிலக்கரியின் அளவு கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.

| ஆண்டு | உற்பத்தி (டன்களில்) |
|---|---|
| 1961 | 2,500 |
| 1962 | 4,800 |
| 1963 | 10,500 |
| 1964 | 15,700 |
| 1965 | 20,300 |

வங்கச் சுரங்கக் கம்பெனியின் ஏடுகளில் ஐந்தாண்டிற்கும் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

1965ஆம் ஆண்டில் நிலக்கரி உற்பத்தி 20,300 டன்னாக இல்லாமல் 16,000 டன்னாக இருப்பின் அவ்வாண்டில் செய்யப் படும் பதிவுகள் எவ்வாறு இருக்குமென்பதையும் காட்டுக.

**விடை :**

**வங்கச் சுரங்கக் கம்பெனியின் ஏடுகளில்**

(குறைந்தளவு குத்தகை ஏடுகளில் தோன்ற வேண்டியதில்லை எனும் நிலையில்)

**குறிப்பேடு**

| நாள் | விவரம் | பெ. ப. எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 1961 திச.31 | உரிமைத்தொகைக் க/கு ப<br>குறை உற்பத்திக் க/கு ப<br>குப்தா<br>(கொடுக்க வேண்டிய உரிமைத்தொகையும் குறை உற்பத்தியும்.) | | 2,500<br>7,500 | <br><br>10,000 |
| ,, | குப்தா ப<br>வங்கிக் க/கு<br>(தொகை கொடுத்தது.) | | 10,000 | <br>10,000 |
| ,, | இலாப-நட்டக் க/கு ப<br>உரிமைத்தொகைக் க/கு<br>(உரிமைத்தொகையை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்ற.) | | 2,500 | <br>2,500 |
| 1962 திச.31 | உரிமைத்தொகைக் க/கு ப<br>குறை உற்பத்திக் க/கு ப<br>குப்தா<br>(கொடுக்க வேண்டிய உரிமைத்தொகையும் குறை உற்பத்தியும்.) | | 4,800<br>5,200 | <br><br>10,000 |

## குறிப்பேடு—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 1962 திச. 31 | குப்தா ப<br>வங்கிக் க/கு<br>(தொகை செலுத்தியது) | | 10,000 | 10,000 |
| ,, | இலாப-நட்டக் க/கு ப<br>உரிமைத்தொகைக் க/கு<br>(உரிமைத்தொகையை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்ற.) | | 4,800 | 4,800 |
| 1963 திச. 31 | உரிமைத்தொகைக் க/கு ப<br>குப்தா<br>(செலுத்த வேண்டிய உரிமைத்தொகை.) | | 10,500 | 10,500 |
| ,, | குப்தா ப<br>குறை உற்பத்திக் க/கு<br>(குறை உற்பத்தியை மீட்க ரூ. 12,700க்கு ரூ. 500 மீட்கப்படுகிறது.) | | 500 | 500 |
| ,, | குப்தா ப<br>வங்கிக் க/கு<br>(உரிமைத்தொகை செலுத்த.) | | 10,000 | 10,000 |
| ,, | இலாப-நட்டக் க/கு ப<br>உரிமைத்தொகைக் க/கு<br>(உரிமைத்தொகையை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்ற.) | | 10,500 | 10,500 |

**குறிப்பேடு—(தொடர்ச்சி)**

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 1964 திச. 31 | உரிமைத்தொகைக் க/கு ப குப்தா (கொடுக்க வேண்டிய உரிமைத்தொகை.) | | 15,700 | 15,700 |
| ,, | குப்தா ப குறை உற்பத்திக் க/கு (குறை உற்பத்தியை மீட்க ரூ. 12,200-க்கு ரூ. 5,700 மீட்கப்படுகிறது.) | | 5,700 | 5,700 |
| ,, | குப்தா ப வங்கிக் க/கு (உரிமைத்தொகை செலுத்த.) | | 10,000 | 10,000 |
| ,, | இலாப-நட்டக் க/கு ப உரிமைத்தொகைக் க/கு (உரிமைத்தொகையை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்ற.) | | 15,700 | 15,700 |
| 1965 திச. 31 | உரிமைத்தொகைக் க/கு ப குப்தா (செலுத்த வேண்டிய உரிமைத்தொகை.) | | 20,300 | 20,300 |
| ,, | குப்தா ப குறை உற்பத்திக் க/கு (குறைஉற்பத்தியைமீட்க.) | | 6,500 | 6,500 |
| ,, | குப்தா ப வங்கிக் க/கு (உரிமைத்தொகை செலுத்த.) | | 13,800 | 13,800 |
| ,, | இலாப-நட்டக் க/கு ப உரிமைத்தொகைக் க/கு (உரிமைத் தொகையை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்ற.) | | 20,300 | 20,300 |

1965ஆம் ஆண்டுடன் மூன்ருண்டுகளில் ஏற்பட்ட குறை உற்பத்தி அனைத்தும் மீட்கப்பட்டுவிட்டது. 1965-ல் மீட்க வேண்டிய குறை உற்பத்தி ரூ. 6,500தான் இருந்தது. இது போக மீதியுள்ள உரிமைத்தொகை முழுவதும் நிலக்கிழாருக்குக் கொடுக்கப்படுகிறது. இவ்வாறு இல்லாமல் 1965ஆம் ஆண்டில் 16,000 டன் நிலக்கரி உற்பத்தி இருப்பின் உரிமைத் தொகை ரூ. 16,000 ஆகிறது. இப்பொழுது குறைந்தளவு குத்தகை ரூ. 10,000 போக மீதி மீட்கக்கூடிய தொகை ரூ.6,000 தான் இருக்கிறது. ஆனல், மீட்கப்பட வேண்டிய குறை உற்பத்தியோ ரூ. 6,500 ஆகும். இது உற்பத்தி தொடங்கிய ஐந்தாவதாண்டாகும். இந்த ஆண்டுக்குப்பின் குறை உற்பத்தியை மீட்கும் உரிமை இல்லே. எனவே, குறை உற்பத்தி ரூ. 6,000 இவ்வாண்டு மீட்டதுபோக மீதியுள்ள ரூ. 500 மீட்கப்பட முடியாத குறை உற்பத்தியாகும். இதனை நட்டமாகக் கொண்டு, இவ்வாண்டு, இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல வேண்டும். இந்நிலேயில் செய்ய வேண்டிய பதிவுகள் :

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 1965 திச.31 | உரிமைத்தொகைக் க/கு ப<br>குப்தா<br>(கொடுக்க வேண்டிய உரிமைத் தொகை.) | | 16,000 | <br>16,000 |
| ,, | குப்தா ப<br>குறை உற்பத்திக் க/கு<br>(குறை உற்பத்தியை மீட்க.) | | 6,000 | <br>6,000 |
| ,, | குப்தா ப<br>வங்கிக் க/கு<br>(உரிமைத்தொகை செலுத்த.) | | 10,000 | <br>10,000 |
| ,, | இலாப-நட்டக் க/கு ப<br>உரிமைத்தொகை க/கு<br>குறை உற்பத்திக் க/கு<br>(இவ்வாண்டின் உரிமைத் தொகையையும் மீட்க முடியாத குறை உற்பத்தியையும் இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல.) | | 16,500 | <br>16,000<br>500 |

மேலே கொடுக்கப்பட்ட எடுத்துக்காட்டில் குறைந்தளவு குத்தகைக் கணக்கை, கணக்கில் கொண்டு வந்தும் செய்யலாம். ஒவ்வொரு ஆண்டும் செய்யவேண்டிய முதல் இரண்டு பதிவுகள் கீழ்க் காட்டியவாறு இருக்கும்.

| நாள் | விவரம் | பே, ப. எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 1961 திச. 31 | குறைந்தளவு குத்தகைக் க/கு ப | | 10,000 | |
| | குப்தா | | | 10,000 |
| | (கொடுக்க வேண்டிய குறைந்தளவு குத்தகை) | | | |
| ,, | உரிமைத்தொகைக் க/கு ப | | 2,500 | |
| | குறை உற்பத்திக் க/கு ப | | 7,500 | |
| | குறைந்தளவு குத்தகைக் க/கு | | | 10,000 |
| | (உரிமைத்தொகையும் குறை உற்பத்தியும்.) | | | |
| 1962 திச. 31 | குறைந்தளவுக் குத்தகைக் க/கு ப | | 10,000 | |
| | குப்தா | | | 10,000 |
| | (கொடுக்க வேண்டிய குறைந்தளவு குத்தகை) | | | |
| ,, | உரிமைத்தொகைக் க/கு ப | | 4,800 | |
| | குறை உற்பத்திக் க/கு ப | | 5,200 | |
| | குறைந்தளவு குத்தகைக் க/கு | | | 10,000 |
| | (உரிமைத்தொகையும் குறை உற்பத்தியும்.) | | | |

1963 - ல் உற்பத்தி 10,500 டன்னுக இருப்பதால் கொடுக்க வேண்டிய உரிமைத்தொகை ரூ. 10,500 ஆகிறது. **இது குறைந்தளவு குத்தகையை விட கூடுதலாக இருப்பதால், குறைந்தளவ குத்தகைக் கணக்கு இப்பொழுது தேவையில்லை.**

## எடுத்துக்காட்டு 10

அஸ்ஸாம் நிலக்கரிக் கம்பெனி நிலக்கரிச் சுரங்கம் ஒன்றை 30 ஆண்டுக் குத்தகைக்கு 1965 சனவரி 1ஆம் நாள் முதல் கீழ்க்கண்ட நிபந்தனைகளில் எடுத்துக் கொண்டது. உற்பத்தியாகும் ஒவ்வொரு டன் நிலக்கரிக்கும் 75 காசுகள் உரிமைத் தொகை கொடுக்க வேண்டும். குறைந்தளவு குத்தகை முதலாண்டில் ரூ. 10,500. இது ஒவ்வொரு ஆண்டும் ரூ. 500 ஆக, ரூ. 12,000 வரை கூடிச் செல்லும். அதன் பிறகுள்ள எல்லா ஆண்டுகட்கும் குறைந்தளவு குத்தகை ரூ. 12,000. ஒரு ஆண்டில் ஏற்படும் குறை உற்பத்தியை அடுத்த இரண்டு ஆண்டுகட்குள் மீட்டுக் கொள்ளும் உரிமை அஸ்ஸாம் நிலக்கரிக் கம்பெனிக்குண்டு. முதல் ஆறுண்டுகளில் எடுக்கப்பட்ட உற்பத்தியின் அளவு கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.

| ஆண்டு | உற்பத்தியளவு (டன்களில்) |
|---|---|
| 1965 | 4,000 |
| 1966 | 8,000 |
| 1967 | 14,000 |
| 1968 | 22,000 |
| 1969 | 28,000 |
| 1970 | 35,000 |

அஸ்ஸாம் நிலக்கரிக் கம்பெனியின் ஏடுகளில் தேவையான பேரேட்டுக் கணக்குகளைக் குறைந்தளவு குத்தகைக் கணக்குடன் தயாரிக்கவும்.

விடை :

பேரேட்டுக் கணக்குகளைத் தொடங்குமுன் கீழ்க்கண்ட அட்டவணையைத் தயாரிக்கலாம்.

| ஆண்டு | உற்பத்தி | உரிமைத் தொகை | குறைந்தளவு குத்தகை | குறை உற்பத்தி | | |
|---|---|---|---|---|---|---|
| | | | | ஏற்பட்டது | மீட்டது | மீளாதது இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்றப்படுவது |
| | (டன்) | ரூ. | ரூ. | ரூ. | ரூ. | ரூ. |
| 1965 | 4,000 | 3,000 | 10,500 | 7,500 | — | — |
| 1966 | 8,000 | 6,000 | 11,000 | 5,000 | — | — |
| 1967 | 14,000 | 10,500 | 11,500 | 1,000 | — | 7,500 |
| 1968 | 22,000 | 16,500 | 12,000 | — | 4,500 | 500 |
| 1969 | 28,000 | 21,000 | 12,000 | — | 1,000 | — |
| 1970 | 35,000 | 26,250 | 12,000 | — | — | — |

பற்று **குறைந்தளவு குத்தகைக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1965 | | | | 1965 | | | |
| திச. 31 | நிலக்கிழார் .. | | 10,500 | திச. 31 | உரிமைத் | | |
| | | | | | தொகைக் க/கு .. | | 3,000 |
| | | | | ,, | குறை உற்பத்திக் க/கு .. | | 7,500 |
| | | | 10,500 | | | | 10,500 |
| 1966 | | | | 1966 | | | |
| திச. 31 | நிலக்கிழார் .. | | 11,000 | திச. 31 | உரிமைத் | | |
| | | | | | தொகைக் க/கு .. | | 6,000 |
| | | | | ,, | குறை உற்பத்திக் க/கு .. | | 5,000 |
| | | | 11,000 | | | | 11,000 |
| 1967 | | | | 1967 | | | |
| திச. 31 | நிலக்கிழார் .. | | 11,500 | திச. 31 | உரிமைத் | | |
| | | | | | தொகைக் க/கு .. | | 10,500 |
| | | | | ,, | குறை உற்பத்திக் க/கு .. | | 1,000 |
| | | | 11,500 | | | | 11,500 |

பற்று **உரிமைத்தொகைக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1965 திச. 31 | குறைந்தளவுக் குத்தகைக் க/கு .. | | 3,000 | 1965 திச. 31 | இலாப-நட்டக் க/கு .. | | 3,000 |
| 1966 திச. 31 | குறைந்தளவுக் குத்தகைக் க/கு .. | | 6,000 | 1966 திச. 31 | இலாப-நட்டக் க/கு .. | | 6,000 |
| 1967 திச. 31 | குறைந்தளவுக் குத்தகைக் க/கு .. | | 10,500 | 1967 திச. 31 | இலாப-நட்டக் க/கு .. | | 10,500 |
| 1968 திச. 31 | நிலக்கிழார் .. | | 16,500 | 1968 திச. 31 | இலாப-நட்டக் க/கு .. | | 16,500 |
| 1969 திச. 31 | நிலக்கிழார் .. | | 21,000 | 1969 திச. 31 | இலாப-நட்டக் க/கு .. | | 21,000 |
| 1970 திச. 31 | நிலக்கிழார் .. | | 26,250 | 1970 திச. 31 | இலாப-நட்டக் க/கு .. | | 26,250 |

பற்று **குறை உறபத்திக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1965 | | | | 1965 | | | |
| திச. 31 | குறைந்தளவுக் குத்தகைக் க/கு | | 7,500 | திச. 31 | இருப்பு கீ/இ | | 7,500 |
| 1966 | | | | 1966 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ | | 7,500 | திச. 31 | இருப்பு கீ/இ | | 12,500 |
| திச. 31 | குறைந்தளவுக் குத்தகைக் க/கு | | 5,000 | | | | |
| | | | 12,500 | | | | 12,500 |
| 1967 | | | | 1967 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ | | 12,500 | திச. 31 | இலாப-நட்டக் க/கு | | 7,500 |
| திச. 31 | குறைந்தளவுக் குத்தகைக் க/கு | | 1,000 | ,, | இருப்பு கீ/இ | | 6,000 |
| | | | 13,500 | | | | 13,500 |
| 1968 | | | | 1968 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ | | 6,000 | திச. 31 | நிலக்கிழார் | | 4,500 |
| | | | | ,, | இலாப-நட்டக் க/கு | | 500 |
| | | | | ,, | இருப்பு கீ/இ | | 1,000 |
| | | | 6,000 | | | | 6,000 |
| 1969 | | | | 1969 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ | | 1,000 | திச. 31 | நிலக்கிழார் | | 1,000 |

பற்று **நிலக்கிழார் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1965 | | | | 1965 | | | |
| திச. 31 | வங்கிக் க/கு | | 10,500 | திச. 31 | குறைந்தளவுக் குத்தகைக் க/கு | | 10,500 |
| 1966 | | | | 1966 | | | |
| திச. 31 | வங்கிக் க/கு | | 11,000 | திச. 31 | குறைந்தளவுக் குத்தகைக் க/கு | | 11,000 |
| 1967 | | | | 1967 | | | |
| திச. 31 | வங்கிக் க/கு | | 11,500 | திச. 31 | குறைந்தளவுக் குத்தகைக் க/கு | | 11,500 |
| 1968 | | | | 1968 | | | |
| திச. 31 | குறை உற்பத்திக் க/கு | | 4,500 | திச. 31 | உரிமைத்தொகைக் க/கு | | 16,500 |
| ,, | வங்கிக் க/கு | | 12,000 | | | | |
| | | | 16,500 | | | | 16,500 |
| 1969 | | | | 1969 | | | |
| திச. 31 | குறை உற்பத்திக் க/கு | | 1,000 | திச. 31 | உரிமைத்தொகைக் க/கு | | 21,000 |
| ,, | வங்கிக் க/கு | | 20,000 | | | | |
| | | | 21,000 | | | | 21,000 |
| 1970 | | | | 1970 | | | |
| திச. 31 | வங்கிக் க/கு | | 26,250 | திச. 31 | உரிமைத்தொகைக் க/கு | | 26,250 |

## இலாப-நட்டக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1965 | உரிமைத் தொகைக் க/கு .. | | 3,000 | | | | |
| 1966 | உரிமைத் தொகைக் க/கு .. | | 6,000 | | | | |
| 1967 | உரிமைத் தொகைக் க/கு .. | | 10,500 | | | | |
| | குறை உற்பத்திக் க/கு .. | | 7,500 | | | | |
| 1968 | உரிமைத் தொகைக் க/கு .. | | 16,500 | | | | |
| 1969 | உரிமைத் தொகைக் க/கு .. | | 21,000 | | | | |
| 1970 | உரிமைத் தொகைக் க/கு .. | | 26,250 | | | | |

### வேலை நிறுத்தம் போன்ற சூழ்நிலைகளால் உற்பத்தி பாதிக்கப்படும்போழ்து

உற்பத்தி தொடங்கிய முதல் சில ஆண்டுகளில் உற்பத்தி குறைந்திருப்பது இயற்கையே. ஆயினும், உற்பத்தி கூடுதலாக இருக்கின்ற ஆண்டுகளிலும் தொழிலாளர்கள் வேலை நிறுத்தங்கள் செய்வதன் காரணமாகவோ அல்லது விலை உயர்ந்த இயந்திரங்கள் பழுதாகின்ற காரணத்தாலோ (Breakdown of Machinery) உற்பத்தி பாதிக்கப்படலாம். இக் காரணங்களால் உற்பத்தி குறையும்போழ்து கொடுக்கவேண்டிய குறைந்தளவு குத்தகை எவ்வளவென்று உரிமைத்தொகை ஒப்பந்தத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும். சாதாரணஆண்டுகளில் கொடுக்கவேண்டிய குறைந்தளவு குத்தகைத் தொகையாக இது இருக்காது. எவ்வளவு காலத்திற்கு உற்பத்தி பாதிக்கப்படுகின்றதோ அதன் அடிப்படையில் கொடுக்க வேண்டிய குறைந்தளவு குத்தகையும் குறையும். எடுத்துக் காட்டாக, ஒவ்வொரு ஆண்டும் கொடுக்கவேண்டிய குறைந்தளவு குத்தகை ரூ. 12,000 எனவும், 1972-ல் 4 திங்கள்கள் வேலை நிறுத்தத்தின் காரணமாக உற்பத்தி பாதிக்கப்பட்டதாகவும் கொண்டால், இவ்வாண்டில் கொடுக்கவேண்டிய குறைந்தளவு குத்தகைத் தொகையில் 1/3 பாகம் குறைத்துக் கொள்ளலாம். அதாவது, இவ்வாண்டில் கொடுக்கவேண்டிய குறைந்தளவு குத்தகை ரூ. 8,000 என்றாகிறது.

அல்லது இது போன்ற சூழ்நிலைகளால் உற்பத்தி பாதிக்கப்படும் ஆண்டில் கொடுக்கவேண்டிய குறைந்தளவு குத்தகை, அவ்வாண்டில் உற்பத்தியின் அடிப்படையில் கணக்கிடப்படும் உரிமைத்தொகையின் அளவே எனவும் ஒப்பந்தம் கூறலாம்.

### எடுத்துக்காட்டு 11

ஒரு சுரங்கக் கம்பெனி நிலக்கரி சுரங்கம் ஒன்றை குத்தகைக்கு எடுத்திருக்கிறது. ஒவ்வொரு டன்னுக்கும் 50 காசுகள் வீதம் உரிமைத்தொகை செலுத்த வேண்டும். கொடுக்க வேண்டிய குறைந்தளவுக் குத்தகை ரூ. 17,000 ஆகும். ஒவ்வொரு ஆண்டிலும் உரிமைத்தொகையை விடக் கூடுதலாகவுள்ள குறைந்தளவு குத்தகைத் தொகையை அடுத்த மூன்று ஆண்டுகட்குள் மீட்டுக் கொள்ளவேண்டும்.

வேலை நிறுத்தம் அல்லது விபத்து போன்ற காரணங்களால் அந்த ஆண்டின் உற்பத்தி பாதிக்கப்படுமாயின், எவ்வளவு காலத்

திற்கு உற்பத்தி தடைபடுகிறதோ அந்த விகிதத்தில் குறைந்தளவு குத்தகையைக் குறைத்துக் கொள்ளவேண்டுமென்று ஒப்பந்தம் கூறுகிறது. உற்பத்தி விவரம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| ஆண்டு | உற்பத்தி (டன்களில்) |
|---|---|
| 1960 | 4,000 |
| 1961 | 28,000 |
| 1962 | 30,000 |
| 1963 | 46,000 |
| 1964 | 30,000 |
| 1965 | 50,000 |

1964ஆம் ஆண்டு வேலை நிறுத்தத்தின் காரணமாக மூன்று திங்கள் உற்பத்தி தடைபட்டது. மேற்சொல்லப்பட்ட 5 ஆண்டு கட்கும் வேண்டிய பேரேட்டுக் கணக்குகளைச் சுரங்கக் கம்பெனி ஏடுகளில் தருக.

**விடை :**

பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்குமுன், கீழ்க்கண்ட அட்டவணையைத் தயாரிக்கலாம்.

| ஆண்டு | உற்பத்தி | உரிமைத் தொகை | குறைந்தளவு குத்தகை | குறை உற்பத்தி | | |
|---|---|---|---|---|---|---|
| | | | | ஏற்பட்டது | மீட்டது | மீளாதது இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்றப்படுவது |
| | (டன்) | ரூ. | ரூ. | ரூ. | ரூ. | ரூ. |
| 1960 | 4,000 | 2,000 | 17,000 | 15,000 | — | — |
| 1961 | 28,000 | 14,000 | 17,000 | 3,000 | — | — |
| 1962 | 30,000 | 15,000 | 17,000 | 2,000 | — | — |
| 1963 | 46,000 | 23,000 | 17,000 | — | 6,000 | 9,000 |
| 1964 | 30,000 | 15,000 | 12,750 | — | 2,250 | 750 |
| 1965 | 50,000 | 25,000 | 17,000 | — | 2,000 | — |

## சுரங்கக் கம்பெனியின் ஏடுகளில்

### உரிமைத்தொகைக் கணக்கு

பற்று வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1960 திச. 31 | நிலக்கிழார் .. | | 2,000 | 1960 திச. 31 | இலாப-நட்டக் க/கு .. | | 2,000 |
| 1961 திச. 31 | நிலக்கிழார் .. | | 14,000 | 1961 திச. 31 | இலாப-நட்டக் க/கு .. | | 14,000 |
| 1962 திச. 31 | நிலக்கிழார் .. | | 15,000 | 1962 திச. 31 | இலாப-நட்டக் க/கு .. | | 15,000 |
| 1963 திச. 31 | நிலக்கிழார் .. | | 23,000 | 1963 திச. 31 | இலாப-நட்டக் க/கு .. | | 23,000 |
| 1964 திச. 31 | நிலக்கிழார் .. | | 15,000 | 1964 திச. 31 | இலாப-நட்டக் க/கு .. | | 15,000 |
| 1965 திச. 31 | நிலக்கிழார் .. | | 25,000 | 1965 திச. 31 | இலாப-நட்டக் க/கு .. | | 25,000 |

பற்று **நிலக்கிழார்** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1960 | | | | 1960 | | | |
| திச. 31 | வங்கிக் க/கு .. | | 17,000 | திச. 31 | உரிமைத் தொகைக் க/கு .. | | 2,000 |
| | | | | ,, | குறை உற்பத்திக் க/கு .. | | 15,000 |
| | | | 17,000 | | | | 17,000 |
| 1961 | | | | 1961 | | | |
| திச. 31 | வங்கிக் க/கு .. | | 17,000 | திச. 31 | உரிமைத் தொகைக் க/கு .. | | 14,000 |
| | | | | ,, | குறை உற்பத்திக் க/கு .. | | 3,000 |
| | | | 17,000 | | | | 17,000 |
| 1962 | | | | 1962 | | | |
| திச. 31 | வங்கிக் க/கு .. | | 17,000 | திச. 31 | உரிமைத் தொகைக் க/கு .. | | 15,000 |
| | | | | ,, | குறை உற்பத்திக் க/கு .. | | 2,000 |
| | | | 17,000 | | | | 17,000 |

பற்று **நிலக்கிழார்—(தொடர்ச்சி)** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1963 | | | | 1963 | | | |
| திச. 31 | குறை உற்பத்திக் க/கு .. | | 6,000 | திச. 31 | உரிமைத் | | |
| ,, | வங்கிக் க/கு .. | | 17,000 | | தொகைக் க/கு .. | | 23,000 |
| | | | 23,000 | | | | 23,000 |
| 1964 | | | | 1964 | | | |
| திச. 31 | குறை உற்பத்திக் க/கு .. | | 2,250 | திச. 31 | உரிமைத் | | |
| ,, | வங்கிக் க/கு .. | | 12,750 | | தொகைக் க/கு .. | | 15,000 |
| | | | 15,000 | | | | 15,000 |
| 1965 | | | | 1965 | | | |
| திச. 31 | குறை உற்பத்திக் க/கு .. | | 2,000 | திச. 31 | உரிமைத் | | |
| ,, | வங்கிக் க/கு .. | | 23,000 | | தொகைக் க/கு .. | | 25,000 |
| | | | 25,000 | | | | 25,000 |

## குறை உற்பத்திக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1960 | | | | 1960 | | | |
| திச. 31 | நிலக்கிழார் .. | | 15,000 | திச. 31 | இருப்பு கீ/இ .. | | 15,000 |
| 1961 | | | | 1961 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 15,000 | திச. 31 | இருப்பு கீ/இ .. | | 18,000 |
| திச. 31 | நிலக்கிழார் .. | | 3,000 | | | | |
| | | | 18,000 | | | | 18,000 |
| 1962 | | | | 1962 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 18,000 | திச. 31 | இருப்பு கீ/இ .. | | 20,000 |
| திச. 31 | நிலக்கிழார் .. | | 2,000 | | | | |
| | | | 20,000 | | | | 20,000 |

பற்று குறை உற்பத்திக் கணக்கு—(தொடர்ச்சி) வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1963 | | | | 1963 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 20,000 | திச. 31 | நிலக்கிழார் .. | | 6,000 |
| | | | | ,, | இலாப-நட்டக் க/கு .. | | 9,000 |
| | | | | ,, | இருப்பு கீ/இ .. | | 5,000 |
| | | | 20,000 | | | | 20,000 |
| 1964 | | | | 1964 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 5,000 | திச. 31 | நிலக்கிழார் .. | | 2,250 |
| | | | | ,, | இலாப-நட்டக் க/கு .. | | 750 |
| | | | | ,, | இருப்பு கீ/இ .. | | 2,000 |
| | | | 5,000 | | | | 5,000 |
| 1965 | | | | 1965 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 2,000 | திச. 31 | நிலக்கிழார் .. | | 2,000 |
| | | | 2,000 | | | | 2,000 |

பற்று **இலாப-நட்டக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1960 | உரிமைத் தொகைக் க/கு .. | | 2,000 | | | | |
| 1961 | உரிமைத் தொகைக் க/கு .. | | 14,000 | | | | |
| 1962 | உரிமைத் தொகைக் க/கு .. | | 15,000 | | | | |
| 1963 | உரிமைத் தொகைக் க/கு .. | | 23,000 | | | | |
| ,, | குறை உற்பத்திக் க/கு .. | | 9,000 | | | | |
| 1964 | உரிமைத் தொகைக் க/கு .. | | 15,000 | | | | |
| ,, | குறை உற்பத்திக் க/கு .. | | 750 | | | | |
| 1965 | உரிமைத் தொகைக் க/கு .. | | 25,000 | | | | |

## நிலக்கிழாரின் ஏடுகளில்
## (In the Books of the Landlord)

இதுவரை உரிமைத்தொகை கொடுக்கவேண்டிய குத்தகைதாரர் ஏடுகளில் எவ்வாறு பதிவது என்பதைக் கண்டோம். இனி அவ்வுரிமைத்தொகை பெறும் நிலக்கிழாரின் ஏடுகளில் அந்நிகழ்ச்சிகளைப் பதிவு செய்யும் முறையைக் காண்போம்.

உற்பத்தி தொடங்கிய முதல் சில ஆண்டுகளில் குறைந்தளவு குத்தகையை விட உரிமைத்தொகை குறைவாக இருக்கும். அந்தாண்டுகளில் செய்ய வேண்டிய பதிவுகள்.

*(1)* குறைந்தளவு குத்தகைத் தொகைக்குக் குத்தகைதாரர் கணக்கில் பற்று வைக்கவேண்டும். இவ்வாண்டு உற்பத்தியின் அடிப்படையில் கணக்கிடப்படும் உரிமைத்தொகைக்குப் 'பெறும் உரிமைத்தொகை' எனும் புதிய கணக்கிலும் (Royalties Receivable A/C), உரிமைத் தொகையைவிடக் கூடுதலாகவுள்ள குறைந்தளவு குத்தகைத் தொகைக்கு, 'உரிமைத்தொகை இடைநிலைக் கணக்கிலும்' (Royalties Suspense A/C.) அல்லது 'குறை உற்பத்தி இடைநிலைக் கணக்கிலும்' (Shortworkings Suspense A/C.) வரவு வைக்கவேண்டும். அதாவது, கீழ்க்கண்டவாறு குறிப்பேட்டுப் பதிவு அமையும்.

| | | |
|---|---|---|
| குத்தகைதாரர் | க/கு | ப |
| பெறும் உரிமைத்தொகைக் | க/கு | |
| உரிமைத்தொகை இடைநிலைக் | க/கு | |
| (குறை உற்பத்தி இடைநிலைக் க/கு) | | |

*(2)* உரிமைத்தொகை குத்தகைதாரரிடமிருந்து பெறும்பொழுது, வங்கிக் கணக்கில் பற்றும் குத்தகைதாரர் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

*(3)* ஆண்டின் இறுதியில் உரிமைத்தொகையை இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்லவேண்டும். உற்பத்தியின் அடிப்படையில் கணக்கிடப்படும் உரிமைத்தொகை நிலக்கிழாரைப் பொருத்தவரை ஒரு வருமானமாகும். எனவே, இலாப-நட்டக் கணக்கில் இது வரவுப் பகுதிக்கு எடுத்துச் செல்லப்படுகிறது.

பதிவு :

| | | |
|---|---|---|
| பெறும்உரிமைத்தொகைக் | க/கு | ப |
| இலாப-நட்டக் | க/கு | |

உரிமைத்தொகை குறைவாக இருந்தபோதிலும் குத்தகைதாரர் குறைந்தளவு குத்தகைத் தொகை கொடுக்கிறார். இவ்வாறு, உரிமைத்தொகையை விடக் கூடுதலாக குத்தகைதாரர் கொடுக்கும் தொகையைக் குறை உற்பத்தி இடைநிலைக் கணக்கில் வரவு வைக்கப்படுகிறது. பின்வரும் ஆண்டுகளில் இதனை மீட்டுக் கொள்ளும் உரிமை குத்தகைதாரருக்கு இருப்பதால், ஒவ்வோராண்டும் இது இருப்பு நிலைக் குறிப்பில் பொறுப்புக்கள் பகுதியில் காண்பிக்கப்பெறும். குறிப்பிட்ட காலத்திற்குள் இதனைக் குத்தகைதாரர் மீட்டுக்கொள்ள முடியவில்லை என்றால் இக்கணக்கிலுள்ள இருப்பு, நிலக்கிழாரைப் பொருத்தவரை ஆதாயமாகிறது. இவ்வாறு, குத்தகைதாரர் மீட்டுக்கொள்ள முடியாத குறை உற்பத்திக் கணக்கை இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல வேண்டும்.

குறைந்தளவு குத்தகையை விட உரிமைத்தொகை கூடுதலாக இருக்கும் ஆண்டுகளில், குறை உற்பத்தியைக் குத்தகைதாரர் மீட்டுக் கொள்ளும் உரிமை பெற்றிருக்கும்போது கீழ்க்கண்ட பதிவுகளைச் செய்யவேண்டும்.

(1) குத்தகைதாரர் க/கு ப (உற்பத்தியின் அடிப்படையில் குத்தகைதாரர் கொடுக்க வேண்டிய உரிமைத் தொகையளவிற்கு.)

குறை உற்பத்தி இடைநிலைக் க/கு (மீட்கப்படும் குறை உற்பத்தித் தொகைக்கு).

பெறும் உரிமைத் தொகைக் க/கு (குறைந்தளவு குத்தகைத் தொகை.)

**உரிமைத்தொகை பெறும்பொழுது**

(2) வங்கிக் க/கு ப
குத்தகைதாரர் க/கு

(3) பெற்ற உரிமைத் தொகையைஇலாப-நட்டக்கணக்கிற்கு மாற்ற
பெறும் உரிமைத்தொகைக் க/கு ப
இலாப-நட்டக் க/கு

எடுத்துக்காட்டு 9-ல் கொடுக்கப்பட்ட கணக்கின் நடவடிக்கைகளை நிலக்கிழாரின் ஏடுகளில் பதிக.

**விடை :**

## குப்தா ஏடுகளில்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| 1961 திச. 31 | வங்கச் சுரங்கக் கம்பெனி .. .. ப | | 10,000 | |
| | பெறும் உரிமைத் தொகைக் க/கு | | | 2,500 |
| | குறை உற்பத்தி இடைநிலைக் க/கு | | | 7,500 |
| | (உரிமைத் தொகையும் குறை உற்பத்தியும் பெறவேண்டியது.) | | | |
| ,, | வங்கிக் க/கு .. ப | | 10,000 | |
| | வங்கச் சுரங்கக் கம்பெனி | | | 10,000 |
| | (தொகை பெற்றது) | | | |
| ,, | பெறும் உரிமைத் தொகைக் க/கு .. ப | | 2,500 | |
| | இலாப-நட்டக் க/கு | | | 2,500 |
| | (உரிமைத் தொகைக் கணக்கை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| 1962 திச. 31 | வங்கச் சுரங்கக் கம்பெனி க/கு .. ப | | 10,000 | |
| | பெறும் உரிமைத் தொகைக் க/கு | | | 4,800 |
| | குறை உற்பத்தி இடைநிலைக் க/கு | | | 5,200 |
| | (உரிமைத் தொகையும் குறை உற்பத்தியும் பெறவேண்டியது.) | | | |

குப்தா ஏடுகளில்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ, | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| 1962 திச. 31 | வங்கிக் க/கு .. .. ப<br>வங்கச் சுரங்கக் கம்பெனி<br>(தொகை பெற்றது) | | 10,000 | 10,000 |
| ,, | பெறும் உரிமைத் தொகைக் க/கு .. ப<br>இலாப-நட்டக் க/கு<br>(உரிமைத் தொகையை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்ற.) | | 4,800 | 4,800 |
| 1963 திச. 31 | வங்கச் சுரங்கக் கம்பெனி .. .. ப<br>குறை உற்பத்தி இடைநிலைக் க/கு .. ப<br>பெறும் உரிமைத் தொகைக் க/கு<br>(பெறவேண்டிய உரிமைத்தொகையும், மீட்கப்படும் குறை உற்பத்தியும் ரூ. 12,700க்கு ரூ. 500 மீட்கப்படுகிறது). | | 10,000<br>500 | 10,500 |
| ,, | வங்கிக் க/கு .. .. ப<br>வங்கச் சுரங்கக் கம்பெனி<br>(உரிமைத் தொகை பெற்றது.) | | 10,000 | 10,000 |

குப்தா ஏடுகளில்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| 1963 திச. 31 | பெறும் உரிமைத் தொகைக் க/கு .. ப | | 10,500 | |
| | இலாப-நட்டக் க/கு | | | 10,500 |
| | (உரிமைத் தொகையை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| 1964 திச. 31 | வங்கச் சுரங்கக் கம்பெனி .. ப | | 10,000 | |
| | குறை உற்பத்தி இடைநிலைக் க/கு .. ப | | 5,700 | |
| | பெறும் உரிமைத் தொகைக் க/கு | | | 15,700 |
| | (பெறவேண்டிய உரிமைத்தொகையும், மீட்கப்படும் குறை உற்பத்தியும்—ரூ. 12,200 க்கு ரூ. 5,700 மீட்கப் படுகிறது). | | | |
| ,, | வங்கிக் க/கு .. ப | | 10,000 | |
| | வங்கச் சுரங்கக் கம்பெனி | | | 10,000 |
| | (உரிமைத்தொகை பெற்றது) | | | |
| ,, | பெறும் உரிமைத் தொகைக் க/கு .. ப | | 15,700 | |
| | இலாப-நட்டக் க/கு | | | 15,700 |
| | (பெற வேண்டிய உரிமைத் தொகையை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்ற). | | | |

குப்தா ஏடுகளில்—(தொடர்ச்சி)

| நாள் | விபரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| 1965 திச. 31 | வங்கச் சுரங்கக் கம்பெனி .. ப | | 13,800 | |
| | குறை உற்பத்தி இடைநிலைக் க/கு .. ப | | 6,500 | |
| | பெறும் உரிமைத் தொகைக் க/கு | | | 20,300 |
| | (பெறவேண்டிய உரிமைத்தொகையும் மீட்கப்படும் குறை உற்பத்தியும்.) | | | |
| ,, | வங்கிக் க/கு .. ப | | 13,800 | |
| | வங்கச் சுரங்கக் கம்பெனி | | | 13,800 |
| | (உரிமைத்தொகை பெற்றது). | | | |
| ,, | பெறும் உரிமைத் தொகைக் க/கு .. ப | | 20,300 | |
| | இலாப-நட்டக் க/கு | | | 20,300 |
| | (இலாப-நட்டக் கணக்கிற்கு உரிமைத் தொகையை மாற்ற). | | | |

**குப்தா ஏடுகளில்—**(தொடர்ச்சி)

1965-ல் உற்பத்தி 20,300 டன்னுக இல்லாமல் 16,000 டன்னுக இருப்பின் செய்ய வேண்டிய பதிவுகள் :—

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| 1965 திச. 31 | வங்கச் சுரங்கக் கம்பெனி .. .. ப | | 10,000 | |
| | குறை உற்பத்தி இடைநிலைக் க/கு .. ப | | 6,000 | |
| | பெறும் உரிமைத் தொகைக் க/கு | | | 16,000 |
| | (பெறவேண்டிய உரிமைத்தொகையும், மீட்கப்படும் குறை உற்பத்தியும்-ரூ. 6,500க்கு ரூ. 6,000 மீட்கப்படுகிறது). | | | |
| ,, | வங்கிக் க/கு .. ப | | 10,000 | |
| | வங்கச் சுரங்கக் கம்பெனி | | | 10,000 |
| | (உரிமைத்தொகை பெற்றது.) | | | |
| ,, | பெறும் உரிமைத் தொகைக் க/கு .. ப | | 16,000 | |
| | குறை உற்பத்தி இடைநிலைக் க/கு .. ப | | 500 | |
| | இலாப-நட்டக் க/கு | | | 16,500 |
| | (உரிமைத்தொகையும் மீட்க முடியாத குறை உற்பத்தியையும் இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்ற). | | | |

## கீழ்க்குத்தகை (Sublease)

நிலக்கிழாருடன் செய்து கொண்ட குத்தகை ஒப்பந்தம் உரிமை வழங்குமாளுல், குத்தகைதாரர் தனது குத்தகை முழுவதையும் அல்லது குத்தகையின் ஒரு பகுதியை வேறு ஒருவருக்குக் கீழ்க் குத்தகையாகக் கொடுக்கலாம். அந்நிலையில் அவர் இரண்டு வகையான உறவு முறைகளைப் பெற்றிருக்கிருர்.

*(1)* நிலக்கிழாரைப் பொறுத்தவரை அவர் ஒரு குத்தகைதாரர். ஒப்பந்தத்தில் கண்டுள்ளபடி கொடுக்கவேண்டிய உரிமைத்தொகையை அல்லது குறைந்தளவு குத்தகையை அவர் கொடுத்தாக வேண்டும்.

*(2)* வேறு ஒருவருக்குத் தனது உரிமையைக் கீழ்க்குத்தகையாக விட்டிருப்பதால், அந்த ஒப்பந்தத்தின்படி உரிமைத்தொகை இவர் பெற வேண்டியவராக இருக்கிருர். அந்நிலைகளில் நிலக்கிழார் தனது ஏடுகளில் பதிவதைப் போன்றே, கீழ்க்குத்தகைக்கு விட்டதால் கிடைக்கக்கூடிய உரிமைத்தொகை நடவடிக்கைகளை இவர் பதியவேண்டும்.

பொதுவாக, தான் நிலக்கிழாருக்குக் கொடுக்கவேண்டிய உரிமைத்தொகையை விடத் தான், கீழ்க்குத்தகைதாரரிடமிருந்து பெறக்கூடிய உரிமைத்தொகையானது அதிகளவில் இருப்பது வழக்கம்.

### கணக்குப் பதிதல்

தான் நிலக்கிழாருக்குக் கொடுக்கவேண்டிய உரிமைத்தொகை நடவடிக்கைகளைப் பதிய செலுத்தும் உரிமைத்தொகைக் கணக்கு என்றும் (Royalties Payable A/C), குறை உற்பத்திக் கணக்கு என்றும், நிலக்கிழார் கணக்கு என்றும் வைத்திருக்கலாம். கீழ்குத்தகையைப் பொருத்தவரையில், பெறும் உரிமைத்தொகைக் கணக்கு என்றும், குறை உற்பத்தி இடைநிலைக் கணக்கு என்றும் கீழ்க் குத்தகைதாரர் கணக்கு என்றும் வைத்திருக்கலாம்.

### எடுத்துக்காட்டு 12

பாணன் என்பவர் பாண்டியனிடம் சுரங்கம் ஒன்றைக் குத்தகைக்கு எடுத்துக் கொள்கிருர். ஒவ்வொரு டன்னுக்கும் ரூபாய் *1* வீதம் உரிமைத்தொகை தரவேண்டும். குறைந்தளவு குத்தகை ரூ. *1,000* ஆகும். முதல் *4* ஆண்டுகட்குள் குறை உற்பத்தியை

மீட்டுக்கொள்ளும் உரிமையுண்டு. தனது குத்தகையில் ஒரு பகுதியைப் பாவலன் என்பவருக்குக் கீழ்க்குத்தகைக்குக் கொடுக்கிறார். ஒவ்வொரு டன்னுக்கும் ரூ. 1.25 வீதம் உரிமைத்தொகை பெறவேண்டியது. குறைந்தளவு குத்தகை ரூ. 500 ஆகும். குறை உற்பத்தி ஏற்பட்ட ஆண்டிலிருந்து அடுத்த இரண்டு ஆண்டிற்குள் இதனை மீட்டுக்கொள்ளும் உரிமை பாவலனுக்குண்டு. உற்பத்தி விவரம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| ஆண்டு | பாணன் | பாவலன் | மொத்த உற்பத்தி |
|---|---|---|---|
| 1. | 500 டன் | 250 டன் | 750 டன் |
| 2. | 550 ” | 300 ” | 850 ” |
| 3. | 600 ” | 400 ” | 1,000 ” |
| 4. | 650 ” | 500 ” | 1,150 ” |
| 5. | 700 ” | 800 ” | 1,500 ” |

பாணன் ஏடுகளில் தேவையான கணக்குகளைத் தயாரிக்கவும்.

(Mysore–B. Com.,–ஐத் தழுவியது)

**நிலக்கிழாருக்குச் செலுத்தவேண்டிய உரிமைத்தொகை பற்றிய அறிக்கை**

| ஆண்டு | மொத்த உற்பத்தி (டன்களில்) | செலுத்தும் உரிமைத் தொகை ரூ. | குறைந்தளவு குத்தகை ரூ. | செலுத்தும் குறை உற்பத்தி ரூ. | மீட்கப்பட்ட குறை உற்பத்தி ரூ. | இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்லப்படும் மீளாக் குறை உற்பத்தி ரூ. |
|---|---|---|---|---|---|---|
| 1 | 750 | 750 | 1,000 | 250 | — | — |
| 2 | 850 | 850 | 1,000 | 150 | — | — |
| 3 | 1,000 | 1,000 | 1,000 | — | — | — |
| 4 | 1,150 | 1,150 | 1,000 | — | 150 | 250 |
| 5 | 1,500 | 1,500 | — | — | — | — |

கீழ்க் குத்தகைதாரரிடமிருந்து பெறவேண்டிய உரிமைத்தொகை பற்றிய அறிக்கை

| ஆண்டு | கீழ்க் குத்தகை தாரரின் உற்பத்தி (டன்களில்) | பெறும் உரிமைத் தொகை ரூ. | குறைந்தளவு குத்தகை ரூ. | பெறும் குறை உற்பத்தி ரூ. | மீட்கப் பெற்ற குறை உற்பத்தி ரூ. | இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்லப்படும் மீட்கப் பெறாக் குறை உற்பத்தி ரூ. |
|---|---|---|---|---|---|---|
| 1 | 250 | 312.50 | 500 | 187.50 | — | — |
| 2 | 300 | 375 | 500 | 125 | — | — |
| 3 | 400 | 500 | 500 | — | — | 187.50 |
| 4 | 500 | 625 | 500 | — | 125 | — |
| 5 | 800 | 1,000 | — | — | — | — |

பாணனின் ஏடுகளில்

செலுத்தும் உரிமைத் தொகைக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 ஆம் ஆண்டு இறுதி | பாண்டியன் .. | | 750 | 1 ஆம் ஆண்டு இறுதி | இலாப-நட்டக் க/கு .. | | 750 |
| 2 ஆம் ஆண்டு இறுதி | பாண்டியன் .. | | 850 | 2 ஆம் ஆண்டு இறுதி | இலாப-நட்டக் க/கு .. | | 850 |
| 3 ஆம் ஆண்டு இறுதி | பாண்டியன் .. | | 1,000 | 3 ஆம் ஆண்டு இறுதி | இலாப-நட்டக் க/கு .. | | 1,000 |
| 4 ஆம் ஆண்டு இறுதி | பாண்டியன் .. | | 1,150 | 4 ஆம் ஆண்டு இறுதி | இலாப-நட்டக் க/கு .. | | 1,150 |
| 5 ஆம் ஆண்டு இறுதி | பாண்டியன் .. | | 1,500 | 5 ஆம் ஆண்டு இறுதி | இலாப-நட்டக் க/கு .. | | 1,500 |

பற்று **குறை உற்பத்திக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1ஆம் ஆண்டு இறுதி | பாண்டியன் .. | | 250 | 1ஆம் ஆண்டு இறுதி | இருப்பு கீ/இ .. | | 250 |
| 2ஆம் ஆண்டு தொடக்கம் | இருப்பு கீ/கொ .. | | 250 | 2ஆம் ஆண்டு இறுதி | இருப்பு கீ/இ .. | | 400 |
| இறுதி | பாண்டியன் .. | | 150 | | | | |
| | | | 400 | | | | 400 |
| 3ஆம் ஆண்டு தொடக்கம் | இருப்பு கீ/கொ .. | | 400 | 3ஆம் ஆண்டு இறுதி | இருப்பு கீ/இ | | 400 |
| 4ஆம் ஆண்டு தொடக்கம் | இருப்பு கீ/கொ .. | | 400 | 4ஆம் ஆண்டு இறுதி | பாண்டியன் .. | | 150 |
| | | | | ,, | இலாபநட்டக் க/கு .. | | 250 |
| | | | 400 | | | | 400 |

பாண்டியன் (நிலக்கிழார்)

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1ஆம் ஆண்டு இறுதி | வங்கிக் க/கு .. | | 1,000 | 1ஆம் ஆண்டு இறுதி | செலுத்தும் உரிமைத் தொகைக் க/கு .. | | 750 |
| | | | | ,, | குறை உற்பத்திக் க/கு .. | | 250 |
| | | | 1,000 | | | | 1,000 |
| 2ஆம் ஆண்டு இறுதி | வங்கிக் க/கு .. | | 1,000 | 2ஆம் ஆண்டு இறுதி | செலுத்தும் உரிமைத் தொகைக் க/கு .. | | 850 |
| | | | | ,, | குறை உற்பத்திக் க/கு .. | | 150 |
| | | | 1,000 | | | | 1,000 |

பற்று பாண்டியன் (நிலக்கிழார்)—(தொடர்ச்சி) வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 3 ஆம் ஆண்டு இறுதி | வங்கிக் க/கு .. | | 1,000 | 3 ஆம் ஆண்டு இறுதி | செலுத்தும் உரிமைத் தொகைக் க/கு ... | | 1,000 |
| 4 ஆம் ஆண்டு இறுதி | குறை உற்பத்திக் க/கு .. | | 150 | 4 ஆம் ஆண்டு இறுதி | செலுத்தும் உரிமைத் தொகைக் க/கு .. | | 1,150 |
| | வங்கிக் க/கு .. | | 1,000 | | | | |
| | | | 1,150 | | | | 1,150 |
| 5 ஆம் ஆண்டு இறுதி | வங்கிக் க/கு .. | | 1,500 | 5 ஆம் ஆண்டு இறுதி | செலுத்தும் உரிமைத் தொகைக் க/கு .. | | 1,500 |

பற்று **பெறும் உரிமைத்தொகைக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 ஆம் ஆண்டு இறுதி | இலாப-நட்டக் க/கு .. | | 312.50 | 1 ஆம் ஆண்டு இறுதி | பாவலன் .. | | 312.50 |
| 2 ஆம் ஆண்டு இறுதி | இலாப-நட்டக் க/கு .. | | 375 | 2 ஆம் ஆண்டு இறுதி | பாவலன் .. | | 375 |
| 3 ஆம் ஆண்டு இறுதி | இலாப-நட்டக் க/கு .. | | 500 | 3 ஆம் ஆண்டு இறுதி | பாவலன் .. | | 500 |
| 4 ஆம் ஆண்டு இறுதி | இலாப-நட்டக் க/கு .. | | 625 | 4 ஆம் ஆண்டு இறுதி | பாவலன் .. | | 625 |
| 5 ஆம் ஆண்டு இறுதி | இலாப-நட்டக் க/கு .. | | 1,000 | 5 ஆம் ஆண்டு இறுதி | பாவலன் .. | | 1,000 |

**குறை உற்பத்தி இடைநிலைக் கணக்கு (Short workings Suspense A/c)**

*அல்லது*

**உரிமைத்தொகை இடைநிலைக் கணக்கு (Royalties Suspense A/c)**

*அல்லது*

**அளிக்கும் குறை உற்பத்திக் கணக்கு (Short workings Allowable A/c)**

| பற்று | | | | | | | வரவு |
|---|---|---|---|---|---|---|---|
| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
| 1 ஆம் ஆண்டு இறுதி | இருப்பு கீ/இ .. | | 187.50 | 1 ஆம் ஆண்டு இறுதி | பாவலன் .. | | 1,87.50 |
| 2 ஆம் ஆண்டு இறுதி | இருப்பு கீ/இ .. | | 312.50 | 2 ஆம் ஆண்டு தொடக்கம் | இருப்பு கீ/கொ .. | | 187.50 |
| | | | | இறுதி | பாவலன் .. | | 125.00 |
| | | | 312.50 | | | | 312.50 |

**குறை உற்பத்தி இடைநிலைக் கணக்கு—(தொடர்ச்சி)**

பற்று | | | | வரவு | | |

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 3 ஆம் ஆண்டு இறுதி | இலாப-நட்டக் க/கு .. | | 187.50 | 3 ஆம் ஆண்டு தொடக்கம் | இருப்பு கீ/கொ .. | | 312.50 |
| | இருப்பு கீ/இ .. | | 125.00 | | | | |
| | | | 312.50 | | | | 312.50 |
| 4 ஆம் ஆண்டு இறுதி | பாவலன் .. | | 125·00 | 4 ஆம் ஆண்டு இறுதி | இருப்பு கீ/கொ .. | | 125·00 |

**பாவலன் கணக்கு**

(கீழ்க் குத்தகைதாரர்)

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1ஆம் ஆண்டு இறுதி | பெறும் உரிமைத் தொகைக் க/கு .. | | 312.50 | 1ஆம் ஆண்டு இறுதி | வங்கிக் க/கு .. | | 500.00 |
| | குறை உற்பத்தி இடைநிலைக் க/கு .. | | 187.50 | | | | |
| | | | 500.00 | | | | 500.00 |
| 2ஆம் ஆண்டு இறுதி | பெறும் உரிமைத் தொகைக் க/கு .. | | 375 | 2ஆம் ஆண்டு இறுதி | வங்கிக் க/கு .. | | 500 |
| | குறை உற்பத்தி இடைநிலைக் க/கு .. | | 125 | | | | |
| | | | 500 | | | | 500 |

**பாவலன் கணக்கு—(தொடர்ச்சி)**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 3ஆம் ஆண்டு இறுதி | பெறும் உரிமைத் தொகைக் க/கு .. | | 500 | 3ஆம் ஆண்டு இறுதி | வங்கிக் க/கு .. | | 500 |
| 4ஆம் ஆண்டு இறுதி | பெறும் உரிமைத் தொகைக் க/கு .. | | 625 | 4ஆம் ஆண்டு இறுதி | குறை உற்பத்தி இடைநிலைக் க/கு .. | | 125 |
| | | | | ,, | வங்கிக் க/கு .. | | 500 |
| | | | 625 | | | | 625 |
| 5ஆம் ஆண்டு இறுதி | பெறும் உரிமைத் தொகைக் க/கு .. | | 1,000 | 5ஆம் ஆண்டு இறுதி | வங்கிக் க/கு .. | | 1,000 |

வேருெரு முறையிலும் மேலே விளக்கப்பட்ட கணக்குகளைத் தயாரிக்கலாம். அதாவது, பெறும் உரிமைத்தொகைக் கணக்கைச் செலுத்தும் உரிமைத்தொகைக் கணக்கிற்கு மாற்றி, அக்கணக்கின் இருப்பை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்றிக் கொள்ளலாம்.

உரிமைத்தொகையை ஒரு நேர்முகச் செலவாகக் (direct expense) கருதின், ஆண்டிறுதியில் அதனை இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்வதற்கு மாருக, உற்பத்திக் கணக்கிற்கு மாற்றிக் கொள்ளலாம். இதற்கான பதிவு :—

உற்பத்திக் க/கு ப
உரிமைத்தொகைக் க/கு

உரிமைத்தொகையை ஒரு உற்பத்திச் செலவாகக் கொள்ளும் பொழுது, கீழ்க்குத்தகையில், தான் பெறும் உரிமைத்தொகையில் கிடைக்கும் ஆதாயத்தை மட்டில் இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்லவேண்டும். எடுத்துக்காட்டில், ஒவ்வொரு டன் உற்பத்திக்கும் தான் கொடுக்கவேண்டிய உரிமைத்தொகை ரூ. 1. ஆனல், தான் கீழ்க்குத்தகைதாரரிடமிருந்து பெறும் உரிமைத்தொகையோ ஒரு டன்னுக்கு ரூ. 1-25 ஆகும். ஆகவே, ஒவ்வொரு டன்னிலும் 25 காசுகள் கூடுதலாகக் கிடைக்கின்றன. கூடுதலாகக் கிடைக்கும் இத்தொகையை இலாப-நட்டக் கணக்கிற்கும், மீதியைச் செலுத்தும் உரிமைத்தொகைக் கணக்கிற்கும் எடுத்துச் செல்லவேண்டும். ஒவ்வோராண்டும் கீழ்க்குத்தகையில் பெறும் கூடுதல் உரிமைத்தொகையையும், உற்பத்திக் கணக்கிற்கு மாற்றவேண்டிய உரிமைத்தொகையையும் கீழ்க்கண்ட பட்டியல் விளக்குகிறது.

| ஆண்டு | உற்பத்தி டன்களில் | பெறும் உரிமைத் தொகை. | செலுத்தும் உரிமைத் தொகைக் கணக்கிற்கு மாற்றப்படுவது | இலாப-நட்ட கணக்கிற்கு மாற்றப் படுவது. |
|---|---|---|---|---|
| | | ரூ. | ரூ. | ரூ. |
| 1. | 250 | 312.50 | 250 | 62.50 |
| 2. | 300 | 375.00 | 300 | 75.00 |
| 3. | 400 | 500.00 | 400 | 100.00 |
| 4. | 500 | 675.00 | 500 | 125.00 |
| 5. | 800 | 1,000.00 | 800 | 200.00 |

இப்பொழுது இம்முறையில் தேவையான கணக்குகளைச் செய்யலாம்.

பற்று **செலுத்தும் உரிமைத்தொகைக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1 ஆம் ஆண்டு | பாண்டியன் .. | | 750 | 1 ஆம் ஆண்டு | பெறும் உரிமைத் தொகைக் க/கு .. | | 250 |
| | | | | | உற்பத்திக் க/கு .. | | 500 |
| | | | 750 | | | | 750 |
| 2 ஆம் ஆண்டு | பாண்டியன் .. | | 850 | 2 ஆம் ஆண்டு | பெறும் உரிமைத் தொகைக் க/கு .. | | 300 |
| | | | | | உற்பத்திக் க/கு .. | | 550 |
| | | | 850 | | | | 850 |
| 3 ஆம் ஆண்டு | பாண்டியன் .. | | 1,000 | 3 ஆம் ஆண்டு | பெறும் உரிமைத் தொகைக் க/கு .. | | 400 |
| | | | | | உற்பத்திக் க/கு .. | | 600 |
| | | | 1,000 | | | | 1,000 |

## செலுத்தும் உரிமைத்தொகைக் கணக்கு—(தொடர்ச்சி)

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 4ஆம் ஆண்டு | பாண்டியன் .. | | 1,150 | 4ஆம் ஆண்டு | பெறும் உரிமைத் தொகைக் க/கு .. | | 500 |
| | | | | | உற்பத்திக் க/கு .. | | 650 |
| | | | 1,150 | | | | 1,150 |
| 5ஆம் ஆண்டு | பாண்டியன் .. | | 1,500 | 5ஆம் ஆண்டு | பெறும் உரிமைத் தொகைக் க/கு .. | | 800 |
| | | | | | உற்பத்திக் க/கு .. | | 700 |
| | | | 1,500 | | | | 1,500 |

பற்று **பெறும் உரிமைத்தொகைக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1ஆம் ஆண்டு | செலுத்தும் உரிமைத் தொகைக் க/கு .. | | 250.00 | 1ஆம் ஆண்டு | பாவலன் .. | | 312.50 |
| | இலாப-நட்டக் க/கு .. | | 62.50 | | | | |
| | | | 312.50 | | | | 312.50 |
| 2ஆம் ஆண்டு | செலுத்தும் உரிமைத் தொகைக் க/கு .. | | 300 | 2அம் ஆண்டு | பாவலன் .. | | 375 |
| | இலாப-நட்டக் க/கு .. | | 75 | | | | |
| | | | 375 | | | | 375 |
| 3ஆம் ஆண்டு | செலுத்தும் உரிமைத் தொகைக் க/கு .. | | 400 | 3ஆம் ஆண்டு | பாவலன் .. | | 500 |
| | இலாப-நட்டக் க/கு .. | | 100 | | | | |
| | | | 500 | | | | 500 |

**பெறும் உரிமைத்தொகைக் கணக்கு—(தொடர்ச்சி)**

பற்று வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 4ஆம் ஆண்டு | செலுத்தும் உரிமைத் தொகைக் க/கு .. | | 500 | 4ஆம் ஆண்டு | பாவலன் .. | | 625 |
| | இலாப-நட்டக் க/கு .. | | 125 | | | | |
| | | | 625 | | | | 625 |
| 5ஆம் ஆண்டு | செலுத்தும் உரிமைத் தொகைக் க/கு .. | | 800 | 5ஆம் ஆண்டு | பாவலன் .. | | 1,000 |
| | இலாப-நட்டக் க/கு .. | | 200 | | | | |
| | | | 1,000 | | | | 1,000 |

பிற கணக்குகள் முன் விளக்கியவாறே இருக்கும்.

## வினாக்கள்

1. குறைந்தளவு குத்தகையை விட உரிமைத்தொகை குறைந்திருக்கும் ஆண்டுகளில் நிலக்கிழார் ஏட்டிலும், குத்தகைதாரர் ஏட்டிலும் செய்ய வேண்டிய பதிவுகள் யாவை ?

2. வேலை நிறுத்தம் போன்ற சூழ்நிலைகளால் உற்பத்தி பாதிக்கப்படும்பொழுது, குறைந்தளவு குத்தகை பொதுவாக எவ்வாறு குறைக்கப்படுகிறது ?

3. கீழ்க் குத்தகை பற்றி விளக்குக.

4. சிறுகுறிப்பு வரைக :—

    i. உரிமைத்தொகை.

    ii. குறைந்தளவு குத்தகை.

    iii. குறை உற்பத்தியை மீட்டல்.

## பயிற்சி

*(1)* சுரங்கக் கம்பெனி ஒன்று சுரங்கம் ஒன்றைக் குத்தகைக்கு எடுத்துக்கொண்டது. உற்பத்தியாகும் ஒவ்வொரு டன்னுக்கும் 50 காசுகள் வீதம் உரிமைத்தொகை தரவேண்டும். குறைந்தளவு குத்தகைத்தொகை ரூ. 20,000 ஆகும். முதல் மூன்று ஆண்டுகட்குள் குறை உற்பத்தியை மீட்டுக்கொள்ள வேண்டும். முதலாண்டில் 24,000 டன்களும், இரண்டாம் ஆண்டில் 36,000 டன்களும், மூன்றும் ஆண்டில் 56,000 டன்களும் உற்பத்தி ஆயின. உரிமைத்தொகைக் கணக்கையும் குறை உற்பத்திக் கணக்கையும் நிலக்கிழார் கணக்கையும் தயாரிக்க.

(M. U. B. Com., Spl. A/cs. April, 1969)

*(2)* ''A'' என்பவர் ஒரு சுரங்கத்தைக் குத்தகைக்கு எடுத்துக் கொண்டார். குறைந்தளவு குத்தகை ரூ. 1,200 ஆகும். உற்பத்தியாகும் ஒவ்வொரு டன் நிலக்கரிக்கும் 25 காசுகளாக உரிமைத்தொகை வழங்கவேண்டும். முதல் 4 ஆண்டுகட்குள் குறை உற்பத்தியை மீட்டுக்கொள்ளும் உரிமையுண்டு. கீழ்க் கண்டவாறு நிலக்கரி உற்பத்தி செய்யப்பட்டது.

| | |
|---|---|
| முதலாண்டு | — 2,000 டன் |
| இரண்டாம் ஆண்டு | — 3,600 டன் |
| மூன்றும் ஆண்டு | — 600 டன் |
| நான்காம் ஆண்டு | —12,000 டன் |
| ஐந்தாம் ஆண்டு | —25,000 டன் |

ஐந்தாண்டுகளுக்கும் உரிய குறிப்பிட்ட பதிவுகளையும் பேரேட்டுக் கணக்குகளையும் தயாரிக்க.

(M. U. B. Com., April, 1963)

(3) சுரங்கம் ஒன்றைக் கம்பெனி குத்தகைக்கு எடுத்துக் கொண்டது. உற்பத்தியாகும் ஒவ்வொரு டன்னுக்கும் ரூ. 1 உரிமைத்தொகை வழங்கவேண்டும். ஆண்டு ஒன்றுக்குக் குறைந் தளவு குத்தகை ரூ. 1,000 ஆகும். எந்த ஆண்டில் குறை உற்பத்தி ஏற்படுகிறதோ அதன் அடுத்த மூன்றுண்டுகளில் குறை உற்பத்தியை மீட்டுக்கொள்ளும் உரிமையுண்டு. முதல் ஐந் தாண்டுகளில் உற்பத்தி முறையே 5,000, 7,000, 12,000, 14,000, 11,000 டன்களாகும்.

கம்பெனியின் ஏடுகளில் உரிமைத்தொகைக் கணக்கு, நிலக் கிழார் கணக்கு, குறை உற்பத்திக் கணக்கு ஆகியவற்றைத் தயா ரிக்கவும்.

(M. U. B. Com., Spl A/cs. April, 1966)

(4) ஆற்காடு சுரங்கக் கம்பெனி ''X'' என்பவரிட மிருந்து சொத்து ஒன்றினைக் குத்தகைக்கு எடுத்துக் கொண்டது. ஒவ்வொரு டன்னுக்கும் ரூ. 2.50 வீதம் உரிமைத்தொகை வழங்கவேண்டும். குறைந்தளவு ஆண்டுக் குத்தகை ரூ. 5,000 ஆகும். உரிமைத்தொகையை விட கூடுதலாக இருக்கும். ஒவ் வொரு ஆண்டின் குறைந்தளவு குத்தகைத் தொகை அதன் அடுத்த ஐந்து ஆண்டுகட்குள் மீட்கப்படவேண்டும்.

வேலை நிறுத்தத்தின் காரணமாக இக்குறைந்தளவு குத்தகை கிடைக்காமற் போகுமானல், அவ்வாண்டின் உரிமைத்தொகை அவ்வாண்டு கொடுக்கவேண்டிய, குறைந்தளவு குத்தகையாகக் கொள்ளப்படும் என்று குத்தகை ஒப்பந்தம் கூறுகிறது. ஒவ் வோராண்டும் உற்பத்தி கீழ்க்கண்டவாறு இருந்தது:

| ஆண்டு | உற்பத்தி (டன்களில்) |
|---|---|
| 1959 | ஒன்றுமில்லை |
| 1960 | 1,200 |
| 1961 | 1,800 |
| 1962 | 2,250 |
| 1963 | 2,800 |
| 1964 | 3,500 |
| 1965 | 1,900 |
| 1966 | 3,000 |

ஆற்காடு சுரங்கக் கம்பெனியின் ஏடுகளில் வேண்டிய பேரேட்டுக் கணக்குகளைத் தயாரித்து ஒவ்வோராண்டும் இலாப—நட்டக் கணக்கிற்கு எடுத்துச்செல்லும் தொகையையும் குறிப்பிடுக.

(5) ''A'' சில புனைபொருள் உரிமைகளைப் பெற்றிருந்தார். ''B'' என்பவர் அவற்றைப் பயன்படுத்திக்கொள்ள உரிமைத் தொகை அடிப்படையில் அதற்கு உரிமம் (licence) வழங்கி இருந்தார். கீழ்க்கண்ட விளக்கங்கள் தரப்படுகின்றன.

| ஆண்டு | குறைந்தளவு குத்தகை ரூ. | உரிமைத் தொகை ரூ. |
|---|---|---|
| 1. | 1,750 | 1,500 |
| 2. | 2,000 | 1,800 |
| 3. | 2,250 | 1,900 |
| 4. | 2,500 | 2,750 |
| 5. | 2,500 | 2,600 |

குறை உற்பத்தி இருக்குமாயின், அதனை அடுத்த இரண்டு ஆண்டுக்குள் மீட்டுக்கொள்ள வேண்டும். ''B'' யின் ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகளையும், குறை உற்பத்திக் கணக்கையும் தயாரிக்கவும்.

(B. Com., Kerala 1971)

(6) பாரத்மைன்ஸ் கம்பெனி, நிஜலிங்கப்பாவிற்கும், அனுமந்தையாவிற்கும் குத்தகை வழங்கினர். ஒவ்வொரு டன் நிலக்கரி உற்பத்திக்கும் 50 காசுகள் உரிமைத்தொகை அவருக்குத் தரவேண்டும். கீழ்க்கண்ட குறிப்பேட்டுப் பதிவுகளிலிருந்து தெரிந்துகொள்ளும் உண்மைகள் யாவை ?

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | 31–12–1971 | உரிமைத்தொகை க/கு .. ப | 10,000 | |
| | | குறைஉற்பத்தி க/கு .. ப | 5,000 | |
| | | நிஜலிங்கப்பா | | 15,000 |
| 2. | ,, | உரிமைத்தொகை க/கு .. ப | 13,000 | |
| | | அனுமந்தையா | | 13,000 |
| 3. | ,, | அனுமந்தையா ப | 6,000 | |
| | | குறை உற்பத்திக் க/கு | | 6,000 |
| 4. | ,, | இலாப-நட்டக் கணக்கு .. ப | 17,000 | |
| | | குறை உற்பத்திக் க/கு | | 17,000 |
| 5. | ,, | இலாப-நட்டக் கணக்கு க/கு ப | 23,000 | |
| | | உரிமைத் தொகைக் க/கு | | 23.000 |
| 6. | ,, | நிஜலிங்கப்பா ப | 15,000 | |
| | | அனுமந்தையா ப | 7,000 | |
| | | வங்கிக் க/கு | | 22,000 |

(B. Com., Shivaji, 1972)

(7) ஆத்மராமன் என்பவரிடமிருந்து இராணி சுரங்கக் கம்பெனி சொத்து ஒன்றைக் குத்தகைக்கு எடுத்துக் கொண்டது. ஒவ்வொரு டன்னுக்கும் ரூ. 1 வீதம் உரிமைத்தொகை வழங்க வேண்டும். குறைந்தளவு ஆண்டுக் குத்தகை ரூ. 30,000. ஒவ்வோராண்டின் உரிமைத்தொகையைவிட கூடுதலாக இருக்கும் குறைந்தளவு குத்தகைத் தொகை அடுத்த ஐந்தாண்டுகளுக்குள் மீட்டுக்கொள்ளப்பட வேண்டும்.

வேலை நிறுத்தத்தின் காரணமாக குறைந்தளவு குத்தகை கிடைக்கவில்லையெனில், அந்த ஆண்டில் ஈட்டிய உரிமைத்தொகை, இவ்வாண்டில் கொடுக்க வேண்டிய குத்தகைத் தொகையாகக் கொள்ளப்படுமென்று குத்தகை ஒப்பந்தம் கொள்கிறது. உற்பத்தி விவரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.

| ஆண்டு | | | உரிமைத்தொகை. ரூ. |
|---|---|---|---|
| திசம்பர் 31ல் முடியும் | 1959 | — | ஒன்றுமில்லை |
| ,, | 1960 | — | 9,750 |
| ,, | 1961 | — | 27,750 |
| ,, | 1962 | — | 33,750 |
| ,, | 1963 | — | 42,000 |
| ,, | 1964 | — | 52,500 |
| ,, | 1965 | — | 28,500 |
| ,, | 1966 | — | 45,000 |

1965 ஆம் ஆண்டில் வேலை நிறுத்தம் ஏற்பட்டது. தேவையான பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்கவும்.

(Jabalpur B. Com., 1968)

(8) தயாளன் என்பவர் ஒரு சுரங்கத்தை ஒவ்வொரு டன் தாதுப்பொருள் எடுப்பதற்கும் ரூ. 2 உரிமைத்தொகை விகிதத்தில் ஒரு சுரங்கக் கம்பெனிக்குக் குத்தகைக்கு விட்டிருக்கிறார். ஒவ்வொரு திங்களின் குறைந்தளவு குத்தகை ரூ. 2,400 ஆகும். ஏற்படும் குறை உற்பத்தி அடுத்த மூன்று திங்களுக்குள் மீட்கப் படவேண்டும். தயாளனின் ஏடுகளில் கீழ்க்கண்ட நடவடிக்கைகளைப் பதிக :—

முதல் ஆறு திங்கள்களுக்கும் உரிய உற்பத்தி விவரம் :—

| திங்கள் | | உற்பத்தி (டன்களில்) |
|---|---|---|
| முதல் திங்கள் | — | 400 |
| இரண்டாம் திங்கள் | — | 800 |
| மூன்றும் திங்கள் | — | 1,200 |
| நான்காம் திங்கள் | — | 1,400 |
| ஐந்தாம் திங்கள் | — | 2,400 |
| ஆறும் திங்கள் | — | 1,000 |

(I. C. W. A., July, 1965)

(9) திரு. ஜெயராமன் என்பவர், ஒரு பொருளுக்கான புனே பொருள் உரிமையைப் பெற்றிருக்கிறார். அவர் அதனை உற்பத்தி செய்யவும், விற்பதற்குமான உரிமையை ஒரு கம்பெனியிடம் கீழ்க்கண்ட நிபந்தனைகளின்பேரில் கொடுத்திருக்கிறார்.

(i) விற்பனையாகும் ஒவ்வொரு பொருளுக்கும் ரூ. 2 வீதம் உரிமைத் தொகை தரவேண்டும்.

(ii) ஒவ்வோராண்டிலும் குறைந்தது ரூ. 10,000 தர வேண்டும்.

(iii) கணக்கிடப்படும் உரிமைத்தொகையைவிடக் கூடுதலாகவுள்ள குறைந்தளவுக் குத்தகைத் தொகையை அடுத்த இரண்டு ஆண்டுகட்குள் கழித்துக் கொள்ளும் உரிமையுண்டு. விற்பனை விவரம் கீழே கொடுக்கப் பட்டிருக்கிறது.

| திச. 31-ல் முடியும் | | | | |
|---|---|---|---|---|
| | ஆண்டு | 1962 | — | 4,000 |
| ,, | ,, | 1963 | — | 4,500 |
| ,, | ,, | 1964 | — | 5,400 |
| ,, | ,, | 1965 | — | 6,500 |

ஒவ்வோராண்டும் செலுத்த வேண்டிய தொகை திசம்பர் 31-ல் கொடுக்கப்பட்டதாகக் கொண்டு, கம்பெனியின் ஏடுகளில் தேவையான பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்கவும்.

(I, C. W- A., July, 1966)

(10) சுரங்கக் கம்பெனி ஒன்று ஒரு சுரங்கத்தை ஒவ்வொரு டன்னுக்கு 50 காசுகள் உரிமைத்தொகை அடிப்படையில் குத்தகைக்கு எடுத்துக் கொண்டது. கொடுக்கவேண்டிய குறைந்தளவு ஆண்டுக் குத்தகை ரூ. 10,000. உரிமைத்தொகையை விட அதிகமாக இருக்கும் ஒவ்வோராண்டின் குறைந்தளவு குத்தகையையும் அடுத்த மூன்று ஆண்டுகளுக்குள் மீட்கப்பட வேண்டும்.

வேலை நிறுத்தத்தின் காரணமாகவோ, விபத்தின் காரண மாகவோ உற்பத்தி பாதிக்கப்படுமானல், எவ்வளவு காலத்திற்கு உற்பத்தி தடைபட்டதோ அந்த விகிதத்தில் அவ்வாண்டில் கொடுக்க வேண்டிய குறைந்தளவு குத்தகைத் தொகையைக் குறைத்துக்கொள்ள வேண்டுமென்று குத்தகை ஒப்பந்தம் கூறு கிறது. உற்பத்தி விவரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.

| திசம்பர் 31-ல் முடியும் ஆண்டு | டன் |
|---|---|
| 1960 | 8,000 |
| 1961 | 12,500 |
| 1962 | 21,500 |
| 1963 | 26,000 |
| 1964 | 12,000 |
| 1965 | 30,000 |

திசம்பர் 31-ல் முடியும் 1964ஆம் ஆண்டில் ஆறு திங்கள் கட்கு வேலை நிறுத்தத்தின் காரணமாக உற்பத்தி தடைபட்டது.

நிலக்கிழார் கணக்கு, உரிமைத்தொகைக் கணக்கு, குறை உற்பத்திக் கணக்கு ஆகியவற்றைத் தயாரிக்கவும்.

(M. U. B. Com., Special Accounts, Sep. 1967)

(11) 'A' என்பவர் 'கணக்கியல்' பற்றிய நூல் ஒன்றினை எழுதி 'கமர்ஷியல் பிரிண்டர்ஸ்' எனும் பதிப்பகத்தின் மூலம் வெளியிட்டார். விற்கப்படும் நூல்களின் விலையில் 15 சதவீதம் உரிமைத்தொகை அவருக்குத் தரப்படவேண்டும். ஒவ்வோராண்டும் குறைந்தது ரூ. 15,000 கொடுக்கப்பட வேண்டும். பதிப்பகத்தார் வேண்டும்போழ்து நூலினைத் திருத்தி எழுதித் தருவதாகவும், அவ்வாறு பதிப்பகத்தார் வேண்டிய ஆறு திங்கட்களுக்குப் பின்னர் காலம் கடத்தும் ஒவ்வொரு திங்களுக்கும் ரூ. 750 வீதம் பதிப்பகத்தாருக்குத் தாம் தருவதாகவும் ஏற்றுக் கொண்டார். இவ்வாறு காலதாமதம் ஏற்படும் ஆண்டில், திரு 'A' வுக்குத் தரவேண்டிய குறைந்தளவு தொகையான ரூ. 15,000 தர வேண்டியதில்லை. இவ் வொப்பந்தம் முதல் 10 ஆண்டுகளுக்குப்

பொருந்தும். விற்பனையான படிகளின் விவரமும், பதிப்பக விலையும் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.

| ஆண்டு | விற்ற படிகளின் எண்ணிக்கை | பதிப்பக விலை ரூ. |
|---|---|---|
| 1965 | 3,000 | 20 |
| 1966 | 6,000 | 20 |
| 1967 | 7,500 | 25 |
| 1968 | 3,000 | 25 |
| 1969 | 9,000 | 30 |

1968 சனவரி 1-ல் நூலைத் திருத்தித் தருமாறு 'A' கேட்டுக் கொள்ளப்பட்டார். திருத்தப்பெற்ற கையெழுத்துப்படி (manuscript) பதிப்பகத்தாரிடம் 1968 நவம்பர் 1-ல் தான் வந்து சேர்ந்தது.

'A'இன் ஏடுகளிலும் பதிப்பகத்தார் ஏடுகளிலும் மேற்கண்ட நடவடிக்கைகட்கான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

(M. U. B. Com., Spl A/cs., Sep. 1971)

(12) ஒவ்வோராண்டின் குறை உற்பத்தி அது ஏற்பட்ட அடுத்த மூன்று ஆண்டுகளுக்குள் மீட்டுக்கொள்ளப்பட வேண்டும் என்று கொண்டு, கீழ்க்கண்ட விவரங்களிலிருந்து குத்தகைதாரர் ஏடுகளில் பெறும் உரிமைத்தொகைக் கணக்கு, செலுத்தும் உரிமைத்தொகைக் கணக்கு, நிலக்கிழார் கணக்கு, குறை உற்பத்திக் கணக்கு, கீழ்க் குத்தகைக் கணக்கு, உரிமைத் தொகைக் காப்புக்கணக்கு ஆகியவற்றைத் தயாரிக்கவும் :

| ஆண்டு | உற்பத்தி (டன்னுக்கு ரூ. 1 வீதம்) டன்களில் | குத்தகைதாரரின் உற்பத்தி டன்களில் | கீழ்க் குத்தகைதாரர் உற்பத்தி (டன்னுக்கு ரூ. 1·50 வீதம்) டன்களில் |
|---|---|---|---|
| 1957 | 1,400 | 400 | 1,000 |
| 1958 | 2,300 | 1,700 | 600 |
| 1959 | 3,000 | 2,280 | 720 |

குத்தகைதாரர் நிலக்கிழாருக்குக் கொடுக்க வேண்டிய குறைந்தளவு குத்தகை ரூ. 150. கீழ்க் குத்தகைதாரர் குத்தகைதாருக்குக் கொடுக்க வேண்டிய குறைந்தளவு குத்தகை ரூ. 100.

(M. U. B. Com., Special Accounts, April 1964)

*(13)* ஒரு நிலம் ஒன்று '*A*'க்கு குத்தகைக்கு விடப்பட்டது. ஒவ்வொரு டன்னுக்கும் *10* காசுகள் வீதம் உரிமைத் தொகை வழங்கப்படவேண்டும். குறைந்தளவு ஆண்டுக் குத்தகை ரூ. *2,000*. முதல் ஏழு ஆண்டுகட்குள் குறைவு உற்பத்தியை மீட்டுக்கொள்ளும் உரிமை '*A*' விற்குண்டு.

அதில் பாதி நிலத்தை ஐந்தாண்டு காலத்திற்கு '*XY*' என்பவருக்குக் கீழ்க்குத்தகையாக விட்டார். ஒவ்வொரு டன்னுக்கும் உரிமைத்தொகை *15* காசுகள் வீதமும் குறைந்தளவு ஆண்டுக் குத்தகை ரூ. *1,250* என்றும் ஒப்புக் கொள்ளப்பட்டது. துணை ஒப்பந்தத்தின்படி, குறை உற்பத்தி ஏற்பட்ட அடுத்த இரு ஆண்டுகட்குள் அதனை மீட்டுக்கொள்ளும் உரிமை '*XY*'-க்கு உண்டு. உற்பத்தி விவரம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| திசம்பர் 31-ல் முடியும் ஆண்டு | 'A'-யின் உற்பத்தி (டன்களில்) | 'XY'-யின் உற்பத்தி (டன்களில்) |
|---|---|---|
| 1958 | 10,000 | 6,500 |
| 1959 | 16,000 | 8,000 |
| 1960 | 20,000 | 8,200 |
| 1961 | 25,000 | 9,000 |
| 1962 | 26,000 | 9,900 |
| 1963 | 20,000 | — |

மேற்கண்ட விவரங்களிலிருந்து, செலுத்தும் உரிமைத் தொகைக் கணக்கையும், பெறும் உரிமைத்தொகைக் கணக்கையும், செலுத்தும் குறை உற்பத்திக் கணக்கையும், பெறும் குறை உற்பத்திக் கணக்கையும் தயாரிக்கவும்.

(I. C. W. A., July, 1967)

(14) அஸ்ஸாம் நிலக்கரிக் கம்பெனி ஒரு நிலக்கரிச் சுரங்கத்தைக் குத்தகைக்கு எடுத்துக் கொண்டது. குத்தகை ஒப்பந்தத்தின்படி, கம்பெனி நிலக்கிழாருக்கு ஒரு டன்னுக்கு 75 காசுகள் வீதம் உரிமைத்தொகை தரவேண்டும். குறைந்தளவு குத்தகை ஆண்டு ஒன்றுக்கு ரூ. 15,000 ஆகும். ஒவ்வோராண்டில் ஏற்படும் குறை உற்பத்தி அடுத்த இரண்டு ஆண்டுகட்குள் மீட்கப்படவேண்டும். வேலை நிறுத்தம் ஏற்படும் ஆண்டில், குறைந்தளவு குத்தகையை 60 சதவீதத்திற்குக் குறைத்துக் கொள்ளலாம். ஆறு ஆண்டுகட்கான உற்பத்தி விவரம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| ஆண்டு | உற்பத்தி (டன்களில்) |
|---|---|
| முதலாண்டு | 10,000 |
| இரண்டாம் ஆண்டு | 12,000 |
| மூன்றும் ஆண்டு | 28,000 |
| நான்காம் ஆண்டு | 25,000 |
| ஐந்தாம் ஆண்டு | 50,000 |
| ஆறும் ஆண்டு (வேலை நிறுத்த ஆண்டு) | 15,000 |

குறிப்பேட்டுப் பதிவுகளையும் குறை உற்பத்திக் கணக்கையும் தயாரிக்கவும்.

(Bombay, Sagar, Nagpur B. Com)

(15) புதுவை எரிவளி அடுப்புக் கம்பெனி (Gas Stove) எரிவளி அடுப்பைத் தயாரிப்பதற்கான புனை பொருள் உரிமையைப் பெற்றிருக்கின்றது. 1967 சனவரி 1-ல் அவர்கள் சேலம் கம்பெனியிடம் எரிவளி அடுப்புகளைத் தயாரித்து விற்பதற்கான உரிமையை வழங்கியது. ஒப்பந்தத்தின்படி விற்கப்பட்ட ஒவ்வொரு அடுப்புக்கும் ரூ. 2-50 வீதம் உரிமைத்தொகை கொடுக்க வேண்டும். ஒவ்வோராண்டும் குறைந்தது ரூ. 15,000 - மாவது கொடுக்கவேண்டும். விற்பனையான அடுப்புகளின் அடிப்படையில்

கணக்கிடப்பட்டத் தொகையைச் சேலம் கம்பெனி அடுத்த ஆண்டுக்குள் மீட்டுக்கொள்ளவேண்டும். விற்பனை விவரம் கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.

| ஆண்டு | விற்பனையான எரிவளி அடுப்புகளின் எண்ணிக்கை |
|---|---|
| 1967 | 4,000 |
| 1968 | 5,000 |
| 1969 | 7,000 |
| 1970 | 10,000 |

சேலம் ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகளையும், பேரேட்டுக் கணக்கையும் தயாரிக்க.

(16) தமிழ்நாடு சுரங்கக் கம்பெனி நிலக்கரிச் சுரங்கம் ஒன்றைக் குத்தகைக்கு எடுத்தது. வெட்டி எடுக்கும் நிலக்கரி ஒவ்வொரு டன்னுக்கும் 75 காசுகள் வீதம் உரிமைத்தொகை தரவேண்டும். குறைந்தளவு ஆண்டுக் குத்தகை, முதல் மூன்று ஆண்டுகட்கு முறையே ரூ. 10,000, ரூ. 12,000, ரூ. 15,000 ஆகும். பின் எல்லா ஆண்டுகட்கும் ரூ. 15,000 தான் குறைந்தளவு குத்தகையாகும். எவ்வாண்டில் குறை உற்பத்திக் காணப்படினும் அது ஏற்பட்ட அடுத்த ஆறு ஆண்டுகட்குள் அதனை மீட்டுக்கொள்ளும் உரிமை உண்டு. நிலக்கரி உற்பத்தி விவரம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| ஆண்டு | நிலக்கரி உற்பத்தி (டன்களில்) |
|---|---|
| 1965 | 5,000 |
| 1966 | 9,000 |
| 1967 | 19,200 |
| 1968 | 26,400 |
| 1969 | 30,800 |
| 1970 | 35,200 |

தமிழ்நாடு சுரங்கக் கம்பெனியின் ஏடுகளில், குறைந்தளவு குத்தகைக் கணக்கு, உரிமைத்தொகைக் கணக்கு, நிலக்கிழார் கணக்கு, இலாப—நட்டக் கணக்கு ஆகியவற்றைத் தயாரிக்கவும்.

# 4. துறைவாரிக் கணக்குகள்
## (Departmental Accounts)

வாணிக அமைப்பு பல்வேறு துறைகளாகப் பிரிக்கப்பட்டு செயல்பட்டு வரும்பொழுது, ஒவ்வொரு துறைக்கும் உரிய இலாப-நட்டக் கணக்கைத் தனித்தனியாகத் தயார் செய்தால்தான் பயன் மிக விளையும். அவ்வாறின்றி அனைத்துத் துறைகளுக்கும் பொதுவான வாணிக இலாப-நட்டக் கணக்கு தயார் செய்யப் படுமாயின், ஒவ்வொரு துறையின் விளைவையும் உணர முடியாமல் போகும். துறைகள் ஒவ்வொன்றையும் மற்றதுடன் ஒப்பிட்டுப் பார்க்கவும், முன் ஆண்டுகளைவிட இப்பொழுது ஒவ்வொரு துறையும் எவ்வாறு செயல்பட்டு வந்திருக்கின்றன என்பதை ஒப்பு நோக்கவும் வேண்டும். அப்பொழுதுதான் பல துறைகளின் சீரான வளர்ச்சியைக் கண்காணிக்க இயலும். நட்டத்தையே தொடர்ந்து காட்டிவரும் துறையை மூடிவிடவும் அல்லது ஒரு துறையில் நட்டம் ஏற்பட்டிருப்பின், அதற்கான காரணத்தை ஆய்ந்து, ஆதாயம் பெறத்தக்க முயற்சிகளை மேற்கொள்ளவும் முடியும்.

ஒரு நிறுவனத்தில் பல துறைகளிருக்கும். தனது துணை ஏடுகள் அனைத்திலும் ஒவ்வொரு துறைக்குமான பத்திகளைச் சேர்த்துக் கொண்டால், கணக்குப் பதிவது எளிதாகும். எடுத்துக் காட்டாக, பல துறைகளையுடைய ஒரு நிறுவனத்தின் கொள்முதல் ஏடு அடுத்த பக்கத்தில் காட்டியவாறு இருக்கும்.

## துறைக் கொள்முதல் ஏடு

| நாள் | விவரம் | உள்வரு இடாப்பு எண் | பே. ப. எ. | மொத்தம் ரூ. | துறைகள் | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | (அ) | (ஆ) | (இ) |
| | | | | | | | |

இவ்வாறே கொள்முதல் திருப்ப ஏடு, விற்பனை ஏடு, விற்பனைத் திருப்ப ஏடு போன்ற அனைத்தும் ஏடுகள் இடப்பட்டிருக்கும். ரொக்க விற்பனை அதிகம் இருப்பின், ரொக்க ஏட்டிலும் ஒவ்வொரு துறைக்கு பான பத்திகள் காணப்பட வேண்டும்.

வழக்கம்போல்றே கணக்குகளைப் பேரேடுகளில் பதிந்து இருப்பாய்வு தயாரித்த பின்னர் அவற்றை ஒவ்வொரு துறைக்கும் உரிய வாணிக, இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல வேண்டும். இதில் சில செலவினங்களை எந்த விகிதத்தில் ஒவ்வொரு துறைக்கும் பிரிப்பது என்பதில் சிக்கல் எழலாம். அவற்றைக் கீழே ஆய்வோம்.

## செலவினங்களைப் பிரித்தல்
## (Allocation of Expenses)

*(1)* சில செலவுகள் குறிப்பிட்ட துறைகளுக்காக ஏற்கப்பட்டிருப்பின், இச் செலவுகளை அந்தத் துறைகளின் இறுதிக் கணக்குகட்கு எடுத்துச் செல்லவேண்டும். எடுத்துக்காட்டாக, ஒரு துறையில் பணிபுரிவோருக்குக் கொடுக்கப்படும் ஊதியத் தொகையை அத் துறையின் இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்லவேண்டும். இவ் வகைச் செலவுகளை நேரடிச் செலவுகள் என்கிறோம்.

*(2)* சிலவகைச் செலவுகளைப் பகுப்பது எளிதாக இருக்கும். எடுத்துக்காட்டாக, மின் ஒளிச் செலவை (Lighting) துறைகள் பயன்படுத்திய விகிதத்தில் பகுக்கலாம். ஒவ்வொரு துறைக்கும் தனித்தனி மீட்டர் இருப்பின், இதனை உணர்வது எளிதாகிறது; அல்லது விளக்குகளின் எண்ணிக்கை அடிப்படையிலும் இச் செலவைப் பகுக்கலாம்.

*(3)* விற்பனைக் கழிவு, வராக்கடன், வெளிச்சுமை கூலி போன்றவற்றைத் துறையின் விற்பனை அடிப்படையில் பகுக்கலாம். காரணம், அவை பெரும்பாலும் விற்பனையைப் பொருத்து இருக்கின்றன. (ஒவ்வொரு துறையிலிருந்து அடுத்த துறைக்குச் சரக்கை மாற்றிக் கொடுப்பதையும் விற்பனையில் சேர்த்துக் கொள்ள வேண்டும்.)

*(4)* கட்டடங்களுக்கான செலவுகளை ஒவ்வொரு துறையும் பயன்படுத்தும் இடத்தின் பரப்பளவினை ஒட்டிப் பகுக்கலாம். (வாடகை, நகராட்சி வரி போன்றவை இம் முறையில் பிரிக்கப்பட வேண்டும்.)

*(5)* உள்சுமை கூலியைத் துறையின் கொள்முதல் அடிப்படையில் பிரிக்கலாம்.

(6) பொறி வகைகளுக்கானத் தேய்மானத்தை, ஒவ்வொரு துறையிலும் இருக்கின்ற பொறிகளின் மதிப்பு அடிப்படையில் பகுக்கலாம். ஒவ்வொரு துறையும் பயன்படுத்தும் பொறி பற்றிய விவரம் கொடுக்கப்படவில்லையெனில், கொடுக்கப்படும் கூலியின் அடிப்படையில் இதனைப் பகுக்கலாம்.

(7) சரக்கினைக் காப்பீடு செய்வதால் செலுத்தப்பெறும் காப்பீட்டுக் கட்டணத்தை ஒவ்வொரு துறையிலும் இருக்கின்ற சராசரி சரக்கிருப்பின் அடிப்படையில் பிரிக்கலாம்.

(8) தொழிலாளர் நல செலவுகளை ஒவ்வொரு துறையிலும் பணியாற்றுகின்ற தொழிலாளர்களின் எண்ணிக்கை அடிப்படையில் பிரிக்கலாம்.

(9) விளம்பரம் சாதாரணமாக விற்பனை அடிப்படையில் பிரிக்கப்படுகிறது. ஆனால், விளம்பரத்தில் ஒவ்வொரு துறைக்கும் கொடுக்கப்படும் இடத்தின் அடிப்படையில் விளம்பரச் செலவைப் பிரிப்பது சிறந்ததாக இருக்கும்.

(10) சிலவகைச் செலவுகளை எந்த அடிப்படையிலும் பிரிக்க முடியாது. எடுத்துக்காட்டு : கடன்மீது வட்டி, பொது மேலாளரின் ஊதியம் போன்றவை. இவற்றை எம் முறையிலும் பகுக்காமல், பொது இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்லுதல் நலம். அதாவது, ஒவ்வொரு துறையும் உணர்த்தும் இலாபத்தைப் பொதுவாகக் கொண்டுவந்து இத்தகைய பகுக்க முடியாத செலவினங்களை அதில் பற்றுவைக்க வேண்டும்.

## துறைகளிடையே சரக்கு மாற்றம்

ஒரு துறை அடுத்த துறைக்குச் சரக்கு அளிக்கலாம். அப்பொழுது சரக்கைப் பெறுகின்ற துறைக் கணக்கில் பற்றும், சரக்கை அளிக்கும் துறைக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். இவ் வகையில் துறைகளிடையே சரக்கு மாற்றுவது அடக்கவிலையின் அடிப்படையிலேயே அமையலாம்.

### எடுத்துக்காட்டு 13

காவேரி பல பொருள் பண்டசாலையில் 'அ', 'ஆ' என இரு பிரிவுகள் உள. 1973 ஜூன் 30-ல் முடியும் ஆண்டிற்கான இருப்பாய்வு கொடுக்கப்பட்டிருக்கிறது. அவற்றிலிருந்து துறை

வாரி வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும் (Departmental Trading and Profit and Loss Account) இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க :

| | | | ரூ. | ரூ. |
|---|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு | 'அ' | துறை | 15,500 | — |
| | 'ஆ' | துறை | 11,000 | — |
| கொள்முதல் | 'அ' | துறை | 42,450 | — |
| | 'ஆ' | துறை | 30,170 | — |
| வாடகை | | | 2,400 | — |
| ஊதியம் | 'அ' | துறை | 7,500 | — |
| | 'ஆ' | துறை | 4,800 | — |
| விளம்பரம் | | | 1,500 | — |
| உட்சுமை கூலி ('ஆ' பிரிவுக்குரியது) | | | 200 | |
| வங்கி | | | 5,400 | — |
| முதல் | | | — | 25,320 |
| கடனீந்தோர் | | | — | 18,450 |
| கடனாளிகள் | | | 31,420 | — |
| மனைத்துணைப் பொருள் | | | 1,200 | — |
| விற்பனை | 'அ' | பிரிவு | — | 69,000 |
| | 'ஆ' | பிரிவு | — | 46,000 |
| கடன் | | | — | 10,000 |
| காப்பீடு | | | 900 | — |
| அளித்த தள்ளுபடி | | | 500 | — |
| ஈட்டிய தள்ளுபடி | | | — | 210 |
| வராக் கடன் | | | 450 | — |
| பொது மேலாளரின் ஊதியம் | | | 4,800 | — |
| கூலி | 'அ' | பிரிவு | 6,550 | — |
| | 'ஆ' | பிரிவு | 3,760 | — |
| கொள்முதல் திருப்பம் | 'அ' | பிரிவு | — | 2,450 |
| | 'ஆ' | பிரிவு | — | 170 |
| வெளிச்சுமை கூலி | | | 100 | — |
| கடன் மீது வட்டி | | | 1,000 | — |

கீழ்க்கண்ட தகவல்கள் மேலும் தரப்பட்டுள்ளன.

(1) இடப் பரப்பளவு (area occupied) 2 : 1 எனும் விகிதத்திலிருக்கிறது.

(2) மனைத்துணைப் பொருள் மீது 10% தேய்மானம் நீக்க வேண்டும். ('அ' துறைக்கு முக்கால் பங்கும், 'ஆ' துறைக்குக் கால் பங்குமாக ஒதுக்குக.)

(3) விளம்பரச் செலவைச் சமமாகப் பகிர்க்க.

(4) காப்பீடு, நிறுவன முழுமைக்காகவும் செய்யப்பட்டது. ஆதலால் அதை எவ் வகையிலும் பிரிக்கவேண்டாம்.

(5) இறுதிச் சரக்கிருப்பு 'அ' பிரிவு ரூ. 17,450; 'ஆ' பிரிவு ரூ. 10,600.

விடை :

காவேரி பல்பொருள் பண்டசாலையின்
1973 ஜூன் 30-ல் முடியும் ஆண்டுக்கான துறைவாரி வாணிக, இலாப-நட்டக் கணக்கு

பற்று / வரவு

| விவரம் | 'அ' துறை ரூ. | 'ஆ' துறை ரூ. | மொத்தம் ரூ. | விவரம் | 'அ' துறை ரூ. | 'ஆ' துறை ரூ. | மொத்தம் ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு .. | 15,500 | 11,000 | 26,500 | விற்பனை .. | 69,000 | 46,000 | 1,15,000 |
| கொள்முதல் (திருப்பம்நீங்க) | 40,000 | 30,000 | 70,000 | இறுதிச் சரக்கிருப்பு .. | 17,450 | 10,600 | 28,050 |
| உட்சுமை கூலி .. | | 200 | 200 | | | | |
| கூலி .. | 6,550 | 3,760 | 10,310 | | | | |
| மொத்த இலாபம் கீ/இ | 24,400 | 11,640 | 36,040 | | | | |
| | 86,450 | 56,600 | 1,43,050 | | 86,450 | 56,600 | 1,43,050 |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| வாடகை .. | 1,600 | 800 | 2,400 | மொத்த இலாபம் கீ/கொ | 24,400 | 11,640 | 36,040 |
| ஊதியம் .. | 7,500 | 4,800 | 12,300 | ஈட்டிய தள்ளுபடி | 120 | 90 | 210 |
| விளம்பரம் .. | 750 | 750 | 1,500 | | | | |
| தள்ளுபடி .. | 300 | 200 | 500 | | | | |
| வராக்கடன் .. | 270 | 180 | 450 | | | | |
| வெளிச்சுமை கூலி .. | 60 | 40 | 100 | | | | |
| தேய்மானம் மனைத்துணைப் பொருள் .. | 90 | 30 | 120 | | | | |
| நிகர இலாபம் கீ[இ .. | 13,950 | 4,930 | 18,880 | | | | |
| | 24,520 | 11,730 | 36,250 | | 24,520 | 11,730 | 36,250 |

காவேரி பல்பொருள் பண்டசாலையின்—(தொடர்ச்சி)

பற்று | வரவு

| விவரம் | 'அ' துறை ரூ. | 'ஆ' துறை ரூ. | மொத்தம் ரூ. | விவரம் | 'அ' துறை ரூ. | 'ஆ' துறை ரூ. | மொத்தம் ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| காப்பீடு .. | | | 900 | நிகர இலாபம் கீ/கொ .. | | | 18,880 |
| பொது மேலாளரின் ஊதியம் .. | | | 4,800 | | | | |
| கடன்மீது வட்டி .. | | | 1,000 | | | | |
| முதல் க/கு— நிகர இலாபம் .. | | | 12,180 | | | | |
| | | | 18,880 | | | | 18,880 |

**காவேரி பல்பொருள் பண்டசாலை**
**1973 சூன் 30-ற்கான இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | ரூ. | ரூ. | சொத்துகள் | ரூ. | ரூ. |
|---|---|---|---|---|---|
| முதல் .. | 25,320 | | வங்கி .. | | 5,400 |
| கூட்டு: நிகர இலாபம் .. | 12,180 | | கடனாளிகள் .. | | 31,420 |
| | | 37,500 | மனைத்துணைப் பொருள் .. | 1,200 | |
| கடனீந்தோர் | | 18,450 | கழி: தேய்மானம் .. | 120 | |
| கடன் | | 10,000 | | | 1,080 |
| | | | இறுதிச் சரக்கிருப்பு: | | |
| | | | 'அ' துறை .. | 17,450 | |
| | | | 'ஆ' துறை .. | 10,600 | |
| | | | | | 28,050 |
| | | 65,950 | | | 65,950 |

ஒரு துறையிலிருந்து அடுத்த துறைக்குச் சரக்கு மாற்றும் பொழுது பொதுவாக அது அடக்கவிலையில் இருக்கலாம். அப் பொழுது சரக்குப் பெறுகின்ற துறைக் கணக்கில் பற்றும், சரக்குத் தருகின்ற துறைக் கணக்கில் வரவும் வைக்கின்றோம். சில வேளைகளில் பிரிவுகளிடையே ஏற்படும் இச் சரக்கு மாற்றம் விற்பனை விலையிலும் அமையலாம். அவ்வாறாயின், ஆண்டு இறுதியில் துறைகளிடையே இருக்கும் இறுதிச் சரக்கிருப்பில் இவ் விலாபத் தொகையும் அடங்கியிருக்கும். இது விற்பனை யாகுமுன் கணக்கிடப்படும் இலாபமாகும் (unrealised profit). இதனைச் சரிக்கட்ட, இறுதிச் சரக்கிருப்பில் அடங்கியுள்ள இலாபத் தொகையைக் கணக்கிட்டு அத் தொகைக்குக் காப்பு ஏற்படுத்த வேண்டும். இதனைச் சரக்கிருப்புக் காப்பு (Stock Reserve) என்கிறோம்.

துறைகட்கு அனுப்பப்படும் சரக்கைக் கொடுக்கப்பட்டுள்ள மதிப்பிலேயே பதியவேண்டும். இப்பொழுது துறையின் மொத்த இலாபம் தெரியும். மொத்த இலாபத்திற்கும், விற்பனைக்குமுள்ள விகிதத்தை இப்பொழுது கணக்கிட வேண்டும் (விற்பனை என்பது விற்பனை விலையில் அடுத்த துறைக்கு அளித்த சரக்கையும் உள்ளடக்கும்.) அடுத்த துறையிலுள்ள இறுதிச் சரக்கிருப்பில் முதலில் இத் துறை அளித்த சரக்கிருப்பில் மொத்த இலாபத் திற்கும் விற்பனைக்குமுள்ள விகிதத்தைக் கணக்கிட வேண்டும். இதுவே விற்பனையாகுமுன் கணக்கிடும் ஆதாயமாகும் (unrealised profit). இத் தொகைக்கு இலாப-நட்டக் கணக்கில் பற்று வைத்துக் காப்பு ஏற்படுத்தவேண்டும்.

**எடுத்துக்காட்டு 14**

ஒரு நிறுவனத்தில் '*X*', '*Y*' எனும் இரு துறைகள் உள்ளன. கீழ்க் கொடுக்கப்பட்ட விவரங்களிலிருந்து துறைவாரி வாணிகக் கணக்கினைத் தயார் செய்க :

| | *X* | *Y* |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| தொடக்கச் சரக்கிருப்பு (அடக்க விலையில்) | 20,000 | 12,000 |
| கொள்முதல் .. | 92,000 | 68,000 |
| உட்கூறைக் கூலி .. | 2,000 | 2,000 |
| கூலி .. | 12,000 | 8,000 |
| விற்பனை .. | 1,40,000 | 1,12,000 |

| | X | Y |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| வாங்கிய சரக்கு மாற்றம் : | | |
| Y துறையிலிருந்து X துறைக்கு .. | 10,000 | |
| X துறையிலிருந்து Y துறைக்கு .. | | 8,000 |
| முடிவுப் பொருட்கள் மாற்றம் : | | |
| Y துறையிலிருந்து X துறைக்கு .. | 35,000 | |
| X துறையிலிருந்து Y துறைக்கு .. | | 40,000 |
| முடிவுப் பொருட்களைத் திருப்பி அனுப்பியது : | | |
| Y துறையிலிருந்து X துறைக்கு .. | 10,000 | |
| X துறையிலிருந்து Y துறைக்கு .. | | 7,000 |
| இறுதிச் சரக்கிருப்பு : | | |
| (1) வாங்கிய சரக்கு .. | 4,500 | 6,000 |
| (2) முடிவுப் பொருட்கள் .. | 24,000 | 14,000 |

வாங்கிய சரக்கை அடக்க விலையிலேயே துறைகள் ஒன்றுக்கொன்று மாற்றிக்கொள்கின்றன. ஆனால், முடிவுப் பொருள்கள் துறையின் விற்பனை விலையில் மாற்றிக்கொள்ளப்படுகின்றன. துறையிலுள்ள முடிவுப் பொருள்கள் இறுதிச் சரக்கிருப்பில் 25 சதவீதம் அடுத்த துறைக்கிளையிலிருந்து பெற்ற சரக்காகும்.

(C. A. Inter).

**விடை :**

**1968 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான வாணிகக் கணக்கு**

பற்று | வரவு

| விவரம் | X துறை | Y துறை | மொத்தம் | விவரம் | X துறை | Y துறை | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| | ரூ. | ரூ. | ரூ. | | ரூ. | ரூ. | ரூ. |
| தொடக்கச் சரக்கிருப்பு .. | 20,000 | 12,000 | 32,000 | விற்பனை .. | 1,40,000 | 1,12,000 | 2,52,000 |
| கொள்முதல் .. | 92,000 | 68,000 | 1,60,000 | வாங்கிய சரக்கு மாற்றம் .. | 8,000 | 10,000 | — |
| உட்சுமைக் கூலி .. | 2,000 | 2,000 | 4,000 | | | | |
| கூலி .. | 12,000 | 8,000 | 20,000 | முடிவுப் பொருள்கள் மாற்றம் .. | 40,000 | 35,000 | — |
| வாங்கிய சரக்கு மாற்றம் .. | 10,000 | 8,000 | — | முடிவுப் பொருள்களைத் திருப்பி யனுப்பியது .. | 7,000 | 10,000 | — |
| முடிவுப் பொருள்கள் மாற்றம் .. | 35,000 | 40,000 | — | இறுதிச்சரக்கிருப்பு: வாங்கிய சரக்கு | 4,500 | 6,000 | 10,500 |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| முடிவுப் பொருள்களைத் திருப்பி யனுப்பியது .. | 10,000 | 7,000 | — | முடிவுப் பொருள்கள்.. | 24.000 | 14,000 | 38,000 |
| மொத்த இலாபம் (சரக்கிருப்புக் காப்பினைச் சரிக்கட்டுமுன்) | 42,500 | 42,000 | 84,500 | | | | |
| | 2,23,500 | 1,87,000 | 3,00,500 | | 2,23,500 | 1,87,000 | 3,00,500 |
| சரக்கிருப்புக் காப்பு .. | 875 | 1,800 | 2,675 | மொத்த இலாபம் .. | 42,500 | 42,000 | 84,500 |
| மொத்த இலாபம் (சரிக் கட்டியபின்).. | 41,625 | 40,200 | 81,825 | | | | |
| | 42,500 | 42,000 | 84,500 | | 42,500 | 42,000 | 84,500 |

**விளக்கக் குறிப்பு :**

**(அ) X துறைக்கு ஏற்படுத்தவேண்டிய சரக்கிருப்புக் காப்பு**

*Y துறையிலிருக்கும் X துறை வழங்கிய இறுதிச் சரக்கிருப்பு* $14,000 \times \frac{1}{4} =$ ரூ. 3,500

**X துறையின் விற்பனை:**

| | | | |
|---|---|---|---|
| வெளி விற்பனை | .. | ரூ. | 1,40,000 |
| முடிவுப் பொருள்களின் மாற்றம் | .. | ரூ. | 40,000 |
| | | | 1,80,000 |
| முடிவுப் பொருள்களைத் திரும்பப் பெற்றது | | ரூ. | 10,000 |
| | | ரூ. | 1,70,000 |

ரூ. 1,70,000க்கு மொத்த இலாபம் ரூ. 42,500

ரூ. 3,500-க்கு ,, $\frac{3,500 \times 42,500}{1,70,000}$

= ரூ. 875

**(ஆ) 'Y' துறைக்கு ஏற்படுத்தவேண்டிய சரக்கிருப்புக் காப்பு**

*X துறையிலிருக்கும் Y துறையின் இறுதிச் சரக்கிருப்பு*

$24,000 \times \frac{25}{100} =$ ரூ. 6,000

**Y துறையின் விற்பனை:**

| | | | |
|---|---|---|---|
| வெளி விற்பனை | .. | ரூ. | 1,12,000 |
| முடிவுப் பொருள்கள் 'X' துறைக்கு அனுப்பியது | .. | ரூ. | 35,000 |
| | | ரூ. | 1,47,000 |
| **கழி :** திரும்பப் பெற்றது | .. | ரூ. | 7,000 |
| | | ரூ. | 1,40,000 |

ரூ. 1,40,00-க்கு ஏற்பட்ட மொத்த இலாபம் ரூ. 42,000

ரூ. 6,000-க்கு ,, ,, $\frac{42,000 \times 6,000}{1,40,000}$

= ரூ. 1,800

'X' துறை 'Y' துறைக்கு வழங்கிய முடிவுப் பொருள்களில் இலாபமும் அடங்கியிருக்கிறது. 'Y' துறையின் இறுதிச் சரக் கிருப்பில் 'X' துறை வழங்கிய ரூ. 3,500-க்கான சரக்கும் அடங்கி யிருக்கிறது. விற்கப்படா முன்னர் ஏற்பட்ட ஆதாயம் அதிலிருப்ப தால், அதற்கான காப்பு ஏற்படுத்தவேண்டும்.

அதுபோன்றே 'Y' துறை வழங்கிய முடிவுப் பொருள்கள் 'X' துறையின் இறுதிச் சரக்கிருப்பில் அடங்கியிருத்தலால் அதி லுள்ள ஆதாயத்திற்குக் காப்பு ஏற்படுத்தப்படுகிறது.

விற்பனை என்பது வெளி விற்பனையுடன் பிற துறைக்கு வழங்கிய சரக்கைக் கூட்டவேண்டும். பின்னர், அத் துறையி லிருந்து திரும்பப்பெற்ற சரக்கைக் கழித்தால் நிகர விற்பனை கிடைக்கும்.

## வினாக்கள்

1. துறைகட்கான இறுதிக் கணக்குகளைத் தயாரிக்கும் பொழுது, பொதுவாகக் கொடுக்கப்பட்டிருக்கும் செல வினங்களைப் பல துறைகட்கும் எவ்வாறு பிரிப்பது ?

2. துறைகட்கிடையே நிகழும் சரக்கு மாற்றத்தை எவ் வாறு பதிவது ?

## பயிற்சி

(1) கீழ்க்கண்ட இருப்பாய்விலிருந்து 1965 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான துறைவாரி வாணிக இலாப-நட்டக் கணக்கினையும் (Departmental Trading, Profit and Loss Account) அந் நாளிற்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க :

## 31-12-1965-ற்கான இருப்பாய்வு

| | பற்று | வரவு |
|---|---|---|
| 1—1—1965-ல் சரக்கிருப்பு : | ரூ. | ரூ. |
| அ. துறை .. | 17,400 | |
| ஆ. துறை .. | 14,700 | |
| கொள்முதல் : | | |
| அ. துறை .. | 35,000 | |
| ஆ. துறை .. | 30,000 | |
| விற்பனை : | | |
| அ. துறை .. | | 60,000 |
| ஆ. துறை .. | | 40,000 |
| கூலி : | | |
| அ. துறை .. | 8,200 | |
| ஆ. துறை .. | 2,700 | |
| வரி, வாடகை, காப்பீடு முதலியவை .. | 9,390 | |
| பல்வகைச் செலவுகள் .. | 3,600 | |
| ஊதியம் .. | 3,000 | |
| மின்ஒளிச் செலவும் வெப்பப் படுத்தலும் .. | 2,100 | |
| அளித்த தள்ளுபடி .. | 2,200 | |
| ஈட்டிய தள்ளுபடி .. | | 650 |
| விளம்பரம் .. | 3,680 | |
| உட்சுமைக் கூலி .. | 2,340 | |
| மனைத்துணைப் பொருள் .. | 3,000 | |
| பொறிவகை .. | 21,000 | |
| கடனாளிகள் .. | 6,060 | |
| கடனீந்தோர் .. | | 30,650 |
| முதல் .. | | 47,660 |
| எடுப்பு .. | 4,500 | |
| வங்கி .. | 9,900 | |
| ரொக்கம் .. | 170 | |
| | 1,78,960 | 1,78,960 |

கீழ்க்கண்ட தகவல்கள் மேலும் கொடுக்கப்பட்டிருக்கின்றன :

1. 'அ' துறையிலிருந்து 'ஆ' துறைக்கு மாற்றிய சரக்கு ரூ. 420.

2. கீழ்க்கண்ட இனங்களை 'அ' துறைக்கு மூன்றில் இரண்டு பங்காகவும், 'ஆ' துறைக்கு மூன்றில் ஒரு பங்காகவும் பிரிக்கவேண்டும்.

வாடகை, வரி, காப்பீடு முதலியவை, சில்லறைச் செலவுகள், மின்செலவும் வெப்பப்படுத்தலும், ஊதியம், உட்சுமைக் கூலி.

3. விளம்பரச் செலவைச் சமமாகப் பிரிக்கவேண்டும்.

4. அளித்த தள்ளுபடியையும், ஈட்டிய தள்ளுபடியையும் துறைகளின் விற்பனை, கொள்முதல் அடிப்படையில் (துறையிடை மாற்றம் நீங்கலாக) பிரிக்கவேண்டும்.

5. மனைத்துணைப் பொருள், பொறிவகை ஆகியவை மீது 10 சதவீதம் தேய்மானம் நீக்கவேண்டும். இதனை முக்கால் பங்கு 'அ' துறைக்கும், கால் பங்கு 'ஆ' துறைக்குமாகப் பிரிக்கவேண்டும்.

6. 'அ' துறைக்கு, 'ஆ' துறை ஆற்றிய பணி 'ஆ' துறையின் கூலியில் அடங்கியுள்ளது.

7. 1965 திசம்பர், 31-ற்கான இறுதிச் சரக்கிருப்பு :

'அ' துறை : ரூ. 16,740

'ஆ' துறை : ரூ. 12,050

(M. U. B. Com., April, 1974)

(2) குமார் என்பவரின் வியாபாரத்தில் பின்னல் துறையென்றும், கம்பளித் துறையென்றும் இரண்டு துறைகள் உள்ளன.

1967 மார்ச்சு 31-ல் முடியும் ஆண்டுக்கான இருப்பாய்வு கீழே கொடுக்கப்பட்டுள்ளது :

| | | | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| விற்பனை (முடிவுப் பொருள்கள்) | | | | |
| பின்னல் | ரூ. | 2,00,000 | | |
| கம்பளி | ரூ. | 3,00,000 | | 5,00,000 |
| கொள்முதல் (கச்சாப் பொருள்கள்) | | | | |
| பின்னல் | ரூ. | 70,000 | | |
| கம்பளி | ரூ. | 1,88,500 | 2,58,500 | |
| உற்பத்திக்கூலி | | | | |
| பின்னல் | ரூ. | 40,000 | | |
| கம்பளி | ரூ. | 50,000 | 90,000 | |
| சரக்கிருப்பு (கச்சாப் பொருள்கள்) 1–4–1966 | | | | |
| பின்னல் | ரூ. | 20,000 | | |
| கம்பளி | ரூ. | 25,000 | 45,000 | |
| முடிவுப் பொருள்களின் சரக்கிருப்பு 1–4–1966 | | | | |
| பின்னல் | ரூ. | 5,000 | | |
| கம்பளி | ரூ. | 7,500 | 12,500 | |
| கொள்முதல் திருப்பம் (கச்சாப் பொருள்கள்) | | | | |
| பின்னல் | ரூ. | 3,000 | | |
| கம்பளி | ரூ. | 2,000 | | 5,000 |
| விற்பனைத் திருப்பம் (முடிவுப் பொருள்கள்) | | | | |
| பின்னல் | ரூ. | 600 | | |
| கம்பளி | ரூ. | 900 | 1,500 | |

| | பற்று | வரவு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| உற்பத்தி மேற்செலவு (Works overhead) | 54,000 | |
| கடனாளிகள் | 75,000 | |
| கடனீந்தோர் | | 45,000 |
| பொறிவகை | 22,500 | |
| மனைத்துணைப் பொருள் | 4,500 | |
| ஊதியம் | 30,000 | |
| அலுவலகச் செலவு | 18,000 | |
| குமாரின் முதல் | | 1,06,000 |
| வங்கி | 35,000 | |
| ரொக்கம் | 3,500 | |
| எடுப்பு | 6,000 | |
| மொத்தம் | 6,56,000 | 6,56,000 |

பொறிவகை மீது 10 சதவீதமும், மனைத்துணைப் பொருள் மீது 5 சதவீதமும் தேய்மானம் நீக்கப்படவேண்டும். வராக் கடன் ரூ. 500 நீக்கப்படவேண்டும். ஐயக் கடனுக்காக 2½ சதவீதம் காப்பு ஏற்படுத்தவேண்டும்.

உற்பத்தி மேற்செலவை (பொறிவகைமீதான தேய்மானம் உட்பட) உற்பத்திக் கூலியின் அடிப்படையில் பிரிக்கவேண்டும். மனைத்துணைப் பொருள்மீதான தேய்மானத்தையும், இலாப-நட்டக் கணக்கில் பற்றுப் பகுதிக்குரிய பிற கணக்குகளையும் இரு துறைகளின் விற்பனை விகிதத்தில் பிரிக்கவேண்டும். 1966 மார்ச்சு 31-ல் இருந்த இறுதிச் சரக்கிருப்பு :

| | கச்சாப் பொருள் | இறுதிப் பொருள் |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| பின்னல் | 28,000 | ஒன்றுமில்லை |
| கம்பளி | 35,000 | 6,000 |

இரண்டு துறைகட்கும் தனித்தனியாகவும், வியாபார முழுமை யாகவும் 1967 மார்ச்சு 31-ல் முடியும் ஆண்டிற்கான உற்பத்திக் கணக்கையும், வாணிகக் கணக்கையும், இலாப-நட்டக் கணக்கையும் (தனித்தனியாகவும் தொழில் முழுமைக்கும்), அந் நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(M. U. B. Com., Special Accounts, April, 1968)

(3) ஒரு வியாபாரத்தில் 'A', 'B' எனும் இரு துறை கட்கான 1963 திசம்பர் 31-ற்குரிய இருப்புகள் கீழ்க் கொடுக்கப் பட்டிருக்கின்றன :

| | | ரூ. |
|---|---|---|
| ரொக்கம் | | 150 |
| முதல் கணக்கு | | 15,800 |
| வராக்கடன் | | 132 |
| விற்பனை | (A துறை) | 30,000 |
| | (B துறை) | 10,000 |
| எரிபொருளும், நீரும் | | 400 |
| கொள்முதல் | (A துறை) | 20,000 |
| | (B துறை) | 8,500 |
| மனைத்துணைப் பொருள் | | 500 |
| வரவுக்குரிய உண்டியல் | | 1,000 |
| பொறி வகை | | 10,000 |
| ஊதியம் | | 1,200 |
| வங்கி மேல்வரைப் பற்று | | 3,000 |
| கூலி | (A துறை) | 3,000 |
| | (B துறை) | 650 |
| செலுத்தவேண்டிய உண்டியல் | | 1,225 |
| சுமைக்கூலியும் கட்டணங்களும் | | |
| | (A துறை) | 250 |
| | (B துறை) | 65 |
| கடனீந்தோர் | | 5,600 |
| கடனாளிகள் | | 4,800 |
| 1963 சனவரி 1-ல் சரக்கிருப்பு | | |
| | (A துறை) | 9,000 |
| | (B துறை) | 3,500 |
| எடுப்புக் கணக்கு (ப) | | 758 |
| விளம்பரம் | | 240 |

| | ரூ. |
|---|---|
| கழிவு | 80 |
| வாடகை, வரி, காப்பீடு | 640 |
| தள்ளுபடியும் பிற படிகளும் | 100 |
| எழுதுபொருளும் அச்சுக் கூலியும் | 300 |
| பொதுச் செலவுகள் | 360 |

1963 திசம்பர் 31இல் 'A' துறையிலிருந்த சரக்கிருப்பு ரூ. 8,500 ஆகும். 'B' துறையில் இது ரூ. 3,000 ஆகும். கடனாளிகள்மீது $2\frac{1}{2}\%$ ஐயக் கடனுக்கு ஒதுக்குக. பொறிவகை மீது தேய்மானம் 5 சதவீதம் நீக்குக. 1964 மார்ச்சு 31-ல் முடியும் ஆண்டிற்காகச் செலுத்தப்பட்ட காப்பீட்டுத் தொகை ரூ. 80; செலுத்த வேண்டிய கூலி ரூ. 150 (A துறை); ரூ. 70 (B துறை); ஊதியம் ரூ. 100 இன்னும் கொடுக்கப்பட வேண்டியுள்ளது. விற்பனை விகிதத்தில் செலவினங்களை ஒவ்வொரு துறையும் பிரித்துக் கொள்ளவேண்டுமென்று கொண்டு, மேற்சொன்ன விவரங்களிலிருந்து துறைகட்கான வாணிக, இலாப-நட்டக் கணக்கினையும், இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(M. U. B. Com., Special Accounts, April, 1965)

(4) 'தமிழ்நாடு டிரேடர்ஸ்' எனும் நிறுவனம் மூன்று துறைகளை அமைத்து வாணிகம் செய்கிறது. 1973 திசம்பர் 31-ல் கணக்கிருப்புகள் கீழ்க்காட்டியவாறு இருந்தன :

| | | ரூ. |
|---|---|---|
| 1955 சனவரி 1-ல் சரக்கிருப்பு : | | |
| | துறை 1 | 70,000 |
| | துறை 2 | 40,000 |
| | துறை 3 | 60,000 |
| கொள்முதல் : | | |
| | துறை 1 | 14,10,000 |
| | துறை 2 | 7,00,000 |
| | துறை 3 | 10,50,000 |
| கூலி : | | |
| | துறை 1 | 2,80,000 |
| | துறை 2 | 1,30,000 |
| | துறை 3 | 2,10,000 |

| | ரூ. |
|---|---|
| கடன் கணக்கு, 6 சதவீத வட்டியில் | 3,00,000 |
| ஊதியம் | 54,000 |
| கடனாளிகள் | 2,66,000 |
| வரவிற்குரிய உண்டியல் | 2,80,000 |
| கடனீந்தோர் | 1,01,000 |
| செலுத்த வேண்டிய உண்டியல் | 30,000 |
| சுமைக் கூலி | 12,600 |
| பயணச் செலவுகள் | 6,300 |
| விளம்பரம் | 8,100 |
| அச்சுக் கூலியும் எழுது பொருள் செலவும் | 13,500 |
| வாணிக நற்பெயர் | 90,000 |
| வரியும் கட்டணமும் | 1,800 |
| பொதுச் செலவு | 36,900 |
| வாகனங்கள் | 1,30,000 |
| நிலமும் கட்டடமும் | 1,80,000 |
| கடன் வட்டி (1955 சூன் 30-ல் முடியும் அரையாண்டு வரை) | 9,000 |
| மனைத்துணைப் பொருள் | 72,000 |
| ரொக்கமும் வங்கியிருப்பும் | 1,44,800 |
| முதல் கணக்கு | 6,69,000 |

கடனாளிகளில் ரூ. 2,000-மும், வரவுக்குரிய உண்டியலில் ரூ. 1,600-ம் வராது. எனவே, அவைகளை நீக்கிவிடவேண்டும். கடனாளிகளில் ஒன்றரை சதவீத அளவில் ஐயக் கடன் காப்பு ஏற்படுத்தவேண்டும்.

| 1955 திசம்பர் 31-ல் சரக்கிருப்பு : | ரூ. |
|---|---|
| துறை 1 | 60,000 |
| துறை 2 | 50,000 |
| துறை 3 | 65,000 |

நிலம், கட்டடம் ஆகியவற்றின் மீது இரண்டரை சதவீத அளவிலும், மனைத்துணைப் பொருள் மீது 10 சதவீத அளவிலும் வாகனங்கள் மீது 20 சதவீத அளவிலும் தேய்மானம் நீக்குக.

பிரிக்கப்படாத செலவினங்களை ஒவ்வொரு துறையிலும் உள்ள தொடக்கச் சரக்கிருப்பு, கொள்முதல் ஆகியவற்றின்

கூட்டல் தொகையின் விகிதத்தில் பிரிக்க வேண்டும். ஆனால், வாகனங்கள்மீது தேய்மானத்தை 2 : 1 : 1 எனும் விகிதத்தில் பிரிக்கவேண்டும்.

திசம்பர் 31-ல் முடியும் ஆண்டிற்கான வாணிக இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(B. Com., Calcutta வைத் தழுவியது.)

(5) கீழ்க்கண்ட தகவல்களிலிருந்தும், நிபந்தனைகளிலிருந்தும் அவுட் ஃபிட்டர்ஸ் லிமிடெட்டின் மூன்று துறைகட்கான, துறைவாரி வாணிக, இலாப-நட்டக் கணக்கினைப் பத்திகள் இடப்பட்ட படிவத்தில் தயாரிக்கவும்.

| | தையல் (Tailoring) | மகளிர் அணிவகை (Ladies wear) | உடுப்பு (Outfitting) |
|---|---|---|---|
| | ரூ. | ரூ. | ரூ. |
| 1958 சனவரி 1-ல் சரக்கிருப்பு | 41,280 | 33,975 | 93,721 |
| 1958 திசம்பர் 31-ல் சரக்கிருப்பு | 32,840 | 43,828 | 81,626 |
| ஆண்டுக் கொள்முதல் | 2,10,342 | 75,296 | 1,39,109 |
| திருப்பங்கள் (கொள்முதல்) | 14,382 | 4,629 | 1,823 |
| ஆண்டு விற்பனை | 4,00,173 | 1,54,085 | 3,62,189 |
| திருப்பங்கள் (விற்பனை) | இல்லை | 3,259 | 11,217 |
| கூலி | 72,823 | 30,084 | 24,613 |

கீழ்க்கண்டவாறு சரக்கு மாற்றம் ஏற்பட்டது (எல்லாம் அடக்க விலையில்) :

| | ரூ. |
|---|---|
| தையல் துறையிலிருந்து மகளிர் அணிவகைத் துறைக்கு | 389 |
| உடுப்புத் துறைக்கு | 6,679 |
| மகளிர் அணிவகைத் துறையிலிருந்து தையல் துறைக்கு | 5,315 |
| உடுப்புத் துறையிலிருந்து தையல் துறைக்கு | 4,271 |
| மகளிர் அணிவகைத் துறைக்கு | 5,801 |

கீழ்க்கண்டவற்றைச் சமமாகப் பகிர்க்கவும் :

| | ரூ. |
|---|---|
| எழுதுபொருள் | 921 |
| அஞ்சல் | 663 |
| பொதுச் செலவுகள் | 39,627 |
| காப்பீடு | 1,785 |
| தேய்மானம் | 5,460 |

கீழ்க்கண்ட செலவினங்களை நீவிர் சரியென நினைக்கும் வகையில் பகிர்க்கவும். அத்துடன் அதற்கான காரணத்தையும் கூறவும்.

| | ரூ. |
|---|---|
| ஊதியம் | 63,395 |
| வராக்கடன் | 19,823 |
| விளம்பரம் | 7,293 |
| வருமானவரி | 11,028 |

வாடகையும், வரியும் ரூ. 45,437; ஒவ்வொரு துறையும் இருக்கும் இடப்பரப்பளவு விகிதத்தில் பிரிக்கப்படவேண்டும். அதாவது, தையல் 4, மகளிர் அணிவகை 2, உடுப்புத்துறை 3, பிற இடம் 2. கிட்டிய மதிப்பில் அனைத்தையும் பிரிக்க; இருப்பு ஏதேனுமிருப்பின் உடுப்புத் துறைக்கு எடுத்துச் செல்லவும்.

(G. D. A)

(6) ஒரு கூட்டு நிறுவனத்தில் 'A', 'B' எனும் இரு கூட்டாளிகள் உளர். இலாப-நட்டத்தைச் சமமாகப் பங்கிட்டுக் கொள்ள அவர்கள் ஒப்பினர். கூட்டு நிறுவனத்தில் மூன்று தனித்தனியான துறைகள் இருந்தன. அதன் 1964 திசம்பர் 31-ற்கான இருப்பாய்வு கீழே கொடுக்கப்பட்டுள்ளது. துறைவாரி வாணிக இலாப-நட்டக் கணக்கினையும், 1964 திசம்பர் 31-ற் குரிய இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க :

1. கூட்டாளிகளின் முதல் தொகைகள் மீதும் எடுப்புக் களின் மீதும் ஆண்டுவட்டி 5 சதவீதத்தில் கணக் கிடுக.
2. ரூ. 1,600-ற்கான கடன் வசூலிக்க முடியாமல் போகவே நீக்கப்பட வேண்டும். அத்துடன் நிலுவை யிலுள்ள ஏட்டுக் கடன்கள் மீது 5 சதவீத அளவிற்கு ஐயக் கடன் ஒதுக்கினை அதிகப்படுத்துக.

3. ரூ. 200-க்கு வாங்கிய எழுதுபொருள், இருப்பாய்வில் கணக்கிடப்படவில்லை. அதைக் கணக்கில் கொண்டுவருக.

4. மனைத்துணைப் பொருள் மீது அடக்கவிலையில் 5 சதவீத அளவில் தேய்மானம் நீக்குக.

5. செலுத்தப்பட்ட காப்பீட்டு முனைமம் ரூ. 100 அடுத்த ஆண்டிற்குரியது.

6. ஒவ்வொரு துறையிலுமுள்ள இறுதிச் சரக்கிருப்பின் மதிப்பு கீழே கொடுக்கப்பட்டுள்ளது :

| | ரூ. |
|---|---|
| துறை X | 10,462 |
| துறை Y | 10,001 |
| துறை Z | 4,940 |

7. கையிலுள்ள விளம்பரப் பொருள்களின் மதிப்பு ரூ. 300; இது இருப்பாய்வில் சரிக்கட்டப்படவில்லை.

8. அனைத்துச் செலவுகளும், நட்டங்களும் 7 : 6 : 2 எனும் விகிதத்தில் துறைகளிடையே பிரிக்கப்பட வேண்டும்.

## 31. 12. 1964-ற்கான இருப்பாய்வு

| | பற்று<br>ரூ. | வரவு<br>ரூ. |
|---|---|---|
| முதல் கணக்குகள் : | | |
| A | | 33,333 |
| B | | 16,666 |
| எடுப்புக் கணக்குகள் : | | |
| A | 4,000 | |
| B | 3,000 | |
| 1964 சனவரி 1-ல் சரக்கிருப்பு : | | |
| துறை X | 11,438 | |
| துறை Y | 9,167 | |
| துறை Z | 2,646 | |

## 31-12-1974-ற்கான இருப்பாய்வு—(தொடர்ச்சி)

| | பற்று<br>ரூ. | வரவு<br>ரூ. |
|---|---|---|
| கொள்முதல் : | | |
| துறை X | 34,657 | |
| துறை Y | 32,441 | |
| துறை Z | 14,111 | |
| விற்பனை : | | |
| துறை X | | 55,194 |
| துறை Y | | 47,310 |
| துறை Z | | 15,769 |
| துறைகளிடையே மாற்றம் : | | |
| துறை X | | 1,501 |
| துறை Y | 1,201 | |
| துறை Z | 300 | |
| உள் திருப்பங்கள் : | | |
| துறை X | 3,533 | |
| துறை Y | 3,029 | |
| துறை Z | 1,009 | |
| கூலியும், ஊதியமும் | 6,418 | |
| விளம்பரம் | 3,612 | |
| முதலீட்டு வருமானம் | | 1,200 |
| முதலீடுகள் | 20,000 | |
| கடனாளிகள் | 8,955 | |
| அச்சுக் கூலியும், எழுது பொருளும் | 485 | |
| கடனீந்தோர் | | 5,493 |
| உட்சுமை கூலி | 450 | |
| கழிவு | 1,107 | |
| அஞ்சல், தந்தி, தொலைபேசி | 922 | |
| ஐயக் கடன் ஒதுக்கு | | 300 |
| வாடகை, வரி | 8,148 | |
| மனைத்துணைப் பொருள் | 5,000 | |
| காப்பீடு | 403 | |
| பல்வகைச் செலவுகள் | 1,058 | |
| வங்கி மேல்வரைப் பற்று | | 1,519 |
| தள்ளுபடியும், படிகளும் | 475 | |

(C. A. Final)

(7) துணிப்பிரிவு, தையற்பிரிவு, உடைப் பிரிவு என மூன்று துறைகளாகப் பிரித்து A,B,C என மூவரும் கூட்டு நிறுவனம் செய்து வருகின்றனர். தொழில் நிருவாகத்தை மூவரும் பகிர்ந்து கொள்கின்றனர். துணிப்பிரிவுக்கு A-வும், தையற்பிரிவுக்கு B-யும், உடைப் பிரிவுக்கு C-யும் பொறுப்பேற்கின்றனர்.

ஒவ்வொரு கூட்டாளியும் மேற்பார்வை செய்துவரும் துறை ஈட்டும் இலாபத்தில் 75 சதவீதத்தை அவரவர் பெற்றுக் கொள்ளவேண்டியது. மீதி இலாபத்தினைக் கீழ்க்கண்ட விகிதங்களில் அவர்கள் பிரித்துக் கொள்ளவேண்டியது : மீதி இலாபத்தில் 50 % A-க்குச் சேரவேண்டும் ; மீதி இலாபத்தில் 25 % B-க்குச் சேரவேண்டும் ; மீதி இலாபத்தில் 25 % C-க்குச் சேர வேண்டும்.

1971 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான நிறுவனத்தின் முடிவு பக்கம் 146-ல் கண்டவாறிருந்தது :

கீழ்க்கண்டவற்றிற்கு வகை செய்து ஒவ்வொரு துறைக்குமான துறைக் கணக்குகளைத் தயார் செய்க.

கூட்டாளிகளிடையே இலாபத்தினைப் பிரித்துக்காட்டும் இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கினையும் தயார் செய்க.

(i) ரூ. 10,700 மதிப்புள்ள துணியை விற்பனை விலையில் துணிப்பிரிவு தையற் பிரிவுக்கு அளித்தது.

(ii) ரூ. 600 மதிப்புள்ள உடைகளைத் தையற் பிரிவு உடைப்பிரிவுக்கு மாற்றியது.

(iii) கடையின் காட்சி அறையில் (Show room) துணியும், உடைகளும் விற்கப்படுகின்றன. ஆனால், தையற்பணி பெரும்பாலும் பணிமனையில்தான் (Workshop) மேற்கொள்ளப் படுகிறது. காட்சிப் பிரிவில் தைப்பதற்கான ஆணைகளே பெறப் படுகின்றன.

(iv) ஊதியம், கூலி பற்றிய விவரங்கள் : பொது அலுவலகம் 50%; காட்சி அறை 25%; பணிமனை 25 %.

(v) விளம்பரம், பல்வகைச் செலவுகள், மனைத்துணைப் பொருள் மீது தேய்மானம்—முதலியவை மூன்று துறைகட்கும் சமமாகப் பிரிக்கப்படவேண்டும்.

**1971 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான வாணிக, இலாப-நட்டக் கணக்கு**

| | ரூ. | ரூ. | | ரூ. | ரூ. |
|---|---|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு : | | | விற்பனை : | | |
| துணிப்பிரிவு | 37,890 | | துணிப்பிரிவு | 1,80,000 | |
| தையற்பிரிவு | 24,000 | | தையற்பிரிவு | 1,30,000 | |
| உடைப்பிரிவு | 20,000 | | உடைப்பிரிவு | 90,000 | |
| | | 81,890 | | | 4,00,000 |
| கொள்முதல் : | | | இறுதிச் சரக்கிருப்பு : | | |
| துணிப்பிரிவு | 1,40,700 | | துணிப்பிரிவு | 45,100 | |
| தையற்பிரிவு | 80,600 | | தையற்பிரிவு | 22,300 | |
| உடைப்பிரிவு | 44,400 | | உடைப்பிரிவு | 21,600 | |
| | | 2,65,700 | | | 89,000 |
| ஊதியமும் கூலியும் | | 48,000 | | | |
| விளம்பரம் | | 2,400 | | | |
| வாடகை | | 10,800 | | | |
| தள்ளுபடி அளித்தது | | 1,200 | | | |
| பல்வகைச் செலவு | | 12,000 | | | |
| மனைத்துணைப் பொருள்மீது தேய்மானம் | | 750 | | | |
| நிகர இலாபம் | | 67,060 | | | |
| | | 4,89,800 | | | 4,89,800 |

(vi) வாடகையைப் பொருத்தவரை, பொது அலுவலகத்திற்கு 50 சதவீதமாகவும், தையற்பிரிவின் பணிமனைக்கு 25 சதவீதமாகவும் பிரிக்கப்படவேண்டும்.

(vii) ஈட்டிய தள்ளுபடியை அளித்த தள்ளுபடிக் கணக்கில் சரிக்கட்டி, மீதித் தொகையை மூன்று துறைகட்கும் சமமாகப் பிரிக்கவேண்டும்.

ஒரு துறை மற்ற துறைக்கு மாற்றிய சரக்கு ஏதும் தொடக்க சரக்கிலோ, இறுதிச் சரக்கிலோ இல்லை.

மூன்று துறைகட்கும் பொதுவானது பொது அலுவலகம். இதற்காகும் செலவினை இலாபப் பகிர்வு விகிதத்தில் ஏற்க கூட்டாளிகள் உடன்படுகின்றனர்.

(C. A. I. I. B. October, 1972)

# 5. கிளைக் கணக்குகள்
## (Branch Accounts)

செய்துவரும் தொழில் அல்லது வாணிகம் வளர வளர, பல பகுதிகளாகப் பிரிக்கப்படலாம். பலவகைப் பொருள்களில் வியாபாரம் செய்யும் ஒருவர் அதனைப் பொருள்களின் தன்மைக் கேற்றவாறு பல பகுதிகளாகப் பிரிப்பது வழக்கம். பல பிரிவு பண்டசாலை (Departmental store) இதற்கு ஒரு எடுத்துக் காட்டாகும். இதுபோன்ற பண்டசாலைகளில் பலவகையான பொருள்கள் விற்பனை செய்யப்படுகின்றன. ஒருவருக்குத் தேவை யான எப் பொருளையும் ஒரு இடத்திலேயே வாங்குவதற்கு இது வழி செய்கின்றது. எடுத்துக்காட்டு : கூட்டுறவு முறையில் அமைக்கப்பெற்றிருக்கும் பல சிறப்பு அங்காடிகள். இவற்றில் மளிகைப் பிரிவு என்றும், துணி அணி வகைப் பிரிவு என்றும், மருந்துப் பொருள்கள் பிரிவு என்றும், குழந்தைகள் விளையாட்டுப் பொருள்கள் பிரிவு என்றும், எழுதுபொருள் பிரிவு என்றும் பலவகைப் பிரிவுகள் இருக்கின்றன. இவ்வாறு, பல பிரிவுகளும் ஒரு கட்டடத்திலேயே இருக்கப்பெறுமாயின் அவைகள் துறைகள் எனப்படும். அவ்வாறின்றி, ஒவ்வொரு பிரிவும் ஒரு நகரத்தின் பல இடங்களில் அல்லது பல நகரங்களில் அமைக்கப்பெறுமாயின் அவை கிளைகள் எனப்படும். ஒவ்வொரு துறையும் ஒவ்வொரு வகைப் பொருளில் ஈடுபட்டிருக்கும். ஆனால், ஒரு நிறுவனத்தின் பல கிளைகளும் பெரும்பாலும் ஒரேவகைப் பொருளில் வாணிகம் செய்வதே பெருவழக்காகும்.

ஒவ்வொரு துறையும் அல்லது கிளையும் எவ்வாறு செயல் படுகிறது என்பதை அறிதல் இன்றியமையாதது. எந்தத் துறை யேனும் அல்லது கிளையேனும் இலாபகரமாக இல்லையெனில் அதற்கான காரணத்தை ஆய்ந்து நட்டத்தைத் தவிர்க்கும் முயற்சிகளில் ஈடுபடலாம். எனவே, ஒரு துறையின் அல்லது கிளையின் வாணிக நிலையினை உணர்த்தும் வகையில் கணக்கு எழுதப் பெறுதல் வேண்டும்.

## கிளைகளின் வகைகள்

தன்மைக்கேற்றவாறு கிளைகள் பலவகைகளாகப் பிரிக்கப் பட்டிருக்கின்றன. சில கிளைகள் தலைமையகம் உற்பத்தி செய்யும் பொருள்களை மட்டில் விற்பதில் ஈடுபட்டிருக்கின்றன. சில நிறுவனங்களின் ஒவ்வொரு கிளையும் ஒவ்வொரு வகையான பொருள் உற்பத்தியில் ஈடுபடலாம். தலைமையகம் பல கிளைகளும் உற்பத்தி செய்யும் பொருள்களை விற்பதில் ஈடுபடலாம், அல்லது தலைமையகமும் ஏதேனும் ஒரு பொருள் உற்பத்தியில் ஈடுபடலாம்.

*(1)* சிலவகைக் கிளைகள் தலைமையகம் அனுப்பும் பொருள் களை மட்டும் விற்கின்றன. விற்பனை அனைத்தும் ரொக்கத்திற்கு இருக்கவேண்டும். பெறும் ரொக்கம் அனைத்தையும் தலைமை அலுவலகத்திற்கு அனுப்பிவிடும். கிளைகளின் செலவுகளுக்காகத் தலைமை அலுவலகம் பணம் அனுப்பும்.

*(2)* அடுத்தவகைக் கிளைகள் தலைமையகம் அனுப்பும் பொருள்களை மட்டும் விற்கின்றன. ஆனால், இவை கடன்பேரிலும் விற்கும் உரிமை பெற்றிருக்கின்றன. பெறும் ரொக்கம் அனைத்தை யும் தலைமை அலுவலகத்திற்கு அனுப்பிவிட்டு அவை ஏற்க வேண்டிய செலவுகளுக்குத் தலைமை அலுவலகத்திலிருந்து ரொக் கம் பெறும்.

*(3)* மூன்றும் வகைக் கிளைகள் மேல் விளக்கியவாறே இருக் கின்றன. ஆனால், தலைமை அலுவலகம் இவைகளுக்குச் சரக்கை விற்பனை விலையில் அனுப்புகின்றன.

**(4) தனித்து இயங்கும் கிளைகள்** (Independent Branches): இவ் வகைக் கிளைகள் தேவையான சரக்கை வெளியில் வாங்கிக் கொள்ளவும், ரொக்கத்தின் பேரிலும், கடன்பேரிலும் விற்கவும் உரிமை பெற்றிருக்கின்றன. சுருக்கமாகச் சொல்லப் போனால், இவை தனித்து இயங்கும் நிறுவனங்கள் போன்றே செயல்படுகின்றன. இவ் வகைக் கிளைகள் கணக்குகள் அனைத்தை யும் பதிகின்றன. ஆண்டு இறுதியில் கிளைக் கணக்குகள் தலைமை அலுவலகத்தின் கணக்குகளோடு இணைக்கப்பெறும்.

**(5) வெளி நாட்டுக் கிளைகள்** (Foreign Branches) : இவ் வகைக் கிளைகளும் தனித்து இயங்கும் தன்மை பெற்றன. தங்கள் கணக்குகள் அனைத்தையும் தாமே பதிவு செய்து வருகின்றன.

## கிளைக் கணக்குகளைப் பதிதல்

**1. ரொக்க விற்பனையில் மட்டும் ஈடுபட்டிருக்கும் கிளைகள்:** இவை சில்லறை கடைகள்போன்று இயங்கி வருகின்றன. தலைமை அலுவலகம் அனுப்பும் சரக்கினைமட்டும் ரொக்கத்திற்கு விற்பனை செய்கின்றன. எனவே, பலவகைக் கணக்குகளை எழுத வேண்டிய தேவையில்லை. சாதாரணமாக ஒரு சில்லறை ரொக்க ஏட்டினை இவைகள் வைத்திருக்கும். ஒவ்வொரு வாரத்திற்கும் அல்லது திங்களுக்கும் சரக்கு இருப்பு அறிக்கை தயார் செய்து அனுப்பும். மாதிரி பக்கம் 169-ல் கொடுக்கப்பட்டுள்ளது. தொடக்கத்திலிருந்த சரக்கு, அந்த வாரத்தில் அல்லது திங்களில் தலைமை அலுவலகத்திலிருந்து பெற்ற சரக்கு, செய்த விற்பனை, அக் காலத்தில் சேதமுற்ற சரக்கு, இறுதிச் சரக்கு இருப்பு போன்ற விவரங்கள் அவ் வறிக்கையில் கொடுக்கப்படும். கிளை நடவடிக்கைகளைச் சிறந்தமுறையில் கண்காணிப்பதற்கும், எவ் வகையான சரக்குகள் விரைவாக விற்பனையாகின்றன என்பதை உணர்வதற்கும் இவ் வறிக்கைகள் பயன்படுகின்றன.

வாரம் ஒரு முறையோ அல்லது திங்கள் ஒரு முறையோ ரொக்க அறிக்கை தலைமை அலுவலகத்திற்கு அனுப்பப்படுகிறது. இதில் ரொக்க விற்பனை, தலைமை அலுவலகத்திலிருந்து பெற்ற தொகை, ஏற்ற செலவுகள், தலைமை அலுவலகத்திற்கு அனுப்பிய தொகை, கையிலுள்ள ரொக்கம் பற்றிய விவரங்கள் கொடுக்கப்படும்.

**தலைமை அலுவலகத்தில் கணக்குப் பதிதல் :** தலைமை அலுவலகத்தின் பேரேடுகளில் ஒவ்வொரு கிளைக்கும் ஒரு கணக்கு தொடங்கப்பெறும். அதில் அக் கிளைக்கும் தலைமை அலுவலகத்திற்கும் இடையே ஏற்படும் நடவடிக்கைகள் பதிவு செய்யப் பெறும். அவ்வப்பொழுது கிளைக்குச் சரக்கு அனுப்பப்படும் பொழுது அதுகிளைக் கணக்கில் பொதுவாக அடக்கவிலையில் பற்று வைக்கப்படுகிறது. காரணம், கிளைக்குச் சரக்கு அனுப்புவதை விற்பனையாகக் கொள்ளுதல் தவறாகும். தலைமை அலுவலகத்திலுள்ள சரக்கு கிளையில் விற்பனைசெய்யப்படுகிறது. பல கிளைகளையுடைய ஒரு நிறுவனம் கிளைகளுக்குச் சரக்கு அனுப்புவதைக் கிளைகளுக்கு அனுப்பிய சரக்கு ஏடு (Goods supplied to Branches Book) எனும் ஏட்டில் முதலில் பதிவு செய்யும். இவ் வகை ஏடு பக்கம் 170-ல் காட்டியவாறு பத்திகளைப் பெற்றிருக்கும்.

..................................கம்பெனி

......................கிளை

............ஆம் ஆண்டு.........திங்களுக்கான

**சரக்கிருப்பு அறிக்கை**

| வரிசை எண். | விவரம் | எண்ணிக்கை | சென்ற திங்களிறுதியில் சரக்கிருப்பு | இத் திங்களில் பெற்றது | மொத்தம் | இத் திங்களில் விற்பனை | இத் திங்களில் பிற வகையில் வழங்கியது (விவரம் 'குறிப்பு' பகுதியில் கொடுக்கப்பட வேண்டும்) | மொத்தம் வழங்கப்பட்டது | திங்களிறுதியில் சரக்கிருப்பு | ஒன்றின் விலை (Rate per Unit) ரூ. | மொத்த விற்பனைத் தொகை ரூ. | குறிப்பு |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | | .................. இத் திங்களில் வங்கியில் செலுத்தப் பட்டது ரூ...... கையிலுள்ள ரொக்கம் ரூ...... |
| | | | | | | | | | மொத்தம் .... | | | |

திங்கள் ஒரு முறை இவ் வேட்டிலுள்ள பதிவுகள் பேரேட்டுக் கணக்குகளில் எடுத்தெழுதப் பெறுகின்றன. ஒவ்வொரு கிளையின் கூட்டல் தொகை அக் கிளைக் கணக்கில் பற்று வைக்கப் படும். கிளைகட்கு அனுப்பிய சரக்கு எனும் கணக்கில் எல்லா கிளைகட்கும் அத் திங்களில் அனுப்பிய சரக்கின் மொத்தத் தொகைக்கு வரவு வைக்கப்படும். அதாவது :

(1) கிளைக்கு சரக்கு அனுப்பும்பொழுது கிளைக் கணக்கில் பற்றும், கிளைக்கு அனுப்பிய சரக்குக் கணக்கில் வரவும் வைக்கப் படும்.

(2) கிளையின் செலவுக்காக கிளைக்குக் காசோலை அல்லது ரொக்கம் அனுப்பும்பொழுது, கிளைக் கணக்கில் பற்றும், வங்கி அல்லது ரொக்கக் கணக்கில் வரவும் வைக்கப்படும்.

(3) கிளையிலிருந்து பணம் பெறும்பொழுது வங்கி அல்லது ரொக்கக் கணக்கில் பற்றும், கிளைக் கணக்கில் வரவும் வைக்கப் படும். ஆண்டு இறுதியில் அல்லது ஒவ்வொரு குறிப்பிட்ட காலத்தின் இறுதியில் கிளையிலுள்ள இறுதிச் சரக்கிருப்பையும், ரொக்கத்தையும் தலைமை அலுவலகத்தின் கணக்கில் கொண்டு வரவேண்டும். இதற்குக் கிளைச் சரக்கிருப்புக் கணக்கிலும், கிளை ரொக்கக் கணக்கிலும் பற்று வைக்கப்படும்; இவற்றின் மொத்தத் தொகைக்குக் கிளைக் கணக்கில் வரவு வைக்கப்படும். கீழ்க்கண்ட வாறு இப் பதிவு இருக்கும்.

| | |
|---|---|
| கிளைச் சரக்கிருப்புக் கணக்கு | ப |
| கிளை ரொக்கக் கணக்கு | ப |
| கிளைக் கணக்கு | |

இப் பதிவையும் செய்தபிறகு இலாப-நட்டத்தை உணர்தல் வேண்டும். இதனை இக் கிளைக் கணக்கு உணர்த்தும் தலைமை அலுவலகத்தின் பொது இலாப-நட்டத்திற்கு இதனை மாற்ற வேண்டும். இலாபம் ஏற்பட்டிருப்பின், கிளைக் கணக்கில் பற்றும், பொது இலாப-நட்டக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். நட்டம் ஏற்பட்டிருப்பின், பொது இலாப-நட்டக் கணக்கில் பற்றும், கிளைக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும். இந் நிலையில் அவ் வாண்டுக்குக் கிளைக் கணக்கு முற்றுப்பெறும்.

ஏதேனும் பொருள் உற்பத்தியில் ஈடுபட்டிருக்கும் தொழில் அமைப்பாயின் கிளைக்கு அனுப்பிய சரக்குக் கணக்கை வாணிகக் கணக்கிற்கு எடுத்துச் செல்லவேண்டும். அதாவது, கிளைக்கு

அனுப்பிய சரக்குக் கணக்கில் பற்றும், வாணிகக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். அவ்வாறு இல்லாமல், பொருள்களை வாங்கி விற்கும் அமைப்பாயின், கிளைக்கு அனுப்பிய சரக்குக் கணக்கில் பற்றும், கொள்முதல் கணக்கில் வரவும் வைக்க வேண்டும். இவ்வாறு கிளைக்கனுப்பிய சரக்குக் கணக்கு முடிக்கப் பெறும்.

கிளைச் சரக்கிருப்புக் கணக்கும் கிளை ரொக்கக் கணக்கும் சொத்துகளாகும். எனவே, இவை தலைமையக இருப்புநிலைக் குறிப்பில் இடம்பெறும். அடுத்த ஆண்டின் தொடக்கத்தில், இக் கணக்குகள் கிளைக் கணக்கிற்கு மாற்றப்பட்டு முடிக்கப் பெறும். (அதாவது கிளைக் கணக்கில் பற்றும், இக் கணக்கு களில் வரவும் வைக்கவேண்டும்.)

மேலே விளக்கியவற்றைச் சுருக்கமாகக் குறிப்போமானல், கிளைக் கணக்கின் பற்றுப் பகுதியில் தொடக்கச் சரக்கிருப்பு, கிளைக்கு அனுப்பிய சரக்கு, கிளைச் செலவுகட்காக அனுப்பிய ரொக்கம் ஆகியவை காணப்பெறும். கிளைக் கணக்கின் வரவுப் பகுதியில் கிளையிலிருந்து பெற்ற ரொக்கம், கிளையிலுள்ள இறுதிச் சரக்கிருப்பு, கிளையிலுள்ள இறுதி ரொக்கம், கிளை திருப்பி அனுப்பிய சரக்கு ஆகியவை காணப்பெறும். இப்பொழுது கிளைக் கணக்கு இலாபம் அல்லது நட்டத்தை உணர்த்துகிறது.

## எடுத்துக்காட்டு 15

(1) கடலூரிலுள்ள தலைமை அலுவலகத்திற்கும் புதுவை யிலுள்ள தனது கிளைக்குமிடையேயான நடவடிக்கைகள் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவற்றிலிருந்து தலைமை அலு வலகத்தின் ஏடுகளில் கிளைக் கணக்கைத் தயாரிக்கவும்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1973 சனவரி — கிளையின் சரக்கிருப்பு | | — | ரூ. | 5,400 |
| ,, கிளையிலுள்ள சில்லறை ரொக்கம் | | — | ரூ. | 150 |
| 1973-ல் கிளைக்கு அனுப்பிய சரக்கு | | — | ரூ. | 20,500 |
| இவ்வாண்டில் கிளையிலிருந்து பெற்ற ரொக்கம் | | | ரூ. | 30,520 |
| கிளைக்கனுப்பிய காசோலைகள் | | | | |
| வாடகை .. | ரூ. 1,200 | | | |
| ஊதியம் .. | ரூ. 4,800 | | | |
| பிறசெலவுகள் .. | ரூ. 250 | | ரூ. | 6,250 |
| 1973 திசம்பர் 31-ல் கிளையின் சரக்கிருப்பு | | | ரூ. | 6,700 |
| ,, கிளையிலுள்ள சில்லறை ரொக்கம் | | | ரூ. | 180 |

விடை :

## தலைமையகத்தின் ஏடுகளில்
### புதுவைக் கிளைக் கணக்கு

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 சன. 1 | இருப்பு : சரக்கிருப்பு ரூ. 5,400; சில்லறை ரொக்கம் ரூ. 150 | | 5,550 | 1973 சன. 1 முதல் திச. 31 வரை | வங்கிக் க/கு .. | | 30,520 |
| 1973 சன. 1 முதல் திச. 31 வரை | கிளைக்கனுப்பிய சரக்கு .. | | 20,500 | திச. 31 | கிளைச் சரக்கிருப்பு .. | | 6,700 |
| ,, | வங்கி : வாடகை ரூ. 1,200; ஊதியம் ரூ. 4,800; பிற செலவுகள் ரூ. 250 | | 6,250 | ,, | கிளைச் சில்லறை ரொக்கம் .. | | 180 |
| திச. 31 | இலாப-நட்டக் க/கு— இலாபம் எடுத்துச் செல்லப்படுகிறது .. | | 5,100 | | | | |
| | | | 37,400 | | | | 37,400 |

## 2. ரொக்கத்திற்கும் கடனுக்கும் விற்கும் கிளைகள்

இவ் வகைக் கிளைகளும் கணக்குகள் அனைத்தையும் தலைமை அலுவலகத்திலேயே வைத்திருக்கின்றன. சில்லறை ரொக்க ஏட்டையும் அவ்வப்பொழுது தலைமை அலுவலகத்திற்கு அனுப்ப வேண்டிய சரக்கு அறிக்கைகளை மட்டும் கிளைகள் தயாரிக்க வேண்டியிருக்கும். ஆனால்,இவ் வகைக் கிளைகள் கடன்பேரிலும் சரக்கை விற்பதால், வாடிக்கையாளரின் (கடனாளிகளின்) கணக்கு களை எழுதிவர வேண்டியுள்ளன. ஆண்டின் இறுதியில் கிளைக் கடனாளியின் மொத்தத் தொகையைத் தலைமை அலுவலகத்திற்குக் கிளை தெரிவிக்கிறது. தலைமை அலுவலகத்தைப் பொருத்த வரை முதல் வகைக் கிளையைப் போன்றே இவ்வகைக் கிளைக்கும் கணக்குகளை எழுதிவரும். ஆனால், மேலே தயாரிக்கப்பட்ட பதிவுகளுடன் கிளைக் கடனாளிகளைக் கணக்குகளில் கொண்டுவர கூடுதலாக ஒரு பதிவு தேவைப்படுகிறது. ஆண்டின் தொடக்கத் திலிருந்த கிளைக் கடனாளிகளைக் கணக்கில் கொண்டுவர, கிளைக் கணக்கில் பற்றும், சென்ற ஆண்டிறுதியில் தோற்றுவித்த கிளைக் கடனாளியின் கணக்கில் வரவும் வைக்கப்பட்டு இரண்டாவது கணக்கு முடிக்கப்பெறும். நடப்பு ஆண்டின் இறுதியிலுள்ள கிளைக் கடனாளியின் தொகையைக் கணக்கில் கொண்டுவர, கிளைக் கடனாளியின் கணக்கில் பற்றும் கிளைக் கணக்கில் வரவும் வைக்கும். கிளைக் கடனாளியின் கணக்கு, கிளைச் சரக்குக் கணக்கு போன்றே சொத்து இனத்தைச் சேர்ந்தது ஆகும். எனவே, அக் கணக்கும் இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் காண்பிக்கப் பெறும்.

அடுத்த ஒரு கருத்தையும் இப்பொழுது உணர்தல் நலம். கிளையின் கடன் விற்பனை தலைமை அலுவலகக் கணக்கில் இடம் பெறாது. ரொக்க விற்பனையில் கிடைக்கும் ரொக்கத்தைக் கிளை யானது தனது தலைமை அலுவலகத்திற்கு அனுப்புமென்று கண்டோம். இது போன்றே, கடனாளிகளிடமிருந்து வசூலாகும் தொகையையும் அவ்வப்போழ்து தலைமை அலுவலகத்திற்கு அனுப்பிவிடும். தலைமை அலுவலகம் கிளையிலிருந்து பெறும் மொத்த ரொக்கத்தையே பதிவு செய்கிறது (ரொக்கக் கணக்கில் பற்றும், கிளைக் கணக்கில் வரவும் வைக்கப்படும்). அவ்வாறே கிளையானது தனது வாடிக்கையாளருக்கு அளிக்கும் தள்ளுபடி, பிற படிகள், கடனாளிகளிடமிருந்து திரும்பப்பெறும் சரக்கு, நீக்கப்பட்ட வராக்கடன் — போன்றவற்றைத் தலைமை அலுவலகம் கணக்கு எதிலும் பதியாது. கிளையின் கடனாளிகள் உண்டியல் களை ஏற்றுத் தந்திருப்பின், அவற்றைத் தலைமை அலுவலகத்திற்கு

அனுப்பும்பொழுது, தலைமை அலுவலகம் வரவுக்குரிய உண்டியல் கணக்கில் பற்றும், கிளைக் கணக்கில் வரவும் வைக்கும்.

### எடுத்துக்காட்டு 16

1973 சூன் 30-ல் முடியும் ஆண்டுக்கான கீழ்க்காணும் நடவடிக்கைகளிலிருந்து, குறிப்பேட்டுப் பதிவுகளையும் திருவாரூர்க் கிளையின் கணக்கினையும் அதன் தலைமை அலுவலகத்தின் ஏடுகளில் தயாரிக்கவும் :

| | | | ரூ. |
|---|---|---|---|
| 1972 சூலை 1-ல் | இருந்த சரக்கிருப்பு | | 7,500 |
| ,, | கிளைக் கடனாளிகள் | | 9,800 |
| ,, | கிளையின் சில்லறை ரொக்கம் | | 100 |
| | இவ்வாண்டில் கிளைக்கு அனுப்பிய சரக்கு | | 44,750 |
| | விற்பனை ரொக்கம் | ரூ. 31,640 | 57,340 |
| | கடன் விற்பனை | ரூ. 25,700 | |
| | கிளையிலிருந்து திரும்பி வந்த சரக்கு | | 750 |
| | கிளைக் கடனாளியிடமிருந்து வசூலானது | | 22,800 |
| | கடனாளிக்கு அளித்த தள்ளுபடி | | 200 |
| | கிளையின் செலவுகளுக்காகத் தலைமையகம் அனுப்பிய ரொக்கம் : | | |
| | ஊதியம் | ரூ. 6,000 | 9,050 |
| | வாடகை | ரூ. 2,400 | |
| | தொலைபேசிக் கட்டணம் | ரூ. 500 | |
| | பிறசெலவுகள் | ரூ. 150 | |
| 1973 சூன் 30-ல் | கிளைச் சரக்கிருப்பு | | 9,600 |
| ,, | கிளைச் சில்லறை ரொக்கம் | | 150 |

மேற்சொன்ன எடுத்துக்காட்டில், ஆண்டிறுதியில் கிளைக் கடனாளிகளின் தொகை கொடுக்கப்படவில்லை. குறிப்புக் கடனாளிகள் கணக்கு (Memorandum Debtors A/c) தயாரித்து, இத் தொகையை அறியலாம்.

**குறிப்புக் கடனாளிகள் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | இருப்பு கீ/கொ .. | | 9,800 | | வங்கி .. | | 22,800 |
| | கடன் விற்பனை .. | | 25,700 | | தள்ளுபடி .. | | 200 |
| | | | | | இருப்பு கீ/இ .. | | 12,500 |
| | | | 35,500 | | | | 35,500 |

இப்பொழுது குறிப்பேட்டுப் பதிவுகளையும் பிற பேரேட்டுக் கணக்குகளையும் தயார் செய்யலாம்.

## தலைமையகத்தின் ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 1972 சூலை 1 | திருவாரூர்க் கிளைக் க/கு ப | | 17,400 | |
| | திருவாரூர்க் கிளைச் சரக்கிருப்புக் க/கு | | | 7,500 |
| | திருவாரூர்க் கிளைக் கடனாளிகள் க/கு | | | 9,800 |
| | திருவாரூர்க் கிளைச் சில்லறை ரொக்கக் க/கு | | | 100 |
| | (திருவாரூர்க் கிளையின் தொடக்கச் சரக்கிருப்பு, கடனாளிகள், சில்லறை ரொக்கம் முதலியவற்றைக் கிளைக் கணக்கிற்குக் கொண்டுவர.) | | | |
| 1972 சூலை 1 முதல் 1973 சூன் 30 வரை | திருவாரூர்க் கிளைக் க/கு ப | | 44,750 | |
| | திருவாரூர்க் கிளைக்கு அனுப்பிய சரக்குக் க/கு | | | 44,750 |
| | (கிளைக்கு அனுப்பிய சரக்கு.) | | | |
| ,, | வங்கிக் க/கு ப | | 54,440 | |
| | திருவாரூர்க் கிளை க/கு | | | 54,440 |
| | (ரொக்க விற்பனை ரூ. 31,640-ம், கடனாளியிடம் வசூலான ரூ. 22,800-ம் பெற்றது.) | | | |
| ,, | கிளைக்கு அனுப்பிய சரக்குக் க/கு ப | | 750 | |
| | திருவாரூர்க் கிளைக் க/கு | | | 750 |
| | (கிளை திருப்பி அனுப்பிய சரக்கு.) | | | |

குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 1972 சூலை 1 முதல் 1973 சூன் 30 வரை | திருவாரூர்க் கிளைக் க/கு ப | | 9,050 | |
| | வங்கிக் க/கு | | | 9,050 |
| | (கிளைக்காக ஏற்ற கீழ்க் கண்ட செலவுகள்— ஊதியம் ரூ. 6,000 வாடகை ரூ. 2,400 தொலைபேசிக் கட்டணம் ரூ. 500 பிறசெலவுகள் ரூ. 150) | | | |
| 1973 சூன் 30 | திருவாரூர்க் கிளைச் சரக்கிருப்புக் க/கு ப | | 9,600 | |
| | திருவாரூர்க் கிளைக் கடனாளிகள் க/கு ப | | 12,500 | |
| | திருவாரூர்க் கிளைச் சில்லறை ரொக்கக் க/கு ப | | 150 | |
| | திருவாரூர்க் கிளைக் க/கு | | | 22,250 |
| | (கிளையின் இறுதிச் சரக் கிருப்பையும், கடனாளி களையும், சில்லறை ரொக்கத்தையும் கிளைக் கணக்கிற்குக் கொண்டு வர.) | | | |
| ,, | திருவாரூர்க் கிளைக் க/கு ப | | 6,240 | |
| | இலாப-நட்டக் க/கு | | | 6,240 |
| | (திருவாரூர்க் கிளையின் இலாபத்தைப் பொது இலாப-நட்டக் கணக்கிற்குக் கொண்டுவர.) | | | |

பற்று **திருவாரூர்க் கிளைக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 | | | | 1972 | | | |
| ஜூலை 1 | இருப்பு : | | | ஜூலை 1 | வங்கி : | | |
| | சரக்கிருப்பு .. | | 7,500 | முதல் | | | |
| ,, | கிளைக் கடனாளிகள் .. | | 9,800 | 1973 | ரொக்க | | |
| ,, | கிளைச் சில்லறை ரொக்கம் .. | | 100 | ஜூன் 30 | விற்பனை ரூ. 31,640 | | |
| | | | | வரை | கடனாளிகளிடம் | | |
| ஜூலை 1 | | | | | வசூலானது ரூ. 22,800 | | 54,440 |
| முதல் | கிளைக்கனுப்பிய | | | | | | |
| 1973 | சரக்குக் க/கு .. | | 44,750 | ,, | கிளைக்கனுப்பிய சரக்குக் | | |
| ஜூன் 30 | | | | | க/கு— திருப்பம் .. | | 750 |
| வரை | | | | | | | |
| | வங்கி : | | | 1973 | | | |
| | ஊதியம் ரூ. 6,000 | | | ஜூன் 30 | கிளைச் சரக்கிருப்பு .. | | 9,600 |
| | வாடகை ரூ. 2,400 | | | | | | |
| | தொலைபேசிக் | | | ,, | கிளைக் கடனாளிகள் .. | | 12,500 |
| | கட்டணம் ரூ. 500 | | | | | | |
| | பிற செலவுகள் ரூ. 150 | | | ,, | கிளைச் சில்லறை ரொக்கம் .. | | 150 |
| 1973 | | | 9,050 | | | | |
| ஜூன் 30 | இலாப-நட்டக் க/கு— | | | | | | |
| | இலாபம் மாற்றப்படுகிறது | | 6,240 | | | | |
| | | | 77,440 | | | | 77,440 |

## கிளைச் சரக்கிருப்புக் கணக்கு

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 சூலை 1 | இருப்பு கீ/கொ .. | | 7,500 | 1972 சூலை 1 | திருவாரூர்க் கிளைக் க/கு—மாற்றம் .. | | 7,500 |
| 1973 சூன் 30 | திருவாரூர்க் கிளைக் க/கு .. | | 9,600 | 1973 சூன் 30 | இருப்பு கீ/இ .. | | 9,600 |
| 1973 சூலை 1 | இருப்பு கீ/கொ .. | | 9,600*[1] | | | | |

## கிளைக் கடனாளிகள் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 சூலை. 1 | இருப்பு கீ/கொ | | 9,800 | 1972 சூலை. 1 | திருவாரூர்க் கிளைக் க/கு— மாற்றம் | | 9,800 |
| 1973 சூன் 30 | திருவாரூர்க் கிளைக் க/கு | | 12,500 | 1973 சூன் 30 | இருப்பு கீ/இ | | 12,500 |
| 1973 சூலை 1 | இருப்பு கீ/கொ | | 12,500*[2] | | | | |

## கிளைச் சில்லறை ரொக்கக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 சூலை 1 | இருப்பு கீ/கொ | | 100 | 1972 சூலை 1 | திருவாரூர்க் கிளைக் க/கு—மாற்றம் | | 100 |
| 1973 சூன் 30 | திருவாரூர்க் கிளைக் க/கு | | 150 | 1973 சூன் 30 | இருப்பு கீ/இ | | 150 |
| 1973 சூலை 1 | இருப்பு கீ/கொ | | 150*[3] | | | | |

*1,2,3 : இந்த இருப்புக்கள் நடப்பு ஆண்டு இருப்புநிலைக் குறிப்பில் இடம்பெறும்; அடுத்த ஆண்டுத் தொடக்கத்தில் அவை திருவாரூர்க் கிளைக் கணக்கிற்கு மாற்றப்பட்டு முடிக்கப்பெறும்.

## கிளைக்கனுப்பிய சரக்குக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 சூலை 1 முதல் 1973 சூன் 30 வரை | திருவாரூர்க் கிளைக் க/கு—திருப்பம் | | 750 | 1972 சூலை 1 முதல் 1973 சூன் 30 வரை | திருவாரூர்க் கிளைக் க/கு | | 44,750 |
| | வாணிகக் க/கு—மாற்றம் | | 44,000 | | | | |
| | | | 44,750 | | | | 44,750 |

குறிப்பு :

தலைமையகம் உற்பத்திப் பணியிலில்லாமல், வாணிகத்தில் ஈடுபட்டிருப்பின், கிளைக்கனுப்பிய சரக்குக் கணக்கை ஆண்டிறுதியில் வாணிகக் கணக்கிற்கு மாற்றுவதற்கு மாருகக் கொள்முதல் கணக்கிற்கு எடுத்துச் செல்லவேண்டும்.

### 3. விற்பனை விலையில் கிளைக்குச் சரக்கு அனுப்புதல் (Goods Invoiced to Branch at Selling Price)

தலைமையகம் பொதுவாகச் சரக்கைக் கிளைக்கு அடக்கவிலையில் தான் அனுப்பும் என்று கண்டோம். காரணம், கிளைகளுக்கு அனுப்பும் சரக்கை விற்பனை என எடுத்துக்கொள்வது தவறு. விற்பனை ஆகுமிடம் ஒரு இடத்திலிருந்து பிறிதொரு இடத்திற்கு மாற்றப்படுகிறது. எனினும், சில நிறுவனங்கள் தங்கள் கிளைகளுக்குச் சரக்கினை அடக்கவிலையில் குறிப்பிட்ட சதவிகிதம் கூட்டி அனுப்புகின்றன. அல்லது கிளை எந்த விலைக்கு விற்க வேண்டுமோ அந்த விலையில் சரக்கை அனுப்புகின்றன. இவற்றின் நோக்கங்கள் இரண்டு :

(1) கிளை எவ்வளவு இலாபம் ஈட்டுகிறது என்பதைக் கிளை உணரக் கூடாது என்று தலைமையகம் விரும்பலாம். விற்பனை விலையில் சரக்கு அனுப்பப்படுவதால், கிளையில் எவ்வளவு இலாபம் ஏற்பட்டுள்ளது என்பதைக் கிளையில் பணிபுரிபவர் அறியும் வாய்ப்பு இல்லை. அடக்கவிலை தலைமையகத்திற்கு மட்டுந்தான் தெரியும். ஆதலால், அது மட்டுமே கிளையின் உண்மையான இலாப-நட்டத்தினை அறியமுடியும்.

(2) முக்கியமான நோக்கம், கிளையிலுள்ள சரக்கிருப்பினைச் சிறந்த முறையில் கண்காணிப்பதாகும். பலவகையான பொருள்களில் கிளை வணிகம் செய்யும்பொழுது ஒவ்வொருவகைச் சரக்கிருப்பையும் கண்காணித்தல் இயலாததாக இருக்கும். இப்பொழுது சரக்கு அனைத்தும் விற்பனை விலையில் கிளைக்கு அனுப்பப் படுவதால், கிளையில் இருக்கவேண்டிய சரக்கை எளிதாக அறிய முடியும். எடுத்துக்காட்டாக, விற்பனை விலையில் தலைமையகம் கிளைக்கு ரூ. 50,000 மதிப்புள்ள சரக்கினை அனுப்புவதாகக் கொள்வோம். இவற்றில் ரூ. 5,000 மதிப்புள்ள சரக்கைக் கிளை திருப்பி அனுப்பிவிட்டதாகவும், ரூ. 30,000 மதிப்புள்ள சரக்கை விற்றுவிட்டதாகவும் கொண்டால், கிளையில் இருக்கவேண்டிய சரக்கு ரூ. 15,000 ஆகும். [ரூ. 50,000–(5,000+30,000)]. இப்பொழுது கிளையினிடம் சரக்கு அறிக்கையைத் தருமாறு தலைமையகம் வேண்டும். கிளையிலுள்ள சரக்கு ஒவ்வொரு வகையிலும் எவ்வளவு இருக்கிறது என்ற விவரத்தை இச் சரக்கு அறிக்கையில் கிளை கொடுக்கிறது. பொருளின் விற்பனை விலையைத் தலைமையகம் அறியுமாதலால், கிளையிலுள்ள மொத்த சரக்கிருப்பின் மதிப்பை உணரலாம். இது ரூ. 15,000 ஆக மதிப்பிடப்படின், இருக்கவேண்டிய சரக்கிருப்பு கிளையினிடத்தில் இருக்கிறதென்பதாகப் பொருள். அவ்வாறின்றிக் கிளையிலுள்ள

சரக்கிருப்பின் மதிப்பு ரூ. 10,000 ஆகக் கொண்டால், ரூ. 5,000 பெறுமான சரக்கு கிளையில் இல்லையென்பது புலனாகும். இதன் காரணத்தை இப்பொழுது ஆயலாம். இவ்வாறு, எந்த குறிப்பிட்ட நாளிலும் கிளையில் இருக்கவேண்டிய சரக்கைச் செவ்விதே கட்டுப்படுத்த விற்பனை விலையில் சரக்கு அனுப்புதல் துணைபுரிகிறது.

கிளையில் சரக்குகள் சேதமுற்றிருப்பின் அல்லது பழுதாகியிருப்பின் அதுபற்றிய விவரத்தைக் கிளை தலைமையகத்திற்கு அறிவிக்கும். இவை ஓரளவிற்குள் இருக்குமானால் அதனை ஏற்றுக் கொள்ளும். இத் தொகையைக் கிளைச் சரக்கிருப்புத் தொகையிலிருந்து இப்பொழுது தலைமையகம் கழித்துவிடும்.

ஒவ்வொரு கிளையிலும் இருக்கவேண்டிய சரக்கிருப்பை அறிவதற்காகக் குறிப்புக் கிளைச் சரக்கிருப்புக் கணக்கு என்பதைத் தயாரிக்க வேண்டும்.

**எடுத்துக்காட்டு :**

சென்னையிலுள்ள தலைமையகம் கல்கத்தாவிற்கு விற்பனை விலையில் சரக்கு அனுப்புவதாகக் கொள்வோம். அதன் நடவடிக்கைகள் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.

| | | ரூ. |
|---|---|---|
| 1973 | ஜூலை 1-ல் கல்கத்தாவிலிருந்த தொடக்கச் சரக்கிருப்பு | 12,800 |
| | ஆக. 20. கல்கத்தா கிளைக்குச் சரக்கு அனுப்பியது | 17,500 |
| | செ. 2. கல்கத்தா கிளை திருப்பி அனுப்பிய சரக்கு | 3,300 |
| | செ. 28. கல்கத்தா கிளைக்குச் சரக்கு அனுப்பியது | 7,200 |
| | திச. 31. வாடிக்கையாளர்கள் கிளைக்குத் திருப்பி அனுப்பிய சரக்கு | 500 |
| ,, | விற்பனை : ரொக்கம் ரூ. 12,340; கடன் ரூ. 16,610 = | 28,950 |
| ,, | சேதமுற்று வீணாகிவிட்ட சரக்கு (தலைமையகம் இசைவு அளித்துள்ள கடித எண் ........). | 150 |

இவ் விவரங்களிலிருந்து குறிப்புச் சரக்கிருப்புக் கணக்கு தயாரிப்பதின்மூலம் கல்கத்தா கிளையில் இருக்க வேண்டிய சரக்கிருப்பை உணர முடியும்.

பற்று **குறிப்புச் சரக்கிருப்புக் கணக்கு** (Memorandum Stock Account) வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 | | | | 1971 | | | |
| சூலை 1 | தொடக்கச் சரக்கிருப்பு | | 12,800 | செப். 2 | கிளைக்கனுப்பிய சரக்கு— | | |
| ஆக. 20 | கிளைக்கனுப்பிய சரக்கு | | 17,500 | | திருப்பம் | | 3,300 |
| செப். 28 | கிளைக்கனுப்பிய சரக்கு | | 7,200 | சூலை 1 | | | |
| திச. 31 | வாடிக்கையாளர்கள் | | | முதல் | | | |
| | திருப்பியனுப்பிய | | | திச. 31 | | | |
| | சரக்கு | | 500 | வரை | விற்பனை : | | |
| | | | | | ரொக்கம் ரூ. 12,340 | | |
| | | | | | கடன் ரூ. 16,610 | | 28,950 |
| | | | | ,, | சேதமுற்ற சரக்கு (தலைமையகமடல் எண் ......படி) | | 150 |
| | | | | திச. 31 | இருப்பு கீ/இ | | 5,600 |
| | | | 38,000 | | | | 38,000 |
| 1974 | | | | | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 5,600 | | | | |

திசம்பர் 31-ல் கல்கத்தா கிளையில் விற்பனை விலை அடிப்படையில் இருக்கவேண்டிய சரக்கிருப்பு ரூ. 5.600 என்று இக் குறிப்புக் கணக்கு உணர்த்துகிறது. இக் கிளையிலிருந்து பெறும் சரக்கு அறிக்கையின் துணைகொண்டு உணரும் சரக்கிருப்பின் மதிப்பு இதே தொகையாகத்தான் இருக்கவேண்டும். இவ்வாறு கிளையிலுள்ள சரக்கிருப்பு சிறந்த முறையில் கட்டுப்படுத்தப் படுகிறது.

மேலே விளக்கப்பட்ட குறிப்புச் சரக்கிருப்புக் கணக்கு ஒவ்வொரு கிளைக்கும் தனித்தனியாக வைத்திருக்கவேண்டும். இவ்வகைக் கணக்குகள் **பேரேட்டுக் கணக்குகளாகக் கருதப்படமாட்டா.** இக் கணக்குகளில் பதிவுகள் அனைத்தும் விற்பனை விலையில் செய்யப்படுகின்றன. கிளைகள் தங்கள் விருப்பம்போல் விலை வைத்து விற்கக்கூடாது. கிளைக்கு அனுப்பும் இடாப்பில் குறிப்பிடப்பட்டுள்ள விலையில்தான் கிளைகள் விற்கவேண்டும். அப்பொழுது தான் கிளைச் சரக்கிருப்பைக் கட்டுப்படுத்த முடியும்.

## இம்முறையில் கணக்குகளைப் பதிதல்

கிளைகள் கடனுக்குச் சரக்கு விற்பதால் கடனாளிகளின் பேரேட்டை அவை வைத்திருக்கும். அவ்வப்பொழுது தலைமையகத்திற்குக் கிளைகள் ஏற்ற செலவு விவரங்களையும் கையிலுள்ள சரக்கிருப்பையும் கடனாளிகளிடம் நிலுவையிலுள்ள தொகையையும் அறிவிக்கும். தலைமையகம் இவற்றின் துணை கொண்டு தனது பேரேட்டுக் கணக்குகளில் வேண்டிய பதிவுகளைச் செய்யும். தலைமையகமும் விற்பனை விலையில் பதிவுகள் செய்தாலும் ஆண்டின் இறுதியில் உண்மையான இலாப-நட்டத்தை உணர இவற்றைச் சரிக்கட்டவேண்டும். இவ்வாறு கிளையிலுள்ள இறுதிச் சரக்கிருப்பையும் விற்பனை விலையிலேயே மதிப்பிடினும், அடக்க விலைக்கும், விற்பனை விலைக்கும் உள்ள வேறுபாட்டுத் தொகைக்குப் பின்னர்ச் சரிக்கட்டவேண்டும். கீழ்க்கண்டவாறு பதிவுகள் செய்யப்படுகின்றன.

(1) கிளைக்குச் சரக்கு அனுப்பும்பொழுது இடாப்பு விலையில் (Invoice Price) கிளைக் கணக்கில் பற்றும், கிளைக்கு அனுப்பிய சரக்குக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(2) ஆண்டிறுதியில் கிளையிலுள்ள சரக்கிருப்பினை இடாப்பு விலையில் மதிப்பிட்டுக் கணக்கில் கொண்டுவர, கிளைச் சரக்கிருப்புக் கணக்கில் பற்று வைத்து, கிளைக் கணக்கில் வரவு வைக்கவேண்டும்.

(3) கிளைக்கு அனுப்பிய சரக்குக் கணக்கை அடக்கவிலையில் கொண்டுவர தேவையான சரிக்கட்டுதலை இப்பொழுது செய்ய வேண்டும். இடாப்பு விலைக்கும், அடக்க விலைக்கும் உள்ள வேற்றுமைத் தொகையளவில் கிளைக்கு அனுப்பிய சரக்குக் கணக்கில் பற்றும், கிளைக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(4) இவ்வாறே கிளையின் இறுதிச் சரக்கிருப்பையும் சரிக்கட்ட, சரக்கிருப்பின் இடாப்பு மதிப்பிற்கும், அடக்க மதிப்பிற்குமுள்ள வேற்றுமைத் தொகைக்கு, கிளைக் கணக்கில் பற்றும் கிளைச் சரக்கிருப்புக் காப்புக்கணக்கில் (Branch Stock Reserve A/C) வரவும் வைக்க வேண்டும்.

கிளையில் தொடக்கச் சரக்கிருப்பு இருப்பதாகக் கொண்டால், அத் தொடக்கச் சரக்கிருப்பு இடாப்பு விலையில்தான் கிளைக் கணக்கின் பற்றுப் பக்கத்தில் எழுதப்பட்டிருக்கும். இதனையும் சரிக்கட்ட வேண்டும். இதற்குத் தொடக்கச் சரக்கிருப்பின் இடாப்பு விலைக்கும் அடக்க விலைக்கும் உள்ள வேற்றுமைத் தொகைக்குச் சென்ற ஆண்டிறுதியில் தோற்றுவிக்கப்பட்ட சரக்கிருப்புக் காப்புக் கணக்கில் பற்றும், கிளைக் கணக்கில் வரவும் வைத்து, முந்தைய கணக்கை முடிக்கலாம்.

கிளைக்குச் சரக்கு அனுப்புதல், கிளையின் செலவுகட்குக் காசோலைகள் அனுப்புதல், கிளை தலைமையகத்திற்குப் பணம் அனுப்புதல், கிளை சரக்கைத் திருப்பி அனுப்புதல் போன்ற பலவகை நடவடிக்கைகட்கும் முன்னர் விளக்கியவாறே பதிவுகள் செய்ய வேண்டும்.

கிளைச் சரக்கிருப்பு சொத்து வகையைச் சார்ந்ததாகும். என்று முன்னரே கூறியுள்ளோம். விற்பனை விலையில் கணக்குகளைப் பதியும்பொழுது இறுதிச் சரக்கிருப்பானது விற்பனை விலையின் அடிப்படையில் மதிப்பிடப்பட்டதால், இதனையே இருப்புநிலைக் குறிப்பில் காட்டுதல் தவறாகும். எனவே, இருப்புநிலைக் குறிப்பில் கிளைச் சரக்கிருப்புக் கணக்கிலிருந்து சரக்கிருப்புக் காப்புக் கணக்கைக் கழித்துக் காட்டவேண்டும்.

**எடுத்துக்காட்டு 17**

திருச்சி நாதன் கம்பெனி 1–1–1972-ல் கோவையில் தனது கிளை ஒன்றை அமைத்தது. அடக்கவிலை மீது 50 சதவீதம்

கூட்டி சரக்கைக் கிளைக்கு அனுப்பியது. 1972, 1973ஆம் ஆண்டிற்கான நடவடிக்கைகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

| | 1972 | 1973 |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| கிளைக்கு அனுப்பிய சரக்கு .. | 42,000 | 63,000 |
| ரொக்க விற்பனை .. | 20,600 | 20,400 |
| கடன் விற்பனை .. | 16,750 | 36,600 |
| கடனாளியிடம் வசூலித்தது .. | 9,500 | 28,850 |
| கிளைச் செலவுகட்காக திருச்சியிலிருந்து அனுப்பப்பட்ட ரொக்கம் : | | |
| வாடகை .. | 1,200 | 1,440 |
| ஊதியம் .. | 3,600 | 4,800 |
| பிற செலவுகள் .. | 450 | 600 |
| கடனாளிகட்கு அளித்த தள்ளுபடி .. | 150 | 200 |
| கிளையிலிருந்து திரும்பி வந்த சரக்கு (விற்பனை விலையில்) .. | — | 2,400 |
| கடனாளிகள் கிளைக்குத் திருப்பி அனுப்பிய சரக்கு .. | 600 | 900 |
| வராக் கடன் நீக்கியது .. | 300 | 350 |
| தி. 31-ல் கிளையிலிருந்த சரக்கிருப்பு .. | 5,100 | 9,420 |
| ,, கிளையிலிருந்த ரொக்கம் .. | 200 | 140 |
| ,, கிளைக் கடனாளிகள் .. | 6,200 | 12,500 |

இவற்றிலிருந்து திருச்சியிலுள்ள தலைமையகத்தின் ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகளையும், கணக்குகளையும் தருக.

விடை :

## திருச்சி தலைமையகத்தின் ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 1972 சன. 1 முதல் திச. 31 வரை | கோவைக் கிளைக் க/கு ப | | 42,000 | |
| | கோவைக் கிளைக்கு அனுப்பிய சரக்குக் க/கு | | | 42,000 |
| | (1972-ல் விற்பனை விலையில் சரக்கு அனுப்பியது.) | | | |
| ,, | வங்கிக் க/கு ப | | 30,100 | |
| | கோவைக் கிளைக் க/கு | | | 30,100 |
| | (கிளையிலிருந்து ரொக்க விற்பனை தொகையையும் கடனாளியிடம் தண்டிய தொகையையும் பெற்றது 20,600+9,500) | | | |
| ,, | கோவைக் கிளைக் க/கு ப | | 5,250 | |
| | வங்கிக் க/கு | | | 5,250 |
| | (கிளைச் செலவுகட்கு அனுப்பியது வாடகை ரூ. 1,200, ஊதியம் ரூ. 3,600, பிற செலவுகள் ரூ. 450.) | | | |
| திச. 31 | கோவைக் கிளைக் கடனாளியின் க/கு ப | | 6,200 | |
| | கோவைக் கிளைச் சரக்கிருப்புக் க/கு ப | | 5,100 | |
| | கோவைக் கிளைச் சில்லறைக் க/கு ப | | 200 | |
| | கோவைக் கிளைக் க/கு | | | 11,500 |
| | (ஆண்டிறுதியில் கிளையிலுள்ள சரக்கிருப்பு, கடனாளி, சில்லறை ரொக்கம் இவற்றைக் கணக்கில் கொண்டுவர.) | | | |

குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 1972 திச. 31 | கோவைக் கிளைக்கு அனுப்பிய சரக்குக் க/கு ப | | 14,000 | |
| | கோவைக் கிளைக் க/கு | | | 14,000 |
| | (கிளைக்கு அனுப்பிய சரக்கின் விற்பனை விலைக்கும், அடக்க விலைக்குமுள்ள வேற்றுமைத் தொகையைக் கணக்கில் கொண்டுவர.) | | | |
| ,, | கோவைக் கிளைக் க/கு ப | | 1,700 | |
| | கிளைச் சரக்கிருப்புக் காப்புக் க/கு* | | | 1,700 |
| | (கிளையின் இறுதிச் சரக்கிருப்பின் விற்பனை விலைக்கும், அடக்க விலைக்கும் உள்ள வேறுபட்ட தொகையைச் சரிகட்ட.) | | | |
| ,, | கோவைக் கிளைக் க/கு ப | | 6,650 | |
| | இலாப-நட்டக் க/கு | | | 6,650 |
| | (கோவைக் கிளையின் இலாபத்தைப் பொது இலாப-நட்டக் கணக்கிற்குக் கொண்டுவர.) | | | |
| ,, | கோவைக் கிளைக்கு அனுப்பிய சரக்குக் க/கு ப | | 28,000 | |
| | கொள்முதல் க/கு | | | 28,000 |
| | (கோவைக் கிளைக்கு அனுப்பிய சரக்குக் கணக்கின் இருப்பைக் கொள்முதல் கணக்கிற்கு மாற்ற. | | | |

*இந்தக் கணக்கு அடுத்த ஆண்டு இறுதியில் சரிக்கட்டுப் பதிவுமூலம் முடிக்கப்பெறும்.

## 1973ஆம் ஆண்டிற்கான குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 1973 சன. 1 | கோவைக் கிளைக் க/கு ப | | 11,500 | |
| | கோவைக் கிளைச் சரக்கிருப்புக் க/கு | | | 5,100 |
| | கோவைக் கிளைக் கடனாளிகள் க/கு | | | 6,200 |
| | கோவைக் கிளைச் சில்லறை ரொக்கக் க/கு | | | 200 |
| | (கோவைக் கிளையின் தொடக்கச் சரக்கிருப்பு, கடனாளிகள், சில்லறை ரொக்கம் இவற்றைக் கோவைக் கணக்கிற்குக் கொண்டுவர.) | | | |
| சன. 1 முதல் திச. 31 வரை | கோவைக் கிளைக் க/கு ப | | 63,000 | |
| | கோவைக் கிளைக்கு அனுப்பிய சரக்குக் க/கு | | | 63,000 |
| | (கோவைக் கிளைக்கு அனுப்பிய சரக்கு.) | | | |
| ,, | வங்கிக் க/கு ப | | 49,250 | |
| | கோவைக் கிளைக் க/கு | | | 49,250 |
| | (கோவைக் கிளையிலிருந்து ரொக்க விற்பனை ரூ. 20,400-ம், கடனாளியிடம் வசூலித்தது ரூ. 28,850-ம் பெற்றது.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விபரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1973 | | | ரூ. | ரூ. |
| சன. 1 முதல் திச. 31 வரை | கோவைக் கிளைக் க/கு ப | | 6,840 | |
| | வங்கிக் க/கு | | | 6,840 |
| | (கோவைக் கிளைக்கான செலவுகளை மேற்கொண்டது. விற்பனை ரூ. 1,440 ஊதியம் ரூ. 4,800 பிற செலவுகள் ரூ. 600). | | | |
| ,, | கோவைக் கிளைக்கு அனுப்பிய சரக்குக் க/கு ப | | 2,400 | |
| | கோவைக் கிளைக் க/கு | | | 2,400 |
| | (கோவைக் கிளை திருப்பி அனுப்பிய சரக்கு.) | | | |
| திச. 31 | கோவைக் கிளைச் சரக்கிருப்புக் க/கு ப | | 9,420 | |
| | கோவைக் கிளைக் கடனாளிகள் க/கு ப | | 12,500 | |
| | கோவைக் கிளைச் சில்லறை ரொக்கக் க/கு ப | | 140 | |
| | கோவைக் கிளைக் க/கு | | | 22,060 |
| | (கோவைக் கிளையின் இறுதிச் சரக்கிருப்பையும், கடனாளிகளையும், சில்லறை ரொக்கத்தையும் கிளைக் கணக்கிற்குக் கொண்டுவர) | | | |

குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1973 | | | ரூ. | ரூ. |
| திச. 31 | சரக்கிருப்புக் காப்புக் க/கு ப<br>கோவைக் கிளைக் க/கு<br>(தொடக்கச் சரக்கிருப்பில் ஏற்றிய கூடுதல் விலையைச் சரிக்கட்ட.) | | 1,700 | 1,700 |
| ,, | கோவைக் கிளைக்கு அனுப்பிய சரக்குக் க/கு ப<br>கோவைக் கிளைக் க/கு<br>[கிளைக்கு அனுப்பிய சரக்கில் (திருப்பம் போக) ஏற்றிய கூடுதல் விலையைச் சரிக்கட்ட.] | | 20,200 | 20,200 |
| ,, | கோவைக் கிளைக் க/கு ப<br>சரக்கிருப்புக் காப்புக் க/கு<br>(இறுதிச் சரக்கிருப்பில் ஏற்றிய கூடுதல் விலையைச் சரிக்கட்ட.) | | 3,140 | 3,140 |
| ,, | கோவைக் கிளைக் க/கு ப<br>பொது இலாப-நட்டக் க/கு<br>(கோவைக் கிளையின் இலாபத்தைப் பொது இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்ற.) | | 11,130 | 11,130 |
| ,, | கோவைக் கிளைக்கு அனுப்பிய சரக்குக் க/கு ப<br>கொள்முதல் க/கு<br>(கோவைக் கிளைக்கு அனுப்பிய சரக்குக் கணக்கில் இருப்பை ஆண்டிறுதியில் கொள்முதல் கணக்கிற்கு மாற்ற.) | | 40,400 | 40,400 |

**திருச்சி நாதன் கம்பெனி** (தலைமையகத்தின்) **ஏடுகளில்,**

**1972-ற்கான பேரேட்டுக் கணக்குகள்: கோவைக் கிளைக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 சன. 1 முதல் திச. 31 வரை | கோவைக் கிளைக்கு அனுப்பிய சரக்கு .. | | 42,000 | 1972 சன. 1 முதல் திச. 31 வரை | வங்கி : ரொக்க விற்பனை ரூ. 20,600 கடனாளிகளிடம் பெற்றது ரூ. 9,500 | | 30,100 |
| ,, | வங்கி : வாடகை ரூ. 1,200 ஊதியம் ரூ. 3,600 பிற செலவுகள் ரூ. 45,0 | | 5,250 | திச. 31 | கோவைக் கிளைக் கடனாளிகள் .. | | 6,200 |
| திச. 31 | சரக்கிருப்புக் காப்பு .. | | 1,700 | | கோவைக் கிளைச் சரக்கிருப்பு .. | | 5,100 |
| ,, | இலாப-நட்டக் க/கு— இலாபமாற்றம் .. | | 6,650 | | கோவைக்கிளைச் சில்லறை ரொக்கம் .. | | 200 |
| | | | | | கோவைக்கிளைக்கனுப்பிய சரக்கு—ஏற்றிய விலை .. | | 14,000 |
| | | | 55,600 | | | | 55,600 |

## கோவைக் கிளைக்கனுப்பிய சரக்குக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 | | | | 1972 | | | |
| திச. 31 | கோவைக் கிளைக் க/கு— ஏற்றியவிலை .. | | 14,000 | சன. 1 முதல் | | | |
| ,, | கொள்முதல் க/கு— மாற்றம் .. | | 28,000 | திச. 31 வரை | கோவைக் கிளைக் க/கு | | 42,000 |
| | | | 42,000 | | | | 42,000 |

## கோவைக் கிளைக் கடனாளிகள் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 | | | | 1972 | | | |
| திச. 31 | கோவைக் கிளை .. | | 6,200 | திச. 31 | இருப்பு கீ/இ .. | | 6,200 |
| 1973 | | | | 1973 | | | |
| சன. 1 | இருப்பு கி/கொ | | 6,200 | சன. 1 | கோவைக் கிளை— மாற்றம் | | 6,200 |

**கோவைக் கிளைச் சரக்கிருப்புக் கணக்கு**

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 திச. 31 | கோவைக்கிளை .. | | 5,100 | 1972 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 5,100 |
| 1973 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 5,100 | 1973 சன. 1 | கோவைக் கிளை—மாற்றம் | | 5,100 |

**கோவைக் கிளைச் சில்லறை ரொக்கக் கணக்கு**

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 திச. 31 | கோவைக் கிளை | | 200 | 1972 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 200 |
| 1973 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 200 | 1973 சன. 1 | கோவைக் கிளை—மாற்றம் .. | | 200 |

## சரக்கிருப்புக் காப்புக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 1,700 | 1972 திச.31 | கோவைக் கிளை—சரக் கிருப்பில் ஏற்றிய விலை .. | | 1,700 |
| 1973 சன. 1 | கோவைக் கிளை— மாற்றம் .. | | 1,700 | 1973 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 1,700 |

1972 திசம்பர் 31ஆம் நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பில் கீழ்க்கண்டவாறு சில கணக்குகள் தோன்றும்:

| பொறுப்புகள் | சொத்துகள் | | ரூ. |
|---|---|---|---|
| | கிளைக் கடனாளிகள் .. | | 6,200 |
| | தலைமையகச் சரக்கிருப்பு .. | | |
| | கிளைக் சரக்கிருப்பு | 5,100 | |
| | **கழி** : காப்பு | 1,700 | |
| | | | 3,400 |
| | கிளைச் சில்லறை ரொக்கம் .. | | 200 |

## 1973ஆம் ஆண்டிற்கான பேரேட்டுக் கணக்குகள்

பற்று **கோவைக் கிளைக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 சன. 1 | இருப்பு : கோவைக்கிளைச் சரக்கிருப்பு .. | | 5,100 | 1973 சன. 1 முதல் திச. 31 வரை | வங்கி : ரொக்க விற்பனை ரூ. 20,400 | | |
| | கோவைக் கிளைக் கடனாளிகள் .. | | 6,200 | | கடனாளிகளிடம் வசூலித்தது ரூ. 28,850 | | |
| | கோவைக் கிளைச் சில்லறை ரொக்கம் .. | | 200 | | | | 49,250 |
| சன. 1 முதல் திச. 31 வரை | கோவைக் கிளைக்கனுப்பிய சரக்கு .. | | 63,000 | ,, | கோவைக்கிளைக்கனுப்பிய சரக்குக் க/கு— திருப்பம் .. | | 2,400 |

## கோவைக் கிளைக் கணக்கு—(தொடர்ச்சி)

பற்று — வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| சன. 1 முதல் திச. 31 வரை | வங்கி : வாடகை ரூ. 1,440 ஊதியம் ரூ. 4,800 பிற செலவுகள் ரூ. 600 | | 6,840 | திச. 31 | கோவைக் கிளைச் சரக்கிருப்பு .. | | 9,420 |
| | | | | ,, | கோவைக் கிளைக் கடனாளிகள் .. | | 12,500 |
| | | | | ,, | கோவைக் கிளைச் சில்லறை ரொக்கம் .. | | 140 |
| ,, | சரக்கிருப்புக் காப்பு— இறுதிச் சரக்கிருப்பில் ஏற்றியவிலை .. | | 3,140 | ,, | சரக்கிருப்புக் காப்பு— தொடக்கச் சரக் கிருப்பில் ஏற்றியவிலை .. | | 1,700 |
| ,, | இலாப-நட்டக் க/கு— இலாப மாற்றம் .. | | 11,130 | ,, | கோவைக் கிளைக்கனுப்பிய.. சரக்கு—ஏற்றியவிலை | | 20,200 |
| | | | 95,610 | | | | 95,610 |

## கோவைக் கிளைக்கனுப்பிய சரக்குக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 சன. 1 முதல் திச. 31 வரை | கோவைக்கிளை—திருப்பம் . . | | 2,400 | 1973 சன. 1 முதல் திச.31 வரை | கோவைக்கிளை . . | | 63,000 |
| திச. 31 | கோவைக்கிளை— ஏற்றிய விலை . . | | 20,200 | | | | |
| | கொள்முதல்— மாற்றம் . . | | 40,400 | | | | |
| | | | 63,000 | | | | 63,000 |

### கோவைக் கிளைக் கடனாளிகள் கணக்கு

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 திச. 31 | கோவைக் கிளை .. | | 12,500 | 1973 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 12,500 |
| 1974 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 12,500 | | | | |

### கோவைக் கிளைச் சரக்கிருப்புக் கணக்கு

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 திச. 31 | கோவைக் கிளை | | 9,420 | 1973 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 9,420 |
| 1974 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 9,420 | | | | |

### கோவைக் கிளைச் சில்லறை ரொக்கக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 திச. 31 | கோவைக் கிளை .. | | 140 | 1973 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 140 |
| 1974 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 140 | | | | |

### சரக்கிருப்புக் காப்புக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 திச. 31 | இருப்பு கீ/இ | | 3,140 | 1973 திச. 31 | கோவைக் கிளை— இறுதிச் சரக்கில் ஏற்றியவிலை .. | | 3,140 |
| | | | | 1974 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 3,140 |

## சரக்கிருப்பு - கடனாளி முறை
## (Stock and Debtors System)

மேலே விளக்கிய முறையில் கிளைக் கணக்கு தன் கிளையில் ஏற்பட்ட இலாப-நட்டத்தை உணர்த்துகிறது. வேறு முறையிலும் இலாப-நட்டத்தை அறியமுடியும். இதனைச் சரக்கிருப்பு—கடனாளி முறை என்கிறோம். இம் முறையில் தலைமையகம் தனது ஏடுகளில் கிளைக் கணக்கை வைத்திருப்பதில்லை. இதற்கு மாறாகக் கிளையின் பலவகை நடவடிக்கைகளையும் பதியக் கீழ்க்கண்ட கணக்குகளை வைத்திருக்கும்.

(அ) கிளைச் சரக்கிருப்புக் கணக்கு;

(ஆ) கிளைக் கடனாளிகள் கணக்கு;

(இ) கிளைச் செலவுக் கணக்கு (Branch expenses a/c);

(ஈ) கிளைச் சரிக்கட்டுக் கணக்கு (Branch adjustment a/c) அல்லது கிளை இலாப-நட்டக் கணக்கு;

(உ) கிளைக்கு அனுப்பிய சரக்குக் கணக்கு.

இம் முறையில் தலைமையகம் தனது இடாப்பில் (Invoice) குறிப்பிட்டுள்ள விலையில்தான் கிளைகள் விற்கவேண்டும்.

**பதியும் முறை**

(1) கிளைக்குச் சரக்கு அனுப்பும்பொழுது, கிளைச் சரக்கிருப்புக் கணக்கில் பற்றும், கிளைக்கு அனுப்பிய சரக்குக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்(இடாப்பு விலையில்).

(2) கிளை தலைமையகத்திற்குச் சரக்கைத் திருப்பி அனுப்பும்பொழுது மேற்கண்ட பதிவை மாற்றிச் செய்யவேண்டும். அதாவது, கிளைக்கு அனுப்பிய சரக்குக் கணக்கில் பற்றும், கிளைச் சரக்கிருப்புக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(3) கிளைகளுக்காகத் தலைமையகம் செலவுகளை மேற்கொள்ளும்பொழுது, கிளைச் செலவுக் கணக்கில் பற்றும், வங்கி அல்லது ரொக்கக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(4) கிளை ரொக்கத்திற்கு விற்கும்பொழுது, வங்கி அல்லது ரொக்கக் கணக்கில் பற்றும், கிளைச் சரக்கிருப்புக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

கிளை, கடன்பேரில் விற்பனை செய்யும்பொழுது, கிளைக் கடனாளிக் கணக்கில் பற்றும், கிளை சரக்கிருப்புக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(5) கிளை, கடனாளியிடம் தண்டிய (வசூலித்த) தொகையைக் கிளை, தலைமையகத்திற்கு அனுப்பும்பொழுது, வங்கி அல்லது ரொக்கக் கணக்கில் பற்றும், கிளைக் கடனாளிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(6) கிளை, கடனாளிகட்குத் தள்ளுபடி அளிக்கும்பொழுது அல்லது வராக்கடன் நீக்கும்பொழுது கிளைச் செலவுக் கணக்கில் பற்றும், கிளைக் கடனாளிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(7) கிளைக்கு அனுப்பிய சரக்குக் கணக்கின் விற்பனை விலைக்கும், அடக்க விலைக்கும் உள்ள வேற்றுமைத் தொகையைச் சரிக்கட்ட, கிளைக்கு அனுப்பிய சரக்குக் கணக்கில் பற்றும் கிளைச் சரிக்கட்டுக் கணக்கில் (Branch adjustment a/c) வரவும் வைக்கவேண்டும்.

(8) சரக்கு சேதமுற்றிருப்பின் அல்லது வீணாகியிருப்பின், கிளைச் சரிக்கட்டுக் கணக்கில் பற்றும், கிளைச் சரக்கிருப்புக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(9) கிளையிலுள்ள இறுதிச் சரக்கிருப்பின் விற்பனை விலைக்கும் அடக்கவிலைக்குமுள்ள வேற்றுமைத் தொகையைச் சரிக்கட்ட, கிளைச் சரிக்கட்டுக் கணக்கில் பற்றும், சரக்கிருப்புக் காப்புக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

இச் சரக்கிருப்புக் காப்புக் கணக்கு அடுத்த ஆண்டின் தொடக்கத்தில் கிளைச் சரிக்கட்டுக் கணக்கிற்கு மாற்றப்பெறும். அப்பொழுது சரக்கிருப்புக் காப்புக் கணக்கில் பற்றும், கிளைச் சரிக்கட்டுக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(10) கிளைச் செலவுகளைக் கிளைச் சரிக்கட்டுக் கணக்கிற்கு இப்பொழுது மாற்றவேண்டும். இதற்குக் கிளைச் சரிக்கட்டுக் கணக்கில் பற்றும், கிளைச் செலவுக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

(11) கிளைச் சரிக்கட்டுக் கணக்கிலுள்ள இருப்பானது இலாபம் அல்லது நட்டமாகக் கொள்ளப்படும். இது இலாபத்தை

உணர்த்தின், இதனைப் பொது இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்ற வேண்டும். இதற்குக் கிளைச் சரிக்கட்டுக் கணக்கில் பற்றும், பொது இலாப-நட்டக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

அவ்வாறின்றி இது நட்டத்தை உணர்த்துமானால், பொது இலாபநட்டக் கணக்கில் பற்றும், கிளைச் சரிக்கட்டுக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(12) கிளைக்கு அனுப்பிய சரக்குக் கணக்கிலுள்ள இருப்பை வாணிக நிறுவனமாயின் கொள்முதல் கணக்கிற்கும், தொழில் நிறுவனமாயின் வாணிகக் கணக்கிற்கும் மாற்றவேண்டும். இதற்குக் கிளைக்கு அனுப்பிய சரக்குக் கணக்கில் பற்றும், கொள்முதல் அல்லது வாணிகக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

### எடுத்துக்காட்டு 18

எடுத்துக்காட்டு 15-ல் கொடுக்கப்பட்ட 1973ஆம் ஆண்டிற்குரிய நடவடிக்கைகளைக் 'கடனுளிகள்—சரக்கிருப்பு முறையில்' குறிப்பேட்டில் பதிந்து, பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்கவும்.

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1973 | | | ரூ. | ரூ. |
| திச. 31 | கோவைக் கிளைச் சரக்கிருப்புக் க/கு ப | | 63,000 | |
| | கோவைக் கிளைக்கனுப்பிய சரக்குக் க/கு | | — | 63,000 |
| | (கிளைக்கனுப்பிய சரக்கு) | | | |
| ,, | வங்கிக் க/கு ப | | 20,400 | |
| | கோவைக் கிளைச் சரக்கிருப்புக் க/கு | | | 20,400 |
| | (கிளையின் ரொக்க விற்பனை) | | | |
| ,, | கோவைக் கிளைக் கடனுளிகள் க/கு ப | | 36,600 | |
| | கோவைக் கிளைச் சரக்கிருப்புக் க/கு | | | 36,600 |
| | (கிளையின் கடன் விற்பனை) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1973 | | | ரூ. | ரூ. |
| திச. 31 | வங்கிக் க/கு ப | | 28,850 | |
| | கோவைக் கிளைக் கடனாளிகள் க/கு | | | 28,850 |
| | (கிளைக் கடனாளிகளிடம் வசூலித்தது.) | | | |
| | கோவைக் கிளைச் செலவுகள் க/கு ப | | 6,900 | |
| | வங்கிக் க/கு | | | 6,900 |
| | (கிளைக்காக ஏற்ற செலவுகள் : வாடகை ரூ. 1,440 ஊதியம் ரூ. 4,800 பிறசெலவுகள்ரூ. 660*) | | | |
| ,, | கோவைக் கிளைச் செலவுகள் க/கு ப | | 200 | |
| | கோவைக் கிளைக் கடனாளிகள் க/கு | | | 200 |
| | (கடனாளிகட்களித்த தள்ளுபடி.) | | | |
| ,, | கோவைக் கிளைக்கனுப்பிய சரக்கிருப்புக் க/கு ப | | 2,400 | |
| | கோவைக் கிளைச் சரக்கிருப்புக் க/கு | | | 2,400 |
| | (கிளை திருப்பியனுப்பிய சரக்கு.) | | | |
| ,, | கோவைக் கிளைச் சரக்கிருப்புக் க/கு ப | | 900 | |
| | கோவைக் கிளைக் கடனாளிகள் க/கு | | | 900 |
| | (கடனாளிகள் கிளைக்குத் திருப்பியனுப்பிய சரக்கு.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம். | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1973 | | | ரூ. | ரூ. |
| திச. 31 | கோவைக் கிளைச் சரிக்கட்டுக் க/கு ப | | 180 | |
| | கோவைக் கிளைச் சரக்கிருப்புக் க/கு | | | 180 |
| | (வீணான சரக்கு—இருப்புக் கட்டுதல்மூலம் கண்டு பிடிக்கப்பட்டது.) | | | |
| ,, | கோவைக் கிளைச் செலவுகள் க/கு ப | | 350 | |
| | கோவைக் கிளைக் கடனாளிகள் க/கு | | | 350 |
| | (வராக் கடன் நீக்கப்பெற்றது.) | | | |
| ,, | கோவைக் கிளைச் சரிக்கட்டுக் க/கு ப | | 7,450 | |
| | கோவைக் கிளைச் செலவுகள் க/கு | | | 7,450 |
| | (கோவைக் கிளைச் செலவு களைச் சரிக்கட்டுக் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| ,, | சரக்கிருப்புக் காப்புக் க/கு ப | | 1,700 | |
| | கோவைக் கிளைச் சரிக்கட்டுக் க/கு | | | 1,700 |
| | (தொடக்கச் சரக்கிருப்பில் ஏற்றிய விலையைச் சரிக் கட்ட.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை | வரவுத் தொகை |
|---|---|---|---|---|
| 1973 | | | ரூ. | ரூ. |
| திச. 31 | கோவைக் கிளைக்கனுப்பிய சரக்கிருப்புக் க/கு ப | | 20,200 | |
| | கோவைக் கிளைச் சரிக்கட்டுக் க/கு | | | 20,200 |
| | (கோவைக் கிளைக் கனுப்பிய சரக்கில் ஏற்றிய விலையைச் சரிக்கட்ட.) | | | |
| ,, | கோவைக் கிளைச் சரிக்கட்டுக் க/கு ப | | 3,140 | |
| | சரக்கிருப்புக் காப்புக் க/கு | | | 3,140 |
| | (இறுதிச் சரக்கிருப்பில் ஏற்றிய விலையைச் சரிக் கட்ட.) | | | |
| ,, | கோவைக் கிளைச் சரிக்கட்டுக் க/கு ப | | 11,130 | |
| | பொது இலாப-நட்டக் க/கு | | | 11,130 |
| | (கிளையின் நிகர இலாபத்தைப் பொது இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்ற.) | | | |

**விளக்கக் குறிப்பு :**

*பிற செலவுகள் கீழ்க்கண்டவாறு இக் கணக்கில் கண்டு பிடிக்கப்படுகிறது :

| | | ரூ. |
|---|---|---|
| 1-1-73-ல் கிளையிலிருந்த ரொக்கம் | .. | 200 |
| 1973-ல் பிற செலவுகட்காகத் தலைமை யகத்திடமிருந்து பெற்றது | .. | 600 |
| | | 800 |
| **கழி :** 31-12-1973-ல் கிளையிலிருக்கும் ரொக்கம் | .. | 140 |
| ∴ கிளை செலவழித்த தொகை | .. | 660 |

## பேரேட்டுக் கணக்குகள்

### கோவைக் கிளைச் சரக்கிருப்புக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 | | | | 1973 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 5,100 | சன. 1 | வங்கி : | | |
| சன. 1 | கோவைக் கிளைக்கனுப்பிய | | | முதல் | ரொக்க விற்பனை .. | | 20,400 |
| முதல் | சரக்கு .. | | 63,000 | திச. 31 | கோவைக் கிளைக் | | |
| திச. 31 | | | | வரை | கடனாளிகள்— | | |
| வரை | | | | | கடன் விற்பனை .. | | 36,600 |
| ,, | கோவைக்கிளைக் கடனாளிகள் | | | ,, | கோவைக் கிளைக்கனுப்பிய | | |
| | திருப்பிய சரக்கு .. | | 900 | | சரக்கு—திருப்பம் .. | | 2,400 |
| | | | | ,, | கோவைக் கிளைச் சரிக் | | |
| | | | | | கட்டுக் க/கு— | | |
| | | | | | வீணான சரக்கு | | |
| | | | | | (இருப்புக்கட்டுத் | | |
| | | | | | தொகை) .. | | 180 |
| | | | | ,, | இருப்பு கீ/இ .. | | 9,420 |
| | | | 69,000 | | | | 69,000 |
| 1974 | | | | | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 9,420 | | | | |

## கோவைக் கிளைக் கடனாளிகள் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 | | | | 1973 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 6,200 | சன. 1 முதல் திச. 31 வரை | வங்கி— கடனாளியிடம் வசூலித்தது .. | | 28,859 |
| சன. 1 முதல் திச. 31 வரை | கோவைக் கிளைச் சரக்கிருப்பு— கடன் விற்பனை .. | | 36,600 | ,, | கோவைக்கிளைச் செலவு கள்—தள்ளுபடி .. | | 200 |
| | | | | ,, | கோவைக்கிளைச் சரக்கிருப்பு—திருப்பம் .. | | 900 |
| | | | | ,, | கோவைக்கிளைச் செலவு கள்—வராக்கடன் .. | | 350 |
| | | | | ,, | இருப்பு கீ/இ .. | | 12,500 |
| | | | 42,800 | | | | 42,800 |
| 1974 | | | | | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 12,500 | | | | |

**கோவைக் கிளைச் செலவுகள் கணக்கு**

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 | | | | 1973 | | | |
| சன. 1 முதல் திச. 31 வரை | வங்கி :<br>வாடகை ரூ. 1,440<br>ஊதியம் ரூ. 4,800<br>பிற செலவுகள் ரூ. 660 | | 6,900 | திச. 31 | கோவைக் கிளைச் சரிக் கட்டுக் க/கு—மாற்றம் .. | | 7,450 |
| ,, | கோவைக் கிளைக் கடனாளி கள்—தள்ளுபடி .. | | 200 | | | | |
| ,, | கோவைக்கிளைக் கடனாளிகள் — வாராக்கடன் .. | | 350 | | | | |
| | | | 7,450 | | | | 7,450 |

**கோவைக் கிளைச் சரிக்கட்டுக் கணக்கு**

அல்லது

**கோவைக் கிளை இலாப-நட்டக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 திச. 31 | கோவைக் கிளைச் சரக்கிருப்பு—வீணான சரக்கு .. | | 180 | 1973 திச. 31 | சரக்கிருப்புக் காப்பு——தொடக்கச் சரக்கிருப்பில் ஏற்றியவிலை .. | | 1,700 |
| ,, | கோவைக் கிளைச் செலவுகள் க/கு—மாற்றம் .. | | 7,450 | ,, | கோவைக் கிளைக்கனுப்பிய சரக்கு—ஏற்றியவிலை .. | | 20,200 |
| ,, | சரக்கிருப்புக் காப்பு .. | | 3,140 | | | | |
| ,, | பொது இலாப-நட்டக் க/கு—இலாபம் .. | | 11,130 | | | | |
| | | | 21,900 | | | | 21,900 |

### எடுத்துக்காட்டு 19

சென்னையிலுள்ள பூம்புகார் நிறுவனம் தனது மதுரைக் கிளைக்கு அடக்கவிலை மீது $33\frac{1}{3}$% கூடுதலாக வைத்துச் சரக்கு அனுப்புகிறது. கிளை பெறுகின்ற ரொக்கம் அனைத்தும் அவ்வப்பொழுது தலைமையகத்திற்கு அனுப்பப்படுகிறது. 1973 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான நடவடிக்கைகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றிலிருந்து தலைமையகத்தின் ஏட்டில் மதுரைக் கிளைக் கணக்கினையும் பிற பேரேட்டுக் கணக்குகளையும் தயாரிக்கவும்.

| | | | ரூ. |
|---|---|---|---|
| 1973 சனவரி 1-ல் | மதுரைக் கிளையிலிருந்த சரக்கிருப்பு | .. | 12,000 |
| ,, | சில்லறை ரொக்கம் | .. | 150 |
| ,, | கடனாளிகள் | .. | 7,600 |
| ,, | கிளையில் கொடுக்க வேண்டிய ஊதியம் | .. | 200 |
| | கிளைக்கு அனுப்பிய சரக்கு | .. | 36,400 |
| | கடன் விற்பனை | .. | 22,400 |
| | ரொக்க விற்பனை | .. | 16,800 |
| | கடனாளிகளுக்கு அளித்த தள்ளுபடி | .. | 250 |
| | வராக்கடன் நீக்கப்பெற்றது | .. | 350 |
| | கிளை திருப்பி அனுப்பிய சரக்கு | .. | 1,600 |
| | கிளை செய்த சில்லறைச் செலவுகள் | .. | 525 |

கிளையின் செலவுகட்காகத் தலைமையகம் அனுப்பிய ரொக்கம் :

| | | ரூ. |
|---|---|---|
| வாடகை | .. | 900 |
| ஊதியம் | .. | 3,600 |
| காப்பீடு (1974 மார்ச் 31 வரை) | .. | 400 |
| சில்லறை ரொக்கம் | .. | 500 |

| | | | |
|---|---|---|---|
| | | .. | 5,400 |
| 1973 திசம்பர் 31-ல் | கிளையின் சரக்கிருப்பு | .. | 7,600 |
| ,, | கடனாளிகள் | .. | 12,000 |

**விடை :**

மேற்சொன்ன கணக்கில் 1973 திசம்பர் 31-ல் கிளையி லிருந்த சில்லறை ரொக்க இருப்பும், 1973-ல் கடனாளிகளிடம் வசூலான தொகையும் கொடுக்கப்படவில்லை. இவற்றைக் கீழ்க் கண்டவாறு அறியலாம் :

| | | | ரூ. |
|---|---|---|---|
| **(1) சில்லறை ரொக்க இருப்பு** | | | |
| | மதுரைக் கிளையிலிருந்த் தொடக்கச் சில்லறை ரொக்க இருப்பு | .. | 150 |
| கூட்டு : | கிளையின் சில்லறை செலவுகட்குத் தலைமையகம் அனுப்பிய ரொக்கம் | .. | 500 |
| | | | 650 |
| கழி : | கிளை செய்த சில்லறைச் செலவுகள் | .. | 525 |
| 31–12–1973-ல் இக் கிளையிலிருந்த சில்லறை ரொக்க இருப்பு | | .. | 125 |

**(2) கடனாளிகளிடம் வசூலான தொகை**

குறிப்புக் கடனாளிகள் கணக்கு (Memorandum Debtors Account) தயாரித்து, இத் தொகையை அறியலாம்.

## குறிப்புக் கடனாளிகள் கணக்கு

பற்று / வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 | | | | 1973 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 7,600 | திச. 31 | தள்ளுபடி .. | | 250 |
| திச. 31 | கடன் விற்பனை .. | | 22,400 | ,, | வராக்கடன் .. | | 350 |
| | | | | ,, | வங்கி—வசூலித்தது .. (இருப்புக் கட்டுந் தொகை) | | 17,400 |
| | | | | ,, | இருப்பு கீ/இ .. | | 12,000 |
| | | | 30,000 | | | | 30,000 |

## பூம்புகார் நிறுவனத்தின் (தலைமையகத்தின்) ஏடுகளில்

### மதுரைக் கிளை

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 | | | | 1973 | | | |
| சன. 1 | இருப்பு : | | | சன. 1 | கொடுபட வேண்டிய | | |
| | கிளைச் சரக்கிருப்பு | | | | ஊதியம் .. | | 200 |
| | ரூ. 12,000 | | | சன. 1 | | | |
| | கிளைக் கடனாளிகள் | | | முதல் | வங்கி : | | |
| | ரூ. 7,600 | | | திச. 31 | ரொக்க விற்பனை | | |
| | கிளைச் சில்லறை | | | வரை | ரூ. 16,800 | | |
| | ரொக்கம் ரூ. 150 | | | | கடனாளிகளிடம் | | |
| | | | 19,750 | | பெற்றது ரூ. 17,400 | | |
| சன. 1 | | | | | | | 34,200 |
| முதல் | | | | | | | |
| திச. 31 | | | | ,, | கிளைக்கனுப்பிய சரக்கு— | | |
| வரை | கிளைக்கனுப்பிய சரக்கு .. | | 36,400 | | திருப்பம் .. | | 1,600 |
| ,, | வங்கி : | | | திச. 31 | கிளைச் சரக்கிருப்பு .. | | 7,600 |
| | வாடகை ரூ. 900 | | | ,, | கிளைக் கடனாளிகள் .. | | 12,000 |
| | ஊதியம் ரூ. 3,600 | | | ,, | கிளைச்சில்லறை ரொக்கம் .. | | 125 |
| | காப்பீடு ரூ. 400 | | | ,, | சரக்கிருப்புக்காப்பு .. | | 3,000 |
| | சில்லறை ரொக்கம் ரூ. 500 | | | ,, | கிளைக்கனுப்பிய சரக்கு .. | | 8,700 |
| | | | 5,400 | ,, | முன்கூட்டிச் செலுத்திய | | |
| திச. 31 | சரக்கிருப்புக்காப்பு .. | | 1,900 | | காப்பீடு .. | | 100 |
| ,, | இலாப-நட்டக் க/கு .. | | 4,075 | | | | |
| | | | 67,525 | | | | 67,525 |

பற்று **மதுரைக் கிளைச் சரக்கிருப்புக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 12,000 | 1973 சன. 1 | மதுரைக் கிளைக் க/கு—மாற்றம் .. | | 12,000 |
| திச. 31 | மதுரைக் கிளைக் க/கு .. | | 7,600 | திச. 31 | இருப்பு கீ/இ .. | | 7,600 |
| 1974 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 7,600 | | | | |

பற்று **மதுரைக் கிளைக் கடனாளிகள் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 சன. 1 | இருப்பு கீ/கொ | | 7,600 | 1973 சன. 1 | மதுரைக் கிளைக் க/கு—மாற்றம் | | 7,600 |
| திச. 31 | மதுரைக் கிளைக் க/கு .. | | 12,000 | திச. 31 | இருப்பு கீ/இ .. | | 12,000 |
| 1974 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 12,000 | | | | |

பற்று **மதுரைக் கிளைச் சில்லறை ரொக்கக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 | | | | 1973 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 150 | சன. 1 | மதுரைக் கிளைக் க/கு—மாற்றம் .. | | 150 |
| திச. 31 | மதுரைக் கிளைக் க/கு | | 125 | திச.31 | இருப்பு கீ/இ .. | | 125 |
| 1974 | | | | | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 125 | | | | |

பற்று **மதுரைக் கிளையின் கொடுபட வேண்டிய செலவு கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 | | | | 1973 | | | |
| சன. 1 | மதுரைக் கிளைக் க/கு மாற்றம் .. | | 200 | சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 200 |

**மதுரைக் கிளையின் முன்கூட்டிச் செலுத்திய காப்பீடு**

| பற்று | | | | | | | வரவு |
|---|---|---|---|---|---|---|---|
| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
| 1973 திச. 31 | மதுரைக் கிளைக் க/கு .. | | 100 | 1973 திச.31 | இருப்பு கீ/இ .. | | 100 |
| 1974 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 100 | | | | |

எடுத்துக்காட்டில் கொடுக்கப்பெற்ற கணக்கை வழக்கம்போன்று தயாரிக்கும் வாணிக, இலாப-நட்டக் கணக்குகளைத் தயாரித்தும், நிகர இலாப-நட்டத்தை உணரலாம். அடக்க விலையிலேயே நிகழ்ச்சிகள் அனைத்தும் பதியப்பெறுகின்றன.

**பூம்புகார் நிறுவனத்தின் 1973 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான வாணிக, இலாப-நட்டக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | தொடக்கச் சரக்கிருப்பு .. | | 9,000 | | | | |
| | தலைமையகத்திடம் | | | | விற்பனை : | | |
| | பெற்ற சரக்கு ரூ. 27,300 | | | | கடன் ரூ. 22,400 | | |
| | கழி: திருப்பம் ரூ. 1,200 | | 26,100 | | ரொக்கம் ரூ. 16,800 | | 39,200 |
| | மொத்த இலாபம் கீ/இ .. | | 9,800 | | இறுதிச் சரக்கிருப்பு .. | | 5,700 |
| | | | 44,900 | | | | 44,900 |
| | தள்ளுபடி .. | | 250 | | | | |
| | வராக்கடன் .. | | 350 | | மொத்த இலாபம் கீ/கொ .. | | 9,800 |
| | வாடகை .. | | 900 | | | | |
| | ஊதியம் ரூ. 3,600 | | | | | | |
| | கழி: கொடுபட | | | | | | |
| | வேண்டியது ரூ. 200 | | 3,400 | | | | |
| | காப்பீடு ரூ. 400 | | | | | | |
| | கழி: முன்கூட்டிச் | | | | | | |
| | செலுத்தியது ரூ. 100 | | 300 | | | | |
| | சில்லறைச்செலவுகள் .. | | 525 | | | | |
| | நிகரஇலாபம் .. | | 4,075 | | | | |
| | | | 9,800 | | | | 9,800 |

## 4. தனித்தியங்கும் கிளைகள் (Independent Branches)

மேலே விளக்கப்பட்ட கிளைகளனைத்தும் தலைமையகம் அனுப்பும் சரக்கை மட்டுமே விற்பனை செய்வதைக் கண்டோம். எனவே, அவைகள் எல்லா நடவடிக்கைகளையும் பதிவு செய்து கணக்குகளை வைத்து இருப்பது இல்லை. கிளைக் கணக்குகள் அனைத்தையும் தலைமையகமே எழுதி வருகின்றது. இது கிளைகள் சிறிய அமைப்புகளாயிருப்பின் பொருந்தும். ஆனால், கிளை பெரியளவில் இருப்பின் அல்லது ஏதேனும் பொருள் உற்பத்தியில் ஈடுபட்டிருப்பின், ஒவ்வொரு கிளையும், ஏற்படும் நடவடிக்கைகள் அனைத்தையும் பதிய கணக்குகளை வைத்திருக்கவேண்டும். ஒவ்வொரு கிளையும் ஆண்டிறுதியில் இருப்பாய்வினைத் (Trial balance) தயாரித்து வாணிக, இலாப-நட்டக் கணக்குகளைத் தயாரிக்கின்றன. ஆண்டிறுதியில் இவற்றைத் தலைமையகம் தனது கணக்குகளுடன் சேர்த்து எல்லாக் கிளைகளுக்கும், தலைமையகத்துக்கும் பொதுவான இருப்புநிலைக் குறிப்பைத் தயார் செய்கிறது.

### கிளையில் பதிதல்

இம் முறையில், கிளை தனி ஒரு வாணிக அமைப்பைப் போன்றே செயல்படுவதால், துணைப் பதிவேடுகளையும் கணக்குகளையும் ஒவ்வொரு கிளையும் வைத்திருக்கும். தலைமையகத்திலிருந்து சரக்கு பெறும்பொழுது அவற்றைத் தனி ஏடுகளில் பதிவது வழக்கம். இதற்குத் தலைமையகத்திலிருந்து பெற்ற சரக்கு ஏடு (Goods received from Head Office Book) என்று பெயர். அல்லது சாதாரணமாக இருக்கும் இடாப்பு ஏட்டுடன் (Invoice Book or Purchase Book) சில கூடுதல் பத்திகளைச் சேர்த்துப் பக்கம் 223-ல் கண்ட முறையில் வைத்திருக்கும்.

## இடாப்பு ஏடு

| நாள் | விவரம் | உள்வரு இடாப்பு எண் | பே. ப. எ. | தலைமை யகத்திலிருந்து பெற்ற சரக்கு | பிற கொள்முதல் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|
| | | | | ரூ. | ரூ. | ரூ. |

ஒவ்வொரு திங்களும் தலைமையகத்திலிருந்து பெறும் சரக்குக் கணக்கின் கூட்டல் தொகை, தலைமையகத்திலிருந்து பெறும் சரக்குக் கணக்கிற்கு எடுத்துச் செல்லப்பெறும். இதனைத் தலைமை யகத்திலிருந்து பெறும் சரக்குக் கணக்கில் பற்று வைத்தும், தலைமையகக் கணக்கில் வரவு வைத்தும் முடிக்கலாம். ஆண்டிறுதி யில் முன்னுல் சொல்லப்பட்ட கணக்கு வாணிகக் கணக்கிற்கு மாற்றப்படுகிறது.

தலைமையகக் கணக்கில், தலைமையகத்திலிருந்து பெறும் சரக்கு மட்டுமன்றி தனக்காகத் தலைமையகம் ஏற்கும் செலவு களையும், தலைமையகத்திலிருந்து பெறும் ரொக்கத்தையும் வரவு வைக்கவேண்டும். தலைமையகத்திற்கு அவ்வப்பொழுது அனுப்பும் ரொக்கம் இக் கணக்கில் பற்று வைக்கப்படும். இக் கணக்கின் இருப்பு தலைமையகத்திற்கு அது கொடுக்கவேண்டிய தொகையை உணர்த்துகிறது.

## தலைமையகத்தில் கணக்குப் பதிதல்

தலைமையகம் தனது ஏடுகளில் ஒவ்வொரு கிளைக்கும் ஒரு கிளைக் கணக்கு வைத்திருக்கும். கிளைக்குச் சரக்கு அனுப்பும் பொழுது கிளைக் கணக்கில் பற்று வைக்கப்படுகிறது. கிளையி லிருந்து ரொக்கம் பெறும்பொழுது இக் கணக்கில் வரவு வைக்கப் படுகிறது. இக் கணக்கு ஆள்சார் வகையைச் சார்ந்தது (Personal account). ஆகவே, கிளைக்காகச் செலவுகளைத் தலைமை யகம் ஏற்கும்பொழுதெல்லாம், இக் கணக்கில் பற்று வைக்கப் படுகிறது. ஆண்டிறுதியில் இக் கணக்கு காட்டும் இருப்பானது கிளையிலிருந்து அது பெறவேண்டிய தொகையை (கிளையில் தலைமை யகம் முதலீடு செய்திருக்கும் தொகையை) உணர்த்துகிறது. இக் கணக்கும் கிளை தனது பேரேட்டில் எழுதி வைத்திருக்கும் தலைமையகக் கணக்கும் ஒரே இருப்பைக் காட்ட வேண்டுவது தெளிவு.

## நிலைச் சொத்துக்கள் (Fixed assets)

கிளையிலிருக்கும் நிலைச் சொத்துகளின் கணக்குகளையும் தலைமையகமே பெரும்பாலும் வைத்திருக்கிறது. கிளைக்கான் சொத்து ஒன்றினை அக் கிளையே ரொக்கம் கொடுத்து வாங்கினுல் இதற்கான பதிவைத் தலைமையகமும் அக் கிளையும் செய்கின்றன. தலைமையகம் தனது ஏட்டில் கிளைச் சொத்துக் கணக்கில் பற்றும்,

கிளைக் கணக்கில் வரவும் வைக்கும்; கிளை தனது ஏட்டில் தலைமையகக் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்கும். அவ்வாறின்றி கிளைக்கான சொத்து ஒன்றினைத் தலைமையகம் வாங்கின், கிளைச் சொத்துக் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்கும். இதற்குக் கிளை தனது ஏட்டில் எப் பதிவும் செய்யாது.

## கிளையிலுள்ள நிலைச் சொத்துக்களின் தேய்மானம் (Depreciation on Branch assets)

கிளைச் சொத்துகளின் கணக்குகளைத் தலைமையகம் வைத்திருக்கும்பொழுது, ஒவ்வோராண்டும் நீக்கவேண்டிய தேய்மானத்தைப் பதிவு செய்ய, கிளைக் கணக்கில் பற்றும், கிளைச் சொத்துக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

கிளை, தனது ஏட்டில் தேய்மானத்திற்கான பதிவைத் தேய்மானக் கணக்கில் பற்றும், தலைமையகக் கணக்கில் வரவும் வைத்துச் செய்யும்; இத் தேய்மானக் கணக்கை அக் கிளை ஆண்டிறுதியில் தனது இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச்செல்லும்.

## தலைமையகச் செலவுகள் (Head office Expenses)

அவ்வப்பொழுது கிளைக்கானப் பணிகளைத் தலைமையகம் செய்துவருகிறது. எனவே, ஆண்டிறுதியில் ஒவ்வொரு கிளைக்கும் தலைமையகம் ஆற்றிய பணிக்காக வகை செய்யவேண்டும். இதற்குக் கிளைக் கணக்கில் பற்றும், ஊதியக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும். (தலைமையகம் தனது அலுவலர்களுக்கு ஊதியம் வழங்கியபொழுது ஊதியக் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைத்திருக்கும். அவர்களுக்குக் கொடுத்த ஊதியத்தின் ஒரு பகுதியினைக் கிளைக் கணக்கிற்கு மாற்றுவதே இப் பதிவின் நோக்கமாகும்.)

கிளை தனது ஏட்டில் தலைமையகச் செலவுக் கணக்கில் பற்றும் தலைமையகக் கணக்கில் வரவும் வைத்து இப் பதிவினைச் செய்யும். தலைமையகச் செலவுக் கணக்கு ஒரு செலவினக் கணக்கு ஆதலால் கிளையின் இலாப-நட்டக் கணக்கில் பற்று வைத்து, இது மாற்றப் படுகிறது.

**சரிக்கட்டுதல்** (Reconciliation)

தலைமையக ஏட்டிலுள்ள கிளைக் கணக்கின் இருப்பும் கிளையின் ஏட்டிலுள்ள தலைமையகக் கணக்கு காட்டும் இருப்பும் ஒன்றாக இருக்கவேண்டும். பொதுவாகத் தலைமையக ஏட்டில் இது பற்று இருப்பையும், கிளையின் ஏட்டில் இது வரவு இருப்பையும் காட்டும். ஆனால், குறிப்பிட்ட எந்த நாளிலும் பெரும்பாலும் இவ்விரு கணக்குகளும் ஒரே இருப்பைக் காட்டுவதில்லை. வேறுபட்ட இருப்புகளை இவ்விரு கணக்குகளும் காட்டும்பொழுது, அவற்றிற்கான காரணங்களை அறிந்து கணக்குகளைச் சரிக்கட்ட வேண்டும்.

எடுத்துக்காட்டாக, ஆண்டிறுதியில் தலைமையகம் கிளைக்குச் சரக்கு அனுப்பலாம். சரக்கு அனுப்பியவுடன் கிளைக் கணக்கில் பற்றும், கிளைக்கு அனுப்பிய சரக்குக் கணக்கில் வரவும் வைத்து இந் நடவடிக்கையைத் தலைமையகம் பதியும். ஆனால், ஆண்டிறுதி நாளுக்குள் இச் சரக்கு கிளைக்கு வந்து சேரவில்லை என்றால் அந் நடவடிக்கைக்குரிய பதிவைக் கிளை செய்யாது. சரக்கு அதனிடம் வந்து சேர்ந்த பிறகுதான் இதற்கான பதிவைச் செய்யும். இதனால் தலைமையகத்தில் வைத்திருக்கும் கிளைக் கணக்கும், கிளையில் வைத்திருக்கும் தலைமையகக் கணக்கும் வெவ்வேறு இருப்புகளைக் காட்டுகின்றன. இது போன்றே ஆண்டின் இறுதியில் கிளை தலைமையகத்திற்கு ரொக்கம் அனுப்பலாம். அனுப்பியவுடன் தலைமையகக் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைத்துக் கிளை பதிந்துவிடும். அந்த ரொக்கம், தலைமையகத்தை, ஆண்டு முடிந்த பிறகு சேர்ந்தால், அப்பொழுதுதான் இதற்கான பதிவைத் தலைமையகம் செய்யும். எனவே, இந்தக் கால இடைவெளியில் (கிளை ரொக்கம் அனுப்பிய நாளுக்கும், தலைமையகம் ரொக்கம் பெற்ற நாள்களுக்குமிடையே) கணக்குகள் வெவ்வேறு இருப்பைக் காட்டும். இவற்றைக் கீழ்க்கண்டவாறு சரி செய்து கொள்ளலாம்.

தான் அனுப்பிய சரக்கு, அவ்வாண்டுக்குள் கிளையைச் சேரவில்லையென்றால் தலைமையகம் 'வழியிடைச் சரக்குக் கணக்கு' (Goods in Transit Account) எனும் கணக்கில் பற்றும், கிளைக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்; வழியிடைச் சரக்குக் கணக்கு சொத்து வகையைச் (Real account) சார்ந்ததாதலால், இது இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் காண்பிக்கப் பெறும்; இதற்குக் கிளை தனது ஏட்டில் எப் பதிவும் செய்யாது. இவ்வாறே கிளை அனுப்பிய ரொக்கம் தலைமையகத்தை அவ்வாண்டுக்குள் சேரவில்லையென்றால், கிளை கீழ்க்கண்ட சரிக்கட்டுப்

பதிவைச் செய்யவேண்டும். 'வழியிடை ரொக்கக் கணக்கு' (Cash in Transit Account) எனும் கணக்கில் பற்றும், தலைமையகக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

இவ்வாறு நிகழும் வழியிடை நிகழ்ச்சிகளை யார் பதிவு செய்வது என்பதை இப்பொழுது கவனிப்போம். யார் சரக்கையோ ரொக்கத்தையோ அனுப்பியிருக்கிறார்களோ அவர்கள் அதற்கான சரிக்கட்டுப் பதிவைச் செய்வது வழக்கம். எனினும், தலைமை யகமே கிளை செய்யும் சரிக்கட்டுப் பதிவினையும் செய்யலாம். எடுத்துக்காட்டாக, கிளை அனுப்பிய ரொக்கம் வழியில் இருக்கு மாயின், வழியிடை ரொக்கக் கணக்கில் பற்றும், கிளைக் கணக்கில் வரவும் வைக்கும்.

## கிளைகளுக்கிடையே ஏற்படும் நடவடிக்கைகள் (Inter-branch Transactions)

ஒரு கிளை பிற கிளைகளுடன் தொடர்புகொள்ளுமானால், அதனைத் தலைமையகத்தில் கொண்ட தொடர்பாகக் கருதி நட வடிக்கைகளைப் பதிவு செய்யலாம். எடுத்துக்காட்டாக, செங்கல் பட்டு கிளையானது சிதம்பரம் கிளைக்குச் சரக்கு அனுப்புமானால் கீழ்க்கண்டவாறு பதியலாம்.

செங்கல்பட்டு கிளை, தனது ஏட்டில் தலைமையகக் கணக்கில் பற்றும், கிளைகட்குஅனுப்பிய சரக்குக் கணக்கில் (Goods sent to Branches Account) வரவும் வைக்கும்.

சிதம்பரம் கிளை, தனது ஏட்டில் தலைமையகத்திலிருந்து பெற்ற சரக்குக் கணக்கில் பற்றும், தலைமையகக் கணக்கில் வரவும் வைக்கும்.

இதே நடவடிக்கையைத் தலைமையகம் தனது ஏட்டில், சிதம்பரம் கிளைக் கணக்கில் பற்றும், செங்கல்பட்டு கிளைக் கணக் கில் வரவும் வைத்துப் பதிவு செய்யும்.

## எடுத்துக்காட்டு 20

கீழ்க்கண்ட நடவடிக்கைகட்கான சரிக்கட்டுப் பதிவுகளைத் தலைமையகத்தின் ஏட்டிலும், கிளைகளின் ஏடுகளிலும் தருக :

(1) தலைமையக ஏடுகளில் வைத்திருக்கப்படும் திருச்சிக் கிளையின் பொறி மீது நீக்கப்பட வேண்டிய தேய்மானம் ரூ. 750.

(2) திருச்சிக் கிளையின் பொருட்டுச் செய்த பணிக்காகத் தலைமையகம் கொடுத்த ஊதியம் ரூ. 2,500.

(3) தலைமையகத்தின் ஆணைப்படி பம்பாய்க் கிளையானது காஞ்சிக் கிளைக்கு அனுப்பிய சரக்கு ரூ. 3,700.

(4) காஞ்சிக் கிளையானது தலைமையகத்தின் காஞ்சிக் கடனாளியிடமிருந்து வசூலித்த தொகை ரூ. 700.

(5) தலைமையகம் வாங்கிய சரக்குக்காக, திருச்சிக் கிளை கொடுத்த ரொக்கம் ரூ. 5,000.

(6) தலைமையகம் பம்பாய்க் கிளைக்கு அனுப்பிய ரூ. 2,000த்திற்கான சரக்கு பம்பாய்க் கிளையை இவ் வாண்டு இறுதிக்குள் சேரவில்லை.

(7) தலைமையகத்தின்பொருட்டுப் பம்பாய் ஒரு கம்பெனியிடமிருந்து பெற்ற பங்காதாயம் (dividend) ரூ. 350.

**விடை:**

## குறிப்பேட்டுப் பதிவுகள்

### தலைமையகத்தின் ஏட்டில்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று தொகை | வரவு தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | 1. திருச்சிக் கிளைக் க/கு ப<br>திருச்சிப் பொறிக் க/கு<br>(திருச்சிக் கிளையிலுள்ள பொறி மீது நீக்க வேண்டிய தேய்மானம்.) | | 750 | 750 |
| | 2. திருச்சிக் கிளைக் க/கு ப<br>ஊதியக் க/கு<br>(திருச்சிக் கிளையின் பணிக்குத் தலைமையகத்தின் செலவு.) | | 2,500 | 2,500 |
| | 3. காஞ்சிக் கிளைக் க/கு ப<br>பம்பாய்க் கிளைக் க/கு<br>(பம்பாய்க் கிளை, காஞ்சிக் கிளைக்கு அனுப்பிய சரக்கு.) | | 3,700 | 3,700 |
| | 4. காஞ்சிக் கிளைக் க/கு ப<br>கடனாளிகள் க/கு<br>(தலைமையகத்தின் கடனாளியிடமிருந்து காஞ்சி வசூலித்த தொகை.) | | 700 | 700 |
| | 5. கொள்முதல் க/கு ப<br>திருச்சிக் கிளைக் க/கு<br>(தலைமையகம் வாங்கிய சரக்குக்காகத் திருச்சிக் கிளை கொடுத்த ரொக்கம்.) | | 5,000 | 5,000 |

**தலைமையகத்தின் ஏட்டில்**—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று தொகை | வரவு தொகை |
|---|---|---|---|---|
| | 6. வழியிடைச் சரக்குக் க/கு ப | | ரூ. 2,000 | ரூ. |
| | பம்பாய்க் கிளைக் க/கு | | | 2,000 |
| | (தலைமையகம் அனுப்பிய சரக்கு, ஆண்டிறுதிக்குள் பம்பாய் கிளையைச் சேராததைச் சரிக்கட்ட.) | | | |
| | 7. பம்பாய்க் கிளைக் க/கு ப | | 350 | |
| | பங்காதாயக் க/கு | | | 350 |
| | (தலைமையகத்திற்கான பங்காதாயத்தைப் பம்பாய்க் கிளை பெற்றது.) | | | |

**திருச்சிக் கிளையின் ஏட்டில்**

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று தொகை | வரவு தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | 1. தேய்மானக் க/கு ப | | 750 | |
| | தலைமையகக் க/கு | | | 750 |
| | திருச்சிப் பொறி மீது தலைமையகம் நீக்க வேண்டிய தேய்மானம்.) | | | |
| | 2. தலைமையகச்செலவுக்க/கு ப | | 2,500 | |
| | தலைமையகக் க/கு | | | 2,500 |
| | (கிளைக்குத் தலைமையகம் செய்த பணிக்கான ஊதியம்.) | | | |
| | 5. தலைமையகக் க/கு ப | | 5,000 | |
| | வங்கிக் க/கு | | | 5,000 |
| | (தலைமையகம் வாங்கிய சரக்குக்காகக் கொடுத்தது) | | | |

### பம்பாய்க் கிளையின் ஏடுகளில்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று தொகை | வரவு தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | 3. தலைமையகக் க/கு ப<br>கிளைகட்கு அனுப்பிய சரக்குக் க/கு<br>(காஞ்சிக் கிளைக்கு அனுப்பிய சரக்கு.) | | 3,700 | 3,700 |
| | 6. பதிவு தேவையில்லை. | | | |
| | 7. வங்கிக் க/கு ப<br>தலைமையகக் க/கு<br>(தலைமையகத்திற்கான இலாப ஈவை வசூலித்தது) | | 350 | 350 |

### காஞ்சிக் கிளையின் ஏடுகளில்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று தொகை | வரவு தொகை |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | 3. தலைமையகத்தினிடமிருந்து பெற்ற சரக்குக் க/கு ப<br>தலைமையகக் க/கு<br>(பம்பாய்க் கிளையிடமிருந்து பெற்ற சரக்கு.) | | 3,700 | 3,700 |
| | 4. வங்கிக் க/கு ப<br>தலைமையகக் க/கு<br>(தலைமையகத்தின் வாடிக்கையாளரிடமிருந்து வசூலித்தது.) | | 700 | 700 |

## கிளையின் இருப்புச் சோதனையைத் (இருப்பாய்வைத்) தலைமையக ஏடுகளில் சேர்த்துக்கொள்ளுதல்

## (Incorporation of the Branch Trial Balance in Head Office Books)

வெளி உலகத்தைப் பொருத்தவரை தலைமையகத்திற்கும் அதன் கிளைகளுக்கும் வேறுபாடிருப்பதில்லை. ஆதலால், தலைமையகம் அனைத்துக் கிளையின் இருப்புச் சோதனைகளையும் தனது இருப்புச் சோதனையுடன் இணைத்து, வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும் அனைத்திற்கும் பொதுவான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்யும். இதற்கு இரு முறைகள் உள.

### முதல் முறை

கிளைக்குரிய வாணிக, இலாப-நட்டக் கணக்குகள் வழக்கம் போன்று தலைமையகத்தின் ஏட்டில் தயார் செய்யப்படுகின்றன. இதற்கான குறிப்பேட்டுப் பதிவுகள் :

*(1)* வழக்கமாக, வாணிகக் கணக்கின் பற்றுப் பகுதியில் காணப்பெறும் அனைத்துக் கணக்குகளையும், கிளை வாணிகக் கணக்கில் பற்று வைக்கவேண்டும். இவற்றின் கூட்டல் தொகைக்குக் கிளைக் கணக்கில் வரவு வைக்கவேண்டும். (தொடக்கச் சரக்கிருப்பு, கொள்முதல், கூலி, உட்சுமைக் கூலி, தயாரிப்புச் செலவுகள் போன்ற கணக்குகள் இவ்வாறு பதியப்படுகின்றன).

*(2)* விற்பனை, இறுதிச் சரக்கிருப்பு ஆகிய கணக்குகள் வழக்கமாக வாணிகக் கணக்கில் வரவுப் பகுதியில் இடம் பெறுகின்றன அல்லவா? இவற்றைக் கிளைக் கணக்கில் பற்றும், கிளை வாணிகக் கணக்கில் இவற்றின் மொத்தத் தொகைக்கு வரவும் வைத்துத் தலைமையகம் பதிவு செய்யும்.

*(3)* வாணிகக் கணக்கு மொத்த இலாபத்தைக் காட்டுமாயின், கிளை வாணிகக் கணக்கில் பற்றும், கிளை இலாப-நட்டக் கணக்கில் வரவும் வைத்துப் பதிவு செய்யவேண்டும்.

அவ்வாறின்றி வாணிகக் கணக்கு மொத்த நட்டத்தை உணர்த்துமாயின், கிளையின் இலாப-நட்டக் கணக்கில் பற்றும், கிளை வாணிகக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(4) இலாப-நட்டக் கணக்கில் காணப்பெறும் எல்லாச் செலவுக் கணக்குகளையும், நட்டக் கணக்குகளையும், கிளை இலாப-நட்டக் கணக்கில் பற்றும், கிளைக் கணக்கில் மொத்தத் தொகைக்கு வரவும் வைக்கவேண்டும்.

(5) அவ்வாறே இலாப-நட்டக் கணக்கின் வரவுப் பகுதியில் காணப்பெறும் வருமான, ஆதாயக் கணக்குகளைப் பதிய, அவற்றின் கூட்டல் தொகைக்குக் கிளைக் கணக்கில் பற்றும், கிளை இலாப-நட்டக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(6) இலாப-நட்டக் கணக்கு நிகர இலாபத்தை உணர்த்துமாயின், கிளை இலாப-நட்டக் கணக்கில் பற்றும், பொது இலாப-நட்டக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

அவ்வாறின்றி இக் கணக்கு நிகர நட்டத்தை உணர்த்துமாயின், பொது இலாப-நட்டக் கணக்கில் பற்றும், கிளை இலாப-நட்டக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

கிளைக் கணக்கை அந்த ஆண்டுக்கு முடித்துப் பொதுவான இருப்புநிலைக் குறிப்பைத் தயாரிக்கும் நோக்குடன் கிளையின் சொத்துகளையும் பொறுப்புகளையும் தலைமையகம் தனது ஏட்டில் மாற்றிக்கொள்ள வேண்டுமாயின் கீழ்க்கண்ட பதிவுகளைச் செய்ய வேண்டும்.

(1) கிளைக் கடனாளிகள் கிளையிலுள்ள இறுதிச் சரக்கிருப்பு, கிளையிலுள்ள ரொக்கம், வழியிடை ரொக்கம் போன்ற கிளைச் சொத்துக் கணக்குகளில் தனித்தனியே பற்றும், கிளைக் கணக்கில் இவற்றின் மொத்தத் தொகைக்கு வரவும் வைக்கவேண்டும்.

(2) அதேபோன்று, கிளையின் பொறுப்புகளைப் பதிய கிளைக் கணக்கில் மொத்தத் தொகைக்குப் பற்றும், கிளை பொறுப்புக் கணக்கில் ஒவ்வொன்றிலும் தனித்தனியே வரவும் வைக்க வேண்டும்.

இப் பதிவுகள் அனைத்தையும் செய்த பிறகு தலைமையகப் பேரேட்டிலுள்ள கிளைக் கணக்கு இருப்பு ஒன்றையும் காட்டாது.

**எடுத்துக்காட்டு 21**

சேலத்திலுள்ள தலைமையகம் தனது தில்லிக் கிளையினின்றும் பெற்ற 1973, ஜூன் 30-ல் முடியும் ஆண்டுக்கான இருப்பாய்வு (Trial Balance) கீழ்க் கொடுக்கப்பட்டுள்ளது.

| | ரூ. |
|---|---|
| கிளையின் தொடக்கச் சரக்கிருப்பு | 23,700 |
| கொள்முதல் | 50,560 |
| தலைமையகத்திலிருந்து பெற்ற சரக்கு | 57,400 |
| கூலி | 15,000 |
| தயாரிப்புச் செலவுகள் | 18,500 |
| தலைமையகக் கணக்கு (வ) | 27,800 |
| கடனீந்தோர் | 17,500 |
| வாடகை | 4,500 |
| காப்பீடு | 1,200 |
| ஊதியம் | 9,000 |
| தள்ளுபடி பெற்றது | 250 |
| விற்பனை | 1,55,350 |
| கொள்முதல் திருப்பம் | 2,560 |
| கடனாளிகள் | 21,500 |
| வங்கி இருப்பு | 2,100 |

தலைமையகத்தின் ஏடுகளில் கிளைக் கணக்கு ரூ. 37,700 பற்று இருப்பைக் காட்டுகிறது. 1973 ஜூன் 27-ல் தில்லிக் கிளை அனுப்பிய ரூ. 4,700-க்கான காசோலைகள் ஜூலை 3-ல் தான் தலைமையகத்தை அடைந்தன.

| | | |
|---|---|---|
| தலைமையகச் செலவுகளில் தில்லிக் கிளைக்குரியது | ரூ. | 1,800 |
| கிளையின் இறுதிச் சரக்கிருப்பு | ரூ. | 21,200 |
| காப்பீடு முன்கூட்டிச் செலுத்தப்பட்டது | ரூ. | 300 |
| கிளை இன்னும் கொடுக்கவேண்டிய கூலி | ரூ. | 1,000 |

மேற்சொன்னவற்றைத் தலைமையக ஏடுகளில் எழுதுவதற்குத் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளையும், கிளைக் கணக்கையும் தயார் செய்க.

**விடை :**

இக் கணக்கில் தலைமையகத்திலுள்ள கிளைக் கணக்கு-ரூ. 37,700-ம் கிளைக் கணக்கின் ஏடுகளிலுள்ள தலைமையகக் கணக்கு ரூ. 27,800-ம் இருப்புகளாகக் காட்டுகின்றன. இவற்றின் வேறுபட்ட தொகை ரூ. 9,900 ஆகும். இதில் தில்லிக் கிளை அனுப்பிய ரூ. 4,700-க்கான காசோலை சேலம் தலைமையகத்தை ஆண்டின் இறுதி நாளுக்குள் வந்து சேரவில்லை. இது வேறுபட்ட தொகைக்கு ஒரு காரணமாகும். எனவே, மீதமுள்ள ரூ. 5,200 தலைமையகம் கிளைக்கு அனுப்பிய சரக்காக இருக்கவேண்டும். இது கிளையை ஆண்டின் இறுதி நாளுக்குள் சேர்ந்திருக்காது. ஆகவேதான் இதுவும் வேறுபட்ட தொகைக்குக் காரணமாக இருக்கும். இப்பொழுது தலைமையகத்தின் ஏடுகளில் வேண்டிய குறிப்பேட்டுப் பதிவுகளைச் செய்வோம்.

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | வழியிடைச் சரக்குக் க/கு ப | | 5,200 | |
| | தில்லிக் கிளைக் க/கு | | | 5,200 |
| | (வழியிலுள்ள சரக்கினைச் சரிக்கட்ட.) | | | |
| | தில்லிக் கிளைக் க/கு ப | | 1,800 | |
| | ஊதியக் க/கு | | | 1,800 |
| | (கிளைக்குரிய தலைமை யகத்தின் பணிக்கான ஊதியம்.) | | | |
| | தில்லைக் கிளை | | | |
| | வாணிகக் க/கு ப | | 1,63,600 | |
| | தில்லிக் கிளைக் க/கு | | | 1,63,600 |
| | [கிளையின் கீழ்க்கண்ட கணக்குகளைக் கிளையின் வாணிகக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல : தொடக்கச் சரக்கிருப்பு ரூ. 23,700 | | | |

குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | கொள்முதல் திருப்பம் நீங்கலாக ரூ. 48,000 தலைமையகத்திடமிருந்து பெற்ற சரக்கு ரூ. 57,400 கூலி (கொடுக்கப்பட வேண்டியது உட்பட) ரூ. 16,000 தயாரிப்புச் செலவுகள் ரூ. 18,500] | | ரூ. | ரூ. |
| | தில்லிக் கிளைக் க/கு ப | | 1,76,550 | |
| | தில்லிக் கிளை வாணிகக் க/கு (கீழ்க்கண்ட தில்லியின் கணக்குகளைக் கிளை வாணிகக் கணக்கிற்கு மாற்ற : விற்பனை ரூ. 1,55,350 இறுதிச் சரக்கிருப்பு ரூ. 21,200) | | | 1,76,550 |
| | தில்லிக் கிளை வாணிகக் க/கு ப | | 12,950 | |
| | தில்லிக் கிளை இலாப-நட்டக் க/கு (மொத்த இலாபத்தை மாற்ற.) | | | 12,950 |
| | தில்லிக் கிளை இலாப-நட்டக் க/கு ப | | 16,200 | |
| | தில்லிக் கிளைக் க/கு (கிளையின் கீழ்க்கண்ட செலவுகளை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்ற. வாடகை ரூ. 4,500 காப்பீடு (முன் கூட்டிச் செலுத்தியது போக) ரூ. 900 ஊதியம் ரூ. 9,000 தலைமையகச் செலவுகள் ரூ. 1,800) | | | 16,200 |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | தில்லிக் கிளைக் க/கு ப | | 250 | |
| | தில்லிக் கிளை இலாப-நட்டக் க/கு | | | 250 |
| | (கிளை ஈட்டிய தள்ளுபடியை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| | பொது இலாப-நட்டக் க/கு ப | | 3,000 | |
| | தில்லிக் கிளை இலாப-நட்டக் க/கு | | | 3,000 |
| | (தில்லிக் கிளையின் நட்டத்தை தலைமையகத்தின் இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| | கிளைக் கடனாளிகள் க/கு ப | | 21,500 | |
| | கிளை வங்கிக் க/கு ப | | 2,100 | |
| | முன்கூட்டிச் செலுத்த வேண்டிய காப்பீடு க/கு ப | | 300 | |
| | வழியிடை ரொக்கக் க/கு ப | | 4,700 | |
| | கிளைச் சரக்கிருப்புக் க/கு ப | | 21,200 | |
| | தில்லிக் கிளைக் க/கு | | | 49,800 |
| | (கிளையின் பலவகைச் சொத்துகளையும் தலைமையக ஏடுகளில் மாற்ற.) | | | |
| | தில்லிக் கிளைக் க/கு ப | | 18,500 | |
| | தில்லிக் கடனீந்தோர் க/கு | | | 17,500 |
| | தில்லி கொடுபட வேண்டிய கூலிக் க/கு | | | 1,000 |
| | (கிளையின் பொறுப்புக் கணக்குகளைத் தலைமையக எட்டில் மாற்ற.) | | | |

## தலைமையக ஏட்டில்

### தில்லிக் கிளைக் கணக்கு

பற்று | வரவு

| 1973 | | ரூ. | 1973 | | ரூ. |
|---|---|---|---|---|---|
| சூன் 30 | இருப்பு கீ/கொ .. | 37,700 | சூன் 30 | வழியிடைச் சரக்கு .. | 5,200 |
| ,, | ஊதியக் க/கு .. | 1,800 | ,, | தில்லிக் கிளை வாணிகக் க/கு: தொடக்கச் சரக்கிருப்பு, கொள்முதல் முதலியவை .. | 1,63,600 |
| ,, | தில்லிக் கிளை வாணிகக் க/கு விற்பனையும் இறுதிச் சரக்கிருப்பும் .. | 1,76,550 | ,, | தில்லிக் கிளை இலாப-நட்டக் க/கு : பல்வகைச் செலவுகள் .. | 16,200 |
| ,, | தில்லிக் கிளை இலாப-நட்டக் க/கு—தள்ளுபடி .. | 250 | ,, | பல்வகைச் சொத்துகள்: கடனாளிகள் ரூ. 21,500; வங்கி ரூ. 2,100; முன்கூட்டிச் செலுத்திய ஈட்டுறுதி ரூ. 300; வழியிடை ரொக்கம் ரூ. 4,700; கிளைச் சரக்கிருப்பு ரூ. 21,200 | 49,800 |
| ,, | பல்வகைப் பொறுப்புகள் கடனீந்தோர் ரூ. 17,500; கொடுபடவேண்டிய கூலி ரூ. 1,000 | 18,500 | | | |
| | | 2,34,800 | | | 2,34,800 |

## கிளை ஏடுகளில் பதிவு செய்தல்

ஆண்டிறுதியில் கிளை ஏடுகளையும் முடித்து விடலாம். இதில் இரு முறைகள் பின்பற்றப்படுகின்றன.

**முதல் முறை**

கணக்குகள் அனைத்தையும் தலைமையகக் கணக்கிற்கு மாற்றுவது. நடைமுறை வரவினங்களையும் செலவினங்களையும் மாற்றுவதற்குத் தனிப் பதிவும் அவ்வாறே சொத்துகளையும் பொறுப்புகளையும் மாற்றுவதற்குத் தனிப் பதிவும் செய்யவேண்டும்.

எல்லா நடைமுறைச் செலவுகளையும் தலைமையகக் கணக்கிற்குக் கொண்டு வருவதற்கு, எல்லாச் செலவுகளின் மொத்தத் தொகைக்குத் தலைமையகக் கணக்கில் பற்றும், ஒவ்வொரு செலவுக் கணக்கிலும் தனித்தனியாக வரவும் வைக்கவேண்டும்.

இவ்வாறே, நடைமுறை வரவினங்களை மாற்றுவதற்கு, ஒவ்வொரு வரவுக் கணக்கில் தனித்தனியாகப் பற்றும், இவற்றின் மொத்தத் தொகைக்குத் தலைமையக கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

சொத்துகளை மாற்றுவதற்கு, சொத்துகளின் மொத்தத் தொகைக்குத் தலைமையகக் கணக்கில் பற்றும், ஒவ்வொரு சொத்துக் கணக்கிலும் தனித்தனியாக வரவும் வைக்கவேண்டும்.

அவ்வாறே பொறுப்புகளை மாற்றுவதற்கு ஒவ்வொரு பொறுப்புக் கணக்கிலும் தனித்தனியாகப் பற்றும், இவற்றின் மொத்தத் தொகைக்கு தலைமையகக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

**எடுத்துக்காட்டு 21-ல் கொடுக்கப்பட்ட விவரங்களிலிருந்து, கிளையின் ஏடுகளில் முடிப்பதற்கு வேண்டிய குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து, தலைமையகக் கணக்கினைத் தயார் செய்க.**

**விடை :**

## முதல் முறை

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1973 | | | ரூ. | ரூ. |
| சூன் 30 | வழியிடை ரொக்கக் க/கு ப | | 4,700 | |
| | தலைமையகக் க/கு | | | 4,700 |
| | (சூன் 27-ல் அனுப்பிய காசோலை தலைமையகத்தை ஆண்டிறுதிக்குள் சேராததைச் சரிக்கட்ட.) | | | |
| ,, | தலைமையகச் செலவுகள் க/கு ப | | 1,800 | |
| | தலைமையகக் க/கு | | | 1,800 |
| | (கிளைக்காகத் தலைமையகத்தின் பணிக்குரிய ஊதியம்.) | | | |
| 1973 | | | | |
| சூன் 30 | முன்கூட்டிச் செய்த செலவு க/கு ப | | 300 | |
| | காப்பீட்டுக் க/கு | | | 300 |
| | (முன்கூட்டிச் செலுத்திய ஈட்டுறுதி.) | | | |
| ,, | கூலிக் க/கு ப | | 1,000 | |
| | கொடுபட வேண்டிய செலவுக் க/கு | | | 1,000 |
| | (கொடுக்க வேண்டிய கூலியைச் சரிக்கட்ட.) | | | |
| ,, | தலைமையகக் க/கு ப | | 1,82,360 | |
| | தொடக்கச் சரக்கிருப்புக் க/கு | | | 23,700 |
| | கொள்முதல் க/கு | | | 50,560 |
| | தலைமையகத்திடம் பெற்ற சரக்குக் க/கு | | | 57,400 |
| | கூலிக் க/கு | | | 16,000 |
| | தயாரிப்புச் செலவுகள் க/கு | | | 18,500 |

**முதல் முறை—(தொடர்ச்சி)**

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 1973 ஜூன்-30 | வாடகைக் க/கு | | | 4,500 |
| | காப்பீட்டுக் க/கு | | | 900 |
| | ஊதியக் க/கு | | | 9,000 |
| | தலைமையகச் செலவுகள் க/கு (மேற்கண்ட கிளையின் நடைமுறைக் கணக்குகளைத் தலைமையகக் கணக்கிற்கு மாற்ற.) | | | 1,800 |
| ,, | விற்பனைக் க/கு | ப | 1,55,350 | |
| | இறுதிச் சரக்கிருப்புக் க/கு | ப | 21,200 | |
| | கொள்முதல் திருப்பக் க/கு | ப | 2,560 | |
| | ஈட்டிய தள்ளுபடிக் க/கு | ப | 250 | |
| | தலைமையகக் க/கு (நடைமுறை வரவினை கணக்குகளையும் இறுதிச் சரக்கிருப்பையும் தலைமையகக் கணக்கிற்கு மாற்ற.) | | | 1,79,360 |
| ,, | தலைமையகக் க/கு | ப | 49,800 | |
| | இறுதிச் சரக்கிருப்புக் க/கு | | | 21,200 |
| | வங்கிக் க/கு | | | 2,100 |
| | கடனாளிகள் க/கு | | | 21,500 |
| | முன்கூட்டிச் செய்த செலவுகள் க/கு | | | 300 |
| | வழியிடை ரொக்கக் க/கு (சொத்துகளைத் தலைமையகக் கணக்கிற்கு மாற்ற.) | | | 4,700 |
| ,, | கடனீந்தோர் | ப | 17,500 | |
| | கொடுபட வேண்டிய செலவு | ப | 1,000 | |
| | தலைமையகக் க/கு (பொறுப்புகளைத் தலைமையகக் கணக்கிற்கு மாற்ற.) | | | 18,500 |

இப்பொழுது தலைமையகக் கணக்கு கீழ்க்கண்டவாறிக்கும் :

| பற்று | | | | | | | வரவு |
|---|---|---|---|---|---|---|---|
| | | | ரூ. | | | | ரூ. |
| 1973 சூன் 30 | பல்வகை நடைமுறைச் செலவுகள் .. | | 1,82,360 | 1973 சூன் 30 | இருப்பு கீ/கொ .. | | 27,800 |
| ,, | பல்வகைச்சொத்துகள் .. | | 49,800 | ,, | வழியிடை ரொக்கம் .. | | 4,700 |
| | | | | ,, | தலைமையகச் செலவுக் க/கு .. | | 1,800 |
| | | | | ,, | பல்வகை நடைமுறை வருவாய்க் கணக்குகள் .. | | 1,79,360 |
| | | | | ,, | பல்வகைப் பொறுப்புகள் .. | | 18,500 |
| | | | 2,32,16( | | | | 2,32,160 |

## இரண்டாம் முறை

இம் முறையில் கிளையின் வாணிக, இலாப-நட்டக் கணக்கை முதலில் தயாரிக்க வேண்டும். முதன் முறையில் குறிப்பிட்ட முதல் நான்கு பதிவுகளுடன் கீழ்க்கண்ட பதிவை மட்டும் செய்தால் போதும்:

| | | | |
|---|---|---|---|
| தலைமையகக் க/கு | ப | 3,000 | |
| இலாப-நட்டக் க/கு | | | 3,000 |
| (நிகர நட்டத்தைத் தலைமையகக் கணக்கிற்கு மாற்ற.) | | | |

இப்பொழுது தலைமையகக் கணக்கு கீழ்க் கண்டவாறு இருக்கும்:

**தலைமையகக் கணக்கு**

| | | | ரூ. | | | | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 | | | | 1973 | | | |
| சூன் 30 | இலாப-நட்டக் க/கு .. | | 3,000 | சூன் 30 | இருப்பு கீ/கொ .. | | 27,800 |
| ,, | இருப்பு கீ/இ .. | | 31,300 | ,, | வழியிடை ரொக்கம் .. | | 4,700 |
| | | | | ,, | தலைமையகச் செலவுகள் .. | | 1,800 |
| | | | 34,300 | | | | 34,300 |
| | | | | 1973 | | | |
| | | | | சூலை 1 | இருப்பு கீ/கொ .. | | 31,300 |

தில்லிக் கிளையின் இருப்புநிலைக் குறிப்பு கீழ்க்கண்டவாறிருக்கும் :

**தில்லிக் கிளையின் 1973 சூன் 30-இற்கான இருப்பு நிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| கடனீந்தோர் .. | 17,500 | இறுதிச் சரக்கிருப்பு .. | 21,200 |
| கொடுபட வேண்டிய செலவு .. | 1,000 | வங்கி .. | 2,100 |
| தலைமையகக் கணக்கு .. | 31,300 | கடனாளிகள் .. | 21,500 |
| | | முன்கூட்டிச் செய்த செலவுகள் .. | 300 |
| | | வழியிடை ரொக்கம் .. | 4,700 |
| | 49,800 | | 49,800 |

**குறிப்பு:**

தலைமையகக் கணக்கின் இருப்பு ரூ. 31,300 கிளையின் நிகர சொத்துகளின் (சொத்துகள்—பொறுப்புகள்) மதிப்பைக் குறிப்பதாகும். இத் தலைமையகக் கணக்கை முடிக்க வேண்டுமாயின் கிளையின் சொத்துகளையும் பொறுப்புகளையும் அக் கணக்கிற்கு மாற்றவேண்டும்; இது குறித்த பதிவுகளை (எடுத்துக்காட்டு 21இன் 7, 8 பதிவுகள்) முன்பே கண்டுள்ளோம்.

## எடுத்துக்காட்டு 22

ஈரோட்டிலுள்ள பூம்புகார் துணிக்கடைக்குக் காஞ்சியில் ஒரு கிளை இருக்கிறது. 1973 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான தலைமையகம், கிளை ஆகியவற்றின் இருப்பாய்வுகள் (trial balances) கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.

| | ஈரோடு (தலைமை யகம்) | காஞ்சிக் கிளை |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| தொடக்கச் சரக்கிருப்பு | 21,400 | 12,700 |
| தலைமையகத்திலிருந்து பெற்ற சரக்கு | — | 50,500 |
| கொள்முதல் | 1,02,100 | 20,700 |
| கூலி | 15,400 | 7,200 |
| வாடகை | 5,000 | 1,200 |
| கொள்முதல் திருப்பம் | 2,100 | 700 |
| ஊதியம் | 18,500 | 3,600 |
| காப்பீடு | 2,500 | 600 |
| கிளைக்கு அனுப்பிய சரக்கு | 50,500 | — |
| ஈட்டிய தள்ளுபடி | 430 | 120 |
| கடனீந்தோர் | 20,180 | 13,250 |
| கடனாளிகள் | 29,300 | 17,400 |
| மனைத்துணைப் பொருள் : | | |
| ஈரோடு | 4,500 | — |
| காஞ்சி | 1,700 | — |
| பொறிவகை : | | |
| ஈரோடு | 20,000 | — |
| காஞ்சி | 10,500 | — |
| உற்பத்திச் செலவுகள் | 15,400 | 7,500 |
| விற்பனை | 1,60,640 | 88,430 |
| தலைமையகக் கணக்கு | — | 20,500 |
| தலைமையகத்திற்குத் திருப்பி அனுப்பிய சரக்கு | — | 500 |
| வங்கி | 7,550 | 2,100 |
| கிளைக் கணக்கு | 25,000 | — |
| கிளை திருப்பி அனுப்பிய சரக்கு | 500 | — |
| முதல் கணக்கு | 45,500 | — |

(1) தேய்மானம் நீக்க வேண்டியது :
பொறி வகை 5 % மனைத்துணைப் பொருள் 10 %

(2) முன்கூட்டிச் செலுத்திய காப்பீடு :
கிளை ரூ. 100.

(3) கொடுபட வேண்டிய ஊதியம் :
தலைமையகம் ரூ. 600; கிளை ரூ. 300.

(4) இறுதிச் சரக்கிருப்பு :
தலைமையகம் ரூ. 26,400; கிளை ரூ. 20,600.

மேற்சொன்ன விவரங்களிலிருந்து பத்திகளையுடைய வாணிக, இலாப-நட்டக் கணக்கையும், 1973 திசம்பர் 31-ற்குரிய பூம்புகார்த் துணிக்கடையின் தொகுக்கப் (consolidated) பெற்ற இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க. தலைமையக ஏடுகளில் கிளைக் கணக்குகளை இணைக்கத் தேவையான குறிப் பேட்டுப் பதிவுகளையும் தருக. கிளைக் கணக்கையும் தயார் செய்க.

**விடை :**

## குறிப்பேட்டுப் பதிவு

### தலைமையக ஏட்டில்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 1973 | | | | |
| திச. 31 | காஞ்சிக் கிளைக் க/கு ப | | 695 | |
| | காஞ்சிப் பொறிக் க/கு | | | 525 |
| | காஞ்சி மனைத்துணைப் பொருள் க/கு | | | 170 |
| | (காஞ்சிக் கிளையின் சொத்துகள் மீது நீக்க வேண்டிய தேய்மானம்.) | | | |
| ,, | காஞ்சிக் கிளை வாணிகக் க/கு ப | | 97,700 | |
| | காஞ்சிக் கிளைக் க/கு | | | 97,700 |

## குறிப்பேட்டுப் பதிவு—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1973 | | | ரூ. | ரூ. |
| திச. 31 | [இருப்பாய்விலுள்ள கீழ்க்கண்ட கணக்குகளைக் கிளையின் வாணிகக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல :<br>தொடக்கச் சரக்கிருப்பு ரூ. 12,700<br>கொள்முதல் (திருப்பம் போக) ரூ. 20,000<br>தலைமையகத்திலிருந்து பெற்ற சரக்கு (திருப்பம் போக) ரூ. 50,000<br>கூலி (கொடுபட வேண்டியது உட்பட) ரூ. 7,500<br>உற்பத்திச் செலவுகள் ரூ. 7,500] | | | |
| ,, | காஞ்சிக் கிளைக் க/கு ப | | 1,09,030 | |
| | காஞ்சிக் கிளை வாணிகக் க/கு<br>(கிளையின் விற்பனையையும், சரக்கிருப்பையும் கிளை வாணிகக் கணக்கிற்குக் கொண்டுவர :<br>விற்பனை ரூ. 88,430<br>இறுதிச் சரக்கிருப்பு ரூ. 20,600) | | | 1,09,030 |
| ,, | காஞ்சிக் கிளை வாணிகக் க/கு ப | | 11,330 | |
| | காஞ்சிக் கிளை இலாப-நட்டக் க/கு | | | 11,330 |

## குறிப்பேட்டுப் பதிவு—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 1973 திச. 31 | (காஞ்சிக் கிளையின் மொத்த இலாபத்தைக் காஞ்சிக் கிளையின் இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| ,, | காஞ்சிக் கிளை இலாப-நட்டக் க/கு ப | | 5,995 | |
| | காஞ்சிக் கிளைக் க/கு | | | 5,995 |
| | [கீழ்க்கண்ட கிளையின் செலவுகளைக் கிளையின் இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல : வாடகை ரூ. 1,200 ஊதியம் ரூ. 3,600 காப்பீடு (முன்கூட்டிச் செலுத்தியது நீங்க) ரூ. 500 தேய்மானம் ரூ. 695] | | | |
| ,, | காஞ்சிக் கிளைக் க/கு ப | | 120 | |
| | காஞ்சிக் கிளை இலாப-நட்டக் க/கு | | | 120 |
| | (ஈட்டிய தள்ளுபடியைக் கிளையின் இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல.) | | | |
| ,, | காஞ்சிக் கிளை இலாப-நட்டக் க/கு ப | | 5,455 | |
| | பொது இலாப-நட்டக் க/கு | | | 5,455 |

குறிப்பேட்டுப் பதிவு—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1973 திச. 31 | (காஞ்சிக் கிளையின் நிகர இலாபத்தைப் பொது இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல.) | | ரூ. | ரூ. |
| ,, | காஞ்சிக் கிளை இறுதிச் சரக்கிருப்பு | ப | 20,600 | |
| | காஞ்சிக் கிளைக் கடனாளிகள் | ப | 17,400 | |
| | வழியிடை ரொக்கம் | ப | 4,500 | |
| | காஞ்சிக் கிளை வங்கி | ப | 2,100 | |
| | காஞ்சிக் கிளை முன்கூட்டிச் செலுத்திய ஈட்டுறுதி | ப | 100 | |
| | காஞ்சிக் கிளைக் க/கு | | | 44,700 |
| | (கிளையின் பல்வகைச் சொத்துகளை தலைமையக ஏடுகளில் இணைக்க.) | | | |
| ,, | காஞ்சிக் கிளைக் க/கு | ப | 13,550 | |
| | காஞ்சிக் கிளைக் கடனீந்தோர் | | | 13,250 |
| | காஞ்சிக் கிளை கொடுபட வேண்டிய கூலி | | | 300 |
| | (காஞ்சிக் கிளையின் பொறுப்புகளைத் தலைமையக ஏடுகளில் இணைக்க.) | | | |

**குறிப்பு :**

தலைமையக ஏட்டில் காஞ்சிக் கிளைக் கணக்கு ரூ. 25,000 பற்று இருப்பைக் காட்டுகிறது. ஆனால், காஞ்சிக் கிளையின் ஏட்டில் தலைமையகக் கணக்கு ரூ. 20,500 வரவு இருப்பைக் காட்டுகிறது. இவ்விரண்டிற்குமுள்ள வேற்றுமைத் தொகையான ரூ. 4,500 காஞ்சிக் கிளை அனுப்பித் தலைமையகத்தை வந்து சேராத ரொக்கம் என்று ஊகிக்கலாம். இதனை 'வழியிடை ரொக்கம்' (Cash in transit) என்கிறோம். இப்பொழுது கிளைக் கணக்கு பக்கம் 250-ல் கண்டவாறிருக்கும்.

பற்று **காஞ்சிக் கிளைக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 திச. 31 | இருப்பு கீ/கொ .. | | 25,000 | 1973 திச. 31 | காஞ்சிக் கிளை வாணிகக் க/கு— தொடக்கச் சரக்கிருப்பு முதலியவை .. | | 97,700 |
| ,, | காஞ்சிக் கிளைச் சொத்துகள் —தேய்மானம் .. | | 695 | ,, | காஞ்சிக் கிளை இலாப-நட்டக் க/கு— செலவுகள் .. | | 5,995 |
| ,, | காஞ்சிக் கிளை வாணிகக் க/கு— விற்பனை முதலியவை .. | | 1,09,030 | ,, | பல்வகைச் சொத்துகள் : (ரூ.) சரக்கிருப்பு 20,600; கடனாளிகள் 17,400; வழியிடை ரொக்கம் 4,500; வங்கி 2,100; முன்கூட்டிச் செலுத்திய காப்பீடு 100 | | 44,700 |
| ,, | காஞ்சிக் கிளை— இலாப-நட்டக் க/கு— தள்ளுபடி .. | | 120 | | | | |
| ,, | பல்வகைப் பொறுப்புகள் : கடனீந்தோர் ரூ. 13,250; கொடுபட வேண்டிய கூலி ரூ. 300 | | 13,550 | | | | |
| | | | 1,48,395 | | | | 1,48,395 |

**பூம்புகார்த் துணிக் கடையின் 1973 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான வாணிக, இலாப-நட்டக் கணக்கு.**

பற்று | வரவு

| விவரம் | தலைமையகம் ரூ. | காஞ்சிக் கிளை ரூ. | விவரம் | தலைமையகம் ரூ. | காஞ்சிக் கிளை ரூ. |
|---|---|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு .. | 21,400 | 12,700 | கிளைக்கனுப்பிய சரக்கு .. | 50,000 | |
| கொள்முதல் (திருப்பம் நீங்க) .. | 1,00,000 | 20,000 | விற்பனை .. | 1,60,640 | 88,430 |
| தலைமையகத்திலிருந்து பெற்ற சரக்கு ரூ. 50,500<br>கழி : திருப்பம் ரூ. 500 | | 50,000 | இறுதிச் சரக்கிருப்பு .. | 26,400 | 20,600 |
| கூலி (கொடுபட வேண்டிய துட்பட) .. | 16,000 | 7,500 | | | |
| உற்பத்திச் செலவுகள் .. | 15,400 | 7,500 | | | |
| மொத்த இலாபம் கீ/இ .. | 84,240 | 11,330 | | | |
| | 2,37,040 | 1,09,030 | | 2,37,040 | 1,09,030 |

**இலாப-நட்டக் கணக்கு—(தொடர்ச்சி)**

| விவரம் | தலைமையகம் ரூ. | காஞ்சிக் கிளை ரூ. | விவரம் | தலைமையகம் ரூ. | காஞ்சிக் கிளை ரூ. |
|---|---|---|---|---|---|
| வாடகை .. | 5,000 | 1,200 | மொத்த இலாபம் கீ/கொ | 84,240 | 11,330 |
| ஊதியம் .. | 18,500 | 3,600 | ஈட்டிய தள்ளுபடி .. | 430 | 120 |
| காப்பீடு (முன்கூட்டிச் செலுத்தியது நீங்கலாக) | 2,500 | 500 | | | |
| தேய்மானம் : | | | | | |
| பொறிவகை 5 சதவீதம் | 1,000 | 525 | | | |
| மனைத்துணைப்பொருள் 10 சதவீதம் .. | 450 | 170 | | | |
| முதல் க/கு—நிகர இலாபம் | 57,220 | 5,455 | | | |
| | 84,670 | 11,450 | | 84,670 | 11,450 |

## பூம்புகார்த் துணிக் கடையின்

### 1973 திசம்பர் 31-ற்கான இருப்பு நிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | ரூ. | ரூ. | சொத்துகள் | ரூ. | ரூ. |
|---|---|---|---|---|---|
| முதல் கணக்கு .. | 45,500 | | பொறிவகை : | | |
| கூட்டு : நிகர இலாபம் | | | தலைமையகம் | 20,000 | |
| தலைமையகம் .. | 57,220 | | கிளை .. | 10,500 | |
| காஞ்சிக் கிளை .. | 5,455 | | | | |
| | | 1,08,175 | | 30,500 | |
| | | | கழி : தேய்மானம் .. | 1,525 | |
| | | | | | 28,975 |
| கடனீந்தோர் : | | | மனைத்துணைப்பொருள் : | | |
| தலைமையகம் .. | 20,180 | | | | |
| | | | தலைமையகம் .. | 4,500 | |
| காஞ்சிக் கிளை .. | 13,250 | | கிளை .. | 1,700 | |
| | | 33,430 | | | |
| | | | | 6,200 | |
| | | | கழி : தேய்மானம் .. | 620 | |
| | | | | | 5,580 |

## 1973 திசம்பர் 31-ற்கான இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)

| பொறுப்புகள் | ரூ. | ரூ. | சொத்துகள் | ரூ. | ரூ. |
|---|---|---|---|---|---|
| கொடுபடவேண்டிய கூலி : | | | இறுதிச் சரக்கிருப்பு : | | |
| தலைமையகம் .. | 600 | | தலைமையகம் .. | 26,400 | |
| | | | கிளை .. | 20,600 | |
| காஞ்சிக் கிளை .. | 300 | | | | 47,000 |
| | | 900 | | | |
| | | | கடனாளிகள் : | | |
| | | | தலைமையகம் .. | 29,300 | |
| | | | கிளை .. | 17,400 | |
| | | | | | 46,700 |
| | | | முன்கூட்டிச் செலுத்திய காப்பீடு (கிளை) .. | | 100 |
| | | | வங்கி : | | |
| | | | தலைமையகம் .. | 7,550 | |
| | | | கிளை .. | 2,100 | |
| | | | வழியிடைரொக்கம் .. | 4,500 | |
| | | | | | 14,150 |
| | | 1,42,505 | | | 1,42,505 |

மேற்கண்ட முறையில் கிளையின் கணக்குகளைத் தலைமையகக் கணக்குகளுடன் இணைக்கும்பொழுது, தலைமையகக் கணக்கும் கிளைக் கணக்கும் இருப்புநிலைக் குறிப்பில் இடம் பெறுவதில்லை என்பதை உணரலாம். அதற்குக் காரணம், கிளைக் கணக்கிற்குப் பதிலாக கிளையினுடைய சொத்துகளும், பொறுப்புகளும் தலைமையக இருப்புநிலைக் குறிப்பில் இடம்பெறுவதே ஆகும். இக் கிளையினுடைய சொத்துகளையும் பொறுப்புகளையும் தலைமையகத்தின் இருப்புநிலைக் குறிப்பில் காண்பிக்கவேண்டியதில்லை என்றால், அப்பொழுது கிளைக் கணக்கின் இருப்பு, இருப்புநிலைக் குறிப்பில் இடம்பெறும்.

### வேறொரு முறை

இம் முறையில் கிளை வாணிக, இலாப-நட்டக் கணக்கு ஒரு குறிப்புக் கணக்காக (Memorandum account) மட்டும் தயாரிக்கப்படுகிறது. இது உணர்த்தும் நிகர இலாபத்தை அல்லது நிகர நட்டத்தை மாற்றுவதற்காக மட்டில் பதிவு செய்தால் போதும். வாணிக, இலாப-நட்டக் கணக்குகளை இணைப்பதற்குத் தேவையான எல்லாப் பதிவுகளும் இப்பொழுது தேவையில்லை. எனவே, முதல் முறையில் விளக்கப்பட்ட முதல் ஆறு பதிவுகளுக்குப் பதிலாக கீழ்க்கண்ட பதிவினை மட்டும் செய்தால் போதும்.

குறிப்புக் கிளை இலாப-நட்டக் கணக்கு நிகர இலாபத்தை உணர்த்துமாயின், கிளைக் கணக்கில் பற்றும், பொது இலாப-நட்டக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

அவ்வாறின்றிக் குறிப்புக் கிளை இலாப-நட்டக் கணக்கு நிகர நட்டத்தை உணர்த்துமாயின், பொது இலாப-நட்டக் கணக்கில் பற்றும், கிளைக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

மேற்சொன்ன எடுத்துக்காட்டை இம் முறையில் செய்ய வேண்டுமானால், தலைமையகத்தின் ஏடுகளில் கீழ்க்கண்ட பதிவுகள் தேவைப்படுகின்றன.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| காஞ்சிக் கிளைக் க/கு | ப | 695 | |
| கிளைப் பொறிக் க/கு | | | 525 |
| கிளை மனைத்துணைப் பொருள் க/கு | | | 170 |
| (கிளைச் சொத்துகள் மீதான தேய்மானத்தைக் கிளைக் கணக்கில் பதிய.) | | | |

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| காஞ்சிக் கிளைக் க/கு | ப | 5,455 | |
| பொது இலாப-நட்டக் க/கு | | | 5,455 |
| (கிளை இலாப-நட்டத்தை உணர்த்தும் இலாபத்தைப் பொது இலாப-நட்டக் கணக்கிற்கெடுத்துச் செல்ல.) | | | |

இரண்டாம் முறையில் பதிவு செய்தால் அதாவது, கிளையின் வாணிக, இலாப-நட்டக் கணக்குகளை இலாப-நட்டத்தை உணர்த்தும் ஒரு குறிப்புக் கணக்காக மட்டும் தயாரித்துக் கிளைக் கணக்கைப் பின்னர்த் தயார் செய்ய வேண்டியிருப்பின், அது கீழ்க்கண்டவாறிருக்கும்.

**காஞ்சிக் கிளைக் கணக்கு**

பற்று | | வரவு

| நாள் | விவரம் | | ரூ. | நாள் | விவரம் | | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 | | | | 1973 | | | |
| திச. 31 | இருப்பு கீ/கொ .. | | 25,000 | திச. 31 | இருப்பு கீ/இ .. | | 31,150 |
| ,, | கிளைச் சொத்துகள்—தேய்மானம் .. | | 695 | | | | |
| ,, | பொது இலாப-நட்டக் க/கு—கிளையின் இலாபம் | | 5,455 | | | | |
| | | | 31,150 | | | | |
| 1974 | | | | | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 31,150 | | | | 31,150 |

கிளையின் இருப்புக் கணக்கு எப்பொழுதும் கிளையிலுள்ள நிகர சொத்துகளைக் குறிக்கும். மேற்சொன்ன எடுத்துக்காட்டில், தலைமையக ஏட்டில் இப்பொழுதுள்ள கிளைக் கணக்கானது ரூ. 31,150-ஐப் பற்றிருப்பாகக் காட்டுகிறது. இதைக் கீழ்க்கண்டவாறு நிரூபிக்கலாம்.

| | | ரூ. |
|---|---|---|
| இறுதிச் சரக்கிருப்பு | | 20,600 |
| கடனாளிகள் | | 17,400 |
| முன்கூட்டிச் செலுத்திய ஈட்டுறுதி | | 100 |
| வங்கி | | 2,100 |
| வழியிடை ரொக்கம் | | 4,500 |
| | | 44,700 |
| **கழி:** | | |
| கடனீந்தோர் | 13,250 | |
| கொடுபட வேண்டிய கூலி | 300 | |
| | | 13,550 |
| நிகர சொத்துகள்-கிளையின் இருப்பு | | 31,150 |

தலைமையக ஏட்டில் முன் எடுத்துக்காட்டில் விளக்கியவாறே கிளைச் சொத்துகளையும், பொறுப்புகளையும் தலைமையக ஏட்டில் கொண்டுவர வேண்டுமாயின், காஞ்சிக் கிளைக் கணக்கு, கீழ்க்கண்டவாறிருக்கும்.

**காஞ்சிக் கிளைக் கணக்கு**

பற்று வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 திச. 31 | இருப்பு கீ/கொ .. | | 25,000 | 1973 திச. 31 | காஞ்சிக் கிளைச் சொத்துகள் .. | | 44,700 |
| ,, | கிளைச் சொத்துகள்—தேய்மானம் .. | | 695 | | | | |
| ,, | பொது இலாப-நட்டக் க/கு—இலாபம் .. | | 5,455 | | | | |
| ,, | கிளைப் பொறுப்புகள் .. | | 13,550 | | | | |
| | | | 44,700 | | | | 44,700 |

## எடுத்துக்காட்டு 23

பம்பாயிலுள்ள ட்ருப்லக்ஸ் நிறுவனம் தனது பூனுவிலுள்ள கிளைக்கு அடக்கவிலையுடன் 25 சதவீதம் சேர்த்து சரக்கு அனுப்புகிறது. கிளை தனக்குத் தேவையான சரக்கையும் அதுவே வாங்கிக் கொள்கிறது.

1970 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டிற்கான தலைமையகத்தின் இருப்பாய்வு கீழ் உள்ளவாறு இருந்தது.

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| முதல் | | 2,50,000 |
| பலவகை நிலைச் சொத்துகள் | 1,50,000 | |
| சரக்கிருப்பு | 60,000 | |
| கடனாளிகள் | 58,000 | |
| கடனீந்தோர் | | 43,000 |
| வங்கி | 17,500 | |
| கிளைக்கு அனுப்பிய சரக்கு (அடக்க விலையில்) | | 1,50,000 |
| கிளையிலிருந்து திரும்பி வந்த சரக்கு (அடக்க விலையில்) | 5,000 | |
| பூனுக் கிளை | 2,96,000 | |
| கொள்முதல் | 10,50,000 | |
| விற்பனை | | 12,50,000 |
| பற்பல செலவுகள் | 56,500 | |
| | 16,93,000 | 16,93,000 |

இறுதிச் சரக்கிருப்பு :
தலைமையகம் ரூ. 50,000

கிளை (அடக்க விலையில்) ரூ. 1,00,000. (இது தலைமையகத்திலிருந்து கிளைக்கு இடாப்பு விலையில் அனுப்பப்பட்டு வழியிலுள்ள ரூ. 10 000-க்கான சரக்கை உள்ளடக்காது).

1970 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டிற்கான பூனக் கிளையின் ஏடுகளில் காணப்படும் இருப்புகள் கீழ்க் கொடுக்கப்பட்டுள்ளன.

| | ரூ. |
|---|---|
| கொள்முதல் (தலைமையகத்திலிருந்து வந்த சரக்கை உள்ளடக்காது). | 5,80,000 |
| விற்பனை | 6,50,000 |
| கடனாளிகள் | 35,000 |
| கடனீந்தோர் | 21,000 |
| நிலைச் சொத்துகள் | 1,00,000 |
| பொதுச் செலவுகள் | 41,000 |
| வங்கி (தலைமையகம் கிளைக்கு அனுப்பிய வழியில் ரொக்கம் ரூ. 10,000-த்திற்கான ரொக்கத்தைக் கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை). | 2,500 |
| தொடக்கச் சரக்கிருப்பு (இச் சரக்கிருப்பு முழுவதும் வெளியில் வாங்கிய பொருள்களாகும்). | 53,500 |

நிலைச் சொத்துகள் மீது 10% தேய்மானம் நீக்குக.

மேற்கண்ட தகவல்களிலிருந்து தொகுக்கப் பெற்ற வாணிக இலாப-நட்டக் கணக்குகளையும் (தலைமையகம், கிளை, இவற்றின் இலாப-நட்டங்களைக் காட்டும்வண்ணம்) இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(C. A. Inter. 1971)

**விடை :**

இறுதிக் கணக்குகளைத் தயாரிக்குமுன், கிளையின் இருப்பாய்வைத் தயாரித்தால், விட்டுவிட்ட இருப்புகளை உணர முடியும்.

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| கொள்முதல் | 5,80,000 | |
| தலைமையகத்திலிருந்து பெற்ற சரக்கு | 1,40,000 | |
| விற்பனை | | 6,50,000 |
| கடனாளிகள் | 35,000 | |
| கடனீந்தோர் | | 21,000 |
| நிலைச் சொத்துகள் | 1,00,000 | |
| பொதுச் செலவுகள் | 41,000 | |
| வங்கி | 2,500 | |
| தொடக்கச் சரக்கிருப்பு | 53,500 | |
| தலைமையகத்திற்குத் திருப்பியனுப்பிய சரக்கு | | 5,000 |
| தலைமையகக் கணக்கு | | 2,76,000 |
| | 9,52,000 | 9,52,000 |

கணக்கில், தலைமையகத்தின் இருப்பாய்வில், கிளைக்கு அனுப்பிய சரக்கு என ரூ. 1,50,000 கொடுக்கப்பட்டிருக்கிறது. குறிப்பில், கிளைக்கு அனுப்பி, ஆனால் வழியிடையுள்ள சரக்கு ரூ. 10,000 அடங்கியிருக்கிறது. எனவே, கிளையைப் பொருத்த வரை, அது தலைமையகத்திலிருந்து பெற்ற சரக்கு ரூ. 1,40,000 என்பது தெளிவாகும்.

தலைமையகத்திலுள்ள கிளைக் கணக்கு ரூ. 2,96,000 பற்றிருப்பையும், கிளையிலுள்ள தலைமையகக்கணக்கு ரூ. 2,76,000 வரவிருப்பையும் காட்டுகிறது. இந்த ரூ. 20,000 வேற்றுமைத் தொகைக்குக் காரணம் :

| | | |
|---|---|---|
| வழியிடைச் சரக்கு (தலைமையகம் அனுப்பிக் கிளையைச் சேராத சரக்கு.) | ரூ. | 10,000 |
| வழியிடை ரொக்கம் | ரூ. | 10,000 |
| | ரூ. | 20,000 |

## பம்பாய் டிரிப்லக்ஸின் 1970 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான வாணிக, இலாப-நட்டக் கணக்கு

பற்று | வரவு

| விவரம் | தலைமையகம் ரூ. | கிளை ரூ. | மொத்தம் ரூ. | விவரம் | தலைமையகம் ரூ. | கிளை ரூ. | மொத்தம் ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு | 60,000 | 53,500 | 1,13,500 | விற்பனை | 12,50,000 | 6,50,000 | 19,00,000 |
| கொள்முதல் | 10,50,000 | 5,80,000 | 16,30,000 | கிளைக்கனுப்பிய சரக்கு (திருப்பம் நீங்க.) | 1,16,000 | — | 1,16,000 |
| தலைமையகத்திலிருந்து பெற்ற சரக்கு (திருப்பம் நீங்க) | — | 1,08,000 | 1,08,000 | இறுதிச் சரக்கிருப்பு | 50,000 | 1,00,000 | 1,50,000 |
| மொத்த இலாபம் கீ/இ | 3,06,000 | 8,500 | 3,14,500 | | | | |
| | 14,16,000 | 7,50,000 | 21,66,000 | | 14,16,000 | 7,50,000 | 21,66,000 |
| பற்பல செலவுகள் | 56,500 | 41,000 | 97,500 | மொத்த இலாபம் கீ/கொ | 3,06,000 | 8,500 | 3,14,500 |
| தேய்மானம் | 15,000 | 10,000 | 25,000 | நிகர நட்டம் | | 42,500 | |
| நிகர இலாபம் | 2,34,500 | — | 1,92,000 | | | | |
| | 3,06,000 | 51,000 | 3,14,500 | | 3,06,000 | 51,000 | 3,14,500 |

## பம்பாய் டிரிப்லக்ஸின் 1970 திசம்பர் 31-ற்கான இருப்பு நிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | ரூ. | ரூ. | சொத்துகள் | ரூ. | ரூ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|
| | | | நிலைச் சொத்துகள் : | | | |
| முதல் .. | 2,50,000 | | தலைமையகம் .. | 1,50,000 | | |
| கூட்டு : | | | கழி : தேய்மானம் .. | 15,000 | | |
| நிகர இலாபம் .. | 1,92,000 | | | | 1,35,000 | |
| | | 4,42,000 | கிளை .. | 1,00,000 | | |
| | | | கழி : தேய்மானம் .. | 10,000 | | |
| கடனீந்தோர் : | | | | | 90,000 | |
| தலைமையகம் .. | 43,000 | | | | | 2.25,000 |
| | | | சரக்கிருப்பு : | | | |
| கிளை .. | 21,000 | | தலைமையகம் .. | 50,000 | | |
| | | 64,000 | கிளை .. | 1,00,000 | | |
| | | | வழியிடை .. | 8,000 | | |
| | | | | | | 1,58,000 |
| | | | கடனாளிகள் : | | | |
| | | | தலைமையகம் .. | 58,000 | | |
| | | | கிளை .. | 35,000 | | |
| | | | | | | 93,000 |
| | | | வங்கி : | | | |
| | | | தலைமையகம் .. | 17,500 | | |
| | | | கிளை .. | 2,500 | | |
| | | | வழியிடை .. | 10,000 | | |
| | | | | | | 30,000 |
| | | 5,06,000 | | | | 5,06,000 |

**விளக்கக் குறிப்பு :**

**(அ) கிளைக்கனுப்பிய சரக்கு**

| | | |
|---|---|---|
| கிளைக்கனுப்பியது | ரூ. | 1,50,000 |
| **கழி :** திரும்பப் பெற்றது | ரூ. | 5,000 |
| | ரூ. | 1,45,000 |

இது விற்பனை விலையிலுள்ளதால், அடக்க விலையைக் கண்டுபிடிக்க வேண்டும்.

ரூ. 125 விற்பனை விலையாயின் அடக்கவிலை ரூ. 100
ரூ. 1,45,000 ,, ,,

$$\frac{100 \times 1,45,000}{125}$$

= ரூ. 1,16,000

**(ஆ) தலைமையகத்திலிருந்து பெற்ற சரக்கு**

தலைமையகத்திலிருந்து பெற்றது ரூ. 1,35,000
இதன் அடக்கவிலை

ரூ. 125 விற்பனை விலையாயின் அடக்க விலை ரூ. 100
ரூ. 1,35,000 ,, ,,

$$\frac{100 \times 1,35,000}{125}$$

= ரூ. 1,08,000

**(இ) வழியிடைச் சரக்கு**

வழியிடையிலுள்ள சரக்கு ரூ. 10,000
இதன் அடக்கவிலை

$$\frac{10,000 \times 100}{125}$$

= ரூ. 8,000

## 5. வெளிநாட்டுக் கிளைகள் (Foreign Branches)

வெளிநாட்டுக் கிளைகளும் தனித்து இயங்கும் தன்மை வாய்ந்தவை. பலவகை நடவடிக்கைகளையும் அவைகளே தமது ஏடுகளில் முழுமையாகப் பதிந்து வருகின்றன. எனவே, முன் முறையில் விளக்கியவாறே இவ் வகைக் கிளைகளும் கணக்கு எழுதிச் செயல்படுகின்றன. ஆனால், அயல்நாட்டுக் கிளைகள்

தலைமையகத்திற்கு அனுப்பும் இருப்பாய்வு கிளை செயல்படுகின்ற நாட்டின் நாணயத்தில் இருக்கும். இவற்றை எல்லாம் தலைமையகம் அமைக்கப்பெற்றுள்ள நாட்டின் நாணயத்திற்கு முதலில் மாற்றவேண்டும். எடுத்துக்காட்டாக, பம்பாயிலுள்ள தலைமையகம் தனது பாரீஸ் கிளையிலிருந்து பெறும் இருப்பாய்வு பிராங்கிலும், சென்னையிலுள்ள தலைமையகம் தனது அமெரிக்கக் கிளையிலிருந்து பெறும் இருப்பாய்வு டாலரிலும் காணப்பெறும். இவற்றை முதலில் நமது நாட்டு ரூபாய் நாணயத்திற்கு மாற்றிப் பின்னர்த் தலைமையகக் கணக்குகளோடு இவற்றை இணைக்கும் பதிவுகளைச் செய்யவேண்டும்.

**நாணய மாற்றம்** (Conversion of Currency)

கிளைக் கணக்குகளைத் தலைமையகம் இருக்கும் நாட்டின் நாணயத்திற்கு மாற்றுவதற்குப் பொதுவாகக் கீழ்க்கண்ட விதி முறைகள் பின்பற்றப்படுகின்றன.

**(1) நிலைச் சொத்துகள்** (Fixed Assets) :

கிளை வாங்கி இருக்கும் சொத்துகளைத் தலைமையகத்தின் ஏடுகளில் மாற்றுவதற்கு, சொத்துகள் வாங்கப்பட்ட நாளில் என்ன விகிதத்தில் நாணய மாற்று இருந்ததோ, அந்த விகிதத்தில் அவை மாற்றப் பெறவேண்டும். அதே விகிதமே எல்லா ஆண்டுகளுக்கும் பொருந்தும். (தேர்வுகளில் இத் தகவல் கொடுக்கப்படவில்லையெனில், இவ் வாண்டின் தொடக்கத்தில் நிலவிய மாற்று விகிதத்தில் நிலைச் சொத்துகள் மாற்றப்பெற வேண்டும்.)

**(2) நிலைப் பொறுப்புகள்** (Fixed Liabilities) :

கிளைக்குரிய நிலைப் பொறுப்புக் கணக்குகளைத் தலைமையக ஏடுகளில் வைத்திருக்க வேண்டுமாயின், பொறுப்பு ஏற்கப்பட்ட நாளில் நிலவிய நாணயமாற்று விகிதத்தில் இப் பதிவுக்கு மாற்றப்படவேண்டும்.

**(3) மிதக்கும் சொத்துகளும் பொறுப்புகளும் அல்லது நடப்புச் சொத்துகளும் பொறுப்புகளும்** (Floating or Current Assets and Liabilities) :

அவை ஆண்டின் இறுதி நாளில் நிலவும் மாற்று விகிதத்தில் மாற்றிப் பதிவு செய்யவேண்டும்.

**(4) நடைமுறைக் கணக்குகள் அதாவது, வாணிகக் கணக்கிலும் இலாப - நட்டக் கணக்கிலும் இடம்பெறும் கணக்குகள் :**

அவ்வாண்டில் நிலவிய சராசரி நாணய மாற்று விகிதத்தில் அவை மாற்றப் பெறவேண்டும். தொடக்கச் சரக்கிருப்பு ஆண்டின் தொடக்க நாளில் நிலவிய மாற்று விகிதத்திலும், இறுதிச் சரக்கிருப்பு ஆண்டின் இறுதி நாளில் நிலவிய மாற்று விகிதத்திலும் மாற்றப்பெற வேண்டும்.

ஆனால், இவ் வாண்டில் நாணய மதிப்பு குறைக்கப்பட்டிருப்பின் (Devaluation), நடைமுறை இனங்கள் அவ் வாண்டு இறுதியில் நிலவிய மாற்று விகிதத்தில்தான் மாற்றப் பெறவேண்டுமென்பதை மறக்கக் கூடாது.

கிளையிலிருந்து பணம் பெறும்பொழுது, தலைமையகத்தில் எத் தொகை பெறப்படுகிறதோ, அம் மதிப்பிலேயே பதிவு செய்ய வேண்டும். அதாவது, இத் தொகையைக் கணக்கிட்டு மாற்றக் கூடாது. எடுத்துக்காட்டாக, நெய்ரோவிலுள்ள கிளை 20,000 ஷில்லிங்குகளைத் தனது இந்திய தலைமையகத்திற்கு அனுப்புவதாகவும், தலைமையகம் ரூ. 19,960 பெற்றதாகவும் கொண்டால் 20,000 ஷில்லிங்குகளை ரூ. 19,960 ஆக மாற்றவேண்டுமேயன்றி, மாற்று விகிதத்தில் கணக்கிடக் கூடாது. அவ்வாறே, கிளையின் இருப்பாய்வில் காணப்பெறும் தலைமையகக் கணக்கும் அவற்றுடன் தொடர்பு பெற்ற பிற கணக்குகளும் தலைமையக ஏட்டில் கிளைக் கணக்கில் காணப்பெறும் தொகைகட்கே மாற்றப் பெறவேண்டும். இருப்பாய்வில் காணப்படும் பலவகைக் கணக்குகளும் வெவ்வேறு நாணய மாற்று விகிதத்தில் மாற்றப் பட்ட பிறகு இருப்பாய்வின் பற்று இருப்புகளின் மொத்தமும், வரவு இருப்புகளின் மொத்தமும் ஒன்றாக இராது. இவற்றிற்கிடையேயுள்ள வேறுபாட்டுத் தொகையை 'நாணயமாற்றின் வேறுபாடு' (Difference in Conversion) எனும் கணக்கில் பதிய வேண்டும். இருப்பாய்வில் எந்தப் பகுதி குறைவாக உள்ளதோ அப் பகுதியில் எழுதி, இறுதியில் அக் கணக்கை இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்லவேண்டும்.

## எடுத்துக்காட்டு 24

மதுரை நிறுவனத்திற்கு இலண்டனில் ஒரு கிளையிருக்கிறது. 1968 திசம்பர் 31-ல் இலண்டன் கிளையின் இருப்பாய்வு கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கிறது.

| | பற்று | வரவு |
|---|---|---|
| | £. | £. |
| தொடக்கச் சரக்கிருப்பு | 1,200 | |
| மனைத்துணைப் பொருள் | 800 | |
| கொள்முதல் | 8,000 | |
| விற்பனை | | 67,550 |
| ஊதியம் | 5,000 | |
| வாடகை | 900 | |
| கடனாளிகள் | 4,000 | |
| சுமைக் கூலி | 200 | |
| தலைமையகத்திலிருந்து பெற்ற சரக்கு | 60,000 | |
| விளம்பரம் | 500 | |
| காப்பீடு | 600 | |
| ஈட்டிய தள்ளுபடி | | 300 |
| ரொக்கம் | 150 | |
| வங்கி | 1,500 | |
| தலைமையகக் கணக்கு | | 15,000 |
| | 82,850 | 82,850 |

1. கீழ்க்கண்டவாறு நாணயமாற்று விகிதம் நிலவியது :

| | | | |
|---|---|---|---|
| 1968 சனவரி 1 | £ = | ரூ. | 17-50 |
| 1968 திசம்பர் 31 | £ = | ரூ. | 18-50 |
| விழுக்காட்டு விகிதம் (Average) | £ = | ரூ. | 18-00 |

2. 1968 திசம்பர் 31-ல் கிளையின் இறுதிச் சரக்கிருப்பு £ 14,000 என மதிப்பிடப்பட்டது.

3. மனைத்துணைப் பொருள் 1964-ல் வாங்கப்பட்டது. அப்பொழுது £ 1 = ரூ. 14 என மாற்று விகிதம் இருந்தது.

4. தலைமையகத்தில் கிளைக் கணக்கு ரூ. 2,55,000 பற்றிருப்பைக் காட்டியது. கிளைக்கனுப்பிய சரக்குக் கணக்கு ரூ. 11,40,000 வரவிருப்பைக் காட்டியது.

கிளை இருப்பாய்வை ரூபாய் நாணயத்திற்கு மாற்றி, 1968 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான கிளையின் வாணிக இலாப-நட்டக் கணக்கினைத் தயாரிக்கவும். அத்துடன் மதுரை நிறுவனத்தின் தலைமையக ஏட்டில் இலண்டன் கிளைக் கணக்கையும் தயாரிக்கவும். மனைத்துணைப் பொருள்மீது 10 சதவீதம் தேய்மானம் நீக்கப்படவேண்டும்.

விடை :

## 1968 திசம்பர் 31-ற்கான இலண்டன் கிளையின் இருப்பாய்வு

| | விகிதம் ரூ. | பற்று £ | வரவு £ | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு .. | 17.50 | 1,200 | | 21,000 | |
| மனைத்துணைப் பொருள் .. | 14.00 | 800 | | 11,200 | |
| கொள்முதல் .. | 18.00 | 8,000 | | 1,44,000 | |
| விற்பனை .. | 18.00 | | 67,550 | | 12,15,900 |
| ஊதியம் .. | 18.00 | 5,000 | | 90,000 | |
| வாடகை .. | 18.00 | 900 | | 16,200 | |
| கடனாளிகள் .. | 18.50 | 4,000 | | 74,000 | |
| சுமைக் கூலி .. | 18.00 | 200 | | 3,600 | |
| தலைமையகத்திலிருந்து பெற்றசரக்கு .. | — | 60,000 | | 11,40,000 | |
| விளம்பரம் .. | 18.00 | 500 | | 9,000 | |
| காப்பீடு .. | 18.00 | 600 | | 10,800 | |
| ஈட்டிய தள்ளுபடி .. | 18.00 | | 300 | | 5,400 |
| ரொக்கம் .. | 18.50 | 150 | | 2,775 | |
| வங்கி .. | 18.50 | 1,500 | | 27,750 | |
| தலைமையகக் கணக்கு .. | | | 15,000 | | 2,55,000 |
| நாணயமாற்றில் வேற்றுமை .. | | | | | 74,025 |
| | — | 82,850 | 82,850 | 15,50,325 | 15,50,325 |
| இறுதிச் சரக்கிருப்பு .. | 18.50 | 14,000 | | 2,59,000 | |

**1968 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான**
**இலண்டன் கிளையின் வாணிக, இலாப-நட்டக் கணக்கு**

| பற்று | ரூ. | வரவு | ரூ. |
|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு .. | 21,000 | விற்பனை .. | 12,15,900 |
| கொள்முதல் .. | 1,44,000 | இறுதிச் சரக்கிருப்பு .. | 2,59,000 |
| தலைமையகத்திலிருந்து பெற்ற சரக்கு .. | 11,40,000 | | |
| சுமைக் கூலி .. | 3,600 | | |
| மொத்த இலாபம் கீ/இ .. | 1,66,300 | | |
| | 14,74,900 | | 14,74,900 |
| ஊதியம் .. | 90,000 | மொத்த இலாபம் கீ/கொ | 1,66,300 |
| வாடகை .. | 16,200 | ஈட்டிய தள்ளுபடி .. | 5,400 |
| விளம்பரம் .. | 9,000 | நாணயமாற்றில் வேற்றுமை .. | 74,025 |
| காப்பீடு .. | 10,800 | | |
| தேய்மானம்—மனைத் துணைப்பொருள் .. | 1,120 | | |
| நிகர இலாபம் | 1,18,605 | | |
| | 2,45,725 | | 2,45,725 |

## இலண்டன் கிளைக் கணக்கு

| பற்று | | ரூ. | வரவு | ரூ. |
|---|---|---|---|---|
| 1968 | | | | |
| திச. 31 | இருப்பு கீ/கொ .. | 2,55,000 | கிளை வாணிகக் க/கு .. | |
| | கிளை வாணிகக் க/கு | | தொடக்கச் சரக்கிருப்பு ரூ. 21,000 | |
| | விற்பனை ரூ. 12,15,900 | | கொள்முதல் ரூ. 1,44,000 | |
| | இறுதிச் சரக்கிருப்பு ரூ. 2,59,000 | 14,74,900 | தலைமையகத்திலிருந்து பெற்ற சரக்கு ரூ. 11,40,000 | |
| | | | சுமைக் கூலி ரூ. 3,600 | 13,08,600 |
| | கிளை இலாப-நட்டக் க/கு | | கிளை இலாப-நட்டக் க/கு | |
| | ஈட்டிய தள்ளுபடி .. ரூ. 5,400 | | ஊதியம் ரூ. 90,000 | |
| | | | வாடகை ரூ. 16,200 | |
| | நாணயமாற்று | | விளம்பரம் ரூ. 9,000 | |
| | வேற்றுமை ரூ. 74,025 | 79,425 | காப்பீடு ரூ. 10,800 | |
| | | | தேய்மானம் ரூ. 1,120 | 1,27,120 |
| | | | இருப்பு கீ/இ .. | 3,73,605 |
| | | 18,09,325 | | 18,09,325 |
| | இருப்பு கீ/கொ .. | 3,73,605 | | |

வேறு வகையில் கிளைக் கணக்கைத் தயாரிக்கலாம். இம் முறையில் தயாரிக்கப்படும் இலாப - நட்டக் கணக்கு ஒரு குறிப்புக் கணக்காக (Memorandum) கருதப்படும்.

**இலண்டன் கிளைக் கணக்கு**

பற்று — வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1968 திச. 31 | இருப்பு கீ/கொ .. | | 2,55,000 | 1968 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 3,73,605 |
| | இலாப-நட்டக் க/கு— நிகர இலாபம் .. | | 1,18,605 | | | | |
| | | | 3,73,605 | | | | 3,73,605 |
| 1969 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 3,73,605 | | | | |

இலண்டன் கிளைக் கணக்குக் காட்டும் இருப்பு சரியானது தானு என்பதைக் கீழ்க்கண்டவாறு உணரலாம்.

**கிளையின் நிகர சொத்துகள்**

| | ரூ. |
|---|---|
| மனைத்துணைப் பொருள் (தேய்மானம் நீங்கிய பின்) | 10,800 |
| கடனாளிகள் | 74,000 |
| ரொக்கம் | 2,775 |
| வங்கி | 27,750 |
| இறுதிச் சரக்கிருப்பு | 2,59,000 |
| மொத்த சொத்துகளின் மதிப்பு | 3,73,605 |
| மொத்த பொறுப்புகள் | — |
| நிகர சொத்துகள் | 3,73,605 |

## வினாக்கள்

1. கிளைகளை எவ்வாறு வகைப்படுத்தலாம் ?
2. ரொக்கத்திற்கும் கடனுக்கும் விற்கும் கிளைகள் பற்றிய நடவடிக்கைகளைத் தலைமையகம் எவ்வாறு பதியும்?
3. விற்பனை விலையில் சரக்கை அனுப்பும்பொழுது தலைமையகம் ஆண்டிறுதியில் செய்ய வேண்டிய பதிவுகள் யாவை?
4. கிளையின் இருப்பாய்வை (Trial Balance) தலைமையகம் தனது ஏடுகளில் இணைத்துக்கொள்ளும்பொழுது செய்யவேண்டிய பதிவுகள் யாவை?
5. கிளைகட்கிடையே (Inter branch) ஏற்படும் நடவடிக்கைகளைத் தலைமையகம் எவ்வாறு பதியும்?
6. வெளிநாட்டுக் கிளைகளின் கீழ்க்கண்ட கணக்குகளைத் தலைமையகம் தனது நாட்டு நாணயத்திற்கு மாற்றும் பொழுது பின்பற்ற வேண்டிய விதிமுறைகள் யாவை?

அ. நிலைச் சொத்துகள்

ஆ. நிலைப் பொறுப்புகள்

இ. நடப்புச் சொத்துகளும், நடப்புப் பொறுப்புகளும்

7. சிறு குறிப்பு வரைக :

1. தலைமையகச் செலவுகள்

2. வழியிடைச் சரக்கு

3. வழியிடை ரொக்கம்

4. தனித்தியங்கும் கிளைகள்

5. கிளைகட்கும், துறைகட்கும் உள்ள வேறுபாடுகள்

6. அயல்நாட்டுக் கிளை

## பயிற்சி

1. சென்னையிலுள்ள பாப்புலர் டிரேடர்ஸ், மதுரையிலுள்ள தனது கிளைக்கு அடக்கவிலை மீது 25 சதவீதம் கூட்டிச் சரக்கு அனுப்புகிறது. கீழ்க்கண்ட விவரங்களிலிருந்து தலைமையகத்தின் ஏட்டில் கிளைக் கணக்கைத் தயாரிக்கவும்.

| | ரூ. |
|---|---|
| கிளைக்கு அனுப்பிய சரக்கு | 52,900 |
| மொத்த விற்பனை | 51,600 |
| ரொக்க விற்பனை | 26,600 |
| கிளைக் கடனாளியிடம் பெற்ற ரொக்கம் | 23,000 |
| 1966 சனவரி 1-ல் கிளைக் கடனாளிகள் | 6,000 |
| 1966 ,, கிளைச் சரக்கிருப்பு | 2,000 |
| 1966 திசம்பர் 31-ல் கிளைச் சரக்கிருப்பு | 3,500 |

(M. U. B. Com., Special A/cs, April, 1967)

2. சென்னையிலுள்ள ஒரு கம்பெனியின் தலைமையகம் தனது கிளைக்கு அடக்கவிலை மீது 25 சதவீதம் கூட்டிச் சரக்கு அனுப்புகிறது. கிளை விற்பனைப் பேரேட்டை வைத்திருக்கிறது. ஒவ்வொரு நாளும் பெறும் ரொக்கம் அனைத்தையும் தலைமை

யகத்துக்கு அனுப்பிவிடுகிறது. செலவுகள் அனைத்தும் சென்னை யிலிருந்து செய்யப்படுகின்றன. கீழ்க்கண்ட விவரங்களிலிருந்து 1968 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டுகளுக்கான கிளையின் வாணிக இலாப-நட்டக் கணக்கைத் தயாரிக்கவும்.

| | | ரூ. |
|---|---|---|
| 1968 | சனவரி 1-ல் சரக்கிருப்பு (இடாப்பு விலையில்) | 12,500 |
| 1968 | திசம்பர் 31-ல் சரக்கிருப்பு ,, | 15,000 |
| 1968 | சனவரி 1-ல் கடனாளிகள் | 7,000 |
| 1968 | திசம்பர் 31-ல் கடனாளிகள் | 9,000 |
| | ஆண்டின் மொத்த ரொக்க விற்பனை | 54,000 |
| | கடனாளியிடம் பெற்ற ரொக்கம் | 33,000 |
| | சென்னைத் தலைமையகத்திடமிருந்து அனுப்பப்பட்ட சரக்கு | 91,000 |
| | வாடகையும் வரியும் (சென்னையிலிருந்து செலுத்தப்பெற்றது) | 4,000 |
| | கூலியும் ஊதியமும் (சென்னையிலிருந்து செலுத்தப்பெற்றது) | 3,400 |
| | சில்லறைச் செலவுகள் ,, | 800 |

கிளை ஈட்டிய உண்மையான இலாபத்தை உணர்த்தும் கிளைக் கணக்கையும் தயார் செய்க.

(M. U. B. Com., Special A/cs, April, 19[illegible]9)

3. பம்பாயிலுள்ள பகவன்தாஸ் என்பவருக்குத் தில்லி யில் கிளை ஒன்று இருக்கிறது. அடக்கவிலை மீது 20 சதவீதம் வைத்து சரக்கு அனுப்புகிறார். கிளையின் எல்லாச் செலவினங் களையும் தலைமையகம் ஏற்கிறது. விற்பனைக் குறிப்பேட்டையும் கடனாளிகளின் பேரேட்டையும் மட்டுமேகிளை எழுதி வருகின்றது. கிளை அனுப்பிய கீழ்க்கண்ட தகவல்களிலிருந்து, 1965 மார்ச் 31-ல் முடியும் ஆண்டிற்கான பேரேட்டுக் கணக்குகளைத் தலைமை யகத்தின் ஏடுகளில் தயாரிக்கவும்.

| | ரூ. |
|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு (இடாப்பு விலையில்) | 12,000 |
| கடன் விற்பனை | 20,500 |
| ரொக்க விற்பனை | 8,750 |

| | ரூ. |
|---|---|
| 1965 மார்ச் 31-ல் கடனாளிகள் | 4,580 |
| ,, ,, பம்பாயிலிருந்து அனுப்பப்பட்ட வழியிலுள்ள சரக்கு | 1,800 |
| இறுதிச் சரக்கிருப்பு (இடாப்பு விலையில்) | 9,000 |
| கடனாளியிடம் பெற்றது | 18,950 |
| பம்பாயிலிருந்து பெற்ற சரக்கு | 15,000 |
| ஆண்டின் கிளைச் செலவுகள் | 5,200 |

(M. U. B. Com., April, 1966)

4. இராமன் இண்டஸ்ட்ரீஸ் தனது பெங்களூர் கிளைக்கு அடக்கவிலை மீது 25 சதவீதம் கூட்டிச் சரக்கு அனுப்புகிறது. கிளை ரொக்கத்திற்கும் கடனுக்கும் விற்பனை செய்கின்றது. கிளைச் செலவுகளை நேரிடையாகத் தலைமையகம் ஏற்கின்றது. கிளை பெறும் ரொக்கம் அனைத்தும் தலைமையகத்திற்கு அவ்வப்பொழுது அனுப்பப்படுகிறது. 31–3–1971-ல் முடியும் ஆண்டிற்கான விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.

| | ரூ. |
|---|---|
| இடாப்பு விலையில் தலைமையகத்திற்குத் திருப்பி அனுப்பிய சரக்கு | 800 |
| தலைமையகத்திலிருந்து இடாப்பு விலையில் பெற்ற சரக்கு | 40,000 |
| 1–4–1970-ல் இடாப்பு விலையில் சரக்கிருப்பு | 8,000 |
| ஆண்டின் கடன் விற்பனை | 30,000 |
| ஆண்டின் ரொக்க விற்பனை | 18,700 |
| 1–4–1970-ல் கடனாளிகள் | 5,200 |
| பேரேட்டுக் கணக்குகட்காக (Ledger accounts) ரொக்கம் பெற்றது | 28,500 |
| வாடகையாளர்களுக்கு வழங்கிய தள்ளுபடி | 300 |
| நீக்கப்பட்ட வராக் கடன் | 500 |
| விற்பனை விலையில் வாடகையாளர்களிடமிருந்து திரும்பப் பெற்ற சரக்கு | 700 |
| வாடகையும் வரியும் | 600 |
| ஊதியமும் கூலியும் | 1,200 |
| சில்லறைச் செலவுகள் | 300 |
| 31–3–1971-ல் விற்பனை விலையில் சரக்கிருப்பு | 6,000 |

மேற்கண்ட நடவடிக்கைகளைத் தலைமையகத்தின் பேரேடுகளில் பதிந்து 31–3–1971-ல் கணக்குகளை முடிக்கவும்.

(M. U. B. Com., Special A/cs, April, 1972)

5. பம்பாயிலுள்ள தலைமையகம் அகமதாபாத்திலுள்ள தனது கிளைக்கு அடக்கவிலையுடன் 25 சதவீதம் கூட்டிச் சரக்கு அனுப்புகிறது. கிளை பெறும் ரொக்கம் முழுவதும் அன்றன்றே தலைமையகத்திற்கு அனுப்பப்படுகிறது. செலவுகள் அனைத்தும் பம்பாயிலிருந்து மேற்கொள்ளப்படுகின்றன. கீழ்க்கண்ட விவரங்களிலிருந்து தலைமையகத்தின் ஏடுகளில் கிளைக் கணக்கு எவ்வாறு இருக்குமென்பதைக் காட்டுக (இடாப்பு விலையின் அடிப்படையில் பதிவுகளைச் செய்யவேண்டும்).

| | | | ரூ. |
|---|---|---|---|
| 1965 ஜூலை 1-ல் சரக்கிருப்பு (இடாப்பு விலையில்) | | | 12,500 |
| ,, ,, கடனாளிகள் | | | 12,000 |
| பம்பாயிலிருந்து அனுப்பப்பட்ட சரக்கு | | | 40,000 |
| பம்பாய்க்கு அனுப்பிய ரொக்கம் | | | |
| ரொக்க விற்பனை | ரூ. | 16,000 | |
| கடனாளியிடம் பெற்றது | ரூ. | 29,500 | |
| | | | 45,500 |
| தலைமையகத்திற்குத் திருப்பி அனுப்பிய சரக்கு | | | 2,400 |
| பம்பாயிலிருந்து பெற்ற காசோலைகள் : | | | |
| கூலியும் ஊதியமும் | ரூ. | 11,000 | |
| வாடகையும் வரியும் | ரூ. | 3,000 | |
| சில்லறைச் செலவுகள் | ரூ. | 510 | |
| | | | 14,510 |
| 1965 திசம்பர் 31-ல் சரக்கிருப்பு (இடாப்பு விலையில்) | | | 15,000 |
| ,, கடனாளிகள் | | | 22,000 |

(B. Com., Banaras–ஐத் தழுவியது)

6. ஆக்ராவிலுள்ள பாரத் ஸ்டோர்ஸ் கான்பூரிலுள்ள தனது கிளைக்கு விற்பனை விலையில் (அடக்க விலையுடன் 25 சதவீதம் கூட்டி) சரக்கு அனுப்புகிறது. விற்பனைப் பேரேட்டைக் கிளை தானே வைத்திருக்கிறது. கான்பூரில் ஸ்டேட் பாங்கில் தொடங்கப்பெற்ற தலைமையகக் கணக்கில் ஒவ்வொரு நாளும் பெறும் ரொக்கம் அவ்வப்பொழுதே செலுத்தப்படுகிறது. செலவுகள் அனைத்தும் ஆக்ராவிலிருந்து பெறும் காசோலைமூலமாக ஏற்கப்படுகின்றன.

கீழ்க்கண்ட விவரங்களிலிருந்து தலைமையகத்தின் ஏடுகளில் கிளைக் கணக்கைத் தயாரிக்கவும்.

1964-ல் கிளையின் உண்மையான இலாப-நட்டத்தை உணரத் தேவையான சரிக்கட்டுதல்களைச் செய்யவும்.

| | ரூ. |
|---|---|
| 1964 சனவரி 1-ல் சரக்கிருப்பு | 7,500 |
| ,, திசம்பர் 31-ல் சரக்கிருப்பு | 9,000 |
| ,, சனவரி 1-ல் கடனாளிகள் | 4,200 |
| ,, திசம்பர் 31-ல் கடனாளிகள் | 5,400 |
| தலைமையகத்திடம் பெற்ற சரக்கு | 54,600 |
| வரியும் வாடகையும் | 2,400 |
| பல்வகைச் செலவுகள் | 480 |
| ரொக்க விற்பனை | 32,400 |
| கடன் விற்பனை | 21,000 |
| பேரேட்டுக் கணக்குகட்காகப் பெற்ற ரொக்கம் | 19,800 |
| கூலி கொடுத்தது | 2,040 |
| இன்னும் கொடுக்கப்பட வேண்டிய கூலி | 200 |

(B. Com., Banaras -ஐத் தழுவியது.)

7. கடலூரில் சில்லறை வாணிகம் செய்யும் செந்தில் என்பவர் 1965 சனவரி 1-ல் விழுப்புரத்தில் கிளை ஒன்றை அமைத்தார். கிளையின் விற்பனை முழுவதும் கடன் அடிப்படையிலேயே நிகழ்ந்தது. கிளைக்குத் தேவையான சரக்கு முழுவதும் கடலூர் தலைமையகத்திலேயே பெறப்பட்டது. அடக்கவிலையுடன் 20 சதவீதம் கூட்டிச் சரக்கு கிளைக்கு அனுப்பப்படுகிறது. கீழ்க்கண்ட நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன.

| | சனவரி | பிப்ரவரி | மார்ச் |
|---|---|---|---|
| | ரூ. | ரூ. | ரூ. |
| அனுப்பிய சரக்கு (கொள் முதல் விலையில்) | 40,000 | 50,000 | 60,000 |
| கிளை விற்பனை | 38,000 | 42,000 | 55,000 |
| கடனாளியிடம் பெற்றுக் கடலூருக்கு அனுப்பியது | 20,000 | 51,000 | 35,000 |

| | சனவரி | பிப்ரவரி | மார்ச் |
|---|---|---|---|
| | ரூ. | ரூ. | ரூ. |
| கடலூருக்குத் திருப்பி அனுப்பியது (இடாப்பு விலையில்) | 1,200 | 600 | 2,400 |

1965 மார்ச் 31-ல் கிளையிலிருந்த சரக்கு இடாப்பு விலையில் ரூ. 53,400 ஆகும். கடலூர் ஏடுகளில் பதிந்து கிளைக் கணக்கைத் தயாரிக்கவும்.

(C. A. Inter, England-ஐத் தழுவியது)

8. கீழ்க்கண்ட நடவடிக்கைகளைத் தலைமையகத்தின் ஏட்டிலும் பிற கிளைக் கணக்குகள் ஏடுகளிலும் எவ்வாறு பதிவு செய்ய வேண்டும்?

(1) கடலூர்க் கிளை தலைமையகத்திற்கு அனுப்பிய ரொக்கம் ரூ. 2,300 ஆண்டிறுதிக்குள் தலைமை யகத்தைச் சேரவில்லை.

(2) கோவைக் கிளை தலைமையகத்தின் பொருட்டுத் தலைமையகக் கடனீந்தோர் ஒருவருக்குச் செலுத்தி யது ரூ. 700.

(3) கோவைக் கிளை, கடலூர்க் கிளைக்கு அனுப்பிய சரக்கு ரூ. 1,800.

(4) கடலூர்க் கிளையிலுள்ள சொத்துகள் மீது தலைமை யகம் நீக்கவேண்டிய தேய்மானம் ரூ. 400 (கிளை யின் சொத்துக் கணக்குகள் தலைமையகத்தின் ஏடு களில் வைத்திருக்கப்படுகின்றன).

(5) தலைமையகத்திற்காகக் கோவையிலுள்ள ஒரு கம்பெனி யிடமிருந்து பெற்ற பங்காதாயம் (dividend) ரூ. 250.

(6) தலைமையகத்தின் கடலூர் வாடிக்கையாளரிடமிருந்து கடலூர்க்கிளை வசூலித்தது ரூ. 3,100.

(7) தலைமையகம் கோவைக் கிளைக்கு அனுப்பிய சரக்கு ரூ. 2,000 அவ்வாண்டிறுதிக்குள் கோவைக் கிளையைச் சேரவில்லை.

(8) கோவை, கடலூர் கிளைகளின் பொருட்டுச் செய்த பணிக்காகத் தலைமையகம் கொடுத்த ஊதியம்: கோவை ரூ. 3,500; கடலூர் ரூ. 2,000.

(9) தலைமையகம் வாங்கிய சரக்குக்காகக் கடலூர்க் கிளை கொடுத்தது ரூ. 1,500.

(10) தலைமையகத்தின் பொருட்டுக் கடலூர்க் கிளை கொடுத்த வட்டி ரூ. 300.

9. கீழ்க்கண்ட நடவடிக்கைகளைத் தலைமையகத்தின் ஏடுகளில் எவ்வாறு பதிவாய்?

(அ) தலைமையகத்தின் ஆணைப்படி இலட்சுமணபுரிக் கிளை அலகாபாத் கிளைக்கு அனுப்பிய சரக்கு ரூ. 2,500.

(ஆ) தலைமையக ஏடுகளில் கிளைச் சொத்துக் கணக்குகள் வைத்திருக்கும்பொழுது நீக்கப்பட வேண்டிய தேய்மானம்.

(இ) இலட்சுமணபுரிக் கிளை தலைமையகத்திற்குத் திசம்பர் 26-ல் செலுத்திய ரூ. 4,000 தலைமையகத்தைச் சனவரி 4-ல்தான் வந்து சேர்ந்தது. தலைமையகம் தனது ஏடுகளை ஒவ்வோராண்டும் திசம்பர் 31-ல் முடிக்கிறது.

(ஈ) திசம்பர் 25-ல் இலட்சுமணபுரிக்குத் தலைமையகம் அனுப்பிய சரக்கு ரூ. 3,000, இலட்சுமணபுரியை சனவரி 15-ல்தான் சேர்ந்தது. தலைமையகம் தனது ஏடுகளை ஒவ்வோராண்டும் திசம்பர் 31-ல் முடிக்கிறது.

(B. Com., அலகாபாத்)

10. தில்லித் தலைமையகம் தனது ஏடுகளை ஒவ்வோராண்டும் திசம்பர் 31-ல் முடித்துக்கொள்கிறது. அதன் கிளைகள் ஆக்ராவிலும் இலட்சுமணபுரியிலும் உள்ளன. கிளைகள் தங்களுக்குரிய நடவடிக்கைகளைப் பதிவு செய்வதற்கு வேண்டிய எல்லாக் கணக்குகளையும் வைத்திருக்கின்றன.

1967 திசம்பர் 31-ல் தலைமையகத்தின் ஏடுகளில் ஆக்ராக் கிளையும், இலட்சுமணபுரிக் கிளையும் முறையே ரூ. 27,500,

ரூ. 35,300 பற்று இருப்புகளைக் காட்டின. கீழ்க்கண்ட நடவடிக்கைகள் கணக்கில் எடுத்துக்கொள்ளப்படவில்லை.

(1) தலைமையகத்தின் ஆணைப்படி ரூ. 2,500 மதிப்புள்ள சரக்கு இலட்சுமணபுரியிலிருந்து, ஆக்ராவிற்கு மாற்றப்பட்டது.

(2) 1967 திசம்பர் 30-ல் ஆக்ராக் கிளை தலைமையகத் திற்கு அனுப்பிய ரூ. 3,500 விலையை அடுத்து சனவரி 2-ல்தான் சேர்ந்தது.

(3) தலைமையகத்தின் ஆக்ரா வாடிக்கையாளரிடமிருந்து ரூ. 1,500-ஐ ஆக்ராக் கிளை வசூலித்தது.

(4) இலட்சுமணபுரியில் தலைமையகம் வாங்கிய பொறி கட்காக இலட்சுமணபுரிக் கிளை செலுத்தியது ரூ. 6,500.

(5) 1967ஆம் ஆண்டில் ஆக்ராக் கிளை ரூ. 2,500 நிகர நட்டத்தையும், இலட்சுமணபுரிக் கிளை ரூ. 4,500 நிகர இலாபத்தையும் காட்டின.

இந் நடவடிக்கைகளைத் தலைமையகத்தின் ஏடுகளில் பதி வதற்கான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து, ஒவ்வொரு கிளை களின் கணக்குகளையும் தயாரிக்கவும்.

(Agra B. Com)

11. கல்கத்தாவிலுள்ள ஒரு தலைமையகம் ஒவ்வொரு திங்கள் இறுதியிலும் கிளைகளுக்கிடையே நிகழும் நடவடிக்கைகளைச் சரிக்கட்டுவதற்காகப் பதிவு ஒன்றினைச் செய்யும். 1959 ஏப்ரல் 1-ல் கிளைகளுக்கிடையே நிகழ்ந்த கீழ்க்கண்ட நடவடிக்கைகளைக் கல்கத்தா தலைமையகத்தில் எவ்வாறு பதிவது?

(அ) தில்லிக் கிளை :

(i) நாகபுரிக் கிளையிலிருந்து ரூ. 9,000-த்திற்கான சரக்கினையும், அகமதாபாத் கிளையிலிருந்து ரூ. 6,000-த்திற்கான சரக்கினையும் பெற்றது.

(ii) அகமதாபாத் கிளைக்கு ரூ. 15,000-த்திற்கான சரக்கினையும், நாகபுரிக் கிளைக்கு ரூ. 12,000-த் திற்கான சரக்கினையும் அனுப்பியது.

(iii) அகமதாபாத் கிளையிடமிருந்து ரூ. 9,000-த்திற்கான பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு பெற்றது.

(iv) நாகபுரிக் கிளைக்கு ரூ. 1,000-த்திற்கான செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டையும், அகமதாபாத் கிளைக்கு ரூ. 3,000-த்திற்கான செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டையும் ஏற்றுத் தந்தது.

(ஆ) (மேலே அ-வில் குறிப்பிடப்பட்டதுடன்) கான்பூர் கிளை:

(i) நாகபுரிக் கிளையிடமிருந்து ரூ. 15,000-த்திற்கான சரக்கினையும், தில்லிக் கிளையிடமிருந்து ரூ. 6,000-த்திற்கான சரக்கினையும் பெற்றது.

(ii) நாகபுரிக் கிளைக்கு ரூ. 3,000-மும், தில்லிக் கிளைக்கு ரூ. 6,000-மும் ரொக்கம் அனுப்பியது.

(இ) (மேலே அ, ஆ-வில் குறிப்பிட்டவையுடன்) நாகபுரிக் கிளை :

(i) அகமதாபாத் கிளைக்கு ரூ. 9,000-த்திற்கான சரக்கு அனுப்பியது.

(ii) அகமதாபாத் கிளையிடமிருந்து ரூ. 9,000-த்திற்கான பெறுதற்குரிய உண்டியலைப் பெற்றது.

(iii) அகமதாபாத் கிளையிடமிருந்து ரூ. 5,000 ரொக்கம் பெற்றது.

(I. W. A. S, 1 July, 1969)

12. தில்லியில் S. M. டிரேடர்ஸ் 1968 ஜூலை 1-ல் ஜெய்ப்பூரில் கிளை ஒன்றைத் தொடங்கினர். தலைமையகம் கிளைக்கு விற்பனை விலையில் சரக்கை அனுப்புகிறது. இது தலைமையகத்தின் அடக்கவிலையில் 125 சதவீதம் ஆகும்.

ஜெய்ப்பூர் கிளைக்குரிய நடவடிக்கைகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன :

| | ரூ. |
|---|---|
| கிளைக்கு அனுப்பிய சரக்கு (தலைமையகத்தின் அடக்க விலையில்) | 2,80,800 |
| விற்பனை : | |
| ரொக்கம் | 1,25,000 |
| கடன் | 1,75,000 |

| | | | |
|---|---|---|---|
| கடனாளியிடம் தண்டியது (Collected) | | | 1,56,000 |
| தள்ளுபடி அளித்தது | | | 1,54,000 |
| கீழ்க்கண்ட செலவுகட்காகக் கிளைக்கு அனுப்பப்பட்ட ரொக்கம் : | | | |
| கூலி | ரூ. | 3,000 | |
| சத்தம் (Freight) | ரூ. | 11,000 | |
| பிற செலவுகள், பண்டசாலை வாடகை உட்பட | ரூ. | 6,000 | |
| | | | 20,000 |
| சிப்பங்களில் சேதமுற்றிருந்த துணி, இடாப்பு விலையில் நீக்கப்பட்டது | | | 500 |
| 1969 ஜூன் 30-ல் சரக்கிருப்பு, இடாப்பு விலையில் | | | 55,500 |

கிளைச் சரக்குக் கணக்கையும், கிளைக் கடனாளிகள் கணக்கையும் தயார் செய்த பின்னர் 1969 ஜூன் 30-ல் முடியும் ஆண்டிற்கான ஜெய்ப்பூர்க் கிளையின் இலாப-நட்டத்தைக் கண்டுபிடி.

(C. A. Inter, Nov. 1969)

13. கல்கத்தாவிலுள்ள நாவல்டீஸ் லிமிடெட்டின் தலைமையகம், பம்பாயிலுள்ள தனது கிளைக்கு விலைப்பட்டியலின் விலையிலிருந்து 20 சதவீதம் குறைத்து சரக்கு அனுப்புகிறது. விலைப் பட்டியலிலுள்ள விலை அடக்க விலையுடன் 50 சதவீதம் கூட்டப்பட்டுள்ளது. ரொக்க விற்பனை அனைத்தும் இடாப்பு விலையிலேயே இருக்கவேண்டுமென்றும், கடன் விற்பனை அனைத்தும் விலைப் பட்டியல் விலையில் இருக்கவேண்டும், ஆனால் விரைவில் தீர்க்கப்படும் தொகைமீது 15 சதவீதம் தள்ளுபடி அளிக்கப்பட வேண்டுமென்றும் தலைமையகத்தின் நிபந்தனைகள் கூறுகின்றன. கிளைக்குரிய கீழ்க்கண்ட விவரங்களிலிருந்து தலைமையக ஏட்டில் 1962 மார்ச் 31-ல் முடியும் ஆண்டிற்கான கிளையின் வாணிக இலாப-நட்டக் கணக்கைக் கிளையின் உண்மையான இலாப-நட்டத்தை உணர்த்தும் வகையில் தயார் செய்க.

| | ரூ. |
|---|---|
| 1961 ஏப்ரல் 1-ல் சரக்கிருப்பு (இடாப்பு விலையில்) | 12,000 |
| 1961 ஏப்ரல் 1-ல் கடனாளிகள் | 10,000 |
| தலைமையகத்திலிருந்து பெற்ற சரக்கு (இடாப்பு விலையில்) | 1,32,000 |
| விற்பனை — ரொக்கம் | 46,000 |
| விற்பனை — கடன் | 1,00,000 |
| கடனாளிகளிடம் வசூலித்தது — ரொக்கம் | 85,635 |
| கடனாளிகட்கு அளித்த தள்ளுபடி | 13,365 |
| கிளையில் செலவுகள் | 6,000 |
| தலைமையகத்திற்கு அனுப்பியது | 1,20,000 |
| 1962 மார்ச் 31-ல் கடனாளிகள் | 11,000 |
| 1962 மார்ச் 31-ல் ரொக்கம் | 5,635 |
| 1962 மார்ச் 31-ல் சரக்கிருப்பு (இடாப்பு விலையில்) | 15,000 |

இவ் வாண்டுச் சரக்கிருப்பின் ஒரு பகுதி தீ விபத்தில் அழிந்துவிட்டதென்று தெரியவருகிறது. இது காப்பீடு செய்யப்படவில்லை. தீயில் அழிந்த சரக்கின் மதிப்பை அறியவேண்டும். 1962 திசம்பர் 31-ல் கடனாளிகளின் தொகையில் சென்ற ஆண்டில் அளித்த தள்ளுபடியின் அடிப்படையிலேயே தள்ளுபடிக்காகத் தொகை ஒதுக்கவேண்டும்.

(C. A.)

14. 'அல்லாய் மெட்டல் மேனுபேக்சரிங் கம்பெனி' எனும் நிறுவனத்தின் தலைமையகம் பம்பாயிலும், கிளை பூனாவிலும் உள்ளன. அடக்கவிலைக்கு மேல் 25 சதவீதம் இலாபம் சேர்த்துத் தலைமையகம் சரக்கினைக் கிளைக்கு அனுப்புகிறது.

31—8—1973-ல் முடியும் ஆண்டிற்கான கிளைக்குரிய தலைமையகத்தின் நடவடிக்கைகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன :

| | ரூ. |
|---|---|
| 1—9—72-ல் கிளையிடமிருந்த சரக்கு (இடாப்பு விலையில்) | 15,400 |
| 1—9—72-ல் கிளையின் கடனாளிகள் | 8,250 |
| 1—9—72-ல் சில்லறை ரொக்கம் | 250 |
| கிளைக்கு அனுப்பிய சரக்கு (இடாப்பு விலையில்) | 75,600 |

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| கிளையிடமிருந்து பெற்றது : | | |
| ரொக்க விற்பனை | 5,250 | |
| கடனாளிகளிடம் வசூலித்தது | 78,870 | |
| | | 84,120 |
| கிளைக்கு அனுப்பிய ரொக்கம் : | | |
| ஊதியம் | 3,720 | |
| வாடகை முதலியவை | 1,200 | |
| சில்லறை ரொக்கம் | 1,500 | |
| | | 6,420 |

| | |
|---|---|
| 31–8–1973-ல் கிளையின் சரக்கிருப்பு (இடாப்பு விலையில்) | 11,575 |
| 31–8–1973-ல் கிளையின் கடனாளிகள் | 25,230 |
| 31–8–1973-ல் சில்லறை ரொக்கம் | 375 |

மேற்கண்டவற்றிலிருந்து :

(1) தலைமையக ஏடுகளில் கிளைக் கணக்கைக் காட்டுக.

(2) தலைமையக ஏடுகளில் கிளை ஈட்டிய அல்லது கிளைக்கு ஏற்பட்ட இலாப-நட்டத்தை உணர்த்துவதற்குத் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

(C. A. Inter)

15. 'ரீகல் சீரியல்ஸ் கம்பெனி'யின் தலைமையகம் நாகபுரியில் உள்ளது. அதன் கிளை ஒன்று பம்பாயிலுள்ளது. தலைமையகம் சரக்கினை வாங்கி அடக்க விலையுடன் 25 சதவீதம் கூட்டிக் கிளைக்கு அனுப்புகிறது. தலைமையகத்திலிருந்து ஓராண்டில் பெற்ற சரக்கில் 1/3 பகுதிவரை உள்ளூரிலேயே சரக்கு வாங்கவும் கிளை அனுமதிக்கப்பட்டிருக்கிறது.

உள்ளூரில் வாங்கும்போழ்து கிளை அலுவலகம் இவ் விகிதத்தின்படியே வாங்குகிறது. தலைமையகத்திலிருந்து பெற்ற சரக்கை அது இடாப்பு விலையில் விற்கிறது. ஆனால், உள்ளூரில் வாங்கிய சரக்கை விற்பனை விலையில் $16\frac{2}{3}$ சதவீதம் இலாபம் வைத்து விற்கிறது.

கிளை மேலாளருக்குத் திங்கள் ஒன்று ரூ. 500 ஊதியம் உண்டு. அத்துடன் ஓராண்டில் வசூலித்த ரொக்கத்தின்மீது

5 சதவீதம் கழிவும் அவருக்குத் தரப்படவேண்டும். அளவிலும், சரக்கை வைத்திருத்தலிலும் ஏற்படும் இயல்பு நட்டத்திற்காக (Normal loss) சரக்கின் அடக்கவிலை மீது 1 சதவீதம் அளவு தலைமையகம் அனுமதிக்கிறது. இயல்புக்கு மாறாகக் குறையும் சரக்கிருப்பின் அடக்கவிலையை (Abnormal shortage of stock) கிளை மேலாளருக்குத் தரவேண்டிய கழிவுத் தொகையில் பற்று வைக்கவேண்டும்.

செலவுக்குத் தேவையான தொகையை வைத்துக்கொண்டு வசூலித்தத் தொகை முழுவதையும் கிளை தலைமையகத்திற்கு அனுப்பிவிடுகிறது. முன்பணமாக (Imprest) எப்பொழுதும் ரூ. 1,000 இருக்கவேண்டும். திசம்பர் 31-ல் முடியும் ஆண்டிற்கான கிளையினுடைய நடவடிக்கைகள் பற்றிய பிற விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

| | ரூ. |
|---|---|
| தலைமையகத்திலிருந்து பெற்ற சரக்கு | 1,20,000 |
| உள்ளூர் கடனீந்தோர் (1–1–19......) | 4,000 |
| கடனீந்தோருக்குத் தலைமையகம் நேரிடையாக, காசோலைமூலம் செலுத்தியது | 38,000 |
| 19....சனவரி 1-ல் கடனாளிகள் | 20,000 |
| விற்பனை : | |
| ரொக்கம் | 80,000 |
| கடன் | 1,30,000 |
| 19....சனவரி 1-ல் சரக்கிருப்பு (உள்ளூரில் வாங்கியதில் சரக்கிருப்பு ரூ. 10,000) | 30,000 |
| கிளைச் செலவுகள் : | |
| ஊதியமும் கூலியும் (கிளை மேலாளரின் ஊதியம் உட்பட) | 12,000 |
| வாடகை | 7,000 |
| சுமைக்கூலி | 1,000 |
| வராக்கடன் | 1,000 |
| தள்ளுபடி அளித்தது | 2,000 |
| தலைமையகத்திற்கு அனுப்பியது | 1,00,000 |
| 31–12–19....-ல் சரக்கிருப்பு (உள்ளூரில் வாங்கியதில் சரக்கிருப்பு ரூ. 14,500) | 28,500 |

விற்பனையில் 1/5 பாகம் உள்ளூரில் வாங்கிய கொள்முதலாகும்.

கிளைச் சரக்கிருப்புக் கணக்கு, கிளைச் சரிக்கட்டுக் கணக்கு, கிளைச் செலவுக் கணக்கு, கிளை இலாப-நட்டக் கணக்கு ஆகியவற்றைத் தயாரிக்கவும்.

(C. A. Inter)

16. நாகபுரிக் கிளையானது தனது தலைமையகத்திற்கு 1961 ஜூன் 31-ற்கான இருப்பாய்வை (Trial Balance) அனுப்பியது. அது கீழ்க்கண்டவாறு இருந்தது :

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| கடனாளிகள் | 24,000 | |
| கடனீந்தோர் | | 17,200 |
| கையிலுள்ள ரொக்கம் | 3,800 | |
| மனைத்துணைப் பொருள் | 12,500 | |
| 1960-ல் ஜூலை 1-ல் சரக்கிருப்பு | 4,500 | |
| தலைமையகத்திலிருந்து பெற்ற சரக்கு | 68,000 | |
| தலைமையகத்திடம் திருப்பி அனுப்பிய சரக்கு | | 4,500 |
| கொள்முதல் | 1,32,900 | |
| விற்பனை | | 2,25,000 |
| கூலியும் ஊதியமும் | 11,000 | |
| வாணிகச் செலவுகள் | 10,500 | |
| தலைமையகக் கணக்கு | | 20,500 |
| | 2,67,200 | 2,67,200 |

1961 ஜூன் 30-ல் இறுதிச் சரக்கிருப்பு ரூ. 5,200 என மதிப்பிடப்பட்டது. மேற்கண்டவற்றைத் தலைமையகத்தின் ஏடுகளில் இணைப்பதற்குத் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

கிளைக் கணக்கையும், கிளையின் வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும் தயாரிக்கவும்.

(M. U. B. Com., September, 1963)

17. 1969 திசம்பர் 31-ற்கான சிதம்பரம் கிளையின் இருப்பாய்வு கீழே கொடுக்கப்பட்டுள்ளது :

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| கோயம்புத்தூர் தலைமையகம் | 12,400 | |
| 1969 சனவரி 1-ல் சரக்கிருப்பு | 28,000 | |
| கொள்முதல் | 70,400 | |
| தலைமையகத்திலிருந்து பெற்றச் சரக்கு | 28,560 | |
| கடனாளியிடம் விற்றது | | 1,64,000 |
| தலைமையகத்திற்கு அளித்த சரக்கு | | 16,000 |
| ஊதியம் | 10,400 | |
| கடனாளிகள் | 16,000 | |
| கடனீந்தோர் | | 10,000 |
| அலுவலக வாடகை | 6,000 | |
| அலுவலகச் செலவுகள் | 3,600 | |
| வங்கி இருப்பு | 9,840 | |
| மனைத்துணைப் பொருள் | 4,800 | |
| | 1,90,000 | 1,90,000 |

1969 திசம்பர் 31-ல் சரக்கிருப்பு ரூ. 7,600 என மதிப்பிடப்பட்டது. தலைமையகத்தின் ஏட்டில் 1969 திசம்பர் 31-ல் கிளைக் கணக்கு ரூ. 24,680-ஐப் பற்று இருப்பாகக் காட்டியது. திசம்பர் 31-ல் கிளைக்கு ரூ. 6,680 மதிப்புள்ள சரக்கை அனுப்பியது. ஆனால், அது கிளையை 1970 சனவரி 4-ல்தான் சேர்ந்தது. அவ்வாறே 1969 திசம்பர் 29-ல் கிளை அனுப்பிய ரூ. 30,400 தலைமையகத்தை 1970 சனவரி 2-ல்தான் சேர்ந்தது. மேற்' கண்டவற்றைத் தலைமையகத்தின் ஏடுகளில் இணைப்பதற்குத் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து தலைமையகத்தின் ஏடுகளில் கிளைக் கணக்கையும் தயார் செய்க.

(M. U. B. Com., September, 1970)

18. சென்னையிலுள்ள ஒரு கம்பெனியின் தலைமையகத்திற்குக் கோயம்புத்தூரில் ஒரு கிளை உள்ளது. கோவைக் கிளை. தலைமையகத்திலிருந்து அடக்கவிலையில் சரக்கு பெறுகிறது. பிறரிடமும் சரக்கு வாங்குகிறது. கிளை தனித்து இயங்குவதால்,

கணக்கேடுகள் அனைத்தையும் வைத்திருக்கின்றன. 1969 செப்டம்பர் 30-ல் கீழ்க்கண்ட இருப்பாய்வு தயார் செய்யப்பட்டது :

| | சென்னைத் தலைமையகம் | | கோவைக் கிளை | |
|---|---|---|---|---|
| | பற்று | வரவு | பற்று | வரவு |
| | ரூ. | ரூ. | ரூ. | |
| பங்குமுதல் | | 45,000 | | |
| நிலைச் சொத்துகள் | 24,000 | | 12,000 | |
| 1968 அக்டோபர் 1-ல் இலாப-நட்டக் க/கு | | 6,000 | | |
| தொடக்கச் சரக்கிருப்பு (அடக்க விலையில்) | 21,000 | | 2,850 | |
| கடனாளிகளும், கடனீந்தோரும் | 25,500 | 15,000 | 2,250 | 3,075 |
| ரொக்கம் | 4,500 | | 1,500 | |
| கொள்முதலும், விற்பனையும் | 1,80,000 | 2,10,000 | 10,125 | 33,750 |
| பல்வகைச் செலவுகள் | 22,500 | | 3,375 | |
| தலைமையகத்திலிருந்து கிளைக்கு அனுப்பிய சரக்கு | | 18,000 | 17,250 | |
| நடப்புக் கணக்குகள் (Current A/cs) | | 16,500 | | 12,525 |
| | 2,94,000 | 2,94,000 | 49,350 | 49,350 |

நிலைச் சொத்துகள் மீது தேய்மானம் 10 சதவீதம் அளவில் நீக்கப்பட வேண்டும்.

1969 செப்டம்பர் 30-ல் சரக்கிருப்பு :

| | | |
|---|---|---|
| தலைமையகம் | ரூ. | 15,000 |
| கிளை | ரூ. | 3,150 |

கம்பெனியின் 1969 செப்டம்பர் 30-ல் முடியும் ஆண்டிற்கான இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளுக்குரிய இருப்பு நிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(M. U. B. Com., Special A/cs. September 1970)

19. பம்பாயிலுள்ள ஒரு கம்பெனியின் தலைமையகத்திற்குப் பூனாவில் கிளை ஒன்று இருக்கிறது. கிளை தனக்கு வேண்டிய கணக்கேடுகளைத் தானே வைத்திருக்கிறது. 1961 மார்ச் 31-ற்கான அவற்றின் இருப்பு ஆய்வுகள் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன :

| | பம்பாய் பற்று | பூனா பற்று | பம்பாய் வரவு | பூனா வரவு |
|---|---|---|---|---|
| | ரூ. | ரூ. | ரூ. | ரூ. |
| மனைத்துணைப் பொருள் | 13,150 | 5,850 | | |
| 1-4-1960-ல் சரக்கிருப்பு | 86,000 | 48,600 | | |
| கடனாளிகள் | 20,460 | 12,855 | | |
| வங்கியும் ரொக்கமும் | 83,285 | 2,980 | | |
| தலைமையகத்திற்கு அனுப்பியது | — | 2,62,500 | | |
| கொள்முதல் | 5,04,215 | — | | |
| தலைமையகத்திலிருந்து பெற்ற சரக்கு | — | 1,86,640 | | |
| வாடகையும் வரியும் | 28,180 | 11,080 | | |
| ஊதியம் | 37,930 | 21,960 | | |
| பொதுச் செலவுகள் | 33,390 | 15,750 | | |
| பூனா கிளையின் நடப்புக் கணக்கு | 2,62,745 | — | | |
| கிளைக்கு அனுப்பிய சரக்கு (அடக்கவிலையில்) | | | 1,89,245 | — |
| கிளையிலிருந்து பெற்றது | | | 2,60,125 | — |
| விற்பனை | | | 4,73,185 | 3,05,740 |
| கடனீந்தோர் | | | 36,190 | 2,335 |
| தலைமையக நடப்புக் கணக்கு | | | — | 2,60,140 |
| முதல் | | | 1,10,610 | — |
| | 10,69,355 | 5,68,215 | 10,69,355 | 5,68,215 |

மேலும் கீழ்க்கண்ட தகவல்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

(1) 1961 மார்ச் 31-ல் அடக்கவிலை அடிப்படையில் மதிப்பிடப்பட்ட சரக்கிருப்பு—பம்பாய் ரூ. 79,450; பூனு ரூ. 21,625.

(2) 1961 மார்ச் 28-ல் கிளைக்குத் தலைமையகம் அனுப்பிய சரக்கு ரூ. 2,605 வழியில் திருட்டுப்போயிற்று. 1961 ஏப்ரல் 30-ல் சரக்கின் முழுத் தொகையையும் கொடுத்துவிட காப்பீட்டுக் கம்பெனி ஏற்றுக்கொண்டது.

(3) 1961 மார்ச் 31-ல் முடியும் ஆண்டிற்கான தேய்மானம் 10 சதவீதம் அளவில் மனைத்துணைப் பொருள்மீது நீக்கப்பட வேண்டும்.

(4) தலைமையகத்திலும், கிளையிலும் பணிபுரியும் அலுவலர்கட்கு அந்தந்த அமைப்புகளின் இலாபத்தில் 20 சதவீதம் அளவிற்கு மேலூதியம் (bonus) தரவேண்டும். (மேலூதியம் கழிக்கப்படும் முன் உள்ள இலாபத்தில் இது கணக்கிடப்பட வேண்டும்.)

கீழ்க்கண்டவற்றைத் தயார் செய்க :

(1) 1961 மார்ச் 31-ல் முடியும் ஆண்டிற்கான வாணிக, இலாப-நட்டக் கணக்குகளைத் (கிளை, தலைமையகம் இரண்டிற்கும்) தயார் செய்க.

(2) தலைமையகத்தின் ஏடுகளில் இருக்கும் கிளை நடப்புக் கணக்கில் பதிவுகளைச் செய்து 1961 ஏப்ரல் 1-ல் இருப்புக் கட்டுக. இந்த இருப்பு எதை உணர்த்துகிறது என்பதைத் தெளிவாக்குக.

(M. U. B. Com., April, 1962)

20. 1960 திசம்பர் 31-ல் இலண்டனில் தலைமையகத்தை யுடைய ஒரு பிரிட்டன் நிறுவனத்தின் தில்லிக் கிளையிலிருந்து எடுக்கப்பட்ட இருப்புக்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன :

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| 1-1-1960-ல் சரக்கிருப்பு | 12,600 | |
| கொள்முதலும் விற்பனையும் | 75,000 | 1,12,500 |
| கடனாளிகளும் கடனீந்தோரும் | 39,000 | 26,000 |
| வரவிற்குரிய உண்டியலும், | | |
| செலுத்தற்குரிய உண்டியலும் | 10,400 | 9,100 |
| கூலியும் ஊதியமும் | 4,800 | |
| வாடகை, கட்டணம், வரி | 3,600 | |
| பல்வகைச் செலவுகள் | 1,500 | |
| மனைத்துணைப் பொருள் | 4,910 | |
| வங்கியிருப்பு | 28,990 | |
| இலண்டன் கணக்கு | | 33,200 |
| | 1,80,800 | 1,80,800 |

1960 திசம்பர் 31-ல் சரக்கிருப்பு ரூ. 32,500 என மதிப்பிடப்பட்டது. 1960 திசம்பர் 31-ல் இலண்டன் ஏடுகளில் கிளைக் கணக்கு £ 2,680 பற்றிருப்பைக் காட்டியது. தலைமையக ஏடுகளில் மனைத்துணைப் பொருள் ரூ. 350ஆக இருக்கிறது.

31-12-1959-ல் நாணய மாற்று வீதம் ரூ. 14; 31-12-60-ல் ரூ. 13ஆக இருந்தன. 1960ஆம் ஆண்டில் சராசரி நாணய மாற்று விகிதம் ரூ. 12ஆக இருந்தது.

தலைமையக ஏடுகளில் கிளையின் இலாப-நட்டக் கணக்கையும், இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(Agra B. Com., 1962; Vikram B. Com., 1961)

21. ஒரு வணிகக் கம்பெனியின் தலைமையகம் இலண்டனில் இருக்கிறது. அதன் கிளை ஒன்று பம்பாயில் இருக்கிறது.

**1949** திசம்பர் 31-ல் (முதலாண்டு முடிவுற்ற நாள்) பம்பாய் ஏடுகளின் இருப்புக்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன :

| | ரூ. |
|---|---|
| இலண்டன் கணக்கு | 2,08,000 |
| விற்பனை | 2,25,676 |
| கொள்முதல் | 2,61,604 |
| கூலியும் ஊதியமும் | 43,868 |
| சரக்குக் கட்டணமும் காப்பீடும் | 26,608 |
| பொதுச் செலவுகள் | 31,248 |
| வங்கிக் கணக்கு | 12,641 |
| ரொக்கம் | 1,563 |
| கடனாளிகள் | 1,06,462 |
| கடனீந்தோர் | 50,318 |

திசம்பர் 31-ல் பம்பாயிலிருந்த சரக்கிருப்பு ரூ. 1,48,500 என மதிப்பிடப்பட்டது.

இலண்டன் கணக்கின் இருப்பு கீழ்க்கண்டவாறு பம்பாய்க்கு அனுப்பப்பட்ட தொகைகளைக் குறிக்கும் :

| | | | |
|---|---|---|---|
| சனவரி 8 | ரூ. 64,000 | 1 s $3\frac{1}{4}$ d | விகிதத்தில் வாங்கப்பட்டது. |
| ஏப்ரல் 6 | ரூ. 96,000 | 1 s $2\frac{1}{2}$ d | விகிதத்தில் வாங்கப்பட்டது. |
| ஆகஸ்ட் 17 | ரூ. 48,000 | 1 s $3\frac{1}{2}$ d | விகிதத்தில் வாங்கப்பட்டது. |

ஆண்டின் சராசரி நாணய மாற்றுவிகிதம் 1 s 4 d ஆகவும், திசம்பர் 31-ல் அது 1 s 3 d ஆகவும் இருந்தது.

பம்பாய்த் தொகைகளைத் தலைமையகத்தின் ஏட்டில்சேர்த்துக் கொள்ளத் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து, இலண்டன் ஏடுகளில் சனவரி 1-லிருந்து திசம்பர் 31 வரையுள்ள பம்பாய்க் கிளைக் கணக்கையும் தயார் செய்க.

**(Agra B. Com., 1953; C. A.)**

22. 1958 செப்டம்பர் 30-ல் ஒரு நிறுவனத்தின் தலைமையகம், நியூயார்க் கிளை ஆகியவற்றின் ஒன்று சேர்ந்த இருப்பாய்வு கீழே கொடுக்கப்பட்டுள்ளது :

| விவரம் | தலைமையகம் | | நியூயார்க் கிளை | |
|---|---|---|---|---|
| | ரூ. | ரூ. | $ | $ |
| முதல் கணக்கு .. | | 5,00,000 | | |
| நிலமும், கட்டடமும் .. | 1,00,000 | | | |
| வாணிக நற்பெயர் .. | 50,000 | | | |
| பொறிவகை .. | 8,00,000 | | 1,20,000 | |
| மனைத்துணைப்பொருள் .. | 30,000 | | 8,000 | |
| 1957 அக்டோபர் 1-ல் சரக்கிருப்பு .. | 3,40,000 | | 56,000 | |
| கொள்முதல் .. | 16,54,000 | | 2,40,000 | |
| தலைமையகத்திலிருந்து சரக்கு .. | | | 80,000 | |
| நியூயார்க் கிளைக்கு அனுப்பிய சரக்கு .. | | 3,94,000 | | |
| கூலி .. | 42,000 | | 2,000 | |
| உட்சுமைக் கூலி .. | 6,000 | | 1,000 | |
| விற்பனை .. | | 22,54,000 | | 4,16,000 |
| ஊதியம் .. | 54,000 | | 6,000 | |
| வாடகை, வரி .. | 12,000 | | 2,000 | |
| காப்பீடு .. | 7,000 | | 1,000 | |
| வாணிகச் செலவுகள் .. | 12,000 | | 1,000 | |
| தலைமையகக் கணக்கு .. | | | | 1,14,000 |
| நியூயார்க் கிளைக் கணக்கு .. | 4,30,000 | | | |
| கடனாளிகள் .. | 2,20,000 | | 24,000 | |
| கடனீந்தோர் .. | | 7,21,000 | | 17,000 |
| வங்கியில் ரொக்கம் .. | 1,10,000 | | 5,000 | |
| கையில் ரொக்கம் .. | 2,000 | | 1,000 | |
| | 38,69,000 | 38,69,000 | 5,47,000 | 5,47,000 |

கீழ்க்கண்டவற்றைச் சரிக்கட்ட வேண்டும் :

(1) இறுதிச் சரக்கிருப்பு கீழ்க்கண்டவாறு மதிப்பிடப் பட்டது தலைமையகம் ரூ. 2,92,000; நியூயார்க் கிளை $ 52,000.

(2) நிலுவையிலுள்ள கூலி : தலைமையகம் ரூ. 3,000; நியூயார்க் கிளை $ 1,000.

(3) முன்கூட்டிச் செலுத்தியக் காப்பீடு: தலைமையகம் ரூ. 1,000; நியூயார்க் கிளை — இல்லை.

(4) பொறிவகைமீதும், மனைத்துணைப் பொருள் மீதும் ஆண்டுக்கு 10 சதவீதம் தேய்மானம் நீக்கப்பட வேண்டும்.

1958 செப்டம்பர் 31-ல் முடியும் ஆண்டிற்கான ஒன்றிணைக்கப்பெற்ற வாணிக, இலாப-நட்டக் கணக்கினையும் (தலைமையகத்திற்காகவும், நியூயார்க் கிளைக்காகவும் தனித்தனிப் பத்திகள் இடப்பட்டது), அந் நாளுக்குரிய, நிறுவனத்துக்குப் பொதுவான, இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க (டாலரை ரூபாயாக முதலில் மாற்றிக்கொள்க).

நாணயமாற்று விகிதம் கீழ்க்கண்டவாறு இருந்தது :

1950 செப்டம்பர் 1-ல் (பொறிவகையும், மனைத்துணைப் பொருளும் வாங்கப்பட்ட நாள்) 100 டாலருக்கு ரூ. 380 வீதம்;

1957 அக்டோபர் 1-ல் 100 டாலருக்கு ரூ. 450;

1958 செப்டம்பர் 30-ல் 100 டாலருக்கு ரூ. 470;

ஆண்டுச் சராசரி நாணய மாற்று விகிதம் 100 டாலருக்கு ரூ. 460.

கிளையின் இறுதிக் கணக்குகள் டாலரிலேயே தயாரிக்கப் பட்டு, இருப்புநிலைக் குறிப்பினங்கள் ரூபாய்க்கு மாற்றப்பெறின், ஏற்படும் மாற்றம் என்ன? காரணம் என்ன ?

((C. A. Final, May, 1959)

23. கீழ்க்கண்டவற்றிலிருந்து கல்கத்தாவிலுள்ள 'ஈவ்' கம்பெனியின் தலைமையகத்திற்கும், தில்லிக் கிளைக்கும் உரிய வாணிக இலாப-நட்டக் கணக்குகளையும், ஒன்று'தொகுக்கப்பெற்ற இருப்பு நிலைக் குறிப்பையும் தயாரிக்கவும்.

தில்லிக் கிளையின் கணக்குகளை முழுவதும் தலைமையகத்தில் கணக்குகளுடன் இணைத்துக்கொள்ளத் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளையும், தலைமையகத்தில் கிளைக் கணக்கினையும் (அதன் சொத்துகளையும், பொறுப்புகளையும் இணைத்த பிறகு) தயாரிக்கவும்.

1969 திசம்பர் 31-இல் அதின் இருப்பாய்வு கீழ்க்கண்டவாறு இருந்தது :

| விவரம் | தலைமையகம் பற்று | கிளை பற்று | தலைமையகம் வரவு | கிளை வரவு |
|---|---|---|---|---|
| | ரூ. | ரூ. | ரூ. | ரூ. |
| உற்பத்திச் செலவுகள் .. | 30,000 | 10,000 | — | — |
| ஊதியம் .. | 30,000 | 10,000 | — | — |
| கூலி .. | 1,00,000 | 40,000 | — | — |
| ரொக்கம் .. | 10,000 | 2,000 | — | — |
| கொள்முதல் .. | 1,50,000 | 80,000 | — | — |
| முதல் .. | — | — | 2,00,000 | — |
| தலைமையகத்திலிருந்து பெற்ற சரக்கு .. | — | 15,000 | — | — |
| வாடகை .. | 8,000 | 4,000 | — | — |
| பொதுச் செலவுகள் .. | 20,000 | 5,000 | — | — |

**1968 திசம்பர் 31-ல் அதன் இருப்பாய்வு—(தொடர்ச்சி)**

| விவரம் | தலைமையகம் பற்று | கிளை பற்று | தலைமையகம் வரவு | கிளை வரவு |
|---|---|---|---|---|
| | ரூ. | ரூ. | ரூ. | ரூ. |
| விற்பனை .. | — | — | 4,50,000 | 1,50,000 |
| கிளைக்கு அனுப்பிய சரக்கு .. | — | — | 15,000 | — |
| கொள்முதல் திருப்பம் .. | — | — | 5,000 | 1,000 |
| தொடக்கச் சரக்கிருப்பு .. | 50,000 | 30,000 | — | — |
| ஈட்டிய தள்ளுபடி .. | — | — | 2,000 | 1,000 |
| பொறிவகை (தலைமையகம்) .. | 1,50,000 | — | — | — |
| பொறிவகை (கிளை) .. | 50,000 | — | — | — |
| மனைத்துணைப் பொருள் (தலைமையகம்) .. | 7,000 | — | — | — |
| மனைத்துணைப் பொருள் (கிளை) .. | 3,000 | — | — | — |
| கடனாளிகள் .. | 40,000 | 15,000 | — | — |
| கடனீந்தோர் .. | — | — | 30,000 | 5,000 |
| தலைமையகக் கணக்கு .. | — | — | — | 54,000 |
| கிளைக் கணக்கு .. | 54,000 | — | — | — |
| மொத்தம் .. | 7,02,000 | 2,11,000 | 7,02,000 | 2,11,000 |

பொறிவகை மீது 20 சதவீதமும், மனைத்துணைப் பொருள்மீது 15 சதவீதமும் தேய்மானம் நீக்க வேண்டும். வாடகை கொடுக்கப்பட வேண்டியது (கிளைக்கானது) ரூ. 500. —((I. C. W. A, I. January, 1970)

# 6. கூட்டுப் பங்குக் கம்பெனிக் கணக்குகள்

## (Joint Stock Company Accounts)

### கம்பெனியின் இலக்கணம்

**அறிமுகம்**

ஒரு பொது நோக்குக்காக பணத்தையோ அல்லது பணத்தின் மதிப்பையோ செலுத்தும் பல நபர்களின் அமைப்பைக் கம்பெனி எனலாம். அதனைச் சட்டம் உருவாக்குகிறது. அமெரிக்க ஐக்கிய நாட்டின் தலைமை நீதிபதி மார்ஷெல் அவர்கள் இதனை 'ஒரு செயற்கையான, கண்களுக்குப் புலனாகாத, தொட்டுணர முடியாத, சட்டத்தின் கண்களில் மட்டுமே இருக்கக்கூடிய ஆள்' எனக் கூறுகிறார். இதனால், கம்பெனியை ஒரு சட்ட முறை ஆள் எனலாம். நீதிபதி லின்லே பிரபு கம்பெனியின் இலக்கணத்தைக் கீழ்க் கண்டவாறு தெளிவாக விளக்கியுள்ளார். பணத்தை ஒன்று திரட்டிப் பொதுவாகப் பயன்படுத்தும் நோக்குடன் பலர் ஒன்று சேர்ந்துள்ள குழுவைக் கம்பெனி எனலாம். அவர்கள் வழங்கும் பணமே அக் கம்பெனியின் முதலாகும். அவ்வாறு பணம் தந்தவர்கள் அதன் உறுப்பினர்கள். கம்பெனியின் மூல தனத்தில் ஒவ்வொரு உறுப்பினரின் உரிய பகுதி அவரின் பங்காகும் (Share). மாற்றுகின்ற உரிமையில் சில தடைகள் காணப்படினும், பங்குகள் மாற்றக்கூடியவையே. 'கம்பெனிச் சட்டத்தின் கீழ்ப் பதிவு செய்யப்பட்டுள்ள அல்லது முன்னரே இயங்கி வருகின்ற கம்பெனி ஒரு கம்பெனியாகும்' எனக் கம்பெனிச் சட்டம் கூறுகிறது. அதன் தன்மைகள் :

1. கம்பெனி ஒரு தன் விருப்ப அமைப்பாகும் (Voluntary Association). அதாவது, விரும்புகின்றவர்கள் தங்கள் விருப்பப்படியே யாருடைய கட்டாயமுமின்றி ஒன்று சேர்கின்றனர்.

2. தனி ஆள் தன்மையுடையது (Separate Personality): கம்பெனியைச் சட்டம் ஒரு தனி ஆளாய்க் கருதுகிறது. இதனால் தனது பேரிலேயே சொத்துக்களை வாங்கவும், விற்கவும் முடிகிறது.

3. நிலையான வாழ்வுடையது: கம்பெனி தனி ஆளாய்க் கருதப்படுவதால், உறுப்பினர்களுக்கு ஏற்படக்கூடிய எந் நிகழ்ச்சியும் கம்பெனியைப் பாதிப்பதில்லை. உறுப்பினர்கள் இறப்பதாலேயோ விலகுவதாலேயோ கம்பெனி கலைக்கப்படுவதில்லை.

4. வரையறு பொறுப்புடையது (Limited Liability): தனி ஆள் வாணிகம், கூட்டுறவு நிறுவனம் போன்ற அமைப்புக்களினின்றும் கம்பெனி அத் தன்மையில் பெரிதும் வேறுபட்டுள்ளது. ஒருவர் வாங்கும் பங்கின் முழுத் தொகையையும் செலுத்தி விட்டால், பின்னர்க் கம்பெனியின் சொத்துகள் அதன் கடன்களைத் தீர்க்கப் போதுமானதாக இல்லாவிட்டால், தொகை எதுவும் பங்குநர் (Shareholder) தரவேண்டுவதில்லை. காரணம், அவரின் பொறுப்பு அவர் எடுத்துக்கொண்ட பங்கின் அளவேயாகும். எடுத்துக்காட்டாக, ரூ. 100 மதிப்புள்ள 5 பங்குகளை ஒருவர் வைத்திருப்பின், அதன் முழுத் தொகையாகிய ரூ. 500-ஐயும் கம்பெனிக்குக் கொடுத்துவிட்டால், அவரின் பொறுப்பு தீர்ந்து விடுகிறது.

5. பங்கு மாற்றக்கூடியது (Transfer of share): பங்குகள் மாற்றும் தன்மை வாய்ந்தவை. ஒரு பொதுக் கம்பெனியில் ஒருவர் தாம் வைத்திருக்கும் பங்குகளை உரிய முறைகளைப் பின்பற்றிப் பிறருக்கு மாற்றித்தர முடியும். மேற்சொல்லப்பட்ட முக்கிய தன்மைகள் கம்பெனியைப் பிற அமைப்புகளினின்றும் வேறுபடுத்திக் காட்டுகின்றன.

## கூட்டாண்மைக்கும் கூட்டுப் பங்குக் கம்பெனிக்கும் உள்ள வேறுபாடு

## (Distinction between Company and Partnership)

1. பொது முத்திரையுடன் நீள் வாழ்வு பெற்ற, சட்டம் ஏற்படுத்தும் அமைப்பு கூட்டுப் பங்குக் கம்பெனியாகும். ஆனால், எல்லோருமோ அல்லது எல்லோருக்கும் மாறாக ஒரு சிலரோ நடத்தும் தொழிலில் உண்டாகும் இலாபத்தைப் பகிர்ந்து கொள்ள ஒப்புக்கொண்டவர்களிடையே நிலவும் உறவு கூட்டாண்மையாகும்.

2. சட்டம் கம்பெனியைத் தனி ஆளாய்க் கருதுகிறது. கூட்டாண்மை இத் தனி ஆள் தன்மையைப் பெற்றிருப்பதில்லை. எனவே, அதன் செயல்பாடுகள் கூட்டாளிகளைப் பொருத்து அமைகின்றன.

3. பொதுக் கம்பெனியில் குறைந்தது ஏழு பேரும், தனிக் கம்பெனியில் இருவரும் தேவைப்படுகின்றனர். கூட்டாண்மையில் குறைந்தது இருவர் இருப்பின் போதும். பொதுக் கம்பெனியில் உச்ச அளவிற்கு எல்லையில்லை. ஆனால், தனிக் கம்பெனியில் 50 பேருக்கு மேல் இருக்கக்கூடாது. கூட்டாண்மையில் வங்கித் தொழிலாயின் 10 பேருக்கு மிகாமலும், வேறு தொழில்களில் 20 பேருக்கு மிகாமலும் இருக்கவேண்டும்.

4. பங்குநர்களின் பொறுப்பு பங்கின் அளவிற்கே வரையறுக்கப்பட்டுள்ளது. ஆனால், கூட்டாளியின் பொறுப்பிற்கு வரையறையில்லை. நிறுவனத்தின் கடனைத் தீர்க்க அதன் சொத்துகள் போதவில்லையென்றால், தங்கள் தனிப்பட்ட சொத்துகளை விற்றாவது கடனை அடைக்க வேணடும்.

5. பொதுக் கம்பெனியின் உறுப்பினர் எண்ணிக்கைக்கு உச்சவரம்பில்லை. ஆதலால், மிகப் பெரிய தொகையையும் முதலாகத் திரட்டி பெரும் தொழிற்சாலைகளையும் அமைக்க முடியும். ஆனால், கூட்டாண்மையில் மூலதனம் அதன் கூட்டாளிகளைப் பொருத்திருக்கிறது. பெரும் முதலை அதனால் திரட்ட முடிவதில்லை.

கம்பெனியின் மூலதனம் அதன் அமைப்புமுறையேட்டில் (Memorandum of Association) நிர்ணயிக்கப்பட்டிருப்பினும், சில சட்டமுறை விதிகளைப் பின்பற்றி அதனையும் மாற்றிக் கொள்ளலாம். கம்பெனியின் பதிவான மூலதனம் (Registered Capital) வரை புதுப் பங்குகள் வெளியிடுவதன்மூலமாக தனது முதலை அதிகரிக்க முடியும். அதன் முதலைக் குறைக்க வேண்டுமாயின், சில விதிமுறைகளைப் பின்பற்றியாக வேண்டும். ஆனால், ஒரு கூட்டு நிறுவனத்தின் முதலைக் கூடுதலாக்கிக்கொள்ளவோ, குறைத்துக்கொள்ளவோ எளிதாக முடியும்.

6. கம்பெனியின் இலாபம், பங்காதாயமாக (dividend) தரப்படுகிறது. இது பங்குத் தொகைகளில் குறிப்பிட்ட சதவிகிதமாக அமையலாம். கூட்டு நிறுவனத்தைப் பொருத்தவரை அவர்கள் செய்துகொண்ட ஒப்பந்தத்தின்படி ஒவ்வோராண்டும்

ஏற்படும் இலாப-நட்டம பிரிக்கப்படும். கூட்டாளிகள் இலாபத்தினை எடுத்துக்கொள்ளவில்லையென்றால், அதனை அவர்கள் போட்டுள்ள முதலுடன் சேர்த்துக்கொள்ளமுடியும். ஆனால், கூட்டுப் பங்குக் கம்பெனியில் பங்குநர்கள் தாங்கள் பெறும் பங்காதாயத்தை இவ்வாறு தங்கள் பங்குத் தொகையுடன் சேர்த்துக் கொள்ளமுடியாது.

7. கம்பெனியின் நிர்வாகம் பங்குநர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட இயக்குநர் அவையிடம் (Board of Directors) ஒப்படைக்கப்படுகிறது. கம்பெனியின் கணக்கேடுகளை உறுப்பினர்கள் பார்வையிட முடியாது. ஆனால், ஆண்டுக் கணக்கு அறிக்கைகளை (இலாப-நட்டக் கணக்கையும், இருப்புநிலைக் குறிப்பையும்) மட்டுமே பெற உரிமை உடையவர்கள். ஆனால், கூட்டாண்மையில் நிர்வாகத்தில் பங்குபெறவும், கணக்கேடுகளை ஆய்வு செய்யவும், ஒவ்வொரு கூட்டாளியும் உரிமை பெற்றிருக்கின்றனர்.

8. கூட்டுப் பங்குக் கம்பெனியின் கணக்குகள் தகுதியுடைய தணிக்கையாளரால் (qualified auditors) ஒவ்வோராண்டும் தணிக்கை செய்யப்பட வேண்டும். கூட்டாண்மையின் கணக்குகளை இவ்வாறு தணிக்கை செய்யவேண்டிய கட்டாயமில்லை.

9. கம்பெனிகள் சட்டமுறைப்படி சில ஏடுகளை வைத்திருக்க வேண்டும். சில ஏடுகளில் கம்பெனிச் சட்டத்தையொட்டிப் பதிவு செய்யவேண்டும். ஆனால், இத்தகைய நிபந்தனைகள் கூட்டாண்மையைப் பொருத்தவரையில்லை.

10. கம்பெனியை அமைப்பதில் பல சிக்கல்கள் எழும். பலவகையான முறைகளைப் பின்பற்ற வேண்டும். கம்பெனிச் சட்டத்தில் காணப்படும் அத்தனைச் சட்டங்களையும் பின்பற்றித் தான் தொழில் தொடங்கத் தேவையான கூட்டுருவாக்கச் சான்றிதழைப் (certificate of incorporation) பெறமுடியும். பொதுக் கம்பெனியாயின், மேலும் பலவகை முறைகளைப் பின்பற்றி, இறுதியில் தொழில் தொடக்கச் சான்றிதழைப் பெற்ற பின்னரே செயல்பட முடியும். ஆனால், கூட்டு நிறுவனத்தைப் பதிவு செய்யவேண்டிய கட்டாயமேயில்லை.

11. தனிக் கம்பெனியில் பங்கு மாற்றுவதில் சில தடைகள் உள. ஆனால், பொதுக் கம்பெனியில் பங்குகளை மாற்றுதல் மிகவும் எளிமையானதாகும். கூட்டு நிறுவனத்திலோ எல்லாக்

கூட்டாளிகளும் இசைவு அளித்தாலன்றி, ஒருவர் தனது பங்கைப் பிறர்க்கு மாற்றித்தர முடியாது.

*12.* வருமான வரியைக் கம்பெனியே செலுத்திவிடுகிறது. பங்குநர்கள் பெறும் இலாபத்தை உழையாமற் பெற்ற வருமானமாக (unearned income) வருமானவரிச் சட்டம் கருதுகிறது. பதிவு செய்யப்பெறாக் கூட்டாண்மையாயின், கூட்டாளிகளே வருமான வரியைச் செலுத்தி விடுகின்றனர். உழைக்கும் கூட்டாளிகள் பெறும் இலாபம் உழைத்துப் பெற்ற வருமானமாகக் (earned income) கருதப்படுகின்றது.

## கூட்டுப் பங்குக் கம்பெனியின் வகைகள்
## (Kinds of Joint stock Companies)

### 1. சட்டமுறைக் கம்பெனி (Statutory Company)

மைய அரசோ, மாநில அரசோ சட்டம் இயற்றுவதன் காரணமாகத் தொடங்கப்பெறும் கம்பெனிகள் சட்டமுறைக் கம்பெனிகள் எனப்படும். இத்தகையக் கம்பெனிகள் அமைப்பு முறையேட்டையோ (Memorandum of Association), செயல் முறை விதிகளையோ (Articles of Association) தயாரிக்கத் தேவையில்லை. பொறுப்பு வரையறுக்கப்பட்டிருப்பினும், 'வரையறுக்கப்பட்டது' (Limited) எனும் சொல்லை இக் கம்பெனிகள் தங்கள் பெயர்களுடன் சேர்த்துக்கொள்ளத் தேவையில்லை. எடுத்துக்காட்டு : ரிசர்வ் பேங்க், ஸ்டேட் பேங்க் முதலியவை.

### சட்டமுறைப் பொதுக் கம்பெனி

*1960*ஆம் ஆண்டைய கம்பெனிச் சட்டத்தின் திருத்தம் ஒரு புதுவகைக் கம்பெனியைத் தோற்றுவித்திருக்கிறது. இத் திருத்தச் சட்டத்தில் *43*-ஏ என்று ஒரு புதிய பிரிவு ஏற்படுத்தப் பட்டது. இப் பிரிவின்கீழ் வரும் கம்பெனிகள் '*43*-ஏ கம்பெனிகள்' என்று பரவலாக அழைக்கப்படுகின்றன. அதாவது, இதற்கு முன்னர் தனிக் கம்பெனிகளாக கருதப்பட்டு வந்தவை இப் பிரிவின்படி இனிப் பொதுக் கம்பெனிகளாகக் கருதப்படும். இச் சட்டத் திருத்தத்தின் நோக்கம் சில மிகப் பெரிய கம்பெனிகள், பொது மக்களிடமிருந்து பெரும் தொகையைத் திரட்டிக்கொண்டு தனிக் கம்பெனிகள் என்ற அமைப்பின்கீழ் செயல்பட்டு வருவதைத் தடுப்பதற்கேயாகும். பொதுக் கம்பெனிகள்மீது விதிக்கப்

பட்டுள்ள பலவிதத் தடைகளிலிருந்தும், சட்டத்தின் ஆழ்ந்த கண்காணிப்பிலிருந்தும் விடுவித்துக்கொள்ளவும், தனிக் கம்பெனி களுக்கு வழங்கப்பட்டுள்ள சில சலுகைகளையும், உரிமைகளையும் அனுபவிக்கவும், கம்பெனிகள் தனிக் கம்பெனிகளாக செயல் படப் பெரிதும் விரும்புகின்றன. இப் போக்கினைத் தடுத்து நிறுத்தவே இப் புதிய திருத்தம் கொண்டுவரப்பட்டது.

இத் திருத்தத்தின்படி, ஒரு கம்பெனியின் பங்கு முதலில் குறைந்தது 25 சதவீத அளவிற்காவது, ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட பொதுக் கம்பெனிகள் வைத்திருக்குமாயின், அத் தகைய தனிக் கம்பெனி இச் சட்டத்தின்படிப் பொதுக் கம்பெனி யாகக் கருதப்படும். எடுத்துக்காட்டாக, வரையறு பொறுப் புடைய 'அ' எனும் தனிக்கம்பெனியின் பங்குமுதல் ரூ. 5,00,000 என்றும், இதில் ரூ. 1,25,000 மதிப்புடைய பங்குகளை வரையறு பொறுப்புடைய 'ஆ' எனும் பொதுக் கம்பெனி வைத்திருப்ப தாகவும் கொண்டால், தனிக் கம்பெனியாக இதுவரை கருதப் பட்டு வந்த 'அ' கம்பெனியும் இச் சட்டத் திருத்தத்தின்படி பொதுக் கம்பெனியாகவே கொள்ளப்படும். இத்தகையத் தனிக் கம்பெனி தான் '43-ஏ கம்பெனி' என்று அழைக்கப்படுகிறது. இவ்வாறு கம்பெனிச் சட்டத்தின் 43-ஏ பிரிவின்கீழ் இது பொதுக் கம்பெனியாகக் கருதப்படுவதால், இதனைச் 'சட்ட பொதுக்கம்பெனி யென்றும்' (Statutory Public Company) கூறுவ துண்டு.

இத்தகைய 43-ஏ கம்பெனிகள் தனிக் கம்பெனிகட்குரிய 3 அடிப்படைத் தடைகளும் உடையதாக இருக்கலாம். (அதாவது, உறுப்பினர் எண்ணிக்கை வரம்புக்கு உட்பட்டது. பொதுமக்களிட மிருந்து பங்கு, கடனீட்டுப் பத்திர அழைப்பு தடைப்படுத்தப் படுவது, பங்கு மாற்றுதலில் சில தடைகளை விதித்துக் கொள்ளுதல். இத்துடன் பங்குநர்களின் குறைந்தளவு ஏழுக்கும் குறைவாக வைத்துக் கொள்ளலாம்). தனது பெயருடன் உள்ள 'தனி' (private) எனும் சொல்லையும் நீக்கிவிட வேண்டும்.

**2. அரசு கம்பெனி** (Government Company)

ஒரு கம்பெனியின் 51 சதவீதம் அல்லது அதற்கு மேற் பட்ட பங்கு முதலை மைய அரசோ மாநில அரசோ அல்லது இவ் விரண்டு அமைப்புக்களுமோ செலுத்தியிருப்பின் அக் கம்பெனி அரசு கம்பெனி எனப்படும்.

**3. அயல்நாட்டுக் கம்பெனி** (Foreign Company)

இது இருவகைப்படும். (அ) வெளிநாட்டில் அமைக்கப் பெற்ற கம்பெனி 1956 ஏப்ரல் 1-க்குப் பிறகு இந்தியாவில் தொழில் தொடங்குமாயின், அதுவும்; (ஆ) அந் நாளுக்கு முன்னரே வெளிநாட்டில் அமைக்கப்பெற்ற கம்பெனி இந்தியாவில் தொழில் தொடங்கி இப்பொழுதும் தொடர்ந்து நடத்திவரின் அதுவும் அயல்நாட்டுக் கம்பெனிகள் எனப்படும். கம்பெனிச் சட்டத்தின் கட்டுப்பாடுகள் அனைத்தும் இத்தகைய கம்பெனி களுக்கும் பொருந்தும்.

**4. பதிவு செய்யப்பட்ட கம்பெனிகள்** (Registered Companies)

கம்பெனிச் சட்டத்தின்கீழ்ப் பதிவு செய்யப்படும் கம்பெனிகள் பதிவு செய்யப்பட்ட கம்பெனிகள் எனப்படும். அவை கீழ்க்கண்டவாறு இருக்கலாம்:

(1) பொறுப்பு வரையறுக்கப்பெறாத பொதுக் கம்பெனி;

(2) பொறுப்பு வரையறுக்கப்பெறாத தனிக் கம்பெனி;

(3) பொறுப்பு வரையறுக்கப்பெற்ற தனிக் கம்பெனி;

(4) பொறுப்பு வரையறுக்கப்பெற்ற பொதுக் கம்பெனி.

பொறுப்பு வரையறுக்கப்பெற்ற கம்பெனியை மேலும் வகைப்படுத்தலாம். அவை :

(1) பங்குகளால் பொறுப்பு வரையறுக்கப்பெற்ற கம்பெனி;

(2) பொறுப்புறுதியால் பொறுப்பு வரையறுக்கப்பெற்ற கம்பெனி (Company limited by guarantee)

**பொறுப்பு வரையறுக்கப்பெறாக் கம்பெனிகள் அல்லது வரையறாக் கம்பெனிகள்** (Unlimited Companies)

இவ்வகைக் கம்பெனியில் உறுப்பினர்களின் பொறுப்புக்கு எல்லையில்லை. ஆகவே, கம்பெனியின் கடன்கட்கு இவர்கள் தனிப்பட்ட முறையிலும் பொறுப்பாவார்கள். எனினும், கம்பெனியின் கடனீந்தோர் நேரிடையாக உறுப்பினரின்மீது வழக்குத் தொடுக்க முடியாது. இவர்கள் முதலில் கம்பெனி மீது வழக்குப் பதிவு செய்யவேண்டும். இத்தகைய கம்பெனி களால் அதன் உறுப்பினர்களுக்குப் பயன் ஏதுமில்லை. ஆதலால், இத்தகைய கம்பெனிகளே நமது நாட்டில் இல்லை.

**பங்குகளால் வரையறுக்கப்பெற்ற கம்பெனி** (Ccmpany limited by Shares)

முன்னர்க் குறிப்பிட்டவாறே பங்குத்தொகை முழுவதையும் செலுத்தியிருப்பின், உறுப்பினர்களுக்கு வேறெப்பொறுப்பும் எழுவதில்லை. அதாவது, உறுப்பினர்களின் பொறுப்பு செலுத்தப் பெறாத பங்குத் தொகைகளின் அளவாகும். பங்கின்மீது செலுத்தப் படாத தொகையை உறுப்பினர்கள் செலுத்தியும்கூட, கம்பெனியின் கடன்கள் தீரவில்லையென்றால், உறுப்பினர்கள் மீண்டும் பணம் கொடுக்கவேண்டுவதில்லை. இவ்வகைக் கம்பெனிகளே அதிகவளவில் கம்பெனிச் சட்டத்தின்கீழ்ப் பதிவாகின்றன.

**பொறுப்புறுதியால் வரையறுக்கப்பெற்ற கம்பெனிகள்** (Companies limited by guarantee)

இவ்வகைக் கம்பெனிகள் வாணிகநோக்கு எதுவுமின்றிச் செயல்படுகின்றன. கலை வளர்க்கும் நோக்கு அல்லது கல்வி, இலக்கியம், அறப்பணி போன்றவற்றைப் பேணிக் காக்கும் பொது நோக்குடையவை. இத்தகைய கம்பெனியில் ஒவ்வோர் உறுப்பினரும், அது கலைக்கப்படும்போழ்து குறிப்பிட்ட தொகையைச் செலுத்திவிடுவதாகப் பொறுப்புறுதி (guarantee) அளிக்கிறார்கள். உறுப்பினர்கள் தரவேண்டிய பொறுப்புறுதித் தொகை கம்பெனியின் அமைப்புமுறை யேட்டில் காணப்படும். எனவே, இக் கம்பெனியில் உறுப்பினரின் பொறுப்பு அவர் தந்துள்ள பொறுப்புறுதித் தொகையின் அளவேயாகும். இத்தகைய கம்பெனிகளுக்குப் பங்குமுதல் இருக்குமானால், உறுப்பினரின் பொறுப்பு பங்குமீது செலுத்தப்பெறாத் தொகையும், பொறுப்புறுதித் தொகையுமாகும்.

**தனிக் கம்பெனி** (Private Company)

பங்குகளாலோ, பொறுப்புறுதியாலோ பொறுப்பு வரையறுக்கப்பட்டிருக்கும் கம்பெனி பொதுக் கம்பெனியாகவோ, தனிக் கம்பெனியாகவோ இருக்கலாம். கம்பெனிச் சட்டத்தின் 3 (1)ஆவது பிரிவின்படி செயல்முறை விதிகள் :

(1) பங்கு மாற்றுவதில் தடைகளையுடையதும்;

(2) உறுப்பினர்கள் எண்ணிக்கை 50-க்கு மிகாமல் இருப்பதும் (கம்பெனியில் பணிபுரிவோர் உறுப்பினராக உள்ளவர்களையும், கம்பெனியில் பணிபுரிந்தபொழுது உறுப்பினராக இருந்து, பணியினின்றும் விலகிய பின்னரும்கூட உறுப்பினர்களாகத்

தொடர்ந்து உள்ளவர்களேயும் இந்த உச்சவரம்புக் கணக்கில் எடுத்துக்கொள்ளக் கூடாது);

(3) கம்பெனியின் பங்குகளேயோ, கடனீட்டுப் பத்திரங் களேயோ வாங்கப் பொதுமக்களிடம் அழைப்பு விடுவது தடை செய்யப்பட்டு இருப்பதுமான கம்பெனி தனிக் கம்பெனியாகும்;

(4) குறைந்தது இரு உறுப்பினர்களுடனுவது தனிக் கம்பெனி பதிவு செய்யப்படவேண்டும். தன் பெயருடன் 'தனி வரையறுக்கப்பட்டது' (Private limited) எனும் சொற் களே இணைத்துக்கொள்ள வேண்டும். பொதுக் கம்பெனியைப் போன்றே இதுவும் தனது கணக்குகளே ஆண்டுதோறும் பட்டயக் கணக்காயர்களால் (Chartered Accountants) தணிக்கை செய்து இறுதிக் கணக்குகளேக் கம்பெனிப் பதிவாளரிடத்தில் தாக்கல் செய்யவேண்டும். ஆயினும், இதைப் பொதுக் கம்பெனியுடன் ஒப்பிட்டு நோக்கும்பொழுது, பல சலுகைகளேப் பெற்றுத் திகழ் கின்றது.

## 5. பொதுக் கம்பெனி (Public company)

மேலே விளக்கப்பட்ட தடைகள் எதுவும் இல்லாக் கம்பெனி இதுவாகும். தனிக் கம்பெனி அல்லாத ஒரு கம்பெனி பொதுக் கம்பெனி என்று சட்டம் கூறுகிறது. குறைந்தது ஏழு பேருடனு வது இதைப் பதிவு செய்யவேண்டும். பங்குகளே மாற்றிக் கொள்ளலாம். உறுப்பினர்களின் எண்ணிக்கைக்கு உச்சவரம் பில்லே. பொதுமக்களிடத்தில் பங்குகளேயோ கடனீட்டுப் பத்திரங்களேயோ வெளியிடலாம்.

## 6. பிடிப்புக் கம்பெனியும், துணைக் கம்பெனியும் (Holding Company and Subsidiary Company)

கம்பெனிச் சட்டத்தின் 4ஆவது பிரிவு கீழ்க்கண்டவாறு கூறு கிறது :

ஒரு கம்பெனியின் இயக்குநரவையினைக் கட்டுப்படுத்தும் நிலேயிலோ ஒரு கம்பெனியின் சாதாரணப் பங்கு முதலில் பெரும்பான்மை பங்குகளேயோ வேருெரு கம்பெனி பெற்றிருக்கு மாயின், முதலாவது கம்பெனியைத் துணைக் கம்பெனியென்றும், இரண்டாவது கம்பெனியைப் பிடிப்புக் கம்பெனி என்றும் அழைக் கிருேம்.

**தனிக் கம்பெனியின் சலுகைகள்** (Privileges of a Private Company)

1. அமைப்புப் பத்திரத்தில் கையெழுத்திட இருவர் போதும்.

2. தகவல் அறிக்கையை வெளியிடவோ, தகவல் அறிக்கைக்கு மாற்று அறிக்கையைத் தாக்கல் செய்யவோ தேவையில்லை.

3. குறுமப் பங்கு எடுப்புக் (Minimum subscription) கிடைப்பதற்கு முன்னரே பங்குகளை ஒதுக்கத் தொடங்கலாம்.

4. கூட்டுருவாக்கச் சான்றிதழைப் (Certificate of incorporation) பெற்றவுடன் தொழில் தொடங்கலாம். தொழில் தொடக்கச் சான்றிதழ் (Certificate of Business commencement) பெறவேண்டிய நியதி இதற்கில்லை.

5. சட்டமுறைக் கூட்டத்தைக் கூட்டவோ, சட்டமுறை அறிக்கையைத் தாக்கல் செய்யவோ தேவையில்லை.

6. எவ்வகைப் பங்குகளையும் அது வெளியிடலாம்.

7. விகிதாசாரமற்ற வாக்குரிமைகளையும் இது வழங்கலாம்.

8. செயல்முறை விதிகட்குட்பட்டுக் கூட்டத்திற்கு வேண்டிய குறைவெண் உறுப்பினர் தொகை (Quorum) இருவர்.

9. இயக்குநர்கள், தாங்கள் இயக்குநராகப் பணியாற்றுவதற்கான இசைவினைத் தாக்கல் செய்யவேண்டிய தேவையில்லை.

10. பொதுக்கூட்டத்தில் ஒரு தீர்மானத்தின்மூலமே இரண்டோ அல்லது அதற்கு மேற்பட்ட இயக்குநர்களையோ நியமிக்கமுடியும்.

11. தாம் சம்பந்தப்பட்டுள்ள ஒப்பந்தத்தின் மீதான தீர்மானத்தில் வாக்குச் செலுத்தும் உரிமை இயக்குநருக்குண்டு.

12. தனிக் கம்பெனியின் இறுதிக் கணக்குகள் கம்பெனிப் பதிவாளரிடத்தில் தாக்கல் செய்யப்படினும், பொதுமக்கள் இதனைப் பார்வையிட முடியாது.

13. புதிய பங்குகளை வெளியிடும்போழ்து கம்பெனியில் இருக்கின்ற பங்குநர்களுக்கு முதலில் அவற்றை அளிக்க வேண்டு மென்ற நியதி தனிக் கம்பெனிக்குப் பொருந்தாது.

14. மைய அரசின் இசைவின்றியே தனது இயக்குநர்களுக் குக் கடன் கொடுக்கமுடியும்.

15. கம்பெனியின் மேலாண்மையர்க்குக் கொடுக்கும் ஊதி யம் பற்றிய தடைகள் தனிக் கம்பெனிக்குப் பொருந்தா.

16. இரு கம்பெனிகளுக்கு மேலேயே ஒருவர் மேலாள ராகவோ, மேலாண்மை இயக்குநராகவோ செயற்படலாம்.

## கம்பெனி அமைப்பு
## (Company Formation)

தொழில் ஒன்றைச் செய்ய வேண்டுமென்ற எண்ணம் ஏற் பட்டுக் கம்பெனியை அமைக்கும் முயற்சிகளில் ஈடுபட்டிருப் போரைத் தோற்றுவிப்பாளர்கள் (Promoters) என்கிறோம். தொடங்க விரும்பிய தொழிலை நடத்தமுடியுமா என்பதை ஆழ்ந்து ஆய்ந்து, அதற்கான புள்ளிவிவரங்களை முதலில் தோற்று விப்பாளர் சேகரிக்கின்றனர். பின்னர்ப் பணம் திரட்டச் செல் வாக்கு மிக்கோரை அணுகிக் கம்பெனியை அமைப்பதற்கான தொடக்க வேலைகளில் ஈடுபடுகின்றனர். கம்பெனிப் பதிவாள ரிடத்தில் பலவகையான ஆவணங்களை (documents) தாக்கல் செய்யவேண்டும். அவை :

**1. அமைப்பு முறையேடு** (Memorandum of Association) : கம்பெனியிடம் இருக்கவேண்டிய பத்திரங்களில் முதன்மை பெற்றது. பங்குகளால் வரையறுக்கப்பட்ட கம்பெனியின் அமைப்புமுறையேட்டில் கீழ்க்கண்ட சரத்துகளிருக்கும் :

(1) கம்பெனியின் பெயர் குறிக்கப்படும். இதில் வரை யறுக்கப்பட்டது (Limited) எனும் சொல் இருக்கவேண்டும். தனிக் கம்பெனியாயின் 'தனி வரையறுக்கப்பட்டது' (Private limited) எனும் சொற்கள் இதன் பெயரின் இறுதியில் காணப் படவேண்டும்.

(2) எந்த மாநிலத்தில் கம்பெனியின் பதிவு அலுவலகம் அமைக்கப்பட்டிருக்கிறதோ, அம் மாநிலத்தின் பெயர் குறிக்கப் படவேண்டும்.

(3) கம்பெனியின் நோக்கம் தெளிவாகக் குறிக்கப்பட வேண்டும். செய்யவிருக்கும் தொழில்களின் தன்மையை விளக்குவதால், அதன் நடவடிக்கைகளை அனைவரும் அறிந்துகொள்ளும் வாய்ப்பு ஏற்படும். எனவே, இந் நோக்கங்கள் அனைத்தையும் இதில் சேர்க்கவேண்டும்.

(4) உறுப்பினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டுள்ளது என்பது இங்குக் குறிக்கப்படுகிறது. உத்தரவாதத்தால் வரையறுக்கப்படும் கம்பெனியின் அமைப்புமுறையேட்டில் உறுப்பினர்கள் தருவதாக உத்தரவாதம் செய்யும் தொகையையும் குறிப்பிட வேண்டும்.

(5) கம்பெனியின் முதல் குறிப்பிடப்பட வேண்டும். எம் முதல் தொகையுடன் கம்பெனி பதிவு செய்யப்படுகிறது என்பதையும் (பதிவு செய்யப்பட்ட முதல்)-(Registered Capital) அது எவ்வாறு பல பங்குகளாகப் பிரிக்கப்படுகிறது என்ற விவரமும் பங்கின் மதிப்பும் தெளிவாகக் கொடுக்கப்படவேண்டும்.

(6) தாங்கள் ஒன்றிணைந்து கம்பெனியை அமைக்க விருப்பம் உடையவர்கள் என்பதைக் கூறித் தங்கள் தங்கள் பெயர்களுக்கு எதிரே குறிப்பிடப்பட்டுள்ள பங்குகளை எடுத்துக்கொள்ளுவதாகத் தோற்றுவிப்பாளர்கள் உறுதியளித்துக் கையொப்பம் இடுவர்.

அமைப்பு முறையேடு பல பத்திகளாகப் பிரிக்கப்பட்டு, வரிசை எண்கள் இடப்பட்டு அச்சிடப்பட வேண்டும். பொதுக் கம்பெனியாயின், குறைந்தது ஏழு பேராவது கையெழுத்திட வேண்டும்.

அமைப்புமுறையேட்டை மாற்றுவதில் சில சிக்கல்கள் உள. சில சரத்துகளை மாற்றுவதற்கு நீதிமன்றத்தின் இசைவையும், மைய அரசின் ஒப்புதலையும் பெறவேண்டியுள்ளது.

**2. செயல்முறை விதிகள்** (Articles of Association): அமைப்பு முறையேடு கம்பெனியின் புற நடவடிக்கைகளை விளக்குகிறது. அதன் செயல்முறை விதிகள் கம்பெனியின் நிருவாகத்தைப் பற்றிய விதிமுறைகளை உள்ளடக்கியதாகும். கம்பெனி ஒன்று தனக்குத் தேவையான நடைமுறை விதிகளைத் தயார் செய்யவில்லையென்றால் கம்பெனிச் சட்டத்தில் கொடுக்கப்பட்டிருக்கும் மாதிரிச் செயல் முறை விதிகள் (Table A) அக் கம்பெனிக்குப் பொருந்தும். பொதுவாகக் பின்கொடுக்கப்பட்ட விவரங்கள் இதில் காணப்படும் :

(அ) பங்கு முதலும், அதன் பிரிவுகளும்;

(ஆ) பங்குகளுக்குரிய உரிமைகள்;

(இ) பங்கு அமைப்பு, பங்கு மாற்றம், பங்குப் பறிமுதல் போன்ற விவரங்கள்;

(ஈ) ஒப்புறுதிக் கழிவு;

(உ) இயக்குநர்களின் எண்ணிக்கை, அவர்களின் உரிமைகள், கடமைகள், தகுதி, ஊதியம் முதலியவை;

(ஊ) கம்பெனியின் நிர்வாகம்;

(எ) கம்பெனியின் கூட்டங்கள், கூட்டத்தில் பின்பற்ற வேண்டிய நடைமுறைகள், உறுப்பினர்களின் உரிமைகள் ஆகியவை;

(ஏ) கம்பெனியின் தணிக்கை.

3. கம்பெனியின் இயக்குநர்களாக இருப்பதற்கு ஒப்புதல் அளித்தவர்களின் பெயர்ப் பட்டியல்.

4. தாங்கள் இயக்குநர்களாகப் பணியாற்றுவதற்கும், தங்கள் பங்குகளுக்கான தொகை செலுத்துவதற்கும், ஒப்புதல் தெரிவிக்கும் எழுத்துமூலமான இசைவையும் தாக்கல் செய்யவேண்டும். தனிக் கம்பெனிக்கோ, முதலின்றிப் பதிவு செய்யப்படும் கம்பெனிக்கோ தனிக் கம்பெனி, பொதுக் கம்பெனியாக மாற்றப் படும்பொழுதோ அவை பொருந்தா.

5. பதிவு அலுவலகத்தின் முகவரிபற்றிய ஓர் அறிவிப்பு (பதிவு செய்யப்பட்ட 30 நாள்களுக்குள் இதைக் கொடுக்கலாம்).

6. பெயரளவு முதல்பற்றிய அறிக்கை. இது ரூ. 25 இலட்சத்திற்கு அதிகமாக இருக்குமானல், மைய அரசிடமிருந்து இம் மூலதனத்தை வெளியிடுவதற்காகச் சான்றிதழைப் பெற்று அதனையும் தாக்கல் செய்யவேண்டும்.

7. இந்தியாவின் தலைமை நீதிமன்றத்தின் அல்லது உயர் நீதிமன்றத்தின் வழக்குரைஞர், இந்தியாவில் பணிபுரியும் பட்டயக் கணக்காயர் (Chartered Accountant) (கம்பெனி அமைப்பில் அவர் ஈடுபட்டிருக்க வேண்டும்.)

8. செயல்முறை விதிகளில் குறிப்பிடப்பட்டுள்ள இயக்குநர், மேலாளர் அல்லது கம்பெனியின் செயலர் இவர்களில் ஒருவர்

கம்பெனிப் பதிவிற்கு வேண்டிய சட்டமுறைச் சடங்குகள் அனைத்தும் பின்பற்றப்பட்டுவிட்டன என்று அளிக்கும் உறுதிமொழி.

**கட்டணங்களைச் செலுத்துதல்**

கம்பெனிச் சட்டத்தின் 35ஆவது பிரிவுப்படி, உரிய பதிவுக் கட்டணத் தொகையைச் செலுத்தியபின், கம்பெனிப் பதிவாளர், தாக்கல் செய்யப்பட்டுள்ள அனைத்துப் பத்திரங்களும் சரியாக வுள்ளன என்றும் சட்டமுறைகள் அனைத்தும் பின்பற்றப்பட்டு விட்டன என்றும் கண்டால் அவர் கூட்டுருவாக்கச் சான்றிதழை (Certificate of Incorporation) வழங்குகிறார். இது மிகவும் சிறப்பு வாய்ந்த பத்திரமாகும். காரணம், இச் சான்றிதழ் வழங்கப்பட்ட நாளில் கம்பெனி தோற்றுவிக்கப்பட்டுள்ளது என்பதை அறி விக்கும் ஆவணமாகும். அடுத்து, கம்பெனிக்குரிய முறையில் பதிவு செய்யப்பட்டுவிட்டது என்பதற்கான முடிவான சான்று மாகும். இச் சான்றிதழைப் பெற்றபின்தான் கம்பெனி ஒரு தனியாள் தன்மையைப் பெறுகிறது.

**தொழில் தொடங்குதல்**

தனிக் கம்பெனியாயின், கூட்டுருவாக்கச் சான்றிதழைப் பெற்றவுடனேயே தொழிலைத் தொடங்கலாம். ஆனால், பொதுக் கம்பெனி மேலும் சில விதிமுறைகளைப் பின்பற்ற வேண்டியுள்ளது.

கம்பெனிக்குத் தேவையான முதலை பொதுமக்களிடம் திரட்டியாக வேண்டும். இதற்காகத் தகவல்அறிக்கை (Prospectus) ஒன்றைத் தயார் செய்து ஒவ்வோர் இயக்குநரும் அதில் கையொப்பமிட்டுப் பதிவாளரிடத்தில் தாக்கல் செய்யவேண்டும். இதுவும் முக்கியமான ஓர் அறிக்கையாகும்.

**தகவல் அறிக்கை (Prospectus)**

கம்பெனிச் சட்டத்தின் 2 (36)ஆவது பிரிவு 'எந்தப் பத்திரம் தகவல் அறிக்கை என விவரிக்கப்படுகிறதோ அல்லது வெளியிடப் படுகிறதோ அதுவும், தனது கம்பெனியின் பங்குகளையோ, கடன் பத்திரங்களையோ வாங்கப் பொதுமக்களிடம் வேண்டுகோள் விடுக் கும் எந்த அறிவிப்பும், சுற்றறிக்கையும், விளம்பரமும், பத்திரமும் தகவல் அறிக்கை எனப்படும்' என்று கூறுகிறது. எனவே, பொது மக்களிடத்தில் முதல் திரட்டும்பொழுதோ அல்லது கடன் பெறும் பொழுதோ தகவல் அறிக்கை வெளியிடவேண்டும். தகவல் அறிக்கையின் பேரில்தான் ஒருவர் கம்பெனியின் பங்குகளை வாங்கு கின்றார். எனவே, கம்பெனிக்கும் பங்குதாரருக்குமிடையே

ஒப்பந்தம் ஏற்பட அடிப்படைக் காரணமாக இது அமைகிறது. தவறான தகவல்களைத் தகவல் அறிக்கை தந்தாலோ அல்லது பங்குதாரருக்குத் தெரியவேண்டிய இன்றியமையா விவரங்களைத் தகவல் அறிக்கை மறைத்தாலோ பங்குதாரர் பங்குகளைத் திரும்பப் பெற்றுக்கொள்ளும் உரிமை பெறுகின்றார். அதனுடன் கம்பெனியின் இயக்குநரிடமிருந்து, தோற்றுவிப்பாளரிடமிருந்து அல்லது தகவல் அறிக்கையை வெளியிட்டு ஒப்புதல் அளித்த எவரிடமிருந்தும் நட்டஈட்டுத் தொகையும் பெறமுடியும். மோசடி செய்யும் நோக்கத்துடன் பொய்க் கூற்றுகளைச் சேர்த்துத் தகவல் அறிக்கையில் வெளியிடின் சிறைத் தண்டனையையும் பெறுவர். ஆனால், இயக்குநரோ அல்லது தோற்றுவிப்பாளரோ கீழ்க்கண்ட நிலைகளில் இதற்குப் பொறுப்பாக மாட்டார்கள் :

1. தகவல் அறிக்கையை வெளியிட்டவுடனே தாம் இயக்குநராகப் பணிபுரிவதற்குக் கொடுத்த இசைவைத் திரும்பப் பெற்றுக்கொண்டதாகவும், தகவல் அறிக்கை தமது ஒப்புதலின்றியே வெளியிடப்பட்டது என்றும் நிரூபித்தால்;

2. தமக்குத் தெரியாமலோ அல்லது தம் விருப்பத்திற்கு மாறாகவோ அது வெளியிடப்பட்டது என்று நிரூபித்தால்;

3. தங்களுடைய விருப்பத்தைத் தகவல் அறிக்கை வெளியிட்டபின் பங்கு ஒதுக்குமுன்பாக திரும்பப் பெற்றுக்கொண்டதாகவும் அதற்கான பொது அறிவிக்கையை (Public Notice) வெளியிட்டுமிருந்தால்;

4. தகவல் அறிக்கையில் காணப்படும் விவரங்கள் உண்மையானவை என்று நம்பக் கூடியதற்குப் போதுமான காரணங்கள் இருந்தால் அல்லது உண்மையிலேயே அவர் அவ்வாறு நம்பியிருந்தால் அல்லது அவ் வறிக்கையானது ஒரு வல்லுநரின் அறிக்கையின் ஒரு படியாக (copy) இருந்தால்.

தகவல் அறிக்கையில் வல்லுநர் ஒருவரின் அறிக்கை காணப்படுமானால், வல்லுநர் அக் கம்பெனியின் அமைப்பிலோ அல்லது நிருவாகத்திலோ தொடர்பு உடையவராக இருக்கக்கூடாது. மேலும், தகவல் அறிக்கையில் அவர் அறிக்கையைச் சேர்ப்பதற்கு அவருடைய எழுத்துமூலம் ஒப்புதலைப் பெற்றிருக்கவேண்டும்.

68 'ஏ' பிரிவு கீழ்க்கண்டவற்றை ஒவ்வொரு தகவல் அறிக்கையிலும் காணப்பட வேண்டுமென்று வற்புறுத்துகிறது :

'ஒரு கம்பெனியின் பங்குகளை வாங்குவதற்காகக் கம்பெனியிடம் கற்பனைப் பெயரில் விண்ணப்பிக்கும் எவரும் அல்லது பங்கு ஒதுக்குமாறு அல்லது பங்கினை அவருக்கு மாற்றித்தருமாறு கற்பனைப் பெயரில் கம்பெனியைத் தூண்டுபவரும் ஐந்தாண்டுகளுக்கு மேலான சிறைத் தண்டனையைப் பெறுவார்கள்'.

1. தகவல் அறிக்கையில் தேதி இல்லையென்றாலோ;

2. தேவையான விவரங்களும், அறிக்கைகளும் தகவல் அறிக்கையில் இல்லையென்றாலோ;

3. கம்பெனி அமைப்பில் அல்லது நிருவாகத்தில் ஈடுபட்டிருக்கும் வல்லுநரின் அறிக்கைகளைத் தகவல் அறிக்கை உள்ளடக்கி இருந்தாலோ, கம்பெனி பதிவாளர் தகவல் அறிக்கையைப் பதிவு செய்யப் மறுக்கலாம்.

**தகவல் அறிக்கையில் காணப்பட வேண்டியவை**

1. கம்பெனியின் முக்கியமான நோக்கங்கள், அமைப்பு முறையேட்டில் கையொப்பமிட்டுள்ளோரின் பெயர்கள், தொழில், முகவரிகள், தாங்கள் எடுத்துக்கொள்ள உறுதியளித்த பங்குகள் எண்ணிக்கை.

2. பங்குகளின் வகைகளும், எண்ணிக்கையும்.

3. மீள்தகு முன்னுரிமைப் பங்குகளின் (Redeemable Preference Shares) எண்ணிக்கை, மீட்கப்படும் நாள் முடிவு செய்யவில்லையென்றால், பங்குகளை மீட்பதற்குக் கொடுக்கும் அறிவிப்பின் காலம், பங்குகளை மீட்கும் முறைபற்றிய விவரங்கள்.

4. கம்பெனிச் செயல்முறை விதிகளில் குறிப்பிடப்பட்டிருக்கும் இயக்குநர்களின் தகுதிப் பங்குகள், அவர்களின் பணிக்கான ஊதியம்.

5. இயக்குநர்கள், மேலாண்மை இயக்குநர் போன்றோரின் பெயர்கள், தொழில், முகவரிகள் முதலியவை. அவர்களை அவ்வாறு வேலையில் அமர்த்துவதற்கான ஒப்பந்தம், பதவி இழக்கும்போது அவர்களுக்குத் தரவேண்டிய ஈட்டுத்தொகை.

6. குறுமப் பங்கெடுப்பு (Minimum Subscription) கீழ்க்கண்ட செலவினங்களை மேற்கொள்ளுவதற்குப் பொதுமக்களிடம்

இருந்து பங்குகள் மூலமாகத் திரட்ட வேண்டிய குறைந்தவளவுத் தொகை என்று இயக்குநர்கள் கருதும் தொகை :

(அ) ஏற்ற தொடக்கச் செலவுகள், பங்கு வெளியீட்டில் தரவேண்டிய கழிவுத் தொகை;

(ஆ) வாங்கப்பட்ட சொத்தின் விலை அல்லது திரட்டும் முதல் தொகையிலிருந்து வாங்கியிருக்கும் சொத்தின் விலை;

(இ) மேற்கண்ட இரண்டிற்காகவும் வாங்கிய கடனைத் திருப்பி அனுப்பத் தேவையான தொகை;

(ஈ) நடைமுறை முதல் (working capital);

(உ) வேறு பிற செலவுகள் இருப்பின் அவை.

இயக்குநரோ கம்பெனி அமைப்புமுறையேட்டில் கையெழுத்திட்டவரோ மேற்சொல்லப்பட்ட ஒவ்வொன்றுக்கும் தனித்தனியாக எவ்வளவு தொகை வேண்டியிருக்கும் என்பதை ஆழ்ந்து சிந்தித்து முடிவு செய்யவேண்டும்.

7. பங்கு விண்ணப்பங்களைப் பெறுவதற்குத் தொடங்கும் நேரம் அதாவது, பங்கு அல்லது கடனீட்டுப் பத்திர விண்ணப்பங்களை எந்த நாளில் எந்த நேரம் முதல் எந் நாள்வரை கம்பெனி பெறுவதற்குத் தொடங்கும் என்ற விவரம்.

8. விண்ணப்பம் அனுப்பும்பொழுதும் பங்கு ஒதுக்கும் பொழுதும் செலுத்தவேண்டிய தொகை. (விண்ணப்பத்துடன் செலுத்த வேண்டிய தொகையானது பங்கின் பெயரளவு மதிப்பில் 5 சதவீதத்திற்குக் குறையாமல் இருக்கவேண்டும்.)

9. இரண்டாம் முறையோ அல்லது பின்னரோ பங்குகளைப் பொதுமக்களுக்கு அளிக்கும்பொழுது இரண்டாண்டுகளுக்குள், வெளியிட்ட பங்கு வெளியீட்டுத்தொகை, ஒதுக்கிய பங்குகள் தொகை, ஒதுக்கப்பெற்ற பங்குகள்மீது செலுத்தப்பட்ட தொகை முதலிய விவரங்கள்.

10. ஒப்புறுதியாளர்களின் பெயர்களும், தங்களுடைய பொறுப்புகளைத் தீர்க்கும் அளவிற்கு அவர்கட்கு வசதியிருக்கிறதெனும் இயக்குநர்களின் கருத்தும்.

**11.** கம்பெனியின் கடனீட்டுப் பத்திரங்களை அல்லது பங்குகளை ஒதுக்குவதில் யாருக்கேனும் சலுகை காட்டப்பட்டிருக்குமாயின் அல்லது சலுகை இனிக் காட்டப்படுவதாக இருப்பின், இத்தகைய ஒப்பந்தத்தின் அல்லது ஏற்பாட்டின் முக்கிய சாரமும், அதனுடன் அத்தகைய பங்குகளின் அல்லது கடன் பத்திரங்களின் எண்ணிக்கை, தொகை, கீழ்க்கண்ட விவரங்கள் முதலியவையும் குறிப்பிடப்பட்டிருக்கவேண்டும்.

(அ) இத்தகைய சலுகை உரிமையைப் பயன்படுத்திக் கொள்ளக்கூடிய கால வரையறை;

(ஆ) இத்தகைய சலுகையின் கீழ்ப் பங்குகட்கு அல்லது கடனீட்டுப் பத்திரங்கட்குச் செலுத்த வேண்டிய விலை;

(இ) இத்தகைய சலுகை கொடுப்பதின் மறுபயன் (consideration);

(ஈ) இத்தகைய சலுகைகளைப் பெறுபவர்களின் பெயர்கள், முகவரிகள், தொழில்பற்றிய விவரங்கள். இது இப்பொழுது இருக்கின்ற பங்குநர்கட்கு அல்லது கடன் பத்திரதாரர்கட்குக் கொடுக்கப்பட்டிருக்குமாயின், அவர்கள் பங்குகளின் அல்லது கடன் பங்குகளின் எண்ணும் விவரமும்.

**12.** கடந்த இரண்டாண்டுகட்குள் ரொக்கத்திற்கன்றி வேறு காரணங்கட்காக வெளியிடப்பட்ட பங்குகளின் எண்ணிக்கை, தொகை, விவரம் முதலியவையும், மறுபயனும், அப் பங்குகளில் பகுதி செலுத்தப்பெற்ற பங்குகள் (partly paid-up shares) வெளியிடப்பட்டிருப்பின், எவ்வளவு செலுத்தப்பட்டிருக்கிறதென்ற விவரமும் தரவேண்டும்.

**13.** தகவல் அறிக்கையின் நாளுக்குமுன் இரண்டாண்டுகட்குள் வெளியிட்ட பங்குகள்மீது முனைமத் தொகை (premium) செலுத்த வேண்டியிருப்பின், ஒவ்வொரு பங்கின்மீதும் செலுத்த வேண்டிய முனைமத் தொகையும், பங்குகள், வெளியிட்ட நாளினையும் குறிப்பிடவேண்டும். சில பங்குகள் ஒரு குறிப்பிட்ட முனைமத் தொகையில் வெளியிடப்பட்டும், அதே வகையான வேறு சில பங்குகள் அதனினும் குறைந்த முனைமத் தொகையில் வெளியிடப்பட்டுமிருக்குமாயின் அல்லது அதே வகையான பங்குகள் பெயரளவு விலையில் அல்லது தள்ளுபடிக்கு விற்கப்பட்டிருக்குமாயின்

இவ் வேறுபாட்டிற்குரிய காரணத்தையும், முன்னர்ப் பெற்ற முனைமத் தொகை எவ்வாறு பயன்படுத்தப்படும் என்பதையும் குறிப்பிடவேண்டும்.

14. கம்பெனி வாங்கிய சொத்துகளின் விலையைத் தகவல் அறிக்கைமூலமாகப் பங்குகள் வெளியிட்டுத் திரட்டும் தொகையி னின்றும் கொடுக்க வேண்டியிருப்பின், சொத்து விற்றவர்களின் பெயர், முகவரி, தொழில் முதலிய விவரங்களும், ரொக்கமாகச் செலுத்த வேண்டிய தொகையும், பங்குகள் அல்லது கடனீட்டுப் பத்திரம்மூலமாக செலுத்துகின்ற தொகை முதலியனவும் குறிப் பிடப்படவேண்டும்.

15. கம்பெயினின் பங்குகளை அல்லது கடனீட்டுப் பத் திரங்களை வாங்குவதற்காக அல்லது ஒப்புறுதி செய்வதற்காகக் கம்பெனியின் எந்த அலுவலர்க்காவது; தோற்றுவிப்பாளருக்காவது கடந்த இரண்டாண்டுகட்குள் கழிவுத்தொகை கொடுக்கப்பட் டிருக்குமாயின், அவர்களின் பெயர், முகவரி, தொழில் முதலிய விவரங்களுடன் அவ்வாறு செலுத்தப்பெற்ற தொகையும் ஒப்புறுதிக் கழிவின் விகிதமும் குறிப்பிடப்படவேண்டும். (வெளியிடும் பங்குத் தொகையில் இது 5 சதவீதத்திற்கு மிகக்கூடாது.கடனீட்டுப் பத்திரமாயின், $2\frac{1}{2}\%$-க்கு மிகக்கூடாது.)

16. மதிப்பிடப்பட்ட தொடக்கச் செலவுத் தொகை அல்லது தொடக்கச் செலவுகள் ஏற்கப்பட்டிருப்பின் அதன் தொகை, அதனை ஏற்றவர்கள் பற்றிய விவரங்கள் முதலியவை குறிப்பிடப்படவேண்டும். அதனுடன், இப்பொழுது பங்கு வெளி யிடும் செலவையும் மதிப்பிட்டுக் குறிக்கவேண்டும்.

17. தோற்றுவிப்பாளருக்காவது எந்த அலுவலருக்காவது தொகையோ அல்லது பயனோ கடந்த இரண்டாண்டுகட்குள் கொடுக்கப்பட்டிருக்குமாயின் அல்லது இனிக் கொடுக்கப்போவதாக இருப்பின் அதற்கான மறுபயன் குறிப்பிடப்படவேண்டும்.

18. தகவல் அறிக்கையின் நாளுக்கு முன்னர் இரண்டு அல்லது மேற்பட்ட ஆண்டுகட்குள் மேலாண்மை இயக்குநரையோ அல்லது மேலாளரையோ அமர்த்தும் ஒப்பந்தத்தின் அல்லது அவர் ஊதியத்தை உறுதி செய்யும் ஒப்பந்தத்தின் நாளையும், தன்மையையும், பிற விவரங்களையும் தகவல் அறிக்கையில் குறிக்க வேண்டும்.

19. கம்பெனியின் தோற்றத்தின் அல்லது தகவல் அறிக்கையின் நாளுக்கு இரண்டாண்டுகட்குள் கம்பெனி வாங்கிய சொத்துகளில் அல்லது இனி வாங்கவிருக்கும் சொத்துகளில் எந்த இயக்குநருக்காவது அல்லது தோற்றுவிப்பாளருக்காவது ஈடுபாடிருக்குமாயின் (interest), அதன் தன்மையையும் ஈடுபாட்டின் விவரத்தையும் கொடுக்கவேண்டும்.

20. கம்பெனியின் மூலதனம் பலவகைப் பங்குகளாகப் பிரிக்கப்பட்டிருக்குமாயின், ஒவ்வொருவகைப் பங்குகளின்மீதும், பங்காதாயத்தின்மீதும் அவைகட்குரிய உரிமையையும் குறிப்பிடவேண்டும்.

21. கம்பெனியானது தொழில் செய்துகொண்டு வந்திருக்குமாயின், எவ்வளவு காலமாகத் தொழில் செய்து வருகிறதென்ற விவரமும், ஏதேனும் தொழில் ஒன்றை வாங்குவதாக இருப்பின், அத்தகைய தொழில் எவ்வளவு ஆண்டுகளாக நடந்து வருகிறதென்ற விவரமும் கொடுக்கப்படவேண்டும்.

22. கம்பெனியின் கடந்த ஆண்டுகளின் இலாபத் தொகையோ காப்புத் தொகையோ முதற்படுத்தப்பட்டிருக்குமாயின் (capitalised), முதற்படுத்தப்பட்ட விவரமும், கடந்த இரண்டாண்டுகட்குள் சொத்துகளை மறு மதிப்பீடு செய்ததன் பயனாக ஏற்பட்ட மிகுதித் தொகையும், அம் மிகுதித் தொகை எவ்வாறு பயன்படுத்தப்பட்டிருக்கிறதென்ற விவரமும் கொடுக்கப்படவேண்டும்.

23. கம்பெனியின் தணிக்கையாளர்கள், பெயர், முகவரி பற்றிய விவரங்கள்.

24. கம்பெனி தொழில் செய்துகொண்டு வந்திருக்குமாயின், கீழ்க்கண்ட விவரங்கள் பற்றிய கம்பெனித் தணிக்கையாளர்களின் அறிக்கைகள் :

(அ) கம்பெனியின் இலாப-நட்டங்கள், சொத்துகள், பொறுப்புகள்;

(ஆ) தகவல் அறிக்கையை வெளியிடும் நாளுக்கு முன் 5 ஆண்டுகள் வரை ஒவ்வொரு வகைப் பங்குக்கும் கம்பெனி கொடுத்துவரும் பங்காதாயம் (dividend), எந்த ஆண்டிலாவது பங்குகள்

மீது பங்காதாயம் கொடுக்கப்படவில்லையென்றால், அத்தகைய பங்குகள் பற்றிய விவரம்.

தணிக்கையாளர்களின் அறிக்கையில் கடந்த 5 ஆண்டுகட்கு ஒவ்வோராண்டும் கம்பெனியின் இலாப-நட்டத்தைப் பற்றிய விவரமும், கணக்குகள் முடிக்கப்பட்ட இறுதிநாளில் கம்பெனியின் சொத்துகள், பொறுப்புகள் பற்றியும் இருக்கவேண்டும்.

25. கம்பெனிக்குத் துணைக் கம்பெனிகள் இருக்குமாயின் :

(அ) ஒவ்வொரு கம்பெனியின் இலாப-நட்டம் பற்றிய விவரமும் அல்லது துணைக் கம்பெனிகள் அனைத்திற்கும் ஒட்டுமொத்தமான இலாப-நட்டப் பற்றிய விவரமும்;

(ஆ) ஒவ்வொரு துணைக் கம்பெனியின் சொத்துகள்—பொறுப்புகள் பற்றிய விவரமும் அல்லது துணைக் கம்பெனிகள் அனைத்திற்கும் ஒட்டுமொத்தமான சொத்துகள், பொறுப்புகள் பற்றிய விவரமும் தணிக்கை அறிக்கையில் இருக்கவேண்டும்.

26. வியாபாரம் ஒன்றை வாங்குவதற்காகப் பங்குகளையோ கடனீட்டுப் பத்திரங்களையோ இப்பொழுது வெளியிட்டுத் திரட்டும் பணத்தைப் பயன்படுத்திக் கொள்வதாக இருப்பின், அத்தகைய தொழிலின் கடந்த 5 ஆண்டுகட்கான இலாப-நட்டம் பற்றிய விவரமும், தகவல் அறிக்கையின் நாளுக்கு 120 நாள்களுக்குள் தயாரிக்கப்பட்ட தொழிலின் சொத்துகள், பொறுப்புகள் பற்றிய விவரமுமடங்கிய அறிக்கையைக் கம்பெனியின் கணக்காயர்களிட (Accountants) மிருந்து பெற்றுத் தகவலறிக்கையில் தரவேண்டும்.

27. கம்பெனிப் பதிவாளரிடத்தில் தகவல் அறிக்கையின் படி (copy) ஒன்று தாக்கல் செய்யப்பட்டுவிட்டதென்று உறுதி மொழியும், தகவல் அறிக்கையில் வல்லுநரின் கருத்து காணப்படுமாயின், வல்லுநரின் ஒப்புதலும், அதனுடன் மேலாண்மை இயக்குநரின் அல்லது மேலாளரின் ஊதியத்தை உறுதிசெய்யும் அல்லது அவரை அமர்த்தும் ஒப்பந்தத்தின் படி ஒன்றும் பதிவாளரிடத்தில் தாக்கல் செய்யப்பட்டுவிட்டதென்ற அறிக்கையும், 1947ஆம் ஆண்டின் முதல் வெளியீட்டுக் கட்டுப்பாட்டுச் சட்டத்தின்கீழ் மைய அரசின் இசைவைப் பெற்றுவிட்டதென்ற அறிக்கையும் தகவல் அறிக்கையில் காணப்படவேண்டும்.

கம்பெனியின் பங்கு விண்ணப்பமோ அல்லது கடனீட்டுப் பத்திர விண்ணப்பமோ தகவல் அறிக்கையுடன்தான் தரப்பட வேண்டும்.

## பங்கு ஒதுக்கீடு
## (Allotment of Shares)

தகவல் அறிக்கையை வெளியிட்ட பிறகு கம்பெனியில் பங்கு வாங்க விரும்பும் பங்குநர்கள் விண்ணப்பத் தொகையுடன் விண்ணப்பத்தை அனுப்பத் தொடங்குவர். தகவல் அறிக்கையை வெளியிட்ட 120 நாளுக்குள் அதில் குறிப்பிடப்பட்டுள்ள குறுமப் பங்கெடுப்புத் தொகை அளவிற்காவது விண்ணப்பங்கள் வர வில்லையென்றால் அடுத்த 10 நாள்களுக்குள், பெற்ற விண்ணப்பத் தொகை முழுவதையும் திருப்பிக் கொடுத்துவிடவேண்டும். இவ்வாறு கொடுக்கத் தவறின், கம்பெனியின் இயக்குநர்கள் 6 சதவீதம் ஆண்டு வட்டி சேர்த்துத் திருப்பித்தரத் தனிப்பட்ட முறையிலும் பொதுவாகவும் பொறுப்பாவார்கள்.

தொழில்தொடக்கச் சான்றிதழ் பெறும் வரையில் பங்கு விண்ணப்பதாரரிடம் பெறும் தொகையை ஓர் அட்டவணை வங்கியில் (Scheduled Bank) போட்டு வைத்திருக்கவேண்டும். கம்பெனி முன்னரே தொழில்தொடக்கச் சான்றிதழைப் பெற்றிருக்குமாயின், குறுமப் பங்கெடுப்புத் தொகை பெறும்வரையில் அதனை அட்டவணை வங்கியில் வைத்திருக்கவேண்டும்.

மேற்கண்ட விதிமுறைகளை மீறும் ஒவ்வொரு தோற்றுவிப்பாளரும் இயக்குநரும் ரூ. 5,000 வரை தண்டம் செலுத்தப் பொறுப்பாவார்கள்.

இவ்வாறு தகவல் அறிக்கையை வெளியிடவில்லையென்றால், பதிவாளரிடத்தில் தகவல் அறிக்கைக்கு மாற்று அறிக்கை ஒன்றை (Statement in lieu of prospectus) தயாரித்து அதில் இயக்குநராகக் குறிப்பிடப்படும் ஒவ்வொருவரும் கையொப்பமிட்டு அதனைத் தாக்கல் செய்த பிறகுதான், பங்கை ஒதுக்கத் தொடங்க வேண்டும். இவ் விதி தனிக் கம்பெனிக்குப் பொருந்தாது.

குறுமப் பங்கெடுப்புத் தொகையளவிற்கு மனுக்கள் வந்து விடுமாயின் இயக்குநரவை பங்கு ஒதுக்கத் தொடங்கும். ஒருவர் விண்ணப்பித்துள்ள அனைத்துப் பங்குகளையும் அவருக்கு ஒதுக்கலாம்; அல்லது ஒதுக்காமலும் இருக்கலாம்; அல்லது அவர்

கேட்டிருக்கின்ற பங்குகளில் குறைந்தளவில் பங்குகளை ஒதுக்கலாம். (இதற்கான அதிகாரம் விண்ணப்பத்தில் காணப்படவேண்டும்.) தங்களுடைய செயலுக்கான காரணத்தை இயக்குநர்கள் கொடுக்கத் தேவையில்லை. ஆனால், தகவல் அறிக்கை வெளியிட்ட குறைந்தது 4 நாள்கள் வரை அல்லது தகவல் அறிக்கையில் காணப்படும் நாள்கள் வரை இயக்குநர்கள் பங்கு ஒதுக்கத் தொடங்குமுன் காத்திருக்கவேண்டும். வெளியிடும் பங்கு எண்ணிக்கைக்கும் அதிகமாக அவர்கள் பங்கு ஒதுக்கக்கூடாது. பங்கு ஒதுக்கிய பிறகு விண்ணப்பதாரர் பங்குநர் ஆகிறார். தனது விண்ணப்பத்தை இதற்குப் பிறகு மீண்டும் திரும்பப் பெற்றுக் கொள்ளமுடியாது. தனக்கு ஒதுக்கப்பட்ட பங்குகளின் முழுத் தொகையையும் செலுத்த அவர் கடமைப்பட்டவர். ஆனால், பொதுவாக இயக்குநரவை பங்கு ஒதுக்கியபோழ்து ஒரு குறிப்பிட்ட தொகையையும், பின்னர் சில தவணைகளிலும் பங்குத் தொகையைப் பெறுவது வழக்கம். பங்கு ஒதுக்குத் தொகையைச் செலுத்திய பின்னர்தான் பங்குகள் ஒருவருக்கு வழங்கப்படும்.

பங்கு மாற்றுச் சந்தையில் (Stock Exchange) தனது பங்குகளை ஈடுபடுத்துவதற்கு விண்ணப்பிக்கப்படும் என்று தகவல் அறிக்கை கூறியிருக்குமானால், கீழ்க்கண்ட நிலைகளில் பங்கு ஒதுக்குதல் முறையற்றதாகிவிடும்.

(1) தகவல் அறிக்கை வெளியிட்ட 10 நாள்களுக்குள் அத்தகைய விண்ணப்பம் எதையும் பங்கு மாற்றுச் சந்தைக்குப் போடவில்லையெனில்.

(2) பங்கு விண்ணப்பம் பெறுவது முடிவுற்ற 4 வாரத்திற்குள் பங்கு மாற்றுச் சந்தைக்குப் போட்ட விண்ணப்பம் மறுக்கப்படுமாயின்.

(3) மேற்சொன்ன காரணத்தால், பங்கு ஒதுக்குதல் முறையற்றதாகிவிடுவதால், பங்குநரின் பணத்தை 8 நாள்களுக்குள் திருப்பித் தரவேண்டும். தவறின், அதன் இயக்குநர்கள் தனித் தனியாகவும் கூட்டாகவும் 5 சதவீதம் வட்டியுடன் அதனைத் திருப்பித் தருவதற்குப் பொறுப்பாவார்கள்.

(4) முன்னரே கம்பெனி பங்கு ஒதுக்கி, இப்பொழுது மீண்டும் பங்கு வெளியிடுமாயின், இப்பொழுது சாதாரணப் பங்குநருக்குத் தாங்கள் வைத்திருக்கும் பங்குகளின் எண்ணிக்கைக்கேற்ப முதலில் அப் பங்குநர்கட்கே வெளியிடவேண்டும். புதிதாக வெளியிடும் இப் பங்குகளை இருக்கின்ற சாதாரணப் பங்குநர்கள்

மறுத்துவிட்டால், கம்பெனிக்கு மிகுந்த பயன் விளையும் முறையில் இயக்குநரவை அப் பங்குகளை எவ் வகையிலும் பயன்படுத்திக் கொள்ளலாம்.

(5) புதிய பங்குகளை வெளியிடும்போது அவற்றை இருக்கின்ற சாதாரண பங்குநர்கட்குத் தரத் தேவையில்லை என்ற ஒரு சிறப்புத் தீர்மானத்தை நிறைவேற்றின், அவ்வாறு ஒதுக்கத் தேவையில்லை. இதனைச் சாதாரண தீர்மானத்தின்மூலமும் முடிவு செய்யலாம். ஆனால், இதற்கு மைய அரசின் இசைவு தேவையாகும்.

**பங்கு ஒதுக்கீடு பற்றிய அறிக்கை** (Return as to allotment)

பங்கு ஒதுக்கிய 30 நாள்களுக்குள் கம்பெனிப் பதிவாளரிடத்தில் பங்கு ஒதுக்கீடு பற்றிய அறிக்கையைத் தாக்கல் செய்ய வேண்டும். ஒதுக்கப்பட்ட பங்குகளின் எண்ணிக்கை, அவற்றின் பெயரளவுத் தொகை, பங்கு ஒதுக்கீடு பெற்றவர்களின் பெயர், முகவரி, தொழில் பற்றிய விவரம், ஒவ்வொரு பங்கின்மீது செலுத்தப்பெற்ற அல்லது செலுத்த வேண்டிய தொகை பற்றிய விவரங்கள் அனைத்தையும் அறிக்கையில் கொடுக்கவேண்டும்.

ரொக்கத்திற்கு அல்லாமல் முழுவதும் அல்லது பகுதி செலுத்தப்பெற்ற பங்குகள் வெளியிடப்பட்டிருப்பின், பங்கு ஒதுக்கப்பெற்றவர்களின் உரிமையை உள்ளடக்கும் எழுத்து வடிவிலான ஒப்பந்தத்தினையும், விற்பனை ஒப்பந்தத்தினையும் பதிவாளரின் பார்வைக்காகவும், ஆய்வுக்காகவும் தாக்கல் செய்ய வேண்டும். இவ் வகையில் ஒதுக்கப்பெற்ற பங்குகளின் எண்ணிக்கை, பெயரளவுத் தொகை (Nominal Value), அவைகள் எந்த அளவிற்குச் செலுத்தப்பெற்றவைகளாகக் கொள்ளவேண்டும் என்ற விவரம், பங்கு ஒதுக்கப்பட்டதின் மறுபயன் முதலிய விவரங்கள் அடங்கிய அறிக்கை ஒன்றைக் கம்பெனிப் பதிவாளரிடம் தாக்கல் செய்யவேண்டும். அத்தகைய ஒப்பந்தம் எழுத்து வடிவில் இல்லையெனில், பங்கு ஒதுக்கிய 30 நாள்களுக்குள் ஒப்பந்தத்தின் மேற்சுட்டப்பட்ட விவரங்களைத் தாக்கல் செய்ய வேண்டும்.

மேலூதியப் பங்குகளாயின் (Bonus Shares) அப் பங்குகளின் எண்ணிக்கை, பெயரளவுத் தொகை, பங்கு ஒதுக்கீடு பெற்றவர்களின் பெயர், முகவரி, தொழில், அத்தகைய பங்குகளை

வெளியிட அதிகாரம் வழங்கும் தீர்மானத்தின் படி (copy) ஒன்று ஆகியவை அவ் வறிக்கையில் காணப்படவேண்டும்.

பங்குகள் தள்ளுபடியில் வெளியிடப்பட்டிருக்குமாயின், அத்தகைய அறிக்கையுடன் கீழ்க்கண்ட விவரங்களும் இணைக்கப்பெற வேண்டும்.

(அ) அதற்கான கம்பெனியின் தீர்மானம்;

(ஆ) பங்குகள் வெளியீட்டிற்கு இசைவளிக்கும் நீதிமன்றத்தின் ஆணை;

(இ) தள்ளுபடி விகிதம் 10 சதவீதம் மிகுந்திருக்குமாயின், அதற்கு ஒப்புதல் அளிக்கும் மைய அரசின் ஆணையின் படி.

மேற்சொல்லப்பட்ட பங்கு ஒதுக்கீடு பற்றிய அறிக்கை ஒறுப்பிழப்புப் பங்குகளை (Forfeited Shares) மீண்டும் வெளியிடும் போழ்து பொருந்தாது.

**முறையற்ற ஒதுக்கீட்டின் விளைவு** (Effect of irregular allotment)

(அ) குறுமப் பங்கெடுப்புப் பெறுமல் கம்பெனி பங்கு ஒதுக்கீடு செய்தலையும்,

(ஆ) முதலுடைய ஒரு கம்பெனி, தகவல் அறிக்கை வெளியிடாதபொழுது தகவல் அறிக்கைக்கு மாற்றறிக்கை ஒன்றைப் பதிவாளரிடத்தில் மூன்று நாள்களுக்கு முன்னரே தாக்கல் செய்யாமல் பங்கு ஒதுக்குதலையும்

முறையற்ற பங்கு ஒதுக்கீடு என்கிறோம். அந் நிலையில், சட்டமுறைக் கூட்டம் நடந்து இரண்டு திங்களுக்குள் அல்லது சட்டமுறைக் கூட்டத்தைக் கம்பெனி கூட்ட வேண்டியதில்லையாயின் அல்லது அத்தகைய கூட்டத்திற்குப் பிறகு பங்கு ஒதுக்கப் பெறுமாயின், பங்கு ஒதுக்கிய இரண்டு திங்களுக்குள் அத்தகைய ஒதுக்கீட்டைப் பங்கு விண்ணப்பதாரர் புறக்கணித்து விடலாம். இத்தகைய முறையற்ற ஒதுக்கீட்டின் காரணமாகக் கம்பெனிக்கு நட்டம் அல்லது செலவு ஏற்படுமாயின், இயக்குநர்கள் அதற்கு ஈடுகட்ட வேண்டும்.

**தொழில் தொடக்கச் சான்றிதழ்கள்** (Certificate of Commencement of Business)

முன்னர்க் கூறியவாறே, கூட்டுருவாக்கச் சான்றிதழ் பெற்றவுடன் தனிக் கம்பெனி தொழிலைத் தொடங்கலாம். ஆனால்,

பொதுக் கம்பெனி தொழில் தொடக்கச் சான்றிதழ் என்ற மற்றொரு சான்றிதழைப் பெற்றவுடன்தான் நடவடிக்கைகளைத் தொடங்கலாம். கீழ்க்கண்ட முறைகள் பின்பற்றப்பட்ட பிறகு இத்தகைய சான்றிதழ் கம்பெனிக்குக் கொடுக்கப்படும்.

(1) தகவல் அறிக்கையை வெளியிட்ட கம்பெனி அதனுடைய படி (copy) ஒன்றினைப் பதிவாளரிடத்தில் தாக்கல் செய்யவேண்டும். தகவல் அறிக்கையை வெளியிடவில்லையாயின், தகவல் அறிக்கைக்கு மாற்று அறிக்கை ஒன்றைத் தயாரித்துப் பதிவாளரிடத்தில் தாக்கல் செய்யவேண்டும்.

(2) ரொக்கம் செலுத்த வேண்டிய, குறுமப் பங்கெடுப்பிற்கான விண்ணப்பம் பெற்றுப் பங்கு ஒதுக்கவேண்டும்.

(3) ஒவ்வொரு இயக்குநரும் பங்குகள் மீதான விண்ணப்பத் தொகையையும் பங்கு ஒதுக்குத் தொகையையும் செலுத்தியிருக்கவேண்டும்.

(4) அங்கீகரிக்கப்பட்ட பங்கு மாற்றுச் சந்தையில் பங்குகளை ஈடுபடுத்தத் தேவையான இசைவைப் பெறுததாலும் அல்லது அதற்காக விண்ணப்பம் செய்யாததாலும் பங்கு அல்லது கடனீட்டுப் பத்திர விண்ணப்பதாரர்களுக்கு அவர்களின் பணத்தைத் திருப்பித்தரும் நிலையிலிருக்கக் கூடாது. கம்பெனியின் செயலரோ அல்லது இயக்குநர்களில் ஒருவரோ மேற்கண்ட நிபந்தனைகள் அனைத்தும் பின்பற்றப்பட்டுவிட்டனவென்று, சட்ட முறை உறுதிமொழியைக் கம்பெனிப் பதிவாளரிடத்தில் தாக்கல் செய்யவேண்டும்.

**பங்குகளின் வகைகள்** (Classes of Shares)

பங்கு முதல் என்பது பங்குகளை வெளியிடுவது மூலமாக கம்பெனி திரட்டும் முதல் தொகையைக் குறிக்கும். 'முதல்' எனும் இச் சொல் கம்பெனியைப் பொறுத்தவரைக் கீழ்க்கண்டவாறு பல வழிகளில் பயன்படுத்தப்படுகிறது.

**1. பெயரளவு அல்லது அதிகாரம் பெற்ற முதல்** (Nominal or Authorised Capital)

கம்பெனியின் அமைப்பு முறையேட்டில் காணப்படும் முதலின் பெயரளவு மதிப்பு இது. பொறுப்பு வரையறுக்கப்பட்ட கம்பெனியாயின், கம்பெனி எந்த முதல் தொகையுடன் பதிவு

செய்யப்பட்டிருக்கிறது என்பதையும் எவ்வாறு குறிப்பிட்ட தொகையுடைய பங்குகளாக அது பிரிக்கப்பட்டிருக்கிறதென்பதையும் அமைப்பு முறையேடு கூறுகிறது. முதல் அதிகரிக்கப்படாத கம்பெனி பெற்றிருக்கும் உயர்ந்தளவு முதல் இதுவேயாகும்.

### 2. வெளியீட்டு முதல் (Issued Capital)

பொதுமக்கள் வாங்குவதற்காக வெளியிட்ட பங்குகளின் பெயரளவு தொகை இது. பதிவு செய்யப்பட்ட முதல் முழுவதையும் கம்பெனி தனது தொடக்க நாள்களிலேயே வெளியிடாது. எனவே, பதிவு செய்யப்பட்ட முதல் தொகையில் ஒரு பகுதியையே தனக்குத் தேவையான அளவிற்கு வெளியிடுகிறது. வெளியிடும் முதலானது எந் நிலையிலும் பெயரளவு முதலை, அதாவது பதிவு செய்யப்பட்ட முதல் தொகையை மிஞ்சாது. அதிகபட்சம் பெயரளவு முதலும் வெளியிடப்பட்ட முதலும் ஒரே அளவுள்ளதாக இருக்கலாம். எடுத்துக்காட்டாக, ஒரு கம்பெனியானது ரூ. 10 மதிப்புடைய பங்குகளாக 2,00,000 பங்குகளுடன் பதிவாகியிருந்தால், கம்பெனியின் பெயரளவு முதல் (பதிவு செய்யப்பட்ட முதல்) ரூ. 20,00,000 ஆகிறது. இதில் 1,50,000 பங்குகளைக் கம்பெனி வெளியிடுமாயின், கம்பெனியின் வெளியீட்டு முதல் ரூ. 15,00,000 (1,50,00 × ரூ. 10) ஆகிறது.

### 3. ஒப்பிய முதல் (Subscribed Capital)

கம்பெனி வெளியிடும் பங்குகள் அனைத்தையும் பொதுமக்கள் வாங்காமல் போகலாம். அந் நிலையில் வெளியிட்ட முதலுக்கும் மக்கள் வாங்கிய முதலுக்கும் வேறுபாடு இருக்கின்றது. மேற்சொன்ன எடுத்துக்காட்டில் கம்பெனி வெளியிட்ட 1,50,000 பங்குகளில் 1,20,000 பங்குகளுக்கான விண்ணப்பம் வந்ததாகக் கொண்டால் மக்கள் வாங்கும் முதல் தொகையானது ரூ. 12,00,000 ஆகிறது. எனவே, வெளியிட்ட முதலில், மக்கள் வாங்கும் முதல் இவ்வாறு அழைக்கப்படுகிறது.

### 4. செலுத்தப்பெற்ற முதல் (Paid-up Capital)

பங்குத் தொகையானது விண்ணப்பத் தொகையாகவும், ஒதுக்குத் தொகையாகவும் மீதமுள்ளது பல தவணைகளாகவும் செலுத்தப்படுகிறதென்று கூறியுள்ளோம். அவ்வாறு ஒவ்வொரு பங்கின்மீதும், பங்குதாரர்கள் செலுத்திய தொகை, செலுத்தப் பெற்ற முதல் என்று அழைக்கப்படுகிறது. மேற்சொன்ன எடுத்துக்காட்டில், ஒவ்வொரு பங்கின் மதிப்பு ரூ. 10. இதில்

ஒவ்வொரு பங்கின்மீதும் ரூ. 8 செலுத்தப் பெற்றிருக்குமாயின், செலுத்தப்பெற்ற முதல் ரூ. 9,60,000 (1,20,000 × ரூ. 8) ஆகும்.

ஒவ்வொரு பங்கின்மீதும் ரூ. 8 கம்பெனி செலுத்தப் கோரியிருந்த 5,000 பங்குகள் மீது ரூ. 3 செலுத்தப்பெறுதிருப் பின், செலுத்தப்பெற்ற முதலானது ரூ. 9,45,000 (9,60,000–5,000 × 3) ஆகும். மீதமுள்ள ரூ. 15,000 பங்கழைப்பு நிலுவை (Calls in arrear) எனப்படும்.

## 5. அழையா முதல் (Uncalled Capital)

வெளியிடப்பட்ட முதல் மீது எத் தொகையைச் செலுத்து மாறு கம்பெனி கேட்கவில்லையோ அதனை இது குறிக்கும். மேற் சொன்ன எடுத்துக்காட்டில், ஒவ்வொரு பங்கு மீதும் ரூ. 8 செலுத்தக் கோரியிருந்தது. எனவே, செலுத்தக் கோராதிருந்தத் தொகை ஒவ்வொரு பங்கின் மீதும் ரூ. 2 ஆகிறது. கம்பெனியின் அழையா முதல் ரூ. 2,40,000 (1,20,000 × ரூ. 2) ஆகிறது.

## 6. காப்பு முதல் (Reserve Capital)

கம்பெனி கலைக்கப் பெறும்பொழுதுதான் அழைக்கப்பெறு மூலதனத்தைச் செலுத்த வேண்டியிருப்பின் அது காப்பு முதல் எனப்படும். கம்பெனிச் சட்டத்தின் 99-வது பிரிவின்படி, பங்கு முதலின் ஒரு பகுதியைக் கம்பெனி கலைக்கப்பெறும்பொழுது தான், கம்பெனியைக் கலைப்பதற்கான காரணத்திற்காக மட்டி லுமே, கோருமென்று ஒரு சிறப்புத் தீர்மானத்தின்மூலமாகக் கம்பெனி முடிவுசெய்யலாம். இதுவே, காப்பு முதலாகும். மேற்சொன்ன எடுத்துக்காட்டில் ஒரு பங்கு மீது ரூ. 2 செலுத்த வேண்டியிருக்கிறது. இதனை மேற்கண்டவாறு தீர்மானித்து விட்டால் அதாவது, பங்கின் மீது செலுத்தவேண்டிய மீதித் தொகையான ரூ. 2 கம்பெனியைக் கலைக்கும்பொழுதுதான் பங்குநர்கள் செலுத்தவேண்டுமென்று தீர்மானித்துவிட்டால், கம்பெனியின் காப்பு முதல் ரூ. 2,40,000 (1,20,000 × ரூ. 2) ஆகும்.

நீதிமன்றத்தின் இசைவின்றிக் காப்பு முதலைச் சாதாரண முதலாகக் கம்பெனி மாற்றிக்கொள்ளமுடியாது.

## 7. பங்குகளின் வகைகள் (Classes of Shares)

கம்பெனிச் சட்டத்தின் 85-வது பிரிவின்படி கம்பெனியின் முதல் முன்னுரிமைப் பங்கு முதலாகவோ (Preference Share

Capital) நேர்மைப் பங்கு முதலாகவோ (Equity Share Capital) இருக்கலாம். கம்பெனியின் முதல் குறிப்பிட்டத் தொகையையுடைய பல கூறுகளாகப் பிரிக்கப்படுகிறது. ஒவ்வொரு கூறும் 'பங்கு' எனப்படும். ஒரு கம்பெனியின் பங்கு முதலில் ஒரு பங்கே பங்கு எனப்படும் என்று கம்பெனிச் சட்டம் கூறுகிறது. பங்குக் கோவைக்கும் (Stock) பங்கிற்கும் உள்ள வேறுபாட்டைச் சட்டம் வெளிப்படையாகத் தெரிவிக்கவில்லை. எனினும், பங்கு எனும் சொல் பங்குக் கோவையையும் குறிக்கும்.

1956ஆம் ஆண்டில் கம்பெனிச் சட்டம் இயற்றப்பெற்றதற்கு முன்னால் சாதாரணப் பங்குகள், முன்னுரிமைப் பங்குகள், பின்னுரிமைப் பங்குகள் என மூன்று வகைகள் இருந்தன. ஆனால், இப்பொழுது பங்குகள் நேர்மைப் பங்குகளென்றும் முன்னுரிமைப் பங்குகளென்றும் இரண்டுவகைகளே இருக்கின்றன. இவ்விரண்டிற்குமுள்ள வேறுபாடுகளைக் காணுமுன் பங்குக்கோவைக்கும், பங்கிற்குமுள்ள வேறுபாட்டினை உணர்தல் நலம்.

பங்கின் தொகை முழுவதும் செலுத்தப்பட்டிருப்பின், கம்பெனியின் செயல்முறை விதிகள் இசைவு தருமானால், கம்பெனி தனது பங்கு முதலைப் பங்குக் கோவையாக மாற்றிக் கொள்ளலாம். இதற்காகப் பொதுக்கூட்டத்தில் உறுப்பினர்கள் தீர்மானம் ஒன்றை நிறைவேற்றியிருக்கவேண்டும். இதற்குப் பின் ஒரு திங்களுக்குள் பதிவாளருக்கு இம் மாற்றம் பற்றித் தெரிவிக்கவேண்டும். பங்குக் கோவை என்பது ஒரே தொகையையுடைய பகுதிகளாகப் பிரிக்கப்படுவதில்லை. ஒருவர் ரூ. 30 மதிப்புள்ள பங்கு ஒன்றை வைத்திருக்கலாம். இன்னொருவர் ரூ. 50 மதிப்புள்ள பங்கு ஒன்றை வைத்திருக்கலாம். அந் நிலையில் உறுப்பினர் பதிவேட்டில் ஒவ்வொரு உறுப்பினரும் வைத்திருக்கும் பங்குகளின் எண்ணிக்கைகளைக் குறிப்பிடாமல், ஒவ்வொருவரும் எவ்வளவு மதிப்புள்ள பங்குக் கோவை வைத்திருக்கிறார்கள் என்பதே குறிப்பிடப்படும்.

பங்கு மாற்றுவதற்குரிய விதிகளைப் பின்பற்றிப் பங்குக் கோவை வைத்திருப்பவர்களும் அதனை அல்லது அதனின் ஒரு பகுதியைப் பிறருக்கு மாற்றித் தரமுடியும். ஆனால், இயக்குநரவை குறைந்தளவு மாற்றுகிற பங்குக்கோவை எவ்வளவு என்பதைத் தீர்மானிக்கும். ஆனால், இக் குறைந்தளவுத் தொகை முதலில் இருந்த பங்குத் தொகையைவிட அதிகமாக இருக்கக் கூடாது. பங்கு முதலைப் பங்குக் கோவையாக மாற்றுவது போன்றே கம்பெனி மீண்டும் பங்குக் கோவையைப் பங்கு முதலாகத் தீர்மானம் நிறைவேற்றி மாற்றமுடியும். பங்குக்கோவையைப்

பொது மக்களிடத்தில் வெளியிட முடியாது. ஆனால், வெளி யிடப்பட்ட, முழுத் தொகையையும் செலுத்தப்பெற்ற பங்கு களையே பங்குக் கோவையாக மாற்றமுடியும் என்பதை மறத்த லாகாது.

(1) ஒரு பங்கிற்குப் பெயரளவு மதிப்புள்ளது (Nominal Value). ஆனால், பங்குக் கோவைக்கு அது இல்லை.

(2) பங்கு ஒன்று முழுத் தொகையோ அல்லது பகுதியோ செலுத்தப்பெற்றிருக்கலாம். ஆனால், பங்குக்கோவை முழுத் தொகையும் செலுத்தப்பெற்ற பங்குகளாகும்.

(3) ஒரு பங்கு முழுவதையும்தான் மாற்ற முடியும். ஆனால், பங்குக் கோவையில் ஒரு பகுதியைக் கூட மாற்றித்தர முடியும்.

(4) பங்குகள் அனைத்தும் ஒரே மதிப்புடையனவாகப் பிரிக்கப்பட்டிருக்கும். ஆனால், பங்குக்கோவை வெவ்வேறு மதிப் புடையதாக இருக்கும்.

(5) பங்குகளைப் பொதுமக்களிடத்தில் நேரிடையாக வெளி யிடலாம். ஆனால், பங்குக்கோவையை அவ்வாறு வெயியிட முடியாது.

## 8. முன்னுரிமைப் பங்குகள் (Preference Shares)

பிறவகைப் பங்குதாரர்கட்குப் பங்காதாயம் வழங்குமுன் அதனைப் பெறும் உரிமையையும், கம்பெனி கலைக்கும்பொழுது கடன் கள் அடைக்கப்பட்ட பின்னர் முதன் முதலில் பங்குத் தொகை களைத் திரும்பப் பெறும் உரிமையையும் உடையவை முன்னுரிமைப் பங்குகள். இப் பங்குகள் மீது தரவேண்டிய பங்காதாயம் பங்குகளை வெளியிடும் முன்னரே முடிவு செய்யப்பட்டுவிடுகிறது. எடுத்துக்காட்டாக, 7 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளை ஒரு கம்பெனி வெளியிடுவதாயின், அக் கம்பெனி முன்னுரிமைப் பங்கு நர்கட்கு ஒவ்வோராண்டும் 7 சதவீதம் பங்காதாயம்தான் கிடைக்கும். கம்பெனி எவ்வளவு அதிகமாக இலாபம் பெறினும் இவர்களுடைய பங்காதாயம் இவ்வாறு வரையறுக்கப்பட்டு விடு கிறது.

## 9. முன்னுரிமைப் பங்குகளின் வகைகள் (Kinds of Preference Shares)

**(1) குவிவு முன்னுரிமைப் பங்குகள்** (Cumulative preference Shares): போதுமான இலாபம் ஈட்டாத ஆண்டிலேயோ

நட்டம் ஏற்படும் ஆண்டிலேயோ பங்காதாயம் வழங்கப்பட மாட்டாது. ஆனால், பின்வரும் ஆண்டுகளில் அதிகமான இலாபம் பெறும்பொழுது, பங்காதாயம் பெறாத ஆண்டுக்கான தொகையையும் சேர்த்து இவ் வாண்டில் இவ்வகைப் பங்குநர்கள் பெறுவர். பங்காதாயம் வழங்கப்படாத ஒவ்வோராண்டும் இவர்களின் பங்காதாயம் நிலுவையிலேயே இருக்கிறது. இது முழுவதும் கொடுக்கப்பட்ட பின்னர்தான் பிறவகைப் பங்குதாரர்கட்கு அவ்வாண்டுக்குரிய பங்காதாயம் வழங்கப்பெறும்.

**(2) குவியா முன்னுரிமைப் பங்குகள்** (Non-cumulative Preferenc Shares) : பங்காதாயம் வழங்கப்பெறா ஆண்டுகட்குரிய தொகையினைப் பெறும் உரிமை இல்லையெனில் அவை குவியா முன்னுரிமைப் பங்குகள் எனப்படும். எடுத்துக்காட்டாக, ஒரு கம்பெனி 1969, 1970 ஆகிய இரு ஆண்டுகட்கும் பங்காதாயம் வழங்கவில்லை. 1971ஆம் ஆண்டில் அதிக இலாபம் கிடைக்கிறதெனில், இவ்வகைப் பங்குநர்கள் 1971ஆம் ஆண்டிற்குரிய பங்காதாயத்தினை மட்டுமே பெறுவர். குவியும் முன்னுரிமைப் பங்குநர்களாக இருப்பின் 1969, 1970ஆம் ஆண்டுகட்குரிய பங்காதாயங்களையும் சேர்த்துப் பெறுவர்.

**(3) எஞ்சிய இலாபத்தில் பங்கேற்கும் முன்னுரிமைப் பங்குகள்** (Participating Preference Shares) : குறிப்பிட்ட பங்காதாயத்தை எல்லா முன்னுரிமைப் பங்குநர்கட்கும், இயக்குநர்கள் பரிந்துரைக்கும் பங்காதாயத்தை நேர்மைப் பங்குநர்கட்கும் வழங்கிய பின்னரும் இலாபம் எஞ்சியிருப்பின், மீண்டும் குறிப்பிட்ட சததவீத்தில் இவ் வகை முன்னுரிமைப் பங்குநர்கட்குப் பங்காதாயம் வழங்கப்படும். அதாவது, பெறவேண்டிய குறிப்பிட்ட சதவீத பங்காதாயத்துடன், எஞ்சிய இலாபத்திலும் ஒரு பங்கு பெறுகின்றனர்.

**(4) மீள்தகு முன்னுரிமைப் பங்குகள்** (Redeemable Preference Shares): கம்பெனியின் செயல்முறை விதிகள் அதிகாரம் வழங்குமாயின், ஒரு கம்பெனி மீட்கக்கூடிய முன்னுரிமைப் பங்குகளை வெளியிடலாம். இவ்வகை முன்னுரிமைப் பங்குகள் மீள்தகு முன்னுரிமைப் பங்குகள் எனப்படும். சாதாரணமாக, கம்பெனி தனது பங்குகளைத் தானே வாங்கக்கூடாது. எனினும், இவ்வகைப் பங்குகளைச் சில நிபந்தனைகளுடன் கம்பெனி வெளியிடுவதற்குச் சட்டம் ஒப்புதல் அளிக்கிறது. இந் நிபந்தனைகளைப் பின்னர்க் காண்போம்.

## 10. நேர்மைப் பங்குகள் (Equity Shares)

முன்னுரிமைப் பங்குகட்குள்ள இருவகை முன்னுரிமைகளும் சாதாரணப் பங்குகட்கிருப்பதில்லே. எனவே, முன்னுரிமைப் பங்கு நர்கட்குக் குறிப்பிட்ட சதவீத பங்காதாயத்தை வழங்கிய பிறகே (இலாபமிருப்பின்), சாதாரணப் பங்குநர்கட்கு வழங்கப் படும். இவர்கட்கு வழங்கப்படும் பங்காதாயமும் ஒரே சீராக இருப்பதில்லே. இலாபம் அதிகமிருக்கும் ஆண்டுகளில் அதிக சதவீதமும், குறைந்திருக்கும் ஆண்டுகளில் குறைந்த சதவீத பங்காதாயமும் வழங்கப்படும். அத்துடன் ஒவ்வோராண்டும் இயக்குநரவை பரிந்துரைசெய்யும் சதவீதத்தினை இது மிஞ்சக் கூடாது.

அவ்வாறே, கம்பெனி கலேக்கப்படும்போழ்து, புறக் கடன்கள் முழுவதையும், முன்னுரிமைப் பங்குநர்களின் முதல் தொகையை யும் அடைத்த பின்னர், தொகையிருப்பின் மட்டுமே, நேர்மைப் பங்கு முதல் திருப்பித் தரப்படும்.

## கடனீட்டுப் பத்திரங்கள் (Debentures)

கம்பெனியின் முதல் போதுமானதாக இல்லாவிட்டால், கடனீட்டுப் பத்திரங்களே வெளியிடுவதன்மூலமாகத் தனக்குத் தேவையான பணத்தைக் கம்பெனி ஈட்டிக்கொள்கிறது. கம்பெனி யின் கடனீட்டுப் பத்திரத்தில் அதன் முத்திரையும், இரு இயக்கு நர்களின் கையொப்பமுமிருக்கும். எனவே, கம்பெனி வாங்கிய கடனுக்கான சான்றிதழாக இக் கடனீட்டுப் பத்திரம் அமை கிறது. கடனீட்டுப் பத்திரதாரர்கட்கும், பங்குநர்கட்கும் சில வேறுபாடுகள் உள. அவை :

(1) பங்குநர் கம்பெனியின் உறுப்பினர் ஆவார். கட னீட்டுப் பத்திரதாரர் கம்பெனியின் கடனீந்தோர் ஆவார்.

(2) கம்பெனி இலாபம் பெறும் ஆண்டுகளில் மட்டுமே பங்குநர்கட்குப் பங்காதாயம் வழங்கும். ஆனல், கம்பெனி இலாபம் பெறினும் நட்டம் ஏற்படினும் கடனீட்டுப் பத்திர தாரர்கட்குக் குறிப்பிட்ட வட்டித் தொகையைக் கொடுத்தாக வேண்டும்.

(3) ஒவ்வோராண்டும் இலாபத்தையொட்டி, இயக்குந ரவை பரிந்துரைக்கும் பங்காதாயத்தையே நேர்மைப் பங்கு தாரர்கள் பெறுவர். கடனீட்டுப் பத்திரத்தில் குறிப்பிட்ட சதவீத வட்டியையே ஒவ்வோராண்டும் கடனீட்டுப் பத்திர

தாரர்கள் பெறுவர். இவ்வாறு சாதாரண பங்குதாரர்கள் பெறும் பங்காதாயம் ஒவ்வோராண்டும் இலாபத்தையொட்டி மாறும்.

(4) கம்பெனி கலைக்கப்படும்பொழுது முன்னுரிமைப் பங்குநர்கட்கும், நேர்மைப் பங்குநர்கட்கும் தொகையைத் திருப்பித் தரும் முன்னர், கடனீட்டுப் பத்திரதாரர்களின் தொகையைத் திருப்பித்தரவேண்டும்.

**கடனீட்டுப் பத்திரங்களின் வகைகள்** (Kinds of Debentures)

**1. மீள்தகு கடனீட்டுப் பத்திரம்** (Redeemable debentures)

குறிப்பிட்ட காலத்திற்குப்பின் அல்லது கம்பெனியின் காலத்தில் தவணைகள்மூலம் திருப்பித்தரத்தக்க கடனீட்டுப் பத்திரங்கள் மீள்தகு கடனீட்டுப் பத்திரங்கள் எனப்படும்.

**2. மீளாக் கடனீட்டுப் பத்திரங்கள்** (Irredeemable debentures)

கடனீட்டுப் பத்திரத்தைத் திருப்பித்தரும் காலம் குறிப்பிடப்படவில்லை என்றாலும் அல்லது கம்பெனி கலைக்கப்படும் பொழுதுதான் திருப்பித்தரப்படும் என்று இருந்தாலும் அது மீளாக் கடனீட்டுப் பத்திரம் எனப்படும்.

**3. அடைமான அல்லது ஒற்றிக் கடனீட்டுப் பத்திரம்** (Mortgage debentures)

கம்பெனியின் சொத்துகள் அனைத்தையுமோ, குறிப்பிட்ட சொத்துகளையோ ஈடாகக் காட்டிக் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிடுமாயின், அவை அடைமானக் கடனீட்டுப் பத்திரங்கள் எனப்படும். கம்பெனியும், கடனீட்டுப் பத்திரங்களின் பொறுப்புரிமையரும் (trustees) இதற்கான அடைமான ஒப்பந்தத்தைச் செய்து கொள்கின்றனர்.

**4. வெற்றுக் கடனீட்டுப் பத்திரம்** (Simple or Naked debentures)

அவ்வாறு எவ்விதக் குறிப்பிட்ட சொத்துகளையும் பிணையமாகக் காட்டாமல் வெளியிடப்படும் கடனீட்டுப் பத்திரங்கள் வெற்றுக் கடனீட்டுப் பத்திரங்கள் என அழைக்கப்படும்.

இவ்வகைக் கடனீட்டுப் பத்திரதாரர்கள் சாதாரண கடனீந் தோர் போன்றே கருதப்படுவர்.

**5. பதிவு செய்யப்பட்ட கடனீட்டுப் பத்திரம்** *(Registered debentures)*

கடனீட்டுப் பத்திரதாரர் பெயர், விவரம் முதலியவை கம்பெனியின் பதிவு ஏட்டில் காணப்படுமாயின், பதிவு செய்யப் பட்டக் கடனீட்டுப் பத்திரம் எனப்படும். கடனீட்டுப் பத்திர சான்றிதழிலும் கம்பெனியின் கடனீட்டுப் பத்திரப் பதிவேட்டி லும் அதனை வைத்திருப்பவர்களின் விவரம் குறிப்பிடப் படுகின்றன. பங்குகளை மாற்றுவதுபோலவே, இவர்கள் கடனீட்டுப் பத்திரங்களையும் சில விதிமுறைகளைப் பின்பற்றிப் பிறருக்கு மாற்றித்தரலாம்.

**6. கொணர்பவர் கடனீட்டுப் பத்திரம்** *(Bearer debenture)*

பதிவு செய்யப்படாத கடனீட்டுப் பத்திரங்கள் என்றும் இவை அழைக்கப்படுகின்றன. இவற்றைப் பிறர்க்கு மாற்றித்தர எம் முறையையும் பின்பற்றத் தேவையில்லை. அதனை வைத்திருப் பதால் ஒருவர் அதன் உரிமையாளர் எனக் கருதப்படுகிறார். அவற்றுடன் இணைக்கப்பட்டுள்ள சீட்டுக்களைக் கொடுத்துக் கம் பெனியிடம் வட்டி பெற்றுக்கொள்ளவேண்டும்.

## மேலாண்மை (Management)

பங்குநர்கள் கம்பெனியின் உரிமையாளர்கள் எனினும், தனிப்பட்ட முறையில் அதனை நிருவாகிக்கும் உரிமை அவர்கட் கில்லை. தங்களில் சிலரை இயக்குநர்களாகத் தேர்ந்தெடுத்து அந்த இயக்குநரவையிடம் நிருவாகப் பொறுப்பைக் கொடுக் கின்றனர்.

கம்பெனியின் மேலாண்மை அதன் செயல்முறை விதிகளின் படி நடக்கிறது. உறுப்பினர்களுக்கிடையே நிகழும் உறவு குறித்தும், உறுப்பினர்கட்கும் கம்பெனிக்குமிடையே உள்ள உறவு பற்றியும் இவ் விதிமுறைகள் கூறுகின்றன. கம்பெனி அமைப்பு முறையேடும், செயல்முறை விதிகளும் அத்துடன் தொடர்பு கொண்டிருப்போருக்கு ஒரு அறிவிப்பாக அமைகின்றன. அவை களில் காணப்படும் சரத்துக்களை அவர்கள் அறிவார்களென்று ஊகிக்கப்படும். கம்பெனியின் அமைப்பு முறையேட்டிற்கோ அல்லது செயல்முறை விதிகளுக்கோ முரணாக ஒப்பந்தமிருப்பின்,

கம்பெனி அதற்குப் பொறுப்பாகாது. ஆனால், கம்பெனியின் செயல்முறை விதிகள் பின்பற்றப்பட்டிருக்கின்றன என்று பிறர் கருதுவதற்கு உரிமை படைத்தவர்கள்.

இயக்குநர்கட்குத் தனிப்பட்ட முறையில் அதிகாரம் எதுவுமில்லை. இயக்குநர் அவையிடம் அதிகாரம் முழுவதும் இருக்கிறது. சில குறிப்பிட்ட செயல்களுக்காகத் துணைக் குழுக்களாக அமைக்கும் அதிகாரம் இயக்குநர் அவைக்குண்டு. மூன்று திங்களுக்கு ஒரு முறையாவது இயக்குநர் அவைக் கூட்டம் நடைபெற வேண்டும். ஆனால், இவ் விதிமுறையினின்றும் மைய அரசு எந்தக் கம்பெனிக்கும் விலக்கு அளிக்கலாம். இரு இயக்குநர்கள் அல்லது மொத்த இயக்குநர்கள் எண்ணிக்கையில் மூன்றில் ஒரு பங்கு, இதில் எது அதிகமோ அதுவே, இயக்குநர் அவைக் கூட்டம் நடைபெறத் தேவையான குறைவெண்ணாக (Quorum) கொள்ளப்படும்.

பொதுக் கம்பெனியில் குறைந்தது மூன்று இயக்குநர்களாவது இருக்கவேண்டும். தனிக் கம்பெனியில் இருவர் போதும். ஒவ்வோராண்டும் இயக்குநர்கள் ஆண்டுக் கூட்டத்தில் பங்குநர்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இயக்குநர்களில் மூன்றில் இரு பங்கினர் பதவி விலகத்தக்கவர். அவர்களுள் மூன்றில் ஒரு பங்கினர் ஒவ்வோராண்டும் பதவி விலகவேண்டும். ஆனால், பதவி விலகும் இயக்குநர்கள் மீண்டும் தேர்ந்தெடுக்கத் தகுதி உடையவர்கள். ஒருவர் 20 கம்பெனிகளுக்கு மேல் இயக்குநராக இருக்கமுடியாது.

கம்பெனியின் சொத்துகளுக்குப் பொறுப்புரிமையர் (trustee) போல் இருந்து தங்கள் பணிகளை இயக்குநர்கள் செய்யக் கடமைப்பட்டவர்கள். கம்பெனியின் சொத்தினைத் தனது சொந்த ஆதாயத்திற்காக எந்த இயக்குநராவது பயன்படுத்தினால் அச் செயல் பொறுப்புரிமையை மீறியதாகக் கொள்ளப்படும். அதே நேரத்தில் இயக்குநரவை கம்பெனியின் முகவர் (Agent) போன்றும் செயல்படுகின்றது. எனவேதான், கம்பெனிக்கான ஒப்பந்தத்தில் இயக்குநர்கள் கையெழுத்து இடுகின்றனர். ஒப்பந்தம் கம்பெனியைக் கட்டுப்படுத்துகிறது. தங்களது செயல் முறைகளில் சாதாரணத் திறமையையும் கண்காணிப்பையும் அவர்கள் காட்டுவார்களானால், கம்பெனிக்கு ஏற்படும் நட்டத்திற்கு அவர்கள் பொறுப்பாகமாட்டார்கள். ஆனால், தங்களுடைய அதிகக் கவனக்குறைவின் காரணமாக அல்லது பொறுப்புரிமைக்குப் புறம்பாகச் செயல்படுவதின் காரணமாகக்

கம்பெனிக்கு நட்டம் ஏற்படின், அதனை அவர்கள் ஈடுகட்ட வேண்டும்.

கம்பெனியின் நடவடிக்கைகளைப் பொதுவாக மேற்பார்வையிடுவதுடன் சில குறிப்பிட்ட அதிகாரங்களையும் இயக்குநரவை பெற்றிருக்கிறது. எடுத்துக்காட்டாக :

(1) பங்குத் தொகையைக் கோரும் அதிகாரம்;

(2) கடனீட்டுப் பத்திரம் வெளியிடும் அதிகாரம்;

(3) கடனீட்டுப் பத்திரங்கள்மூலமன்றி வேறு வழிகளில் கடன் வாங்கும் அதிகாரம்;

(4) கம்பெனியின் நிதியை முதலீடு செய்யும் அதிகாரம்.

பொதுக் கம்பெனியில் குறைந்தது 3 இயக்குநர்களாவது இருக்கவேண்டும். தனிக் கம்பெனியில் இயக்குநர்கள் எண்ணிக்கை இரண்டிற்கும்கீழ் இருக்கக்கூடாது என்றோம். கம்பெனியின் செயல்முறை விதிகள் இயக்குநர்களின் குறைவெண்ணிக்கையையும் உயர்ந்தளவு எண்ணிக்கையையும் கூறும். ஆனால், கம்பெனிச் சட்டத்தில் குறிப்பிட்டுள்ள குறைவெண்ணுக்கும் குறைவாக இருக்கக்கூடாது.

## இயக்குநரின் தகுதிகள் (Qualifications of a Director)

ஒருவர் இயக்குநர் ஆவதற்குச் சில பங்குகளை வைத்திருக்க வேண்டுமாயின் அது தகவல் அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும். ஒவ்வொரு இயக்குநரும் இயக்குநராக நியமிக்கப்பட்ட இரு திங்களுக்குள் தனது தகுதிப் பங்குகளைப் பெறவேண்டும். ஒவ்வொரு இயக்குநரும் தனது தகுதிப் பங்குகளைப் பெறும்வரை கம்பெனி செயல்படக்கூடாது. கம்பெனிச் சட்டத்தின்படி இயக்குநருக்கான தகுதிப் பங்குகளின் பெயரளவு மதிப்பு ரூ. 5,000-த்திற்கு அதிகமாக இருக்கக்கூடாது. ஆனால், ஒரு பங்கின் மதிப்பே ரூ. 5,000-த்திற்கு அதிகமாக இருக்குமாயின், தகுதிப் பங்கு ஒன்றாக இருக்கவேண்டும்.

## இயக்குநர்கள் நியமனம் (Appointment of Directors)

(1) கம்பெனியின் செயல்முறை விதிகள் முதலாவது இயக்குநர்களை அறிவிக்கின்றது. அந் நிலையில், ஒவ்வொரு இயக்குநரும் அதன் இயக்குநராகப் பணியாற்ற தனது இசைவைப் பதிவாளரிடத்தில் தாக்கல் செய்யவேண்டும்.

(2) பொதுவாகக் கம்பெனி தனது ஆண்டுப் பொதுக் கூட்டத்தில் இயக்குநர்களை நியமிக்கின்றது.

**மேலாண்மை இயக்குநர்** (Managing Director)

கம்பெனியிடம் செய்துகொண்ட ஒப்பந்தத்தின் காரண மாகவோ, பொதுக்கூட்டத்தில் அல்லது இயக்குநர் அவைக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தின் காரணமாகவோ, செயல்முறை விதிகளின் காரணமாகவோ, அமைப்பு முறை யேட்டின் காரணமாகவோ ஒரு இயக்குநருக்குக் கம்பெனியின் நிர்வாகத்திற்கு வேண்டிய பெரும்பான்மையான அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக்குமாயின், அவர் மேலாண்மை இயக்குநர் எனப்படுவார். நிர்வாக அதிகாரங்கள் எந்த இயக்குநருக்கும் இருப்பதில்லை. எனவே, மேற்சொன்ன முறையில் எந்த இயக்குந ருக்கு அவை வழங்கப்பட்டிருக்கின்றனவோ அவர் மேலாண்மை இயக்குநராகக் கருதப்படுவார். பொதுக் கம்பெனியின் மேலாண்மை இயக்குநர், முழுநேர இயக்குநர்-போன்றவர்களின் நியமன விதிகளை மைய அரசின் ஒப்புதலின்றி மாற்றமுடியாது. மைய அரசின் ஒப்புதல் பெற்று, மேலாண்மை இயக்குநரை நியமனம் செய்யமுடியும். மீண்டும் அவரை நியமிப்பதற்கும் மைய அரசின் ஒப்புதலைப் பெற்றுகவேண்டும். ஒரு இயக்குநர் இரு கம்பெனிகட்கு மேல் மேலாண்மை இயக்குநராகப் பணி யாற்ற முடியாது. ஒருவர், இரண்டாவது கம்பெனியில் மேலாண்மை இயக்குநராக நியமிக்கப்பட்டால் அந் நியமனத் திற்கு இரண்டாவது கம்பெனியின் ஒருமித்த ஒப்புதல் தேவைப் படுகிறது. அவர் பதவிக் காலம் ஐந்தாண்டுகட்கு மிகக்கூடாது. மீண்டும் அவரை அதே காலஅளவிற்கு மிகாமல் நியமிக்கலாம். கம்பெனியின் நிகர இலாபத்தில் 5 சதவீதத்திற்கு மேல் அவ ருடைய ஊதியம் இருக்கக்கூடாது.

**மேலாளர்** (Manager)

ஒப்பந்தத்தின் காரணமாகவோ வேறு முறையிலோ இயக்குநர் அவையின் கண்காணிப்பிற்கும் கட்டுப்பாட்டிற்கும் உட்பட்டுக் கம்பெனியின் பெரும்பான்மை நிர்வாகத்தை மேற் கொள்ளும் இயக்குநரோ மேலாளரின் நிலையிலுள்ள எவருமோ (வேறு எந்தப் பெயரில் அவரைக் குறிப்பிட்டாலும்), அவர் மேலாளர் எனக் கருதப்படுகிறார். மேலாளர் ஒரு தனியாளாக இருக்கவேண்டும். பொதுவாக அவர் இயக்குநரவையால் நியமிக்கப்படுகிறார். இவரின் பதவிக்காலம் ஐந்தாண்டாகும். அதே காலஅளவிற்கு மீண்டும் மீண்டும் இவரை மேலாளராகவும்

நியமிக்கலாம். இவர் ஊதியமும் நிகர இலாபத்தில் 5 சத வீதத்திற்கு மிகக்கூடாது.

எந்த ஒரு கம்பெனியும் 1970 ஏப்ரல் 3ஆம் நாளுக்குப்பின் மேலாண்மை முகவர்களையோ (Managing Agent), செயலர் கருவூலர்களையோ (Secretaries and Treasurers) தனது நிர்வாகத் திற்கு வைத்திருக்கக்கூடாது. எனவே, இவை பற்றி இவண் குறிப்பிடத் தேவையில்லை. இப்பொழுதுள்ள நிலையில் ஒரு கம்பெனி, மேலாண்மை இயக்குநரை அல்லது மேலாளரை நிய மித்துத் தனது நிர்வாகத்தைச் செய்துகொள்ள வேண்டும்.

**பங்குநர்களின் உரிமைகள்**

ஒவ்வோராண்டும் பொதுக் கூட்டத்தில் பங்குநர்கள் தனது கம்பெனியின் ஆண்டுக் கணக்குகளையும் இருப்புநிலைக் குறிப்பையும் இயக்குநர்களின் அறிக்கையையும் ஆய்ந்து ஏற்றுக் கொள்கின் றனர்.

இயக்குநர்கள், பரிந்துரைத்த சதவீதத்திற்கு மிகாமல் பங்காதாயத்தை அறிவிக்கின்றனர். பதவி விலகும் இயக்கு நருக்குப் பதிலாகப் புதிய இயக்குநர்களையும், தணிக்கையாளர் களையும் நியமிக்கின்றனர். பொதுக் கம்பெனியின் கீழ்க்கண்ட செயல்கட்குக் கம்பெனி பொதுக்கூட்டத்தின் ஒப்புதலைப் பெற்றாக வேண்டும் :

(1) கம்பெனி தனது அமைப்பு முறையேட்டில் குறிப்பிட்ட தொழிலன்றி வேறு தொழிலைச் செய்வதாயின்;

(2) கம்பெனியின் தொழிலையோ அல்லது அதன் பெரும் பான்மை பகுதியையோ விற்க வேண்டியிருப்பின் அல்லது குத்த கைக்கு விட வேண்டியிருப்பின் அல்லது பிற வேறு தொழிலில் பயன்படுத்த வேண்டுமாயின்;

(3) இயக்குநர் தரவேண்டிய கடன் தொகையைத் தள்ளி விட வேண்டுமாயின் அல்லது அதை செலுத்துவதற்குக் கால நீடிப்பு வழங்க வேண்டுமாயின்;

(4) நட்ட ஈட்டுத் தொகையாகப் பெற்றதைப் பொறுப் புரிமைப் பத்திரங்களைத் (Trust Securities) தவிர வேறுவகை யில் முதலீடு செய்யவிரும்பின்;

(5) தனது செலுத்தப்பெற்ற மூலதனம், காப்புத்தொகை இவற்றுக்குமதிகமாகக் கடன் வாங்க வேண்டியிருப்பின்;

(6) கம்பெனியின் தொழிலுக்குரியதாக இல்லாமலிருக்கும் அற நிறுவனங்கட்கோ அல்லது பிற நிதிகட்கோ ரூ. 25,000-த்திற்கு மேற்பட்ட தொகையை அல்லது கடந்த மூன்று ஆண்டுகளில் சராசரி இலாபத்தில் 5 சதவீதம் இவற்றில் எது அதிகமோ—அந்தளவிற்கு நன்கொடை வழங்க வேண்டின்,

மேற்சொல்லப்பட்ட 5-வது, 6-வது நிலைகளில் கம்பெனி நிறைவேற்றும் தீர்மானத்தில் தொகை தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும். 5-வது நிலையில், தற்காலிகக் கடனை (temporary loans) இதில் சேர்க்கக்கூடாது. கேட்கும்பொழுது திருப்பித்தர வேண்டிய கடனையோ அல்லது கடன் வாங்கிய நாளிலிருந்து ஆறு திங்களுக்குள் செலுத்த வேண்டிய கடனையோ தற்காலிகக் கடன் குறிக்கும். ஆனால், இது முதலினச் செலவிற்காக (Capital expenditure) வாங்கப்பட்ட கடனைக் குறிக்காது. 1969 மே 28ஆம் நாளுக்குப்பின் எந்த அரசியல் கட்சிக்கும் அல்லது அரசியல் நோக்கத்திற்காகவும் எந்த ஒரு தனிப்பட்ட நபருக்கும் அல்லது அமைப்பிற்கும் நன்கொடை வழங்குவது தடை செய்யப்பட்டிருக்கிறது.

தனி விற்பனை முகவர்களை (sole selling agents) இயக்குநர் அவை நியமனம் செய்திருப்பின் அந் நியமனத்தை நியமனம் செய்யப்பட்ட ஆறு திங்களுக்குள் கம்பெனிப் பொதுக்கூட்டம் ஏற்றுக்கொள்ள வேண்டும். இல்லையாயின், அந் நியமனம் செல்லாததாகி விடும்.

பொதுக்கூட்டத்தில் கம்பெனியின் ஒப்புதலைப் பெற்ற பின்னரே மேலூதியப் பங்குகளையோ (Bonus shares) கடனீட்டுப் பத்திரங்களையோ வெளியிடலாம்.

மூலதனத்தைத் திருத்தி அமைப்பதற்கும் கம்பெனியின் செயல்முறை விதிகளையும் அமைப்பு முறையேட்டையும் மாற்றி அமைப்பதற்கும் பங்குநர்களின் ஒப்புதலைப் பெற்றாக வேண்டும்.

நீதிமன்றம் ஆணையிட்டாலொழிய பிற நிலைகளில் அக்கம்பெனிப் பொதுக்கூட்டம் ஒப்புதல் அளித்த பிறகே கலைப்புப் பணியை மேற்கொள்ளலாம்.

## கூட்டங்கள்

## (Meetings)

**பங்குநர்களின் கூட்டங்கள்** (Meetings of share holders)

இவை மூன்று வகைப்படும். சட்டமுறைக் கூட்டம், ஆண்டுப்பொதுக் கூட்டம், சிறப்புக் கூட்டம். கூட்டம் நடத்துவதற்குக் குறைந்தது 21 நாள்களுக்கு முன்னராவது கூட்டம் பற்றிய அறிவிக்கையைக் கொடுத்திருக்கவேண்டும்.

*(1)* **சட்டமுறைக் கூட்டம்** *(*Statutory meeting*) :* பங்குகளால் வரையறுக்கப்பட்ட ஒவ்வொரு பொதுக் கம்பெனியின் பொறுப்புறுதியால் வரையறுக்கப்பட்ட பங்கு முதலேயுடைய ஒவ்வொரு கம்பெனியும், தொழில் தொடங்கிய ஒரு திங்களுக்குப் பின் ஆறு திங்களுக்குள் அக் கூட்டத்தைக் கூட்டவேண்டும். தனிக் கம்பெனி இவ் வகைக் கூட்டத்தைக் கூட்டத் தேவையில்லே. கூட்ட நாளுக்குக் குறைந்தது 21 நாள்களுக்கு முன்னரே கூட்டம்பற்றிய அறிவிக்கையுடன் சட்டமுறை அறிக்கை *(*Statutory Report*)* ஒன்றையும் தயாரித்து ஒவ்வொரு உறுப்பினருக்கும் அனுப்பிவிட வேண்டும். கம்பெனி முதன்முதலாகக் கூட்டும் கூட்டம் இதுவே. கம்பெனியின் நிலே பற்றியும், உறுப்பினர்கள் பற்றியும் உணர்த்துவதற்குச் சட்டமுறைக் கூட்டம் ஒரு வாய்ப்பை வழங்குகிறது. சட்டமுறை அறிக்கையில் காணப்பட வேண்டியவை :

*(அ)* ஒதுக்கப்பட்ட பங்குகளின் எண்ணிக்கை, ரொக்கத்திற்காக அன்றி வேறுவகையில் முழுத் தொகையையும் செலுத்தப் பெற்றதாக அல்லது பகுதி செலுத்தப் பெற்றதாக வெளியிடும் பங்குகள், எந்தளவுக்கு அந்தப் பங்குகள் செலுத்தப்பட்டிருக்கின்றன, அப் பங்குகள் எந்த மறு பயனுக்காக ஒதுக்கப்பட்டிருக்கின்றன என்பவை பற்றிய விவரம்.

*(ஆ)* அறிக்கை தயாரிக்கப்பட்ட ஏழு நாள்களுக்கு முன் வரை கம்பெனி பெற்றத் தொகையையும், செலவழித்தத் தொகையையும் விளக்கும் பெறுதல்—செலுத்தல் *(*Receipts and Payments*)* கணக்கு.

*(இ)* ஏற்ற அல்லது மதிப்பிடப்பட்டுள்ள தொடக்கச் செலவுகள், பங்குகளேயும் கடனீட்டுப் பத்திரங்களேயும் விற்பதற்காக அல்லது வெளியிடுவதற்காகக் கொடுத்த அல்லது கொடுக்க வேண்டிய கழிவுத் தொகை.

(ஈ) இயக்குநர்கள், தணிக்கையாளர்கள், மேலாளர், செயலர் ஆகியோரின் பெயர்கள், முகவரிகள், தொழில் பற்றிய விவரங்களும், கம்பெனி அமைப்பிற்குப் பின் இவற்றில் மாற்றம் ஏதேனும் இருப்பின் அம் மாற்றம் பற்றிய விவரமும்.

(உ) நிறைவேற்றப்படாத ஒப்புறுதி பற்றிய விவரங்களும் அதற்கான காரணமும்.

(ஊ) இயக்குநர்களும் மேலாளர்களும் தாங்கள் பங்குமீது செலுத்த வேண்டிய பங்கழைப்புத் தொகை (Calls).

(எ) பங்கு விற்பனைக்காக அல்லது வெளியீட்டிற்காக இயக்குநருக்குக் கொடுக்கப்பட்ட அல்லது கொடுக்கப்படவிருக்கும் கழிவுத் தொகை அல்லது தரகுத் தொகை (commission or brokerage).

குறைந்தது இரு இயக்குநர்களாவது சட்டமுறை அறிக்கையில் கையெழுத்திட்டிருக்கவேண்டும். மேலாண்மை இயக்குநர் இருப்பாராயின் மேற்சொல்லப்பட்ட இரு இயக்குநர்களில் அவர் ஒருவரும் கையெழுத்திட்டிருக்கவேண்டும். பங்கு ஒதுக்கலில் கம்பெனி பெற்ற தொகை, பிற வரவுகள், செலவுகள் குறித்த வரை கம்பெனியின் தணிக்கையாளரின் சட்டமுறை அறிக்கையில் சான்றுதர வேண்டும். உரிய முறையில் சான்று இடப்பட்ட அறிக்கையின் படி (copy) ஒன்றினைப் பதிவாளரிடத்தில் தாக்கல் செய்யவேண்டும்.

உறுப்பினர்கள் பற்றிய விவரத்தையும், ஒவ்வொருவரும் பெற்றிருக்கும் பங்குகளின் எண்ணிக்கை பற்றிய விவரத்தையும் உணர்த்தும் ஒரு பட்டியலைக் கூட்டம் நடக்கும் வரை வைத்திருக்க வேண்டும். கம்பெனியின் உறுப்பினர்கள் அதைப் பார்வையிடலாம். கம்பெனியின் அமைப்புப் பற்றியோ சட்டமுறை அறிக்கை பற்றியோ முன்னறிவிப்பு ஏதுமின்றி உறுப்பினர்கள் விவாதம் எழுப்பலாம். ஆனால், முன்னறிவிப்பின்றித் தீர்மானம் எதையும் நிறைவேற்ற முடியாது.

## சட்ட முறை அறிக்கையின் மாதிரி
## (Statutory Report)

**படிவ எண்—22**

கம்பெனியின் எண் ..............................
பெயரளவு முதல் ரூ. ..............................

(கம்பெனிச் சட்டம் 1956 சட்டமுறை
அறிக்கை—165-வது பிரிவினைத்
தொடர்ந்து).

கம்பெனியின் பெயர் ..............................
..................கம்பெனியின் சட்டமுறை அறிக்கை 165 (5) பிரிவினைத் தொடர்ந்து சான்றளிக்கப்பட்டுத் தாக்கல் செய்யப்படுகின்றது.

சட்டமுறைக் கூட்டத்தைக் கூட்டும் அறிவிக்கையின் நாள் :

கூட்டநாள் ..............................
கூட்டம் நடக்குமிடம் ..............................
இதனை அளிப்பவர்கள் ..............................

1. ...நாள்வரை ஒதுக்கிய பங்குகளும், பெற்ற ரொக்கமும் (அறிக்கையின் 7 நாள்களுக்குள்ளான நாளாக இருக்க வேண்டும்.)

| பங்குகளின் எண்ணிக்கை | ....நாள் வரைப் பெற்ற ரொக்கம் | ஒருபங்கின் பெயரளவு மதிப்பு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| (அ) ரொக்கம் செலுத்தி ஒதுக்கப்பட்டவை : | | |
| (1) நேர்மைப் பங்குகள் | | |
| (2) மீள்தகு முன்னுரிமைப் பங்குகள் | | |
| (3) மீள்தகு முன்னுரிமைப் பங்குகளன்றிப் பிற முன்னுரிமைப் பங்குகள் | | |

| பங்குகளின் எண்ணிக்கை | ....நாள் வரைப் பெற்ற ரொக்கம் | ஒருபங்கின் பெயரளவு மதிப்பு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| (ஆ) ரொக்கத்திற்கு அல்லாமல் முழுத் தொகையையும் செலுத்தப்பெற்றதாக ஒதுக்கப்பட்ட பங்குகளும், அவற்றின் மறு பயனும் : | | |
| (1) நேர்மைப் பங்குகள் | | |
| (2) மீள்தகு முன்னுரிமைப் பங்குகள் | | |
| (3) மீள்தகு முன்னுரிமைப் பங்குகளன்றி வேறுவகை முன்னுரிமைப் பங்குகள் | | |
| (இ) ஒவ்வொரு பங்கிற்கும் ரூ....... செலுத்தப்பட்டதாக ஒதுக்கப் பட்ட பங்குகளும் அவ்வாறு ஒதுக்கப்பட்டதின் மறு பயனும் : | | |
| (1) நேர்மைப் பங்குகள் | | |
| (2) மீள்தகு முன்னுரிமைப் பங்குகள் | | |
| (3) மீள்தகு முன்னுரிமைப் பங்குகளன்றி வேறுவகை முன்னுரிமைப் பங்குகள் | | |
| (ஈ) பங்கு ரூ....... தள்ளுபடியில் ஒதுக்கப்பட்டவை : | | |
| (1) நேர்மைப் பங்குகள் | | |
| (2) மீள்தகு முன்னுரிமைப் பங்குகள் | | |
| (3) மீள்தகு முன்னுரிமைப் பங்குகளன்றி வேறு வகை முன்னுரிமைப் பங்குகள் | | |

2\. ......நாள் வரைக்குமான பெறுதல், செலுத்தல் பற்றிய சுருக்கம்.

| பெறுதல் | ரூ. | செலுத்தல் | ரூ. |
|---|---|---|---|
| பங்குகள் | ...... | தொடக்கச் செலவுகள் | ...... |
| நேர்மைப் பங்குகள் | ...... | பங்கு வெளியீட்டிற்கான அல்லது விற்பனைக்கான கழிவுத் தொகை. | |
| மீள்தகு முன்னுரிமைப் பங்குகள் | ...... | பங்கு விற்பனையில் அல்லது வெளியீட்டில் தள்ளுபடி | ...... |
| மீள்தகு முன்னுரிமைப் பங்குகளன்றி, வேறு முன்னுரிமைப் பங்குகள் | ...... | முதலினச் செலவினங்கள் நிலம் | ...... |
| | | கட்டடம் | ...... |
| பங்குகட்கென முன் கூட்டிச் செலுத்தியது | .... | பொறிவகை | ...... |
| | | பிறவகை | ...... |
| கடனீட்டுப் பத்திரங்கள் | ...... | | |
| கடன் | ...... | | |
| வைப்புத் தொகை | ...... | | |
| பிறவகை (குறிப்பிடப்பட வேண்டும்) | ...... | (குறிப்பிடப்பட வேண்டும்) | |
| | | இருப்புகள் | |
| | | கையிலுள்ளரொக்கம் | ...... |
| | | வங்கியிலுள்ளது | ...... |
| | | அஞ்சலகத்திலுள்ள சேமிப்பு வங்கிக் கணக்கு | ...... |
| மொத்தம் | ...... | மொத்தம் | ...... |

3. தகவல் அறிக்கையில் அல்லது தகவல் அறிக்கைக்கு மாற்று அறிக்கையில் மதிப்பிடப்பட்டிருக்கும் தொடக்கச் செலவுகள் :

| | மேல் குறிப்பிட்ட நாள்வரை செய்த தொடக்கச் செலவுகள் | மேல் குறிப்பிட்ட நாளுக்குப் பிறகு ஏற்கவுள்ள தொடக்கச் செலவுகள் |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| சட்ட கட்டணங்கள் | .. | .. |
| அமைப்பு முறேயேட்டினை யும் செயல்முறை விதிகளை யும் வெளியிடுவதற்கான கட்டணங்கள் | .. | .. |
| அச்சுக்கூலி | .. | .. |
| பதிவுக் கட்டணங்கள் | .. | .. |
| விளம்பரக் கட்டணங்கள் | .. | .. |
| பங்கு வெளியீட்டின் மீது அல்லது விற்பனையின் மீதான கழிவுத்தொகை | .. | .. |
| பங்கு வெளியீட்டில் அல்லது விற்பனையில் அளித்த தள்ளுபடி | .. | .. |
| பிற தொடக்கச் செலவுகள் (இயன்றவரை குறிப்பிடப்பட வேண்டும்) | .. | .. |
| மொத்தம் | .. | .. |

4. கம்பெனியின் இயக்குநர்கள், தணிக்கையாளர்கள், மேலாண்மை முகவர்கள், செயலர்—கருவூலர், மேலாளர், செயலர்

இவர்களின் பெயர்கள், தொழில்கள் பற்றிய விவரங்கள் முதலியவை :

| பெயர்கள் | முகவரிகள் | தொழில் | கம்பெனியின் அமைப்புக்குப்பின் 1, 2, 3 ஆகிய பதிவுகளில் கொடுக்கப்பட்ட விவரங்களின் மாற்றம் | மாற்றம் ஏற்பட்ட நாள் |
|---|---|---|---|---|
| (அ) இயக்குநர்கள் | | | | |
| (ஆ) தணிக்கையாளர்கள் | | | | |
| (இ) மேலாண்மை முகவர்/ செயலர்—கருவூலர் | | | | |
| (ஈ) மேலாளர் | | | | |
| (உ) செயலர் | | | | |

5. சட்டமுறைக் கூட்டத்தின் ஒப்புதலுக்காக அளிக்க இருக்கும் ஒப்பந்தம் பற்றிய விவரங்கள் :

(ஒப்பந்தத்தை மாற்றி அமைத்திருப்பின் அல்லது மாற்றியமைக்க உத்தேசித்திருப்பின், அதனை ஒப்புதலுக்குத் தரவேண்டியிருந்தால், ஒப்பந்தம் பற்றிய குறிப்பும், மாற்றம் அல்லது உத்தேசித்துள்ள மாற்றம் பற்றிய விவரங்களும் கொடுக்கப்பட வேண்டும்).

6. ஒப்புறுதி ஒப்பந்தம்

ஒவ்வொரு ஒப்பந்தத்தின் சிறுகுறிப்பு :

ஒப்பந்தம் முழுவதும் நிறைவேற்றப்படாதிருப்பின் எந்தளவு வரை அது நிறைவேற்றப்படவில்லையென்பதும், அதற்கான காரணமும் :

7. இயக்குநர்கள், மேலாண்மை முகவர்கள், செயலர்—கருவூலர், மேலாளர்—இவர்களிடமிருந்து பெறவேண்டிய பங்கழைப்புத் தொகை நிலுவை :

| பெயர் | நிலுவையிலுள்ள தொகை |
|---|---|
| இயக்குநர்கள் — | |
| .... | ...... |
| .... | ...... |

| பெயர் | நிலுவையிலுள்ள தொகை |
|---|---|
| மேலாண்மை—முகவர்/செயலர்—கருவூலர் :<br>மேலாண்மை—முகவர் தனியொரு ஆளாயிருப்பின் அவரின் பெயர் : | |
| மேலாண்மை—முகவர்களின் கூட்டாளிகள் :<br>மேலாண்மை—முகவர் கூட்டாளியாக இருக்கும் கூட்டு நிறுவனங்கள் : | |
| .... | ...... |
| .... | ...... |
| மேலாண்மை—முகவராக/செயலர்—கருவூலராகப் பணிபுரியும் நிறுவனத்தின் கூட்டாளிகள் | |
| .... | ...... |
| .... | ...... |
| மேலாண்மை—முகவர்/செயலர்—கருவூலரின் இயக்குநர்கள்: (மேலாண்மை—முகவரோ, செயலர்—கருவூலரோ தனிக் கம்பெனியாக இருப்பின்) | |

8. இயக்குநர், மேலாண்மை—முகவர், மேலாளர், மேலாண்மை—முகவர் ஒரு கூட்டு நிறுவனமாக இருப்பின் அதன் கூட்டாளி, மேலாண்மை. முகவர் ஒரு தனிக் கம்பெனியாய் இருப்பின் அதன் இயக்குநர்—ஆகியோருக்குப் பங்கு வெளியீட்டின் காரணமாக அல்லது விற்பனையின் காரணமாகக் கொடுக்கப்பட்ட கழிவுத் தொகை அல்லது தரகுத் தொகை பற்றிய விவரம் :

| பெயர் | செலுத்தப்பெற்ற அல்லது செலுத்தியிருக்கும் கழிவுத் தொகை அல்லது தரகுத் தொகை. | |
|---|---|---|
| | பங்குகள்மீது. | கடனீட்டுப் பத்திரங்கள்மீது |
| இயக்குநர்கள் | | |
| மேலாண்மை—முகவர் | | |
| மேலாண்மை—முகவர் ஒரு தனியாளாக இருப்பின், அவரின் பெயர்: | | |
| மேலாண்மை—முகவர் ஒரு கூட்டு நிறுவனமாக இருப்பின்-மேலாண்மை முகவரின் கூட்டாளிகள் | | |
| .... | .... | .... |
| .... | .... | .... |
| மேலாண்மை—முகவர் கூட்டாளியாக இருக்கும் கூட்டு நிறுவனங்கள் : | | |
| .... | .... | .... |
| .... | .... | .... |
| மேலாண்மை—முகவராக, செயலர்—கருவூலராக பணிபுரியும் அக் கூட்டு நிறுவனத்தின் கூட்டாளிகள். | | |
| .... | .... | |
| .... | .... | .... |

மேலாண்மை—முகவரோ
அல்லது செயலர்—கருவூலரோ
ஒரு தனிக் கம்பெனியாக
இருப்பின் :

மேலாண்மை—முகவரின்/
செயலர்—கருவூலரின்
இயக்குநர்கள் :

.... .... ....
.... .... ....

...... நாளிடப்பட்டது.

மேற்கண்ட அறிக்கை சரியானதென்று நாங்கள் சான்று கூறுகிறோம்.

இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட
இயக்குநர்களின் கையொப்பம்.

கம்பெனி ஒதுக்குகிற பங்கு, அப் பங்குகள் மீது பெற்ற ரொக்கம், பெறுதல் செலுத்தல் பொருத்தவரை மேற்கண்ட அறிக்கையில் கொடுக்கப்பட்டுள்ளவை சரியென்று நாங்கள் சான்று கூறுகிறோம்.

தணிக்கையாளர்கள்.

............நாளிடப்பட்டது.

---

## (2) ஆண்டுப் பொதுக் கூட்டம் (Annual General Meeting)

ஒவ்வொரு கம்பெனியும் ஆண்டுப் பொதுக்கூட்டம் ஒன்றை நடத்தவேண்டும். கம்பெனி அமைக்கப்பட்ட 18 திங்களுக்குள் முதலாண்டுக் கூட்டம் நடைபெறவேண்டும். இரண்டு ஆண்டுக் கூட்டங்களுக்கிடையே 15 திங்களுக்கு மேல் இடைவெளி இருக்கக் கூடாது. கம்பெனியின் பதிவலுவலகமுள்ள அதே நகரத்தில் அல்லது சிற்றூரில் அது நடைபெற வேண்டும். பொது விடுமுறை நாளிலன்றி பிற நாள்களில், வழக்கமான தொழில் நேரத்தில் கம்பெனியின் பதிவலுவலகத்திலோ அதே ஊரில் வேறு இடத்திலோ நடைபெறவேண்டும். இக் கூட்டம் பற்றிய அறிவிப்பில் இது ஆண்டுப் பொதுக்கூட்டம் எனக் குறிப்பிடப்பட்டிருக்கவேண்டும். ஆண்டுக் கூட்டம் கூட்டத் தவறின், எந்த ஒரு உறுப்பினர்

விண்ணப்பத்தின் பேரிலும் மைய அரசு ஆண்டுக் கூட்டத்தினைக் கூட்டும் உரிமை படைத்திருக்கிறது. 167-வது பிரிவின்படி நேரிலோ பகராள் முறையிலோ (Proxy) ஒரே ஒரு உறுப்பினர் வந்திருந்தாலும் அதனைக் கூட்டமாகக் கொள்ளலாம் என்று கூட மைய அரசு அறிவுறுத்தலாம். இதற்கு 21 நாள்களுக்கு முன்னர் அறிவிப்புத் தரவேண்டும். இக் கூட்டத்தில் செய்யும் பணி :

(அ) ஆண்டுக் கணக்குகளையும் இருப்புநிலைக் குறிப்பையும், இயக்குநர்களின் அறிக்கையையும் அளித்தல்;

(ஆ) பதவி விலகும் இயக்குநர்களுக்குப் பதிலாகப் புதிய இயக்குநர்களைத் தேர்ந்தெடுத்தல்;

(இ) தணிக்கையாளர்களை நியமித்தல்;

(ஈ) பங்காதாயம் அறிவித்தல்.

சாதாரண பெரும்பான்மையில் மேற்கண்டவை முடிவு செய்யப்படுகின்றன.

### (3) சிறப்புக் கூட்டம் அல்லது அசாதாரண கூட்டம் (Extra-ordinary General Meeting)

சட்டமுறைக் கூட்டமும், ஆண்டுப் பொதுக்கூட்டமுமின்றி நடைபெறும் கம்பெனியின் பிற கூட்டம் 'சிறப்புக் கூட்டம்' எனப்படும்.

அடுத்த ஆண்டுக் கூட்டம் வரை தள்ளிப்போட முடியாத சில இன்றியமையாத பிரச்சினைகளை நிறைவேற்றுவதற்காக இயக்குநர்கள் இத்தகைய கூட்டத்தைக் கூட்டுகின்றனர். எக் காரணத்தை முன்னிட்டு இது கூட்டப்படுகிறதோ அது பற்றி மட்டுமே இக் கூட்டத்தில் முடிவு செய்யலாம். இயக்குநர்கள் இத்தகைய கூட்டத்தைக் கூட்டவில்லை என்றால் உறுப்பினர்கள் இதனைக் கூட்டுமாறு இயக்குநர்களைக் கட்டாயப்படுத்த முடியும். எது பற்றி விவாதிக்க வேண்டுமோ அதில் வாக்களிக்கும் உரிமை பெற்ற, செலுத்தப்பெற்ற மூலதனத்தில் 10 சதவீதம் பங்கு வைத்திருக்கும் உறுப்பினர்கள் அல்லது கம்பெனிக்குப் பங்கு முதல் இல்லையென்றால், மொத்த வாக்குத் தொகையில் 10 சதவீத வாக்குரிமை பெற்றுள்ளோர் அக் கூட்டத்தினைக் கூட்டுமாறு இயக்குநர்களிடம் வேண்டலாம். கூட்டத்தில் கவனிக்க வேண்டிய பொருள் பற்றி அறிவிப்புத் தரவேண்டும். இவ்வாறு

வேண்டப்பட்டு 45 நாள்களுக்குள் இயக்குநரவை இக் கூட்டத்தைக் கூட்டவில்லையென்றால், அத்தகைய நாளிலிருந்து மூன்று திங்களுக்குள் கூட்டம் கூட்டவேண்டுமென்று கோரிக்கை விடுத்தவர்களே கூட்டிக் கொள்ளலாம். வழக்கமாக நடைபெறும் கூட்டத்தைப்போலவே இதற்கும் அறிவிக்கை தரவேண்டும். அதற்காகும் உரிய செலவைக் கம்பெனியிலிருந்து இக் கூட்டத்தைக் கூட்டுநர் பெற்றுக் கொள்ளலாம். கூட்டத்தைக் கூட்டத் தவறிய இயக்குநர்களிடமிருந்து இத் தொகையைக் கம்பெனி ஈடுகட்டிக் கொள்ளும்.

**குறைவெண் (Quorum)**

கம்பெனியின் பொதுக்கூட்டத்திற்குக் குறைந்தளவு எண்ணிக்கை பொதுக் கம்பெனியில் 5 பேர் நேரில் வந்திருக்க வேண்டும். தனிக் கம்பெனியில் இருவர் போதும். ஆனால், செயல்முறை விதிகள் வேறு எண்ணிக்கையைக் குறிப்பிடலாம்.

**வாக்கு செலுத்தல்**

முதலில் கை தூக்குவதன்மூலமாக வாக்கு செலுத்தப்படுகிறது. அந் நிலையில் ஒவ்வொரு உறுப்பினருக்கும் ஒவ்வொரு வாக்கு இருக்கிறது. ஆனால், கூட்டத்தின் தலைவரோ, வந்திருப்போரில் 5 உறுப்பினர்களோ, பகராள்களோ (Proxy), செலுத்தப்பெற்ற மூலதனத்தில் 10 சதவீதம் பெற்றிருக்கும் உறுப்பினர்களோ வாக்குப் பதிய வேண்டுமென்று கேட்டால், அப்பொழுது ஒவ்வொரு பங்கிற்குள்ள வாக்குரிமை அடிப்படையில் வாக்குகள் பதிவு செய்யப்படும். வாக்குப் பதிவு இருப்பின் மட்டுமே பகராள் (Proxy) பயன்படுத்தப்படும்.

**தீர்மானங்கள் (Resolutions)**

கம்பெனி மூன்றுவகைத் தீர்மானங்களை நிறைவேற்றலாம்:

(1) சாதாரண தீர்மானம்;

(2) சிறப்புத் தீர்மானம்;

(3) சிறப்பு அறிவிக்கை வேண்டும் தீர்மானம்.

சாதாரண பெரும்பான்மையில் நிறைவேற்றப்படும் தீர்மானம் சாதாரண தீர்மானம் (Ordinary resolution) எனப்படும். அதாவது, தீர்மானத்திற்கு ஆதரவாக 51 சதவீதம் வாக்குகள் கிடைக்கப் பெற்றால் அத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டதாகக்

கொள்ளப்படும். சிறப்புத் தீர்மானம் (Special resolution) என்பது ஒரு தீர்மானத்தைச் சிறப்புத் தீர்மானமாக நிறைவேற்ற விருக்கும் விருப்பத்தைக் கூட்டத்தை அறிவிக்கும் அறிவிக்கையில் காட்டியிருக்கவேண்டும். அடுத்து, அத் தீர்மானத்திற்கு எதிராக செலுத்தப்படும் வாக்குகளைவிட மூன்று மடங்கிற்குக் குறையாமல் அத் தீர்மானத்திற்கு ஆதரவாக வாக்குகள் அளிக்கப்பட்டிருக்க வேண்டும். பொதுக் கூட்டத்தில் சாதாரண பெரும்பான்மை யிலோ அல்லது 75 சதவீதப் பெரும்பான்மையிலோ சிறப்பு அறிவிக்கை வேண்டும் தீர்மானத்தை (Resolution requiring special notice) நிறைவேற்றிக் கொள்ளலாம். அத்துடன் அத் தகைய தீர்மானத்தை நிறைவேற்றும் விருப்பத்தைக் கூட்டத்தின் 14 நாள்களுக்கு முன்னரே கம்பெனிக்குக் கொடுத்திருக்க வேண் டும். அவ் வறிவிக்கையைப் பெற்றவுடன் அத்தகைய தீர்மானத்தை நிறைவேற்றும் விருப்பத்தை அனைத்து உறுப்பினருக்கும் உடனடி யாகக் கொடுத்துவிடவேண்டும்.

தீர்மானம் நிறைவேற்றப்பட்ட 30 நாள்களுக்குள் கீழ்க் கண்டவற்றை அச்சிட்டோ, தட்டச்சு செய்தோ பதிவாளரிடத் தில் தாக்கல் செய்யவேண்டும்.

(1) சிறப்புத் தீர்மானங்கள்;

(2) எல்லாவகை உறுப்பினர்களாலும் ஏற்றுக்கொள்ளப் பட்ட தீர்மானங்கள்;

(3) மேலாண்மை இயக்குநரை நியமிக்கும் அல்லது மீண் டும் நியமிக்கும் ஒப்பந்தம் அல்லது இயக்குநர் அவையின் தீர்மானம்;

(4) தனி விற்பனை முகவர்களின் (Sole selling agents) நியமனத்தை ஏற்றுக்கொள்ளும் தீர்மானம்;

(5) கம்பெனி தன் விருப்பப்படி கலைக்கப்பட வேண்டு மென்ற தீர்மானம் (Voluntary winding-up).

பொதுக்கூட்டங்கள், இயக்குநர் அவைக் கூட்டங்கள் ஆகிய வற்றில் நடந்தவை பற்றிய உண்மையான தகவல்களை நிகழ்ச்சிக் குறிப்பேட்டில் (Minutes ) ஒவ்வொரு கம்பெனியும் பதிவு செய்ய வேண்டும். அத்தகைய கூட்டங்களில் அலுவலர்கள் நியமிக்கப் பட்டிருப்பார்களேயானால், அவை பற்றியும் நிகழ்ச்சிக் குறிப்பில் எழுத வேண்டும். இயக்குநர் அவைக் கூட்டங்களில், கூட்டத் திற்கு வந்துள்ள இயக்குநர் பெயர்களையும், இக் கூட்டத்தில்

நிறைவேற்றப்பட்ட தீர்மானத்திற்கு மறுப்புத் தெரிவித்துள்ள இயக்குநர்கள் பெயர்களையும் குறிக்கவேண்டும். பொதுக் கூட்டத்தின் நிகழ்ச்சிக் குறிப்பேடு உறுப்பினர்களின் பார்வைக்கு எப்பொழுதும் வைத்திருக்கப்பட வேண்டும்.

**சட்டமுறை ஏடுகள்** (Statutory Books)

பலவகை விவரங்களையும் குறித்து வருவதற்கு ஒவ்வொரு கம்பெனியும் பலவகையான ஏடுகளை வைத்திருக்க வேண்டும். அவை (1) சட்டமுறை ஏடுகளென்றும் (Statutory Books) (2) விருப்புசார் ஏடுகளென்றும் (Optional Books) இருவகைப் படும்.

கம்பெனிச் சட்டத்தின்படி ஒவ்வொரு கம்பெனியும் தவறாது வைத்திருக்க வேண்டிய ஏடுகள் சட்டமுறை ஏடுகள் எனப்படும். அவற்றைக் கீழ்க்காண்போம் :

(1) உறுப்பினர் பதிவேடு (Register of Members);

(2) உறுப்பினர் அட்டவணை (Index of Members):

(3) கடனீட்டுப் பத்திரதாரர்கள் பதிவேடு (Register of Debenture Holders);

(4) கடனீட்டுப் பத்திரதாரர்கள் அட்டவணை (Index of Debenture Holders);

(5) பங்கு முதலுடைய கம்பெனி, தயாரிக்க வேண்டிய ஆண்டறிக்கை;

(6) நிகழ்ச்சிக் குறிப்பேடு (Minutes Book);

(7) அடைமான, பொருட்பிணைப் பொறுப்புப் பதிவேடு (Register of Mortgages and Charges );

(8) இயக்குநர்கள், மேலாண்மை இயக்குநர், மேலாளர், செயலர் போன்றவர்கள் பற்றிய பதிவேடு;

(9) இயக்குநர்களின் பங்கு பற்றிய பதிவேடு;

(10) தனது இயக்குநர்கள் தொடர்புடைய ஒப்பந்தம், கம்பெனி, கூட்டு நிறுவனங்கள் பற்றிய பதிவேடு;

(11) தன்னுடைய பெயரில் அல்லாமல், வேறுவகையிலுள்ள கம்பெனியின் முதலீடுகள் பற்றிய பதிவேடு;

(12) இயக்குநர்களின் வருகைப் பதிவேடு.

## 1. உறுப்பினர் பதிவேடு

ஒவ்வொரு கம்பெனியும் தனது உறுப்பினர்கள் பற்றிய விவரங்களை ஏடுகளில் கீழ்க்கண்ட விவரங்களுடன் எழுதி வைத்திருக்க வேண்டும்:

(அ) உறுப்பினரின் பெயர், முகவரி, தொழில்;

(ஆ) பங்கு முதலுடைய கம்பெனியில், ஒவ்வொரு உறுப்பினரின் பங்குகள், அவற்றின் வரிசை எண்கள், அவற்றின் மீது செலுத்தப்பெற்றதாகக் கருதப் படும் அல்லது செலுத்தப்பட்ட தொகை;

(இ) எந்நாளில் உறுப்பினராகப் பதிவு செய்யப்படுகிறார்;

(ஈ) எந்நாளில் உறுப்பினர் பதவியினின்றும் நீங்குகின்றார் என்ற விவரங்கள்.

தனது பங்குகளைப் பங்குக்கோவையாகக் கம்பெனி மாற்றியிருக்குமாயின், மாற்றம் பற்றிய அறிவிப்பு பதிவாளரிடத்தில் கொடுத்திருப்பின், ஒவ்வொரு உறுப்பினரும் வைத்திருக்கும் பங்குக்கோவையைக் குறிப்பேட்டில் பதியும். அவர் வைத்திருந்த பங்குகள் பற்றிய விவரம் தேவையில்லை. உறுப்பினர் பதிவேடு என்பது சட்டமுறை பதிவேடுகளில் மிகவும் சிறப்பு வாய்ந்த தொன்றாகும். எனவே, அதில் பதிவு செய்வதில் ஆழ்ந்த கவனம் செலுத்தவேண்டும். கம்பெனிச் சட்டம் இதற்கானக் குறிப்பிட்ட படிவத்தைக் கொடுக்காவிட்டாலும், பொதுவாக மாதிரியில் கொடுக்கப்பட்ட படிவத்தைக் கம்பெனிகள் பெரும்பாலும் பயன்படுத்துகின்றன. பங்கு விண்ணப்ப ஒதுக்கல் ஏடு, பங்கழைப்பு ஏடு, பங்குமாற்று ஏடு போன்ற பலவகை எடுகளினின்றும் விவரங்கள் உறுப்பினர் பதிவேட்டில் எடுத்து எழுதப் படுகின்றன.

உறுப்பினர் பதிவேடு உறுப்பினர் தன்மைக்கு முதல் சான்றாய் அமைகிறது. பங்காதாயம் வழங்குதல், உறுப்பினர்களின் வாக்குரிமையைச் சரிபார்த்தல், கம்பெனி கலைக்கும்பொழுது வழங்கக் கடமைப்பட்டோர்களின் (Contributories) விவரங்கள் ஆகியவற்றைத் தெரிந்துகொள்ள இது பெரிதும் துணையாயிருக்கிறது.

## 2. உறுப்பினர் அட்டவணை (Index of Members)

ஒரு கம்பெனியின் உறுப்பினர் எண்ணிக்கை 50-க்கு மேல் இருந்து, உறுப்பினர் பதிவேடு அட்டவணை போன்றும் இல்லா

திருந்தால், உறுப்பினர் அட்டவணைப் பதிவேடு என்ற தனி ஏட்டினை வைத்திருக்க வேண்டும். இவ் வட்டவணை அட்டை அட்டவணை (Card Index) வடிவத்தில் இருக்கலாம். உறுப்பினர் பதிவேட்டில் மாற்றம் செய்த 14 நாள்களுக்குள் இவ் வட்டவணையிலும் மாற்றம் செய்யவேண்டும். உறுப்பினர் பதிவேடு வைத்திருக்கும் அதே இடத்திலேயே இதனையும் வைத்திருக்க வேண்டும்.

### 3. கடனீட்டுப் பத்திரதாரர்கள் பதிவேடு (Register of Debenture-holders)

ஒவ்வொரு கம்பெனியும் கடனீட்டுப் பத்திரதாரர்கள் பற்றிய கீழ்க்கண்ட விவரங்களை இவ் வேட்டில் பதிவு செய்து வைத்திருக்க வேண்டும் :

(அ) கடனீட்டுப் பத்திரதாரர்களின் பெயர், முகவரி, தொழில்;

(ஆ) ஒவ்வொருவரும் வைத்திருக்கும் கடனீட்டுப் பத்திரம், அதன் வரிசை எண், செலுத்திய தொகை அல்லது செலுத்தப்பட்டதாகக் கொள்ளப்படும் தொகை;

(இ) கடனீட்டுப் பத்திரதாரராக ஏட்டில் பதிவான நாள்;

(ஈ) கடனீட்டுப் பத்திரதாரர் நீங்கிய நாள்.

கடனீட்டுப் பத்திரதாரர் பதிவேடு அட்டவணை போன்று அமைந்திருக்கவில்லையாயின், கம்பெனியில் 50-க்கு மேற்பட்ட கடனீட்டுப் பத்திரதாரர்கள் இருந்தால், உறுப்பினர் அட்டவணை போன்று கடனீட்டுப் பத்திரதாரர் அட்டவணை ஒன்றை ஒவ்வொரு கம்பெனியும் வைத்திருக்க வேண்டும். கடனீட்டுப் பத்திரதாரர் பதிவேட்டில் மாற்றம் ஏதேனும் செய்திருப்பின், மாற்றம் செய்த 14 நாள்களுக்குள் இவ் வட்டவணையிலும் அதைப் பதிவு செய்ய வேண்டும்.

### 4. இயக்குநர் முதலியோரின் பதிவேடு

கம்பெனி தனது பதிவலுவலகத்தில் தனது இயக்குநர்கள், மேலாண்மை இயக்குநர், மேலாண்மை முகவர், செயலர்—கருவூலர், மேலாளர், செயலர் போன்றோரின் பெயர், முகவரி,

தொழில் இன்னும் பிற தகவல்களை உள்ளடக்கும் பதிவேட்டினை வைத்திருக்க வேண்டும்.

### 5. இயக்குநர்களின் பங்குப் பதிவேடு (Register of Directors' Share holding)

இப் பதிவேடும் உறுப்பினர் பதிவேடு போன்றே இருக்கின்றது. ஆனால், இதில் இயக்குநராக இருக்கும் உறுப்பினர்கள் பற்றிய விவரங்களே இவ் வேட்டில் காணப்படுகின்றன. கம்பெனியில் ஒவ்வொரு இயக்குநரும் வைத்திருக்கும் பங்குகள், கடனீட்டுப் பத்திரங்கள் பற்றிய விவரங்களை இதில் காணலாம். அவ்வாறே கம்பெனியின் துணைக் கம்பெனியிலும், பிடிப்புக் கம்பெனியிலும் அவர்கள் வைத்திருக்கும் பங்குகள் பற்றிய விவரங்களைக் கொடுக்க வேண்டும்.

### 6. இயக்குநர்கள் ஈடுபாடுடைய ஒப்பந்தம் நிறுவனங்கள் பற்றிய பதிவேடு

இப் பதிவேட்டில் ஒவ்வொரு கம்பெனியும் கீழ்க்கண்ட விவரங்களைக் கொடுக்க வேண்டும் :

(அ) ஒப்பந்த நாள்;

(ஆ) ஒப்பந்தத்தில் ஈடுபாடுடையோரின் பெயர்கள்;

(இ) அவற்றின் முக்கிய நிபந்தனைகள்;

(ஈ) இவ் வொப்பந்தத்திற்கு ஆதரவு தெரிவித்து வாக்கு செலுத்திய இயக்குநர்களின் பெயர்கள்;

(உ) இவ் வொப்பந்தத்திற்கு எதிராக வாக்களித்த இயக்குநர்களின் பெயர்கள்.

இவ் வொப்பந்தம் பற்றிய விவரங்களை அதனை ஏற்றுக் கொண்ட இயக்குநரவைக் கூட்டத்தின் ஏழு நாள்களுக்குள் இப் பதிவேட்டில் எழுதவேண்டும். பின்னர் அடுத்த இயக்குநர் அவைக் கூட்டத்தில் இவ் வேட்டினை முன் வைக்கவேண்டும். அக் கூட்டத்திற்கு வருகை தந்துள்ள இயக்குநர்கள் அனைவரும் அதில் கையொப்பமிடவேண்டும். மேற்சொல்லப்பட்டவை கீழ்க் கண்ட ஒப்பந்தங்கட்குப் பொருந்தாது.

(அ) ஒரு ஆண்டில் மொத்தத்தில் ரூ. 1,000-த்திற்கும் குறைவாக சரக்கையோ, பிற பொருள்களையோ வாங்குவதற்கு அல்லது விற்பதற்குச் செய்துகொள்ளும் ஒப்பந்தம்.

(ஆ) தனது தொழிலின் தொடர்பாக உண்டியல்களை வசூலித்துத் தருவதற்கு வங்கியுடன் செய்து கொள்ளும் ஏற்பாடு. இப் பதிவேட்டையும் கம்பெனியின் பதிவலுவலகத்தில் வைத்திருக்க வேண்டும்.

**7. அடைமான, பொருட்பிணைப் பொறுப்புப் பதிவேடு**

ஒவ்வொரு கம்பெனியும் தனது பதிவலுவலகத்தில் இத் தகைய பதிவேட்டினை வைத்திருக்கவேண்டும். அதில் அடைமானம் வைக்கப்பட்ட அல்லது பொருட்பிணைப் பொறுப்புக் குள்ளான (Mortgaged or Charged) சொத்து பற்றிய விவரம், அடைமான அல்லது பொருட்பிணைத் தொகை, பொருட்பிணைக்கு உரியோரின் விவரங்கள் ஆகியவை காணப்படும்.

கம்பெனியின் கடனீந்தோரைப் பொருத்தவரை இவ்வேடு மிகவும் முக்கியம் வாய்ந்ததாகும். கம்பெனிக்குக் கடன் அளிப்போரும் அல்லது கடன் பேரில் சரக்களிப்போரும், கம்பெனியில் எந்தச் சொத்துகள் அடைமானத்தில் உள்ளன, மீதியுள்ள சொத்துகள் கம்பெனியின் சாதாரணக் கடன்களை அடைப்பதற்குப் போதுமானதாகவுள்ளனவா என்பது பற்றியும் தெரிந்து கொள்ள முடிகிறது. இவ்வகை ஏடு இல்லையெனில், ஒரு சொத்தின் மேலேயே மேலும் மேலும் அடைமானம் வைப்பதற்குக் கம்பெனிக்கு வழி ஏற்படும். இதனால் கம்பெனியின் கடன் ஈவோரின் நலன் பாதிக்கப்படும்.

**8. கம்பெனியின் பேரிலன்றி வேறுவகையிலுள்ள கம்பெனியின் முதலீடு பற்றிய பதிவேடு**

கம்பெனி தனது பெயரிலேயே எப்பொழுதும் முதலீடு செய்ய வேண்டும். ஆயினும், சில வேளைகளில் கம்பெனி வேறு பெயரில் தனது முதலீடுகளை வைத்திருக்கலாம். எடுத்துக்காட்டாகத் துணைக் கம்பெனியின் உறுப்பினர் எண்ணிக்கை சட்டத்தில் குறிப்பிட்டுள்ள குறைந்தளவு எண்ணிக்கைக்கும் குறையாமல் இருக்கும்பொருட்டு வேறு பெயர்களில் அதன் பங்குகளை வைத்திருக்கலாம். அந் நிலைகளில் அதற்கான தனிப் பதிவேடு ஒன்றைக் கம்பெனி வைத்திருக்கவேண்டும். அதில் அவ்வாறும், வேறு பெயரில் வாங்கியுள்ள பங்குகளையோ அல்லது முதலீடுகளையோ தெரிந்துகொள்ளும் வகையில் அவற்றின் தன்மை, மதிப்பு, முதலீடு, வங்கியின் பேரில் அல்லது யாருடைய பேரில் அவை வைத்திருக்கப்படுகின்றன என்ற விவரங்களை இவ் வேட்டில் குறிப்பிட வேண்டும்.

## 9. இயக்குநர்களின் வருகைப் பதிவேடு

இயக்குநர் அவைக் கூட்டத்தில் கலந்துகொள்ளும் இயக்குநர் அவை பற்றிய விவரங்களை இவ் வேட்டில் எழுதி வரவேண்டும். அதன் துணை கொண்டு கூட்டத்தில் கலந்துகொள்ளும் இயக்குநர் கட்குக் கொடுக்க வேண்டிய கட்டணத்தைக் கணக்கிட முடியும். நிகழ்ச்சிக் குறிப்புப் பதிவேடு பற்றி முன்னரே கூறியுள்ளோம்.

## 10. புள்ளிவிவர ஏடுகள் (Statistical Records)

மேல் விளக்கிய சட்டமுறை ஏடுகளை மட்டும் அல்லாமல் கீழ்க்கண்ட புள்ளிவிவர ஏடுகளையும் ஒவ்வொரு கம்பெனியும் வைத்திருக்க வேண்டும். ஒவ்வொருவரும் வைத்திருக்கும் பங்கு, கடனீட்டுப் பத்திரம், மாற்றம், பங்குநர்களையும் கடன் பத்திரதாரர்களையும் செலுத்துமாறு கோரியுள்ள பங்கழைப்புத் தொகை போன்ற புள்ளிவிவரங்களை உடனுக்குடன் தெரிந்து கொள்ளும் வகையில் புள்ளிவிவர ஏடுகள் தயாரிக்கப்பட வேண் டும். இந் நிகழ்ச்சிகளைப் பதிவு செய்ய வைத்திருக்கும் கணக் கேடுகளை இது குறிப்பதில்லை. அக் கணக்குகளினின்றும் இப் புள்ளிவிவர ஏடுகள் தயாரிக்கப்படுகின்றன. கீழ்க்கண்ட புள்ளி விவர ஏடுகளை ஒவ்வொரு கம்பெனியும் வைத்திருக்கும் :

(1) பங்கு விண்ணப்ப—ஒதுக்கு ஏடு (Share Application and Allotment Book)

(2) பங்கழைப்பு ஏடு (Share Call Book)

(3) கடனீட்டுப் பத்திர விண்ணப்ப—ஒதுக்கேடு (Debenture Application and Allotment Book)

(4) கடனீட்டுப் பத்திர அழைப்பு ஏடு (Debenture Call Book)

(5) பங்கு மாற்ற ஏடு (Share Transfer Book)

(6) பங்குநர்களின் பங்காதாய ஏடு (Shareholders Dividend Book)

(7) கடனீட்டுப் பத்திர வட்டி ஏடு (Debenture Interest Book)

(8) கடனீட்டுப் பத்திர மாற்றுப் பதிவேடு (Debenture Transfer Register)

(9) நிகழ்ச்சி நிரல் ஏடு (Agenda Book)

(10) முத்திரையிடப்பட்ட ஆவணப்பதிவேடு (Register of sealed documents)

(11) பங்குச் சான்றிதழ்ப் பதிவேடு (Register of Share Certificates)

(12) பங்கோலைப் பதிவேடு (Register of Share Warrants)

பங்கு விண்ணப்ப—ஒதுக்கீடு பற்றிப் பின்னர் விளக்குவோம். ஒரு கம்பெனியில் பலவகைப் பங்குகள் இருக்குமாயின், ஒவ்வொரு வகைப் பங்கிற்கும் தனித்தனியாக விண்ணப்ப—ஒதுக்கேடு வைத்திருக்க வேண்டும். பங்கழைப்புத் தொகை கோரும்பொழுது ஒவ்வொரு அழைப்பிற்கும் தனித்தனியாக அழைப்பேடு வைத்திருக்க வேண்டும். இவ்வகை ஏடுகளை வைத்திருக்க வேண்டுமென்று சட்டம் கட்டாயப்படுத்தவில்லை என்பதையும், உறுப்பினர் பதிவேட்டினை எழுதுவதற்கும் பிறவற்றிற்கும் இவை மிகுந்த துணையாக இருக்கும் என்பதாலேயே இவ் வேடுகள் வைத்திருக்கப் படுகின்றன என்பதையும் மறத்தல் கூடாது.

## 11. பங்கு மாற்றுப் பதிவேடு

இதனையும் வைத்திருக்குமாறு கம்பெனியைச் சட்டம் கட்டாயப்படுத்தவில்லை. எனினும், இது மிக மிக முக்கியம் வாய்ந்த ஒரு ஏடாகும். பங்கு மாற்றும் முறை பற்றிக் கம்பெனியின் செயல்முறை விதிகள் விளக்குகின்றன. கம்பெனியில் கம்பெனிக்கு அனுப்பப்படும் பங்கு மாற்றுப் படிவம் (Share Transfer Form) சரியாக நிரப்பப்பட்டுள்ளனவா என்பதைச் செயலர் முதலில் நோக்க வேண்டும். பங்கு மாற்றுநரும், மாற்றப் பெறுநரும் அப் பதிவேட்டில் கையொப்பம் இட்டுள்ளனரா என்பதையும், அதில் முறையாக முத்திரைகள் ஒட்டப்பட்டுள்ளனவா என்பதையும் அவர் கவனிக்க வேண்டும். இப் பங்கு மாற்றுப் படிவங்கள் இயக்குநர் அவைக் கூட்டத்தின் முன் வைக்கப்படுகின்றன. பங்கு மாற்றத்தை ஏற்றுக்கொள்ளும் தீர்மானம் நிறைவேற்றப்படுகிறது. பின்னர், இத் தீர்மானம் இயக்குநர் நிகழ்ச்சிக் குறிப்பேட்டில் பதிவு செய்யப்படுகிறது. பின்னர்ப் பங்கு மாற்ற எண், நாள், பங்கு மாற்றப்படுநர், பங்கு மாற்றப்பெறுநர் ஆகியோரின் பெயர்கள், முகவரி, தொழில், உறுப்பினர் பதிவேட்டின் பக்க எண், நாள், மாற்றப்படும் பங்குகளின் எண், முதலிய எல்லா விவரங்களும் இப் பங்கு மாற்றுப் பதிவேட்டில் பதிவு செய்யப் படுகின்றன.

## 12. கடனீட்டுப் பத்திரதாரர் பற்றிய புள்ளிவிவர ஏடுகள்

கடனீட்டுப் பத்திரதாரர் பற்றிய புள்ளி விவரங்களை எழுத்தில் தெரிந்துகொள்ளும் வகையில் கடன் பத்திர விண்ணப்ப—ஒதுக்கேடு, கடனீட்டுப் பத்திர அழைப்பு ஏடு, கடனீட்டுப் பத்திர மாற்று ஏடு போன்றவற்றை ஒவ்வொரு கம்பெனியும் வைத்திருக்க வேண்டும். பங்கு பற்றிய புள்ளி விவர ஏடுகளைப் போன்றே கடனீட்டுப் பத்திர ஏடுகளும் எழுதப்பட்டு வருகின்றன.

கடனீட்டுப் பத்திர விண்ணப்ப—ஒதுக்கேட்டில் ஒவ்வொரு விண்ணப்பத்தின் எண்ணும், விண்ணப்ப நாளும், விண்ணப்ப தாரரின் பெயர், முகவரி, தொழில், விண்ணப்பித்த கடனீட்டுப் பத்திரங்களின் எண்ணிக்கை, விண்ணப்பத்துடன் செலுத்திய தொகை, கடனீட்டுப் பத்திரம் ஒதுக்கப்பட்ட நாள், ஒதுக்கப் பட்ட கடன் பத்திரங்களின் எண்ணிக்கை போன்ற விவரங்கள் அனைத்தும் காணப்படுகின்றன. கடன் பத்திரதாரர்கள் ஒவ்வொருவரும் செலுத்த வேண்டிய அழைப்புத் தொகை போன்ற விவரங்களைக் கடன் அழைப்பேடு உணர்த்துகிறது. ஒவ்வொரு அரை ஆண்டிறுதியிலும் கடனீட்டுப் பத்திரதாரர் களின் பெயர்கள், அவர்கள் வைத்துள்ள கடனீட்டுப் பத்திரங் களின் தொகை, அதன் மீது கம்பெனி செலுத்த வேண்டிய வட்டி, அதனின்றும் கழிக்க வேண்டிய வட்டி, இறுதியாக ஒவ் வொரு கடனீட்டுப் பத்திரதாரருக்கும் கொடுக்க வேண்டிய வட்டித் தொகை போன்ற விவரங்கள் கடனீட்டுப் பத்திர வட்டி ஏட்டில் காணப்படும்.

# உறுப்பினர்ப் பதிவேடு
# (Register of Members)

பக்க எண்.........
பெயர்.............................
தொழில்..........................
முகவரி.............................

உறுப்பினர் எனப்
பதிவாகும் நாள்...............
உறுப்பினர் நிலையிலிருந்து
நீங்கும் நாள்....................

பற்று

| வாங்கிய பங்குகள் | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஒதுக்கீடு அல்லது மாற்றப்பெறும் எண். | நாள் | பங்குகளின் எண்ணிக்கை | தனி எண்கள் | | மாற்றுநரின் பக்க எண். | ஒதுக்கீட்டின்பொழுது அல்லது மாற்றத்தின்பொழுது பங்குகளின் மொத்த மதிப்பு | அழைப்பு | | | | | வைத்திருக்கும் பங்குகளின் மொத்த மதிப்பு | குறிப்புகள் |
| | | | ……இலிருந்து | ……வரை | | | அழைப்பு எண். | தவணை நாள் | தொகை | தொகை பெற்ற நாள் | ரொக்க ஏட்டுப் பக்க எண். | | |
| | | | | | | ரூ. | | | ரூ. | | | ரூ. | |

வரவு

| மாற்றப்பெற்ற பங்குகள் | | | | | | | இருப்பு | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மாற்றம் – எண். | நாள் | மாற்றப்பெறும் பங்குகளின் எண்ணிக்கை | தனி எண்கள் | | மாற்றப்பெறும் பங்குகளின் தொகை | மாற்றப்பெறுநரின் பக்க எண். | இன்னும் வைத்திருக்கும் பங்குகளின் எண்ணிக்கை | தனி எண்கள் | | இன்னும் வைத்திருக்கும் பங்குகளின் தொகை | குறிப்புகள் |
| | | | ……இலிருந்து | ……வரை | | | | ……இலிருந்து | ……வரை | | |
| | | | | | ரூ. | | | | | ரூ. | |

## பங்கு விண்ணப்ப — ஒதுக்கு ஏடு
## (Share Applications and Allotment Book)

| வரிசை எண் | விண்ணப்ப நாள் | விண்ணப்பதாரரின் பெயர் | முகவரி | தொழில் | விண்ணப்பித்த பங்குகளின் எண்ணிக்கை | விண்ணப்பத்துடன் செலுத்தப் பெற்ற தொகை | ரொக்க ஏட்டுப் பக்க எண் | ஒதுக்கப் பெற்ற பங்குகளின் எண்ணிக்கை | தனி எண்கள் ........இலிருந்து | தனி எண்கள் ........வரை | ஒதுக்குக் கடித எண் | ஒதுக்கின் போழ்து செலுத்த வேண்டிய தொகை | ஒதுக்குப் பணம் பெற்ற நாள் | திருப்பி அனுப்ப வேண்டிய தொகை | செலுத்திய நாள் | உறுப்பினர் பதிவேட்டில் பக்க எண் | குறிப்புகள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | ரூ. | | | | | | ரூ. | | ரூ. | | | |

## பங்கு அழைப்பு ஏடு
## (Share Call Book)

| வரிசை எண் | பெயர் | முகவரி | உறுப்பினர்ப் பதிவேட்டின் பக்க எண். | பங்குகளின் எண்ணிக்கை | பங்கொன்றுக்கு ரூ......... வீதம்........... நாளில் செலுத்த வேண்டிய முதலாவது அழைப்பு | | | பங்கொன்றுக்கு ரூ......... வீதம்........... நாளில் செலுத்த வேண்டிய இறுதி அழைப்பு | | | முன் கூட்டிப் பெற்ற அழைப்பு | | | | குறிப்புகள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | செலுத்த வேண்டிய தொகை | தொகை பெற்ற நாள் | ரொக்க ஏட்டுப் பக்க எண். | செலுத்த வேண்டிய தொகை | தொகை பெற்ற நாள் | ரொக்க ஏட்டுப் பக்க எண். | தொகை | தொகை பெற்ற நாள் | ரொக்க ஏட்டுப் பக்க எண். | சரிக்கட்டப் பெற்ற நாள் | |
| | | | | | ரூ. | | | ரூ. | | | ரூ. | | | | |

## பங்கு மாற்றப் பதிவேடு
## (Register of Share Transfers)

| மாற்றம் – எண். | மாற்றுப் பதிவு நாள் | மாற்றுநரின் (Transferor's) | | | | மாற்றப்பெறுநரின் (Transferee's) | | | | மாற்றப்பட்ட பங்குகள் | | | புதிய பங்குச் சான்றிதழின் எண். | பிற குறிப்புகள் | சுருக்குக் கையொப்பம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | உறுப்பினர்ப் பதிவேட்டுப் பக்க எண். | பெயர் | தொழில் | முகவரி | உறுப்பினர்ப் பதிவேட்டுப் பக்க எண். | பெயர் | தொழில் | முகவரி | பங்குகளின் எண்ணிக்கை | ........ எண்ணிலிருந்து (தொடக்க எண்) | ........ எண் வரை (இறுதி எண்) | | | |
| | | | | | | | | | | | | | | | |

## பங்குரிமைச் சீட்டுப் பதிவேடு
## (Register of Share Warrants)

| பங்குகளை மாற்றிக் கொண்ட விவரங்கள் (Particulars of Shares Exchanged) | | | | வழங்கிய பங்கோலைகள் பற்றிய விவரங்கள் (Particulars of Share Warrants issued) | | | | ஒப்படைக்கப் பெற்ற பங்கோலைகள் பற்றிய விவரங்கள் (Particulars of Share Warrants Surrendered) | | | | | குறிப்புகள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மாற்றிக் கொண்ட பங்குகளின் எண்ணிக்கை | பங்கு வரிசை எண்கள் | | உறுப்பினர்ப் பதிவேட்டுப் பக்க எண். | விண்ணப்ப நாள் | வழங்கிய நாள் | வழங்கப் பெற்றவரின் பெயர் | பங்கோலை எண்ணிக்கை | ஒப்படைக்கப்பட்ட நாள் | ஒப்படைப்பவர் பெயர் | பங்கோலை எண்கள் | | உறுப்பினர்ப் பதிவேட்டுப் பக்க எண். | |
| | தொடக்க எண். | இறுதி எண். | | | | | | | | தொடக்க எண். | இறுதி எண். | | |
| | | | | | | | | | | | | | |

# கடனீட்டுப் பத்திரதாரர்கள் பதிவேடு
## (Register of Debenture-holders)

பெயர்

தொழில்

முகவரி

| வாங்கப்பட்ட கடனீட்டுப் பத்திரங்கள் | | | | | | | மாற்றப்பட்ட கடனீட்டுப் பத்திரங்கள் | | | | | | மீதி வைத்திருக்கும் கடனீட்டுப் பத்திரங்கள் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஒதுக்கப்பட்ட நாள் | கடனீட்டுப் பத்திரங்களின் எண்ணிக்கை | கடனீட்டுப் பத்திரங்களின் வரிசை எண்கள் | | செலுத்தப் பெற்ற தொகை | செலுத்திய நாள் | ரொக்க ஏட்டுப் பக்க எண். | மாற்றப் பெற்ற நாள் | மாற்றப் பெறுநரின் பக்க எண். | மாற்றப் பெற்ற கடனீட்டுப் பத்திரங்களின் எண்ணிக்கை | கடனீட்டுப் பத்திரங்களின் வரிசை எண்கள் | | செலுத்தப் பெற்ற தொகை | கடனீட்டுப் பத்திரங்களின் எண்ணிக்கை | கடனீட்டுப் பத்திரங்களின் வரிசை எண்கள் | |
| | | தொடக்க எண். | முடிவு எண். | | | | | | | தொடக்க எண். | முடிவு எண். | | | தொடக்க எண். | முடிவு எண். |
| | | | | | | | | | | | | | | | |

## கடனீட்டுப் பத்திர விண்ணப்ப—ஒதுக்கு ஏடு
## (Debenture Application and Allotment Book)

| விண்ணப்ப எண் | பெயர் | முகவரி | தொழில் | விண்ணப்பிக்கப் பெற்ற கடன் பத்திர எண்ணிக்கை | விண்ணப்பத்தின் போது செலுத்தப் பெற்ற தொகை | ரொக்க ஏட்டுப் பக்க எண் | ஒதுக்கிய நாள் | ஒதுக்கப் பெற்ற கடனீட்டுப் பத்திரங்களின் எண்ணிக்கை | வரிசை எண்கள் | | கடனீட்டுப் பத்திர பதிவேட்டுப் பக்க எண் | ஒதுக்கலின் போது செலுத்த வேண்டிய தொகை | ஒதுக்கலின் போது பெற்ற தொகை | ரொக்க ஏட்டுப் பக்க எண் | திருப்பித் தந்த ரொக்கம் | குறிப்புகள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | தொடக்க எண் | இறுதி எண் | | | | | | |
| | | | | | ரூ. | | | | | | | ரூ. | ரூ. | | ரூ. | |

## கடனீட்டுப் பத்திர அழைப்பு ஏடு
## (Debenture Call Book)

கடனீட்டுப் பத்திரம் ஒன்றுக்கு ரூ............வீதம்.................நாளுக்குள் அழைப்புப் பணம் செலுத்த வேண்டும் என...........நாளில் கோரப்பட்டது.

| கடனீட்டுப் பத்திர பதிவேட்டுப் பக்க எண் | பெயர் | முகவரி | வைத்திருக்கும் கடனீட்டுப் பத்திர எண்ணிக்கை | பெறவேண்டிய அழைப்புப் பணம் | செலுத்தப் பெற்ற அழைப்புப் பணம் | செலுத்தப் பெற்ற நாள் | ரொக்க ஏட்டுப் பக்க எண் | குறிப்பு |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | ரூ. | ரூ. | | | |

## கடனீட்டுப் பத்திர மாற்றப் பதிவேடு
## (Debenture Transfer Register)

| மாற்ற எண் | நாள் | மாற்றுநரின் | | | | மாற்றப் பெறுநரின் | | | | மாற்றப்பட்ட கடனீட்டுப் பத்திரங்கள் | | | | குறிப்புகள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | கடனீட்டுப் பத்திரப் பதிவேட்டுப் பக்க எண் | பெயர் | முகவரி | தொழில் | கடனீட்டுப் பத்திரப் பதிவேட்டுப் பக்க எண் | பெயர் | முகவரி | தொழில் | கடனீட்டுப் பத்திர எண்ணிக்கை | வரிசை எண்கள்: தொடக்க எண் | வரிசை எண்கள்: இறுதி எண் | செலுத்தப் பெற்ற தொகை | |
| | | | | | | | | | | | | | ரூ. | |

# அட்டவணை—'A'
# (Table 'A')

பங்குகளால் வரையறுக்கப்பட்ட பொதுக் கம்பெனியானது தனக்கென்று தனியாகச் செயல்முறை விதிகளைத் தயாரிக்க வேண் கட்டாயமில்லை. தனக்கென்று அவ்வாறு தயாரித்துக்கொள்ள வில்லையெனில், கம்பெனிச் சட்டத்தில் கொடுக்கப்பட்டுள்ள அட்டவணை '*A*' (Table 'A') அதற்குப் பொருந்தும். தனக் கென்று தனியாக செயல்முறை விதிகளை வைத்திருக்கும்போழ்தும், குறிப்பிட்ட ஒரு பொருள் பற்றி அதன் செயல் முறை விதிகளில் ஒன்றும் இல்லையெனில், அட்டவணை '*A*'-ல் கூறியிருப்பது அக் கம்பெனிக்கு அப் பொருள் குறித்துப் பொருந்தும்.

கணக்கு எழுதுவதற்குத் தேவையான, அட்டவணை '*A*'-ல் குறிப்பிட்டுள்ள சில முக்கிய சரத்துக்களைக் காண்போம்.

**பங்கு முதல்**

(1) பங்குகள் வெளியிடுவதற்கு முன்னர் சிறப்புத் தீர் மானம் ஒன்றை நிறைவேற்றிச் சில நிபந்தனையின் பேரில் திரும்பப் பெற்றுக்கொள்ளும் முன்னுரிமைப் பங்குகளைக் கம்பெனியானது சாதாரணத் தீர்மானம் நிறைவேற்றுவதன்மூலமாக வெளியிட லாம். இது சட்டத்தின் 80-வது பிரிவுக்குட்பட்டதாகும்.

(2) எவ்வகைப் பங்குகளுக்குமுரிய உரிமைகளை மாற்றிக் கொள்ளலாம் (அவ் வகைப் பங்குகளை வெளியிட்ட நிபந்தனைகள் வேறு வகையில் குறிக்காதிருக்கமாயின்). ஆனால், இவ்வாறு உரிமைகளை மாற்றுவதற்கு அவ்வகைப் பங்குகளில் முக்கால் அளவு பங்குநர்களின் எழுத்துமூலமான இசைவினைப் பெற வேண்டும். அல்லது அவ்வகைப் பங்குநர்களின் பொதுக்கூட்டத்தில் சிறப்புத் தீர்மானம் ஒன்றை நிறைவேற்றி உரிமைகளை மாற்றிக் கொள்ளலாம். இது கம்பெனிச் சட்டத்தின் 106, 107-வது பிரிவுகட்கு உட்பட்டது.

**பங்கு வெளியீட்டின்பொழுது கழிவு தருதல்**

கம்பெனிச் சட்டத்தின் 76-வது பிரிவின்படி, பங்கு எடுக்க ஒப்புக்கொள்வதற்காக அல்லது பிறரைப் பங்கு எடுக்க வைப்பதற் காகக் கீழ்க்கண்ட நிபந்தனைகட்குட்பட்டுக் கழிவுதரும் அதிகா ரத்தைப் பயன்படுத்தலாம்.

(அ) கழிவுத் தொகையின் சதவீதத்தை அல்லது கொடுக்கப் பட்ட கழிவுத் தொகையை அல்லது கொடுக்கவிருக்கும் கழிவுத் தொகையை வெளிக்காட்ட வேண்டும்.

(ஆ) பங்கு வெளியீடு விலையில் 5 சதவீதத்திற்கு மிகாமல் கழிவுவீதம் இருக்கவேண்டும்.

(இ) கழிவுத் தொகையை ரொக்கம் செலுத்தியோ, முழு வதும் செலுத்தப்பெற்றப் பங்குகளை அல்லது பகுதி பெற்றப் பங்குகளை ஒதுக்கீடு செய்தோ தீர்த்துக் கொள்ளலாம். அல்லது ஒரு பகுதியினை ஒரு வழியாகவும், மீதியை அடுத்த வழியாகவும் செலுத்தித் தீர்த்துக் கொள்ளலாம்.

(ஈ) எப் பங்கு வெளியீட்டின்பொழுதும் சட்டத்திற்குட் பட்ட தரகுத் தொகையினையும் கம்பெனி தரலாம்.

**கம்பெனியின் பங்கு மீதான பற்றுரிமை** (Lien on Shares)

(அ) முழுவதும் செலுத்தப்பெறுதிருக்கும் எந்தப் பங்கு மீதும் கேட்கப்பட்ட பங்கழைப்புத் தொகைக்காக (தற்பொழுது செலுத்த வேண்டியிருப்பினும், இல்லாவிட்டாலும் அல்லது அப் பங்கிற்காகக் குறிப்பிட்ட நேரத்தில் செலுத்த வேண்டியிருப்பினும்) கம்பெனிக்குப் பற்றுரிமையுண்டு.

(ஆ) ஒருவர் செலுத்த வேண்டியிருக்கும் எல்லாத் தொகை கட்காகவும் அல்லது அவர்களது சொத்துகளிலிருந்து கம்பெனிக்குச் செலுத்த வேண்டியிருக்கும் எல்லாத் தொகைகட்காகவும். அவர் பெயரில் பதிவாகியுள்ள பங்குகள் அனைத்தின் மீதும் (முழுத் தொகை செலுத்தப்பெறுததாக இருக்க வேண்டும்.) கம்பெனிக்குப் பற்றுரிமையுண்டு.

எந்தப் பங்கிற்கும் முழுமையாகவோ பகுதியாகவோ மேற் கண்ட விதியினின்றும் விலக்களிக்கப்படுமென்று இயக்குநரவை கூறமுடியும்.

பங்கு மீதான கம்பெனியின் பற்றுரிமை, அது செலுத்த வேண்டிய பங்காதாயத்திற்கும் பொருந்தும்.

கம்பெனிக்குப் பற்றுரிமையிருக்கும் எப் பங்குகளையும் அதன் இயக்குநரவை சரி என நினைக்கும் வகையில் கம்பெனி விற்க லாம். ஆனுல், பற்றுரிமைக்குக் காரணமாக அத் தொகை தற்பொழுது செலுத்தப்பட வேண்டியதாக இருக்கவேண்டும்.

அல்லது தற்பொழுது செலுத்த வேண்டிய தொகையினைக் கோரி எழுதிய அறிவிக்கைக்குப் பின்னர் 14 நாள்களாவது ஆகியிருக்க வேண்டும். இப் பற்றுரிமை குறித்துப் பதிவு செய்யப்பட்ட பங்குநர்க்கோ அல்லது அவருடைய வாரிசுக்கோ அறிவிக்கையினைக் கொடுத்திருக்க வேண்டும். இல்லையெனில் பற்றுரிமையுள்ள பங்குகளை விற்க முடியாது.

கம்பெனி அவ்வாறு விற்ற தொகையினைப் பெற்று பற்றுரிமை இருக்கக்கூடிய, தற்பொழுது செலுத்த வேண்டிய தொகைக்குச் சரிக்கட்டிக் கொள்ளலாம்.

**பங்கழைப்பு அல்லது பங்குத்தொகை கோரல் (Calls on Shares)**

பங்குகள் மீது செலுத்தப்பெறாதிருக்கும் தொகையினை (பங்குகளின் பெயரளவு மதிப்பின் பொருட்டாவது அல்லது முனைமத் தொகையின் பொருட்டாவது) கோரி உறுப்பினர்களை அவ்வப்போது இயக்குநரவை கேட்கலாம்.

பங்கின் பெயரளவு மதிப்பில் கால் பகுதிக்கு மிகாமல் இப் பங்கழைப்புத் தொகை இருக்கவேண்டும். அல்லது சென்ற பங்கழைப்புத் தொகை செலுத்த வேண்டிய குறிப்பிட்ட நாளிலிருந்து ஒரு திங்களுக்குள் இத் தொகை செலுத்துவதாக இருக்கக் கூடாது. பங்கழைப்புத் தொகையைச் செலுத்த உறுப்பினர்களுக்குக் குறைந்தது 14 நாள்களாவது முன் அறிவிப்புத் தர வேண்டும். செலுத்த வேண்டிய இடம், காலம் முதலியவை அறிவிப்பில் குறிப்பிடப்பட்டிருக்கும்.

ஒரு பங்கின் மீது கோரப்பட்ட தொகையானது குறிப்பிட்ட நாளுக்குள் செலுத்தப்பெறவில்லையெனில், அவ்வாறு குறிப்பிட்ட நாளிலிருந்து அவர் செலுத்தும் நாள் வரை செலுத்த வேண்டிய தொகை மீது 5 சதவீதம் ஆண்டு வட்டிவீதம் பங்குநர் செலுத்தக் கடமைப்பட்டவர். இவ் வட்டியை விட்டுக் கொடுக்கவோ, அல்லது குறைந்த வட்டி வசூலிக்கவோ இயக்குநர் அவைக்கு உரிமையுண்டு.

அழைப்புத் தொகையை முன்கூட்டி உறுப்பினர்களிடம் பெற்றுக்கொள்ள இயக்குநரவைக்கு உரிமையுண்டு. அவ்வாறு, முன்கூட்டி செலுத்தப்படும் பங்கழைப்புத் தொகை மீது ஆண்டு வட்டி 6 சதவீதத்திற்கு மிகாமல் தரலாம்.

**பங்கு மாற்றம்**

கம்பெனியின் எப் பங்குகளையும் மாற்றும் பத்திரத்தினை மாற்றுநரோ, மாற்றப் பெறுநரோ இருவரின் சார்பிலோ தயார் செய்யலாம். கம்பெனியின் உறுப்பினர் பதிவேட்டில் மாற்றப் பெறுநரின் பெயர் எழுதப்படும்வரை மாற்றுநரே அப் பங்குகளை உடையவராகக் கொள்ளப்படுவார்.

முழுத் தொகையையும் செலுத்தப் பெறாத பங்கினைக் கம்பெனி ஏற்றுக்கொள்ளாத நபருக்கு மாற்றம் செய்வதை இயக்குநரவை மறுக்கலாம். அவ்வாறே, கம்பெனி பற்றுரிமை பெற்றிருக்கும் பங்குகளை மாற்றுவதையும் அது மறுக்கலாம். ஆனால், இயக்குநரவையின் இம் மறுப்பை எதிர்த்து மேல் விண்ணப்பம் செய்யும் உரிமை சட்டத்தில் 111-வது பிரிவில் உண்டு. இயக்குநரவை அவ்வப்பொழுது தீர்மானிக்கும் குறிப்பிட்ட நேரம்வரை பங்கு மாற்றம் பதிவு செய்வதை நிறுத்திவைக்கலாம். ஆனால், இவ்வாறு நிறுத்தி வைக்கும் காலம் ஓராண்டில் 45 நாள்களுக்கு மிகக்கூடாது. கூட்டுப் பங்குநர் (Joint Shareholder) ஒருவர் இறந்துவிடில், அவருடன் கூடியுள்ள உயிருடனிருப்பவர் அப் பங்குகட்கு உரிமையாளராகக் கொள்ளப்படுவார். அவ்வாறே பங்கு ஒருவர் பெயரிலேயே இருக்கும்பொழுது அப் பங்குநர் இறந்துவிட்டால், அவருடைய சட்டமுறை வாரிசுதாரர்கள் அப் பங்குகள் மீது உரிமை படைத்தவர்கள். பலர் ஒன்றிணைந்து வைத்திருக்கும் பங்குகள் மீதான பொறுப்பினின்றும் இறந்துவிட்ட கூட்டுப் பங்குநரின் சொத்து நீங்குவதில்லை.

**பங்கு ஒறுப்பிழப்பு (Forfeiture of Shares)**

அழைப்புத் தொகையையோ அல்லது அழைப்பின் தவணைத் தொகையையோ ஒரு உறுப்பினர் செலுத்தவேண்டிய நாளுக்குள் செலுத்தத் தவறின் அதற்குப் பிறகு அத் தொகையை வட்டியுடன் சேர்த்துச் செலுத்தவேண்டுமாறு இயக்குநரவை அவருக்கு அறிவிக்கை அனுப்பலாம்.

அறிவிக்கை தரப்பட்ட 14 நாள்களுக்குப் பின்னர்த் தொகையினைச் செலுத்துமாறு கோரி மீண்டும் ஒரு நாளை அவ் வறிக்கையில் குறிப்பிடலாம். அத்துடன் அக் குறிப்பிட்ட நாளிலேயோ அல்லது அதற்கு முன்னரோ அழைப்புத் தொகையைச் செலுத்தவில்லையெனில் அப் பங்குகள் ஒறுப்பிழப்பு (பறிமுதல்) செய்யப்படுமென்றும், அவ்வறிவிக்கை கோரலாம். அவ் வறிவிக்கையில் கண்டவாறு அழைப்புத் தொகை செலுத்தப்படவில்லையெனில்

இயக்குநரவை தீர்மானம் நிறைவேற்றி அப் பங்குகளைப் பறிமுதல் செய்யலாம். அவ்வாறு பறிமுதல் செய்யப்பட்ட பங்கினை மீண்டும் விற்றுக்கொள்ளலாம் அல்லது (இயக்குநரவை சரியென எண்ணும் வகையில்) அதனை எவ் வகையிலும் பயன்படுத்திக் கொள்ளலாம். அவ்வாறு விற்கும் முன்னர் அல்லது பயன்படுத்திக் கொள்ளும் முன்னர் அதற்குச் சரியெனப்படும் வகையில் நிபந்தனைகளை விதித்துப் பறிமுதலை ரத்து செய்து கொள்ளலாம்.

யாருடைய பங்குகள் ஒறுப்பிழப்பு செய்யப்பட்டுவிட்டனவோ அவர் அப் பங்குகளைப் பொருத்தவரை உறுப்பினர் என்னும் தகுதியை இழந்துவிடுகிறார். அத்துடன் அவர் அப் பங்குகளைப் பொருத்தவரையில் கம்பெனிக்குச் செலுத்தவேண்டிய தொகை முழுவதற்கும் தொடர்ந்து பொறுப்புடையவர் ஆவார். அத் தொகை முழுவதையும் அவர் செலுத்திய பின்னரே அப் பொறுப்பி லின்றும் அவர் விடுபடுவார்.

**முதலை மாற்றுதல்**

கம்பெனி சாதாரண தீர்மானம் நிறைவேற்றுவதன்மூலம் தனது மூலதனத்தை அதிகப்படுத்திக்கொள்ள முடியும். அவ்வாறே அதிகப்படுத்தும் தொகையும், எம் மதிப்புடைய பங்குகளாக அது பிரிக்கப்படுகிறதென்ற விவரமும் தீர்மானத்தில் காணப்படும்.

சாதாரண தீர்மானம் நிறைவேற்றுவதன்மூலம் ஒரு கம்பெனி தனது பங்கு முதலைத் தொகுத்து (Consolidation), தற்பொழுதுள்ள பங்குகளை விட கூடிய தொகையையுடைய பங்குகளாகப் பிரித்துக் கொள்ளலாம். அவ்வாறே தற்பொழுதுள்ள பங்குகளை அல்லது அவற்றில் ஒருசிலவற்றைக் குறைந்த மதிப்புடைய பங்குகளாகப் பிரித்துக் கொள்ளலாம். தீர்மானம் நிறைவேற்றும் நாளன்றே எவரும் எடுத்துக்கொள்ளாத அல்லது எடுத்துக்கொள்ள ஒப்புதல் தராத பங்குகளை நீக்கிவிடலாம்.

சிறப்புத் தீர்மானம் நிறைவேற்றுவதன்மூலமாகக் கம்பெனி தனது பங்கு முதலைக் குறைத்துக் கொள்ளவும், முதல் மீட்பு காப்புக் கணக்கை (Capital Redumption Reserve Account) அல்லது முதல் முனைமக் கணக்கைக் (Share Premium Account) குறைத்துக் கொள்ளவும் முடியும்.

**பங்காதாயமும் காப்பும்**

கம்பெனி தனது பொதுக்கூட்டத்தில் பங்காதாயத்தை அறிவிக்கும். ஆனல், இத் தொகை இயக்குநர் பரிந்துரைத்தத் தொகையினும் அதிகமாக இருக்கக்கூடாது.

கம்பெனியின் இலாபத்தினையொட்டித் தனது உறுப்பினர்களுக்கு இயக்குநரவை அவ்வப்பொழுது இடைக்காலப் பங்காதாயம் (Interim dividend) வழங்கலாம். பங்காதாயத்தைப் பரிந்துரைக்குமுன் கம்பெனியின் இலாபத்திலிருந்து இயக்குநரவை சரியென நினைக்கும் தொகையைக் காப்பாக ஒதுக்கலாம். எதிர்பாரா நிகழ்ச்சிகளுக்கு அல்லது பங்காதாயத்தைச் சமப்படுத்துவதற்கு அல்லது கம்பெனியின் இலாபத்தினைச் சரியான வகையில் பயன்படுத்திக்கொள்ளும் எந்த நோக்கத்திற்கும் இக் காப்புத் தொகையைப் பின்னர் பயன்படுத்திக்கொள்ள முடியும். இத் தொகையைத் தனது தொழிலிலேயே வைத்திருக்கலாம் அல்லது வேறு வகையில் இயக்குநரவை தீர்மானிக்கும் வழியில் முதலீடு செய்யலாம்.

இவ்வாறு காப்பிற்கென ஒதுக்காமலேயே பங்காதாயத்தை வழங்காதிருத்தல் சிறந்ததெனை இயக்குநரவை எண்ணுமாயின், இலாபத்தினை அடுத்தாண்டிற்கு எடுத்துச் செல்லலாம்.

பங்காதாயம் பற்றித் தனி உரிமைகள் பெற்றிருநிலையில், பங்குகள்மீது செலுத்தப்பட்ட அல்லது செலுத்தப்பட்டதாக வரவு வைக்கப்பட்ட தொகைகளின் அடிப்படையில் பங்காதாயம் செலுத்தப்படும். பங்கு மீது முன்கூட்டிச் செலுத்தப்பெற்றத் தொகையைப் பங்கு மீது செலுத்தப்பெற்றத் தொகையாகக் கொள்ள முடியாது. பங்காதாயம் வழங்கப்படும் பருவத்தின் ஒரு பகுதியில் பங்குகள் மீது செலுத்தப்பட்ட அல்லது வரவு வைக்கப்பட்டத் தொகைகளின் விகிதப்படி பங்காதாயம் பிரிக்கப்பட்டுச் செலுத்தப்படும். ஆனல், ஒரு பங்கானது ஒரு குறிப்பிட்ட நாளிலிருந்து பங்காதாயத்தைப் பெறத் தகுதியுடையது எனும் நிபந்தனையின்பேரில் வெளியிடப்பட்டிருக்குமாயின் அவ்வாறே அப் பங்குகள் மீது பங்காதாயம் வழங்கப்படும். பங்கழைப்புத் தொகையின் காரணமாகவோ அல்லது பங்குகள் பற்றியோ கம்பெனிக்கு ஒருவர் தொகை ஏதேனும் செலுத்தவேண்டியிருப்பின் அத் தொகையினை அவ் வுறுப்பினருக்குச் செலுத்த வேண்டிய பங்காதாயத்திலிருந்து இயக்குநரவை கழித்துக் கொள்ளலாம். பங்காதாயத்தின் மீது கம்பெனி வட்டி செலுத்த வேண்டியதில்லை.

**கணக்குகள்**

இயக்குநர் அல்லாத உறுப்பினர்களின் பார்வைக்காக எந் நேரத்தில், எவ் விடத்தில், எந் நிலைகளில் அல்லது கட்டுப்பாட்டிற்குள் கம்பெனியின் கணக்குகளையும் ஏடுகளையும் வைக்கலாம் என்பதை இயக்குநரவை அவ்வப்பொழுது முடிவு செய்யும்.

## இலாபத்தை முதற்படுத்துகை (Capitalisation of Profits)

கம்பெனியின் காப்புக் கணக்கிலுள்ள தொகையில் ஒரு பகுதியை அல்லது இலாப-நட்டக் கணக்கில் வரவிலுள்ள தொகையை அல்லது உறுப்பினருக்கு வழங்கக்கூடிய வேறு எத் தொகையிருப்பினும், அதனை முதற்படுத்திக் கொள்ளலாம் (Capitalisation) எனக் கம்பெனி தனது பொதுக்கூட்டத்தில் இயக்குநரவை பரிந்துரைப்படி தீர்மானம் நிறைவேற்றலாம். அது பங்காதாயமாக வழங்கப்படுமாயின், அதனைப் பெற உரிமையுடைய உறுப்பினர்களிடையே மேற்கண்ட முறையில் அதே விகிதத்தில் அத் தொகைகளை வழங்கலாம். மேற்குறிப்பிட்ட தொகையை ரொக்கமாகச் செலுத்தமுடியாது. அவ் வுறுப்பினர்கள் தமது பங்குகள் மீது செலுத்தப்பெறுதுள்ள பகுதிக்குச் செலுத்திக் கொள்ளுவதற்கு அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளலாம். மேற்குறிப்பிட்டுள்ள வேறு பங்குகளையோ அல்லது கடனீட்டுப் பத்திரங்களையோ முழுவதும் செலுத்தப்பெற்றதாக அவ் வுறுப்பினர்களுக்கு வழங்கப் பயன்படுத்திக் கொள்ளலாம் அல்லது ஒரு பகுதி முதலில் சொன்னவாறும் மீதிப் பகுதியை இப்பொழுது சொன்னவாறும் பயன்படுத்திக் கொள்ளலாம்.

பங்கு முனைமக் கணக்கையும் முதல் மீட்புக் காப்புக் கணக்கையும் வெளியிடாதிருக்கும் பங்குகளை முழுவதும் செலுத்தப் பெற்ற மேலூதியப் பங்குகளாக (Bonus Shares) உறுப்பினர்கட்கு வழங்க மட்டுமே பயன்படுத்திக் கொள்ளலாம்.

இம் முறையினைத் தொடர்ந்து கம்பெனி நிறைவேற்றிய தீர்மானத்திற்கு இயக்குநரவை செயல் வடிவம் கொடுக்கலாம்.

# பங்கு முதலையுடைய கம்பெனி பதிவாளரிடத்தில் தாக்கல் செய்யவேண்டிய ஆண்டறிக்கைப் படிவமும், அதன் விவரமும்.

## பகுதி - 1.

### விவரம்.

1. கம்பெனிப் பதிவலுவலகத்தின் முகவரி;

2. கம்பெனிச் சட்டத்தின் கீழ்க் கம்பெனியின் உறுப்பினர் பதிவேட்டின் அல்லது கடனீட்டுப் பத்திர தாரர் பதிவேட்டின் ஒரு பகுதி வேறு மாநிலத்திலேயோ அல்லது வெளிநாட்டிலேயோ வைத்திருக்கப் படுமாயின் அம் மாநிலத்தின் பெயரும் அல்லது அந் நாட்டின் பெயரும் அப் பதிவேடு வைத்திருக்கப் படும் இடத்தின் முகவரியும்;

3. ரொக்கத்திற்கு வெளியிடப்பட்டப் பங்குகள், மேலூதியப் பங்குகள், ரொக்கத்திற்கு அல்லாமல் முழுத் தொகையும் செலுத்தப்பட்டதாக அல்லது பகுதி செலுத்தப்பட்டதாக வெளியிடப்பட்ட மேலூதியப் பங்குகளல்லாத பிற பங்குகள் பற்றிய கீழ்க்கண்ட விவரங்கள் :

   (அ) கம்பெனியின் பெயரளவு பங்குமுதலும், எத் துணைப் பங்குகளாக அது பிரிக்கப்பட்டிருக் கிறதென்ற விவரமும்;

   (ஆ) கம்பெனி தொடக்கத்திலிருந்து கம்பெனியின் கடந்த ஆண்டுக் கூட்டம் வரை எடுத்துக் கொண்ட பங்குகளின் எண்ணிக்கை;

   (இ) மேற்சொல்லப்பட்ட நாள்வரை ஒவ்வொரு பங்கின் மீதும் அழைக்கப்பட்ட (கோரப் பட்ட) தொகை;

   (ஈ) அந் நாள்வரை மொத்தம் பெறப்பட்ட அழைப்புத் தொகை;

   (உ) மேற்கண்ட நாள்வரை செலுத்தப்பெறாத அழைப்புத் தொகை;

(ஊ) பங்குகள் மீதோ, கடனீட்டுப் பத்திரங்கள் மீதோ அந் நாள்வரை செலுத்தப்பெற்று கழிவுத் தொகை;

(எ) தள்ளுபடியில் வெளியிடப்பட்ட பங்குகள் மீதான தள்ளுபடித் தொகை அல்லது மேற் சொல்லப்பட்ட நாள்வரை நீக்கப்படாத தள்ளுபடித் தொகை;

(ஏ) சென்ற ஆண்டிற்குரிய ஆண்டுக் கூட்ட நாளி லிருந்து கடனீட்டுப் பத்திரங்களின் மீது அளிக்கப்பட்ட மொத்தத் தள்ளுபடித் தொகை;

(ஐ) ஆ-வில் கூறப்பட்ட நாள்வரை பறிமுதல் செய்யப்பட்டப் பங்குகளின் எண்ணிக்கை;

(ஒ) ஆ-வில் கூறப்பட்ட நாளில் பங்குரிமைச் சீட்டுகள் நிலுவையிலிருக்கும் பங்குகளின் எண்ணிக்கை, ஏ-யில் கூறப்பட்ட நாளி லிருந்து வழங்கிய பங்குரிமைச் சீட்டுகளும் திரும்பப் பெற்றுக் கொண்டவையும்; ஒவ் வொரு பங்குரிமைச் சீட்டிலும் அடங்கி யுள்ள பங்குரிமை எண்ணிக்கை.

4. 3-வது விதியில் ஆ-வில் குறிப்பிடப்பட்ட நாளில் கம்பெனிச் சட்டத்தின் கீழ்ப் பதிவாளரிடத்தில் பதிவு செய்யப்படவேண்டிய பொறுப்பிணை (Charges), அடைமானம் இவற்றின் வாயிலாக கம்பெனியின் மொத்தக் கடன் பற்றிய விவரங்கள்;

5. (அ) கம்பெனியின் சென்ற ஆண்டுக்கூட்ட நாளி லிருந்து உறுப்பினர்களின் பெயர், முகவரி, தொழில் முதலிய விவரங்களையும், அந் நாளுக்கு முன் உறுப்பினர் எனும் தகுதி யிலிருந்து நீங்கிக் கொண்டவர்களின்பெயர், முகவரி, தொழில் பற்றிய விவரங்களையும் உள்ளடக்கிய ஒரு பட்டியல்;

(ஆ) 3(ஆ)-வில் குறிப்பிடப்பட்ட நாளிலுள்ள உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் வைத்திருக் கும் பங்கின் எண்ணிக்கையையும் 3(ஏ)-யில்

கூறப்பட்ட நாளிலிருந்து தற்போது உறுப்பினர்களாக உள்ளவர்களின் மாற்றிய பங்குகளின் விவரத்தையும் (இது முதல் அறிக்கையாயிருப்பின் கம்பெனி அமைக்கப் பட்ட நாளிலிருந்து மேற்கண்ட விவரங்களைத் தரவேண்டும்) அவ்வாறே அப்பொழுது உறுப்பினர்களாயிருந்து தற்பொழுது உறுப்பினர்களாக இல்லாதவர்கள் மாற்றிய பங்குகளின் விவரங்களையும், பங்கு மாற்றம் பதிவான நாளினையும் உள்ளடக்கும் ஒரு பட்டியல்.

6. கம்பெனியின் கடந்த ஆண்டுக் கூட்டத்தின்பொழுது இயக்குநர்களாக இருப்பவர்கள், அந் நாளில் மேலாளராக, செயலாளராக இருப்பவாகள் குறித்த அத்தகைய எல்லா விவரங்களும்.

## பகுதி - 2.

### படிவம்

கடந்த ஆண்டுக்கூட்ட நாள்........வரை தயாரிக்கப் பட்ட...........கம்பெனியின் ஆண்டறிக்கை.

**1. முகவரி, (கம்பெனியின் பதிவலுவலக முகவரி)**

**2. உறுப்பினர் கடனீட்டுப் பத்திர, வெளிநாட்டுப் பதிவேடு இருக்குமிடம்**

(அ) வெளிநாட்டுப் பதிவேடு வைத்திருக்கப் பெறும் பிற மாநிலத்தின் பெயர் அல்லது வெளிநாட்டின் பெயர்;

(ஆ) வெளிநாட்டுப் பதிவேடு வைத்திருக்கப்படும் பிற மாநிலத்திலுள்ள இடத்தின் முகவரியும் அல்லது அயல் நாட்டிலுள்ள இடத்தின் முகவரியும்.

### 3. பங்கு முதல், கடனீட்டுப் பத்திரங்களின் சாரம் (Summary)

(அ) பெயரளவுப் பங்கு முதல்.

ரூ.........பங்கு முதல் கீழ்க்கண்டவாறு பிரிக்கப்பட்டிருக்கிறது (எண்ணிக்கையையும், வகையையும் குறிப்பிடுக).

ரூ............வீதம்............பங்குகள்

ரூ............வீதம்............பங்குகள்

(ஆ) வெளியிடப்பட்ட பங்குகளும் கடனீட்டுப் பத்திரங்களும்.

| | எண்ணிக்கை | வகை | ...... |
|---|---|---|---|
| கடந்த ஆண்டுக் கூட்டம் வரை ஒப்புக்கொள்ளப்பட்ட ஒவ்வொரு வகையிலும் உள்ள பங்குகளின் எண்ணிக்கை .. | — | — | பங்குகள் |
| | — | — | பங்குகள் |
| | — | — | பங்குகள் |
| ரொக்கத்திற்காக ஒவ்வொரு வகையிலும் வெளியிடப்பட்ட பங்குகளின் எண்ணிக்கை .. | — | — | பங்குகள் |
| | — | — | பங்குகள் |
| | — | | பங்குகள் |
| ரொச்கத்திற்கு அல்லாமல் வேறு மறுபயனுக்காக முழுத் தொகையும் செலுத்தப்பட்டதாக வெளியிடப்பட்ட பங்குகளின் எண்ணிக்கை .. | — | — | பங்குகள் |
| | — | — | பங்குகள் |
| | — | — | பங்குகள் |
| ரொக்கத்திற்காக அல்லாமல் வேறு மறுபயனுக்காகப் பகுதி. | | | |

| | |
|---|---|
| | எண்ணிக்கை வகை ...... |
| செலுத்தப்பட்டதாக வெளியிடப்பட்ட பங்குகளின் எண்ணிக்கையும், ஒவ்வொரு பங்கும் செலுத்தப்பட்டதாகக் கொள்ளப்பட்டத் தொகையும் .. | ஒவ்வொரு பங்கு மீதும்.. ரூ........வரை செலுத்தப்பட்டதாக வெளியிடப்பட்டது. |
| | — — பங்குகள் |
| | ஒவ்வொரு பங்கு மீதும்.... ரூ........வரை செலுத்தப்பட்டதாக வெளியிடப்பட்டது. |
| | — — பங்குகள் |
| | ஒவ்வொரு பங்கு மீதும்.... ரூ........வரை செலுத்தப் பட்டதாக வெளியிடப்பட்டது. |
| | — — பங்குகள் |
| தள்ளுபடியில் வெளியிடப்பட்ட ஒவ்வொரு வகைப் பங்குகளின் எண்ணிக்கை .. | — — பங்குகள் |
| | — பங்குகள் |
| | — — பங்குகள் |
| கடந்த ஆண்டுக்கூட்ட நாளில் நீக்கப்படாதிருந்த பங்கு வெளியீட்டின் தள்ளுபடித் தொகை ரூ. | |
| ஒவ்வொரு வகைப் பங்குமீதும் பெற்ற அழைப்புத் தொகை. | |
| ஒவ்வொரு பங்கு மீதும் ரூ.....வீதம் | — — பங்குகள் |
| ஒவ்வொரு பங்கு மீதும் ரூ.....வீதம் | — — பங்குகள் |
| ஒவ்வொரு பங்கு மீதும் ரூ.....வீதம் | — — பங்குகள் |

எண்ணிக்கை வகை ......

விண்ணப்பத் தொகை, ஒதுக்குத் தொகை உட்பட மொத் தம் பெற்ற அழைப்புத் தொகையும் ஒறுப்பிழப்பு செய்யப்பட்ட பங்குகள்மீது பெற்ற தொகையும். ரூ.............

ஒவ்வொரு வகையிலும் வெளி யிடப்பட்ட பங்குகளின்மீது ரொக்கத்திற்கன்றி வேறு மறுபயனுக்காக முழுவதும் செலுத்தப்பட்டதாகக் கொள்ளப்படும் மொத்தத் தொகை } ரூ. { — — பங்குகள்<br>— — பங்குகள்<br>— — பங்குகள்

ஒவ்வொரு வகையிலும் வெளி யிடப்பட்ட பங்குகளில் ரொக்கத்திற்கன்றி வேறு மறுபயனுக்காகப் பகுதி செலுத்தப்பட்டதாகக் கொள்ளப்படும் மொத்தத் தொகை } ரூ. { — — பங்குகள்<br>— — பங்குகள்<br>— — பங்குகள்

மொத்தம் செலுத்தப் பெரு திருக்கும் அழைப்புத் தொகை. ரூ. ..........

எப் பங்குகள் மீதாவது அல்லது கடனீட்டுப் பத்திரங்கள் மீதாவது மொத்தம் செலுத்தப்பட்ட கழிவுத் தொகை ரூ. ..........

தாக்கல் செய்யப்பட்ட கடந்த ஆண்டிற்குரிய கடந்த கூட்ட நாளிலிருந்து எக் கடனீட்டுப் பத்திரங்கள் மீதாவது அளிக் கப்பட்ட மொத்தத் தள்ளுபடித் தொகை ரூ. ............

| | | | |
|---|---|---|---|
| | எண்ணிக்கை | வகை | ...... |
| ஒவ்வொரு வகையிலும் ஒறுப் பிழப்பு (பறிமுதல்) செய்யப் பட்ட பங்குகளின் மொத்த எண்ணிக்கை .. | — | — | பங்குகள் |
| | — | — | பங்குகள் |
| | — | — | பங்குகள் |
| ஒறுப்பிழப்பு செய்யப்பட்ட பங்குகள் மீது செலுத்தப் பட்ட மொத்தத் தொகை | ரூ........... | | |
| கொணர்பவர் பங்கோலைக் காகத் தரவேண்டிய பங்கு களின் (share warrants to bearer) மொத்தத் தொகை | ரூ........... | | |
| தாக்கல் செய்யப்பட்ட கடந்த ஆண்டிற்குரிய கூட்ட நாளி லிருந்து வெளியிடப்பட்ட கொணர்பவர் பங்கோலை களின் மொத்தத் தொகை யும், திரும்பப் பெற்றுக் கொண்ட மொத்தத் தொகையும் | வெளியிடப்பட்டது | | ரூ..... |
| | திரும்பப் பெற்றுக் கொண்டது | | ரூ..... |
| கொணர்பவர் பங்கோலையில் அடங்கியுள்ள பங்குகளின் எண்ணிக்கை (பலவகைப் பங்கோலைகளாயின் ஒவ் வொரு வகையின் விவரங் களும்) | ...................... | | |

**4. கடன் பற்றிய விவரங்கள்**

| | |
|---|---|
| 1956 கம்பெனிச் சட்டத்தின் கீழ்ப் பதிவாளரிடத்தில் பதிவு செய்யவேண்டிய பொருட்பிணை, அடை மானம் பற்றிய கம்பெனி யின் மொத்தக் கடன் தொகை | ரூ........... |

**5. கடந்தகால, தற்பொழுதுள்ள உறுப்பினர்கள் பட்டியல்**

....ஆண்டுப் பொதுக்கூட்டம் நடைபெறும் நாளில், அதாவது, ....ஆம் ஆண்டு....திங்கள் ....ஆம் நாளில், கம்பெனியில் பங்குகளையோ பங்குக் கோவையையோ வைத்திருப்போரின் பட்டியலும், சென்ற ஆண்டுக் கூட்டம் நடைபெற்ற அதாவது....ஆம் ஆண்டு....திங்கள்....ஆம் நாளிற்குப் பின் அல்லது இது முதல் அறிக்கையாயிருப்பின், கம்பெனி அமைப்பிற்றுப்பின் எப்பொழுதாவது பங்குகளையோ, பங்குக் கோவையையோ வைத்திருந்தவர்களின் பட்டியல்.

| விளக்கங்களையுடைய பதிவேட்டின் பக்க எண். | தந்தையின்/கணவனின் பெயர், முகவரி, தொழில் பிற விவரங்கள் | பங்குகளின் கணக்கு | | | | குறிப்பு |
|---|---|---|---|---|---|---|
| | | ஆண்டுப் பொதுக்கூட்ட நாளில் உறுப்பினர்கள் வைத்திருந்த பங்குகளின் எண்ணிக்கை | சென்ற ஆண்டுப் பொதுக்கூட்ட நாளிலிருந்து அல்லது இது முதல் அறிக்கையாயின் கம்பெனி அமைக்கப் பெற்ற நாளிலிருந்து (அ) இப்பொழுதும் உறுப்பினர்களாக உள்ளவர்களாலும் (ஆ) இப்பொழுது உறுப்பினர்களாயில்லாதோராலும் மாற்றப்பட்டப் பங்குகள் பற்றிய விவரங்கள். | | | |
| | | | எண்ணிக்கை | மாற்றம் பதிவு செய்யப்பட்ட நாள். | | |
| | | | | (அ) | (ஆ) | |

ஒவ்வொருவரும் வைத்திருக்கும் மொத்தப் பங்குகளின் எண்ணிக்கையைக் கொடுக்கவேண்டும். எடுத்துக்கொண்ட பங்குமுதல், கடனீட்டுப் பத்திரங்கள் பற்றிய அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ள பங்கு, கடனீட்டுப் பத்திரங்கள் எண்ணிக்கையுடன் இங்கு குறிப்பிடப்படும் மொத்த பங்கு, கடனீட்டுப் பத்திரங்கள் எண்ணிக்கையின் கூட்டல் தொகை சரியாக இருக்கவேண்டும்.

பங்குகள் பலவகையாக இருப்பின், ஒவ்வொரு வகையிலும் உறுப்பினர்கள் வைத்திருக்கும் பங்கு எண்ணிக்கையை அல்லது ஒவ்வொரு வகைப் பங்கிலும் ஏற்பட்ட மாற்றத்தை உணர்த்தும் முறையில் பத்திகள் பிரித்துப் பதியவேண்டும். பங்குகள் சரக்கு முதலாக மாற்றப்பட்டிருப்பின், ஒவ்வொரு உறுப்பினரும் வைத்துள்ள சரக்கு முதல் தொகையை இங்குக் குறிப்பிடவேண்டும்.

ஒவ்வொரு மாற்றம் பதிவான நாளையும், எவ்வளவு பங்குகள் ஒவ்வொரு நாளிலும் மாற்றப்பட்டனவென்ற விவரமும் கொடுக்கப்பட வேண்டும். பங்கு மாற்றுநர் பெயர் எதிரில் இவ் விவரங்களைக் குறிப்பிடவேண்டும்; பங்கு மாற்றப் பெறுநரின்எதிரில் இவற்றைக் குறிப்பிடுதல் தவறு. ஆயினும், மாற்றப் பெறுநரின்பெயரை, மாற்றம் பற்றிய விவரப் பத்திக்கு எதிரில், குறிப்புப் பத்தியின்கீழ்க் குறிப்பிடலாம்.

**குறிப்புகள்**

(1) ஆண்டுக் கூட்ட நாளிலுள்ள உறுப்பினர்கள், கடந்த கால உறுப்பினர்கள் பற்றிய முழு விவரங்களையும் அவர்கள் வைத்திருந்த பங்குகள், சரக்கு முதல், அவைகளின் மாற்றம் முதலிய விவரங்களையும் முன் தாக்கல் செய்த இரு ஆண்டறிக்கைகளில் ஒன்று உள்ளடக்கியிருக்குமாயின், இப்பொழுது தாக்கல் செய்யப்படும் ஆண்டறிக்கையில் அந் நாளுக்குப் பின் விலகிக் கொண்ட அல்லது சேர்ந்துகொண்ட உறுப்பினர்கள் பற்றிய விவரங்களையும், பங்கு மாற்றம் அல்லது சரக்கு முதலின் மாற்றம் பற்றிய விவரங்களையும் மட்டில் கொடுத்தால்போதும்.

(2) உறுப்பினர் பட்டியலிலுள்ள பெயர்கள், அகர வரிசைப் படி எழுதப்படவில்லையெனில், ஒருவரின் பெயரை எளிதில் உணரும் வண்ணம் உறுப்பினர் பெயர் அட்டவணை ஒன்றினையும் தயாரித்து அத்துடன் வைக்கவேண்டும்.

6. இயக்குநர்கள், மேலாண்மை—முகவர், செயலர்—கருவூலர், மேலாளர், செயலர் பற்றிய விவரங்கள் :

(அ) ஆண்டுப் பொதுக்கூட்ட நாளில், அதாவது........ஆம் நாளில், கம்பெனியின் இயக்குநர் பற்றிய விவரங்கள் :

| தற்போழுதைய பெயர் அல்லது பெயர்கள் தந்தை பெயர் அல்லது கணவனின் பெயர். | பழைய பெயர் ஏதேனும் இருப்பின் அப் பெயர் அல்லது பெயர்கள், கூடுதல் பெயர். | தேசிய இனம் | வழக்கமான வீட்டு முகவரி | வியாபாரம், தொழில், வேறு கம்பெனிகளில் வகிக்கும் இயக்குநர் பதவி. மேலாண்மை—முகவர் பதவி, செயலர்-பொருளர் பதவி, மேலாளர் பதவி, செயலர் பதவி பற்றிய விவரங்கள் | பிறந்த நாள். |
|---|---|---|---|---|---|

(ஆ) மேற்குறிப்பிட்ட நாளில் மேலாண்மை முகவராக அல்லது செயலர்—கருவூலராக இருப்பவர்கள் பற்றிய விவரங்கள்.

| பெயர் (தனி நபராயிருப்பின், தற்போழ்தைய பெயர்கள், கூடுதல் பெயர். கம்பெனியாயிருப்பின் அல்லது கூட்டு நிறுவனமாயிருப்பின் கம்பெனியின் பெயர் அல்லது கூட்டு நிறுவனத்தின் பெயர்). | பழைய பெயர் ஏதேனும் இருப்பின் அப் பெயர் அல்லது பெயர்கள், கூடுதல் பெயர். | வழக்கமான வீட்டு முகவரி (கம்பெனியாகவோ அல்லது கூட்டு நிறுவனமாகவோ இருப்பின், பதிவலுவலகம் அல்லது முக்கிய அலுவலகம்.) | வேறு கம்பெனிகள் வகிக்கும் மேலாண்மை—முகவர் பதவி, செயலாளர் பொருளர் பதவி, இயக்குநர் பதவி, மேலாளர் பதவி, செயலர் பதவி பற்றிய விவரங்கள் | நியமன நாள் | விலகிய நாள் |
|---|---|---|---|---|---|

(இ) மேற்குறிப்பிட்ட நாளில் கம்பெனியின் மேலாளராக / செயலாளராக இருப்பவர்கள் பற்றிய விவரங்கள் :

| தற்போழ்தைய பெயர், அல்லது பெயர்கள், கூடுதல் பெயர். | பழைய பெயர் (இருப்பின்) அல்லது பெயர்கள், கூடுதல் பெயர். | தேசிய இனம் | வழக்கமான வீட்டு முகவரி | வேறு மேலாளர் பதவி, செயலர் பதவி, இயக்குநர் பதவி, மேலாண்மை முகவர் பதவி, செயலர்—பொருளர் பதவி பற்றிய விவரங்கள். | நியமன நாள் | விலகிய நாள் |
|---|---|---|---|---|---|---|
| | | | | | | |

இயக்குநர்............................(கையொப்பம்)
இயக்குநர்............................( ,, )
மேலாண்மை — முகவர்..................( ,, )
செயலர்—பொருளர்.....................( ,, )
மேலாளர்.............................( ,, )
செயலர்..............................( ,, )

**ஆண்டறிக்கையுடன் இணைத்து அனுப்பவேண்டிய சான்றிதழ்களும், பிற ஆவணங்களும்:**

இயக்குநர், மேலாண்மை—முகவர் / செயலர்—கருவூலர், மேலாளர் / செயலர் அல்லது தனிக் கம்பெனியாயின் இரு இயக்குநர்கள் தரவேண்டிய சான்றிதழ்.

கம்பெனி அமையப்பெற்ற நாளிலிருந்து அல்லது சென்ற முறை ஆண்டறிக்கைத் தாக்கல் செய்யப்பட்ட ஆண்டுக்கூட்ட நாளிலிருந்து தனது பங்குகளை அல்லது கடனீட்டுப் பத்திரங்களை வாங்குமாறு கோரி பொது மக்களிடம் அழைப்பு விடுக்கவில்லையென்று நாங்கள் சான்றளிக்கிறோம்.

| | |
|---|---|
| இயக்குநர் | ....கையொப்பம் |
| இயக்குநர் | .... ,, |
| மேலாண்மை-முகவர்/ | |
| செயலர்-கருவூலர் | .... ,, |
| மேலாளர்/ செயலர் | .... ,, |

**கம்பெனியின் உறுப்பினர்கள் 50 - க்கு மிகுமாயின் மேலும் கொடுக்க வேண்டிய சான்றிதழ்.**

*50-க்கும் கூடுதலாக இருக்கும் உறுப்பினர்கள், 1956 கம்பெனிச் சட்டம் 3 (iii) (b) பிரிவின்படி 50-ஐக் கணக்கிடுவதில் சேர்த்துக்கொள்ள வேண்டுவதில்லையெனக் கூறப்பட்டோர் என்று நாங்கள் சான்றளிக்கிறோம்.*

| | |
|---|---|
| இயக்குநர் | ....கையொப்பம் |
| இயக்குநர் | .... ,, |
| மேலாண்மை-முகவர்/ | |
| செயலர்-கருவூலர் | .... ,, |
| மேலாளர்/ செயலர் | .... ,, |

**கணக்குகளின் சான்றிதழ்ப் படிகள்**

இவ் வாண்டறிக்கைக்குரிய காலத்தில் கம்பெனியின் ஆண்டுப் பொதுக்கூட்டத்தின் முன் வைக்கப்பட்ட இருப்புநிலைக் குறிப்பின் உண்மை நகலையும், தணிக்கை அறிக்கையின் நகல் ஒன்றினையும், இருப்புநிலைக் குறிப்புடன் இணைக்கப்பட்டுள்ள இயக்குநர்கள் அறிக்கையையும் இயக்குநரும் அவருடன் மேலாண்மை-முகவர், செயலர்-பொருளர், செயலர் / மேலாளரும் எழுத்துமூலமாகச் சான்றளித்து இவ் வாண்டறிக்கையுடன் இணைக்கவேண்டும். மேற்குறிப்பிட்ட இருப்புநிலைக் குறிப்போ அல்லது சட்டப்படி இணைக்கவேண்டிய ஆவணமோ ஆங்கிலத்தில் அல்லாமல் பிற மொழிகளில் இருப்பின், ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்ட இருப்பு நிலைக் குறிப்பையும் அல்லது ஆவணங்களையும் அவை சரியான மொழி பெயர்ப்புதான் என்ற சான்றுடன் இணைக்க வேண்டும்.

## கணக்கேடுகள்
## (Books of Account)

கம்பெனிச் சட்டத்தின் 209-வது பிரிவின்படி கீழ்க்கண்டவை பற்றிய உண்மையானதும், சரியானதுமான நிலையைக் காட்டுமாறு ஏடுகளை ஒவ்வொரு கம்பெனியும் வைத்திருக்கவேண்டும்.

கம்பெனிக் கணக்குகள் கீழ்க்கண்ட விவரங்களை வெளிக்காட்ட வேண்டும்.

(1) கம்பெனி பெற்றத் தொகையும், செலவழித்தத் தொகையும்;

(2) எந்தக் காரணங்களுக்காகப் பணம் பெறப்பட்டது, செலுத்தப்பட்டது என்ற விவரம்;

(3) கம்பெனி கொள்முதல் செய்த, விற்பனை செய்த சரக்கு விவரம்;

(4) கம்பெனியின் சொத்துகளும், பொறுப்புகளும்;

(5) உற்பத்தித் துறையிலோ சுரங்கத் துறையிலோ ஈடுபட்டிருக்கும் கம்பெனியாயின், பயன்படுத்திய பொருள்கள், உழைப்பு.

கம்பெனியின் நிலையை உண்மையாகவும் சரியாகவும் காட்டுவதற்கும், அந் நடவடிக்கைகளை விளக்குவதற்கும் தேவையான ஏடுகள் அனைத்தையும் ஒவ்வொரு கம்பெனியும் வைத்திருக்க வேண்டும். அதாவது, ஒவ்வொரு கம்பெனியும் இரட்டைப் பதிவு முறையில் கணக்கேடுகள் அனைத்தையும் வைத்திருக்க வேண்டும் என்பதை உணரலாம். அக் கணக்கேடுகள் குறைந்தது எட்டு ஆண்டுகட்காவது காப்பாற்றப்பட வேண்டும்.

இவ் வேடுகளை இயக்குநர்களும் பதிவாளர்களும் மைய அரசின் அதிகாரம் பெற்ற அலுவலர்களும் பார்வையிட உரிமையுண்டு. கணக்கேடுகள் அனைத்தையும் கம்பெனியின் பதிவலுவலகத்தில் வைத்திருக்கவேண்டும். கணக்கேடுகள் அனைத்தையுமோ, சிலவற்றையோ கம்பெனியின் பதிவலலுவலகத்திலன்றிப் பிற இடங்களில் (இந்தியாவிற்குள்) வைத்திருக்க இயக்குநர்கள் முடிவு செய்வார்களேயானால், அவ்வாறு முடிவு செய்யப்பட்ட ஏழு நாள்களுக்குள் அவ் வேடுகள் வைத்திருக்கப்படுமிடம் பற்றிய முழுத் தகவல்களையும் பதிவாளரிடத்தில் தெரிவிக்கவேண்டும். இந்தியாவிற்குள்ளேயோ, அயல் நாடுகளிலேயோ இருக்கின்ற கிளையின் கணக்குகளை அங்கங்கே வைத்திருக்கலாம். ஆனால், குறைந்தது ஒவ்வொரு காலாண்டிற்கும் கிளைகள் பதியும் நடவடிக்கைகளின் அறிக்கைகளை அனுப்பவேண்டும்.

**விண்ணப்பம் பெறுதல்** (Receiving applications)

பொதுக் கம்பெனியின் தகவல் அறிக்கையை வெளியிட்டதன் விளைவாக அக் கம்பெனியில் பங்கு வாங்க விரும்புபவர் விண்ணப்

பங்களை அனுப்புகின்றனர். எத்துணைப் பங்குகள் பொது மக்களுக்கு வெளியிடப்பட்டிருக்கின்றன (வெளியிட்ட முதல்) என்பதும், குறைந்தளவு பங்கெடுப்பு என்பது எத்துணைப் பங்குகள் என்பதும் தகவல் அறிக்கையில் கொடுக்கப்பட்டிருக்கும். தகவல் அறிக்கையுடன் கீழ்க்கண்டவகையில் விண்ணப்பப் படிவம் ஒன்று இணைக்கப்பட்டிருக்கும். அதன் மாதிரி :

---

**பாண்டியன் நூல் கம்பெனி லிமிட்டெட்,**

---

70, வடக்கு மாசி வீதி,
மதுரை—625001.

எண்
. . . . . .
இயக்குநர்கள்
60, அண்ணாசாலை, சென்னை—600002.

ஐயா,

மேற்கண்ட கம்பெனியின் பேரில் பங்கு ஒன்றுக்கு ரூ. . . . . . . வீதம் . . . . . . நேர்மை / முன்னுரிமை பங்குகட்கு ரூ. . . . . . . . . கம்பெனியின் வங்கியில் செலுத்தியிருக்கிறேன். கம்பெனியின் . . . . . . . . . . நாளிடப்பட்ட தகவல் அறிக்கையின்படி இப் பங்குகளை எனக்கு ஒதுக்குமாறு நான் வேண்டிக்கொள்கிறேன். அப் பங்குகளை அல்லது அதற்கும் குறைவான பங்குகளை நான் ஏற்றுக்கொள்கிறேன். தகவல் அறிக்கையில் கண்டுள்ளவாறு மேலும் தவணைத் தொகைகளைச் செலுத்தவும் ஏற்றுக்கொள்கிறேன். இப் பங்குகளை உடையவராக என்னைப் பதிவு செய்துகொள்ளுமாறு நான் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

பெயர் . . . . . . . . . . நாள் . . . . . . . . . .
முகவரி . . . . . . . . . . கையொப்பம் . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

**வங்கியின் இரசீது**

எண் . . . . . . . . . . ஆம் ஆண்டு . . . . . . . . திங்கள் . . . . . . . ஆம் நாளில் . . . . . . . . . . . . . . இடமிருந்து விண்

ணப்பத் தொகையாக ஒவ்வொரு பங்கு மீதும் ரூ............ ஆக .... நேர்மை/முன்னுரிமை பங்குகட்கு ரூ. .......... விண்ணப்பத்தொகையாக மேற்கண்ட கம்பெனிக்காக பெற்றுக் கொள்ளப்பட்டது.

நாள்............ கடலூர் வங்கிக் கம்பெனிக்காக.

காசாளார்
(Cashier)

---

இந்த இரசீதை வங்கியிடமிருந்து பெற்றவுடன் விண்ணப்ப தாரர் இதனைப் பத்திரமாக வைத்திருக்கவேண்டும். பின்னர் இதனைக் கொடுத்துப் பங்குச் சான்றிதழாக மாற்றிக்கொள்ள வேண்டும்.

இவ்வாறு விண்ணப்ப மடலுடன், விண்ணப்பங்களுடன் செலுத்தவேண்டிய வைப்புத் தொகையும் கம்பெனியின் வங்கிக்கு அனுப்பப்படுகிறது. கம்பெனியின் வங்கி இவைகளைப் பெற்றுக் கொண்டவுடன் தனியொரு வங்கிக் கணக்கு நகல் ஏட்டில் இவற்றைப் பதிந்து, பெற்ற விண்ணப்பங்களுடன் தனது கணக்கு நகல் ஏட்டையும் கம்பெனியின் அலுவலருக்கு அனுப்பும். ஒவ்வொரு விண்ணப்பத்திலும் வரிசை எண்ணுடன், நாள், விண்ணப்பதாரரின் பெயர், முகவரி, தொழில், விண்ணப்பிக்கப் பெற்ற பங்குகளின் எண்ணிக்கை, இவற்றிற்கு அனுப்பப்பட்ட விண்ணப்ப வைப்புத் தொகை முதலியவை அனைத்தையும் கம் பெனி தனது விண்ணப்ப ஒதுக்கேட்டில் பதியும். இதன் மாதிரி பின்னர் கொடுக்கப்பட்டிருக்கிறது. இவை பதியப் பெற்றவுடன் வரிசைப்படி இவ் விண்ணப்பங்கள் அடுக்கப்பெற்றக் கோப்புகளில் (files) வைக்கப்பட்டிருக்கின்றன.

விண்ணப்பத்தைப் பெற்றவுடன் எவ்வளவு தொகை பெறப்பட்டதோ, அதற்கு வங்கிக் கணக்கில் பற்றும், பங்கு விண்ணப்பக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். இது எத் துணைப் பங்குகட்கான விண்ணப்பங்கள் பெற்றிருப்பினும், அது பற்றிக் கவலையில்லை. பெற்ற முழுத் தொகைக்கும், வங்கிக் கணக்கில் பற்றும், பங்கு விண்ணப்பக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

ஆனல், கம்பெனிகள் இத்தகைய பதிவினைச் செய்வதில்லை. ரொக்கப் பதிவுகள் அனைத்தையும் நேரிடையாக ரொக்க ஏட்டி

லேயே எழுதிவிடுகின்றன. வங்கியிலிருந்து அவ்வப்பொழுது பெறும் வங்கிக் கணக்கு நகல் ஏட்டின் துணை கொண்டு விண்ணப்பங்கள் மீது பெறும் வைப்புத் தொகைகளை ரொக்க ஏட்டின் பற்றுப் பகுதியில் வங்கிப் பத்தியின்கீழ், கீழ்க்கண்டவாறு பதியும்.

**ரொக்க ஏடு**

| பற்று | | வங்கி | வரவு |
|---|---|---|---|
| | ரூ. | | |
| பங்கு விண்ணப்பக் கணக்கு (பங்கு ஒன்றுக்கு ரூ... வீதம் ........பங்குகள் மீது பெற்ற விண்ணப்பத் தொகை) | .. | | |

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

ரொக்க ஏட்டிலிருந்து பங்கு விண்ணப்பக் கணக்கின் வரவுப் பகுதிக்குப் பின்னர் எடுத்து எழுதப்படுகிறது.

## பங்கு ஒதுக்கீடு
## (Share allotment)

குறுமப் பங்கெடுப்புத் தொகைக்கான (Minimum Subscription) விண்ணப்பங்கள் பெற்றவுடன்தான் இயக்குநர்கள் பங்கொதுக்கத் தொடங்க வேண்டுமென்று முன்னரே கூறியுள்ளோம் அல்லவா? இதைப் பெற்றவுடன், விண்ணப்பதாரர்களிடம் பெற்ற விண்ணப்பப் படிவங்களை ஆய்வதற்காக இயக்குநரவைக் கூட்டத்தின்முன் இவை வைக்கப்படும். இயக்குநரவைக் கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றுவதன் மூலமாகவே பங்குகள் ஒதுக்கப்படுகின்றன. அத் தீர்மானத்தின் முழு விவரங்களையும் இயக்குநரின் நிகழ்ச்சிக் குறிப்பேட்டில் பின்னர்ப் பதியவேண்டும். ஒவ்வொரு முறை பங்கு ஒதுக்கும்பொழுது, விண்ணப்ப—ஒதுக் கேட்டில் இயக்குநர்கள் கையெழுத்திடுவர். இயக்குநர் அவைக் கூட்டத்தில் விண்ணப்பதாரர்கள் கேட்ட பங்குகள் அனைத்தும் ஒதுக்கப்படலாம் அல்லது அவர்கள் வேண்டியதற்கும் குறைவான

பங்குகளை ஒதுக்கலாம் அல்லது அவைகளை மறுத்து விடலாம். விண்ணப்பதாரர் ஏற்றுக்கொண்டால்தான் அவர் கேட்டதற்கும் குறைவான பங்குகளை ஒதுக்கமுடியும். ஆனால், விண்ணப்பப் படிவத்திலேயே இதற்கான நிபந்தனை காணப்படும். பங்கு ஒதுக்கப் பெற்றவர்கட்குப் பங்கு ஒதுக்குக் கடிதங்களையும் பங்கு மறுக்கப்பட்டவர்களுக்கு மறுப்புக் கடிதங்களையும் கம்பெனியின் செயலர் அனுப்புவார். பங்கெடுப்புக் கடிதம் கீழ்க்கண்டவா றிருக்கும்.

**பாண்டியன் நூல் கம்பெனி லிமிட்டெட்**

70, வடக்கு மாசி வீதி,
மதுரை—625001.
மார்ச் 4, 1973.

பெறுநர் :

சேரன்,
50, சோழர் தெரு,
தஞ்சை—613001

ஐயா,

30 நேர்மைப் பங்கு (Equity Shares) கேட்டு, 1973 பிப்ரவரி 22ஆம் நாளிட்ட தங்களின் விண்ணப்பத்தின் பேரில், தங்கட்கு ஒன்று ரூ. 100 மதிப்புள்ள இருபது பங்குகளை மேற்கண்ட கம்பெனியின் இயக்குநரவை ஒதுக்கியுள்ளது என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

| | ரூ. |
|---|---|
| விண்ணப்பத் தொகை (ரூ. 20 வீதம்), ஒதுக்குத் தொகை (ரூ. 20 வீதம்) அதாவது பங்கு ஒன்றுக்கு ரூ. 40 வீதம் 20 நேர்மைப் பங்குகள் மீது தாங்கள் செலுத்த வேண்டியது .. | 800.00 |
| பங்கு ஒன்றுக்கு ரூ. 20 வீதம் 30 பங்குகள் மீது தாங்கள் முன்னரே செலுத்தியுள்ளது .. | 600.00 |
| பங்கு ஒதுக்கீடு குறித்துத் தாங்கள் இன்னும் செலுத்தவேண்டியது .. | 200.00 |

இத் தொகை இனித் தாங்கள் செலுத்துதற்குரியதாகும். கம்பெனியின் வங்கியான மதுரை, தமிழ்நாடு வங்கியில் இத் தொகையை 1973 மார்ச் 30ஆம் நாளன்றே அதற்கு முன்னரோ கீறலிட்ட காசோலைமூலம் (crossed cheque) செலுத்தவேண்டும்.

தங்கள் உண்மையுள்ள,
பல்லவன்
செயலர்.

கம்பெனியின் வங்கிக்குப் பணம் அனுப்பும்பொழுது இம் மடலையும் அனுப்ப வேண்டும்.....................
.................................................

**பாண்டியன் நூல் கம்பெனி லிமிடெட்**
(வங்கியின் இரசீது)

எண் :

1973ஆம் ஆண்டு, மார்ச் திங்கள் இருபத்தைந்தாம் நாளில் திரு. சேரனிடமிருந்து பங்கு ஒதுக்கீட்டுத் தொகை ரூபாய் இருநூறு, பங்கு ஒதுக்குமடல், எண், 112-ல் கண்டுள்ளவாறு பெறப்பட்டது.

| முத்திரை | ................<br>கையொப்பங்கள் |
|---|---|

ரூ. 200

குறிப்பு : இவ் வங்கி இரசீதைக் கொடுத்த பின்னரே பங்குச் சான்றிதழ்கள் வழங்கப்படும்.

.................................................
.................................................

இதனின்றும் பிரித்து வங்கி வைத்திருக்க வேண்டியது.

பாண்டியன் நூல் கம்பெனி லிமிடெட்.

எண் : 112
பெயர் : திரு. சேரன் கணக்கு.
ரூ. 200 பெற்றது.
1973 மார்ச் 25.

கையொப்பம்.

**பங்கு ஒதுக்கீட்டுப் பதிவுகள்**

பங்கு ஒதுக்கிய பிறகு ஒதுக்கப்பட்ட பங்குகளின் மீதான விண்ணப்பத் தொகையளவிற்குப் பங்கு விண்ணப்பக் கணக்கில் பற்றும், பங்கு முதல் கணக்கில் வரவும் வைக்கப்படும். விண்ணப் பிக்கப்பெற்ற பங்குகளின் எண்ணிக்கை வெளியிட்ட பங்குகளின் எண்ணிக்கையைவிடக் கூடுதலாக இருப்பினும், இப்பொழுது பங்கு முதல் கணக்கிற்கு எடுத்துச் செல்லவேண்டிய தொகை, ஒதுக்கப் பட்ட பங்குகளின் மீது பெறப்பட்ட விண்ணப்ப தொகையே யாகும் என்பதை மறத்தல் ஆகாது. பதிவு கீழ்க்கண்டவாறிருக்கும்.

பங்குவிண்ணப்பக் க/கு ப
பங்கு முதல் க/கு
(....நாளில் இயக்குநரவையின் தீர்மானத்தின்படி பங்கு ஒன்றுக்கு ரூ.....வீதம் ........பங்குகள் மீது பெற்ற விண்ணப்பத் தொகையைப் பங்கு முதல் கணக்கிற்கு எடுத்துச் செல்ல).

பின்னர், பங்கு ஒதுக்கீட்டுக் கடிதம் பங்குதாரர்களுக்கு அனுப்பப்படும் என்று மேலே கூறியிருக்கிறோம். அப்பொழுது செய்யும் பதிவு :

பங்கு ஒதுக்கீட்டுக் க/கு ப
பங்கு முதல் க/கு
(....நாளில் இயக்குநர் அவையின் தீர்மானத்தின் படி பங்கு ஒன்றுக்கு ரூ... வீதம் .... பங்குகள் மீது பெற வேண்டிய ஒதுக்கீட்டுத் தொகை)

வேண்டிய விண்ணப்பத்திற்கும் குறைவான பங்குகளை ஒதுக்கியதால் இருக்கும் மிகுதி விண்ணப்பத் தொகையை இப்பொழுது ஆய்வோம். எடுத்துக்காட்டாக, 30 பங்குகள் வேண்டி ரூ. 20 வீதம் விண்ணப்பத் தொகையுடன் விண்ணப்பித்த ஒருவருக்கு 20 பங்குகளே ஒதுக்கப்பட்டதாகக் கொண்டால், இந்த மீதி

யுள்ள 10 பங்குகள் மீதான விண்ணப்பத் தொகை (ரூ. 200) அவர் கணக்கில் மிகுதியாக இருக்கும். இப்பொழுது இதனை அவரிடமிருந்து பெறவேண்டிய பங்கு ஒதுக்குத் தொகைக்குச் சரிக்கட்டிக் கொள்ளலாம். இதற்குப் பங்கு விண்ணப்பக் கணக்கில் பற்றும், பங்கு ஒதுக்குக் கணக்கில் வரவும் வைக்கப்படும். பதிவு கீழ்க்கண்டவாறிருக்கும்.

பங்கு விண்ணப்பக் க/கு ப
பங்கு ஒதுக்கீட்டுக் க/கு
(பங்கு ஒன்றுக்கு ரூ. 20 வீதம். . . . பங்குகள் மீது பெற்ற விண்ணப்பத் தொகை. அதாவது, பகுதியாக ஒதுக்கப்பட்ட விண்ணப்பங்களினுல் கிடைத்த மிகுதித் தொகையைப் பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கிற்கு மாற்ற).

மேற்சொன்ன எடுத்துக்காட்டில் செய்யவேண்டிய பதிவு :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| பங்கு விண்ணப்பக் க/கு | ப | 200—00 | |
| பங்கு ஒதுக்கீட்டுக் க/கு | | | 200—00 |

பங்கு ஒதுக்கீட்டுத் தொகைக்கு மிகுதியாகவுள்ள விண்ணப்பத் தொகையைச் சரிக்கட்டிய பிறகும் தொகை இருக்குமானுல் அதனை முன்கூட்டிப் பெற்ற பங்கழைப்புக் கணக்கிற்கு எடுத்துச் செல்லவேண்டும். ஆனுல், விண்ணப்பதாரர் இதற்கு இசைந்தால் மட்டுமே இப் பதிவைச் செய்யமுடியும். ஆனுல் வழக்கமாக, இதுபோல் சரிக்கட்டுவதற்குத் தகவல் அறிக்கையில் தக்க வழி வகையிருக்கும். அவ்வாறு இல்லையெனில் பங்கு ஒதுக்கீட்டுக்குச் சரிக்கட்டிய பின் மிகுதியாகவுள்ள விண்ணப்பத் தொகையை விண்ணப்பதாரருக்குத் திருப்பித் தரவேண்டும்.

எடுத்துக்காட்டாக, பங்கு ஒன்றின் மீது செலுத்த வேண்டிய விண்ணப்பத் தொகை ரூ. 20 என்றும், பங்கு ஒதுக்கீட்டுத் தொகை ரூ. 30 என்றும் கொள்வோம். செங்குட்டுவன் என்பவர் 20 பங்குகட்கு விண்ணப்பித்துள்ளார் என்றும், ஆனுல் அவருக்கு ஆறு பங்குகளே ஒதுக்கப்பட்டன எனவும் கொள்வோம். செங்குட்டுவன் விண்ணப்பங்களுடன் அனுப்பியிருக்கும் தொகை

மொத்தம் ரூ. 400. ஆனால், இதில் ரூ. 280 அவர் அதிகமாக செலுத்திய தொகையாகும். (ரூ. 20 வீதம் 14 ஒதுக்கப்பெறாத பங்குகள் மீதான விண்ணப்பத் தொகை ரூ. 280), ரூ. 30 வீதம் ஆறு பங்குகட்கான பங்கு ஒதுக்குத் தொகை ரூ. 180. இதனை அவர் மிகுதியாகச் செலுத்திய விண்ணப்பத் தொகையில் சரிக்கட்டிய பிறகும், மிகுதியாக இன்னும் ரூ. 100 இருக்கிறது. இப்பொழுது இம் மிகுதித் தொகையினைப் பங்கழைப்புத் தொகைக்குச் சரிசெய்துகொள்ள வேண்டுமென்றால், கீழ்க்கண்ட வாறு பதிவு செய்யவேண்டும்.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| பங்கு விண்ணப்பக் க/கு | ப | 400—00 | |
| பங்கு முதல் க/கு (6 × ரூ. 20) | | | 120—00 |
| பங்கு ஒதுக்கீட்டுக் க/கு (6 × ரூ. 30) | | | 180—00 |
| முன்கூட்டிப் பெற்ற அழைப்புக் க/கு (மீதித் தொகை) | | | 100—00 |

அவ்வாறின்றிப் பங்கு ஒதுக்கீட்டிற்குச் சரிக்கட்டிய பின் மிகுதியாகவுள்ள தொகையை விண்ணப்பதாரருக்குத் திருப்பித் தரவேண்டுமானால், கீழ்க்கண்டவாறு பதிவு செய்யப்பெறும்.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| பங்கு விண்ணப்பக் க/கு | ப | 400 | |
| பங்கு முதல் க/கு (6 × ரூ. 20) | | | 120—00 |
| பங்கு ஒதுக்கீட்டுக் க/கு (6 × ரூ. 30) | | | 180—00 |
| வங்கிக் க/கு (மீதித் தொகை) | | | 100—00 |

## மறுக்கப்படும் விண்ணப்பங்கள் (Rejected Applications)

பங்கு வேண்டி விண்ணப்பித்திருக்கும் ஒருவருக்குப் பங்கு ஒன்றும் ஒதுக்கப்படவில்லையெனில், அவர் செலுத்தியிருக்கும் முழு விண்ணப்பத் தொகையையும் திருப்பித் தந்துவிடவேண்டும். இதற்கான பதிவு :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| பங்கு விண்ணப்பக் க/கு | ப | | |
| வங்கிக் க/கு | | | |

இவ்வாறு விண்ணப்பத் தொகையாகப் பெற்ற தொகை பங்கு ஒதுக்கீட்டுக்குப் பிறகு பங்கு முதல் கணக்கிற்கும் பகுதியாக ஒதுக்கப்பெற்ற பங்குகள் மீதான மிகுதித் தொகைப் பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கிற்கும், சில வேளைகளில் முன்கூட்டிப் பெற்ற அழைப்புக் கணக்கிற்கும், எடுத்துச் செல்லப்படுகின்றன என்பதை

யும் மறுக்கப்பட்ட விண்ணப்பத் தொகை அனைத்தும் திருப்பித் தரப்படுவதால் வங்கிக் கணக்கில் வரவு வைக்கப்படுகிறதென் பதையும் மறத்தல் கூடாது. இப் பதிவுகள் அனைத்தையும் செய்த பின்னர் பங்கு விண்ணப்பக் கணக்கு இருப்பு ஒன்றையும் காட்டாது.

மறுக்கப்பட்ட பங்குகள்மீதான விண்ணப்பத் தொகையைத் திருப்பி அனுப்பும்பொழுது மறுப்புக் கடிதம் ஒன்றைத் தயாரித்து அந்தகைய விண்ணப்பதாரர்களுக்குச் செயலர் அனுப்ப வேண்டும். அதன் மாதிரி கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

---

**பாண்டியன் நூல் கம்பெனி லிமிட்டெட்**
**பதிவலுவகம்**

வடக்கு மாசி வீதி,
மதுரை—625001,
1973, மார்ச்-15.

பெறுநர் :
இளங்கோ,
77, வள்ளுவர் தெரு,
காராமணிக் குப்பம்—607109

ஐயா,

தங்கள் விண்ணப்பத்தில் வேண்டியுள்ள 50 நேர்மைப் பங்கு களையும் 20 முன்னுரிமைப் பங்குகளையும் இயக்குநரவை ஒதுக்க முடியவில்லை என்பதை மிகவும் வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

தாங்கள் மேல்குறிப்பிட்ட விண்ணப்பத்தின்மீது செலுத்தி யுள்ள ரூ. 1,400-ஐ இப்பொழுது திருப்பியனுப்பும் வகையில் இதனுடன் அதற்கான காசோலை ஒன்றினை இணைத்துள்ளோம். இணைக்கப்பட்ட காசோலையின் கீழுள்ள இரசீதில் கையொப்ப மிட்டுத் தங்களின் வங்கிமூலம் செலுத்திப் பெற்றுக் கொண்டால் மிகவும் நன்றாக இருக்கும்.

காசோலையுடன் இரசீதும் இணைக்கப்பட்டிருப்பதால், தங் களிடமிருந்த தொகை பெற்றதற்கான சான்று எதுவும் வேண்டுவ தில்லை.

தங்கள் உண்மையுள்ள,
முருகன்,
செயலர்.

---

**காசோலை (Cheque)**

எண் : *112233*

மதுரை,
*1974* மார்ச் *15.*

பெறுநர் :

தமிழ்நாடு வங்கி,
மதுரை - *3.*

கீழுள்ள இரசீதில் கையொப்பம் பெற்றவுடன் இளங்கோவுக்கு அல்லது அவர் ஆணை பெற்றவருக்கு ரூபாய் ஆயிரத்து நானூறு மட்டில் செலுத்துக.

ரூ. *1,400.*

பாண்டியன் நூல் கம்பெனிக்காக,

செந்தில், இயக்குநர்

முருகன், செயலர்

---

**இரசீது**

*1974* மார்ச் *20.*

**பாண்டியன் நூல் கம்பெனி (லிமிட்டெட்)** இடமிருந்து, *70* பங்குகட்கான விண்ணப்பத் தொகையாகச் செலுத்தப்பட்ட ரூபாய் ஆயிரத்து நானூற்றைப் பெற்றுக்கொண்டேன்.

ரூ. *1,400.*

கையொப்பம்
நாள்

---

விண்ணப்பங்களுடன் பெற்ற தொகை முழுவதையும் கணக்கு வைப்பதற்காக பங்கு விண்ணப்ப—ஒதுக்கு ஏட்டினை ஒவ்வொரு கம்பெனியும் வைத்திருப்பது வழக்கமென்று முன்னரே

கூறியுள்ளோம். அவ் வேட்டில் விண்ணப்பதாரரின் பெயர்களுடன் அவர்கள் விண்ணப்பித்திருக்கும் பங்கு எண்ணிக்கை, அவர்களிடமிருந்து பெற்ற தொகை, அவர்கட்கு ஒதுக்கீடு செய்த பங்குகளின் எண்ணிக்கை, பங்கு ஒதுக்கல்களில் அவர்கள் செலுத்தவேண்டிய தொகை, பங்கு ஒதுக்கீட்டுத் தொகையைப் பெற்ற நாள், விண்ணப்பதாரருக்குப் பணத்தைத் திருப்பி அனுப்பிய நாள் போன்ற விவரங்கள் அனைத்தும் அவ் வேட்டில் காணப்படும். இதன் மாதிரி கொடுக்கப்பட்டுள்ளது.

## அழைப்புத் தொகையைக் கோருதல் (Making Calls)

பங்கு ஒதுக்கி, உறுப்பினர்களின் பெயர்களை உறுப்பினர் பதிவேட்டில் எழுதிய பிறகு, பங்குகள் மீது செலுத்த வேண்டிய தொகையை இயக்குநர் கோருவதற்கு அழைப்பு (Call) என்று பெயர். கம்பெனியின் செயல்முறை விதிகள் தடுக்காவிட்டால், பங்குத் தொகை மீது செலுத்த வேண்டிய தொகை முழுவதையும் ஒரு தவணையிலோ அல்லது பல தவணைகளிலோ செலுத்துமாறு பங்குநர்களை இயக்குநர்கள் கோரலாம். தவணைத் தொகைகளைச் செலுத்த வேண்டிய நாள்கள் வழக்கமாகத் தகவல் அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கும். அவ்வாறு அதில் குறிப்பிடப்படவில்லையெனில் எப்பொழுது வேண்டுமென்றாலும் அழைப்புத் தொகையைச் செலுத்துமாறு இயக்குநரவை கோரலாம். இவர்களின் தீர்மானத்தை இயக்குநர்களின் நிகழ்ச்சிக் குறிப்பேட்டில் பதிய வேண்டும். அழைப்பைக் கோரி இயக்குநர்கள் தீர்மானம் நிறைவேற்றிய பின்னர், பங்குத் தொகையைச் செலுத்துமாறு உறுப்பினர்கட்குச் செயலர் அழைப்பு அறிவிக்கையை அனுப்புகிறார். அழைப்பு அறிவிக்கையை அனுப்பியவுடன் அழைப்பு ஏட்டில் அனைத்து விவரங்களையும் பதிவது வழக்கம். அழைப்பின் மாதிரி 399-ம் பக்கம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

---

**பாண்டியன் நூல் கம்பெனி லிமிடெட்**

*(அழைப்பு அறிவிக்கை)*

பங்கு ஒன்றுக்கு ரூ.........வீதம் நேர்மைப் பங்குகள் மீதான முதல் அழைப்பு.

இத்துடன் ஒவ்வொரு பங்கிற்கும் ரூ.....வரை செலுத்தப் பெறுகிறது.

எண் :

111. வடக்கு மாசி வீதி,
மதுரை—625001.

பெறுநர் :

ஐயா,

தகவல் அறிக்கையில் கண்டுள்ளபடி இயக்குநரவை இன்று நேர்மைப் பங்குகள் மீது பங்கு ஒன்றுக்கு ரூ......வீதம் முதலாவது அழைப்பைக் கோருகிறது.

கம்பெனியில் தாங்கள் வைத்திருக்கும்....பங்குகள் மீது தாங்கள் செலுத்தவேண்டிய அழைப்புத் தொகை ரூ..... ஆகும். இத் தொகையைக் கம்பெனியின் வங்கியான மதுரை, தமிழ்நாடு வங்கி லிமிட்டெட்டில் ....நாளன்றோ, அதற்கு முன்னரோ செலுத்துமாறு வேண்டிக் கொள்ளப்படுகிறது.

தங்கள் உண்மையுள்ள,
செயலர்.

கம்பெனியின் வங்கியில் பணம் செலுத்தும்போழ்து இப்படிவம் முழுவதையும் அனுப்பவேண்டும்.

---

---

**பாண்டியன் நூல் கம்பெனி லிமிடெட்**

*(வங்கியின் இரசீது)*

எண் :

19....திங்கள்....நாளன்று .................... என்பவரிடமிருந்து பங்கு ஒன்றுக்கு முதலாவது அழைப்புத் தொகையாக ரூ.........வீதம் ...... நேர்மைப் பங்குகள் மீது ரூ.......பெற்றுக் கொள்ளப்பட்டது.

தமிழ்நாடு வங்கி லிமிட்டெட்டுக்காக,
காசாளர்.

ரூ..........

வங்கிலிருந்து பெறும் இந்த இரசீதைப் பின்னர் கொடுத்துப் பங்குச் சான்றிதழ் பெற்றுக் கொள்வதற்காக, இதனைப் பாதுகாத்து வரவேண்டும்.

---

கம்பெனிச் சட்டத்தில் அட்டவணை 'A'-யில் பங்கழைப்புப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ள சில விவரங்களை இப்போது மீண்டும் நினைவுகோருதல் நலம்.

(1) மறு பங்கழைப்புக் கோருவதற்கு முன்னர் குறைந்தது ஒரு திங்களாவது சென்றிருக்க வேண்டும்;

(2) அழைப்புத் தொகையானது பங்கின் முகமதிப்பில் 25 சதவீதத்திற்கு மிகாமல் இருக்க வேண்டும்;

(3) தொகையைச் செலுத்துவதற்குப் பங்குதாரர்களிடம் குறைந்தது 14 நாள்களுக்கு முன்னராவது அறிவிக்கை கொடுக்கவேண்டும்;

(4) ஒரே வகையிலுள்ள அனைத்துப் பங்குகள் மீதும் ஒரே தொகையைச் செலுத்துமாறு இருக்க வேண்டும்.

பங்குநர் ஒருவருக்குக் கம்பெனி உடனடியாகப் பணம் செலுத்த வேண்டியிருப்பின், அத் தொகைக்குப் பங்கழைப்பை

சரிக்கட்டிக் கொள்ளலாம். ஆனால், கம்பெனி கலைக்கப்படும் பொழுது இவ்விதம் சரிக்கட்ட முடியாது.

பங்கு மீது செலுத்தவேண்டிய தொகையைப் பல அழைப்புகளின் மூலமாகப் பெறுவதாயின் அவை முதலாவதழைப்பு என்றும் இரண்டாவதழைப்பு என்றும் இவ்வாறாகக் கூறப்படும். இறுதித் தவணைத் தொகையை இறுதி அழைப்பு என்போம்.

**கணக்குப் பதிவு**

பங்கு ஒதுக்கலின்போழ்து செய்த பதிவுபோன்றேதான் அழைப்பின்போழ்தும் செய்யவேண்டும். அதாவது, அழைப்பில் மொத்தம் வரவேண்டிய தொகைக்கு அழைப்புக் கணக்கில் பற்றும், பங்கு முதல் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். முதலாவது அழைப்புத் தொகை கோரியிருந்தால், முதலாவது அழைப்புக் கணக்கில் பற்றும், பங்கு முதல் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். இரண்டாவது அழைப்புத் தொகையாக இருப்பின், இரண்டாம் அழைப்புக் கணக்கில் பற்றும், பங்கு முதல் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். இவ்வாறே பிற அழைப்புகளின் போழ்தும் செய்யவேண்டும். முதலாவது அழைப்பிற்குத் தொகை பெறும்போழ்து, வங்கிக் கணக்கில் பற்றும், முதலாவது அழைப்புக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும். இரண்டாம் அழைப்புத் தொகைக்குப் பெறும் தொகையினை வங்கிக் கணக்கில் பற்றும், இரண்டாம் அழைப்புக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

**அழைப்பு நிலுவை (Calls in arrear)**

உறுப்பினரிடம் அழைப்புத் தொகையைச் செலுத்தக் கோரியும், சில பங்குநர்கள் தொகையினைச் செலுத்தாது இருக்கலாம். அவ்வாறாயின் எந்த அழைப்புத்தொகை செலுத்தப்படவில்லையோ, அந்த அழைப்புக் கணக்கு பற்றிருப்பைக் காட்டும். அதனை அழைப்பு நிலுவை (Calls in arrear) என்கிறோம். இத் தொகையைத் தனிக் கணக்கிற்கு எடுத்துச் செல்லத் தேவையில்லை. இருப்புநிலைக் குறிப்பில் பங்கு முதல் தொகையிலிருந்து அழைப்பு நிலுவை கழித்துக் காண்பிக்கப்பெறும்.

பொதுவாகக் கம்பெனியின் செயல்முறை விதிகளில் அழைப்புத் தொகை நிலுவை பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கும். அழைப்புத் தொகை செலுத்தாது இருக்கும் பங்குநர்கள் தங்கள் வாக்குரிமையைப் பயன்படுத்த முடியாது. அத்துடன் குறிப்பிட்ட

விகிதத்தில் தங்கள் நிலுவையின் மீது வட்டி செலுத்தவும் கடமைப்பட்டவர். கம்பெனிச் சட்டத்திலுள்ள அட்டவணை 'A'-யிலுள்ள விதிமுறைப்படிச் செலுத்த வேண்டிய நாளிலிருந்து தொகை செலுத்தும் நாள்வரை நிலுவையின் மீது 5 சதவீதம் ஆண்டு வட்டிவீதம் வசூலிக்கலாம். ஆயினும், இவ் வட்டி வசூலிப்பதை விட்டுக் கொடுக்கவோ, குறைவான வட்டியை வசூலிக்கவோ இயக்குநர்களுக்கு அதிகாரம் உண்டு.

கணக்குகளை முடிக்கும் நாளில் மேற்குறிப்பிட்டவாறு அழைப்பு நிலுவையின் மீது பங்குநர்களிடமிருந்து வட்டித் தொகை பெறவேண்டியிருந்தால், அதனையும் கணக்கில் கொண்டு வரவேண்டும். இதற்குப் 'பெறவேண்டிய வட்டிக் கணக்கில்' பற்றும், வட்டிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். பெற வேண்டிய இத்தகைய வட்டி பற்றிய விவரங்கள் அனைத்தையும் அழைப்பு ஏட்டிலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

## முன்கூட்டிச் செலுத்தப்பட்ட அழைப்பு (Calls in Advance)

கம்பெனியின் செயல்முறை விதிகள் இசைவு தருமானால், உறுப்பினர்கள் முன்கூட்டியே அழைப்புத் தொகை செலுத்தின் அதனைக் கம்பெனி பெற்றுக்கொள்ளலாம். எடுத்துக்காட்டாக, கம்பெனி முதலாவது அழைப்புத் தொகையைக் கேட்கும்பொழுது சில உறுப்பினர்கள் முதலாவது அழைப்புத் தொகையுடன் தங்கள் பங்குகள் மீது செலுத்தவேண்டிய மீதித் தொகை அனைத்தையும் செலுத்திவிடக்கூடும். இவ்வாறு பிற அழைப்புத் தொகைகளைக் கேட்கா முன்னரே பங்குநர்கள் செலுத்தும் அழைப்புத் தொகை 'முன்கூட்டிச் செலுத்தப்பட்ட அழைப்புத் தொகை' எனப்படும். இத் தொகையை முன்கூட்டிச் செலுத்தப்பட்ட அழைப்புத் தொகை எனும் கணக்கில் வரவு வைக்கவேண்டும்.

அட்டவணை 'A'-யில் 18-வது விதி முறைப்படி முன்கூட்டிச் செலுத்தப்பெற்ற அழைப்புத் தொகை மீது வட்டியும் கொடுக்கலாம். இயக்குநர்களும் உறுப்பினர்களும் ஒப்புக்கொள்ளும் வட்டி விகிதத்தில் (ஆண்டு வட்டி 6 சதவீதத்திற்கு மிகாமல்) வட்டி தரலாம்.

முன்கூட்டிப் பெற்ற அழைப்புத் தொகையானது கடன் தொகை போன்றதேயாகும். எனவே, கம்பெனி இலாபம் ஈட்டினும் ஈட்டாவிட்டாலும் இதன் மீதான வட்டித் தொகையைச் செலுத்தியே ஆகவேண்டும். இத் தொகை கம்பெனியின் எடுத்துக்கொண்ட முதலின் ஒரு பகுதியாகக் கருதப்படுவதில்லை.

ஆகவே, இதன் மீது இலாபம் வழங்க வேண்டுவதில்லை. கம்பெனி கலைக்கப்படும்போழ்து, பங்குத் தொகைகளைத் திருப்பித் தரு முன்னர் முன்கூட்டிச் செலுத்தப்பெற்ற அழைப்புத் தொகையை முதலில் திருப்பித்தரவேண்டும். ஆனால், கம்பெனி செயல்பட்டுக் கொண்டு வருகின்ற நாள்களில் இத் தொகையைத் திருப்பித்தர முடியாது.

இவ்வாறே முன்கூட்டிச் செலுத்திய அழைப்பின் மீது கூடுதல் வாக்குரிமையும் கிடையாது.

முன்கூட்டிச் செலுத்தப்படும் அழைப்பினை முன்கூட்டிச் செலுத்தப்பட்ட அழைப்புக் கணக்கில் வரவு வைக்கவேண்டு மென்று கூறியிருந்தோம். பின்னர், அவ் வழைப்பினை இபங்குந ரவை கோரும்போழ்து, மாற்றுப் பதிவு ஒன்றைச் செய்து கணக்கைச் சரிக்கட்ட வேண்டும். அதாவது, முன்கூட்டிச்செலுத்தப் பெற்ற அழைப்புக் கணக்கில் பற்றும், குறிப்பிட்ட அழைப்புக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். எடுத்துக்காட்டாக, முதலாவது அழைப்பின்போழ்தே 100 பங்குகளையுடைய ஒருவர் இரண்டாவது அழைப்புத் தொகையான ரூ. 20-ஐயும், இறுதி அழைப்புத் தொகையான ரூ. 30-ஐயும் முன்கூட்டிச் செலுத்தி யிருப்பதாகக் கொண்டால், முதலாவது அழைப்பின்போழ்து முன்கூட்டிச் செலுத்தப்பெற்ற அழைப்புத்தொகைக் கணக்கில் ரூ. 5,000 வரவு வைக்கப்பட்டிருக்கும். இப்பொழுது இபங்குநர் கள் இரண்டாவது அழைப்பினைக் கோரியிருப்பதாகக் கொள் வோம். செய்யவேண்டிய மாற்றுப் பதிவு கீழ் வருமாறிருக்கும்:

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| முன்கூட்டிச் செலுத்தப்பெற்ற அழைப்புக் கணக்கு | ப | 2,000 | |
| இரண்டாவது அழைப்புக் கணக்கு | | | 2,000 |

இப்பொழுது முன்கூட்டிச் செலுத்தப்பெற்ற அழைப்புக் கணக்கு ரூ. 3,000 வரவு இருப்பைக் காட்டும். இது இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகள் எனும் பகுதியில் 'பங்கு முதல்' எனும் தலைப்பின் கீழ்த் தனியே காண்பிக்கப்பெறும். இறுதி அழைப்பு கோரிய வுடன், மேற்கூறியவாறு சரிக்கட்டுப் பதிவு செய்து, இக் கணக்கை முடிக்கலாம்.

இதனை முதல் தொகையுடன் கூட்டிக் காட்டக்கூடாது.

சில கம்பெனிகள் முன்கூட்டிச் செலுத்தப்பெற்ற அழைப்புக் கணக்கின் இருப்பினை இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகள் பகுதியில் 'நடப்புப் பொறுப்புகள்' (Current liabilities) எனும் தலைப்பின் கீழும் காட்டுகின்றன.

## முன்கூட்டிச் செலுத்தப்பெற்ற பங்கழைப்பின் மீது வட்டி

கணக்கேட்டை முடிக்கும்போழ்து முன்கூட்டிச் செலுத்திய அழைப்புத் தொகை மீது வட்டி செலுத்த வேண்டியிருப்பின், அதனைக் கணக்கில் கொண்டுவரவேண்டும். இதற்கு வட்டிக் கணக்கில் பற்றும், கொடுபட வேண்டிய வட்டிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். செலுத்தவேண்டிய வட்டி பற்றிய விவரங்களை அழைப்பு ஏட்டில் (Call Book) காணலாம்.

## மேலே ஆங்காங்கே விளக்கிய பதிவுகளை இப்பொழுது தொகுத்துக் காண்போம்

*(1)* விண்ணப்பத் தொகை பெறும்போழ்து, வங்கிக் கணக்கில் பற்றும், பங்கு விண்ணப்பக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

*(2)* பங்கு ஒதுக்கீடு செய்த பிறகு, ஒதுக்கீடு செய்த பங்குகளின் மீதான விண்ணப்பத் தொகையைப் பங்கு முதல் கணக்கிற்கு மாற்ற, பங்கு விண்ணப்பக் கணக்கில் பற்றும், பங்கு முதல் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

*(3)* பங்கு ஒதுக்கீட்டுத் தொகையைச் செலுத்துமாறு இயக்குநரவை கோரும்பொழுது, பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கில் பற்றும், பங்கு முதல் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

*(4)* விண்ணப்பதாரர்கள் கேட்டதற்கும் குறைவாகப் பங்கு ஒதுக்கப்பட்டிருக்குமாயின், அவர்கள் செலுத்தியுள்ள ஒதுக்கப் படாத விண்ணப்பங்களின் மீதான தொகையைப் பங்கு ஒதுக்குக் கணக்கிற்கு மாற்ற, பங்கு விண்ணப்பக் கணக்கில் பற்றும், பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(5) மறுக்கப்பட்ட விண்ணப்பதாரர்கட்கு விண்ணப்பத் தொகையைத் திருப்பித்தரப் பங்கு விண்ணப்பக் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(6) பங்கு ஒதுக்குத் தொகையைப் பங்குநர்களிடமிருந்து பெறும்பொழுது வங்கிக் கணக்கில் பற்றும், பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(7) அழைப்புத் தொகை கோரும்பொழுது மொத்தம் பெறவேண்டிய அழைப்புத் தொகைக்குக் குறிப்பிட்ட அழைப்புக் கணக்கில் பற்றும், பங்கு முதல் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(8) அழைப்புத் தொகையை உறுப்பினர்களிடமிருந்து பெறும்பொழுது வங்கிக் கணக்கில் பற்றும், குறிப்பிட்ட அழைப்புக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

அழைப்புத் தொகையைச் சில தவணைகளில் பெறுவதாயின் முதலில் கோரப்படும் அழைப்பினை முதலாவது அழைப்பு என்பேரும். அந் நிலையில் அழைப்புக் கணக்கு என்பதற்குப் பதிலாக முதலாவது அழைப்புக் கணக்கு எனக் கூறவேண்டும். அடுத்து வரும் அழைப்பினை இரண்டாம் அழைப்புக் கணக்கு என்று சொல்ல வேண்டும். இதையே 'குறிப்பிட்ட அழைப்புக் கணக்கு' என்பது உணர்த்துகிறது. இரண்டாம் அழைப்பைக் கோரும்பொழுது, இரண்டாம் அழைப்புக் கணக்கில் பற்றும், பங்கு முதல் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். இரண்டாம் அழைப்புத் தொகையை உறுப்பினர்களிடமிருந்து பெறும்பொழுது, வங்கிக் கணக்கில் பற்றும், இரண்டாம் அழைப்புக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

இறுதி அழைப்பினைத் தருமாறு கோரும்பொழுது, இறுதி அழைப்புக் கணக்கில் பற்றும், பங்கு முதல் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். இறுதி அழைப்புத் தொகையை உறுப்பினர்களிடமிருந்து பெறும்பொழுது, வங்கிக் கணக்கில் பற்றும் இறுதி அழைப்புக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(9) பங்குநர்களிடம் அழைப்புத் தொகைகோரும்பொழுது சில பங்குநர்கள் முன்கூட்டியே பங்கின் மீதான முழுத் தொகையையும் செலுத்திவிடுவார்களேயானல், வங்கிக் கணக்கில் பற்றும் முன்கூட்டிச் செலுத்தப்பெற்ற அழைப்புக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(10) பின்னர் அழைப்புத்தொகை கோரும்பொழுது முன் கூட்டிச் செலுத்தப்பெற்ற அழைப்புக் கணக்கிலிருந்து சரிக்கட்ட, முன்கூட்டிச் செலுத்தப்பெற்ற அழைப்புக் கணக்கில் பற்றும், குறிப்பிட்ட அழைப்புக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

சில பங்குநர்கள் அழைப்புத் தொகையைச் செலுத்தத் தவறின் அழைப்புக் கணக்கு அந்தவளவிற்குப் பற்றிருப்பைக் காட்டும். இதனை அழைப்பு நிலுவை என்கிறோம். இதற்கான தனிக் கணக்கு தேவையில்லை. இருப்பினும், சிலர் அழைப்புக் கணக்கை முடிக்க அழைப்பு நிலுவைக் கணக்கு என்பதைத் தொடங்குகின்றனர். அவ்வாறாயின், அழைப்பு நிலுவைக் கணக்கில் அழைப்பில் இன்னும் பெறவேண்டிய தொகைக்குப் பற்றும், குறிப்பிட்ட அழைப்புக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும். இருப்புநிலைக் குறிப்பில் இவ் வழைப்பு நிலுவைக் கணக்கினைப் பங்கு முதலில் கழித்துக் காட்டவேண்டும்.

### எடுத்துக்காட்டு 25

முத்தமிழ்க் கலையரங்கு லிமிடெட் ரூ. 100 மதிப்புள்ள 10,000 பங்குகளை வெளியிட்டது. விண்ணப்பத்துடன் ரூ. 20-ம், பங்கு ஒதுக்கீட்டின்பொழுது ரூ. 25-ம், முதலாவது அழைப்பின் பொழுது ரூ. 30-ம், இறுதி அழைப்பின்பொழுது மீதித் தொகையினையும் செலுத்தவேண்டும். 1,500 பங்குகட்கான இறுதி அழைப்புத் தொகையைத் தவிர அனைத்திற்கும் ரொக்கம் பெறப்பட்டதென்று கொண்டு குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

**விடை :**

குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | வங்கிக் கணக்குப் ப | | 2,00,000 | |
| | பங்கு விண்ணப்பக் கணக்கு | | | 2,00,000 |
| | (ரூ. 20 வீதம் 10,000 பங்குகள் மீதான விண்ணப்பத் தொகை பெற்றது.) | | | |
| | பங்கு வ்ண்ணப்பக் கணக்குப் ப | | 2,00,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 2,00,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு ஒதுக்கப்பட்ட 10,000 பங்குகள் மீது பெற்ற விண்ணப்பத் தொகையை முதல் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| | பங்கு ஒதுக்குக் கணக்குப் ப | | 2,50,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 2,50,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு ஒதுக்கப்பட்ட 10,000 பங்குகள் மீது ஒதுக்கீட்டுத் தொகை பங்கு ஒன்றுக்கு ரூ.25 வீதம் தரவேண்டியது.) | | | |
| | வங்கிக் கணக்கு ப | | 2,50,000 | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு | | | 2,50,000 |
| | (பங்கு ஒதுக்கீட்டில் பெறவேண்டிய தொகையைப் பெற்றது.) | | | |

குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு ப | | 3,00,000 | |
| | பங்கு முதல் கணக்கு (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு ரூ. 30 வீதம் 10,000 பங்குகள் மீது உறுப்பினர்களிடமிருந்து பெறவேண்டிய முதலாவது அழைப்பு.) | | | 3,00,000 |
| | வங்கிக் கணக்கு ப | | 3,00,000 | |
| | பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு (முதலாவதுஅழைப்புத் தொகை உறுப்பினர்களிடமிருந்து பெற்றது.) | | | 3,00,000 |
| | பங்கு இறுதி அழைப்புக் கணக்கு ப | | 2,50,000 | |
| | பங்கு முதல் கணக்கு (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு ரூ. 25 வீதம் 10,000 பங்குகள் மீது உறுப்பினர்களிடமிருந்து இறுதி அழைப்புத் தொகை பெறவேண்டியது.) | | | 2,50,000 |
| | வங்கிக் கணக்கு ப | | 2,12,500 | |
| | பங்கு இறுதி அழைப்புக் கணக்கு (பங்கு ஒன்றுக்கு ரூ.25 வீதம் 8,500 பங்குகள் மீது பெற்ற இறுதி அழைப்புத் தொகை.) | | | 2,12,500 |

நேர்மைப் பங்குகளையும் முன்னுரிமைப் பங்குகளையும் ஒரு கம்பெனி வெளியிடும்பொழுது பங்கு முதலை முன்னுரிமைப் பங்கு முதல் என்றும், நேர்மைப் பங்குமுதல் என்றும் பிரித்துக் கொள்ளலாம். எனவே, இவற்றிற்கான தொகைகளைப் பெறும் பொழுது தனித்தனிக் கணக்கேடுகளில் பதியவேண்டும். அதாவது, நேர்மைப் பங்குகட்கான விண்ணப்பத் தொகை பெறும்பொழுது நேர்மைப் பங்கு விண்ணப்பக் கணக்கிலும், முன்னுரிமைப் பங்குகள் மீதான விண்ணப்பத் தொகையைப் பெறும்பொழுது முன்னுரிமைப் பங்கு விண்ணப்பக் கணக்கிலும் பதியவேண்டும். இவ்வாறே பங்கு ஒதுக்கீட்டின்பொழுதும், பங்கழைப்பின் பொழுதும் அந்தந்த வகைப் பங்குக் கணக்குகட்கு ஏற்றவாறு பதியவேண்டும்.

## எடுத்துக்காட்டு 26

பொறுப்பு வரையறு கம்பெனி ஒன்று ரூ. 10 மதிப்புள்ள 10,000 சாதாரண (நேர்மைப்) பங்குகளையும், ரூ. 10 மதிப்புள்ள 20,000 முன்னுரிமைப் பங்குகளையும் வெளியிட்டது. கீழ்க் கண்டவாறு பங்குத் தொகைகள் செலுத்தப்படவேண்டும் :

| | சாதாரண (நேர்மை) பங்கு | முன்னுரிமைப் பங்கு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| விண்ணப்பத்தின்பொழுது | 2.50 | 2.00 |
| ஒதுக்கீட்டின்பொழுது | 2.50 | 3.00 |
| முதலாவது அழைப்பின்பொழுது | 2.00 | 2.00 |
| இறுதி அழைப்பின்பொழுது | 3.00 | 3.00 |

அனைத்துப் பங்குகளும் எடுத்துக் கொள்ளப்பட்டன. முதலாவது அழைப்பில் 200 சாதாரண பங்குகள் மீதும், இறுதி அழைப்பில் 300 சாதாரண பங்குகள் மீதும், 100 முன்னுரிமைப் பங்குகள் மீதும் தொகை செலுத்தப்படவில்லை.

கம்பெனியின் ஏட்டில் வேண்டிய குறிப்பேட்டுப் பதிவுகளையும் ரொக்க ஏட்டுப் பதிவுகளையும் தருக. பேரேட்டுக் கணக்குகளைத் தயாரித்து இருப்புநிலைக் குறிப்பையும் காட்டுக.

**விடை:**

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | சாதாரண பங்கு விண்ணப்பக் கணக்கு ப | | 25,000 | |
| | சாதாரண பங்கு முதல் கணக்கு | | | 25,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு ஒதுக்கீடு செய்யப்பட்ட 10,000 சாதாரண பங்குகள் மீது பெற்ற விண்ணப்பத் தொகையைச் சாதாரண பங்கு முதல் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| | முன்னுரிமைப் பங்கு விண்ணப்பக் கணக்கு ப | | 40,000 | |
| | முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கு | | | 40,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு ஒதுக்கீடு செய்யப்பட்ட 20,000 முன்னுரிமைப்பங்குகள் மீதான விண்ணப்பத் தொகை, முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கிற்கு மாற்ற.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | ப. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | சாதாரண பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு ப | | 25,000 | |
| | சாதாரண பங்கு முதல் கணக்கு | | | 25,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 2.50 வீதம் ஒதுக்கப்பட்ட 10,000 சாதாரண பங்குகள் மீது மொத்தம் பெறவேண்டிய ஒதுக்கீட்டுத் தொகை.) | | | |
| | முன்னுரிமைப் பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு ப | | 60,000 | |
| | முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கு | | | 60,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 3.00 வீதம் ஒதுக்கப்பட்ட 20,000 முன்னுரிமைப் பங்குகள் மீது மொத்தம் பெறவேண்டிய ஒதுக்கீட்டுத்தொகை.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | சாதாரண பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு ப | | 20,000 | |
| | சாதாரண பங்கு முதல் கணக்கு | | | 20,000 |
| | (. . . . நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 2.00 வீதம் 10,000 சாதாரண பங்குகள் மீது மொத்தம் பெறவேண்டிய முதலாவது அழைப்புத்தொகை.) | | | |
| | முன்னுரிமைப் பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு ப | | 40,000 | |
| | முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கு | | | 40,000 |
| | (. . . . நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 2.00 வீதம் 20,000 முன்னுரிமைப் பங்குகள் மீது மொத்தம் பெறவேண்டிய முதலாவது அழைப்புத் தொகை.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | சாதாரண பங்கு இறுதி அழைப்புக் கணக்கு ப | | 30,000 | |
| | சாதாரண பங்கு முதல் கணக்கு | | | 30,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 3.00 வீதம் 10,000 சாதாரண பங்குகள் மீது மொத்தம் பெறவேண்டிய இறுதி அழைப்புத் தொகை.) | | | |
| | முன்னுரிமைப் பங்கு இறுதி அழைப்புக் கணக்கு ப | | 60,000 | |
| | முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கு | | | 60,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 3.00 வீதம் 20,000 முன்னுரிமைப் பங்குகள் மீது மொத்தம் பெறவேண்டிய இறுதி அழைப்புத் தொகை.) | | | |

## ரொக்க ஏடு

பற்று — வரவு

| நாள் | விவரம் | பே.ப.எ. | ரூ. | நாள் | விவரம் | பே.ப.எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | சாதாரண பங்கு விண்ணப்பக் க/கு .. (ரூ. 2.50 வீதம் 10,000 பங்குகட்கான விண்ணப்பப் பணம்) | | 25,000 | | இருப்பு க/கு .. | | 2,98,400 |
| | முன்னுரிமைப் பங்கு விண்ணப்பக் க/கு .. (ரூ. 2 வீதம் 20,000 முன்னுரிமைப் பங்குகட்கான விண்ணப்பப் பணம்.) | | 40,000 | | | | |
| | சாதாரண பங்கு ஒதுக்கீட்டுக் க/கு .. (ரூ. 2.50 வீதம் 10,000 பங்குகட்கான ஒதுக்கீட்டுப்பணம்.) | | 25,000 | | | | |
| | முன்னுரிமைப் பங்கு ஒதுக்கீட்டுக் க/கு .. | | 60,000 | | | | |

பற்று **ரொக்க ஏடு—(தொடர்ச்சி)** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | (ரூ. 3 வீதம் 20,000 பங்குகட்கான ஒதுக்கீட்டுப்பணம்.) | | | | | | |
| | சாதாரண பங்கு முதலாவது அழைப்புக் க/கு (ரூ. 2 வீதம் 9,800 பங்குகட்கானது.) | | 19,600 | | | | |
| | முன்னுரிமைப் பங்கு முதலாவது அழைப்புக் க/கு . (ரூ. 2 வீதம் 20,000 பங்குகட்கானது.) | | 40,000 | | | | |
| | சாதாரண பங்கு இறுதி அழைப்புக் க/கு .. | | 29,100 | | | | |
| | முன்னுரிமைப் பங்கு இறுதி அழைப்புக் க/கு .. | | 59,700 | | | | |
| | | | 2,98,400 | | | | 2,98,400 |
| | இருப்பு கீ/கொ .. | | 2,98,400 | | | | |

பற்று **சாதாரண பங்கு விண்ணப்பக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | சாதாரண பங்கு முதல்.. க/கு | | 25,000 | | வங்கி .. | | 25,000 |

பற்று **முன்னுரிமைப் பங்கு விண்ணப்பக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | முன்னுரிமைப் பங்கு க/கு .. | | 40,000 | | வங்கி .. | | 40,000 |

பற்று **சாதாரண பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | சாதாரண பங்குமுதல் க/கு .. | | 25,000 | | வங்கி .. | | 25,000 |

பற்று **முன்னுரிமைப் பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | முன்னுரிமைப் பங்கு முதல் க/கு .. | | 60,000 | | வங்கி .. | | 60,000 |

பற்று **சாதாரண பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | சாதாரண பங்கு முதல் க/கு .. | | 20,000 | | வங்கி .. | | 19,600 |
| | | | | | இருப்புகீ/இ .. | | 400 |
| | | | 20,000 | | | | 20,000 |
| | இருப்பு கீ/கொ .. | | 400 | | | | |

பற்று **முன்னுரிமைப் பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | முன்னுரிமைப் பங்கு முதல் க/கு .. | | 40,000 | | வங்கி .. | | 40,000 |

## சாதாரண பங்கு இறுதி அழைப்புக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | சாதாரண பங்கு முதல் க/கு .. | | 30,000 | | வங்கி .. | | 29,100 |
| | | | | | இருப்பு கீ/இ .. | | 900 |
| | | | 30,000 | | | | 30,000 |
| | இருப்பு கீ/கொ .. | | 900 | | | | |

## முன்னுரிமைப் பங்கு இறுதி அழைப்புக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | முன்னுரிமைப் பங்கு முதல் க/கு .. | | 60,000 | | வங்கி .. | | 59,700 |
| | | | | | இருப்பு கீ/இ .. | | 300 |
| | | | 60,000 | | | | 60,000 |
| | இருப்பு கீ/கொ .. | | 300 | | | | |

**சாதாரண பங்கு முதல் கணக்கு**

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | இருப்பு கீ/இ | | 1,00,000 | | சாதாரண பங்கு விண்ணப்பக் க/கு .. | | 25,000 |
| | | | | | சாதாரண பங்கு ஒதுக்கீட்டுக் க/கு .. | | 25,000 |
| | | | | | சாதாரண பங்கு முதலாவது அழைப்புக் க/கு .. | | 20,000 |
| | | | | | சாதாரண பங்கு இறுதி அழைப்புக் க/கு .. | | 30,000 |
| | | | 1,00,000 | | | | 1,00,000 |
| | | | | | இருப்பு கீ/கொ | | 1,00,000 |

## முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கு

பற்று வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம், | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | இருப்பு கீ/இ .. | | 2,00,000 | | முன்னுரிமைப் பங்கு விண்ணப்பக் க/கு .. | | 40,000 |
| | | | | | முன்னுரிமைப் பங்கு ஒதுக்கீட்டுக் க/கு .. | | 60,000 |
| | | | | | முன்னுரிமைப் பங்கு முதலாவது அழைப்புக் க/கு .. | | 40,000 |
| | | | | | முன்னுரிமைப் பங்கு இறுதி அழைப்புக் க/கு .. | | 60,000 |
| | | | 2,00,000 | | | | 2,00,000 |
| | | | | | இருப்பு கீ/கொ .. | | 2,00,000 |

குறிப்பு : அழைப்புக் கணக்கு நிலுவையில் இருக்கும் நிலையில், உரிய அழைப்புக் கணக்கு இருப்பு காட்டுவதை நோக்குக,

**............நாளுக்கான......................கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | | | சொத்துகள் | |
|---|---|---|---|---|
| | | ரூ. | | ரூ. |
| **அதிகாரம் பெற்ற முதல்** | | | வங்கி .. | 2,98,400 |
| வெளியிட்டதும் ஒப்புக் கொள்ளப்பட்டதும் : | | | | |
| ஒன்று ரூ. 10 வீதம் 20,000 முன்னுரிமைப் பங்குகள் முழுவதும் அழைக்கப் பட்டது | ரூ. 2,00,000 | | | |
| **கழி :** | | | | |
| அழைப்பு நிலுவை ரூ. | 300 | | | |
| | | 1,99,700 | | |
| ஒன்று ரூ. 10 வீதம் 10,000 சாதாரண பங்குகள், முழுதும் அழைக்கப் பட்டது. | ரூ. 1,00,000 | | | |
| **கழி :** | | | | |
| அழைப்பு நிலுவை ரூ. | 1,300 | | | |
| | | 98,700 | | |
| | | 2,98,400 | | 2,98,400 |

## பங்கு விண்ணப்ப-ஒதுக்கீட்டுக் கணக்கு
### (இணைந்தது)

இதுவரை பங்கு விண்ணப்பத்திற்கு ஒரு கணக்கும், பங்கு ஒதுக்கீட்டுக்கு மற்றொரு கணக்கும் தனித்தனியாக எழுதி வந்தோம். இற்றைய நாள்களில் இவ்வாறு தனித்தனிக் கணக்குகட்கு மாறாக, இரண்டிற்கும் பொதுவாக ஒரே கணக்கினை வைப்பது வழக்கமாகி விடுகிறது. அந் நிலையில் விண்ணப்பத்திற்கும் பங்கு ஒதுக்கீட்டுக்கும் பொதுவாகப் பங்கு விண்ணப்ப—ஒதுக்கீட்டுக் கணக்கு (Share Application and Allotment Account) எனும் கணக்கில் பதிவுகளைச் செய்யவேண்டும். இம் முறையைப் பின்பற்றுவதால் பல பதிவுகளைச் செய்வது தவிர்க்கப்படுகிறது. விண்ணப்பத் தொகைக்கும், ஒதுக்கீட்டுத் தொகைக்கும் சேர்த்துப் பங்கு முதல் கணக்கில் ஒரே பதிவில் வரவு வைத்துவிடலாம். அத்துடன் மிகுதியாகவுள்ள விண்ணப்பத் தொகையைப் பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கிற்கு மாற்றவேண்டிய தேவை இராது. மேற்கண்ட எடுத்துக்காட்டினை இம் முறையைப் பின்பற்றிச் செய்தால் கீழ்க்கண்ட பதிவுகள் தேவைப்படுகின்றன :

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | சாதாரண பங்கு விண்ணப்ப—ஒதுக்கீட்டுக் கணக்கு ப | | ரூ.<br>50,000 | ரூ. |
| | சாதாரண பங்கு முதல் கணக்கு | | | 50,000 |
| | [....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 5.00 வீதம் (விண்ணப்பத் தொகை ரூ. 2.50, ஒதுக்கீட்டுத் தொகை ரூ.2.50) ஒதுக்கப்பட்ட 10,000 சாதாரண பங்குகள் மீதான தொகையைச் சாதாரண பங்கு முதல் கணக்கிற்கு மாற்ற.] | | | |

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | முன்னுரிமைப் பங்கு விண்ணப்ப—ஒதுக்கீட்டுக் கணக்கு ப | | ரூ. 1,00,000 | ரூ. |
| | முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கு | | | 1,00,000 |
| | [....நாளில் இயக்நகுரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 5.00 வீதம் (விண்ணப்பத் தொகை ரூ. 2.00, ஒதுக்கீட்டுத் தொகை ரூ. 3.00) ஒதுக்கப்பட்ட 20,000 முன்னுரிமைப் பங்குகள் மீதான தொகையை முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கிற்கு மாற்ற.] | | | |

பிற பதிவுகள் முன்போன்றே இருக்கும்.

**எடுத்துக்காட்டு 27**

கூட்டுப் பங்குக் கம்பெனி ஒன்று ரூ. 50 மதிப்புடைய 30,000 பங்குகளுடன் பதிவு செய்யப்பட்டது. இவற்றில் 20,000 பங்குகளை வெளியிட்டது. கீழ்க்கண்டவாறு பங்குத் தொகை செலுத்தப்படவேண்டும்.

| | | |
|---|---|---|
| விண்ணப்பத்தின்போழ்து | ரூ. | 10 |
| ஒதுக்கீட்டின்போழ்து | ரூ. | 15 |
| முதலாவது அழைப்பின்போழ்து | ரூ. | 10 |
| இறுதி அழைப்பின்போழ்து | ரூ. | 15 |

பொது மக்களிடமிருந்து 35,000 விண்ணப்பங்கள் வந்தன. இயக்குநரவை கீழ்க்கண்டவாறு பங்குகளை ஒதுக்கீடு செய்தது :
17,000 பங்குகள் கேட்ட விண்ணப்பதாரர்கட்கு .... முழுதும்
12,000 பங்குகள் கேட்ட விண்ணப்பதாரர்கட்கு 3,000 பங்குகள்
6,000 பங்குகள் கேட்ட விண்ணப்பதாரர்கட்கு ..ஒன்றுமில்லை.

இயக்குநரவை இறுதி அழைப்பைக் கோரவில்லை. முதலாவது அழைப்பில் 1,000 பங்குகள் மீதான தொகையைத் தவிர, பிறவற்றிற்கெல்லாம் பணம் பெறப்பட்டதென்று கொண்டு, ரொக்க ஏட்டுப் பதிவுகளையும், குறிப்பேட்டுப் பதிவுகளையும் தருக. இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

**விடை :**

குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | பங்கு விண்ணப்ப—ஒதுக்கீட்டுக் கணக்கு ப | | 5,00,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 5,00,000 |
| | [....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 25 வீதம் (விண்ணப்பத்தொகை ரூ. 10; ஒதுக்கீட்டுத் தொகை ரூ. 15) ஒதுக்கப்பட்ட 20,000 பங்குகள் மீதான தொகையை முதல் கணக்கிற்கு மாற்ற.] | | | |
| | பங்கு விண்ணப்ப—ஒதுக்கீட்டுக் கணக்கு ப | / | 45,000 | |
| | முன்கூட்டிச் செலுத்தப்பெற்ற அழைப்புக் கணக்கு | | | 45,000 |
| | (12,000 பங்குகள் வேண்டிய விண்ணப்பதாரர்கட்கு 3,000 பங்குகள் ஒதுக்கியதால் கிடைத்த மிகுதி விண்ணப்பத் தொகையை முன் கூட்டிச் செலுத்தப் பெற்ற அழைப்புக் கணக்கிற்கு மாற்ற. மொத்தம் பெற்ற | / | | |

**குறிப்பேட்டுப் பதிவுகள்**—(*தொடர்ச்சி*)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | விண்ணப்பத்தொகை ரூ. 1,20,000<br>கழி :<br>3,000 பங்குகள் மீதான விண்ணப்ப ஒதுக்கீட்டுத் தொகை ரூ. 75,000<br>மிகுதித் தொகை ரூ. 45,000) | | ரூ. | ரூ. |
| | பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு ப<br>பங்கு முதல் கணக்கு<br>(....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 10 வீதம் 20,000 பங்குகள் மீதான பெற வேண்டிய முதலாவது அழைப்புத்தொகை.) | | 2,00,000 | 2,00,000 |
| | முன்கூட்டிச் செலுத்தப் பெற்ற அழைப்புக் கணக்கு ப<br>பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு<br>(3,000 பங்குகள் மீது முன்கூட்டிச் செலுத்தப்பெற்ற அழைப்புத் தொகையை முதலாவது அழைப்புக் கணக்கிற்கு மாற்ற.) | | 30,000 | 30,000 |

பங்கு விண்ணப்பத்திற்கும், ஒதுக்கீட்டிற்கும் ஒரே கணக்காக இல்லாவிட்டால், பங்கு ஒதுக்கீடுவரை கீழ்க்கண்டவாறு பதிவுகள் இருக்கும் :

**பதிவுகள்**

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | பங்கு விண்ணப்பக் கணக்கு ப | | 2,00,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 2,00,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 10 வீதம் 20,000 பங்குகள் மீதான விண்ணப்பத் தொகையைப் பங்கு முதல் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு ப | | 3,00,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 3,00,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 15 வீதம் 20,000 பங்குகள் மீது, பெற வேண்டிய ஒதுக்குத் தொகை.) | | | |

## பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | பங்கு விண்ணப்பக் கணக்கு ப | | 45,000 | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு | | | 45,000 |
| | (12,000 பங்குகள் வேண்டியவர்க்கு 3,000 பங்குகள் ஒதுக்கியதால் கிடைத்த மிகுதி விண்ணபத்தொகையில் 3,000 பங்குகள் மீதான ஒதுக்கீட்டுத் தொகையை ஒதுக்குக் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| | பங்கு விண்ணப்பக் கணக்கு ப | | 45,000 | |
| | முன்கூட்டிச் செலுத்தப்பெற்ற அழைப்புக் கணக்கு | | | 45,000 |
| | (12,000 பங்கு வேண்டியவர்க்கு, 3,000 பங்குகள் ஒதுக்கியதால் கிடைத்த மிகுதி விண்ணபத் தொகையில் பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கிற்குச் சரிக் கட்டியபின் எஞ்சியுள்ளதை முன்கூட்டிச் செலுத்தப்பெற்ற அழைப்புக் கணக்கிற்கு எடுத்துச்செல்ல.) | | | |

பற்று **ரொக்க ஏடு (வங்கிப் பத்தி மட்டில்)** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்கு விண்ணப்ப— ஒதுக்கீட்டுக் க/கு (ஒன்று ரூ. 10 வீதம் 35,000 பங்குகள்மீதான விண்ணப்பத்தொகை.) | | 3,50,000 | | பங்கு விண்ணப்ப— ஒதுக்கீட்டுக் க/கு .. (6,000 பங்குகள் மீதான திருப்பித்தரும் விண்ணப்பத்தொகை.) | | 60,000 |
| | பங்கு விண்ணப்ப— ஒதுக்கீட்டுக் க/கு .. (ஒன்று ரூ. 15 வீதம் 17,000 பங்குகள்மீதான ஒதுக்கீட்டுத் தொகை.) | | 2,55,000 | | இருப்பு கீ/இ .. | | 7,05,000 |
| | பங்கு முதலாவது அழைப்புக் க/கு .. (ஒன்று ரூ. 10 வீதம் 16,000 பங்குகள்மீதான முதலாவது அழைப்புத் தொகை.) | | 1,60,000 | | | | |
| | | | 7,65,000 | | | | 7,65,000 |
| | இருப்பு கீ/கொ | | 7,05,000 | | | | |

**..............கம்பெனியின் இருப்பு நிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| **பங்கு முதல்** | | | |
| அதிகாரம் பெற்ற முதல் : | | வங்கி .. | 7,05,000 |
| ஒன்று ரூ. 50 வீதம் 30,000 பங்குகள் .. | 15,00,000 | | |
| வெளியிட்டதும், ஒப்புக்கொள்ளப்பட்டதும் : | | | |
| ஒன்று ரூ. 50 வீதம் 20,000 பங்குகள் .. | 10,00,000 | | |
| அழைக்கப்பெற்ற முதல் : | | | |
| ஒன்று ரூ. 50 வீதம் 20,000 பங்குகள், பங்கொன்றுக்கு ரூ. 35 வரை அழைக்கப் பெற்றது ரூ. 7,00,000 | | | |
| **கழி :** அழைப்பு நிலுவை ரூ. 10,000 | 6,90,000 | | |
| முன்கூட்டிச் செலுத்திய அழைப்புக் க/கு .. | 15,000 | | |
| | 7,05,000 | | 7,05,000 |

## எடுத்துக்காட்டு 28

சேரன் போக்குவரத்துக் கம்பெனி (வரையறுக்கப்பட்டது) பெயரளவு முதல் ரூ. 50,00,000 ஆகும். இது ரூ. 100 மதிப்புள்ள பங்குகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இவற்றில் 30,000 பங்குகளைப் பொதுமக்களிடம் வெளியிட்டது. பங்குத் தொகையினை விண்ணப்பத்துடன் ரூ. 20-ம், பங்கு ஒதுக்கீட்டின் பொழுது ரூ. 25-ம், முதலாவது அழைப்பின்பொழுது ரூ. 30-ம், இறுதி அழைப்பின்பொழுது ரூ. 25-ம் செலுத்தவேண்டும்.

48,000 பங்குகட்கான விண்ணப்பங்கள் வந்தன. 8,000 பங்குகள் வேண்டியோரின் விண்ணப்பங்கள் முழுதும் மறுக்கப் பட்டன. 22,000 பங்குகள் வேண்டிய விண்ணப்பதாரர்கட்கு 12,000 பங்குகள் ஒதுக்கீடு செய்யப்பட்டன. மீதிப் பங்குகள் கேட்டவாறே முழுதும் ஏற்றுக்கொள்ளப்பட்டன.

இயக்குநரவை அழைப்புகள் இரண்டையும் கோரியது. 1,000 பங்குகளை வைத்திருக்கும் ஒருவர் ஒதுக்கீட்டுத் தொகையுடன் பங்குகள் மீதான முழுத் தொகையையும் செலுத்தி விட்டார். 500 பங்குகளையுடைய ஒரு பங்குதாரர் இரு அழைப்புகட்கான தொகைகளையும், 700 பங்குகளை வைத்திருக்கும் மற்றொரு பங்குதாரர் இறுதி அழைப்புத் தொகையையும் தரவில்லை.

மேற்கண்ட நடவடிக்கைகட்குத் தேவையான ரொக்க ஏட்டுப் பதிவுகளையும், குறிப்பேட்டுப் பதிவுகளையும் தருக. பேரேட்டுக் கணக்குகளையும் இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க.

**விடை :**

## சேரன் போக்கு வரத்துக் கம்பெனியின் ஏடுகளில்

**ரொக்க ஏடு** (வங்கிப் பத்தி மட்டில்)

| பற்று | | | | வரவு | | | |
|---|---|---|---|---|---|---|---|
| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
| | பங்கு விண்ணப்ப— ஒதுக்கீட்டுக் க/கு .. (ரூ. 20 வீதம் 48,000 பங்குகட்கான விண்ணப்பத் தொகை.) பங்கு விண்ணப்ப— ஒதுக்கீட்டுக் க/கு (ரூ. 25 வீதம் 18,000 பங்குகள் மீதான ஒதுக்கீட்டுத்தொகை ரூ. 4,50,000 ரூ. 25 வீதம் 12,000 பங்குகள் மீது பெறவேண்டிய ஒதுக்கீட்டுத்தொகை ரூ. 3,00,000 **கழி** : மேற்படி பங்குகள் மீது அதிகம் பெற்ற விண்ணப்பத்தொகை ரூ. 2,00,000 ——— ரூ. 1,00,000 | | 9,60,000 | | பங்கு விண்ணப்ப— ஒதுக்கீட்டு க/கு .. (ரூ. 20 வீதம் 8,000 பங்குகள் மீதான விண்ணப்பப் பணத்தைத் திருப்பித் தந்தது.) | | 1,60,000 |
| | | | | | இருப்பு கீ/இ .. | | 29,55,000 |

பற்று **ரொக்க ஏடு** (வங்கிப் பத்தி மட்டில்)—(தொடர்ச்சி) வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | **கூட்டு**: 1000 பங்குகள் மீது முன்கூட்டிச் செலுத்திய அழைப்பு ரூ. 55,000 | | 6,05,000 | | | | |
| | பங்கு முதலாவது அழைப்புக் க/கு .. (ரூ. 30 வீதம் 28,500 பங்குகள் மீதான முதலாவது அழைப்புத் தொகை.) | | 8,55,000 | | | | |
| | பங்கு இறுதி அழைப்புக் க/கு .. (ரூ. 25 வீதம் 27,800 பங்குகள் மீது பெற்ற இறுதி அழைப்புத்தொகை.) | | 6,95,000 | | | | |
| | | | 31,15,000 | | | | 31,15,000 |
| | இருப்பு கீ/கொ .. | | 29,55,000 | | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | பங்கு விண்ணப்ப—ஒதுக்கீட்டுக் கணக்கு ப | | ரூ. 13,50,000 | ரூ. |
| | பங்கு முதல் கணக்கு | | | 13,50,000 |
| | [....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 45 வீதம் (விண்ணப்பத் தொகை ரூ. 20; ஒதுக்கீட்டுத் தொகை ரூ. 25) ஒதுக்கப்பட்ட 30,000 பங்குகள் மீதான விண்ணப்ப—ஒதுக்குத் தொகை பெற வேண்டியது.] | | | |
| | பங்கு விண்ணப்ப—ஒதுக்கீட்டுக் கணக்கு ப | | 55,000 | |
| | முன் கூட்டிச் செலுத்திய அழைப்புக் கணக்கு | | | 55,000 |
| | (பங்கு ஒதுக்கீட்டுடன் 1,000 பங்குகள் மீதான முழுத் தொகையும் பெற்றது.) | | | |
| | பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு ப | | 9,00,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 9,00,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 30 வீதம் 30,000 பங்குகள் மீது பெற வேண்டிய முதலாவது அழைப்புத் தொகை.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | முன்கூட்டிச் செலுத்திய அழைப்புக் கணக்கு ப | | 30,000 | |
| | பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு | | | 30,000 |
| | (1,000 பங்குகள் மீது ஒதுக்கீட்டுத் தொகையுடன் முன்கூட்டிச் செலுத்திய அழைப்புத்தொகையைப் பங்கு முதலாவது அழைப்புக் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| | பங்கு இறுதி அழைப்புக் கணக்கு ப | | 7,50,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 7,50,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 25 வீதம் 30,000 பங்குகள் மீது பெற வேண்டிய இறுதி அழைப்புத் தொகை.) | | | |
| | முன்கூட்டிச் செலுத்திய அழைப்புக் கணக்கு ப | | 25,000 | |
| | பங்கு இறுதி அழைப்புக் கணக்கு | | | 25,000 |
| | (1,000 பங்குகள் மீது முன்கூட்டிச் செலுத்திய அழைப்பைப் பங்கு இறுதி அழைப்புக் கணக்கிற்கு மாற்ற.) | | | |

பற்று **பங்கு விண்ணப்ப-ஒதுக்கீட்டுக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்கு முதல் க/கு .. | | 13,50,000 | | வங்கி .. | | 9,60,000 |
| | வங்கி .. | | 1,60,000 | | வங்கி .. | | 6,05,000 |
| | முன் கூட்டிச் செலுத்திய அழைப்புக் க/கு .. | | 55,000 | | | | |
| | | | 15,65,000 | | | | 15,65,000 |

பற்று **பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்கு முதல் க/கு .. | | 9,00,000 | | முன்கூட்டிச் செலுத்திய அழைப்புக் க/கு .. | | 30,000 |
| | | | | | வங்கி .. | | 8,55,000 |
| | | | 9,00,000 | | இருப்பு கீ/இ .. | | 15,000 |
| | இருப்பு கீ/கொ .. | | 15,000 | | | | 9,00,000 |

**பங்கு இறுதி அழைப்புக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்கு முதல் க/கு .. | | 7,50,000 | | முன்கூட்டிச் செலுத்திய அழைப்புக் க/கு .. | | 25,000 |
| | | | 7,50,000 | | வங்கி .. | | 6,95,000 |
| | | | | | இருப்பு கீ/இ .. | | 30,000 |
| | இருப்பு கீ/கொ .. | | 30,000 | | | | 7,50,000 |

**முன்கூட்டிச் செலுத்திய அழைப்புக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | முதலாவது அழைப்புக் க/கு .. | | 30,000 | | | | |
| | இறுதி அழைப்புக் க/கு .. | | 25,000 | | பங்கு விண்ணப்ப—ஒதுக்கீட்டுக் க/கு .. | | 55,000 |
| | | | 55,000 | | | | 55,000 |

பற்று **பங்கு முதல் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | இருப்பு கீ/இ .. | | 30,00,000 | | பங்கு விண்ணப்ப—ஒதுக்கீட்டுக் க/கு .. | | 13,50,000 |
| | | | | | பங்கு முதலாவது அழைப்புக் க/கு .. | | 9,00,000 |
| | | | | | பங்கு இறுதி அழைப்புக் க/கு .. | | 7,50,000 |
| | | | 30,00,000 | | | | 30,00,000 |
| | | | | | இருப்பு கீ/கொ | | 30,00,000 |

**சேரன் போக்குவரத்துக் கம்பெனியின்..................நாளிற்கான இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|---|
| **பங்குமுதல்** | | | வங்கி .. | 29,55,000 |
| அதிகாரம் பெற்றது : | | | | |
| ரூ. 100 வீதம் 50,000 பங்குகள் .. | | 50,00,000 | | |
| வெளியிட்டதும், ஒப்புக்கொள்ளப்பட்டதும் : | | | | |
| ரூ. 100 வீதம் 30,000 பங்குகள் .. | | 30,00,000 | | |
| அழைக்கப்பெற்ற முதல் : | | | | |
| ரூ. 100 வீதம் 30,000 பங்குகள் முழுத்தொகையும் அழைக்கப் பெற்றது ரூ. | 30,00,000 | | | |
| **கழி** : அழைப்பு நிலுவை ரூ. | 45,000 | 29,55,000 | | |
| | | 29,55,000 | | 29,55,000 |

**முனைமத் தொகையில் பங்கு வெளியீடு** (Shares issued at a Premium)

ஒரு கம்பெனி தன்னுடைய பங்குகளை அவற்றின் பெயரளவு மதிப்பினும் அதிகத் தொகையில் வெளியிடலாம். எடுத்துக் காட்டாக, பங்கு ஒன்றின் பெயரளவு மதிப்பு ரூ. 100 ஆக இருக்கும்போழ்து அதனை ரூ. 110-க்குக் கம்பெனி வெளியிடுமாயின், ரூ. 10 ஆனது முனைமத்தொகையாகும். அதிகப் பங்காதாயம் (dividend) வழங்கிவரும் கம்பெனிகளே இவ்வாறு செய்யமுடியும். பங்குகளின் உண்மையான மதிப்பு கம்பெனியின் வெற்றியைப் பொருத்துதான் இருக்கிறது. கம்பெனி ஒவ்வோராண்டும் வழங்கிவரும் பங்காதாயமும், நிதி நிலைமையும் கம்பெனியின் வளர்ச்சிக்குச் சான்றாக இருக்கின்றன. இவ்வாறு இலாபம் அதிகம் ஈட்டும் கம்பெனிகள் மீண்டும் பங்குகளை வெளியிடும் போழ்து முனைமத் தொகையில் வெளியிடுவது வழக்கம்.

முனைமத் தொகையில் பங்கு வெளியிடுவதில் எவ்விதத் தடையும் இல்லையெனினும், பங்குகள் மீது பெற்ற முனைமத் தொகையைப் பயன்படுத்தும் முறையில் கம்பெனிச் சட்டம் 78-வது பிரிவு சில தடைகளை விதித்துள்ளது. பங்கு வெளியீட்டில் பெறும் முனைமத் தொகையைப் 'பங்கு முனைமக் கணக்கு' எனும் தனி ஒரு கணக்கிற்கு எடுத்துச்செல்ல வேண்டும். பங்கு முதலினைக் குறைப்பதற்குரிய எல்லாச் சட்டப் பிரிவுகளும் பங்கு முனைமக் கணக்கிற்குப் பொருந்தும். எனினும், கீழ்க்கண்ட வகைகளில் இம் முனைமத் தொகையைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

(அ) முழுத் தொகையையும் செலுத்தப்பெற்ற மேலூதியப் பங்குகளை வெளியிடுவதற்கு (Fully paid bonus shares) அதனைப் பயன்படுத்திக் கொள்ளலாம். அதாவது, இத்தகைய பங்குநர்களிடமிருந்து தொகை பெறாமலேயே இத்தகைய பங்குகள் வழங்கப்பெறும்.

(ஆ) கம்பெனியின் தொடக்கச் செலவை நீக்குவதற்கு இதனைப் பயன்படுத்திக் கொள்ளலாம். கம்பெனியின் பங்குகளையோ அல்லது கடனீட்டுப் பத்திரங்களையோ வெளியிடும் போழ்து, செலுத்திய கழிவுத் தொகையை அல்லது அளித்த தள்ளுபடியை அல்லது ஏற்ற பிற செலவுகளை நீக்குவதற்குப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

(இ) கம்பெனியின் மீள் சலுகைப் பங்குகளை அல்லது கடனீட்டுப் பத்திரங்களை மீட்கும்போழ்து செலுத்தவேண்டிய முனைமத் தொகைக்காக இதனை ஒதுக்கி வைத்துக்கொள்ளலாம்.

இப் பங்கு முனைமக் கணக்கை வேறு நோக்கத்திற்குக் கம்பெனி பயன்படுத்த விரும்பின் முதலில் அது நீதி மன்றத்தின் இசைவைப் பெற்றாகவேண்டும்.

பங்கு முனைமக் கணக்கு இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகள் பகுதியில் 'காப்பும் மிகுதியும்' எனும் தலைப்பின்கீழ்க் காண்பிக்கப்பெறும்.

**பதிவுகள்**

கம்பெனி விரும்பும் வகையில் முனைமத் தொகையினை விண்ணப்பத்தின்போழ்தோ, ஒதுக்கீட்டின்போழ்தோ, முதலாவது அழைப்பின்போழ்தோ, இரண்டாவது அழைப்பின்போழ்தோ வசூலித்துக் கொள்ளலாம். பொதுவாகக் கம்பெனிகள் முனைமத் தொகையைப் பங்கு ஒதுக்கீட்டுத் தொகையுடன்தான் வசூலிக்கின்றன. அப்பொழுது பங்கு ஒதுக்கீட்டுத் தொகையுடன் முனைமத் தொகைக்கும் சேர்த்துப் பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கில் பற்று வைக்கவேண்டும். ஒதுக்கீட்டுத்தொகையளவிற்கு மட்டிலும் பங்கு முதல் கணக்கிலும், பெறவேண்டிய முனைமத் தொகைக்குப் பங்கு முனைமக் கணக்கிலும் வரவு வைக்கவேண்டும். பின்னர், பங்குநர்களிடமிருந்து பங்கு ஒதுக்கீட்டுத் தொகையை முனைமத் தொகையுடன் பெறும்போழ்து, வங்கிக் கணக்கில் முழுத் தொகைக்குப் பற்றும், பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். எடுத்துக்காட்டாக, ஒரு பங்கின் மீது செலுத்த வேண்டிய ஒதுக்கீட்டுத் தொகை ரூ. 30 (முனைமத் தொகை ரூ. 10 உட்பட) என்றால் செய்ய வேண்டிய பதிவு :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு | ப | 30 | |
| பங்கு முதல் கணக்கு | | | 20 |
| பங்கு முனைமக் கணக்கு | | | 10 |

இத் தொகையைப் பங்குநரிடம் பெறும்போழ்து செய்ய வேண்டிய பதிவு :

| | | | |
|---|---|---|---|
| வங்கிக் கணக்கு | ப | 30 | |
| பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு | | | 30 |

இவ்வாறு பங்கு முதல் கணக்கிற்கும், பங்கு முனைமக் கணக்கிற்கும் உரிய தொகைகள் வரவு வைக்கப்படுகின்றன.

இதனையே வேறொரு முறையிலும் பதியலாம். இம் முறையில் பெறவேண்டிய பங்கு ஒதுக்கீட்டுத் தொகையைப் பங்கு முதல் கணக்கிற்கு எடுத்துச்செல்ல, பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கிலும் பங்கு முதல் கணக்கிலும் ஒதுக்கீட்டுத் தொகையளவிற்கு முறையே பற்று, வரவு வைக்கப்படுகின்றன. பின்னர், ஒதுக்கீட்டுத் தொகையுடன் முனைமத் தொகையையும் பங்குநர்களிடமிருந்து பெறும்போழ்து வங்கிக் கணக்கில் முழுத் தொகைக்கும் பற்று வைத்துப் பங்கு ஒதுக்குக் கணக்கிலும், பங்கு முனைமக் கணக்கிலும் முறையே ஒதுக்கீட்டுத் தொகைக்கும், முனைமத் தொகைக்கும் வரவு வைத்துக் கொள்ளலாம்.

மேற்சொன்ன எடுத்துக்காட்டில் செய்யவேண்டிய பதிவுகள் :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு | ப | 20 | |
| பங்கு முதல் கணக்கு | | | 20 |
| | | | |
| வங்கிக் கணக்கு | ப | 30 | |
| பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு | | | 20 |
| பங்கு முனைமக் கணக்கு | | | 10 |

விண்ணப்பத் தொகையுடன் முனைமத் தொகையையும் கம்பெனி வசூலிப்பதாயின், முதலில் சொன்ன முறையைத்தான் பின்பற்றவேண்டும். காரணம், விண்ணப்பத் தொகை பெறும்போழ்து அதனை ஒரு வைப்புத் தொகையாக (Deposit) கருதுகிறோம். ஒதுக்கீடு பெறாத பங்குகட்கான விண்ணப்பத்தொகை திருப்பித் தரப்பட வேண்டுமாதலால் விண்ணப்பத்தொகை, தொகை பெறும்போழ்தே விண்ணப்பக் கணக்கினின்றும், முனைமக் கணக்கினின்றும் தனித்தனியே எடுத்துச் செல்லல் சரியல்ல. விண்ணப்பத் தொகையுடன் முனைமத் தொகையைப் பெறும்போழ்து செய்யவேண்டிய ஒவ்வொரு பதிவும் வருமாறு :

| | | | |
|---|---|---|---|
| (1) | வங்கிக் கணக்கு | ப | மொத்தம் பெற்ற தொகை |
| | பங்கு விண்ணப்பக் கணக்கு | | |

பங்குகள் ஒதுக்கப் பெற்றபின், அப் பங்குகட்கென விண்ணப்பத் தொகையைப் பங்கு முதல் கணக்கிற்கும், அப் பங்குகள்

மீது பெற்ற முனைமத் தொகையைப் பங்கு முனைமக் கணக்கிற்கும் எடுத்துச் செல்லவேண்டும்.

பங்கு விண்ணப்பக் கணக்கு ப
பங்கு முதல் கணக்கு
பங்கு முனைமக் கணக்கு

## எடுத்துக்காட்டு 29

புதுமைப் படப்பிடிப்புக் கம்பெனி (வரையறு பொறுப்பை உடையது) பங்கு ஒன்று ரூ. 100 வீதம், 20,000 பங்குகளை ரூ. 10 முனைமத் தொகையில் வெளியிட்டது. ரூ. 20 விண்ணப்பத் தொகையாகவும், ரூ. 40 ஒதுக்கீட்டுத் தொகையாகவும் (முனைமத் தொகை உட்பட), ரூ. 30 பங்கு முதலாவது அழைப்புத் தொகை யாகவும், ரூ. 20 இறுதி அழைப்புத் தொகையாகவும் செலுத்தப் பட வேண்டும்.

35,000 பங்குகள் வேண்டி விண்ணப்பங்கள் வந்தன. அவை கீழ்க்கண்டவாறு ஒதுக்கீடு செய்யப்பட்டன :

16,000 பங்குகள் வேண்டியோருக்கு .. முழுதும்.

17,000 பங்குகள் வேண்டியோருக்கு .. 4,000 பங்குகள்

2,000 பங்குகள் வேண்டியோருக்கு .. ஒன்றுமில்லை.

மிகுதியாகச் செலுத்தப்பெற்ற விண்ணப்பத் தொகையைப் பங்கு ஒதுக்கீட்டிற்கும், அழைப்பிற்கும் சரிக்கட்டிக்கொள்ள இயக்குநரவைக்கு உரிமையுண்டு.

1973 மார்ச் 1-ல் இயக்குநரவை மேற்கண்டவாறு பங்குகளை ஒதுக்கியது. 1973 சூன் 1-ல் முதலாவது அழைப்புத் தொகை யைச் செலுத்துமாறு கோரியது. 1973ஆம் ஆண்டு முடியும் வரை இறுதி அழைப்புத் தொகையைக் கோரவில்லை. 500 பங்கு கள் மீதான முதலாவது அழைப்புத் தொகையைத் தவிர, பிற பணம் முழுதும் பெறப்பட்டது. பங்குநர்கட்குக் கொடுக்க வேண்டிய வட்டித் தொகை உரிய நாளில் ஆண்டு வட்டி 6 % விகிதத்தில் செலுத்தப்பட்டது என்று கொண்டு குறிப்பேட்டுப் பதிவுகளையும், இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

**விடை :**

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1973 | | | ரூ. | ரூ. |
| மார்ச் 1 | வங்கிக் கணக்கு ப | | 7,00,000 | |
| | பங்கு விண்ணப்பக் கணக்கு | | | 7,00,000 |
| | (பங்கு ஒன்றுக்கு ரூ. 20 வீதம், 35,000 பங்குகள் மீதான விண்ணப்பத் தொகை பெற்றது.) | | | |
| ,, | பங்கு விண்ணப்பக் கணக்கு ப | | 4,00,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 4,00,000 |
| | (. . . . நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு 20,000 பங்குகள் மீதான விண்ணப்பத் தொகையை முதல் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| ,, | பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு ப | | 8,00,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 6,00,000 |
| | பங்கு முனைமக் கணக்கு | | | 2,00,000 |
| | [. . . . நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 40 வீதம் (முதலுக்காக ரூ. 30-ம், முனைமத்திற்காக ரூ. 10-ம்) 20,000 பங்குகள் மீது பெறவேண்டிய ஒதுக்கீட்டுத்தொகை.] | | | |

குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1973 | | | ரூ. | ரூ. |
| மார்ச் 1 | பங்கு விண்ணப்பக் கணக்கு ப | | 2,60,000 | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு | | | 1,60,000 |
| | முன்கூட்டிச் செலுத்திய அழைப்புக் கணக்கு | | | 1,00,000 |
| | [ஒதுக்கப்பட்ட 4,000 பங்குகள் மீது பெற்ற மிகுதித் தொகை (17,000 பங்குகள் வேண்டியோருக்கு ஒதுக்கீடு செய்யப்பட்டவை 4,000 பங்குகளே) ஒதுக்குக் கணக்கிற்கு (4,000 × ரூ.40) எஞ்சியுள்ளதை முன்கூட்டிச் செலுத்திய அழைப்புக் கணக்கிற்கு மாற்ற.] | | | |
| ,, | பங்கு விண்ணப்பக் கணக்கு ப | | 40,000 | |
| | வங்கிக் கணக்கு | | | 40,000 |
| | (மறுக்கப்பட்ட 2,000 விண்ணப்பங்கள் மீதான விண்ணப்பத் தொகையைத் திருப்பிச் செலுத்தியது.) | | | |
| ,, | வங்கிக் கணக்கு ப | | 6,40,000 | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு | | | 6,40,000 |
| | (பங்கொன்றுக்கு ரூ.40 வீதம் 16,000 பங்குகள் மீது பெற்ற ஒதுக்கீட்டுத் தொகை.) | | | |

**குறிப்பேட்டுப்பதிவுகள்**—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1973 | | | ரூ. | ரூ. |
| சூன் 1 | பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு ப | | 6,00,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 6,00,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 30 வீதம், 20,000 பங்குகள் மீது பெற வேண்டிய முதலாவது அழைப்புத் தொகை.) | | | |
| ,, | முன்கூட்டிச் செலுத்திய அழைப்புக் கணக்கு ப | | 1,00,000 | |
| | பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு | | | 1,00,000 |
| | (4,000 பங்குகள் மீது முன்கூட்டிச் செலுத்திய அழைப்புக் கணக்கு முதலாவது அழைப்புக் கணக்கிற்குச் சரிக்கட்ட.) | | | |
| ,, | வங்கிக் கணக்கு ப | | 4,85,000 | |
| | பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு | | | 4,85,000 |
| | (பங்கு ஒன்றுக்கு ரூ. 30 வீதம் 19,500 பங்குகள் மீது பெற்ற முதலாவது அழைப்புத் | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1973 ஜூன் 1 | தொகை ரூ. 5,85,000<br>கழி :<br>முன்கூட்டிச் செலுத்திய அழைப்புக் கணக்கு .. ரூ. 1,00,000<br>4,85,000) | | ரூ. | ரூ. |
| 1973 ஜூன் 1 | முன்கூட்டிச் செலுத்திய அழைப்பு மீதான வட்டிக் கணக்கு ப | | 1,500 | |
| | வங்கிக் கணக்கு | | | 1,500 |
| | (முன்கூட்டிப் பெற்ற அழைப்புத் தொகை மீது மார்ச் 1-லிருந்து ஜூன் 1 வரை 6 சத வீதம் ஆண்டு வட்டி.) | | | |

**புதுமைப் படப்பிடிப்புக் கம்பெனியின்**
**31—12—73-க்குரிய இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|---|
| **பங்கு முதல்** | | | வங்கி .. | 17,83,500 |
| அதிகாரம் பெற்றது : .. | | ........ | வட்டி (இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்றப்பட வேண்டியது.) .. | 1,500 |
| வெளியிட்டதும், ஒப்புக்கொள்ளப் பட்டதும் : ஒன்று ரூ. 100 வீதம் 20,000 பங்குகள் பங்கொன்றுக்கு ரூ. 80 வரைஅழைக்கப் பெற்றது | ரூ. 16,00,000 | | | |
| **கழி :** அழைப்புநிலுவை | ரூ. 15,000 | 15,85,000 | | |
| **காப்பும், மிகுதியும்** (Reserves and Surplus) | | | | |
| பங்கு முனைமம் .. | | 2,00,000 | | |
| | | 17,85,000 | | 17,85,000 |

## பங்கு ஒறுப்பிழப்பு (பங்குப்பறிமுதல்)
## (Share forfeiture)

பங்குநர் ஒருவர் தம்மீது கோரப்பட்ட அழைப்புத் தொகையினைச் செலுத்தத் தவறின் அவருடைய பங்குகள் பறிமுதல் செய்யப்படும். அதாவது அப் பங்குநர் வைத்திருக்கும் பங்குகளை நீக்குவதுடன், அவர் செலுத்திய தொகையும் திருப்பித் தரப்பட மாட்டாது என்பது பொருள். ஆனால், இதற்குக் கம்பெனியின் செயல்முறை விதிகளில் கூறப்பட்டுள்ள விதிமுறைகளைத் தவறாது பின்பற்ற வேண்டும். இல்லையெனில் பங்குநர் நீதிமன்றத்திற்குச் சென்றால், முறை பிறழ்ந்து செய்யப்பட்ட இப் பங்கு ஒறுப்பிழப்பு செல்லாது என நீதிமன்றம் அறிவிக்கலாம். முதலில் செயல்முறை விதிகள் இயக்குநரவை பங்கு ஒறுப்பிழப்புச் செய்வதற்கான அதிகாரத்தை வழங்கியிருக்கவேண்டும. கம்பெனிச் சட்டத்தின் அட்டவணை 'A', அழைப்புத் தொகையைச் செலுத்தாமையினால், பங்குகளைப் பறிமுதல் செய்ய இயக்குநர்கட்கு அதிகாரத்தை வழங்குகிறது.

முதலில் இயக்குநர்கள் அழைப்புத்தொகை செலுத்தாத பங்குநர்கட்கு ஓர் அறிவிக்கை தரவேண்டும். அழைப்புத் தொகையுடன் குறிப்பிட்ட வட்டியையும் சேர்த்துத் தருமாறு அதில் கோரியிருக்க வேண்டும். அறிவிக்கை நாளிலிருந்து குறைந்தது 14 நாள்களுக்குப் பின்னர் ஒரு நாளினைக் குறிப்பிட்டு அந் நாளிலேயோ அதற்குள்ளோ இத் தொகையைச் செலுத்தவேண்டுமென்றும், அவ்வாறு செலுத்தத் தவறின் பங்குகள் ஒறுப்பிழப்புச் செய்யப்படுமென்றும் அறிவிப்பில் குறிப்பிடவேண்டும். அவ்வறிவிக்கை கிடைத்த பின்னரும் குறிப்பிட்ட நாளுக்குள் அழைப்புத் தொகையைப் பங்குநர் செலுத்த முன்வராவிடில் இயக்குநரவை இதற்கான தீர்மானத்தை நிறைவேற்றி, அவரின் பங்குகளைப் பறிமுதல் செய்யலாம். பின்னர், இவ்வாறு பறிமுதல் செய்யப்பட்டது என்ற அறிவிக்கையை உறுப்பினருக்குத் தெரிவிக்கவேண்டும்.

ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்கினை இயக்குநரவை விரும்பியவாறு பயன்படுத்திக் கொள்ளலாம். அதை மீண்டும் பிறருக்கு விற்கலாம். ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குநர் உறுப்பினர் எனும் தகுதியிலிருந்து நீங்கிவிடுகிறார். இருப்பினும், கம்பெனிக்கு அப் பங்குகட்குரிய முழுத் தொகையும் செலுத்தப்படும்வரை அவர் செலுத்தவேண்டிய பொறுப்பிலிருந்து அவர் விடுபடுவதில்லை.

**பதிவுகள்**

பங்கினை ஒறுப்பிழப்புச் செய்வதால், வெளியிட்ட முதல் குறைகிறது என்பதை மறத்தலாகாது. எனவே, ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குட்காக எத் தொகைக்கு முதல் கணக்கில் வரவு வைக்கப்பட்டிருக்கிறதோ, அத் தொகைக்கு இப்பொழுது முதல் கணக்கில் பற்று வைக்கப்படவேண்டும் என்பதை உணரலாம். அதாவது, அப் பங்குகள் மீது இதுவரை கம்பெனி அழைத்த முதல் தொகைக்கு முதல் கணக்கில் பற்று வைக்கப்படுகிறது. எந்தெந்த கணக்கின் மீது (ஒதுக்கீட்டுத் தொகை, முதலாவது அழைப்புத் தொகை, இறுதி அழைப்புத் தொகை போன்றவை) தொகை பெறவேண்டியுள்ளதோ, அந்தந்தக் கணக்குகளைப் பெற வேண்டிய தொகைக்கு வரவு வைக்கவேண்டும். அத்துடன் இதுவரை அப் பங்குகள் மீது கம்பெனி பெற்ற தொகைக்கு ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குகள் கணக்கு எனும் கணக்கில் வரவு வைக்கவேண்டும். கீழ்க்கண்டவாறு பதிவு அமையும் :

| | | |
|---|---|---|
| பங்கு முதல் கணக்கு | ப | (பறிமுதல் செய்யப்பட்ட பங்குகளின் எண்ணிக்கை × இதுவரை அழைத்த தொகை) |
| அழைப்புக் கணக்குகள் | | (செலுத்தப்பெறாத அழைப்புத் தொகை.) |
| ஒறுப்பிழப்புப் பங்குக் கணக்கு | | (இதுவரை பெற்ற தொகை). |

**எடுத்துக்காட்டாக** ஒருவர் வைத்திருக்கும் 100 பங்குகளில் விண்ணப்பத் தொகையாக பங்கு ஒன்றுக்கு ரூ. 2 வீதம் செலுத்தப்பட்டிருக்கிறதென்றும், அதன் மீது ஒதுக்கீட்டுத் தொகையும் (ரூ. 3 வீதம்), முதலாவது அழைப்புத் தொகையும் (ரூ. 2.50 வீதம்), இறுதி அழைப்புத் தொகையும் (ரூ. 2.50 வீதம்) செலுத்தவில்லையென்றும் கொள்வோம். இப்பொழுது இயக்குநரவை அப் பங்குகளைப் பறிமுதல் செய்தால், கீழ்க்கண்டவாறு பதிவு இருக்கும். பங்கின் முழுத் தொகையும் அழைக்கப்பட்டு விட்டது. எனவே, முதல் கணக்கில் முழுத் தொகைக்கும் பற்று வைக்கவேண்டும்.

| | | |
|---|---|---|
| பங்கு முதல் கணக்கு ப | 1,000 | |
| பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு | | 300 |
| பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு | | 250 |
| பங்கு இறுதி அழைப்புக் கணக்கு | | 250 |
| ஒறுப்பிழப்புப் பங்குகள் கணக்கு | | 200 |

இதனையே வேறு முறையிலும் பதியலாம். பங்கு முதலில் முதலாவதாகப் பற்று வைக்கவேண்டும். அதே தொகைக்கு ஒறுப்பிழப்புச் செய்யப்படும் பங்குகள் கணக்கில் முதலில் வரவு வைக்கவேண்டும். பின்னர், பலவகை அழைப்புகளிலும் மொத்தம் பெற வேண்டிய தொகைக்கு இக் கணக்கில் பற்றும், ஒவ்வொரு அழைப்புக் கணக்கிலும் பெற வேண்டிய அளவிற்கு வரவும் வைக்கவேண்டும். மேற்சொன்ன எடுத்துக்காட்டை, இம் முறையில் பதிந்தால், கீழ்க்கண்ட பதிவுகள் வேண்டப்படு கின்றன :

| | | |
|---|---|---|
| 1. பங்கு முதல் கணக்கு ப | 1,000 | |
| ஒறுப்பிழப்புப் பங்குக் கணக்கு | | 1,000 |
| [....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு முழுத் தொகையும் அழைக்கப்பெற்ற (ரூ. 10 வீதம்) 100 பங்குகளைப் பறிமுதல் செய்தது.] | | |
| 2. ஒறுப்பிழப்புப் பங்குக் கணக்கு ப | 800 | |
| பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு | | 300 |
| பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு | | 250 |
| பங்கு இறுதி அழைப்புக் கணக்கு | | 250 |
| (அழைப்புக் கணக்குகளை முடிக்க.) | | |

மேற்சொன்ன எடுத்துக்காட்டில் அப் பங்குநர் ஒதுக்கீட்டுத் தொகையையும், முதலாவது அழைப்புத் தொகையையும் செலுத்திவிட்டாரென்றும், இறுதி அழைப்புத் தொகையை மட்டும் செலுத்தவில்லையென்றும் அதனால் அவரின் பங்குகள் ஒறுப்பிழப்புச் செய்யப்படுகின்றனவென்றும் கொண்டால், பதிவு கீழ்க் கண்டவாறிருக்கும் :

| | | | |
|---|---|---|---|
| 3. பங்கு முதல் கணக்கு | ப | 1,000 | |
| பங்கு இறுதி அழைப்புக் கணக்கு | | | 250 |
| ஒறுப்பிழப்புப் பங்குக் கணக்கு | | | 750 |

இவற்றிலிருந்து நாம்உணர்வது: **ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குக் கணக்கில் அப்பங்குகள் மீது பங்குதாரர் செலுத்தியிருக்கும் தொகை வரவு வைக்கப்படுகிறது.**

**எங்கெந்தக் கணக்கில் தொகை வரவேண்டியுள்ளதோ அந்தந்தக் கணக்குகளில் மட்டில் இன்னும் பெற வேண்டிய தொகைக்கு வரவு வைக்கப்படுகிறது.**

மேற்சொன்ன எடுத்துக்காட்டில், இயக்குநரவை இறுதி அழைப்பைக் கோரவில்லையென்றும், பங்குதாரர் தன்னிடமுள்ள 100 பங்குகள் மீது ஒதுக்கீட்டுத் தொகையையும் முதலாவது அழைப்புத் தொகையையும் செலுத்தவில்லையென்றும், அந் நிலையில் பங்குகள் ஒறுப்பிழப்புச் செய்யப்படுகின்றனவென்றும் கொள்வோம்.

இப்பொழுது செய்ய வேண்டிய பதிவுகள் :

| | | | |
|---|---|---|---|
| பங்கு முதல் கணக்கு | ப | 750 | |
| பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு | | | 300 |
| முதலாவது அழைப்புக் கணக்கு | | | 250 |
| ஒறுப்பிழப்புப் பங்குக் கணக்கு | | | 200 |

இதிலிருந்து நாம் உணர்வது: **செலுத்துமாறு வேண்டப் பட்ட அழைப்புத் தொகை வரைதான் முதல் கணக்கில் பற்று வைக்கப்படும்.**

**முனைமத் தொகையில் வெளியிட்ட பங்குகளை ஒறுப்பிழப்புச் செய்தல்** (Forfeiture of shares issued at a premium)

ஒறுப்பிழப்புச் செய்யப்படும் பங்குகள் மீது முனைமத் தொகையைக் கம்பெனி பெற்றிருக்குமாயின் பங்குகளை ஒறுப்பிழப்புச் செய்யும்போழ்து முனைமக் கணக்கில் எவ்வித மாற்றமும் ஏற்படுவதில்லை. அதாவது, பெற்ற முனைமத் தொகை, பங்கு முனைமக் கணக்கில்தான் இருக்கவேண்டும். பங்குகளை ஒறுப்பிழப்புச் செய்வதால், முனைமக் கணக்கில் மீண்டும் பற்று வைக்கக்கூடாது.

ஆனால், முனைமத் தொகை பெறுமலேயே பங்கு முனைமக் கணக்கில் வரவு வைக்கப்பட்டிருக்குமாயின், பங்குகளை ஒறுப்பிழப்புச் செய்யும்போழ்து, பங்கு முனைமக் கணக்கில் பெறாத முனைமத் தொகையளவிற்குப் பற்று வைக்கவேண்டும்.

எடுத்துக்காட்டாக, ஒருவர் ரூ. 100 மதிப்புள்ள 100 பங்குகளை வைத்திருக்கிறார். அவர் விண்ணப்பத்தொகை ரூ. 20 வீதம், ஒதுக்கீட்டுத் தொகை ரூ. 35 வீதம் (முனைமத் தொகை ரூ. 10 உட்பட) செலுத்தியிருக்கிறாரென்றும், முதலாவது அழைப்புத் தொகை ரூ. 30-ஐயும், இறுதி அழைப்புத்தொகை ரூ.25-ஐயும் அவர் செலுத்தவில்லையென்றும் கொள்வோம். இயக்குநரவை இவர் வைத்திருக்கும் பங்குகளை ஒறுப்பிழப்புச் செய்தால், செய்ய வேண்டிய பதிவுகள் :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் கணக்கு | ப | 10,000 | |
| பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு | | | 3,000 |
| பங்கு இறுதி அழைப்புக் கணக்கு | | | 2,500 |
| ஒறுப்பிழப்புப் பங்குக் கணக்கு | | | 4,500 |

மேற்சொன்ன எடுத்துக்காட்டில், அவர் தன்னுடைய பங்குகள் மீது விண்ணப்பத் தொகை மட்டும் செலுத்தியுள்ளார் என்றும், ஒதுக்கீட்டுத் தொகையும் பிற அழைப்புத் தொகைகளை

யும் செலுத்தவில்லையென்றும் கொண்டால், பங்குகளை ஒறுப்பிழப்புச் செய்யும்போழ்து செய்யவேண்டிய பதிவுகள் :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் கணக்கு | ப | 10,000 | |
| பங்கு முனைமக் கணக்கு | | 1,000 | |
| பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு | | | 3,500 |
| பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு | | | 3,000 |
| பங்கு இறுதி அழைப்புக் கணக்கு | | | 2,500 |
| ஒறுப்பிழப்புப் பங்குகள் கணக்கு | | | 2,000 |

மேற்கண்ட எடுத்துக்காட்டுகளிலிருந்து நாம் உணர்வது : **பங்கு முனைமத் தொகை பெருமலேயே இக்கணக்கில் வரவு வைக்கப்பட்டால் மட்டுமே, பங்குகளை ஒறுப்பிழப்புச் செய்யும் போழ்து பங்கு முனைமக் கணக்கில் பற்று வைக்கவேண்டும்.**

**ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குகளை மீண்டும் வெளியிடல்** (Reissue of forfeited shares)

ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குகளை இயக்குநர்கள் தள்ளுபடியிலும் விற்கலாம். இத் தள்ளுபடித் தொகை, பங்குகள் மீது முன்னரே பெறப்பட்ட தொகைக்கும் குறைவாக இருக்கக்கூடாது. எடுத்துக்காட்டாக, ரூ. 100 மதிப்புள்ள பங்கில் ரூ. 40 செலுத்தப்பட்ட பிறகு, ஒறுப்பிழப்புச் செய்யப்படுகிறது என்று கொண்டால், அதனை ரூ. 60-க்கோ, அதற்கு மேலோ விற்கலாம். அதாவது, தள்ளுபடி ரூ. 40-க்கும் அதிகமாக இருக்கக்கூடாது. அப் பங்கை ரூ. 70-க்கு மீண்டும் வெளியிடுவதாகக் கொண்டால் இப் பங்கு மீது அளிக்கப்படும் தள்ளுபடி ரூ. 30 ஆகும். பங்கு முதல் கணக்கில் முழுத் தொகைக்கும் வரவு வைக்கப்படும். இதன் மீது பெற்ற ரூ. 70-க்கு வங்கிக் கணக்கில் பற்று வைக்கப்படும். இன்னும் தேவையாயுள்ள ரூ. 30 (தள்ளுபடி) நட்டம் ஆதலால், இது ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குக் கணக்கில் பற்று வைக்கப்படும். செய்ய வேண்டிய பதிவு பின் கண்டவாறிருக்கும் :

| | | |
|---|---|---|
| வங்கிக் கணக்கு | ப | (மீண்டும் வெளியிடும் போழ்து பெறும் தொகை.) |
| ஒறுப்பிழப்புப் பங்குக் கணக்கு | ப | (அளிக்கப்பட்ட தள்ளுபடித் தொகை.) |
| பங்கு முதல் கணக்கு | | (முழுத் தொகைக்கும்.) |

பறிமுதல் செய்யப்பட்ட பங்குகளை மீண்டும் வெளியிட்டதால் மேற்கண்ட பதிவினைச் செய்த பின்னர், பங்கு ஒறுப்பிழப்புக் கணக்கு இருப்புக் காட்டுமாயின், அது கம்பெனிக்கு இலாபமாகும். கம்பெனிச் சட்டத்தின்படி இத் தொகையினை முதல் காப்புக் கணக்கிற்கு (Capital Reserve Account) மாற்ற வேண்டும். பதிவு கீழ்க்கண்டவாறு இருக்கும்.

| | | |
|---|---|---|
| ஒறுப்பிழப்புப் பங்குக் கணக்கு | ப | |
| முதல் காப்புக் கணக்கு | | |

**எடுத்துக்காட்டு 30**

வரையறு பொறுப்புடைய ஒரு கூட்டுக் கம்பெனி ஒன்று ரூ. 25 மதிப்புடைய 20,000 சாதாரணப் பங்குகளை வெளியிட்டது. பங்குகள் அனைத்திற்கும் விண்ணப்பங்கள் வர, அவை உரிய முறையில் ஒதுக்கீடு செய்யப்பட்டன. மேலும், சில விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

100 பங்குகளை வைத்திருக்கும் வாணன் என்பவர் தம் பங்குகள் மீது விண்ணப்பத்தொகை ரூ. 5 மட்டிலே செலுத்தியுள்ளார்.

300 பங்குகளை வைத்திருக்கும் வளவன் என்பவர் தம் பங்குகள் மீது விண்ணப்பத் தொகை ரூ. 5 வீதமும், ஒதுக்கீட்டுத் தொகை ரூ. 6 வீதமும் செலுத்தியுள்ளார்.

500 பங்குகளை வைத்திருக்கும் வழுதி என்பவர் விண்ணப்பத் தொகை ரூ. 5 வீதமும், ஒதுக்கீட்டுத் தொகை ரூ. 6 வீதமும், முதலாவது அழைப்புத்தொகை ரூ. 7 வீதமும் செலுத்தியுள்ளார்.

மேற்சொல்லப்பட்ட அனைவரும் தங்கள் நிலுவைத் தொகைகளைச் செலுத்தத் தவறியதுடன், இறுதி அழைப்புத் தொகையையும்

தரவில்லை (பிற பங்குகள் மீது தொகை முழுதும் செலுத்தப் பட்டுவிட்டது). இயக்குநர்கள் இவர்களின் பங்குகள் அனைத்தை யும் ஒறுப்பிழப்புச் செய்து, வாணனின் பங்குகளை ரூ. 21 வீதமும், வளவனின் பங்குகளை ரூ. 18 வீதமும், வழுதியின் பங்குகளை ரூ. 15 வீதமும் மீண்டும் வெளியிட்டனர்.

கம்பெனியின் ஏட்டில் இவற்றைப் பதியத் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளையும், ரொக்க ஏட்டுப் பதிவுகளையும், பேரேட்டுக் கணக்குகளையும் தருக. இருப்புநிலைக் குறிப்பில் இவை எவ்வாறு இடம்பெறும் என்பதையும் காட்டுக.

**விடை :**

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | பங்கு விண்ணப்பக் கணக்கு ப | | 1,00,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 1,00,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு 20,000 பங்குகளை ஒதுக்கியதற்கு, விண்ணப்பக் கணக்கிலிருந்து முதல் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு ப | | 1,20,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 1,20,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 6 வீதம் 20,000 பங்குகள் மீது பெற வேண்டிய ஒதுக்கீட்டுத் தொகை.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு ப | | ரூ. 1,40,000 | ரூ. |
| | பங்கு முதல் கணக்கு | | | 1,40,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 7 வீதம், 20,000 பங்குகள் மீது பெற வேண்டிய முதலாவது அழைப்புத்தொகை.) | | | |
| | பங்கு இறுதி அழைப்புக் கணக்கு ப | | 1,40,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 1,40,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 7 வீதம், 20,000 பங்குகள் மீது பெற வேண்டிய இறுதி அழைப்புத் தொகை.) | | | |
| | பங்கு முதல் கணக்கு ப | | 22,500 | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு | | | 600 |
| | பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு | | | 2,800 |
| | பங்கு இறுதி அழைப்புக் கணக்கு | | | 6,300 |
| | ஒறுப்பிழப்புப் பங்குகள் கணக்கு | | | 12,800 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு 900 பங்குகளைப் பறிமுதல் செய்தது.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | ஒறுப்பிழப்புப் பங்குகள் கணக்கு ப | | 7,500 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 7,500 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு மீண்டும் வெளியிட்ட 900 பறிமுதல் செய்யப்பட்ட பங்குகளின் மீதான தள்ளுபடி :<br>பங்குகளின் செலுத்தப்பட்ட மதிப்பு ரூ. 22,500<br>கழி :<br>விற்றதில் பெற்றது ரூ. 15,000<br>7,500 | | | |
| | ஒறுப்பிழப்புப் பங்குகள் கணக்கு ப | | 5,300 | |
| | முதல் காப்புக் கணக்கு | | | 5,000 |
| | (ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குகளை வெளியிட்ட பின்னர் இக் கணக்கிலுள்ள இருப்பை முதல்காப்புக் கணக்கிற்கு மாற்ற.) | | | |

பற்று ரொக்க ஏடு (வங்கிப் பத்தி மட்டில்) வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்கு விண்ணப்பக் க/கு .. (ஒன்றுக்கு ரூ. 5 வீதம் 20,000 சாதாரணப் பங்குகள் மீது மீது பெற்றது.) | | 1,00,000 | | இருப்பு கீ/இ .. | | 5,05,300 |
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு .. (ஒன்றுக்கு ரூ. 6 வீதம் 19,900 பங்குகள் மீது பெற்றது.) | | 1,19,400 | | | | |
| | பங்கு முதலாவது அழைப்புக் க/கு .. (ஒன்றுக்கு ரூ. 7 வீதம் 19,600 பங்குகள் மீது பெற்றது.) | | 1,37,200 | | | | |
| | பங்கு இறுதி அழைப்புக் க/கு .. (ஒன்றுக்கு ரூ. 7 வீதம் 19,100 பங்குகள் மீது பெற்றது.) | | 1,33,700 | | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| பங்கு முதல் க/கு .. (ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டவற்றில் ரூ. 21 வீதம் 100 பங்குகளையும், ரூ. 18 வீதம் 300 பங்குகளையும், ரூ. 15 வீதம் 500 பங்குகளையும் மீண்டும் வெளியிட்டது.) | | 15,000 | | | | |
| | | 5,05,300 | | | | |
| இருப்பு கீ/கொ .. | | 5,05,300 | | | | |

**பங்கு விண்ணப்பக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்கு முதல் க/கு .. | | 1,00,000 | | வங்கி .. | | 1,00,000 |

**பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்கு முதல் க/கு .. | | 1,20,000 | | வங்கி .. | | 1,19,400 |
| | | | | | பங்குமுதல் க/கு .. | | 600 |
| | | | 1,20,000 | | | | 1,20,000 |

## பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு

பற்று — வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்கு முதல் க/கு .. | | 1,40,000 | | வங்கி | | 1,37,200 |
| | | | | | பங்கு முதல் க/கு .. | | 2,800 |
| | | | 1,40,000 | | | | 1,40,000 |

## பங்கு இறுதி அழைப்புக் கணக்கு

பற்று — வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்குமுதல் க/கு .. | | 1,40,000 | | வங்கி .. | | 1,33,700 |
| | | | | | பங்குமுதல் க/கு .. | | 6,300 |
| | | | 1,40,000 | | | | 1,40,000 |

**பங்கு முதல் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு .. | | 600 | | பங்குவிண்ணப்பக் க/கு .. | | 1,00,000 |
| | பங்கு முதலாவது அழைப்புக் க/கு .. | | 2,800 | | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு .. | | 1,20,000 |
| | பங்கு இறுதி அழைப்புக் க/கு .. | | 6,300 | | பங்கு முதலாவது அழைப்புக் க/கு .. | | 1,40,000 |
| | ஒறுப்பிழப்புப் பங்குகள் க/கு .. | | 12,800 | | பங்கு இறுதி அழைப்புக் க/கு | | 1,40,000 |
| | இருப்பு கீ/இ .. | | 5,00,000 | | வங்கி .. | | 15,000 |
| | | | | | ஒறுப்பிழப்புப் பங்குகள் க/கு .. | | 7,500 |
| | | | 5,22,500 | | | | 5,22,500 |
| | | | | | இருப்பு கீ/கொ .. | | 5,00,000 |

## ஒறுப்பிழப்புப் பங்குகள் கணக்கு
(Shares Forfeited Account)

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்கு முதல் க/கு .. | | 7,500 | | பங்கு முதல் க/கு .. | | 12,800 |
| | முதல் காப்புக் க/கு . | | 5,300 | | | | |
| | | | 12,800 | | | | 12,800 |

## முதல் காப்புக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | இருப்பு கீ/இ .. | | 5,300 | | ஒறுப்பிழப்புப் பங்குகள் க/கு .. | | 5,300 |
| | | | | | இருப்பு கீ/கொ .. | | 5,300 |

## இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| **பங்கு முதல் :** | | வங்கி .. | 5,05,300 |
| அதிகாரம் பெற்றது .. | .... | | |
| வெளியிட்டதும், ஒப்புக்கொள்ளப்பட்டதும்: | | | |
| ஒன்று ரூ. 25 வீதம் 20,000 சாதாரணப் பங்குகள் .. | 5,00,000 | | |
| **காப்பும், மிகுதியும்** | | | |
| முதல் காப்பு .. | 5,300 | | |
| | 5,05,300 | | 5,05,300 |

**எடுத்துக்காட்டு 31**

ஒரு கம்பெனி பங்கு ஒன்று ரூ. 10 வீதம் 2,000 பங்குகளைப் பங்கு ஒன்றுக்கு ரூ. 2 முனைமத் தொகையில் வெளியிட்டது. பங்குத் தொகையைக் கீழ்க்கண்டவாறு செலுத்தவேண்டும் :

| | ரூ. |
|---|---|
| விண்ணப்பத்தின்போழ்து | 2 |
| ஒதுக்கீட்டின்போழ்து | 5 (முனைமத் தொகை உட்பட) |
| முதலாவது அழைப்பின்போழ்து | 3 |
| இரண்டாவது அழைப்பின்போழ்து | 2 |

3,000 பங்குகள் வேண்டி விண்ணப்பங்கள் வந்தன. 2,400 பங்குகள் வேண்டியுள்ள விண்ணப்பதாரர்கட்குக் கேட்ட விகிதத்தில் (Prorata) ஒதுக்கப்பட்டன. விண்ணப்பங்களின்மீது மிகுதியாகச் செலுத்தப்பட்டிருந்த பணம் ஒதுக்கீட்டுக்குச் செலுத்த வேண்டிய தொகைக்குப் பயன்படுத்தப்பட்டது.

40 பங்குகள் செலுத்தப்பெற்ற இரமேஷ் ஒதுக்கீட்டுத் தொகையைச் செலுத்தத் தவறியதுடன் முதல் அழைப்புத் தொகையையும் செலுத்தத் தவறிய காரணத்தால், இவரின் பங்குகள் பறிமுதல் செய்யப்பட்டன. 60 பங்குகளை வைத்திருக்கும் மோகன் என்பவர் இரு அழைப்புகளையும் செலுத்தவில்லை. எனவே, இரண்டாவது அழைப்பிற்குப் பிறகு அவரின் பங்குகளும் ஒறுப்பிழப்புச் (forfeiture) செய்யப்பட்டன.

ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குகளில் பங்கு ஒன்று ரூ. 9 வீதம் 80 பங்குகள் முழுதும் செலுத்தப் பெற்றதாகக் கிருட்டிணன் என்பவருக்கு விற்கப்பட்டன. அதில் இரமேஷின் பங்குகள் அனைத்தும் அடங்கியுள்ளன.

குறிப்பேட்டுப் பதிவுகளையும், ரொக்க ஏட்டுப் பதிவுகளையும் தந்து இருப்புநிலைக் குறிப்பைத் தயாரிக்கவும்.

(B. Com., Banaras and Delhi)

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ, | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | பங்குகள் விண்ணப்பக் கணக்கு ப | | ரூ. 4,000 | ரூ. |
| | பங்கு முதல் கணக்கு | | | 4,000 |
| | (. . . . நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு 2,400 பங்குகள் விண்ணப்பிக்க வேண்டி 2,000 பங்குகளை விகிதப்படி ஒதுக்கியது.) | | | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு ப | | 10,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 6,000 |
| | பங்கு முனைமக் கணக்கு | | | 4,000 |
| | (. . . . நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 5 வீதம் (ஒதுக்குத் தொகை ரூ. 3-ம், முனைமத் தொகை ரூ. 2-ம்) 2,000 பங்குகள் மீது பெற வேண்டிய ஒதுக்கீட்டுத் தொகை ) | | | |
| | பங்கு விண்ணப்பக் கணக்கு ப | | 800 | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு | | | 800 |
| | (2,400 பங்குகளுக்குப் பெற்ற விண்ணப்பங்களில் 2,000 பங்குகளை ஒதுக்கி மிகுதியுள்ள விண்ணப்பத் தொகையைப் பங்கு ஒதுக்குக் கணக்கிற்கு மாற்ற.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு ப | | 6,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 6,000 |
| | (. . . . நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 3 வீதம், 2,000 பங்குகள் மீது பெற வேண்டிய முதலாவது அழைப்புத் தொகை.) | | | |
| | பங்கு முதல் கணக்கு ப | | 320 | |
| | பங்கு முனைமக் கணக்கு ப | | 80 | |
| | பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு | | | 184 |
| | பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு | | | 120 |
| | ஒறுப்பிழப்புப் பங்குக் கணக்கு | | | 96 |
| | (. . . . நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு ஒதுக்கீட்டுத் தொகையும், முதலாவது அழைப்புத் தொகையும்செலுத்தத் தவறியதால் இரமேஷ் வைத்திருந்த 40 பங்குகளை ஒறுப்பிழப்புச் செய்தது.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | பங்கு இறுதி அழைப்புக் கணக்கு ப | | 3,920 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 3,920 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 2 வீதம் 1960 பங்குகள் மீது பெற வேண்டிய இறுதி அழைப்புத் தொகை) (2,000-ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குகள் 40.) | | | |
| | பங்கு முதல் கணக்கு ப | | 600 | |
| | பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு | | | 180 |
| | பங்கு இறுதி அழைப்புக் கணக்கு | | | 120 |
| | ஒறுப்பிழப்புப் பங்குக் கணக்கு | | | 300 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு இரு அழைப்புத் தொகைகளையும் செலுத்தத் தவறியதால் மோகனின் 60 பங்குகளை ஒறுப்பிழப்புச் செய்தது.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | ஒறுப்பிழப்புப் பங்குகள் கணக்கு ப | | 80 | |
| | பங்கு முதல் கணக்கு (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட 80 பங்குகளை மீண்டும் வெளியிட்டபோழ்து அளித்த தள்ளுபடி<br><br>80 பங்குகள் மீது செலுத்தப்பட்ட தொகை ரூ. 800<br><br>கழி :<br>ரொக்கம் பெற்றது ரூ. —720<br><br>ரூ. 80) | | | 80 |
| | ஒறுப்பிழப்புப் பங்குக் கணக்கு ப | | 216 | |
| | முதல் காப்புக் கணக்கு (80 பங்குகளை மீண்டும் வெளியிட்டதில் பெற்ற இலாபத்தினை முதல் காப்புக் கணக்கிற்கு மாற்ற.) | | | 216 |

**ரொக்க ஏடு** (வங்கிப் பத்தி மட்டில்)

பற்று வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்கு விண்ணப்பக் க/கு .. (ஒன்று ரூ. 2 வீதம் 3,000 பங்குகள் மீது பெற்ற விண்ணப்பத் தொகை.) | | 6,000 | | பங்கு விண்ணப்பக் க/கு .. (பங்கொன்றும் ஒதுக்கப்படாத 600 பங்குகள் மீதான விண்ணப்பத் தொகையைத் திருப்பித் தர.) | | 1,200 |
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு .. (ஒன்று ரூ. 5 வீதம் 1,960 பங்குகள் மீதான ஒதுக்கீட்டுத் தொகை பெற்றது.) | | 9,016 | | இருப்பு கீ/இ .. | | 24,036 |
| | பங்கு முதலாவது அழைப்புக் க/கு .. | | 5,700 | | | | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | (ஒன்று ரூ. 3 வீதம் 1,900 பங்குகள் மீதான முதலாவது அழைப்புத் தொகை பெற்றது.) | | | | | | |
| | பங்கு இறுதி அழைப்புக் க/கு (ஒன்று ரூ. 2 வீதம் 1,900 பங்குகள் மீதான இறுதி அழைப்புத் தொகை பெற்றது.) | | 3,800 | | | | |
| | பங்குமுதல் க/கு .. (ஒறுப்பிழப்பு செய்யப் பட்ட பங்குகளில் 80-ஐ ஒன்று ரூ. 9 வீதம் மீண்டும் வெளியிட்டது.) | | 720 | | | | |
| | | | 25,236 | | | | 25,236 |
| | இருப்பு கீ/கொ .. | | 24,036 | | | | |

## இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | ரூ, | சொத்துகள் | ரூ, |
|---|---|---|---|
| **பங்கு முதல் :** | | வங்கி .. | 24,036 |
| அதிகாரம் பெற்ற முதல் : | .. | | |
| வெளியிட்டதும், ஒப்புக்கொள்ளப்பட்டதும் : ஒன்று ரூ. 10 வீதம் 1,980 பங்குகள் முழுதும் செலுத்தப்பெற்றவை .. | 19,800 | | |
| பறிமுதல் செய்யப்பட்ட பங்குகள் .. | 100 | | |
| **காப்பும், மிகுதியும் :** | | | |
| முதல் காப்பு .. | 216 | | |
| பங்கு முனைமம் .. | 3,920 | | |
| | 24,036 | | 24,036 |

**விளக்கக் குறிப்பு :**

(அ) மொத்தம் பெற்ற விண்ணப்பங்கள் 3,000 பங்குகள்
பயன்படுத்திக்கொண்ட விண்ணப்பங்கள் 2,400 ,,

மறுக்கப்பட்ட விண்ணப்பங்கள் 600 ,,

600 பங்குகட்கான விண்ணப்பத் தொகை பங்குகள் ஏதும் செலுத்தப்பெறாமையால் திருப்பித் தரப்படுகின்றன.

**(ஆ) இரமேஷ் தரவேண்டிய பங்கு ஒதுக்கீட்டுத்தொகை**

2,400 பங்குகள், 2,000 பங்குகட்குப் பயன்படுத்திக் கொள்ளப்பட்டன.

2,000 பங்குகள் ஒதுக்கீடு செய்வதற்குப் பயன்படுத்திக் கொண்ட விண்ணப்பங்கள் 2,400 பங்குகள்.

40 பங்குகள் ஒதுக்கீடு பெற்றமைக்கு இரமேஷிடமிருந்து வந்த விண்ணப்பங்கள் :

$$= \frac{40 \times 2,400}{2,000}$$

$= 48$ பங்குகள்

எனவே, இரமேஷ் செலுத்திய விண்ணப்பத் தொகை (48 × 2) ரூ. 96

**கழி**

அவருக்கு ஒதுக்கப்பட்ட 40 பங்குகட்கான விண்ணப்பத் தொகை ரூ. 80

மிகுதியாகச் செலுத்தப்பட்ட விண்ணப்பத் தொகை பங்கு ஒதுக்கீட்டுக்காகச் சரிக்கட்டப்பட்டிருக்கிறது ரூ. 16

இரமேஷிடம் 40 பங்குகள் மீது பெற
வேண்டிய ஒதுக்கீட்டுத் தொகை

| | | ரூ. |
|---|---|---|
| | (40 × 5) = | 200 |
| **கழி** | | |
| அவர் செலுத்திய மிகுதியான விண்ணப்பத் தொகை | | 16 |
| இரமேஷ் செலுத்தவேண்டிய ஒதுக்கீட்டுத் தொகை | | 184 |

**பங்கு ஒதுக்கீட்டுத் தொகை பெற்றது**

| | |
|---|---|
| மொத்தம் பெறவேண்டிய ஒதுக்கீட்டுத் தொகை (2,000 × 5) = | 10,000 |
| **கழி** | |
| மிகுதியாகவுள்ள 400 பங்குகள் மீதான விண்ணப்பத் தொகை பங்கு ஒதுக்கீட்டுக்குச் சரிக்கட்டப்படுவது 400 × 2 = | 800 |
| | 9,200 |
| **கழி** | |
| இரமேஷ் செலுத்தத் தவறிய தொகை | 184 |
| பங்கு ஒதுக்கீட்டுத் தொகைக்குப் பெற்றது | 9,016 |

இரமேஷின் பங்குகள் மீது முனைமத்தொகை பெறாமலேயே பங்கு முனைமக் கணக்கில் வரவு வைக்கப்பட்டதால், அவற்றைப் பறிமுதல் செய்யும்போழ்து பங்கு முனைமக் கணக்கில் மீண்டும் பற்று வைக்கப்படுகிறது.

இரமேஷின் பங்குகள் மீது பங்கு ஒன்றுக்கு ரூ. 2 தான் பெறப்பட்டதால், அவரின் பங்குகளைக் குறைந்தது ரூ. 10

வீதத்திலாவது விற்றிருக்கவேண்டும். ஆனால், இப்பொழுது விற்றிருப்பது ரூ. 9 வீதத்தில்தான். எனவே, மீண்டும் விற்கப் பட்டதில் அளித்த தள்ளுபடி பங்கு ஒன்றுக்கு ரூ. 3 ஆகிறது. இது சட்டத்திற்குப் புறம்பானதாகும். இதனால் பங்கு முனைமத் தொகைக் கணக்கில் மீண்டும் வரவு வைக்கப்படவில்லை.

**பங்குகளைத் திருப்பித் தருதல்** (Surrender of shares)

சில வேளைகளில் பங்குநர் தம் மீது கோரப்பட்ட அழைப்புத் தொகையைச் செலுத்த முடியாமல் போகுமானால், அவர் வைத்துள்ள பங்குகளைக் கம்பெனியிடத்தில் திருப்பிக் கொடுத்துவிடலாம். அப் பங்குகள் அந் நிலையில் நீக்கப்படும். இவ்வாறு திருப்பித் தரப்பட்ட பங்குகளை நீக்குவதால் ஏற்படும் விளைவும் பங்குகளை ஒறுப்பிழப்புச் செய்வதால் ஏற்படும் விளைவும் ஒன்றே. எனவே, இப்பொழுது செய்யவேண்டிய பதிவுகளும், பங்குகளை ஒறுப்பிழப்புச் செய்யும்போழ்து செய்யவேண்டிய பதிவுகளும் ஒரே விதிமுறையில் இருக்கும்.

**பங்குகளைத் தள்ளுபடியில் வெளியிடுதல்** (Issue of shares at a discount)

கம்பெனிச் சட்டம் 79ஆவது பிரிவின்படி, கூறப்பட்டுள்ள நிபந்தனைகளின்படிதான் ஒரு கம்பெனி பங்குகளைத் தள்ளுபடியில் வெளியிடமுடியும். அதில் கூறப்பட்டிருக்கும் கருத்துகள் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன :

(1) தள்ளுபடியில் பங்குகளை வெளியிடத் தேவையான தீர்மானத்தைக் கம்பெனி பொதுக்கூட்டத்தில் நிறைவேற்றியிருக்கவேண்டும். பின்னர், அதற்கு நீதிமன்றம் இசைவு தர வேண்டும்.

(2) பங்குகளை வெளியிடும் பெருமத் தள்ளுபடி வீதத்தை (maximum rate of discount) தீர்மானம் குறிப்பிடவேண்டும். (தள்ளுபடி 10 சதவீதத்திற்கு மிகக்கூடாது; மைய அரசு கூடுதலான தள்ளுபடி வீதத்திற்கு ஒப்புதல் அளிக்குமாயின், அச் சதவீதத்தினும் கூடுதலாக இருக்கக்கூடாது.)

(3) கம்பெனி தொழில் தொடங்க உரிமை பெற்ற நாளிலிருந்து பங்குகளை வெளியிடும் நாள்வரை குறைந்தது ஓராண்டாவது சென்றிருக்கவேண்டும்.

(4) கம்பெனி முன்னரே வெளியிட்டிருக்கும் வகையினைச் சேர்ந்த பங்குகளையே இப்பொழுது தள்ளுபடியில் வெளியிடலாம்.

(5) நீதிமன்றம் இசைவு அளித்த நாளிலிருந்து இரண்டு திங்களுக்குள் அல்லது நீதிமன்றம் ஒப்புதல் அளிக்கும் கால நீட்டிப்புக்குள் பங்குகளை வெளியிடவேண்டும்.

பங்குகளைத் தள்ளுபடியில் வெளியிடும் தீர்மானத்தைக் கம்பெனி நிறைவேற்றிய பின் நீதிமன்றத்தின் இசைவினை வேண்டி, நீதிமன்றத்திற்குக் கம்பெனி விண்ணப்பிக்கவேண்டும். பின், நீதிமன்றம் தன் இசைவினை வழங்கும். பங்குகளை வெளியிடுவதற்கான தகவல் அறிக்கையில் பங்கு வெளியீட்டில் அளிக்கப்படும் தள்ளுபடி பற்றிய விவரங்கள் காணப்படவேண்டும். அத்துடன் தகவல் அறிக்கையை வெளியிடும் நாளன்று, இன்னும் நீக்கப்பெறாதிருக்கும் தள்ளுபடி பற்றியும் தகவல் அறிக்கையில் குறிப்பிடப்படவேண்டும்.

மேற்கூறியவற்றிலிருந்து நாம் உணர்வது : **புதிதாகத் தோற்றுவிக்கப்படும் கம்பெனி பங்குகளைத் தள்ளுபடியில் வெளியிடமுடியாது; அத்துடன் முன்னரே இயங்கிவரும் கம்பெனியும் புது வகையான பங்குகளையும் தள்ளுபடியில் வெளியிடமுடியாது.**

பங்குநர்கட்கு அளிக்கப்படும் தள்ளுபடியைப் 'பங்கு வெளியீட்டுத் தள்ளுபடி' அல்லது 'பங்குத் தள்ளுபடி' எனும் கணக்கில் பற்று வைக்கவேண்டும். இது ஒரு முதலின நட்டமாகும் (Capital loss). எனவே, இதை முழுதும் நீக்கும்வரை, இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் இது காண்பிக்கப் பெறும். **வேறு விவரங்கள் கணக்கில் கொடுக்கப்படவில்லையெனில் பங்குத் தள்ளுபடி கணக்கைப் பங்குகளை ஒதுக்கும் போழ்து தொடங்கலாம்.**

தள்ளுபடியில் வெளியிடப்பட்ட பங்குகளைப் பறிமுதல் செய்யும்போழ்து பங்குத் தள்ளுபடி கணக்கில் பறிமுதல் செய்யப்படும் பங்குகட்குரிய தள்ளுபடி தொகையளவிற்கு வரவு வைக்க வேண்டும். அப்பொழுதுதான் வெளியிடப்பட்டிருக்கும் பங்குகட்குரிய தள்ளுபடி தொகை பங்குத் தள்ளுபடி கணக்கில் இருக்கும். அவ்வாறே ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குகளை மீண்டும் வெளியிடும்போழ்து, முதன் முதலில் அப் பங்குகளின் மீது அளிக்கப்பட்ட தள்ளுபடி தொகையை மீண்டும் பற்று வைக்கவேண்டும்.

## எடுத்துக்காட்டு 32

பல்லவன் பதிப்பகம் (வரையறு பொறுப்பை உடையது) ரூ. 100 மதிப்புள்ள 20,000 பங்குகளை 10 சதவீதம் தள்ளுபடி

யில் வெளியிட்டது. கீழ்க்காட்டியவாறு பங்குத் தொகை செலுத்தப்பட வேண்டும் :

| | ரூ. |
|---|---|
| விண்ணப்பத்தின்போழ்து | 20 |
| ஒதுக்கீட்டின்போழ்து | 25 |
| முதலாவது அழைப்பின்போழ்து | 25 |
| இறுதி அழைப்பின்போழ்து | 20 |

17,000 பங்குகள் வேண்டி விண்ணப்பங்கள் வந்தன. வேண்டிய வாறே பங்குகள் ஒதுக்கீடு செய்யப்பட்டன. 500 பங்குகளை வைத்திருக்கும் பாரி என்பவர் பங்கு ஒதுக்கீட்டின்போழ்தே தனது பங்குக்கான முழுத் தொகையையும் செலுத்திவிட்டார். 400 பங்குகளை வைத்திருக்கும் மாறன் இரு அழைப்புகட்கான தொகை களைச் செலுத்தவில்லை. உரிய அறிவிப்புக்குப் பிறகு, மாறனின் பங்குகள் ஒறுப்பிழப்புச் (forfeiture) செய்யப்பட்டன. பின் அவற்றில் 300 பங்குகள் பங்கு ஒன்று ரூ. 75 வீதம் சுந்தர் என்பவருக்கு விற்கப்பட்டன.

ரொக்க ஏட்டுப் பதிவுகளையும், குறிப்பேட்டுப் பதிவுகளையும், பேரேட்டுக் கணக்குகளையும் தயார் செய்க. இருப்புநிலைக் குறிப்பையும் காட்டுக.

**விடை :**

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | [illegible]<br>பங்கு விண்ணப்பக் கணக்கு ப<br>பங்கு முதல் கணக்கு<br>(....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு, ஒதுக்கீடு செய்யப்பட்ட 17,000 பங்குகளை முதல் கணக்கிற்கு எடுத்துச் செல்ல.) | | ரூ.<br>3,40,000 | ரூ.<br><br>3,40,000 |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு ப | | ரூ. 4,25,000 | ரூ. |
| | பங்குத் தள்ளுபடி கணக்கு ப | | 1,70,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 5,95,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 25 வீதம் 17,000 பங்குகள் மீது பெற வேண்டிய ஒதுக்கீட்டுத் தொகையும், பங்குகள் மீது அளித்த 10 சத வீதம் தள்ளுபடியும்.) | | | |
| | பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு ப | | 4,25,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 4,25,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 25 வீதம் 17,000 பங்குகள் மீது பெற வேண்டிய முதலாவது அழைப்புத் தொகை.) | | | |
| | முன்கூட்டிச் செலுத்திய அழைப்புக் கணக்கு ப | | 12,500 | |
| | பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு | | | 12,500 |
| | (500 பங்குகள் மீது முன்கூட்டிச் செலுத்தப்பெற்ற அழைப்புக் கணக்கிலிருந்து முதலாவது அழைப்புத் தொகைக்குச் சரிக்கட்ட) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | பங்கு இறுதி அழைப்புக் கணக்கு ப | | 3,40,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 3,40,000 |
| | (. . . .நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 20 வீதம் 17,000 பங்குகள் மீது பெற வேண்டிய இறுதி அழைப்புத் தொகை.) | | | |
| | முன்கூட்டிச் செலுத்திய அழைப்புக் கணக்கு ப | | 10,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 10,000 |
| | (500 பங்குகள் மீது முன்கூட்டிச் செலுத்தப்பெற்ற அழைப்புத் தொகையிலிருந்து இறுதி அழைப்புத் தொகைக்குச் சரிக்கட்ட.) | | | |
| | பங்கு முதல் கணக்கு ப | | 40,000 | |
| | பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு | | | 10,000 |
| | பங்கு இறுதி அழைப்புக் கணக்கு | | | 8,000 |
| | பங்குத் தள்ளுபடி கணக்கு | | | 4,000 |
| | ஒறுப்பிழப்புப் பங்குக் கணக்கு | | | 18,000 |
| | (. . . .நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு மாறன் வைத்துள்ள 400 பங்குகளை ஒறுப்பிழப்புச் செய்தது.) | | | |

குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | பங்குத் தள்ளுபடி கணக்கு ப | | ரூ. 3,000 | ரூ. |
| | ஒறுப்பிழப்புப் பங்குகள் கணக்கு ப | | 4,500 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 7,500 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்று ரூ. 75 வீதம் 300 பங்குகளை வெளியிட்டது. பங்கு ஒன்றின் மீது ரூ. 10 வீதம் தள்ளுபடியும் மீதிப் பங்கு ஒன்றுக்கு ரூ. 15 வீதம் ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குக் கணக்கிலும் பற்று வைக்கப்பட்டிருக்கின்றன.) | | | |
| | ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குக் கணக்கு ப | | 9,000 | |
| | முதல் காப்புக் கணக்கு | | | 9,000 |
| | (300 பங்குகளை மீண்டும் வெளியிட்டபின் இருக்கும் இலாபத்தினைப் பங்கு முதல் கணக்கிற்கு மாற்ற—மீண்டும் வெளியிடப்படாதிருக்கும் 100 பங்குகளின் பறிமுதல் தொகை ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குக் கணக்கில் இருக்கும்.) | | | |

## ரொக்கக் கணக்கு (வங்கிப் பத்தி மட்டில்)

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்கு விண்ணப்பக் க/கு .. (ரூ. 20 வீதம் 17,000 பங்குகள் மீதான விண்ணப்பத் தொகை.) | | 3,40,000 | | இருப்பு கீ/இ .. | | 15,34,500 |
| | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு .. (ரூ. 25 வீதம் 17,000 பங்குகள் மீதான ஒதுக்கீட்டுத் தொகை.) | | 4,25,000 | | | | |
| | முன்கூட்டிச் செலுத்திய அழைப்புக் க/கு .. (500 பங்குகள் மீதான முதலாவது அழைப்புத் தொகை ரூ. 25 வீதமும் இறுதி அழைப்புத்தொகை ரூ. 20 வீதமும் முன்கூட்டிப் பெற்றது.) | | 22,500 | | | | |

பற்று **ரொக்கக் கணக்கு** (வங்கிப் பத்தி மட்டில்)—(தொடர்ச்சி) வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்கு முதலாவது அழைப்புக் க/கு .. (ரூ. 25 வீதம் 16,100 பங்குகள் மீதான முதலாவது அழைப்புத் தொகை.) | | 4,02,500 | | | | |
| | பங்கு இறுதி அழைப்புக் க/கு .. (ரூ. 20 வீதம் 16,100 பங்குகள் மீதான இறுதி அழைப்புத் தொகை.) | | 3,22,000 | | | | |
| | பங்கு முதல் க/கு .. (ஒன்று ரூ. 75 வீதம் பறிமுதல் செய்த பங்குகளில் 300-ஐ விற்றது.) | | 22,500 | | | | |
| | | | 15,34,500 | | | | 15,34,500 |

**பங்கு விண்ணப்பக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்குமுதல் க/கு ... | | 3,40,000 | | | | 3,40,000 |

**பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்கு முதல் க/கு .. | | 4,25,000 | | வங்கிக் க/கு .. | | 4,25,000 |

**பங்குத் தள்ளுபடிக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்குமுதல் க/கு .. | | 1,70,000 | | பங்குமுதல் க/கு .. | | 4,000 |
| | பங்குமுதல் க/கு .. | | 3,000 | | இருப்பு கீ/இ .. | | 1,69,000 |
| | | | 1,73,000 | | | | 1,73,000 |
| | இருப்பு கீ/கொ .. | | 1,69,000 | | | | |

பற்று — முன்கூட்டிச் செலுத்திய அழைப்புக் கணக்கு — வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்கு முதலாவது அழைப்புக் க/கு .. | | 12,500 | | வங்கி | | 22,500 |
| | பங்கு இறுதி அழைப்புக் க/கு .. | | 10,000 | | | | |
| | | | 22,500 | | | | 22,500 |

பற்று — பங்கு முதலாவது அழைப்புக் கணக்கு — வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்குமுதல் க/கு .. | | 4,25,000 | | முன்கூட்டிச் செலுத்திய அழைப்புக் க/கு .. | | 12,500 |
| | | | | | வங்கிக் க/கு .. | | 4,02,500 |
| | | | | | பங்கு முதல் க/கு .. | | 10,000 |
| | | | 4,25,000 | | | | 4,25,000 |

பற்று **பங்கு இறுதி அழைப்புக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்கு முதல் க/கு .. | | 3,40,000 | | முன்கூட்டிச் செலுத்திய அழைப்புக்க/கு .. | | 10,000 |
| | | | | | வங்கிக் க/கு .. | | 3,22,000 |
| | | | | | பங்குமுதல் க/கு .. | | 8,000 |
| | | | 3,40,000 | | | | 3,40,000 |

பற்று **ஒறுப்பிழப்புப் பங்குக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்குமுதல் க/கு .. | | 4,500 | | பங்குமுதல் க/கு .. | | 18,000 |
| | முதல் காப்புக் க/கு .. | | 9,000 | | | | |
| | இருப்பு கீ/இ .. | | 4,500 | | | | |
| | | | 18,000 | | | | 18,000 |
| | | | | | இருப்பு கீ/கொ .. | | 4,500 |

## பங்கு முதல் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்கு முதலாவது அழைப்புக் க/கு .. | | 10,000 | | பங்கு விண்ணப்பக் க/கு .. | | 3,40,000 |
| | | | | | பங்கு ஒதுக்கீட்டுக் க/கு .. | | 4,25,000 |
| | | | | | பங்குத் தள்ளுபடிக் க/கு .. | | 1,70,000 |
| | பங்கு இறுதி அழைப்புக் க/கு | | 8,000 | | பங்கு முதலாவது அழைப்புக் க/கு .. | | 4,25,000 |
| | பங்குத் தள்ளுபடிக் க/கு .. | | 4,000 | | பங்கு இறுதி அழைப்புக் க/கு .. | | 3,40,000 |
| | ஒறுப்பிழப்புப் பங்குகள் க/கு | | 18,000 | | வங்கிக் க/கு .. | | 22,500 |
| | | | | | பங்குத் தள்ளுபடிக் க/கு .. | | 3,000 |
| | இருப்பு கீ/இ .. | | 16,90,000 | | ஒறுப்பிழப்புப் பங்குகள் க/கு .. | | 4,500 |
| | | | 17,30,000 | | | | 17,30,000 |
| | | | | | இருப்பு கீ/கொ .. | | 16,90,000 |

**முதல் காப்புக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | இருப்பு கீ/இ .. | | 9,000 | | ஒறுப்பிழப்புப் பங்குக் க/கு .. | | 9,000 |
| | | | | | இருப்பு கீ/கொ .. | | 9,000 |

**பல்லவன் பதிப்பகத்தின்** *(வரையறு பொறுப்புடையது)*
**............நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | | ரூ. |
|---|---|---|---|---|---|
| **பங்கு முதல்** | | | **நடப்புச் சொத்துகள் :** | | |
| அதிகாரம் பெற்றது : | | .... | வங்கி | .. | 15,34,500 |
| வெளியிட்டது : | | | **பல்வகைச் செலவினம் :** | | |
| ரூ. 100 வீதம் 20,000 பங்குகள் | .. | 20,00,000 | பங்குத் தள்ளுபடி | .. | 1,69,000 |
| ஒப்புக்கொள்ளப்பட்டதும், செலுத்தப் பெற்றதும் : | | | | | |
| ரூ. 100 வீதம் 16,900 பங்குகள் | | 16,90,000 | | | |
| ஒறுப்பிழப்புப் பங்குகள் | .. | 4,500 | | | |
| **காப்பும், மிகுதியும் :** | | | | | |
| முதல் காப்புக் க/கு | .. | 9,000 | | | |
| | | 17,03,500 | | | 17,03,500 |

## ரொக்கத்திற்கு அன்றி வேறு மறுபயன் கருதிப் பங்கு வெளியிடல் (Issue of Shares for Consideration other than Cash)

ரொக்கத்திற்குப் பங்கு வெளியிடும் நடவடிக்கைகளை இது காறும் ஆய்ந்தோம். ஆனல், ரொக்கத்திற்கு மட்டுமல்லாமல் வேறு மறுபயனுக்காகவும் (consideration) பங்கு வெயியிடுவது வழக்கம். எடுத்துக்காட்டாக, நடந்துவரும் ஒரு தொழிலை வாங்கி நடத்துவதாகக் கொண்டால், தொழிலை விற்பதற்கு விலையின் ஒரு பகுதியை ரொக்கமாகவும், மீதிப் பகுதியைப் பங்குகளாகவும் கொடுக்கலாம்; அல்லது கம்பெனிக்குச் சொத்துகள் வாங்கும் போழ்து ரொக்கத்திற்கு மாருகக் கம்பெனி தனது பங்குகளை விலையாகக் கொடுக்கலாம். இவை பற்றிப் பின்னர் விரிவாகக் காண்போம்.

இவ்வாறு ரொக்கம் கொடுத்து வாங்கியதற்கு மாருகத் தனது பங்குகளைக் கொடுத்துச் சொத்துகளையோ தொழிலையோ வாங்குவதை, ரொக்கத்திற்கு அன்றி வேறு மறு பயனுக்காகப் பங்குகளை வெளியிடல் என்கிறோம். இவ் வகையில் பங்குகள் வெளியிடப்பட்டிருக்குமாயின், இருப்புநிலைக் குறிப்பில் இவை பற்றிய விவரங்கள் கொடுக்கப்படவேண்டும். இவ்வகைப் பதிவுகள் :

**சொத்துகள் வாங்கும்போழ்து**

| | | |
|---|---|---|
| பலவகைச் சொத்துக்கள் | க/கு | ப |
| விற்பவர் | க/கு | |

**விற்பவருக்குப் பங்குகளை ஒதுக்கீடுசெய்யும் போழ்து**

| | | |
|---|---|---|
| விற்பவர் | க/கு | ப |
| பங்கு முதல் | க/கு | |

**பங்குகளை முனைமத் தொகையில் விற்பவருக்கு ஒதுக்கீடுசெய்யும் போழ்து**

| | | |
|---|---|---|
| விற்பவர் | க/கு | ப |
| பங்கு முதல் | க/கு | |
| பங்கு முனைமக் | க/கு | |

**எடுத்துக்காட்டு 33**

ஒரு கம்பெனி சேலம் கம்பெனியின் சொத்துகளை ரூ. 2,25,000-த்திற்கு வாங்கியது. இதன் விலைக்கு முழுதும்

செலுத்தப்பெற்ற பங்குகளாக பங்கு ஒன்று ரூ. 100 வீதம் தனது சாதாரண பங்குகளை ஒதுக்கீடு செய்தது. கீழ்க்கண்ட ஒவ்வொரு நிலையிலும் எந்தெந்தப் பதிவுகளைச் செய்யவேண்டும்?

(அ) பங்குகளைப் பெயரளவுத் தொகையில் வெளியிடும் போழ்து;

(ஆ) 10 சதவீதம் தள்ளுபடியில் வெளியிடும்போழ்து;

(இ) 25 சதவீதம் முனைமத்திற்கு வெளியிடும்போழ்து.

**விடை :**

| | | | |
|---|---|---|---|
| சொத்துகள் க/கு | ப | 2,25,000 | |
| சேலம் கம்பெனி | | | 2,25,000 |
| (சொத்துகளைச் சேலம் கம்பெனியிடமிருந்து வாங்கியது.) | | | |

**(அ) பங்குகளைப் பெயரளவு மதிப்பில் வெளியிடும்போழ்து**

| | | | |
|---|---|---|---|
| சேலம் கம்பெனி | ப | 2,25,000 | |
| சாதாரண பங்கு முதல் கணக்கு | | | 2,25,000 |
| (ரூ. 100 மதிப்புள்ள 2,250 பங்குகளின் முழுத் தொகையும் செலுத்தப் பெற்றதாகச் சேலம் கம்பெனி வெளியிட்டது.) | | | |

**(ஆ) பங்குகளைத்தள்ளுபடியில் வெளியிடும் போழ்து**

| | | | |
|---|---|---|---|
| சேலம் கம்பெனி | ப | 2,25,000 | |
| பங்குத் தள்ளுபடிக் க/கு | ப | 25,000 | |
| சாதாரண பங்கு முதல் க/கு | | | 2,50,000 |
| (சொத்துகளை வாங்கியதற்குப் பங்கு ஒன்று ரூ. 100 வீதம், 2,500 பங்குகளை 10 சதவீதம் தள்ளுபடியில் வெளியிட்டது.) | | | |

**(இ) பங்குகளை முனைமத்தில் வெளியிடும்போழ்து**

| | | | |
|---|---|---|---|
| சேலம் கம்பெனி | ப | 2,25,000 | |
| சாதாரண பங்கு முதல் க/கு | | | 1,80,000 |
| பங்கு முனைமக் க/கு | | | 45,000 |
| (சொத்துகள் வாங்கிய தற்குப் பங்கு ஒன்று ரூ. 100 வீதம் 1,800 பங்குகளை 25 சதவீதம் முனைமத்தில் வெளியிட்டது.) | | | |

**விளக்கக் குறிப்பு :**

முனைமத் தொகையிலோ, தள்ளுபடித் தொகையிலோ பங்குகளை வெளியிடும்போழ்து எத்துணைப் பங்குகளைச் சொத்து களை விற்றவரிடத்தில் கம்பெனி வெளியிட்டது என்பதைக் கீழ்க் கண்டவாறு உணரலாம்.

(அ) முதலில், வெளியிடப்படும் பங்கு ஒன்றின் மதிப்பினை அறியவேண்டும். (மேற்சொன்ன எடுத்துக்காட்டில் 10 சதவீதம் தள்ளுபடியில் வெளியிடப்படும் பங்கு ஒன்றின் மதிப்பு ரூ. 90 ஆகும். 25 சதவீதம் முனைமத்தில் வெளியிடும் பங்கு ஒன்றின் மதிப்பு ரூ. 125 ஆகும்.)

(ஆ) பின்னர் சொத்துகள் விற்பவரிடத்தில் எத்துணைப் பங்குகள் வழங்கப்பட்டிருக்கின்றன என்பதை அறியவேண்டும்.

(1) தள்ளுபடியில் வெளியிடும்போழ்து :

ரூ. 90 செலுத்தவேண்டிய தற்கு அளிக்கப்படும் பங்கு—1 (ஒன்று).

ரூ. 2,25,000 செலுத்த வேண்டியதற்கு அளிக்கப் படும் பங்குகள் $\left.\right\}$ $\frac{2,25,000}{90}$ = 2,500 பங்குகள்

(2) முனைமத்தில் வெளியிடும்போழ்து :

ரூ. 125 செலுத்தத் தேவையான பங்கு 1

ரூ. 2,25,000 செலுத்தத் தேவையான பங்குகள் $\frac{2,25,000}{125}$

= 1,800 பங்குகள்.

**தோற்றுவிப்பாளர்கட்குப் பங்குகளை வெளியிடல்** (Issue of Shares to Promoters)

கம்பெனி அமைவதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்யும் தோற்றுவிப்பாளர்கட்கு அவர்கள் ஆற்றிய பணிக்கான வெகுமதியாகப் பங்குகளை முழுதும் செலுத்தப்பெற்றதாக வெளியிடலாம். வாணிக நற்பெயர் கணக்கில் (தொழில் நன்மதிப்பு கணக்கில்) (Goodwill Account) பற்றும், பங்குமுதல் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

**எடுத்துக்காட்டு 34**

கம்பெனி ஒன்று ரூ. 50 மதிப்புள்ள 20,000 பங்குகளுடன் பதிவு செய்யப்பட்டது. அது கடலூர் துணிக்கடையை ரூ. 2,50,000-த்திற்கு வாங்கியது. ரூ. 2,00,000 முழுதும் செலுத்தப்பட்ட பங்குகளாகவும், மீதித் தொகையை ரொக்கம் கொடுத்தும் விலையைத் தீர்த்தது. 200 பங்குகளை முழுதும் செலுத்தப்பெற்ற பங்குகளாக தோற்றுவிப்பாளருக்கு அவர் ஆற்றிய பணிக்காக ஒதுக்கீடு செய்ய இயக்குநர்கள் முடிவு செய்தனர். 10,800 பங்குகளை ரொக்கத்திற்குப் பொதுமக்களிடம் கம்பெனி வெளியிட்டது. பங்குகள் அனைத்திற்கும் பணம் செலுத்தப்பட்டுவிட்டதாகக் கொண்டு, குறிப்பேட்டுப் பதிவுகளையும், இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

விடை :

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | பலவகைச் சொத்துக்கள் கணக்கு ப | | 2,50,000 | |
| | கடலூர் துணிக்கடை | | | 2,50,000 |
| | (....நாளில் ஏற்பட்ட ஒப்பந்தத்தின்படி கடலூர் துணிக் கம்பெனியிடமிருந்து ரூ.2,50,000-த்திற்குச் சொத்துகளை வாங்கியது.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | வங்கிக் கணக்கு ப | | 5,40,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 5,40,000 |
| | (....நாளில் இயக்குநரவைதீர்மானித்தவாறு பங்கு ஒன்று ரூ. 50 வீதம் 10,800 பங்குகளை ரொக்கத்திற்குப் பொதுமக்களிடம் வெளியிட்டது.) | | | |
| | கடலூர் துணிக்கடை ப | | 2,50,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 2,00,000 |
| | வங்கிக் கணக்கு | | | 50,000 |
| | (....நாளில் ஏற்பட்ட ஒப்பந்தத்தின் படி சொத்து விற்றவரின் கணக்கைத் தீர்க்க 4,000 பங்குகளை முழுதும் செலுத்தப்பட்டவைகளாக வெளியிட்டதும், ரூ. 50,000 ரொக்கமாகக் கொடுத்ததும்.) | | | |
| | வாணிக நற்பெயர் கணக்கு ப | | 10,000 | |
| | பங்கு முதல் கணக்கு | | | 10,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு தோற்றுவிப்பாளர்கட்கு 200 பங்குகளை முழுதும் செலுத்தப்பட்டவைகளாக வெளியிட்டது.) | | | |

......................கம்பெனியின்
..........நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| **பங்கு முதல்** | | | |
| அதிகாரம் பெற்றது : | .... | வாணிக நற்பெயர் .. | 10,000 |
| பங்கு ஒன்று ரூ. 50 வீதம் 20,000 பங்குகள் .. | 10,00,000 | பல்வகைச் சொத்துகள் | 2,50,000 |
| வெளியிட்டது : | | வங்கி .. | 4,90,000 |
| ஒன்று ரூ. 50 வீதம் 15,000 பங்குகள் முழுவதும் செலுத்தப்பெற்றவை .. | 7,50,000 | | |
| (மேற்கண்ட பங்குகளில் ரொக்கம் பெறாது ஒப்பந்தத்தின் தொடர்பாக 4,200 பங்குகள் முழுவதும் செலுத்தப்பெற்ற பங்குகளாக ஒதுக்கீடு செய்யப்பட்டிருக்கின்றன.) | | | |
| | 7,50,000 | | 7,50,000 |

**உரிமைப் பங்குகளை வெளியிடல்** (Rights Share)

கம்பெனிச் சட்டம் 81-வது பிரிவின்படி ஒரு பொதுக் கம்பெனி, கம்பெனி அமைக்கப்பெற்ற இரண்டு ஆண்டுகட்குப் பின்னர் அல்லது கம்பெனி அமைக்கப்பெற்றுப் பங்கு ஒதுக்கிய ஓர் ஆண்டிற்குப் பின், மீண்டும் பங்குகளை வெளியிடின், அவற்றை முதலில் தற்பொழுதுள்ள நேர்மைப் பங்குநர்கட்கு வெளியிட வேண்டுமென்று முன்னரே கூறியுள்ளோம். (கம்பெனி சிறப்புத்தீர்மானம் நிறைவேற்றுவதுமூலமாக இதனைப் புறக்கணித்து விடலாம்.) இது பற்றிய பிற நிபந்தனைகளை முன்னரே கூறியுள்ளோம். கம்பெனிச் சட்டத்தின்படி சாதாரண பங்குநர்கள் இப் பங்குகளை முதலில் ஒதுக்கப் பெறுவதற்கு உரிமை படைத்தவர்களாதலால், இவை உரிமைப் பங்குகள் (Rights Shares) எனப்படும். கம்பெனி நல்ல இலாபத்தை ஈட்டும்போழ்து, பங்குகளின் சந்தை மதிப்பு மிகவும் கூடுதலாக இருக்கும். எனவே இப் பங்குகளைப் பெறுவது மிகவும் சிறந்த உரிமையாகும். இவ்வுரிமையையே பிறருக்கு விற்கவும் செய்யலாம். இவ் வுரிமையை வாங்குபவர் கம்பெனி அளிக்கும் இப் புதிய பங்குகளை வாங்கும் உரிமையைப் பெறுகிறார். சில வேளைகளில் இப் பயனின் பண மதிப்பினை அல்லது உரிமை மதிப்பினை (Value of Right) கணக்கிடுமாறு வேண்டப்படலாம்.

உரிமை மதிப்பினைக் கணக்கிட கீழ்க்கண்ட முறையினைப் பின்பற்றலாம் :

(i) கம்பெனி வெளியிடும் புதிய பங்குகளை வாங்குவதற்கு வைத்திருக்க வேண்டிய பங்குகளின் மொத்த சந்தை மதிப்பினை (Market Value) கணக்கிடுக. எடுத்துக்காட்டாக, வைத்திருக்கும் ஒவ்வொரு மூன்று பங்குகட்கும் ஒரு புதிய பங்கைக் கம்பெனி அளிக்குமாயின், ஒவ்வொரு புதிய பங்கினைப் பெறுவதற்குத் தேவையான மூன்று பங்குகளின் சந்தை மதிப்பைக் கணக்கிட வேண்டும்.

(ii) மேற்சொன்னவாறு கணக்கிடப்பட்ட மொத்த சந்தை மதிப்புடன் புதிய பங்கு வாங்குவதற்காகக் கம்பெனிக்குச் செலுத்தவேண்டிய தொகையைக் கூட்டுக.

(iii) இந்த நான்கு பங்குகளின் மொத்த விலை தெரிகிறது. இதன் சராசரி விலையைக் கண்டுபிடிக்கவும்.

(iv) இச் சராசரி விலையுடன் சந்தை விலையை ஒப்பிடுக. இவ்விரண்டு விலைகளிலுமுள்ள வேற்றுமைத் தொகையே உரிமை மதிப்பாகும்.

## எடுத்துக்காட்டு 35

ஒரு கம்பெனியின் முதல் ரூ. 100 மதிப்புள்ள 10,000 முழுதும் செலுத்தப்பெற்ற பங்குகளாகும். ரூ. 100 மதிப்புள்ள 5,000 புதிய பங்குகளை வெளியிட்டுத் தனது முதலை அதிகரிக்கிறது. தனது தற்போதைய பங்குதாரர்கள் வைத்திருக்கும் ஒவ்வொரு இரு பங்குகட்கும் ஒரு பங்கு வீதம், பங்கு ஒன்று ரூ. 150 மதிப்பில் அளிக்கின்றது. இவ் வுரிமைப் பங்குகளை வெளியிடும் நாளில் கம்பெனிப் பங்குகளின் சந்தை மதிப்பு ரூ. 210. உரிமை மதிப்பினைக் கணக்கிடுக.

**விடை :**

| | | |
|---|---|---|
| முன்னரே வைத்திருக்கும் இரு பங்குகளின் சந்தை விலை (2 × 210) | = ரூ. | 420 |
| **கூட்டு :** | | |
| புதிய பங்கு ஒன்றினைப் பெற செலுத்த வேண்டிய தொகை | = ரூ. | 150 |
| மூன்று பங்குகளின் மொத்த விலை : | = ரூ. | 570 |

$$\text{ஒரு பங்கின் சராசரி மதிப்பு} = \frac{570}{3} = 190$$

| | | |
|---|---|---|
| சந்தை விலை | = ரூ. | 210 |
| **கழி :** மதிப்பிடப்பட்ட ஒரு பங்கின் மதிப்பு | = ரூ. | 190 |
| உரிமைப் பங்கின் மதிப்பு | = ரூ. | 20 |

### மீள்தகு முன்னுரிமைப் பங்குகள்
### (Redeemable Preference Shares)

சாதாரணமாக ஒரு கம்பெனி தனது பங்குகளைத் தானே வாங்கிக்கொள்ள முடியாது. தனது பிடிப்புக் கம்பெனியின் பங்குகளையும் வாங்கமுடியாது. எனவே, கம்பெனி நடந்து கொண்டிருக்கும்பொழுது பங்குதாரர்கட்குப் பங்குத் தொகையைத்

திருப்பித்தர இயலாது. ஆனால், கம்பெனிச் சட்டத்தின் 80-வது பிரிவு திரும்ப வாங்கிக்கொள்ளும் முன்னுரிமைப் பங்குகளை ஒரு கம்பெனி வெளியிட அனுமதிக்கிறது. இவ்வாறு தான் வெளியிட்ட முன்னுரிமைப் பங்குகளைத் தானே வாங்கிக் கொள்ள (மீட்க) சில கட்டுப்பாடுகள் உள.

(1) கம்பெனியின் செயல்முறை விதிகள் அதிகாரம் வழங்குமாயின், கம்பெனி விரும்பும்பொழுது மீட்கக்கூடிய முன்னுரிமைப் பங்குகளை வெளியிடலாம்.

(2) பங்காதாயம் (dividend) வழங்கக் கூடிய இலாபத்திலிருந்துதான் அவ் வகைப் பங்குகளை மீட்கமுடியும்; அல்லது இவ்வாறு மீட்பதற்காகவே புதிய பங்குகளை வெளியிட்டு, அதிலிருந்து கிடைக்கும் தொகையிலிருந்து மீள்தகு முன்னுரிமைப் பங்குகளை மீட்கலாம்.

(3) அவ்வகைப் பங்குகள் முழுதும் செலுத்தப்பெற்றவைகளாக இருந்தாலொழிய மீட்கமுடியாது. (அதாவது இவ்வகை முன்னுரிமைப் பங்குகளை மீட்க வேண்டுமாயின், அவை முழுதும் செலுத்தப்பட்டவைகளாக இருக்கவேண்டும்.)

(4) பங்காதாயம் வழங்கக்கூடிய இலாபத்திலிருந்து பங்குகள் மீட்கப்படுமாயின், மீட்கப்பட்ட பங்குகளின் பெயரளவு தொகையை 'முதல் மீட்புக் காப்புக் கணக்கு' (Capital Redemption Reserve Account) எனும் கணக்கிற்கு மாற்ற வேண்டும்.

(5) பங்குகள் முனைமத்தில் மீட்கப்படுமாயின், கம்பெனியின் இலாபத்திலிருந்து அம் முனைமத் தொகை ஒதுக்கப்பட வேண்டும். அல்லது கம்பெனியின் பங்கு முனைமக் கணக்கிலிருந்து பங்கு மீட்பு முனைமத்தொகை ஒதுக்கப்படவேண்டும்.

(6) புதிதாக வெளியிடப்படும் பங்குகளிலிருந்து முன்னுரிமைப் பங்குகள் மீட்கப்படுமாயின், கம்பெனியின் பங்கு முதல், இவ்வாறு பங்குகளை வெளியிடுவதால் அதிகரிப்பதாக 611-வது பிரிவின்படி கட்டணம் செலுத்துவதற்குக் கருதக்கூடாது.

(7) முத்திரை வரியைப் (Stamp Duty) பொருத்தவரை, புதிய பங்குகளை வெளியிட்ட ஒரு திங்களுக்குள் பழைய பங்குகள் மீட்கப்படுமாயின் மட்டுமே, இப் பிரிவின் கீழ் அவை வெளி

யிடப்பட்டதாகக் கொள்ளப்படும். அதாவது, புதிய பங்குகளை வெளியிட்ட ஒரு திங்களுக்குள் பழைய முன்னுரிமைப் பங்குகளை மீட்டால் மட்டுமே, அவை முன்னுரிமைப் பங்குகளை மீட்பதற்காக வெளியிடப்பட்ட புதிய பங்குகளாகக் கொள்ளப்படும்.

(8) முன்னுரிமைப் பங்குகளை மீட்டல், கம்பெனியின் அதிகாரம் பெற்ற முதலைக் குறைப்பதாகக் கருதக்கூடாது.

(9) பங்குநர்கட்கு முழுதும் செலுத்தப்பட்ட மேலூதியப் பங்குகளை வெளியிடுவதற்காக மட்டுமே முதல் மீட்புக் காப்புக் கணக்கைப் பயன்படுத்தமுடியும். இல்லையெனில் அதனை அவ்வாறே வைத்திருக்கவேண்டும். நீதிமன்றம் ஒப்புதல் அளித்தால் மட்டுமே இக் கணக்கை வேறுவகைகட்குப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

பங்காதாயம் வழங்கக்கூடிய இலாபம் இல்லா நிலையில் புதுப் பங்குகளை வெளியிடுவதின் வாயிலாகவே முன்னுரிமைப் பங்குகளை மீட்கமுடியும். இலாபம் இல்லாது, புதிய பங்குகளையும் வெளியிடாமற் சலுகைப் பங்குகளை மீட்டல் சட்டத்திற்குப் புறம்பானது என்பதை உணரவேண்டும். (தேர்வுக் கணக்குகளைப் பொருத்தவரை, புதிய பங்குகளை வெளியிடாமல் முன்னுரிமைப் பங்குகள் மீட்கப்படுவதாகக் கொடுக்கப்பட்டிருப்பின், வேண்டிய அளவிற்கு இலாபம் இருப்பதாகக் கொண்டு முதல் மீட்புக் காப்புக் கணக்கு ஒன்றைத் தொடங்கி அதில் வரவு வைக்க வேண்டும்.)

**முன்னுரிமைப் பங்குகளை மீட்கும் போழ்து, கம்பெனி கடனீட்டுப் பத்திரங்களையும் வெளியிடலாம். ஆனால் இதனைப் புதிய பங்குகளை வெளியிடுவதாகக் கொள்ளக்கூடாது ; எனவே, இதனின்றும் கிட்டும் தொகையைக்கொண்டு மீள்தகு முன்னுரிமைப் பங்குகளை மீட்கக்கூடாது.**

முன்னுரிமைப் பங்குகளை மீட்கும்பொழுது அதற்குப் பதிலாக (1) புதிய பங்குகள் வெளியிடப்பட்டிருக்கின்றன ; அல்லது (2) முதல் மீட்புக் காப்புக் கணக்கு என அதே தொகையளவிற்குத் தொடங்கப்படுகிறது. எனவே, மீள்தகு முன்னுரிமைப் பங்குகள் உண்மையிலேயே மீட்கப்படுவதில்லை. அவை கூடுதல் பங்கு முதல் தொகையாலோ அல்லது முதல் மீட்புக் காப்புக் கணக்காலோ திரும்பப் புதுப்பிக்கப்படுகிறது என்பதே உண்மை.

முன்னுரிமைப் பங்குகளை மீட்பதற்காக வெளியிடப்படும் புதிய பங்குகளினின்றும் பெறும் தொகை போதுமான அளவிற்கு இல்லையெனில், எவ்வளவு குறைகின்றதோ அத் தொகைக்கு இலாப-நட்டக் கணக்கிலிருந்து அல்லது பிற காப்புக் கணக்கி லிருந்து முதல் மீட்புக் கணக்கிற்கு மாற்றவேண்டும். எடுத்துக் காட்டாக, ரூ. 5,00,000 மதிப்புள்ள முன்னுரிமைப் பங்குகள் மீட்கப்பட வேண்டுமென்றும், இதற்காகப் புதிதாக வெளியிடப் படும் பங்குகளினின்றும் பெறும் தொகை ரூ. 3,50,000 என்றும் கொண்டால், புதிய பங்குத் தொகைக்கும் அதிகமாக தேவைப் படும் தொகை ரூ. 1,50,000 ஆகும். எனவே, இத் தொகைக்கு இலாப-நட்டக் கணக்கில் பற்றும், முதல் மீட்புக் காப்புக் கணக் கில் வரவும் வைக்கவேண்டும் என்பது புலப்படும்.

கம்பெனிச் சட்டம் 80-வது பிரிவில் கூறப்பட்டிருப்பதில் ஐயம் ஏற்படலாம். முதல் மீட்புக் காப்புக் கணக்கிற்கு மாற்ற வேண்டிய தொகையைக் கணக்கிடுவதில் இவ்வையம் ஏற்படு கிறது. ''புதிய பங்கு வெளியீட்டுத் தொகையிலிருந்து (Out of the proceeds of the fresh issue of shares) எனும் சொற்கள், பங்குகள் முனைமத்தில் வெளியிடப்பட்டிருக்குமாயின், முனைமத் தொகையைக் கணக்கில் எடுத்துக்கொள்ளக் கூடாது என்று சிலரும், புதிய பங்கு வெளியீட்டுத் தொகை என்றிருப்பதால் அது முனைமத் தொகையையும் உள்ளடக்கும் என்று ஒரு சிலரும் கருதுகின்றனர். 'புதிய வெளியீட்டுத் தொகை' எனும் சொற்கள் பங்குகள் முனைமத்தில் வெளியிடப்பட்டிருக்குமாயின் முனைமத் தொகையை உள்ளடக்காது. பங்குகள் தள்ளுபடியில் வெளியிடப் பட்டிருக்குமாயின், தள்ளுபடி போக, மீதி பெற்ற நிகரத் தொகையை அவை குறிக்கும்,'' என்று ஆர்.எல். குப்தா அவர்கள் கருதுகிறார். (Advanced Accountancy, Theory, Method & Application – First Edition, Page-25.)

'வெளியீட்டுத் தொகை' எனும் சொல் பயன்படுத்தப் பட்டிருப்பதால் பெற்ற தொகை முழுவதையும் அது குறிக்கும். அது மட்டுமன்று, முனைமத் தொகையை ஒதுக்கிவிட்டால், பங்கு வெளியீட்டில் அளித்த தள்ளுபடியையும் ஒதுக்கிவிடவேண்டும். இது முற்றிலும் தவறு. ஆனால், பங்கு முனைமத் தொகை வேறு சில நோக்கங்கட்காகப் பயன்படுத்தப்பட்டிருப்பின் (மீள்தகு முன்னுரிமைப் பங்குகட்குச் செலுத்தவேண்டிய முனைமத் தொகைக் காக ஒதுக்கப்பட்டிருக்குமாயின்), அப்பொழுது முதல் மீட்புக் காப்புக் கணக்கிற்கு வரவு வைக்கவேண்டிய தொகையைக் கணக் கிடும்பொழுது பங்கு முனைமத் தொகையைக் கணக்கில் எடுத்துக்

கொள்ளக்கூடாது என்று எம். சி. சுக்லா, டி. எஸ். கிராவல் கருதுகின்றனர். (Advanced Accounts by M. C. Shukla & T. S. Grewal – 7th Edition, Vol-II, Page-66.)

" 'புதிய பங்கு வெளியீட்டுத் தொகை' எனும் சொற்கள் முனைமத் தொகையை உள்ளடக்கலாம்; அல்லது உள்ளடக்காமலும் இருக்கலாம். இவ்விரண்டு விதங்களில் பொருள் கூறுதலும் சரியே" என்று ரூப் ராம் குப்தா அவர்களும், வித்யாசரண் குப்தா அவர்களும் கருதுகின்றனர். (Advanced Accounting by Rup Ram Guptha & Vithyaswaran Guptha – 10th Edition, Page-157.)

எனவே, இவ்வாறு ஒவ்வொரு வகையிலும் பொருள் கொள்ளுதல் சரியாக இருப்பினும் 'Proceeds of the fresh issue' என்பதற்குப் புதிய பங்குகளிலிருந்து பெறும் தொகையை மட்டுமே அதாவது, முனைமத் தொகையைச் சேர்க்காமல் கிடைக்கும் தொகையை மட்டுமே கணக்கில் எடுத்துக்கொள்வோம்.

புதிய பங்குகளை வெளியிடாமல் முன்னுரிமைப் பங்குகள் மீட்கப்படுமாயின், பங்காதாயம் வழங்கக்கூடிய இலாபத்திலிருந்து தான் அவை மீட்கப்பட்டனவென்று கொள்ளவேண்டும். அத்தகைய இலாபங்களிலிருந்து மட்டுமே முதல் மீட்புக் காப்புக் கணக்கிற்குத் தேவையான தொகையை எடுத்துச் செல்லவேண்டும். அதாவது, பங்காதாயம் வழங்க முடியாத வேறுவகை இலாபங்களிலிருந்து இம் முதல் மீட்புக் காப்புக் கணக்கிற்குத் தொகையினை எடுத்துச் செல்லக்கூடாது. கீழ்க்கண்ட கணக்குகளிலிருந்து முதல் மீட்புக் காப்புக் கணக்கிற்கு எடுத்துச் செல்லமுடியும்.

(1) பொதுக்காப்பு (General Reserve);

(2) காப்பு நிதி (Reserve Fund);

(3) பங்காதாய சமன்பாட்டு நிதி (Dividend Equalisation Fund);

(4) காப்பீட்டு நிதி (Insurance Fund);

(5) தொழிலர் ஈட்டு நிதி (Workmen's Compensation Fund);

(6) தொழிலர் விபத்து நிதி (Workmen's Accident Fund);

(7) இலாபு-நட்டக் கணக்கு.

கீழ்க்கண்ட இலாபக் கணக்குகளிலிருந்து பங்காதாயம் வழங்க முடியாது. எனவே, முதல் மீட்புக் காப்புக் கணக்கிற்குத் தேவையான தொகையை இவற்றிலிருந்து எடுத்துச் செல்ல முடியாது.

(1) பங்கு முனைமக் கணக்கு;

(2) ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குக் கணக்கு;

(3) கூட்டுருவாக்கத்திற்கு முந்தைய இலாபம் (Profit prior to incorporation);

(4) முதல் காப்பு (Capital Reserve).

மேற்கூறியவற்றிலிருந்து நாம் அறிவது : முன்னுரிமைப் பங்குகளைப் பங்காதாயம் வழங்கக்கூடிய இலாபத்திலிருந்தோ அல்லது அதற்கெனப் புதிய பங்குகள் வெளியிட்டுப் பெறும் தொகையிலிருந்தோதான் மீட்கமுடியும். சொத்துகளை விற்றுப் பெறும் தொகையிலிருந்து இவைகளை மீட்கமுடியாது. முன்னுரிமைப் பங்குகளை மீட்கப் புதிய ரொக்கம் இல்லையெனில் கம்பெனி கடன் வாங்கலாம். அல்லது, நடப்புச் சொத்துக்களை (Current Asssets) விற்றுப் பணம் திரட்டலாம். அதன் நிலைச் சொத்துகளை (Fixed Assets) விற்று இதற்கு வேண்டிய பணத்தைத் திரட்டக்கூடாது.

மீண்டும் ஒரு கருத்தையும் இவண் உணர்தல் நலம். கம்பெனி ஒன்று மீள்தகு முன்னுரிமைப் பங்குகளை 'வெளியிடலாம்' என்றுதான் கம்பெனிச் சட்டத்தின் 80-வது பிரிவு கூறுகிறது. தன்னுடைய பங்கு முதலை மீள்தகு முன்னுரிமைப் பங்குகளாக மாற்றிப் பின்னர் அவற்றை மீட்டுக் கொள்ளலாம் என்று கூற வில்லை. எனவே, கம்பெனி வெளியிடும்பொழுதே முன்னுரிமைப் பங்குகள் மீள்தகு முன்னுரிமைப் பங்குகளாக இருக்கவேண்டும்.

முன்னுரிமைப் பங்குகளை மீட்கும்பொழுது தேவையான பதிவுகள் :

(1) புதிய பங்குகளை வெளியிடும்பொழுது, வங்கிக் கணக்கில் பற்றும், பங்கு விண்ணப்ப ஒதுக்கீட்டுக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். பின்னர், பங்கு விண்ணப்ப ஒதுக்கீட்டுக் கணக்கில் பற்றும், பங்கு முதல் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். இத்தகைய பதிவுகளுக்கு மாறாக, ஒரே பதிவிலும்

இதனைச் செய்யலாம். அதாவது, மொத்தத் தொகைக்கு வங்கிக் கணக்கில் பற்றும், பங்குமுதல் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

பங்குகள் தள்ளுபடியில் வெளியிடப்படுமாயின், வங்கிக் கணக்கிலும், பங்குத் தள்ளுபடிக் கணக்கிலும் பற்று வைத்து, பங்குமுதல் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

புதிய பங்குகள் முனைமத்தில் வெளியிடப்படுமாயின், வங்கிக் கணக்கில் பற்றும், பங்கு முதல் கணக்கிலும் பங்கு முனைமக் கணக்கிலும் வரவும் வைக்கவேண்டும்.

(2) இப்பொழுது, முன்னுரிமைப் பங்குகளை மீட்பதற்கான பதிவுகளைச் செய்யவேண்டும். இதற்கு மீள்தகு முன்னுரிமைப் பங்குகள் கணக்கில் பற்றும், மீள்தகு முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

முன்னுரிமைப் பங்குகளை முனைமத் தொகையில் மீட்பதாயின், மீள்தகு முன்னுரிமைப் பங்குகள் கணக்கிலும் மீட்பு முனைமக் கணக்கிலும் பற்று வைத்து, மீள்தகு முன்னுரிமைப் பங்குதாரர்கள் கணக்கில் வரவு வைக்கவேண்டும்.

பின்னர், மீள்தகு முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

மேற்சொன்ன பதிவுகளுக்கு மாறாக, வேறுவகையிலும் இதனைப் பதிவு செய்வது வழக்கம்.

(அ) முதலில் மீள்தகு முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கிலும் மீட்பு முனைமக் கணக்கிலும் பற்று வைத்து, முதல் மீட்புக் கணக்கில் (Capital Redemption Account) வரவும் வைக்கப்படும். பின்னர், முதல் மீட்புக் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்கப்படும்.

(3) முன்னுரிமைப் பங்குகளை மீட்கும்பொழுது செலுத்தப்படும் முனைமத் தொகையை இலாப-நட்டக் கணக்கிற்கோ, பங்கு முனைமக் கணக்கிற்கோ மாற்றவேண்டும்.

எந்தக் குறிப்பிட்ட கணக்கிற்கும், இம் மீட்பு முனைமத் தொகையை எடுத்துச் செல்வதற்குத் தடையில்லை. எனினும்,

இதனை முதலில் பங்கு முனைமக் கணக்கிற்கு மாற்றுதலே சிறந்தது என்று கருதப்படுகிறது. தேவையான பதிவுகள் :

பங்கு முனைமக் கணக்கு ப

இலாப-நட்டக் கணக்கு ப
முன்னுரிமைப் பங்கு மீட்பு
முனைமக் கணக்கு

(4) இந்த மீட்கப்பட்ட முன்னுரிமைப் பங்குகளின் தொகையையும் (முனைமம் இன்றி) புதிதாக வெளியிடப்பட்ட முதல் தொகையையும் (முனைமமின்றி, ஆனால் தள்ளுபடி போக) ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். புதிய வெளியீட்டுத் தொகை மீட்கப்பட்ட பங்குத் தொகையைவிடக் குறைவாயிருப்பின், இவ்விரண்டிற்குமுள்ள வேறுபாட்டுத் தொகையை முதல் மீட்புக் காப்புக் கணக்கிற்கு எடுத்துச் செல்லவேண்டும். இதற்கு இலாப-நட்டக் கணக்கிலோ, பொதுக் காப்புக் கணக்கிலோ அல்லது வேறு வருவாய் இலாபக் கணக்கிலோ (Revenue Profit) பற்றும், முதல் மீட்புக் காப்புக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

## எடுத்துக்காட்டு 36

ஒரு கூட்டுப் பங்குக் கம்பெனி மீள்தகு முன்னுரிமைப் பங்குகளைக் கீழ்க்கண்ட வகைகளில் மீட்கத் தேவையான குறிப் பேட்டுப் பதிவுகளைத் தருக :

(அ) பங்காதாயம் (dividend) வழங்கக்கூடிய இலாபத்தி லிருந்து பங்கு ஒன்று ரூ. 100 வீதம் 6 சதவீதம் 3,000 முன்னுரிமைப் பங்குகளை மீட்டல்.

(ஆ) பங்காதாயம் வழங்கக்கூடிய இலாபத்திலிருந்து பங்கு ஒன்று ரூ. 100 வீதம் 6 சதவீதம் 3,000 முன்னுரிமைப் பங்குகளை 10 சதவீதம் முனைமத்தில் மீட்டல்.

(இ) ஒன்று ரூ. 100 வீதம் 6 சதவீதம் 3,000 முன் னுரிமைப் பங்குகளை மீட்க, ரூ. 10 மதிப்புள்ள 30,000 நேர்மைப் பங்குகளை வெளியிடல். (பங்குகள் அனைத்திற்கும் விண்ணப்பங்கள் பெறப்பட்டு ஒதுக்கீடு செய்யப்பட்டுவிட்டனவென்று கொள்க.)

(ஈ) தன்னிடமுள்ள ஒன்று ரூ. 100 வீதம் 6 சதவீதம் 3,000 முன்னுரிமைப் பங்குகளை 10 சதவீத முனைமத்தில் மீட்க பங்கு ஒன்று ரூ. 10 மதிப்புள்ள 30,000 நேர்மைப் பங்குகளை

வெளியிடல். (பங்குகள் அனைத்திற்கும் விண்ணப்பங்கள் பெறப்பட்டு ஒதுக்கீடு செய்யப்பட்டுவிட்டனவென்று கொள்க.)

(உ) தன்னிடமுள்ள ஒன்று ரூ. 100 வீதம் 6 சதவீதம் 3,000 முன்னுரிமைப் பங்குகளை 10 சதவீதம் முனைமத்தில் மீட்க. பங்கு ஒன்று ரூ. 10 மதிப்புள்ள 30,000 நேர்மைப் பங்குகளை 20 சதவீதம் முனைமத்தில் வெளியிடல். (பங்குகள் அனைத்திற்கும் விண்ணப்பங்கள் பெறப்பட்டு ஒதுக்கீடு செய்யப்பட்டுவிட்டன வென்று கொள்க.)

(ஊ) தன்னிடமுள்ள ஒன்று ரூ. 100 வீதம் 6 சதவீதம் 3,000 முன்னுரிமைப் பங்குகளை 10 சதவீதம் முனைமத்தில் மீட்க பங்கு ஒன்று ரூ. 10 மதிப்புள்ள 25,000 நேர்மைப் பங்குகளை 10 சதவீதம் முனைமத்தில் வெளியிடல். (பங்குகள் அனைத்திற்கும் விண்ணப்பங்கள் பெறப்பட்டு ஒதுக்கப்பட்டுவிட்டனவென்றும், இலாப-நட்டக் கணக்கு ரூ. 75,000 வரவிருப்பைக் காட்டுகிறதென்றும் கொள்க.)

**விடை:**

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | (அ) | | ரூ. | ரூ. |
| | 6 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்குமுதல் கணக்கு ப | | 3,00,000 | |
| | மீள்தகு முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கு | | | 3,00,000 |
| | (மீள்தகு முன்னுரிமைப் பங்குகளை மீட்க, பங்குநர்கள் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| | மீள்தகு முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கு ப | | 3,00,000 | |
| | வங்கிக் கணக்கு | | | 3,00,000 |
| | (முன்னுரிமைப் பங்குகளை மீட்கத் தொகை செலுத்தல்.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | இலாப-நட்டக் கணக்கு ப | | 3,00,000 | |
| | முதல் மீட்புக் காப்புக் கணக்கு | | | 3,00,000 |
| | (சட்டத்தின்படி இலாபத்தைக் காப்புக் கணக்கிற்கு மாற்ற.) | | | |

மேலே கொடுக்கப்பட்ட முதல் இரு பதிவுகளுக்கு மாருக, கீழ்க்கண்டவாறும் பதிவுகளைச் செய்யலாம் :

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | 6 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்குக் கணக்கு ப | | 3,00,000 | |
| | முதல் மீட்புக் கணக்கு | | | 3,00,000 |
| | (மீள்தகு முன்னுரிமைப் பங்கு முதலை முதல் மீட்புக் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| | முதல் மீட்புக் கணக்கு ப | | 3,00,000 | |
| | வங்கிக் கணக்கு | | | 3,00,000 |
| | (முன்னுரிமைப் பங்குகளை மீட்கத் தொகை செலுத்தல்.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | (ஆ) | | ரூ. | ரூ. |
| | 6 சதவீதம் மீள் தகு முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கு ப | | 3,00,000 | |
| | முன்னுரிமைப் பங்கு மீட்பு முனைமக் கணக்கு ப | | 30,000 | |
| | மீள்தகு முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கு | | | 3,30,000 |
| | (மீள்தகு முன்னுரிமைப் பங்குகளை முனைமத்தில் மீட்க முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| | மீள்தகு முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கு ப | | 3,30,000 | |
| | வங்கிக் கணக்கு | | | 3,30,000 |
| | (மீள்தகு முன்னுரிமைப் பங்குகளை மீட்கத் தொகை செலுத்தல்.) | | | |
| | இலாப-நட்டக் கணக்கு ப | | 30,000 | |
| | முன்னுரிமைப் பங்கு மீட்பு முனைமக் கணக்கு | | | 30,000 |
| | (முன்னுரிமைப் பங்குகளை மீட்கும்பொழுது கொடுத்த முனைமத் தொகையை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்ற.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | இலாப-நட்டக் கணக்கு ப | | 3,00,000 | |
| | முதல் மீட்புக் காப்புக் கணக்கு | | | 3,00,000 |
| | (சட்டத்தின்படி இலாபத்தைக் காப்புக் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| | (இ) | | | |
| | வங்கிக் கணக்கு ப | | 3,00,000 | |
| | நேர்மைப் பங்கு முதல் கணக்கு | | | 3,00,000 |
| | (பங்கு ஒன்று ரூ. 10 வீதம் 30,000 நேர்மைப் பங்குகள்மீது மீது பெற்ற தொகை.) | | | |
| | (அல்லது) | | | |
| | வங்கிக் கணக்கு ப | | 3,00,000 | |
| | பங்கு விண்ணப்ப—ஒதுக்கீட்டுக் கணக்கு | | | 3,00,000 |
| | (பங்கு ஒன்று ரூ. 10 வீதம் 30,000 நேர் மைப் பங்கு மீது பெற்ற தொகை.) | | | |
| | பங்கு விண்ணப்ப—ஒதுக்கீட்டுக் கணக்கு ப | | 3,00,000 | |
| | நேர்மைப் பங்கு முதல் கணக்கு | | | 3,00,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்று ரூ. 10 வீதம் 30,000 நேர்மைப் பங்குகளை ஒதுக்கியது.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | 6 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கு ப | | 3,00,000 | |
| | முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கு | | | 3,00,000 |
| | (முன்னுரிமைப் பங்குகளை மீட்க, முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| | முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கு ப | | 3,00,000 | |
| | வங்கிக் கணக்கு | | | 3,00,000 |
| | (மீள்தகு முன்னுரிமைப் பங்குகளை மீட்கத், தொகை செலுத்தியது.) | | | |
| | (ஈ) | | | |
| | வங்கிக் கணக்கு ப | | 3,00,000 | |
| | நேர்மைப் பங்கு முதல் கணக்கு | | | 3,00,000 |
| | (பங்கு ஒன்றுக்கு ரூ.10 வீதம் 30,000 நேர்மைப் பங்குகட்கு விண்ணப்பங்கள் பெற்று ஒதுக்கியது.) | | | |
| | 6 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கு ப | | 3,00,000 | |
| | முன்னுரிமைப் பங்கு மீட்பு முனைமக் கணக்கு ப | | 30,000 | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கு | | | 3,30,000 |
| | (பங்கு ஒன்று ரூ. 100 வீதம் 3,000 மீள்தகு முன்னுரிமைப் பங்குகளை 10 சதவீதம் முனைமத்தில் மீட்க, பங்குநர்கள் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| | மீள்தகு முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கு ப | | 3,30,000 | |
| | வங்கிக் கணக்கு | | | 3,30,000 |
| | (முன்னுரிமைப் பங்குகளை மீட்கத் தொகை செலுத்தியது.) | | | |
| | இலாப-நட்டக் கணக்கு ப | | 30,000 | |
| | முன்னுரிமைப் பங்கு மீட்பு முனைமக்கணக்கு | | | 30,000 |
| | (முன்னுரிமைப் பங்குகளை மீட்கும்பொழுது செலுத்திய முனைமத் தொகையை, இலாப-நட்டக் கணக்கில் ஒதுக்கப்படுகிறது.) | | | |
| | (உ) | | | |
| | வங்கிக் கணக்கு ப | | 3,60,000 | |
| | நேர்மைப் பங்கு முதல் கணக்கு | | | 3,00,000 |
| | பங்கு முனைமக் கணக்கு | | | 60,000 |
| | (பங்கு ஒன்று ரூ. 10 வீதம் 30,000 நேர்மைப் பங்குகள் 20 சதவீதம் முனைமத்தில் வெளியிட்டு ஒதுக்கப்பெற்றது.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | 6 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கு ப | | 3,00,000 | |
| | முன்னுரிமைப் பங்கு மீட்பு முனைமக் கணக்கு ப | | 30,000 | |
| | மீள்தகு முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கு | | | 3,30,000 |
| | (பங்கு ஒன்று ரூ. 100 வீதம் 3,000 மீள்தகு முன்னுரிமைப் பங்குகளை 10 சதவீதம் முனைமத்தில் மீட்க, முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கிற்கு மாற்றியது.) | | | |
| | மீள்தகு முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கு ப | | 3,30,000 | |
| | வங்கிக் கணக்கு | | | 3,30,000 |
| | (மீள்தகு முன்னுரிமைப் பங்குகளை மீட்கத் தொகை செலுத்தியது) | | | |
| | பங்கு முனைமக் கணக்கு ப | | 30,000 | |
| | முன்னுரிமைப் பங்கு மீட்பு முனைமக் கணக்கு | | | 30,000 |
| | (மீள்தகு முன்னுரிமைப் பங்குகளை மீட்ட பொழுது செலுத்திய முனைமத் தொகையைப் பங்கு முனைமக் கணக்கில் ஒதுக்க.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | (ஊ) | | ரூ. | ரூ. |
| | வங்கிக் கணக்கு ப | | 2,75,000 | |
| | நேர்மைப் பங்கு முதல் கணக்கு | | | 2,50,000 |
| | பங்கு முனைமக் கணக்கு | | | 25,000 |
| | (பங்கு ஒன்று ரூ. 10 வீதம் 25,000 நேர்மைப் பங்குகளை 10 சதவீதம் முனைமத்தில் வெளியிட்டு ஒதுக்கீடு செய்தது.) | | | |
| | 6 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கு ப | | 3,00,000 | |
| | முன்னுரிமைப் பங்கு மீட்பு முனைமக் கணக்கு ப | | 30,000 | |
| | முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கு | | | 3,30,000 |
| | (பங்கு ஒன்று ரூ. 100 வீதம் 3,000 முன்னுரிமைப் பங்குகளை 10 சதவீதம் முனைமத்தில் மீட்க, முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கிற்கு மாற்றியது.) | | | |
| | முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கு ப | | 3,30,000 | |
| | வங்கிக் கணக்கு | | | 3,30,000 |
| | (முன்னுரிமைப் பங்குகளை மீட்கத் தொகை செலுத்தியது.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | பங்கு முனைமக் கணக்கு ப | | 25,000 | |
| | இலாப-நட்டக் கணக்கு ப | | 5,000 | |
| | முன்னுரிமைப் பங்கு மீட்பு முனைமக் கணக்கு | | | 30,000 |
| | (முன்னுரிமைப் பங்குகளை மீட்கும்பொழுது செலுத்திய முனைமத் தொகைக்குப் பங்கு முனைமக் கணக்கிலிருந்தும், இலாப-நட்டக் கணக்கிலிருந்தும் ஒதுக்குவது.) | | | |
| | இலாப-நட்டக் கணக்கு ப | | 50,000 | |
| | முதல் மீட்புக் காப்புக் கணக்கு | | | 50,000 |
| | (சட்டத்தின்படி புதிய வெளியீட்டுத் தொகையினும் அதிகமாக மீட்கப்பட்ட சலுகைப் பங்குத் தொகைக்குக் காப்பு ஏற்படுத்த.) | | | |

## எடுத்துக்காட்டு 37

வரையறு பொறுப்புடைய பாண்டியன் கம்பெனி பங்கு ஒன்று ரூ. 100 வீதம் 1,000 முழுதும் செலுத்தப்பெற்ற 7 சத வீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்குகளை உடையது. 1971 திசம்பர் 31-ல் அதன் இலாப-நட்டக் கணக்கு ரூ. 35,000 வரவிருப்பைக் காட்டியது. மீள்தகு முன்னுரிமைப் பங்குகளை மீட்க கீழ்க்கண்டவற்றை வெளியிட்டது.

(அ) ஒன்று ரூ. 100 வீதம் 8 சதவீதம் 500 கடனீட்டுப் பத்திரங்கள்;

(ஆ) ஒன்று ரூ. 100 வீதம் 750 நேர்மைப் பங்குகள் 20 சதவீதம் முனைமத்தில்.

வெளியிடப்பட்ட பங்குகட்கும் கடனீட்டுப் பத்திரங்களுக்கும் விண்ணப்பங்கள் வர, அவை உரிய முறையில் ஒதுக்கீடு செய்யப்பட்டன. மீள்தகு முன்னுரிமைப் பங்குகள் 5 சதவீதம் முனைமத்தில் மீட்கப்பட்டன. ஆன செலவு ரூ. 2,500 ஆகும். தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

**விடை :**

### குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | வங்கிக் கணக்கு ப | | 90,000 | |
| | நேர்மைப் பங்கு முதல் கணக்கு | | | 75,000 |
| | பங்கு முனைமக் கணக்கு | | | 15,000 |
| | (பங்கு ஒன்று ரூ. 100 வீதம் 750 நேர்மைப் பங்குகள் 20 சதவீதம் முனைமத்தில் வெளியிட்டு ஒதுக்கியது.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | (அல்லது கீழிரு பதிவுகளைச் செய்ய வேண்டும்). | | ரூ. | ரூ. |
| | வங்கிக் கணக்கு ப | | 90,000 | |
| | நேர்மைப் பங்கு விண்ணப்ப—ஒதுக்கீட்டுக் கணக்கு | | | 90,000 |
| | (பங்கு ஒன்று ரூ. 100 வீதம் 750 நேர்மைப் பங்குகளை 20 சதவீதம் முனைமத்தில் வெளியிட்டதில் பெற்ற பங்கு விண்ணப்ப—ஒதுக்கீட்டுத் தொகை). | | | |
| | நேர்மைப் பங்கு விண்ணப்ப—ஒதுக்கீட்டுக் கணக்கு ப | | 90,000 | |
| | நேர்மைப் பங்கு முதல் கணக்கு | | | 75,000 |
| | பங்கு முனைமக் கணக்கு | | | 15,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்று ரூ. 100 வீதம் 750 நேர்மைப் பங்குகளை ஒதுக்கியது.) | | | |
| | வங்கிக் கணக்கு ப | | 50,000 | |
| | 8 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 50,000 |
| | (ஒன்று ரூ. 100 வீதம் 8 சதவீதம் 500 கடனீட்டுப் பத்திரங்களை வெளியிட்டுப் பெற்றது.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | பங்கு மீட்புச் செலவுக் கணக்கு ப | | ரூ. 2,500 | ரூ. |
| | வங்கிக் கணக்கு | | | 2,500 |
| | (முன்னுரிமைப் பங்குகளை மீட்டதிலான செலவு.) | | | |
| | 7 சதவீதம் மீள்தக் முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கு ப | | 1,00,000 | |
| | முன்னுரிமைப் பங்கு மீட்பு முனைமக் கணக்கு ப | | 5,000 | |
| | முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கு | | | 1,05,000 |
| | (ஒன்று ரூ. 100 வீதம் 1,000 முன்னுரிமைப் பங்குகள் 5 சதவீதம் முனைமத்துடன் முன்னுரிமைப் பங்குதாரர்கட்குச் சேர வேண்டியது.) | | | |
| | பங்கு முனைமக் கணக்கு ப | | 7,500 | |
| | பங்கு மீட்புச் செலவுக் கணக்கு | | | 2,500 |
| | முன்னுரிமைப் பங்கு மீட்பு முனைமக் கணக்கு | | | 5,000 |
| | (சட்டத்தின்படி முன்னுரிமைப் பங்குகளை மீட்கும் பொழுது செலுத்திய முனைமத் தொகைக்கும் மீட்புச் செலவிற்கும் பங்கு முனைமக் கணக்கில் ஒதுக்கியது.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | இலாப-நட்டக் கணக்கு ப | | 25,000 | |
| | முதல் மீட்புக் காப்புக் கணக்கு | | | 25,000 |
| | (சட்டத்தின்படி முதல் மீட்புக் காப்புக் கணக்கிற்கு மாற்றியது: மீட்கப்பட்ட பங்குகளின் பெயரளவு மதிப்பு ரூ. 1,00,000 | | | |
| | கழி : புதிதாக வெளியிட்ட பங்குகளின் பெயரளவு மதிப்பு ரூ. 75,000 | | | |
| | 25,000) | | | |

**விளக்கக் குறிப்பு :**

முன்னுரிமைப் பங்குகளை மீட்கும்பொழுது செலுத்தும் முனைமத் தொகையைப் பங்கு முனைமத் தொகையில் இருந்தாவது அல்லது இலாப-நட்டக் கணக்கிலிருந்தாவது அல்லது வேறு நடைமுறை இலாபக் கணக்கிலிருந்தாவது கட்டாயமாக நீக்கப் படவேண்டுமென்று சட்டம் கூறுகிறது. ஆனால், பங்கு மீட்புச் செலவினை இவ்வாறு உடனடியாக நீக்கத் தேவையில்லை. கம்பெனி விரும்பின், இக் கணக்கை இருப்புநிலைக் குறிப்பில் இது நீக்கப் பெறும் வரை காண்பிக்கலாம். எனினும், தொகை சிறியதாக இருப்பதால் இதுவும், உடனடியாக நீக்கப்படுகிறது.

முதல் மீட்புக் காப்புக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல வேண்டிய தொகையைக் கணக்கிடுவதில் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிட்டதில் பெற்ற தொகையை அறவே கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை என்பதை உணரவேண்டும். காரணம், **இலாபத்திலிருந்தோ அல்லது புதிய பங்கு வெளியீட்டுத் தொகையி**

**லிருந்தோதான் முதல் மீட்புக் காப்புக் கணக்கு ஏற்படுத்த வேண்டுமென்று சட்டம் கூறுகிறதேயொழிய கடனீட்டுப் பத்திரங்களினின்றும் இதை ஏற்படுத்த வேண்டுமென்று கூறவில்லை.**

*புதிய பங்கு வெளியிட்டதில் கிடைத்த தொகையை மட்டுமே முதல் மீட்புக் காப்புக் கணக்கிற்கு எடுத்துச் செல்கிறோம். ஆனால், புதிய பங்குத் தொகையுடன் பெற்ற முனைமத் தொகையையும் கணக்கில் எடுத்துக்கொள்வதும் வழக்கமென்று கூறினோம் அல்லவா? அவ்வாறாயின், உரிய பதிவுகள் கீழ்க்கண்டவாறிருக்கும் :*

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| இலாப-நட்டக் கணக்கு ப | 5,000 | |
| முன்னுரிமைப் பங்கு மீட்பு முனைமக் கணக்கு | | 5,000 |
| (முன்னுரிமைப் பங்குகளை மீட்கும்பொழுது செலுத்திய முனைமத் தொகைக்கு இலாப-நட்டக் கணக்கில் ஒதுக்கியது.) | | |
| இலாப-நட்டக் கணக்கு ப | 10,000 | |
| முதல் மீட்புக் காப்புக் கணக்கு | | 10,000 |
| (சட்டத்தின்படி முதல் மீட்புக் காப்புக் கணக்கிற்குப் புதிய பங்கு வெளியீட்டுத் தொகையினும், கூடுதலாக மீட்கப்பட்ட முன்னுரிமைப் பங்குத் தொகையளவிற்கு மாற்றியது.) | | |

**குறிப்பு :**

*(1) முன்னுரிமைப் பங்குகளை மீட்கும்பொழுது செலுத்த வேண்டிய முனைமத்தொகை ரூ. 5,000-ஐ முதலில் இலாப-நட்டக் கணக்கில் ஒதுக்கினோம்.*

(2) மீட்கப்பட வேண்டிய முன்னுரிமைப் பங்கு
களின் பெயரளவு மதிப்பு இப்பொழுது ரூ. 1,00,000

**கழி :**

புதிய பங்கு வெளியீட்டுத் தொகை
(முனைமத்துடன்) ரூ. 90,000

புதிய பங்கு வெளியீட்டுத் தொகைக்குக்
கூடுதலாக மீட்கப்பட்ட முன்னுரிமைப்
பங்குகளின் மதிப்பு ரூ. 10,000

இப்பொழுது இத் தொகையைத்தான் (ரூ. 10,000) இலாப-நட்டக் கணக்கிலிருந்து முதல் மீட்புக் காப்புக் கணக்கிற்கு மாற்ற வேண்டும்.

(3) முதல் மீட்புக் காப்புக் கணக்கிற்கு மாற்ற வேண்டிய தொகையைக் கணக்கிடுவதில், புதிய பங்கு வெளியீட்டுத் தொகையிலிருந்து பெற்ற முனைமத் தொகையையும் கணக்கில் எடுத்துக் கொள்வதால், முதல் மீட்புச் செலவுக் கணக்கைப் பங்கு முனைமக் கணக்கில் சரிக்கட்டக் கூடாது. முதலீட்டு நட்டமான பங்கு முதல் மீட்புச் செலவுக் கணக்கு இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் 'பல்வகை செலவினங்கள்' (Miscellaneous Expenditure) எனும் தலைப்பின்கீழ்க் காட்டப்பெறும்.

## எடுத்துக்காட்டு 38

பம்பாய் டிரேடர்ஸ் லிமிடெட்டின் 1971 சூன் 30-ற்கான இருப்புநிலைக் குறிப்பு கீழ்க்காட்டியவாறிருந்தது :

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் | | பல்வகைச் சொத்துகள் | 15,50,000 |
| ஒன்று ரூ. 10 மதிப்புள்ள 60,000, 7 சத வீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்குகள் முழுதும் செலுத்தப் பட்டது | 6,00,000 | வங்கி | 5,50,000 |

| பொறுப்புகள் | | சொத்துகள் | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| ஒன்று ரூ. 10 மதிப்புள்ள 40,000, 8 சத வீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்குகள், பங்கு ஒன்றுக்கு ரூ. 7.50 வீதம் செலுத்தப் பட்டது | 3,00,000 | | |
| பங்கு ஒன்று ரூ. 10 மதிப்புள்ள 70,000 நேர் மைப் பங்குகள் முழுதும் செலுத் தப்பட்டது | 7,00,000 | | |
| பங்கு முனைமக் கணக்கு | 50,000 | | |
| இலாப-நட்டக் கணக்கு | 4,00,000 | | |
| கடனீந்தோர் | 50,000 | | |
| | 21,00,000 | | 21,00,000 |

இருவகை முன்னுரிமைப் பங்குகளும் அந் நாளில் 5 சதவீதம் முனைமத்தில் மீட்கப்பட வேண்டும். கம்பெனி ரூ. 10 மதிப்புடைய நேர்மைப் பங்குகளைத் தேவையான அளவிற்கு மட்டில் ரொக்கத் திற்கு வெளியிட்டது. பங்குகட்குரிய தொகை முழுதும் பெறப் பட்டதென்றும், முன்னுரிமைப் பங்குகளை மீட்கவேண்டிய நட வடிக்கைகள் எடுக்கப்பட்டனவென்றும் கொண்டு, குறிப்பேட்டுப் பதிவுகளையும், பேரேட்டுக் கணக்குகளையும், மீட்டலுக்குப் பின் னுள்ள இருப்புநிலைக் குறிப்பையும் தருக.

**விடை :**

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | வங்கிக் கணக்கு ப | | 6,00,000 | |
| | நேர்மைப்பங்கு விண்ணப்ப—ஒதுக்கீட்டுக் கணக்கு | | | 6,00,000 |
| | (ஒன்று ரூ.10 வீதம் 60,000 நேர்மைப் பங்குகள் மீது விண்ணப்ப—ஒதுக்கீட்டுத் தொகை பெற்றது.) | | | |
| | நேர்மைப் பங்கு விண்ணப்ப—ஒதுக்கீட்டுக் கணக்கு ப | | 6,00,000 | |
| | நேர்மைப் பங்கு முதல் கணக்கு | | | 6,00,000 |
| | (60,000 நேர்மைப் பங்குகள் மீது பெற்ற பங்கு விண்ணப்பத் தொகையைப் பங்கு முதல் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| | இறுதி அழைப்புக் கணக்கு ப | | 1,00,000 | |
| | 8 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கு | | | 1,00,000 |
| | (. . . . நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 2.50 வீதம் 40,000 8 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்குகள் மீது பெறவேண்டிய இறுதி அழைப்புத் தொகை.) | | | |

**குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)**

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | வங்கிக் கணக்கு ப | | 1,00,000 | |
| | 8 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்கு இறுதி அழைப்புக் கணக்கு | | | 1,00,000 |
| | (பங்கு ஒன்றுக்கு ரூ. 2.50 வீதம் 40,000 மீள்தகு முன்னுரிமைப் பங்குகள் மீது பெற்ற இறுதி அழைப்புத் தொகை.) | | | |
| | 7 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கு ப | | 6,00,000 | |
| | 8 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கு ப | | 4,00,000 | |
| | மீள்தகு முன்னுரிமைப் பங்கு மீட்பு முனைமக் கணக்கு ப | | 50,000 | |
| | முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கு | | | 10,50,000 |
| | (7 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்குகளையும் 8 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்குகளையும் 5 சதவீதம் முனைமத்தில் மீட்க, முன்னுரிமைப் பங்குநர் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| | மீள்தகு முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கு ப | | 10,50,000 | |
| | வங்கிக் கணக்கு | | | 10,50,000 |
| | (மீள்தகு முன்னுரிமைப் பங்குகளை மீட்கச் செலுத்திய தொகை.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | பங்கு முனைமக் கணக்கு ப | | 50,000 | |
| | மீள்தகு முன்னுரிமைப் பங்கு மீட்பு முனைமக் கணக்கு | | | 50,000 |
| | (முன்னுரிமைப் பங்குகள் மீட்கும்பொழுது செலுத்திய முனைமத் தொகையைச் சட்டத்தின்படி பங்கு முனைமக் கணக்கில் ஒதுக்கியது.) | | | |
| | இலாப-நட்டக் கணக்கு ப | | 4,00,000 | |
| | முதல் மீட்புக் காப்புக் கணக்கு | | | 4,00,000 |
| | (சட்டத்தின்படி புதிய வெளியீட்டுப் பங்குகளினும் கூடுதலாக மீட்கப்பட்ட முன்னுரிமைப் பங்குகள் அளவிற்கு இலாப-நட்டக் கணக்கிலிருந்து காப்பு ஏற்படுத்த.) | | | |

பற்று **7% மீள்தகு முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 சூன் 30 | மீள்தகு முன்னுரிமைப் பங்குநர்கள் க/கு .. | | 6,00,000 | 1971 சூன் 30 | இருப்பு கீ/கொ .. | | 6,00,000 |

பற்று **8% மீள்தகு முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 சூன் 30 | மீள்தகு முன்னுரிமைப் பங்குநர்கள் க/கு .. | | 4,00,000 | 1971 சூன் 30 | இருப்பு கீ/கொ .. | | 3,00,000 |
| | | | | ,, | இறுதி அழைப்புக் க/கு .. | | 1,00,000 |
| | | | 4,00,000 | | | | 4,00,000 |

## நேர்மைப் பங்கு முதல் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 சூன் 30 | இருப்பு கீ/இ .. | | 13,00,000 | 1971 சூன் 30 | இருப்பு கீ/கொ .. | | 7,00,000 |
| | | | | | நேர்மைப் பங்கு விண்ணப்ப—ஒதுக்கீட்டுக் க/கு .. | | 6,00,000 |
| | | | 13,00,000 | | | | 13,00,000 |
| | | | | 1971 சூலை 1 | இருப்பு கீ/கொ | | 13,00,000 |

## பங்கு முனைமக் கணக்கு

பற்று வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 சூன் 30 | மீள்தகு முன்னுரிமைப் பங்கு மீட்பு முனைமக் க/கு .. | | 50,000 | 1971 சூன் 30 | இருப்பு கீ/கொ .. | | 50,000 |

## இலாப-நட்டக் கணக்கு

பற்று வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | முதல் மீட்புக் காப்புக் க/கு .. | | 4,00,000 | | இருப்பு கீ/கொ .. | | 4,00,000 |

**வங்கிக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 சூன் 1 | இருப்பு கீ/கொ .. | | 5,50,000 | 1971 சூன் 30 | மீள்தகு முன்னுரிமைப் பங்குநர்கள் க/கு .. | | 10,50,000 |
| சூன் 30 | நேர்மைப் பங்கு விண்ணப்ப ஒத்துக்கீட்டுக் க/கு .. | | 6,00,000 | ,, | இருப்பு கீ/இ .. | | 2,00,000 |
| | 8 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்கு இறுதி அழைப்புக் க/கு .. | | 1,00,000 | | | | |
| | | | 12,50,000 | | | | 12,50,000 |
| 1971 சூலை 1 | இருப்பு கீ/கொ .. | | 2,00,000 | | | | |

**நேர்மைப் பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கு**

பற்று | | | | | | | வரவு
---|---|---|---|---|---|---|---
நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ.
1971 ஜூன் 30 | நேர்மைப் பங்கு முதல் க/கு .. | | 6,00,000 | 1971 ஜூன் 30 | வங்கி .. | | 6,00,000

**பங்கு இறுதி அழைப்புக் கணக்கு**

பற்று | | | | | | | வரவு
---|---|---|---|---|---|---|---
நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ.
1971 ஜூன் 30 | 8 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்கு முதல் க/கு | | 1,00,000 | 1971 ஜூன் 30 | வங்கிக் க/கு .. | | 1,00,000

**மீள்தகு முன்னுரிமைப் பங்கு மீட்பு முனைமக் கணக்கு**

பற்று | | | | | | | வரவு
---|---|---|---|---|---|---|---
நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ.
1971 ஜூன் 30 | முன்னுரிமைப் பங்குநர்கள் க/கு .. | | 50,000 | 1971 ஜூன் 30 | பங்கு முனைமக் க/கு—மாற்றம் .. | | 50,000

பற்று **மீள்தகு முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 சூன் 30 | வங்கிக் க/கு .. | | 10,50,000 | 1971 சூன் 30 | 7 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்கு முதல் க/கு .. | | 6,00,000 |
| | | | | | ,, 8 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்கு முதல் க/கு .. | | 4,00,000 |
| | | | | | ,, மீள்தகு முன்னுரிமைப் பங்கு மீட்பு முனைமக் க/கு .. | | 50,000 |
| | | | 10,50,000 | | | | 10,50,000 |

பற்று **முதல் மீட்புக் காப்புக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே, ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 சூன் 30 | இருப்பு கீ/இ .. | | 4,00,000 | 1971 சூன் 30 | இலாப-நட்டக் க/கு .. | | 4,00,000 |
| | | | | 1971 சூலை 1 | இருப்பு கீ/கொ .. | | 4,00,000 |

**பம்பாய் டிரேடர்ஸ் லிமிட்டெடின்**
**.........நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| **பங்கு முதல் :** | | | |
| அதிகாரம் பெற்ற முதல் .. .. | | பல்வகைச் சொத்துகள் .. | 15,50,000 |
| வெளியிட்டதும் செலுத்தப்பட்டதும் : .. | | வங்கி .. | 2,00,000 |
| ஒன்று ரூ. 10 வீதம் 1,30,000 நேர்மைப் பங்குகள் முழுதும் செலுத்தப்பெற்றவை | 13,00,000 | | |
| **காப்பும், மிகுதியும்** | | | |
| முதல் மீட்புக் காப்புக் க/கு .. | 4;00,000 | | |
| **நடப்புப் பொறுப்புகளும், ஒதுக்குகளும்** | | | |
| நடப்புப் பொறுப்புகள் : | | | |
| கடனீந்தோர் .. | 50,000 | | |
| | 17,50,000 | | 17,50,000 |

முதல் மீட்புக் காப்புக் கணக்கை முழுதும் செலுத்தப்பெற்ற மேலூதியப் பங்குகளாக (வெகுமதிப் பங்குகளாக–Bonus Shares) வெளியிட்டுப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று கூறியுள்ளோம். இவ்வாறு முதல் மீட்புக் கணக்கைப் பயன்படுத்திச் செய்ய வேண்டிய பதிவுகளை இப்பொழுது பார்ப்போம்.

(1) முதல் மீட்புக் காப்புக் கணக்கிலிருந்து மேலூதியப் பங்குகள் வெளியிடும்பொழுது முதலில் முதல் மீட்புக் காப்புக் கணக்கில் பற்றும், பங்கு மேலூதியக் கணக்கில் (Bonus on Shares) வரவும் வைக்கவேண்டும். பின்னர்,

(2) பங்கு மேலூதியக் கணக்கில் பற்றும், பங்கு முதல் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

**எடுத்துக்காட்டு 39**

ஒரு கம்பெனியின் பங்கு முதல் கீழ்க்கண்டவாறிருந்தது :

(1) பங்கு ஒன்று ரூ. 10 வீதம் 1,00,000 நேர்மைப் பங்குகள் முழுதும் செலுத்தப்பெற்றவை.

(2) ஒன்று ரூ. 10 வீதம் 50,000 6 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்குகள் முழுதும் செலுத்தப்பட்டவை. இவை பங்கு ஒன்றுக்கு ரூ. 1 வீதம் முனைமத்தில் மீட்கப்பட வேண்டும்.

(3) இலாப-நட்டக் கணக்கு ரூ. 4,00,000-ஐயும், பொதுக் காப்பு (General Reserve) ரூ. 5,00,000-ஐயும் வரவிருப்புகளாகக் காட்டின.

கம்பெனி கீழ்க்கண்டவாறு தீர்மானித்தது :

(1) இப்பொழுது இருக்கும் நேர்மைப் பங்குநர்கள் வைத்திருக்கும் ஒவ்வொரு இரு பங்குகட்கும் ஒரு பங்கு வீதம் மேலூதியப் பங்குப் பொதுக்காப்பிலிருந்து வெளியிடுவது.

(2) முன்னுரிமைப் பங்குகளை மீட்கவேண்டியது.

(3) முன்னுரிமைப் பங்குகளை மீட்பதற்காகப் பங்கு ஒன்று ரூ. 10 மதிப்புடைய 30,000 நேர்மைப் பங்குகளைப் பங்கு ஒன்று ரூ. 11.25 வீதம் வெளியிட வேண்டியது.

தீர்மானங்கள் செயல்படுத்தப்பட்டன.

கீழ்க்கண்டவற்றைத் தயாரிக்கவும் :

(அ) மேற்கண்ட நடவடிக்கைகளைப் பதிவதற்குத் தேவையான பேரேட்டுக் கணக்குகள்.

(ஆ) இவை நிறைவேற்றியவுடன் இருப்புநிலைக் குறிப்பில் பங்கு முதலும், காப்பும் காண்பிக்கப்படும் முறையையும் உணர்த்துக.

(C. A. Inter, England-ஐத் தழுவியது.)

**விடை :** (அடுத்த பக்கம்)

பற்று **நேர்மைப் பங்கு முதல் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | இருப்பு கீ/இ .. | | 18,00,000 | | இருப்பு கீ/கொ .. | | 10,00,000 |
| | | | | | நேர்மைப் பங்கு விண்ணப்ப—ஒதுக்கீட்டுக் க/கு | | 3,00,000 |
| | | | | | பங்குநர் மேலூதியக் க/கு .. | | 5,00,000 |
| | | | 18,00,000 | | | | 18,00,000 |
| | | | | | இருப்பு கீ/கொ .. | | 18,00,000 |

பற்று **6% மீள்தகு முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | மீள்தகு முன்னுரிமைப் பங்குநர்கள் க/கு—மாற்றம் | | 5,00,000 | | இருப்பு கீ/கொ .. | | 5,00,000 |

## இலாப-நட்டக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | முன்னுரிமைப் பங்கு மீட்பு முனைமக் க/கு .. | | 12,500 | | இருப்பு கீ/கொ .. | | 4,00,000 |
| | முதல் மீட்பு முனைமக் க/கு .. | | 2,00,000 | | | | |
| | இருப்பு கீ/இ .. | | 1,87,500 | | | | |
| | | | 4,00,000 | | | | 4,00,000 |
| | | | | | இருப்பு கீ/கொ .. | | 1,87,500 |

## பொதுக்கப்பு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | பங்குநர் மேலூதியக் க/கு .. (Bonus to share-holders A/c.) | | 5,00,000 | | இருப்பு கீ/கொ .. | | 5,00,000 |

**நேர்மைப் பங்கு விண்ணப்ப — ஒதுக்கீட்டுக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | நேர்மைப் பங்கு முதல் க/கு .. | | 3,00,000 | | வங்கி .. | | 3,37,500 |
| | பங்கு முனைமக் க/கு .. | | 37,500 | | | | |
| | | | 3,37,500 | | | | 3,37,500 |

**பங்கு முனைமக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | முன்னுரிமைப் பங்கு மீட்பு முனைமக் க/கு .. | | 37,500 | | நேர்மைப் பங்கு விண்ணப்ப— ஒதுக்கீட்டுக் க/கு .. | | 37,500 |

**பற்று — முன்னுரிமைப் பங்கு மீட்பு முனைமக் கணக்கு — வரவு**

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | முன்னுரிமைப் பங்குதாரர்கள் க/கு .. | | 50,000 | | பங்கு முனைமக் க/கு .. | | 37,500 |
| | | | | | இலாப-நட்டக் க/கு .. | | 12,500 |
| | | | 50,000 | | | | 50,000 |

**பற்று — மீள்தகு முன்னுரிமைப் பங்குநர்கள் கணக்கு — வரவு**

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | வங்கி .. | | 5,50,000 | | மீள்தகு முன்னுரிமைப் பங்குமுதல் க/கு .. | | 5,00,000 |
| | | | | | முன்னுரிமைப் பங்கு மீட்பு முனைமக் க/கு .. | | 50,000 |
| | | | 5,50,000 | | | | 5,50,000 |

### முதல் மீட்புக் காப்புக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | இருப்பு கீ/இ .. | | 2,00,000 | | இலாப-நட்டக் க/கு .. | | 2,00,000 |
| | | | | | இருப்பு கீ/கொ .. | | 2,00,000 |

### பங்குநர் மேலூதியக் கணக்கு
(Bonus to Shareholders Account)

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | நேர்மைப் பங்குமுதல் .. | | 5,00,000 | | பொதுக்காப்பு .. | | 5,00,000 |

**..........................கம்பெனியின்**

**............நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | | சொத்துகள் |
|---|---|---|
| | ரூ. | |
| **பங்கு முதல்** | | |
| அதிகாரம் பெற்ற முதல் .. | .... | |
| வெளியிட்டதும், செலுத்தப்பெற்றதும்: | | |
| ஒன்று ரூ. 10 வீதம் 1,80,000 பங்குகள் முழுதும் செலுத்தப்பெற்றது .. | 18,00,000 | |
| (மேற்சொன்ன பங்குகளில், 50,000 பங்குகள் முழுதும் செலுத்தப்பெற்ற மேலூதியப் பங்குகளாகப் பொதுக்காப்பை முதற்படுத்துகையின்மூலம் ஒதுக்கீடு செய்யப்பெற்றுள்ளன). | | |
| **காப்பும், மிகுதியும்** | | |
| முதல் மீட்புக் காப்பு க/கு .. | 2,00,000 | |
| மிகுதி | | |
| இலாப-நட்டக் க/கு .. | 1,87,500 | |
| | 21,87,500 | |

முன்னுரிமைப் பங்குகளை மீட்கப் போதிய அளவிற்கு ரொக்கம் இல்லையெனில், நடப்புச் சொத்துகளை (Current Assets) விற்கலாமென்று கூறியிருக்கிறோம். அவ்வாறாயின், வங்கிக் கணக்கில் பற்றும், நடப்புச் சொத்துகள் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். இவ்வாறு நடப்புச் சொத்துகளை விற்பதில் இலாபமோ-நட்டமோ ஏற்படின், அதனை இலாப-நட்டக் கணக்கிற்கோ அல்லது பொதுக் காப்பிற்கோ எடுத்துச் செல்லவேண்டும். தேவையான பணத்தைத் திரட்ட நிலைச் சொத்துகளை விற்கக் கூடாது என்பதை மீண்டும் நினைவுபடுத்திக் கொள்ளுதல் நல்லது.

மீட்க வேண்டிய முன்னுரிமைப் பங்குகளை வேறுவகையான பங்குகளாக மாற்றுவதுமூலம் மீட்கப்படுவதாயின், மீள்தகு முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கில் பற்றும், புதிய பங்கு முதல் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். இந் நிலையில் முதல் மீட்புக் காப்புக் கணக்கு ஏற்படுத்த வேண்டுவதில்லை.

## வினாக்கள்

1. 'கம்பெனி' — இலக்கணம் தந்து, அதன் சிறப்புக் கூறுகளை விளக்குக.
2. கூட்டுப் பங்குக் கம்பெனியின் வகைகள் யாவை?
3. கம்பெனியின் அமைப்பு முறையை விவரி.
4. தகவல் அறிக்கையில் காணவேண்டிய முக்கிய விவரங்கள் யாவை?
5. கம்பெனி பங்கு வெளியிடும் நடவடிக்கைகளில் செய்ய வேண்டிய பங்குகள் யாவை?
6. பங்குகளை (அ) முனைமத்தில் (ஆ) தள்ளுபடியில் வெளியிடுவது பற்றிய கம்பெனிச் சட்ட விதிகளைத் தொகுத்துக் கூறுக.
7. மீள்தகு முன்னுரிமைப் பங்குகள் என்றால் என்ன? அவற்றை மீட்பது பற்றிய கம்பெனி விதிகள் யாவை?
8. பங்கு ஒறுப்பிழப்பில் (Forfeiture of Shares) கம்பெனி பின்பற்ற வேண்டிய முறை யாது?
9. முன்னுரிமைப் பங்குகளை மீட்டலில் செய்ய வேண்டிய பதிவுகள் யாவை?

10. சிறுகுறிப்பு வரைக:

(1) 43-'ஏ' கம்பெனிகள்;

(2) குறுமப் பங்கெடுப்பு;

(3) மேலாண்மை இயக்குநர்;

(4) ரொக்கத்திற்கன்றி வேறு பயனுக்குப் பங்குகளை வெளியிடல்;

(5) உரிமைப் பங்குகள்;

(6) சட்டமுறை ஏடுகள்;

(7) முதல் மீட்புக் காப்புக் கணக்கு.

## பயிற்சி

### பங்கு வெளியீடு

1. ரூ. 100 மதிப்புள்ள 20,000 பங்குகளை வரையறு பொறுப்புடைய ஒரு கம்பெனி வெளியிட்டது. விண்ணப்பத்துடன் ரூ. 25-ம், ஒதுக்கீட்டின்பொழுது ரூ. 50-ம் செலுத்தப்பட வேண்டும். 23,000 பங்குகளுக்கான விண்ணப்பங்கள் வந்தன. பங்குகள் ஏதேனும் ஒதுக்கப்பெறாத 1,500 பங்குகள் மீதான விண்ணப்பத் தொகை முழுதும் திருப்பி அனுப்பப்பட்டது. மீதி 1,500 பங்குகட்காகப் பெறப்பட்ட விண்ணப்பத் தொகை பங்கு ஒதுக்கீட்டுக்கு வைக்கப்பட்டது. ஒதுக்கீட்டின்போழ்து செலுத்தவேண்டிய பணம் முழுதும் பெறப்பட்டது.

குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

(M. U. B. Com,. April, 1962)

2. 1964 ஜூலை 1-ல் நியூ தியேட்டர்ஸ் லிமிட்டெட் ரூ. 50 மதிப்புடைய 30,000 சாதாரணப் பங்குகளையும், 6 சதவீதம் 20,000 முன்னுரிமைப் பங்குகளையும் வெளியிட்டது. கீழ்க்கண்டவாறு தொகை செலுத்தப்பட வேண்டும் :

| | ரூ. |
|---|---|
| விண்ணப்பத்தின்போழ்து | 10 |
| ஒதுக்கீட்டின்போழ்து | 15 |
| முதலாவது அழைப்பின்போழ்து | 8 |
| இரண்டாம் அழைப்பின்போழ்து | 12 |
| மூன்றும் அழைப்பின்போழ்து | 5 |

வெளியிட்ட பங்குகள் அனைத்திற்கும் விண்ணப்பங்கள் வந்தன. அவை அவ்வாறே ஒதுக்கப்பட்டன.

1964 செம்டம்பர் 1-ல் முதலாவது அழைப்புக் கோரப் பட்டது. 1964 திசம்பர் 1-ல் இரண்டாம் அழைப்பும், 1965 பிப்ரவரி 5-ல் மூன்றும் அழைப்பும் கோரப்பட்டன. கீழ்க்கண்ட வாறு தொகை பெறப்பட்டது.

| | சாதாரணப் பங்குகள் | முன்னுரிமைப் பங்குகள் |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| முதலாவது அழைப்பு | 25,000 | 19,300 |
| இரண்டாம் அழைப்பு | 22,250 | 17,800 |
| மூன்றும் அழைப்பு | 18,350 | 16,400 |

குறிப்பேட்டுப் பதிவுகளையும் ரொக்கஏட்டுப் பதிவுகளையும் தந்து, சாதாரணப் பங்கு முதல் கணக்கையும், முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கையும் தயாரிக்கவும்.

(M. U. B. Com., April, 1965)

3. மதுரை நிறுவனம் திரு. ராமன் நடத்திவரும் தொழிலினை ஏற்று நடத்தும் நோக்குடன் ரூ. 75,00,000 அதிகாரம் பெற்ற முதலுடன் அமைக்கப்பட்டது. இது ரூ. 10 மதிப்புடைய 7,50,000 நேர்மைப் பங்குகளாகவும், ரூ. 10 மதிப்புடைய 6 சதவீதம் 5,00,000 முன்னுரிமைப் பங்குகளாக வும் பிரிக்கப்பட்டிருந்தது. முன்னுரிமைப் பங்குகள் முழுதும், நேர்மைப் பங்குகளில் 4,00,000-மும், பொதுமக்களுக்கு வெளி யிடப்பட்டன. இவ்விரு பங்குகட்கும் கீழ்க்கண்டவாறு தொகை செலுத்தப்பட வேண்டும் :

| | |
|---|---|
| விண்ணப்பத்தின்போழ்து | ரூ. 2 |
| ஒதுக்கீட்டின்போழ்து | ரூ. 3 |
| அழைப்பின்போழ்து | மீதித்தொகை |

மீதியிருக்கும் நேர்மைப் பங்கு முதல், முழுதும் செலுத்தப் பட்டவையாகத் தொழிலை விற்றவரிடம் விலைக்காக வெளியிடப் பட்டது.

பொதுமக்களிடம் வெளியிடப்பட்ட பங்குகள் அனைத்திற்கும் விண்ணப்பங்கள் வர, அவை ஒதுக்கப்பட்டு, ஒதுக்கீட்டின்போழ்து செலுத்த வேண்டிய தொகை பெறப்பட்டது. அழைப்பு கோரிய போழ்து, 500 நேர்மைப் பங்குகளை வைத்திருக்கும் ஒரு பங்குநர் அழைப்புத் தொகையைச் செலுத்தத் தவறினார். பின்னர், இயக்குநர்கள் விரும்பியவாறு அப் பங்குகள் ஒறுப்பிழப்புச் (forfeiture) செய்யப்பட்டன. இப் பங்குகள் மீண்டும் பங்கு ஒன்றுக்கு ரூ. 8 வீதம் வெளியிடப்பட்டன.

கம்பெனியின் ஏடுகளில் மேற்கண்ட நடவடிக்கைகளைப் பதிய குறிப்பேட்டுப் பதிவுகளையும் ரொக்க ஏட்டுப் பதிவுகளையும் தந்து, இருப்புநிலைக் குறிப்பில் இவை எவ்வாறு காண்பிக்கப்பெறும் என்பதையும் காட்டுக.

(M. U. B. Com., April, 1967)

4. ஒரு கம்பெனியின் அதிகாரம் பெற்ற பங்கு முதல் ரூ. 3,00,000 ஆகும். இது ரூ. 10 மதிப்புடைய 30,000 நேர்மைப் பங்குகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இவற்றில் 20,000 பங்குகளைக் கம்பெனி வெளியிடுகிறது. பங்குத் தொகை கீழ்க்கண்டவாறு செலுத்தப்பட வேண்டும்.

| | ரூ. | |
|---|---|---|
| விண்ணப்பத்தின்போழ்து | 2 | |
| ஒதுக்கீட்டின்போழ்து | 4 | (முனைமம் ரூ. 2 உள்பட). |
| முதலாவது அழைப்பின்போழ்து | 3 | |
| இறுதி அழைப்பின்போழ்து | 3 | |

200 பங்குகள் மீதான முதலாவது அழைப்பையும், 500 பங்குகள் மீதான இறுதி அழைப்பையும் (முதல் அழைப்புத் தொகை நிலுவையிலுள்ள 200 பங்குகள் உள்பட) தவிர, பிற பங்குகள் மீது தொகை முழுதும் பெறப்பட்டது. மேற்சொன்ன 500 பங்குகளை இயக்குநரவை உரிய முறையில் ஒறுப்பிழப்புச் செய்து, அவற்றில் 400 பங்குகளைப் பங்கு ஒன்றுக்கு ரூ. 7 வீதம் முழுதும் செலுத்தப்பட்டவையாக மீண்டும் வெளியிட்டது.

தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து மேற்கண்ட நடவடிக்கைகட்குப் பின் இருப்புநிலைக் குறிப்பு எவ்வாறு இருக்கு மென்பதையும் காட்டுக.

(M. U. B. Com,. Sep. 69)

5. ரூ. 2,00,000 அதிகாரம் பெற்ற பங்கு முதலுடன் 1969 சனவரி 1-ல் ஒரு கம்பெனி தொடங்கப்பெற்றது. இது பங்கு ரூ. 100 வீதம் 2,000 நேர்மைப் பங்குகளாகப் பிரிக்கப்பட்டது. பங்கு ஒன்றுக்கு ரூ. 5 முனைமத்தில் 1,500 பங்குகளைப் பொதுமக்களிடம் கம்பெனி வெளியிட்டது. விண்ணப் பத்தின்போழ்து ரூ. 20-ம், ஒதுக்கீட்டின்போழ்து (முனைமத் தொகை உள்பட) ரூ. 30-ம், முதலாவது அழைப்பின்போழ்து ரூ. 40-ம், மீதி இரண்டாவது அழைப்பின்போழ்தும் பங்குத் தொகை செலுத்தப்பட வேண்டும்.

1,800 பங்குகட்கான விண்ணப்பங்கள் வந்தன. 200 பங்குகட்கான விண்ணப்பத் தொகை விண்ணப்பதாரரிடம் திருப்பி யனுப்டப்பட்டது. மிகுதியாகவுள்ள விண்ணப்பத் தொகை பங்கு ஒதுக்கீட்டுக் கணக்கிற்கு எடுத்துச் செல்லப்பட்டது.

20 பங்குகளைத் தவிர மீதிப் பங்குகள் அனைத்திற்கும் ஒதுக்கீட்டுத் தொகையும், முதலாவது அழைப்புத் தொகையும், இரண்டாம் அழைப்புத் தொகையும் பெறப்பட்டன. இறுதி அழைப்பிற்குப் பின்னர், இயக்குநரவைத் தீர்மானத்தின்படி இப் பங்குகள் ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டன. பங்கு மீது செலுத்த வேண்டிய தொகையுடன் ஒவ்வொரு பங்குக்கும் ரூ. 10 கூடுதல் விலையில் இப் பங்குகள் மீண்டும் வெளியிடப்பட்டன.

மேற்கண்டவற்றைப் பதிய குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து, இருப்புநிலைக் குறிப்பில் இவை எவ்வாறு தோன்றும் என்பதையும் காட்டுக.

(M. U. B. Com., April, 1970)

6. ஸ்ட்ராங் லிமிட்டெட் (Strong Ltd.) ரூ. 100 மதிப் புள்ள 10,000 பங்குகளை 6 சதவீதம் தள்ளுபடியில் வெளி யிட்டது. பங்குத் தொகை கீழ்க்கண்டவாறு செலுத்தப்பட வேண்டும் :

| | ரூ. |
|---|---|
| விண்ணப்பத்தின்போழ்து | 25 |
| ஒதுக்கீட்டின்போழ்து | 34 |
| இறுதி அழைப்பின்போழ்து | 35 |

9,000 பங்குகட்கான விண்ணப்பங்கள் வந்தன. அவை அனைத்தும் ஏற்றுக்கொள்ளப்பட்டன. 100 பங்குகட்கான இறுதி அழைப்புத் தொகையைத் தவிர பிற பணம் முழுதும் பெறப்

பட்டது. இப் பங்குகள் ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டன. இவற்றில் 50 பங்குகளை முழுதும் செலுத்தப்பட்டவையாக ரூ. 90 வீதம் கம்பெனி வெளியிட்டது.

சட்ட விதிமுறைகள் அனைத்தும் பின்பற்றப்பட்டனவென்று கொண்டு கம்பெனியின் குறிப்பேட்டில் பதிவுகளைத் தருக. இவை கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்பில் எவ்வாறு இடம்பெறு மென்பதையும் காட்டுக.

(M. U. B. Com., April, 1971)

7. வரையறு பொறுப்புடைய ஒரு கம்பெனியின் அதி காரம் பெற்ற முதல் ரூ. 2,50,000. இது ரூ. 10 மதிப்புடைய பங்குகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இவற்றில், 4,000 பங்குகள் கட்டடம் வாங்குவதற்காக முழுதும் செலுத்தப்பட்ட பங்கு களாக வெளியிடப்பட்டன. 8,000 பங்குகள் பொதுமக்கள் எடுக்க ஒப்பினர். முதலாண்டில் பங்கு ஒன்றுக்கு ரூ. 5 செலுத்து மாறு கேட்கப்பட்டிருந்தது. இதனை விண்ணப்பத்துடன் ரூ. 2-ம், ஒதுக்கீட்டின்போழ்து ரூ. 1-ம், முதலாவது அழைப்பின்போழ்து ரூ. 1-ம், இறுதி அழைப்பின்போழ்து ரூ. 1-ம் செலுத்தவேண்டும். இப் பங்குகள் மீது பெற்ற தொகை பற்றிய விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன :

6,000 பங்குகள் மீது முழுத்தொகை;

1,250 பங்குகள் மீது பங்கு ஒன்றுக்கு ரூ. 4 வீதம்;

500 பங்குகள் மீது பங்கு ஒன்றுக்கு ரூ. 3 வீதம்;

250 பங்குகள் மீது பங்கு ஒன்றுக்கு ரூ. 2 வீதம்.

பங்கு ஒன்றுக்கு ரூ. 4-க்கும் குறைவாகச் செலுத்தப் பட்டிருந்த 750 பங்குகளை இயக்குநர்கள் ஒறுப்பிழப்புச் செய்தனர்.

மேற்கண்ட நடவடிக்கைகளைப் பதியத் தேவையான குறிப் பேட்டுப் பதிவுகளைத் தந்து, கம்பெனியின் முதலாண்டு இருப்பு நிலைக் குறிப்பில் பங்குகள் எவ்வாறு இருக்குமென்பதையும் காட்டுக

(B. Com., Marathwada University 1971,
Institute of Company Secretaries of
India, Inter 1972)

8. ஒரு கம்பெனியின் அதிகாரம் பெற்ற பங்கு முதல், பங்கு ஒன்று ரூ. 100 வீதம் 10,000 பங்குகளாகப் பிரிக்கப் பட்டுள்ளது. 1968-ல் அனைத்துப் பங்குகளும் வெளியிடப் பட்டன. ஒன்று ரூ. 25 வீதம் 4 தவணைகளில் பங்குத் தொகை செலுத்தப்பட வேண்டுமென்று கேட்கப்பட்டிருந்தது. 1969 சனவரி 1-ல் இறுதித் தவணை செலுத்தத் தவறியதின் காரணமாக 'A' வைத்திருக்கும் 1,000 பங்குகள் ஒறுப்பிழப்புச் செய்யப் பட்டன. ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட இப் பங்குகள் ஒன்று ரூ. 50 வீதம் 'B'-யிடம் மீண்டும் வெளியிடப்பட்டன. மேற்கண்ட நடவடிக்கைகட்கான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து, ஒறுப் பிழப்புச் செய்யப்பட்ட பங்குக் கணக்கு காட்டும் இருப்பை எவ்வாறு பயன்படுத்துவது என்பதையும் காட்டுக.

(C. A. Inter 1959)

9. வரையறு பொறுப்புடைய ஒரு கம்பெனி ரூ. 10 மதிப்புள்ள 10,000 நேர்மைப் பங்குகளை ரூ. 2 முனைமத்தில் வெளியிட்டது. விண்ணப்பத்தின்போழ்து ரூ. 2-ம், ஒதுக்கீட்டின் போழ்து ரூ. 4-ம் (முனைமம் உள்பட), முதலாவது அழைப்பின் போழ்து ரூ. 3-ம், இறுதி அழைப்பின்போழ்து ரூ. 3-ம் ஆக பங்குத்தொகை செலுத்தப்படவேண்டும். 11,000 பங்குகள் வேண்டி விண்ணப்பங்கள் வந்தன. கூடுதலாகப் பெற்ற 500 பங்கு கட்கான விண்ணப்பத் தொகையை ஒதுக்கீட்டுத் தொகைக்குச் சரிக்கட்டிக்கொள்ள இயக்குநர்கள் முடிவு செய்தனர். பங்கு ஒதுக்கிய நாளுக்கு 3 திங்களுக்குப் பிறகு முதலாவது அழைப்பு கோரப்பட்டது. 200 பங்குகளை வைத்திருக்கும் ஒருவரிடமிருந்து விண்ணப்பத் தொகையைத் தவிர, வேறு ஏதும் பெறவில்லை. 100 பங்குகளை வைத்திருக்கும் இன்னொருவரிடமிருந்து அழைப்புத் தொகை மட்டுமே பெறவில்லை. பிற பங்குகள் மீது உரிய தொகை பெறப்பட்டது. உரிய அறிவிக்கைக்குப் பின்னர், இப் பங்குகளை இயக்குநர்கள் ஒறுப்பிழப்புச் செய்து, இவற்றை ரூ. 2,000-த்திற்கு வேறொரு பங்குதாரருக்கு மீண்டும் வெளியிட்டனர். ஒறுப் பிழப்புப் பற்றிய பதிவுகளையும், ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்கு களை மீண்டும் வெளியிடுவது பற்றிய பதிவுகளையும் கொடுத்துக் கம்பெனியின் ஏடுகளில் தேவையான பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்கவும்.

(C. A. Inter 1965)

10. ஒரு கம்பெனியின் எடுத்துக்கொள்ளப்பட்ட முதல் பங்கு ஒன்று ரூ. 25 வீதம் 20,000 நேர்மைப் பங்குகளையும்,

ஒன்று ரூ. 25 வீதம் 20,000 முன்னுரிமைப் பங்குகளையும் உடையதாக இருந்தது. இவ்விருவகைப் பங்குகள் மீதும் பங்கு ஒன்றுக்கு ரூ. 20 வரை கேட்கப்பட்டிருந்தது. முதலாவது அழைப்புத் தொகையையும், இரண்டாம் அழைப்புத் தொகையையும் (பங்கு ஒன்று ரூ. 5 வீதம்) செலுத்தத் தவறிய 'A'-யினுடைய 200 நேர்மைப் பங்குகளை இயக்குநர்கள் ஒறுப்பிழப்புச் செய்தனர். பங்கு ஒன்றுக்கு ஒதுக்கீட்டின்போழ்து ரூ. 5 வீதமும், முதலாவது அழைப்பின்போழ்து ரூ. 5 வீதமும், இறுதி அழைப்பின் போழ்து ரூ. 5 வீதமும் செலுத்தத் தவறிய 'B' என்பவருடைய 400 முன்னுரிமைப் பங்குகளையும் அவ்வாறே இயக்குநர்கள் ஒறுப்பிழப்புச் செய்தனர். 'A'-யிடம் பறிக்கப்பட்ட பங்குகளைப் பங்கு ஒன்று ரூ. 15 வீதமும், 'B'-யினுடைய பங்குகளைப் பங்கு ஒன்று ரூ. 17.50 வீதமும் இயக்குநர்கள் மீண்டும் வெளியிட்டனர். இவை அனைத்தையும் 'C' ஏற்றுக்கொண்டு தொகை முழுவதையும் செலுத்தினர்.

மேற்கண்ட நடவடிக்கைகளைக் கம்பெனியின் ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

(C. A. Inter 1966)

11. (அ) ஒதுக்கீட்டுத் தொகையையும், அழைப்புத் தொகையையும் செலுத்தத் தவறுவதன் காரணமாகப் பங்குகளை ஒறுப்பிழப்புச் செய்யப் பின்பற்ற வேண்டிய முறையினை விளக்குக.

(ஆ) 'X' கம்பெனியின் அதிகாரம் பெற்ற முதல் ரூ. 20,00,000. இது ஒன்று ரூ. 100 வீதம் 20,000 பங்குகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இவற்றில் 15,000 பங்குகள் பொது மக்களுக்கு வெளியிடப்பட்டிருந்தன. விண்ணப்பத்தின்போழ்து பங்கு ஒன்றுக்கு ரூ. 20 வீதமும், ஒதுக்கீட்டின் போழ்து ரூ. 20 வீதமும் முதலாவது அழைப்பின் போழ்து ரூ. 30 வீதமும் இரண்டாம் அழைப்பின்போழ்து மீதியுள்ள ரூ. 30-ஐயும் செலுத்த வேண்டும். கீழ்க்கண்டவற்றைத் தவிர பிற தொகை முழுதும் பெறப்பட்டது.

'A'-யிடமிருந்து 30 பங்குகள் மீது ஒதுக்கீட்டுத் தொகையும், முதலாவது, இரண்டாவது அழைப்புத் தொகைகளும் நிலுவையில் இருந்தன.

'B'-யிடமிருந்து 20 பங்குகள். இவற்றின் மீது முதலாவது அழைப்பும், இரண்டாவது அழைப்பும் நிலுவையில் இருந்தன.

'C'-யிடமிருந்து 10 பங்குகள். இவற்றின் மீது இரண்டாவது அழைப்புப் பணம் நிலுவையில் இருந்தது.

இயக்குநர்கள் மேற்சொன்ன பங்குகளை ஒறுப்பிழப்புச் செய்து அவற்றை 'D' என்பவருக்குக் கீழ்க்கண்ட நிபந்தனைகளின் பேரில் மீண்டும் வெளியிட்டனர் :

'A'-யின் பங்குகள் பங்கு ஒன்றுக்கு ரூ. 90 வீதம் வெளியிடப்பட்டன.

'B'-யின் பங்குகள் பங்கு ஒன்றுக்கு ரூ. 70 வீதம் வெளியிடப்பட்டன.

'C'-யின் பங்குகள் பங்கு ஒன்றுக்கு ரூ. 50 வீதம் வெளியிடப்பட்டன.

'D' தொகை முழுவதையும் செலுத்திவிட்டாரென்று கொண்டு, மேற்கண்ட நடவடிக்கைகளைப் பதியத் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

(C. A. Inter 1964)

12. சன்ஷைன் லிமிட்டெட் (Sun Shine Ltd.) ஒன்று ரூ. 10 வீதம் 1,00,000 சாதாரண பங்குகளைப் (Ordinary Shares) பங்கு ஒன்றுக்கு ரூ. 2 வீதம் முனைமத்தில் வெளியிட்டது. விண்ணப்பத்தின்போழ்து ரூ. 2.50-ம், ஒதுக்கீட்டின்போழ்து ரூ. 4.50-ம் (முனைமம் உள்பட), முதலாவது அழைப்பின்போழ்து ரூ. 2.50-ம், இறுதி அழைப்பின்போழ்து ரூ. 2.50-ம் செலுத்தவேண்டும்.

வெளியிட்ட அளவிற்கும் மேலாகப் பங்குகள் வேண்டி விண்ணப்பங்கள் வந்தன. 1,50,000 சாதாரணப் பங்குகட்கான விண்ணப்பங்கள் வந்தன. 1,20,000 பங்குகள் வேண்டியோருக்கு விகிதப்படி (prorata) பங்குகள் ஒதுக்கப்பட்டன. மீதியுள்ள பங்குகள் முழுதும் மறுக்கப்பட்டன. விண்ணப்பத்தின்மீது மிகுதியாகச் செலுத்தப்பட்ட தொகையை ஒதுக்கீட்டின்போழ்து செலுத்தவேண்டிய தொகைக்குச் சரிசெய்து கொள்ளப்பட்டது.

200 சாதாரணப் பங்குகள் ஒதுக்கப்பட்ட 'A' என்பவர் ஒதுக்கீட்டின் மீது செலுத்தவேண்டிய தொகையைத் தரவில்லை. முதலாவது அழைப்பின்போழ்தும் தொகை செலுத்தத் தவறியதால், அவர் வைத்திருந்த பங்குகள் ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டன. 300 சாதாரண பங்குகள் வைத்திருக்கும் 'B' என்பவர் இரு

அழைப்புகளையும் செலுத்தவில்லை. இறுதி அழைப்பிற்குப் பிறகு கம்பெனி இவரின் பங்குகளை ஒறுப்பிழப்புச் செய்தது.

கம்பெனியின் குறிப்பேட்டில் பதிவுகளைத் தருக.

(C. A. Inter, 1963)

13. ரூ. 10 மதிப்புள்ள 10,000 பங்குகளை ஒரு கம்பெனி வெளியிட்டது. விண்ணப்பத்தின்போழ்து ரூ. 3-ம், ஒதுக்கீட்டின் போழ்து ரூ. 4-ம், மீதி அழைப்பின்போழ்தும் பங்குத் தொகையைச் செலுத்தவேண்டும். 43,825 பங்குகள் வேண்டி விண்ணப்பங்கள் வந்தன. இவற்றில் 300 பங்குகள் வேண்டியிருந்த ஒருவர் பங்குகளின் முழுத் தொகையையும் செலுத்தியிருந்தார். கூடுதலாகப் பங்கு வேண்டப்பட்டிருந்ததால் பங்குகள் கீழ்க்கண்டவாறு ஒதுக்கப்பட்டன :

11,825 பங்குகள் வேண்டியோருக்கு (500-க்கும் அல்லது அதற்குக் குறைவாகவும் பங்குகளை வேண்டியோருக்கு) 5,750 பங்குகள் (300 பங்குகள் வேண்டியிருந்த விண்ணப்பதாரர் 150 பங்குகளைப் பெற்றார்) ஒதுக்கப்பட்டன. 32,000 பங்குகள் வேண்டியோர் (500 பங்குகட்கு மேலாக வேண்டிய விண்ணப்பங்கள்) 4,250 பங்குகளைப் பெற்றனர்.

பெற்ற தொகை விண்ணப்பத்திற்குப் போக மீதியுள்ளது ஒதுக்கீட்டுக்கும், அழைப்புத் தொகைகட்கும் பயன்படுத்தப்பட்டது. மீதியுள்ள தொகை திருப்பித் தரப்பட்டது. மேற்கண்ட நடவடிக்கைகளைப் பதிய ரொக்க ஏட்டினையும், பிற பேரேட்டுக் கணக்குகளையும் தயாரிக்கவும்.

(I. C. W. A. I. Jan. '65)

14. கிருஷ்ணன் கம்பெனியின் அதிகாரம் பெற்ற முதல் ரூ. 2,00,000. இது பங்கு ஒன்று ரூ. 10 வீதம் 20,000 நேர்மைப் பங்குகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அனைத்துப் பங்குகளையும் கீழ்க்கண்டவாறு தொகை செலுத்தவேண்டி வெளியிட்டது.

| | ரூ |
|---|---|
| விண்ணப்பத்தின்போழ்து | 5 (முனைமம் ரூ. 2 உள்பட) |
| ஒதுக்கீட்டின்போழ்து | 4 |
| அழைப்பின்போழ்து | 3 |

கீழ்க்கண்டவை தவிர, பிற பங்குப் பணம் முழுதும் பெறப் பட்டது.

200 பங்குகள் மீது ஒதுக்கீட்டுத் தொகை.

500 பங்குகள் மீது (ஒதுக்கீட்டுத் தொகை செலுத்தப் பெறாத 200 பங்குகள் உள்பட) அழைப்புத் தொகை.

மேற்சொன்ன 500 பங்குகளும் உரிய முறையில் ஒறுப் பிழப்புச் செய்யப்பட்டன. இவற்றில் 400 பங்குகளை (ஒதுக்கீட்டுத் தொகை செலுத்தப்பெறா 200 பங்குகள் உள்பட) ரூ. 7 வீதம் மீண்டும் வெளியிடப்பட்டன.

குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து, இருப்புநிலைக் குறிப்பின் பொறுப்புகள் பகுதியில் இவை எவ்வாறு இடம்பெறும் என்பதை யும் காட்டுக.

(I. C. W. A. I. Jan. 1967)

15. நியூ கமர்ஸ் லிமிட்டெட் (New Comers Ltd.) பங்கு ஒன்று ரூ. 10 வீதம் 2,00,000 நேர்மைப் பங்குகளை வெளியிட்டது. பங்குத் தொகை விண்ணப்பத்துடன் ரூ. 3-ம், ஒதுக்கீட்டின்போழ்து ரூ. 4-ம், அழைப்பின்போழ்து ரூ. 3-ம் செலுத்தப்பட வேண்டும்.

3,20,000 பங்குகள் வேண்டி விண்ணப்பங்கள் வந்தன. இவற்றில் 60,000 பங்குகட்கு மறுப்புக் கடிதங்கள் (letters of regret) அனுப்பப்பட்டன. 80,000 பங்குகள் வேண்டியோருக்கு முழுதும் ஒதுக்கீடு செய்யப்பட்டன.

மீதியுள்ளோருக்குப் பங்குகள் விகிதப்படி (prorata) ஒதுக்கப் பட்டன.

முழுப் பங்குகளும் ஒதுக்கப்பெற்ற 200 பங்குகளை வைத் துள்ள ஒரு பங்குநர் ஒதுக்கீட்டுத் தொகையைச் செலுத்தத் தவறினர். 400 பங்குகளை வைத்துள்ள வேறொரு பங்குநரும் (விகிதப்படி பங்கு ஒதுக்கீடு பெற்றவர்) ஒதுக்கீட்டுத் தொகையைச் செலுத்தத் தவறினர். அழைப்பின்போழ்து மேலும் 600 பங்குகள் மீது தொகை செலுத்தப்படவில்லை.

இப் பங்குகள் அனைத்தும் ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டன. இவற்றில் முதல் 600 பங்குகள் (200 + 400) பங்கு ஒன்று ரூ. 8 வீதம் மீண்டும் வெளியிடப்பட்டன.

மேற்கண்ட நடவடிக்கைகளைப் பதிய கம்பெனியின் ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

(I. C. W. A. I. Jan. 1968)

16. ரூ. 10 மதிப்புள்ள 1,00,000 பங்குகளை ஒரு கம்பெனி வெளியிட்டது. பங்குத் தொகை கீழ்க்கண்டவாறு செலுத்தப்படவேண்டும் :

| | ரூ. |
|---|---|
| விண்ணப்பத்தின்போழ்து | 1 |
| ஒதுக்கீட்டின்போழ்து | 2 |
| முதலாவது அழைப்பின்போழ்து | 3 |
| இறுதி அழைப்பின்போழ்து | 4 |

கீழ்க்கண்டவற்றைத் தவிர, விண்ணப்பத்தின்போழ்தும், ஒதுக்கீட்டின்போழ்தும் செலுத்தவேண்டிய பணம் முழுதும் பெறப் பட்டது.

1,000 பங்குகளை வைத்திருக்கும் பட்டேல் ஒதுக்கீட்டுத் தொகையையும் அழைப்புத் தொகையையும் செலுத்தவில்லை.

500 பங்குகளை வைத்திருக்கும் ஆஷா முதலாவது அழைப்புப் பணத்தையும், இறுதி அழைப்புப் பணத்தையும் தரவில்லை.

300 பங்குகளை வைத்திருக்கும் குமார் இறுதி அழைப்புத் தொகையைச் செலுத்தத் தவறினர்.

எனவே, பட்டேல், ஆஷா, குமார் ஆகியோரின் பங்குகள் ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டன. இப் பங்குகள் அனைத்தும் பின்னர் 5 சதவீதம் தள்ளுபடியில் ரொக்கத்திற்கு மீண்டும் வெளியிடப் பட்டன.

விண்ணப்பத் தொகை பெறுவதிலிருந்து ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குகள் மீண்டும் வெளியிடப்படும் வரைக்கான மேற்கண்ட நடவடிக்கைகளைப் பதிய குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

(I. C. W. A. I. Jan. 1969)

17. எக்ஸ்பர்ட் எஞ்சினியர்ஸ் லிமிட்டெடின் (Expert Engineers Ltd.) அதிகாரம் பெற்ற முதல் ரூ. 5,00,000

ஆகும். இது பங்கு ஒன்று ரூ. 10 வீதம், 50,000 நேர்மைப் பங்குகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவற்றில் 40,000 பங்குகளைக் கீழ்க்கண்டவாறு செலுத்தக்கோரி வெளியிட்டது.

விண்ணப்பத்தின்போழ்து ரூ. 3-ம், ஒதுக்கீட்டின்போழ்து (முனைமம் ரூ. 2 உள்பட) ரூ. 5-ம், இரு அழைப்புகளின் போழ்தும் ரூ. 2 வீதமும் செலுத்தவேண்டும்.

2,000 பங்குகள் வைத்திருப்போர் ஒதுக்கீட்டுத் தொகையைச் செலுத்தத் தவறினர். மேலும், 1,000 பங்குகள் மீது முதல் அழைப்பு நிலுவையில் இருந்தது. இப் பங்குகள் அனைத்தும் ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டன.

பின்னர், இறுதி அழைப்புக் கோரப்பட்டது. 4,000 பங்குகள் மீது நிலுவை இருந்தது. விண்ணப்பத் தொகை மட்டுமே செலுத்தப்பட்டிருந்த அனைத்துப் பங்குகளுக்கும், முதலாவது அழைப்புப் பணம் செலுத்தத் தவறிய பங்குகளில் பாதியும், பங்கு ஒன்றுக்கு ரூ. 8 வீதம் முழுதும் செலுத்தப்பட்ட பங்குகளாக மீண்டும் வெளியிடப்பட்டன.

குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து, அவை எவ்வாறு இருப்பு நிலைக் குறிப்பில் இடம்பெறும் என்பதையும் காட்டுக.

(I. C. W. A. I. July, 1969)

18. A. P. லிமிட்டெட் பங்கு ஒன்று ரூ. 10 வீதம் கீழ்க்கண்ட முறையில் செலுத்தக்கூடிய 2,00,000 நேர்மைப் பங்குகட்கான விண்ணப்பங்களை வெளியிட்டது.

| | | |
|---|---|---|
| 1966 | சனவரி 31-ல் விண்ணப்பத்தின்போழ்து செலுத்த வேண்டியது பங்கு ஒன்றுக்கு | ரூ. 4 |
| 1966 | பிப்ரவரி 28-ல் ஒதுக்கீட்டின்போழ்து செலுத்த வேண்டியது பங்கு ஒன்றுக்கு | ரூ. 3 |
| 1966 | சூன் 30-ல் இறுதி அழைப்பின்போழ்து செலுத்த வேண்டியது பங்கு ஒன்றுக்கு | ரூ. 3 |

2,50,000 பங்குகட்கான விண்ணப்பங்கள் வந்தன. கீழ்க்கண்டவாறு தீர்மானிக்கப்பட்டது.

(அ) 10,000 பங்குகள் வேண்டி விண்ணப்பித்தோருக்கு முழுதும் மறுக்கப்பட்டது.

(ஆ) 40,000 பங்குகள் வேண்டி விண்ணப்பித்தோருக்கு முழுதும் ஒதுக்கீடு செய்யப்பட்டது.

(இ) மீதியுள்ள பங்குகள் விகிதப்படி ஒதுக்கீடு செய்ய வேண்டியது.

(ஈ) மிகுதியாகப் பெற்ற பங்கு விண்ணப்பப் பணத்தைப் பங்கு ஒதுக்கீட்டுத் தொகைக்குப் பயன்படுத்திக் கொள்வது.

விகிதப்படி பங்கு ஒதுக்கீடுபெற்ற ஒரு விண்ணப்பதாரர் ஒதுக்கீட்டுத் தொகையையும், அழைப்புத் தொகையையும் செலுத்தத் தவறினர். எனவே, அவருடைய 200 பங்குகளும் ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டன. 1966 அக்டோபர் 31-ல் இப் பங்குகள் ஒன்று ரூ. '9 வீதம் மீண்டும் வெளியிடப்பட்டன.

மேற்கண்ட நடவடிக்கைகளைப் பதிய குறிப்பேட்டுப் பதிவுகளையும், ரொக்க ஏட்டுப் பதிவுகளையும் தருக.

(Adapted from Incorp. Accts. Inter)

19. மெஷினரி மெனுபேக்சர்ஸ் லிமிடெட் (Machinery Manufacturers Ltd.) ரூ. 20,00,000-த்திற்கு அதிகாரம் பெற்ற பங்கு முதலையுடையது. இது பங்கு ஒன்று ரூ. 20 வீதம் பிரிக்கப்பட்டிருக்கிறது. இவற்றில் 50,000 பங்குகளைப் பொதுமக்களிடத்தில் வெளியிட்டது. பொதுமக்களிடத்தில் வெளியிட்டதன் விளைவாக ஏற்பட்ட நடவடிக்கைகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன :

பிப்ரவரி 2 பங்கு ஒன்றுக்கு ரூ. 2.50 வீதம் 1,20,000 பங்குகட்கான விண்ணப்பங்கள் பெற்றது.

பிப்ரவரி 15 50,000 பங்குகளை ஒதுக்கீடு செய்தது. (ஒதுக்கீட்டின்போழ்து பங்கு ஒன்றுக்கு ரூ. 2.50 வீதம் தரவேண்டும்.) மிகுதியாகச் செலுத்தப்பட்ட விண்ணப்பத் தொகையில், ஒதுக்கீட்டுக்காக ரூ. 40,000-மும், முதலாவது அழைப்பிற்காக ரூ. 40,000-மும், இரண்டாவது அழைப்பிற்காக ரூ. 90,000-மும் வைத்துக்கொண்டு, பங்கு ஒன்றும் ஒதுக்கப்பெறு விண்ணப்பதாரர்கட்கு ரூ. 85,000 திருப்பி அனுப்பப்பட்டது.

மார்ச் 1 ஒதுக்கீட்டில் மீதி பெறவேண்டிய தொகையை இன்று பெற்றது.

மார்ச் 15 பங்கு ஒன்றுக்கு ரூ. 5 வீதம் செலுத்துமாறு அழைப்புக் கோரப்பட்டது. (ஏப்ரல் 1-ல் இது செலுத்தப்பட வேண்டியது).

ஏப்ரல் 1 அழைப்பின் பொருட்டு ரூ. 1,57,960 பெறப் பட்டது.

ஏப்ரல் 16 மே 1-ல் தருமாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 5 வீதம் அழைப்புக் கோரப்பட்டது.

ஏப்ரல் 27 முதலாவது அழைப்புத் தொகையின்பொருட்டு ரூ. 52,000 பெறப்பட்டது. இதில் ஒரு பங்கு தாரர்தான் பங்குகள் மீதான முழுத் தொகை யையும் செலுத்தியிருக்கிறார் (அதாவது, இரண் டாவது அழைப்பிற்காக ரூ. 1,000-மும், இறுதி அழைப்பிற்காக ரூ. 1,000-மும்).

மே 1 இரண்டாவது அழைப்பின் பொருட்டு ரூ. 1,36,840 பெறப்பட்டது.

மே 17 ஜூன் 1-ல் செலுத்தவேண்டுமாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 5 வீதம் இறுதி அழைப்புக் கோரப்பட்டது.

மே 27 இரண்டாவது அழைப்பின்பொருட்டு ரூ. 88,420 பெறப்பட்டது.

ஜூன் 1 இன்று பெறவேண்டிய இறுதி அழைப்பிற்காக ரூ. 2,09,520 பெறப்பட்டது.

செப்டம்பர் 17 இரண்டாவது அழைப்பிற்காக ரூ. 11,300-ம், இறுதி அழைப்பிற்காக ரூ. 37,240-ம் பெறப் பட்டது.

மேற்கண்ட நடவடிக்கைகளைப் பதிவதற்குத் தேவையான ரொக்க ஏட்டு, குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து, கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்பில் பங்கு முதல் கணக்கு எவ்வாறு தோன்றும் என்பதையும் காட்டுக.

(Institute of Company Secretaries of India, April, 1963)

20. வரையறு பொறுப்புடைய ஒரு கம்பெனி ஒன்று ரூ. 10 பெயரளவு மதிப்புடைய 8,000 பங்குகளைப் பங்கு ஒன்றுக்கு ரூ. 2 முனைமத்தில் வெளியிட்டது. பங்குத் தொகை கீழ்க்கண்டவாறு செலுத்தப்படவேண்டும் :

| | ரூ. |
|---|---|
| விண்ணப்பத்தின்போழ்து | 2 |
| ஒதுக்கீட்டின்போழ்து | 5 (முனைமம் உள்பட) |
| முதல் அழைப்பின்போழ்து | 3 |
| இரண்டாவது அழைப்பின்போழ்து | 2 |

12,000 பங்குகட்கான விண்ணப்பங்கள் வந்தன. அவற்றில் 9,600 பங்குகள் விகிதப்படி (prorata) ஒதுக்கீடு செய்யப்பட்டன. மீதியுள்ள விண்ணப்பங்கள் மறுக்கப்பட்டன. விண்ணப்பத்தின்போழ்து மிகுதியாகச் செலுத்தப்பட்ட தொகை, ஒதுக்கீட்டுக்குச் செலுத்தவேண்டிய தொகையாக வைத்துக் கொள்ளப்பட்டது.

160 பங்குகள் ஒதுக்கப்பட்ட சியாம் ஒதுக்கீட்டுத் தொகையைச் செலுத்தத் தவறினார். முதலாவது அழைப்புத் தொகையையும் செலுத்தத் தவறவே, அவருடைய பங்குகள் ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டன. 240 பங்குகளை வைத்திருக்கும் இரமேஷும் இரண்டு அழைப்புகளையும் செலுத்தத் தவறினார். இரண்டாம் அழைப்பிற்குப் பின் அவரின் பங்குகளும் ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டன.

ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குகளில், பங்கு ஒன்றுக்கு ரூ. 9 வீதம் மனோகர் என்பவருக்கு முழுதும் செலுத்தப்பட்டவையாக 350 பங்குகள் விற்கப்பட்டன. (இவற்றில் சியாமின் பங்குகள் அனைத்தும் அடங்கியுள்ளன).

ரொக்க ஏட்டு, குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து கம்பெனியின் ஏடுகளில் இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

21. வரையறு பொறுப்புடைய ஒரு கம்பெனி ரூ. 10 மதிப்புடைய பங்குகட்கான விண்ணப்பங்களை வேண்டியது. பங்குத்தொகை பின்கண்டவாறு செலுத்தப்படவேண்டும்.

| | ரூ. |
|---|---|
| விண்ணப்பத்தின்போழ்து | 2 |
| ஒதுக்கீட்டின்போழ்து | 2 |
| முதலாவது அழைப்பின்போழ்து | 3 |
| இறுதி அழைப்பின்போழ்து | 3 |

கம்பெனி எல்லா அழைப்புகளையும் கோரியது. கீழ்க்கண்ட விண்ணப்பதாரர்கள் கீழே குறிப்பிட்டவாறு தொகை செலுத்தினர் :

100 பங்குகட்கு விண்ணப்பித்த 'X' — விண்ணப்பத் தொகை மட்டில் செலுத்தினர்.

200 பங்குகட்கு விண்ணப்பித்த 'Y' — விண்ணப்பப் பணத்தையும், ஒதுக்கீட்டுப் பணத்தையும் மட்டில் செலுத்தினர்.

300 பங்குகட்கு விண்ணப்பித்த 'Z' — விண்ணப்பத் தொகையையும், ஒதுக்கீட்டுத் தொகையையும், முதலாவது அழைப்புத் தொகையையும் மட்டில் செலுத்தினர்.

மேற்சொன்ன அனைவரும் நிலுவையைத் தீர்க்கவில்லை. எனவே, இப் பங்குகளை இயக்குநர்கள் ஒறுப்பிழப்புச் செய்தனர். பின்னர், இப் பங்குகள் ரூ. 11 வீதம் முழுதும் செலுத்தப் பட்டவையாக மீண்டும் வெளியிடப்பட்டன.

மேற்சொன்ன 600 பங்குகள் பற்றிய குறிப்பேட்டுப் பதிவுகளை மட்டில் தருக. பேரேட்டுக் கணக்குகள் தேவையில்லை.

(I. C. W. A. I. July, 1971)

22. F. M. & Co. லிமிட்டெட் பங்கு ஒன்று ரூ. 100 வீதம் 5,000 நேர்மைப் பங்குகளை வெளியிட்டது. பங்கு முதல் பின்கண்டவாறு வசூலிக்கப்படவேண்டும் :

| | ரூ. |
|---|---|
| விண்ணப்பத்தின்போழ்து | 25 |
| ஒதுக்கீட்டின்போழ்து | 20 |
| முதலாவது அழைப்பின்போழ்து | 20 |
| இறுதி அழைப்பின்போழ்து | 25 |

விண்ணப்பத்தின்போழ்தும், ஒதுக்கீட்டின்போழ்தும், முதலாவது அழைப்பின்போழ்தும் பணம் முழுதும் பெறப்பட்டது. இறுதி அழைப்பின்போழ்து 800 பங்குகள் வைத்துள்ள பங்குநர் பல அறிவிக்கைகட்குப் பின்னரும் தொகை செலுத்தத் தவறினர். பின்னர், இப் பங்குகளை ஒறுப்பிழப்புச் செய்ய இயக்குநரவை தீர்மானித்தது. இவை மீண்டும் ரூ. 90 வீதம் முழுதும் செலுத்தப்பட்ட பங்குகளாக வெளியிடப்பட்டன.

கம்பெனியின் குறிப்பேட்டில் மேற்கண்ட நடவடிக்கைகளைப் பதிந்து, ரொக்க ஏட்டைத் தயாரிக்கவும். (பேரேட்டுக் கணக்குகள் தேவையில்லை.)

(I. C. W. A. I. Jan. 1971)

23. ரூ. 10 மதிப்புடைய 100 பங்குகளை 'A' என்பவர் வைத்திருக்கிறார். அவற்றின் மீது பங்கு ஒன்றுக்கு ரூ. 1 வீதம் விண்ணப்பத்தொகையை அவர் செலுத்தியிருக்கிறார்.

பங்கு ஒன்று ரூ. 10 வீதம் 200 பங்குகளை 'B' வைத்திருக்கிறார். அவற்றின் மீது விண்ணப்பப் பணமாக ரூ. 1 வீதமும், ஒதுக்கீட்டுப் பணமாக ரூ. 2 வீதமும் செலுத்தியிருக்கிறார்.

பங்கு ஒன்று ரூ. 10 வீதம் 300 பங்குகளை 'C' வைத்திருக்கிறார். அவற்றின் மீது விண்ணப்பத்தொகை ரூ. 1 வீதமும், ஒதுக்கீட்டுத்தொகை ரூ. 2 வீதமும், முதலாவது அழைப்புத் தொகை ரூ. 3 வீதமும் அவர் செலுத்தியிருக்கிறார்.

மேற்சொன்ன அனைவரும் தங்கள் நிலுவைத் தொகைகளைச் செலுத்தத் தவறினர். 1959 அக்டோபர் 28-ல் இறுதி அழைப்புத் தொகை பங்கு ஒன்றுக்கு ரூ. 4 வீதமும் கோரப்பட்டது. 1959 திசம்பர் 15-ல் இயக்குநர்கள் இப் பங்குகள் அனைத்தையும் ஒறுப்பிழப்புச் செய்தனர். இப் பங்குகள் 1959 திசம்பர் 24-ல் 10 சதவீதம் தள்ளுபடியில் ரொக்கத்திற்கு மீண்டும் வெளியிடப்பட்டன.

கம்பெனியின் ஏடுகளில் மேற்கண்ட நடவடிக்கைகளைப் பதியத் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

(M. U. B. Com., Special Accounts, April, 1960)

24. 1960 மார்ச் 31-ல் வரையறு பொறுப்புடைய ஒரு கம்பெனி ரூ. 2,00,000 அதிகாரம் பெற்ற முதல் தொகையுடன் அமைக்கப்பட்டது. இது ரூ. 10 மதிப்புடைய 12,000 நேர்மைப் பங்குகளாகவும், ரூ. 10 மதிப்புடைய 8,000 8 சத வீதம் முன்னுரிமைப் பங்குகளாகவும் பிரிக்கப்பட்டது. சொத்துகளைக் கம்பெனியிடம் விற்றவருக்கு ரூ. 40,000-த்திற்கு நேர்மைப் பங்குகளைக் கொடுத்து விலையைச் செலுத்தியது. அமைப்பு முறையேட்டில் கையெழுத்திட்டிருந்தோர் 7 பங்குகளை வாங்கியிருக்கின்றனர். 1960 மார்ச் 15-ல் 5,000 நேர்மைப் பங்குகளையும், 5,000 முன்னுரிமைப் பங்குகளையும் பொதுமக்களிடம் வெளியிட்டது. அப் பங்குகள் மீது விண்ணப்பத்தின்போழ்து ரூ. 2.50 வீதமும், ஒதுக்கீட்டின்போழ்து ரூ. 2.50 வீதமும், ஒதுக்கீட்டுக்கு ஒரு திங்களுக்குப் பின் முதலாவது அழைப்புத் தொகையாக ரூ. 2.50 வீதமும், ஒதுக்கீட்டுக்கு இரண்டு திங்களுக்குப் பின் இறுதி அழைப்பாக ரூ. 2.50 வீத்மும் செலுத்தவேண்டியது.

1960 திசம்பர் 1-ல், கம்பெனியின் செயல்முறை விதிகளின் கீழ் 100 நேர்மைப் பங்குகளையும், 100 முன்னுரிமைப் பங்குகளையும் இயக்குநர்கள் ஒறுப்பிழப்புச் செய்தனர். (இவற்றின் மீது ரூ. 7.50 வீதம் தொகை செலுத்தப்பட்டிருந்தது.) 1960 திசம்பர் 25-ல் நிலுவைத் தொகையுடன் பங்கு ஒன்றுக்கு ரூ. 1.25 வீதம் முனைமத் தொகையையும் சேர்த்தத் தொகைக்கு இப் பங்குகளை மீண்டும் வெளியிட்டனர்.

கம்பெனியின் ஏடுகளில் மேற்கண்ட நடவடிக்கைகளைப் பதிந்து இருப்புநிலைக் குறிப்பில் எவ்வாறு முதல் கணக்கு எழுதப்படுகிறது என்பதையும் காட்டுக.

(Rajasthan Board-ஐத் தழுவியது)

25. ரூ. 10 முகமதிப்புடைய 10,00,000 நேர்மைப் பங்குகளை ஒரு கம்பெனி பங்கு ஒன்றுக்கு ரூ. 8 வீதம் முனைமத்தில் வெளியிட்டது. வெளியிட்ட நிபந்தனைகளின்படி, ரூ. 8 (முனைமத் தொகையின் ஒரு பகுதி ரூ. 4 உள்பட) விண்ணப்பத்தின்

போழ்தும், ரூ. 7 (முனைமத்தொகை ரூ. 4 உள்பட) ஒதுக்கீட்டின் போழ்தும், ரூ. 3 அழைப்பின்போழ்தும் செலுத்தப்படவேண்டும்.

15,00,000 பங்குகட்கான விண்ணப்பங்கள் வந்தன. அனைத்து விண்ணப்பதாரர்கட்கும் விகிதப்படி (prorata) பங்குகள் ஒதுக்கப்பட்டன. விண்ணப்பத்தின்போழ்து பெற்ற மிகுதிப் பணத்தை, ஒதுக்கீட்டின்போழ்து செலுத்தவேண்டிய தொகைக்குச் சரிக்கட்டிக் கொள்ளப்பட்டது.

1,000 பங்குகள் ஒதுக்கீடுபெற்ற 'B' என்பவர் ஒதுக்கீட்டின்போழ்தும், அழைப்பின்போழ்தும் தொகை செலுத்தத் தவறினர். பின்னர், 'B' -யின் பங்குகள் ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டுப் பங்கு ஒன்றுக்கு ரூ. 18 வீதம் 'C' என்பவருக்கு மீண்டும் வெளியிடப்பட்டன.

மேற்கண்ட நடவடிக்கைகளைப் பதிய தேவையான குறிப்பேட்டு, ரொக்கஏட்டுப் பதிவுகளைத் தருக.

(M. U. M. Com., April, 1968)

**தள்ளுபடியில் பங்கு வெளியீடு** (Issue of Shares at a discount)

26. புதுமைப் பதிப்பகம் (வரையறு பொறுப்புடையது) ரூ. 50 மதிப்புடைய 25,000 பங்குகளை 10 சதவீதம் தள்ளுபடியில் வெளியிட்டது. பங்குத்தொகை கீழ்க்கண்டவாறு செலுத்தப்படவேண்டும் :

| | ரூ. |
|---|---|
| விண்ணப்பத்தின்போழ்து | 10.00 |
| ஒதுக்கீட்டின்போழ்து | 12.50 |
| முதலாவது அழைப்பின்போழ்து | 12.50 |
| இறுதி அழைப்பின்போழ்து | 10.00 |

22,000 பங்குகள் வேண்டி விண்ணப்பங்கள் வந்தன. 600 பங்குகளை வைத்திருக்கும் வாணன் என்பவர் விண்ணப்பத்தொகை மட்டிலுமே செலுத்தினர்; 200 பங்குகளை வைத்திருக்கும் வழுதி என்பவர் இறுதி அழைப்பினை மட்டில் செலுத்தவில்லை. பிற வற்றிற்குத் தொகை முழுதும் பெறப்பட்டது. மேற்சொன்ன பங்குகள் அனைத்தும் ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டன. இவற்றில் 700 பங்குகள் பங்கு ஒன்று ரூ. 35 வீதம் சேரனுக்கு விற்கப்

பட்டன. புதுமைப் பதிப்பகத்தின் ஏடுகளில் ரொக்க ஏட்டு, குறிப்பேட்டுப் பதிவுகளையும் தந்து, இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

### உரிமைப் பங்குகள் (Rights Shares)

27. ஒரு கம்பெனியின் முதல் ரூ. 100 மதிப்புடைய 6,000 பங்குகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ரூ. 100 மதிப்புள்ள 2,000 புதிய பங்குகளைப் பங்கு ஒன்று ரூ. 130 வீதம் வெளியிட்டுத் தனது முதல் தொகையை அதிகரிக்க விரும்புகிறது. இப் பங்குகளை இப்பொழுதுள்ள பங்குநர்கள் வைத்திருக்கும் ஒவ்வொரு 3 பங்குகட்கும் ஒரு புதிய பங்கினை அளிக்கிறது. இவ்வுரிமைப் பங்குகளை வெளியிடும் நாளில் கம்பெனிப் பங்கின் சந்தை மதிப்பு ரூ. 150 எனக்கொண்டு, உரிமை மதிப்பினைக் கணக்கிடுக.

### விற்குநர்க்கும் தோற்றுவிப்பாளர்க்கும் பங்கு வெளியிடல் (Issue of Shares to vendors and Promoters)

28. விழுப்புரம் கம்பெனி ஒன்று ரூ. 100 மதிப்புள்ள 5,000 பங்குகளுடன் பதிவு செய்யப்பட்டது. அது சிதம்பரம் கம்பெனியை ரூ. 1,50,000-த்திற்கு வாங்கியது. விலையை ரூ. 1,20,000-த்திற்கு முழுதும் செலுத்தப்பட்ட பங்குகளாகவும், மீதித் தொகையை ரொக்கம் கொடுத்தும் தீர்க்கவேண்டியது. 50 பங்குகளை முழுதும் செலுத்தப்பட்டவையாகத் தோற்றுவிப்பாளர்கட்கு அவர் ஆற்றிய பணிக்காகக் கம்பெனி ஒதுக்கீடு செய்தது. 1,750 பங்குகளை ரொக்கத்திற்குப் பொதுமக்களிடம் வெளியிட்டது. பணம் முழுதும் பெறப்பட்டது என்று கொண்டு விழுப்புரம் கம்பெனியின் ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து, இருப்புநிலைக் குறிப்பில் இவை எவ்வாறு இடம்பெறும் என்பதையும் காட்டுக.

### முன்னுரிமைப் பங்குகளை மீட்டல் (Redemption of Preference Shares)

29. பரம்பு நிலையம் லிமிட்டெட் ரூ. 100 மதிப்புள்ள 2,000 மீள்தகு முன்னுரிமைப் பங்குகளை வைத்திருக்கிறது. இவற்றை 1972 திசம்பர் 31-ல் பங்கு ஒன்றுக்கு ரூ. 10 முனைமத்தில் மீட்கவேண்டும். அந் நாளில் கம்பெனியின் காப்பு நிதி (Reserve Fund) ரூ. 90,000-த்தையும் இலாப-நட்டக் கணக்கு ரூ. 25,500-ஐயும் வரவிருப்பாகக் காட்டின. காப்புநிதி முழு

வதையும், இலாப-நட்டக் கணக்கில் ரூ. 20,000-த்தையும், பங்குகளை முனைமத்துடன் மீட்பதற்குப் பயன்படுத்திக்கொள்ளத் தீர்மானிக்கப்பட்டது. மீதித் தொகைக்கு வேண்டிய எண்ணிக்கையில் ரூ. 10 மதிப்புடைய நேர்மைப் பங்குகளைப் பங்கு ஒன்றுக்கு ரூ. 2.50 முனைமத்தில் வெளியிடக் கம்பெனி தீர்மானித்தது.

இந் நடவடிக்கைகளைப் பதியவேண்டிய குறிப்பேட்டுப் பதிவுகளையும், இவை எவ்வாறு இருப்புநிலைக் குறிப்பில் இடம்பெறும் என்பதையும் காட்டுக.

30. தில்லை லிமிடெடின் 1970 ஜூன் 30-ற்கான இருப்புநிலைக் குறிப்பு கீழ்க்கொடுக்கப்பட்டுள்ளது :

| பொறுப்புகள் | | சொத்துகள் | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| பங்குமுதல் : | | | |
| பங்கு ஒன்றுக்கு ரூ. 10 வீதம் 30,000 நேர்மைப் பங்குகள், முழுதும் செலுத்தப்பட்டவை | 3,00,000 | சொத்துகள் | 3,73,000 |
| | | வங்கி | 1,75,000 |
| பங்கு ஒன்று ரூ.10 வீதம் 10,000 6 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்குகள், முழுதும் செலுத்தப்பட்டவை | 1,00,000 | | |
| காப்பு நிதி | 1,00,000 | | |
| இலாப-நட்டக் கணக்கு | 20,000 | | |
| கடனீந்தோர் | 28,000 | | |
| | 5,48,000 | | 5,48,000 |

## பங்கு விண்ணப்ப—ஒதுக்கு ஏடு
## (Share Applications and Allotment Book)

| வரிசை எண் | விண்ணப்ப நாள் | விண்ணப்பதாரரின் பெயர் | முகவரி | தொழில் | விண்ணப்பித்த பங்குகளின் எண்ணிக்கை | விண்ணப்பத்துடன் செலுத்தப் பெற்ற தொகை | ரொக்க ஏட்டுப் பக்க எண் | ஒதுக்கப் பெற்ற பங்குகளின் எண்ணிக்கை | தனி எண்கள் | | ஒதுக்குக் கடித எண் | ஒதுக்கின் போது செலுத்த வேண்டிய தொகை | ஒதுக்குப் பணம் பெற்ற நாள் | திருப்பி அனுப்ப வேண்டிய தொகை | செலுத்திய நாள் | உறுப்பினர் பதிவேட்டுப் பக்க எண் | குறிப்புகள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | ........இலிருந்து | ........வரை | | | | | | | |
| | | | | | | ரூ. | | | | | | ரூ. | | ரூ. | | | |

## பங்கு அழைப்பு ஏடு
## (Share Call Book,

| வரிசை எண் | பெயர் | முகவரி | உறுப்பினர்ப் பதிவேட்டின் பக்க எண். | பங்குகளின் எண்ணிக்கை | பங்கொன்றுக்கு ரூ........ வீதம்.......... நாளில் செலுத்த வேண்டிய முதலாவது அழைப்பு | | | பங்கொன்றுக்கு ரூ........ வீதம்.......... நாளில் செலுத்த வேண்டிய இறுதி அழைப்பு | | | முன்கூட்டிப் பெற்ற அழைப்பு | | | | குறிப்புகள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | செலுத்த வேண்டிய தொகை | தொகை பெற்ற நாள் | ரொக்க ஏட்டுப் பக்க எண். | செலுத்த வேண்டிய தொகை | தொகை பெற்ற நாள் | ரொக்க ஏட்டுப் பக்க எண். | தொகை | தொகை பெற்ற நாள் | ரொக்க ஏட்டுப் பக்க எண். | சரிக்கட்டப் பெற்ற நாள் | |
| | | | | | ரூ. | | | ரூ. | | | ரூ. | | | | |

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| வெளியிடப்பட்டதும் முழுதும் செலுத்தப்பட்டதுமான பங்குமுதல் : | | |
| முன்னுரிமை | | 50,000 |
| நேர்மை (Equity) | | 1,00,000 |
| | | 1,50,000 |
| முதல் காப்பு | | 9,500 |
| பொதுக்காப்பு | | 20,000 |
| இலாப-நட்டக் கணக்கு | | 42,500 |
| | | 2,22,000 |

தேவையான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டுக் கீழ்க் கண்ட நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன :

(1) 1963 மே 1-ல் முன்னுரிமைப் பங்குகளை மீட்பதற்கு வேண்டிய நிதியைத் திரட்டும்பொருட்டு (i) அனைத்து முதலீடு களும் ரூ. 18,000-த்திற்கு விற்கப்பட்டன; (ii) ஒன்று ரூ. 1 மதிப்புள்ள 20,000 நேர்மைப் பங்குகளை இப்பொழுது இருக்கும் பங்குநர்கட்குப் பங்கு ஒன்று ரூ. 1.25 வீதம் உடனடியாகச் செலுத்தக்கூடிய வகையில் வெளியிடப்பட்டன. தொகை முழுதும் செலுத்தப்பட்டது.

(2) 1963 சூலை 1-ல் முன்னுரிமைப் பங்குகள் உரிய முறையில் மீட்கப்பட்டன.

(3) 1963 செப்டம்பர் 31-ல் வைத்திருக்கும் ஒவ்வொரு 10 பங்குகட்கும் ஒரு புதிய பங்கு வீதம் நேர்மைப் பங்குகள் மேலூதியப் பங்குகளாக வெளியிடப்பட்டன.

வருவாய்க் காப்புக் கணக்குகளில் (Revenue Reserves) குறைந்தளவுத் தொகையையே குறைக்க இயக்குநர்கள் விரும்பு கின்றனர் என்று கொண்டு ரொக்கம் உள்பட மேற்கண்ட எல்லா நடவடிக்கைகளையும் பதியத் தேவையான குறிப்பேட்டுப் பதிவு களைத் தருக.

(C. A. Inter, 1964)

34. ஒரு கம்பெனி ரூ. 100 மதிப்புடைய 20,000 நேர்மைப் பங்குகளை வெளியிட்டது. விண்ணப்பத்தின்போழ்து ரூ. 12.50-ம், ஒதுக்கீட்டின்போழ்து ரூ. 12.50-ம், ஒதுக்கீட்டிற்குப்

பின் 3 திங்களுக்குப் பிறகு ரூ. 37.50-ம், ஒதுக்கலுக்குப்பின் 6 திங்களுக்குப் பிறகு மீதித்தொகையையும் செலுத்தவேண்டும். கட்டடங்கள் ரூ. 60,000-த்திற்கும், பொறிவகை ரூ. 35,000-த்திற்கும், சரக்கிருப்பு ரூ. 40,000-த்திற்கும், வாணிக நற்பெயர் ரூ. 25,000-த்திற்கும் வாங்கப்பட்டன. இதற்காக இவற்றை விற்றவரிடம் 1,000 முழுதும் செலுத்தப்பட்ட பங்குகளாக வெளியிடப்பட்டன.

வேண்டிய பங்குகட்கு மேலாக 2,000 பங்குகட்கு விண்ணப்பங்கள் வந்தன. ஒதுக்கீட்டின்போழ்து பெறவேண்டிய தொகை முழுதும் பெறப்பட்டது. முதலாவது அழைப்பின்போழ்து ரூ. 7,12,000-மும், இரண்டாவது அழைப்பின்போழ்து ரூ. 7,00,000-மும் பெறப்பட்டது.

கம்பெனியின் ஏடுகளில் மேற்கண்டவற்றைப் பதியத் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து, அழைப்பு நிலுவை ஏதேனும் இருப்பின், அத் தொகையையும் கண்டுபிடிக்கவும்.

(Institute of Company Secretaries of India-April, 1969)

35. கலிங்கா லிமிட்டெடின் (Kalinga Ltd.) 1961 மார்ச் 31-ற்குரிய இருப்புநிலைக் குறிப்பின் சுருக்கம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது :

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் : | | | |
| ஒன்று ரூ. 10 வீதம் 6 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்குகள், முழுதும் செலுத்தப்பட்டது | 1,00,000 | வில்லங்கமற்ற சொத்துகள் (Freehold property) | 2,80,000 |
| | | நிலமும் கட்டடமும் | 1,80,000 |
| | | கடனாளிகள் | 90,000 |
| | | வங்கியிருப்பு | 2,00,000 |
| ஒன்று ரூ. 10 வீதம் 10 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்குகள் பங்கு ஒன்றுக்கு ரூ. 5 வீதம் ரொக்கம் செலுத்தப்பட்டது | 50,000 | | |

| பொறுப்புகள் | | சொத்துகள் | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| பங்கு ஒன்று ரூ. 10 வீதம் நேர்மைப் பங்குகளாக முழுதும் ரொக்கத்தில் செலுத்தப்பட்டது | 1,50,000 | | |
| பொதுக்காப்பு | 1,00,000 | | |
| இலாப-நட்டக் கணக்கு | 1,80,000 | | |
| 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் | 50,000 | | |
| நடப்புப் பொறுப்புகள் | 1,20,000 | | |
| | 7,50,000 | | 7,50,000 |

இயக்குநர்கள் கீழ்க்கண்டவாறு முடிவு செய்தனர் :

(1) பெயரளவு மதிப்பில் மீள்தகு முன்னுரிமைப் பங்குகட்குத் திருப்பித் தருவது.

(2) கடனீட்டுப் பத்திரங்களை 2 சதவீதம் முனைமத்தில் திருப்பித் தருவது.

(3) வழங்கப்படாதிருக்கும் இலாபத்தினை முதலாக்கும் நோக்குடன் ரூ. 10 மதிப்புடைய ஒவ்வொரு இரண்டு பங்குகட்கும் ரூ. 10 மதிப்புடைய ஒரு பங்கினை மேலூதியப் பங்குகளாக நேர்மைப் பங்குநர்கட்கு வழங்குவது.

தேவையான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டபின், மேற்கண்ட நடவடிக்கைகள் செயல்படுத்தப்பட்டன.

(அ) கம்பெனியின் ஏடுகளில் மேற்சொன்ன நடவடிக்கைகளைப் பதிவதற்குத் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளையும்;

(ஆ) நடவடிக்கைகள் அனைத்தும் நிறைவேற்றப் பட்ட
பின்னுள்ள இருப்புநிலைக் குறிப்பினையும்

தயார் செய்க.

(Institute of Company Secretaries of India-April, 1970)

36. 'R' லிமிட்டெட் என்னும் கம்பெனியின் அதிகாரம் பெற்ற பங்குமுதல் ரூ. 10,00,000. ஒன்று ரூ. 100 வீதம் 5,000 நேர்மைப் பங்குகளாகவும், ஒன்று ரூ. 100 வீதம் 5,000 9 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்குகளாகவும் இது பிரிக்கப் பட்டிருக்கிறது. 31-12-68-ல் கம்பெனியின் பேரேட்டில் கீழ்க் கண்ட இருப்புகள் காணப்படுகின்றன :

| | ரூ. |
|---|---|
| பங்கு முதல் : | |
| நேர்மைப் பங்குகள் (முழுதும் செலுத்தப் பட்டவை) | 4,00,000 |
| முன்னுரிமைப் பங்குகள்( ,, ) | 2,50,000 |
| பொதுக்காப்பு | 2,50,000 |
| இலாப-நட்டக் கணக்கு (வ. இருப்பு) | 55,000 |
| பங்கு முனைமக் கணக்கு | 75,000 |

பொதுக்காப்பிலிருந்தும், வழங்கப்பெறு இலாபத்திலிருந்தும் முன்னுரிமைப் பங்குகளை ரூ. 10 முனைமத்தில் மீட்க கம்பெனி முடிவு செய்தது. மீட்டலுக்குப்பின், பொதுக்காப்பையும் வழங்கப்பெறு இலாபத்தையும் நேர்மைப் பங்குநர்கட்கு மேலூதியப் பங்குகள் வழங்கப் பயன்படுத்திக்கொள்ள வேண்டியது.

இவ்வுடன்பாட்டிற்குச் செயல் வடிவம் கொடுக்க பின்பற்ற வேண்டிய முறைகளைக் கூறுக.

மேற்கண்ட நடவடிக்கைகளைப் பதியத் தேவையான குறிப் பேட்டுப் பதிவுகளைத் தருக.

(Institute of Company Secretaries of India-April, 1969)

37. தியானா லிமிட்டெட் (Diana Ltd.) பங்கு ஒன்று ரூ. 10 வீதம் 1965 ஜூன் 30-ல் மீட்கக்கூடிய 30,000 மீள்தகு முன்னுரிமைப் பங்குகளை வைத்திருக்கிறது. இவை பங்கு ஒன்றுக்கு ரூ. 1 வீதம் முனைமத்தில் மீட்கப்படவேண்டும். அந் நாளில்

கம்பெனியின் காப்பு நிதி ரூ. 1,10,000-த்தையும், இலாப-நட்டக் கணக்கு ரூ. 30,000-த்தையும் வரவிருப்புக்களாகக் காட்டின. காப்பு நிதி முழுவதையும் இலாப-நட்டக் கணக்கில் ரூ. 20,000-த்தையும் முன்னுரிமைப் பங்குகளை முனைமத்துடன் மீட்கப் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்றும், மீதித் தேவையான தொகைக்குப் பங்கு ஒன்றுக்கு ரூ. 2.50 வீதம் முனைமத்தில் ஒன்று ரூ. 10 மதிப்புடைய எத்துணை நேர்மைப் பங்குகள் தேவையோ அவற்றை வெளியிடவும் கம்பெனி முடிவுசெய்தது.

(அ) கம்பெனியின் ஏடுகளில் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளையும்;

(ஆ) மீட்டலுக்கு முன்னும், மீட்டலுக்குப் பின்னும் இருப்புநிலைக் குறிப்பில் இக் கணக்குகள் எவ்வாறு தோன்றும் என்பதையும் காட்டுக.

(Institute of Company Secretaries of India)

38. 'A' லிமிட்டெடின் 1967 மார்ச் 31-ற்குரிய இருப்புநிலைக் குறிப்பு கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :

| | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|
| **பங்கு முதல்** | | | | |
| அதிகாரம் பெற்றதும், வெளியிட்டதும் : | | நிலைச் சொத்துகள் : | | |
| ஒன்று ரூ. 10 வீதம் 10,000 நேர்மைப் பங்குகள் | 1,00,000 | பொறிவகை, அடக்கவிலையில் | | 1,10,000 |
| | | **கழி** : தேய்மானம் | | 50,000 |
| | | | | 60,000 |
| | | நடப்புச் சொத்துகள் : | | |
| | | வங்கியிருப்பு | 1,00,000 | |
| ஒன்று ரூ. 10 வீதம் 10,000 ஆறு சதவீதம் முன்னுரிமைப் பங்குகள் (மீட்கக் கூடியவை) | 1,00,000 | கடனாளிகள் | 1,40,000 | |
| | | சரக்கிருப்பு | 1,40,000 | |
| | 2,00,000 | | | 3,80,000 |

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| வருவாய்க் காப்புகள்: (Revenue Reserves) | ரூ. | | |
| இலாப-நட்டக் கணக்கு | 45,000 | | |
| பொதுக்காப்பு | 80,000 | | |
| வரிக்காப்பு | 30,000 | 1,55,000 | |
| நடப்புப் பொறுப்புகள் | | 85,000 | |
| | | 4,40,000 | 4,40,000 |

மீண்டும் 3,000 நேர்மைப் பங்குகளைப் பங்கு ஒன்றுக்கு ரூ. 5 முனைமத்தில் வெளியிடவும், மீள்தகு முன்னுரிமைப் பங்குகளைப் பெயரளவு மதிப்பில் மீட்கவும், முடிவு செய்யப்பட்டது.

தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து, 1967 ஏப்ரல் 1-ல் மேற்கண்ட நடவடிக்கைகள் மீட்கப்பட்ட நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பினைத் தயார்செய்க.

(Adapted from Incorp, Acctts.)

# 7. கம்பெனிக் கணக்குகள்-
# கடனீட்டுப் பத்திரங்கள்

## (Company Accounts - Debentures)

கடனீட்டுப் பத்திரங்கள் பற்றிய விவரங்களை முன் பகுதியிலேயே கூறியிருக்கிறோம். இப் பகுதியில் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிடல், கடனீட்டுப் பத்திரங்களை மீட்கத் தொகை ஒதுக்குதல், கடனீட்டுப் பத்திரங்களை மீட்டல் போன்ற நடவடிக்கைகளின் கணக்குப் பதிவுகளை ஆய்வோம்.

கடனீட்டுப் பத்திரங்களை ரொக்கத்திற்கு வெளியிடும் பொழுது, பங்குகளை வெளியிடும்பொழுது செய்த பதிவுகள் போன்றேதான் இங்கும் செய்யவேண்டும். விண்ணப்பத்தின் போழ்து ஒரு பகுதியும், கடனீட்டுப் பத்திரங்களை ஒதுக்கீடு செய்யும்போழ்து ஒரு பகுதியும், மீதித் தொகைகளைத் தவணைகளிலும் ஒரு கம்பெனி பெறுவதாகக் கொண்டால், பங்குகளை வெளியிடும்பொழுது செய்த பதிவுகளைப்போன்றே கடனீட்டுப் பத்திரங்களை வெளியிடும்பொழுதும் செய்யவேண்டும்.

**எடுத்துக்காட்டு 40**

ஒரு கம்பெனி ரூ. 100 மதிப்புள்ள 2,000 ஏழு சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிட்டது. ரூ. 20 விண்ணப்பத்தின் போழ்தும், ரூ. 30 ஒதுக்கீட்டின்போழ்தும், மீதித் தொகையை ஒரே அழைப்பின்போழ்தும் செலுத்தவேண்டியது. அனைத்துக் கடனீட்டுப் பத்திரங்கட்கும் விண்ணப்பங்கள் வந்தனவென்றும், பணம் முழுதும் செலுத்தப்பட்டுவிட்டதாகக் கொண்டு குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக :

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | வங்கிக் கணக்கு ப | | 40,000 | |
| | 7 சதவீதம் கடனீட்டுப் பத்திர விண்ணப்பக்கணக்கு | | | 40,000 |
| | (ஒன்றுக்கு ரூ. 20 வீதம், 2,000 கடனீட்டுப் பத்திரங்கள் மீதான விண்ணப்பத் தொகை பெற்றது). | | | |
| | 7 சதவீதம் கடனீட்டுப் பத்திர விண்ணப்பக் கணக்கு ப | | 40,000 | |
| | 7 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 40,000 |
| | (. . . . நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு 7 சத வீதம் 2,000 கடனீட்டுப் பத்திரங்களை ஒதுக்கியது.) | | | |
| | கடனீட்டுப் பத்திர ஒதுக்குக் கணக்கு ப | | 60,000 | |
| | 7 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 60,000 |
| | (. . . . நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு, ஒன்றுக்கு ரூ. 30 வீதம் 2,000 கடனீட்டுப் பத்திரங்கள் மீது பெறவேண்டிய ஒதுக்குத் தொகை.) | | | |
| | வங்கிக் கணக்கு ப | | 60,000 | |
| | 7 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 60,000 |
| | (2,000 கடனீட்டுப் பத்திரங்கள் மீதான ஒதுக்கீட்டுத்தொகை பெற்றது.) | | | |

**குறிப்பேட்டுப் பதிவுகள்**—*(தொடர்ச்சி)*

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | 7 சதவீதம் கடனீட்டுப் பத்திர அழைப்புக் கணக்கு ப | | 1,00,000 | |
| | 7 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 1,00,000 |
| | (. . . . நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு ஒன்றுக்கு ரூ. 50 வீதம் 2,000 கடனீட்டுப் பத்திரங்கள் மீது பெறவேண்டிய முதலாவதும் இறுதியுமான அழைப்புத் தொகை.) | | | |
| | வங்கிக் கணக்கு ப | | 1,00,000 | |
| | 7 சதவீதம் கடன் பத்திர அழைப்புக் கணக்கு | | | 1,00,000 |
| | (2,000 கடன் பத்திரங்கள் மீது பெற்ற முதலாவதும் இறுதியுமான அழைப்புத் தொகை.) | | | |

மேற்கண்டவாறு விண்ணப்பத்தின்போழ்தும் ஒதுக்கீட்டின் போழ்தும், பிற தவணைகளிலும் கடனீட்டுப் பத்திரத் தொகை பெறுவதற்கு மாறாக, ஒரே பதிவிலும் இதனைச் செய்யலாம். (முழுத் தொகையையும் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிடும் பொழுதே செலுத்தவேண்டியிருப்பின், இவ்வாறு செய்யலாம்).

| விவரம் | | பற்று | வரவு |
|---|---|---|---|
| வங்கிக் கணக்கு | ப | 2,00,000 | |
| 7 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 2,00,000 |
| (ஒன்று ரூ. 100 வீதம் 2,000 கடனீட்டுப் பத்திரங்கள் மீது தொகை பெற்று ஒதுக்கியது.) | | | |

**கடனீட்டுப் பத்திரங்கள் மீது முன் கூட்டிச் செலுத்திய அழைப்பு**
**(Calls paid in advance on Debentures)**

கடனீட்டுப் பத்திர விண்ணப்ப—ஒதுக்கீட்டுத் தொகைக்குப் பிறகு மீதியுள்ள தொகையைப் பல தவணைகளில் கம்பெனி பெறுவதாயின், பங்குகள் மீது அழைப்புக் கோரும்பொழுது செய்த பதிவுகள் போன்றே இங்கும் செய்யவேண்டும். சில கடனீட்டுப் பத்திரதாரர்கள் அழைப்புக் கோராமுன்னரே முழுத் தொகையையும் செலுத்திவிடலாம். அந் நிலையில் அவ்வாறு அழையாமல் பெற்றத் தொகையினைக், 'கடனீட்டுப் பத்திரங்கள் மீது முன்கூட்டிச் செலுத்திய அழைப்புக் கணக்கு' எனும் கணக்கில் வரவு வைக்கவேண்டும். பின்னர், அழைப்புக் கோரும்பொழுது கடனீட்டுப் பத்திரங்கள் மீது முன்கூட்டிச் செலுத்திய அழைப்புக் கணக்கில் பற்றும், அவ் வழைப்புக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும். முன்கூட்டிச் செலுத்தப்பெற்ற அழைப்புத் தொகை மீது கொடுக்கவேண்டிய வட்டிக்கும், கடனீட்டுப் பத்திரங்கள் மீது கொடுக்கவேண்டிய வட்டிக்கும் தொடர்பு ஏதுமில்லை. தகவல் அறிக்கையில் அல்லது கம்பெனிக்கும் கடனீட்டுப் பத்திர தாரர்கட்கும் இருக்கும் ஒப்பந்தத்தில் கண்டுள்ளவாறே இத் தொகை மீது வட்டி செலுத்தப்படும். முன்கூட்டிச் செலுத்தப் பெற்ற அழைப்புத் தொகையைப் பெற்ற நாளிலிருந்து, அழைப்புக் கணக்கிற்கு அதனைச் சரிசெய்து கொள்ளும் நாள்வரை மட்டுமே இத் தொகை மீது வட்டி தரப்படும்.

**முனைமத்தொகையில் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிடல்**
**(Issue of Debentures at a premium)**

கடனீட்டுப் பத்திரங்கள் முனைமத்தில் வெளியிடப்படு மாயின், அம் முனைமத்தொகையைக் கடனீட்டுப்பத்திர முனைமக் கணக்கில் (Debenture premium Account) வரவு வைக்க வேண்டும்.

பங்கு முனைமத்தொகையைப் பயன்படுத்துவதிலுள்ள தடைகள் போன்று, கடனீட்டுப் பத்திரங்களை வெளியிட்டதில் பெற்ற முனைமத் தொகையைப் பயன்படுத்துவதில் சட்டத் தடைகள் ஏதுமில்லை. கம்பெனியின் செயல்முறை விதிகளில் இது பற்றிய தடை ஏதேனும் இல்லையெனில், கடனீட்டுப்பத்திர முனைமத் தொகையை எந் நோக்கத்திற்கும் பயன்படுத்திக் கொள்ளலாம். இதனை இலாப-ஈவு கொடுப்பதற்குக்கூட பயன்படுத்திக் கொள்ள லாம் என்று ரூப் ராம் குப்தா அவர்கள் கருதுகிறார். தடை ஏதுமில்லையெனினும், இதனை இவ்வாறு பயன்படுத்துவது சரி

யாகாது. கடனீட்டுப்பத்திர வெளியீட்டுச் செலவினை மீட்பதற்கோ, தொடக்கச் செலவுகள், வாணிக நற்பெயர் போன்றவற்றைக் குறைப்பதற்கோ, கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் கணக்கில் சேர்த்துக்கொள்வதற்கோ இதைப் பயன்படுத்துதல் சரியான முறையென பேட்லிபாய் அவர்கள் கருதுகிறார்.

ரூ. 100 மதிப்புள்ள கடனீட்டுப்பத்திரத்தை 10 சதவீதம் முனைமத்தில் வெளியிடுவதாயின், செய்யவேண்டிய பதிவுகள் :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| வங்கிக் கணக்கு | ப | 110 | |
| கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 100 |
| கடனீட்டுப்பத்திர முனைமக் கணக்கு | | | 10 |
| (ரூ. 100 மதிப்புள்ள கடனீட்டுப்பத்திரத்தை 10 சதவீதம் முனைமத்தில் வெளியிட்டது.) | | | |

**தள்ளுபடியில் கடனீட்டுப்பத்திரங்களை வெளியிடல்** (Issue of debentures at a discount)

சட்டத்தடை ஏதுமின்றிக் கடனீட்டுப் பத்திரங்களைத் தள்ளுபடியில் வெளியிடலாம். அதாவது, முகமதிப்பிற்கும் (Face Value) குறைவாக வெளியிடப்படுமாயின், கடனீட்டுப்பத்திரம் தள்ளுபடியில் வெளியிடப்பட்டதாகப் பொருள். இவ்வாறு தள்ளுபடியில் அவை வெளியிடப்படும்பொழுது, பெற்ற ரொக்கத்திற்கு வங்கிக் கணக்கில் பற்றும், அளித்த தள்ளுபடித் தொகைக்குக் கடனீட்டுப் பத்திரத் தள்ளுபடிக் கணக்கில் பற்றும், கடனீட்டுப் பத்திரப் பெயரளவுத் தொகைக்குக் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

**எடுத்துக்காட்டு 41**

கூட்டுப்பங்குக் கம்பெனி ஒன்று ரூ. 100 மதிப்புள்ள 5,000 எட்டு சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை 5 சதவீதம் தள்ளுபடியில் வெளியிட்டது. 20 சதவீதம் விண்ணப்பத்தின்போழ்தும், 30 சதவீதம் ஒதுக்கீட்டின்போழ்தும், மீதித் தொகையை 3 திங்கள் சென்ற பிறகும் செலுத்தவேண்டியது. 100 கடனீட்டுப் பத்திரங்களை வைத்திருக்கும் ஒருவர் ஒதுக்கீட்டின்போழ்தே முழுத் தொகையையும் செலுத்திவிட்டார். வேண்டிய குறிப்பேட்டுப்

பதிவுகளைத் தந்து இவை எவ்வாறு இருப்புநிலைக் குறிப்பில் இடம் பெறுகிறதென்பதைக் காட்டுக.

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|---|
| | | | | ரூ. | ரூ. |
| | வங்கிக் கணக்கு | ப | | 1,00,000 | |
| | கடனீட்டுப்பத்திர விண்ணப்பக் கணக்கு | | | | 1,00,000 |
| | (ரூ. 20 வீதம் 8 சதவீதம் 5,000 கடனீட்டுப்பத்திரங்கள் மீது பெற்ற விண்ணப்பத் தொகை.) | | | | |
| | கடனீட்டுப்பத்திர விண்ணப்பக் கணக்கு | ப | | 1,00,000 | |
| | 8 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | | 1,00,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு ஒன்றுக்கு ரூ. 20 வீதம் 5,000 கடனீட்டுப்பத்திரங்களை ஒதுக்கிப் பெற்ற விண்ணப்பத் தொகையைக் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கிற்கு மாற்ற.) | | | | |
| | கடனீட்டுப்பத்திர ஒதுக்கீட்டுக் கணக்கு | ப | | 1,50,000 | |
| | கடனீட்டுப்பத்திரத் தள்ளுபடிக் கணக்கு | ப | | 25,000 | |
| | 8 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | | 1,75,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு ஒன்றுக்கு ரூ. 30 வீதம் 5,000 கடனீட்டுப் பத்திரங்கள் மீது பெறவேண்டிய ஒதுக்கீட்டுத் தொகையும், 5 சதவீதம் தள்ளுபடியும்.) | | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | வங்கிக் கணக்கு ப | | 1,54,500 | |
| | 8 சதவீதம் கடனீட்டுப் பத்திர ஒதுக்குக் கணக்கு | | | 1,50,000 |
| | கடனீட்டுப் பத்திரங்கள் மீது முன்கூட்டிச் செலுத்திய அழைப்புக் கணக்கு | | | 4,500 |
| | (ஒன்றுக்கு ரூ. 30 வீதம், 5,000 கடனீட்டுப் பத்திரங்கள் மீது பெற்ற ஒதுக்குத் தொகையும், 100 கடனீட்டுப் பத்திரங்கள் மீது முன் கூட்டிச் செலுத்தப் பெற்ற அழைப்புத் தொகையும்.) | | | |
| | 8 சதவீதம் கடனீட்டுப்பத்திர அழைப்புக் கணக்கு ப | | 2,25,000 | |
| | 8 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 2,25,000 |
| | (. . . . நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு ஒன்றுக்கு ரூ. 45 வீதம், 5,000 கடனீட்டுப் பத்திரங்கள் மீது பெறவேண்டிய இறுதி அழைப்புத் தொகை.) | | | |
| | வங்கிக் கணக்கு ப | | 2,20,500 | |
| | கடனீட்டுப் பத்திரங்கள் மீது முன்கூட்டிச் செலுத்திய அழைப்புக் கணக்கு ப | | 4,500 | |
| | 8 சதவீதம் கடனீட்டுப் பத்திர அழைப்புக் கணக்கு | | | 2,25,000 |
| | (ஒன்றுக்கு ரூ. 45 வீதம் 4,900 கடனீட்டுப் பத்திரங்கள் மீது பெற்ற அழைப்புத் தொகையும், 100 கடனீட்டுப்பத்திரங்கள் மீது முன் கூட்டிச் செலுத்திய அழைப்புத்தொகையிலிருந்து சரிக் கட்டுதலும்.) | | | |

விடை :

பற்று **இருப்புநிலைக் குறிப்பு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | **பிணைக் கடன் :** (Secured Loan) | | | | **நடப்புச் சொத்துகள் :** வங்கி | | 4,75,000 |
| | 8 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் .. | | 5,00,000 | | **பல்வகைச் செலவினம் :** கடனீட்டுப் பத்திர தள்ளுபடி .. | | 25,000 |
| | | | 5,00,000 | | | | 5,00,000 |

கடனீட்டுப் பத்திரங்கள் மீதான தள்ளுபடி ஒரு நட்ட மாகும். ஆனால், இந் நட்டம் முழுவதையும் எந்த ஆண்டில் கடனீட்டுப் பத்திரங்கள் வெளியிடப்பட்டனவோ, அந்த ஆண்டி லேயே நீக்கிவிடுவது சரியாகாது. ஏனெனில், இப்பொழுது கடனீட்டுப் பத்திரங்கள்மூலம் பெற்ற பணம் பின்வரும் பல்லாண்டு கட்குப் பயன்தருகிறது. அதாவது, கடனீட்டுப் பத்திரங்களை மீட்கும்வரை இதன் பயன் நீடிக்கிறது. எடுத்துக்காட்டாக, 5 ஆண்டுகள் இறுதியில் மீட்கக்கூடிய ரூ. 1,00,000-த்திற்கான கடனீட்டுப் பத்திரங்களை ரூ. 10,000 தள்ளுபடியில் வெளியிடுவ தாகக் கொண்டால் தள்ளுபடித்தொகை ரூ. 10,000-த்தையும் இவ் வாண்டு இலாப-நட்டக் கணக்கிற்குக் கொண்டு செல்லாமல், 5 ஆண்டுகட்கு இதனை நீக்கிக் கொள்ளலாம். ஒவ்வோராண்டும் ரூ. 2,000 வீதம் 5 ஆண்டுகளில் இதனை நீக்கிக்கொள்ளலாம். கடனீட்டுப்பத்திர தள்ளுபடிக் கணக்கு காட்டும் பற்றிருப்பு, இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் அக் கணக்கு நீக்கப்பெறும் வரை காட்டப்பட்டுவரும்.

மீளாக் கடனீட்டுப் பத்திரங்களைக் கம்பெனி வெளியிடு மாயின், அதன் மீது அளிக்கப்பட்ட தள்ளுபடித் தொகையை, எப்பொழுதும் வைத்திருத்தலும் சரியன்று. அத் தள்ளுபடியையும் படிப்படியாக நீக்கிவிடுதலே சிறந்த முறையாகும். கடனீட்டுப் பத்திரங்களை வெளியிடுவதில் ஏற்கப்படும் பிற செலவினங்களையும், கடனீட்டுப் பத்திரங்கள் மீது அளிக்கப்படும் தள்ளுபடியையும் சேர்த்து ஒரே கணக்காக 'கடனீட்டுப்பத்திர வெளியீட்டுச் செலவுக் கணக்கு' (Cost of issue of Debentures account) எனும் கணக்கில் எழுதுவது மரபு. அவ்வாறாயின், கடனீட்டுப்பத்திர வெளியீட்டுச் செலவு முழுதும் (தள்ளுபடி + பிற செலவுகள்) கடனீட்டுப்பத்திரங்கள் இருக்கும்வரை இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில், 'பலவகைச் செலவினங்கள்' (Miscellaneous expenditure) எனும் தலைப்பின்கீழ்க் 'கடனீட்டுப்பத்திர வெளி யீட்டுச் செலவுக் கணக்கு' என்று காட்டப்படும்.

### எடுத்துக்காட்டு 42

வரையறு பொறுப்புடைய ஒரு கம்பெனி ரூ. 100 மதிப் புடைய 9 சதவீதம் 5,000 கடனீட்டுப் பத்திரங்களை 10 சதவீதம் தள்ளுபடியில் வெளியிட்டது. இவை 5 ஆண்டுகட்குப் பின்னர் மீட்கப்பட வேண்டியவை. அனைத்துக் கடனீட்டுப் பத்திரங் கட்கும், விண்ணப்பங்கள் வர, 1968 சனவரி 1-ல் இவை ஒதுக்கீடு செய்யப்பட்டனவென்றும், இவற்றை வெளியிடும்

செலவு ரூ. 5,000 ஆகியதென்றும் கொண்டு, கடனீட்டுப் பத்திர தள்ளுபடிக் கணக்கினை 5 ஆண்டுகட்கும் காட்டுக. ஒவ்வோராண்டு இருப்புநிலைக் குறிப்பில் இது எவ்வாறு காட்டப் படும் என்பதையும் குறிப்பிடுக.

**விடை :**

| | | |
|---|---|---|
| கடனீட்டுப் பத்திரங்கள் மீதான தள்ளுபடி | ரூ. | 50,000 |
| **கூட்டு :** | | |
| கடனீட்டுப்பத்திர வெளியீட்டுச் செலவு | ரூ. | 5,000 |
| கடனீட்டுப்பத்திரத்தின் மீதான மொத்த வெளியீட்டுச் செலவு | ரூ. | 55,000 |

இப்பொழுது மொத்தச் செலவான ரூ. 55,000-த்தைக் கடனீட்டுப்பத்திர வெளியீட்டுச் செலவுக் கணக்கு எனும் கணக்கில் எழுதி 5 ஆண்டில் நீக்கப்படவேண்டும். இவற்றை வெளியிடு வதற்குத் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகள் :

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | வங்கிக் கணக்கு ப | | 4,50,000 | |
| | கடனீட்டுப் பத்திர விண்ணப்ப-ஒதுக்கீட்டுக் கணக்கு | | | 4,50,000 |
| | (ஒன்று ரூ. 100 மதிப்புடைய 5,000 கடனீட்டுப் பத்திரங்கள் மீது 10 சதவீதம் தள்ளுபடியில் பெற்ற விண்ணப்ப-ஒதுக்கீட்டுத் தொகை.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | 9 சதவீதம் கடனீட்டுப் பத்திர விண்ணப்ப—ஒதுக்கீட்டுக் கணக்கு ப | | 4,50,000 | |
| | கடனீட்டுப்பத்திர தள்ளுபடிக் கணக்கு ப | | 50,000 | |
| | 9 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 5,00,000 |
| | (. . . . நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு 5,000 கடனீட்டுப் பத்திரங்கள் மீது பெற்ற விண்ணப்பத் தொகையைக் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| | கடனீட்டுப் பத்திரச் செலவுக் கணக்கு ப | | 5,000 | |
| | வங்கிக் கணக்கு | | | 5,000 |
| | (5,000 ஒன்பது சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிடுவதற்கான செலவு) | | | |
| | கடனீட்டுப் பத்திர வெளியீட்டுச் செலவுக் கணக்கு ப | | 55,000 | |
| | கடனீட்டுப் பத்திரத் தள்ளுபடிக் கணக்கு | | | 50,000 |
| | கடனீட்டுப்பத்திர செலவுக் கணக்கு | | | 5,000 |
| | (கடனீட்டுப் பத்திர தள்ளுபடிக் கணக்கையும், கடனீட்டுப்பத்திரச் செலவுக் கணக்கையும் ஒரே கணக்கிற்கு மாற்ற.) | | | |

இப்பொழுது கடனீட்டுப் பத்திர செலவுக் கணக்கு 5 ஆண்டுகட்கும் கீழ்க்கண்டவாறிருக்கும் :

பற்று **கடனீட்டுப் பத்திர வெளியீட்டுச் செலவு கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1968 சன. 1 | கடனீட்டுப்பத்திர தள்ளுபடிக் க/கு .. | | 50,000 | 1968 திச. 31 | இலாப-நட்டக் க/கு .. | | 11,000 |
| | | | | | இருப்பு கீ/இ .. | | 44,000 |
| | கடனீட்டுப்பத்திர செலவுக் க/கு .. | | 5,000 | | | | |
| | | | 55,000 | | | | 55,000 |
| 1969 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 44,000 | 1969 திச. 31 | இலாப-நட்டக் க/கு .. | | 11,000 |
| | | | | ,, | இருப்பு கீ/இ .. | | 33,000 |
| | | | 44,000 | | | | 44,000 |

பற்று **கடனீட்டுப் பத்திர வெளியீட்டுச் செலவு கணக்கு**—(தொடர்ச்சி) வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1970 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 33,000 | 1970 திச. 31 | இலாப-நட்டக் க/கு .. | | 11,000 |
| | | | | ,, | இருப்பு கீ/இ .. | | 22,000 |
| | | | 33,000 | | | | 33,000 |
| 1971 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 22,000 | 1971 திச. 31 | இலாப-நட்டக் க/கு .. | | 11,000 |
| | | | | | இருப்பு கீ/இ .. | | 11,000 |
| | | | 22,000 | | | | 22,000 |
| 1972 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 11,000 | 1972 தி. 31 | இலாப-நட்டக் க/கு .. | | 11,000 |

ஒவ்வோராண்டிலும் இருப்புநிலைக் குறிப்பில் கடனீட்டுப் பத்திர வெளியீட்டுச் செலவு கீழ்க்கண்டவாறு காட்டப்பெறும் :

**இருப்புநிலைக் குறிப்பு**

| | | ரூ. |
|---|---|---|
| 1968 | கடனீட்டுப்பத்திர வெளியீட்டுச் செலவு .. | 44,000 |
| 1969 | கடனீட்டுப்பத்திர வெளியீட்டுச் செலவு .. | 33,000 |
| 1970 | கடனீட்டுப்பத்திர வெளியீட்டுச் செலவு .. | 22,000 |
| 1971 | கடனீட்டுப்பத்திர வெளியீட்டுச் செலவு .. | 11,000 |

1972 திசம்பர் 31-ற்கான இருப்புநிலைக் குறிப்பில் இக் கணக்கு இடம்பெறாது.

கடனீட்டுப் பத்திரங்கள் குறிப்பிட்ட காலக் கெடுவிற்குப் பின் மீட்கப்பட்டால், மேலே விளக்கிய முறையில் கடனீட்டுப் பத்திர தள்ளுபடியை ஒவ்வோராண்டும் நீக்கலாம். ஆனால், ஒவ்வோராண்டும் குறிப்பிட்ட தொகையைக் குலுக்குச் சீட்டு மூலமாக மீட்கப்படுமாயின், இம் முறை பொருந்தாது. ரூ.50,000 மதிப்புள்ள கடனீட்டுப் பத்திரங்களை ஒரு கம்பெனி வெளியிட்டிருப்பதாகவும் ஒவ்வோராண்டும் 12,500-க்கான மதிப்புள்ள கடனீட்டுப் பத்திரங்களைத் திருப்பித் தருவதாகவும் கொள்வோம். இப்பொழுது கடனீட்டுப் பத்திர எண்கள் அனைத்தும் சீட்டுகளில் எழுதப்பெற்றுக் குலுக்கப்பெறும். தேவையான சீட்டுகளை எடுத்து அதில் காணப்பெறும் எண்களுடைய கடனீட்டுப் பத்திரங்களைக் கம்பெனி ஒவ்வோராண்டும் மீட்பதாகக் கொள்வோம். இம் முறை பின்பற்றப்படும்பொழுது, கடனீட்டுப் பத்திரங்கள் மீதான தள்ளுபடித் தொகையை ஒவ்வோராண்டும் நிலுவையிலுள்ள கடனீட்டுப் பத்திரத்தொகை விகிதத்தில் நீக்குதலே சிறந்ததாகும்.

## எடுத்துக்காட்டு 43

கூட்டுப் பங்குக் கம்பெனி ஒன்று 1961 சனவரி 1-ல் ரூ. 4,00,000-த்திற்கு கடனீட்டுப் பத்திரங்களை 5 சதவீதம் தள்ளுபடியில் வெளியிட்டது. 1969 திசம்பர் 31-லிருந்து ஒவ்வோராண்டும் ரூ. 1,00,000-த்திற்கான கடனீட்டுப் பத்திரங்களைக் குலுக்குச் சீட்டு எடுத்து மீட்கவேண்டியது. ஒவ்வோராண்டும் நீக்கவேண்டிய கடனீட்டுப் பத்திர தள்ளுபடியைக் கணக்கிடுக.

**விடை :**

மொத்த கடனீட்டுப் பத்திர தள்ளுபடி ரூ. 20,000

| ஆண்டு | பயன்படுத்திய தொகை | விகிதம் | தொகை |
|---|---|---|---|
| 1 | 4,00,000 | 4 | $20,000 \times \frac{4}{10} = 8,000$ |
| 2 | 3,00,000 | 3 | $20,000 \times \frac{3}{10} = 6,000$ |
| 3 | 2,00,000 | 2 | $20,000 \times \frac{2}{10} = 4,000$ |
| 4 | 1,00,000 | 1 | $20,000 \times \frac{1}{10} = 2,000$ |

## பல்வகை நிபந்தனைகளில் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிடல்

கடனீட்டுப் பத்திரங்களை எந் நிபந்தனைகளுடனும் கம்பெனி விரும்புமாறு வெளியிடலாம். கீழ்க்காணும் வகைகளில் கடனீட்டுப்பத்திர வெளியீடு அமையலாம் :

### (1) பெயரளவு மதிப்பில் மீட்கக்கூடிய கடனீட்டுப்பத்திரங்களைப் பெயரளவு மதிப்பில் வெளியிடலாம்.

எடுத்துக்காட்டாக, ரூ. 100 மதிப்புள்ள கடனீட்டுப் பத்திரம் ரூ. 100 மதிப்பிற்கே வெளியிடப்படும். இதனை மீட்கும் பொழுது ரூ. 100 மட்டுமே திருப்பித் தரப்படும். இந் நிலையில் தேவையான பதிவு முன்செய்தது போன்றேதான்.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| வங்கிக் கணக்கு | ப | 100 | |
| கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 100 |

### (2) தள்ளுபடியில் வெளியிடப்பட்ட கடனீட்டுப்பத்திரங்களைப் பெயரளவு மதிப்பில் மீட்டல்

எடுத்துக்காட்டாக, ரூ. 100 மதிப்புள்ள கடனீட்டுப் பத்திரத்தை ரூ. 90-க்கு வெளியிட்ட பின்னர், அதனை மீட்கும் பொழுது ரூ. 100 திருப்பித் தரவேண்டும். ரூ. 100-க்குப் பதில் ரூ. 90 தான் வெளியிடும்பொழுது கிடைக்கிறது. ஆனால், திருப்பித் தரும்பொழுதோ அதற்கு ரூ. 100 தரவேண்டியிருக்கிறது. இதனால், ஏற்படும் நட்டத்தைக் கடனீட்டுப் பத்திர தள்ளுபடிக் கணக்கில் பற்று வைக்கவேண்டும். முன் விளக்கியவாறே இப் பதிவு அமையும். அதாவது :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| வங்கிக் கணக்கு | ப | 90 | |
| கடனீட்டுப் பத்திரத் தள்ளுபடிக் கணக்கு | ப | 10 | |
| கடனீட்டுப் பத்திரக் கணக்கு | | | 100 |

### (3) முனைமத்தில் வெளியிடப்பட்ட கடனீட்டுப்பத்திரங்களைப் பெயரளவு மதிப்பில் மீட்டல்

இங்கு எடுத்துக்காட்டாக, ரூ. 100 மதிப்புள்ள கடனீட்டுப் பத்திரத்தை ரூ. 110-ற்கு வெளியிடுகிறோம். திருப்பி மீட்கும்

பொழுது ரூ. 100 தான் திருப்பித் தரவேண்டும். எனவே, இந் நிலையில் ரூ. 10 ஆதாயம் கிடைக்கிறது. இது ஒரு முதலின ஆதாயமாகும் (Capital profit). இதனைக் கடனீட்டுப் பத்திர முனைமக் கணக்கிற்கு எடுத்துச் செல்லலாம். இக் கணக்கு இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகள் பகுதியில் காண்பிக்கப் பெறும். இதுபோன்று வெளியிடப்படும் கடனீட்டுப் பத்திரத் திற்கான பதிவு :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| வங்கிக் கணக்கு | ப | 110 | |
| கடனீட்டுப் பத்திரக் கணக்கு | | | 100 |
| கடனீட்டுப் பத்திர முனைமக் கணக்கு | | | 10 |

### (4) முக மதிப்பில் (Face Value) வெளியிட்ட கடனீட்டுப்பத்தி ரங்களை முனைமத்தில் மீட்டல்

எடுத்துக்காட்டாக, ரூ. 100 மதிப்புடைய கடனீட்டுப் பத்திரம் ரூ. 100-க்கே வெளியிடப்படும். ஆனால், இதனை மீட்கும்பொழுது ரூ. 110 திருப்பித் தரவேண்டும். மீட்கும் பொழுது அதிகமான தொகை தரவேண்டியுள்ளதால் நட்டம் ஏற்படுகிறது. இவ் வகையில் வெளியிடப்படும் கடனீட்டுப் பத்திரத்திற்குத் தேவையான பதிவு :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| வங்கிக் கணக்கு | ப | 100 | |
| கடனீட்டுப் பத்திர வெளியீட்டு நட்டக் கணக்கு | ப | 10 | |
| கடனீட்டுப் பத்திரக் கணக்கு | | | 100 |
| கடனீட்டுப் பத்திர மீட்பு முனைமக் கணக்கு | | | 10 |

கடனீட்டுப் பத்திர வெளியீட்டு நட்டக் கணக்கில் ஒவ்வோ ராண்டிலும் குறிப்பிட்டத் தொகையை நீக்கவேண்டும். நீக்கப் பெறாத தொகை ஒவ்வோராண்டிலும் இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் 'பல்வகைச் செலவினம்' எனும் தலைப்பின் கீழ்க் காண்பிக்கப்பெறும்.

ஒவ்வோராண்டும் கடனீட்டுப் பத்திர மீட்பு முனைமக் கணக்கானது கடனீட்டுப் பத்திரங்களினின்றும் தனித்து இருப்பு நிலைக் குறிப்பில் பொறுப்புகள் பகுதியில் காண்பிக்கப்பெறும். கடனீட்டுப் பத்திரங்களை மீட்கும்பொழுது இது கடனீட்டுப் பத்திரதாரர்கள் கணக்கிற்கு மாற்றப்படும்.

### (5) கடனீட்டுப் பத்திரங்களைத் தள்ளுபடியில் வெளியிட்டு முனைமத்தில் மீட்டல்

எடுத்துக்காட்டாக, ரூ. 100 மதிப்புள்ள கடனீட்டுப் பத்திரத்தை ரூ. 90-க்கு வெளியிடுவதாகக் கொள்வோம். இதனை மீட்கும்பொழுதோ ரூ. 110 தரவேண்டியதாகக் கொள்வோம். இவ்வாறு வெளியிடும்பொழுது பெயரளவு மதிப்பிற்குக் குறைவாகப் பணம் பெற்று, மீட்கும்பொழுதோ பெயரளவு மதிப்பிற்கும் அதிகமாகப் பணம் தரவேண்டியுள்ளது. இவ்வாறு ஏற்படும் மொத்த நட்டத் தொகையைக் கடனீட்டுப் பத்திர வெளியீட்டு நட்டக் கணக்கில் பற்று வைக்கவேண்டும். பதிவு கீழ்க்கண்டவாறிருக்கும்.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| வங்கிக் கணக்கு | ப | 90 | |
| கடனீட்டுப் பத்திர வெளியீட்டு நட்டக் கணக்கு | ப | 20 | |
| கடனீட்டுப் பத்திரக் கணக்கு | | | 100 |
| கடனீட்டுப் பத்திர மீட்பு முனைமக் கணக்கு | | | 10 |

**எடுத்துக்காட்டு 44**

வரையறு பொறுப்புடைய கம்பெனி ஒன்று ரூ. 100 மதிப்புள்ள 6,000, 8 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிடுகிறது.

(அ) முக மதிப்பிலேயே (பெயரளவு மதிப்பிலேயே) அவை மீட்கப்படுமென்று கொண்டு, கீழ்க்கண்ட நிலைகளில் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளையும் இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க :

(i) கடனீட்டுப் பத்திரங்கள் பெயரளவு மதிப்பிலேயே வெளியிடப்படுமாயின்,

(ii) கடனீட்டுப் பத்திரங்கள் 5 சதவீதம் முனைமத் தொகையில் வெளியிடப்படுமாயின்,

(iii) கடனீட்டுப் பத்திரங்கள் 5 சதவீதம் தள்ளுபடியில் வெளியிடப்படுமாயின்.

(ஆ) கடனீட்டுப் பத்திரங்கள் 5 சதவீதம் முனைமத் தொகையில் மீட்கப்படுமென்றுகொண்டு கீழ்க்கண்ட நிலைகளில்

குறிப்பேட்டுப் பதிவுகளையும், இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க :

(i) கடனீட்டுப் பத்திரங்கள் பெயரளவு மதிப்பில் வெளியிடப்படுமாயின்;

(ii) கடனீட்டுப் பத்திரங்கள் 5 சதவீதம் தள்ளுபடியில் வெளியிடப்படுமாயின்.

**விடை :** **குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|---|
| | அ. (i) **பெயரளவு மதிப்பில் வெளியிடல்** | | | ரூ. | ரூ. |
| | வங்கிக் கணக்கு | ப | | 6,00,000 | |
| | 8 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | | 6,00,000 |
| | (ரூ. 100 மதிப்புள்ள 6,000 கடனீட்டுப் பத்திரங்களை வெளியிட்டது.) | | | | |
| | (ii) **முனைமத்தில் வெளியிடல்** | | | | |
| | வங்கிக் கணக்கு | ப | | 6,30,000 | |
| | 8 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | | 6,00,000 |
| | கடனீட்டுப் பத்திர முனைமக் கணக்கு | | | | 30,000 |
| | (ரூ. 100 மதிப்புள்ள 6,000 கடனீட்டுப் பத்திரங்களை 5 சதவீதம் முனைமத்தில் வெளியிட்டது.) | | | | |
| | (iii) **தள்ளுபடியில் வெளியிடல்** | | | | |
| | வங்கிக் கணக்கு | ப | | 5,70,000 | |
| | கடனீட்டுப் பத்திர தள்ளுபடிக் கணக்கு | ப | | 30,000 | |
| | 8 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | | 6,00,000 |
| | (ரூ. 100 மதிப்புள்ள 6,000 கடனீட்டுப் பத்திரங்களை 5 சதவீதம் தள்ளுபடியில் வெளியிட்டது.) | | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | **ஆ. (i) முனைமத்தில் மீட்டலும் பெயரளவு மதிப்பில் வெளியிடலும்** | | | |
| | வங்கிக் கணக்கு ப | | 6,00,000 | |
| | கடனீட்டுப் பத்திர வெளியீட்டு நட்டக் கணக்கு ப | | 30,000 | |
| | 8 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 6,00,000 |
| | கடனீட்டுப் பத்திர மீட்பு முனைமக் கணக்கு | | | 30,000 |
| | (ரூ. 100 மதிப்புள்ள 6,000 கடனீட்டுப் பத்திரங்களைப் பெயரளவு மதிப்பில் வெளியிட்டு 5 சதவீதம் முனைமத்தில் மீட்கவேண்டியவை.) | | | |
| | **(ii) முனைமத்தில் மீட்டலும் தள்ளுபடியில் வெளியிடலும்** | | | |
| | வங்கிக் கணக்கு ப | | 5,70,000 | |
| | கடனீட்டுப் பத்திர வெளியீட்டு நட்டக் கணக்கு ப | | 60,000 | |
| | 8 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 6,00,000 |
| | கடனீட்டுப் பத்திர மீட்பு முனைமக் கணக்கு | | | 30,000 |
| | (ரூ. 100 மதிப்புள்ள 6,000 கடனீட்டுப் பத்திரங்களை 5 சதவீதம் தள்ளுபடியில் வெளியிட்டு 5 சதவீதம் முனைமத்தில் மீட்கப்படவேண்டியவை.) | | | |

பற்று **இருப்புநிலைக் குறிப்பு** வரவு

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| அ. (i) **பிணைக் கடன் :** | | **நடப்புச் சொத்துகள் :** | |
| 8 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் .. | 6,00,000 | வங்கி .. | 6,00,000 |
| (ii) **காப்பும் மிகுதியும் :** | | **நடப்புச் சொத்துகள் :** | |
| கடனீட்டுப்பத்திர முனைமம் .. | 30,000 | வங்கி .. | 6,30,000 |
| **பிணைக் கடன் :** | | | |
| 8 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் .. | 6,00,000 | | |
| | 6,30,000 | | 6,30,000 |
| (iii) **பிணைக் கடன் :** | | **நடப்புச் சொத்துகள் :** | |
| 8 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் .. | 6,00,000 | வங்கி .. | 5,70,000 |
| | | **பல்வகைச் செலவினம் :** | |
| | | கடனீட்டுப்பத்திர தள்ளுபடி .. | 30,000 |
| | 6,00,000 | | 6,00,000 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆ. (i) | **பிணைக் கடன் :** | | | **நடப்புச் சொத்துகள் :** | | |
| | 8 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் | .. | 6,00,000 | வங்கி | .. | 6,00,000 |
| | | | | **பல்வகைச் செலவினம் :** | | |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு முனைமம் | .. | 30,000 | கடனீட்டுப்பத்திர வெளியீட்டு நட்டம் | .. | 30,000 |
| | | | 6,30,000 | | | 6,30,000 |
| (ii) | **பிணைக் கடன் :** | | | **நடப்புச் சொத்துகள் :** | | |
| | 8 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் | .. | 6,00,000 | வங்கி | .. | 5,70,000 |
| | | | | **பல்வகைச் செலவினம் :** | | |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு முனைமம் | .. | 30,000 | கடனீட்டுப்பத்திர வெளியீட்டு நட்டம் | .. | 60,000 |
| | | | 6,30,000 | | | 6,30,000 |

**கடனீட்டுப்பத்திரங்களை ரொக்கத்திற்கன்றி, வேறு மறு பயனுக்காக வெளியிடல்** (Issue of debentures for consideration other than cash)

சில வேளைகளில் நடந்துவரும் தொழில் ஒன்றைக் கம்பெனி வாங்கி நடத்த முற்படலாம். அல்லது தனது தொழிலை நடத்தத் தேவையான சொத்துகளை வாங்கலாம். அவற்றிற்கான விலையை ரொக்கத்தில் கொடுப்பதற்கு மாறாகத் தனது கடனீட்டுப் பத்திரங்களை வழங்கி விலையைத் தீர்க்க ஒப்புக்கொள்ளலாம். அவ்வாறாயின், முதலில் சொத்துகள் கணக்கில் பற்றும், அவற்றை விற்கும் கம்பெனியின் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். பின்னர், சொத்துகளை விற்ற கம்பெனியின் கணக்கில் பற்றும், கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

இவ்வாறு ரொக்கத்திற்கன்றி வேறு மறுபயனுக்கு வெளியிடும் கடனீட்டுப் பத்திரங்கள் பெயரளவு மதிப்பிற்கோ, முனைமத்திற்கோ அல்லது தள்ளுபடிக்கோ இருக்கலாம்.

### எடுத்துக்காட்டு 45

**பூம்புகார் கம்பெனி (வரையறு பொறுப்புடையது)** மதுரை நிறுவனத்தின் சொத்துகளை ரூ. 2,20,000-த்திற்கு வாங்கியது. ரூ. 100 மதிப்புள்ள தனது 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை 10 சதவீதம் முனைமத்தில் வழங்கி விலையைத் தீர்த்தது. குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

**விடை :**

| | | | | |
|---|---|---|---|---|
| | சொத்துகள் கணக்கு | ப | 2,20,000 | |
| | மதுரை நிறுவனம் | | | 2,20,000 |
| | (சொத்துகளை வாங்கியது.) | | | |
| 2. | மதுரை நிறுவனம் | ப | 2,20,000 | |
| | 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 2,00,000 |
| | கடனீட்டுப் பத்திர முனைமக் கணக்கு | | | 20,000 |
| | (ரூ. 100 மதிப்புள்ள 2,000 கடனீட்டுப் பத்திரங்களை 10 சதவீதம் முனைமத்தில் வெளியிட்டு விலையைக் கொடுத்தது.) | | | |

**விளக்கக் குறிப்பு :**

ரூ. 2,20,000-த்திற்கு 10 சதவீதம் முனைமத்தில் எத் துணைக் கடனீட்டுப் பத்திரங்களைக் கம்பெனி வெளியிட்டது என்பதை முதலில் கணக்கிட வேண்டும்.

ரூ. 110-க்கு வெளியிடும் கடனீட்டுப் பத்திரம் = 1

ரூ. 2,20,000-த்திற்கு வெளியிடும் கடனீட்டுப் பத்திரங்கள் $= \frac{2,20,000 \times 1}{110}$

= 2,000 கடன் பத்திரங்கள்

**கடனீட்டுப்பத்திரங்களைத் துணைப் பிணையமாக வெளியிடல்**
(Issue of debentures as collateral security)

சில வேளைகளில் வங்கியிலிருந்து கடன் வாங்கும்பொழுது அளிக்கும் பிணையத்துடன் (ஈட்டுடன்—security) கம்பெனி கடனீட்டுப் பத்திரங்களையும் துணைப் பிணையமாக வங்கிக்கு வழங்கலாம். கடன் மீதான வட்டியைச் செலுத்துவதிலும் கடனைத் திருப்பி அடைப்பதிலும் கம்பெனி ஒழுங்காக நடந்து கொள்ளும்வரை வங்கி இக் கடன் பத்திரங்களைப் பயன்படுத்திக் கொள்ளாது. வங்கிக் கடன் முழுவதையும் அடைத்த பின்னர், இக் கடனீட்டுப் பத்திரங்களை வங்கி கம்பெனிக்குத் திருப்பித் தந்துவிடும். கம்பெனியும் இவற்றை நீக்கிவிடும். இவ்வாறு வெளியிடப்படும் கடனீட்டுப் பத்திரங்களைத் 'துணைப் பிணைய மாக வெளியிடப்பட்ட கடனீட்டுப் பத்திரங்கள்' என்கிறோம். இந் நடவடிக்கைகட்கான பதிவு ஏதும் கம்பெனியின் ஏடுகளில் தேவையில்லை. ஆனால், இருப்புநிலைக் குறிப்பில் மட்டும் வங்கிக் கடன் கணக்கு இருக்குமிடத்தில் கடனீட்டுப் பத்திரங்கள் வெளி யிடப்பட்டுள்ளதென குறிப்பு ஒன்று சேர்க்கப்படும். இது பின் கண்டவாறு காண்பிக்கப்பெறும் :

## இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | | சொத்துகள் |
|---|---|---|
| | ரூ. | |
| **பிணைக்கடன்** (Secured Loan): | | |
| 8 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் | 3,00,000 | |
| வங்கிக் கடன் (ரூ. 20,000 மதிப்புள்ள கடனீட்டுப் பத்திரங்கள் துணைப் பிணையமாக வெளியிடப்பட்டிருக்கின்றன.) | 15,000 | |

துணைப் பிணையமாக வெளியிடப்படும் கடனீட்டுப் பத்திரங்கட்கான பதிவை ஏடுகளில் செய்ய கம்பெனி விரும்பின், 'கடனீட்டுப் பத்திர இடைநிலைக் கணக்கில்' (Debentures Suspense Account) பற்றும், கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

கடனீட்டுப் பத்திர இடைநிலைக் கணக்கு இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியிலும், கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு பொறுப்புகள் பகுதியிலும் காண்பிக்கப்பெறும். இருப்பு நிலைக் குறிப்பில் இவ்வாறு துணைப் பிணையமாக வெளியிடப் பட்டிருக்கும் கடனீட்டுப் பத்திரங்களைப் பிறவகைக் கடனீட்டுப் பத்திரங்களினின்றும் வேறுபடுத்திக் காட்டவேண்டும்.

### கடனீட்டுப்பத்திர மீட்பு (Redemption of Debentures)

கடனீட்டுப் பத்திர மீட்பு என்றால் கடனீட்டுப் பத்திரங்கள் தொகையைத் திருப்பித் தருதல் என்பதாகும். கடனீட்டுப் பத்திரங்களை வெளியிடும்பொழுது செய்த பதிவினை அப்படியே மாற்றிச் செய்தால் இதற்குப்போதும். அதாவது, கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும். ஆனால், பொதுவாகக் கடனீட்டுப் பத்திரங்களை மீட்கும் பொழுது, கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு, கடனீட்டுப் பத்திர தாரர்கள் கணக்கிற்கு மாற்றப்படுகிறது. இதனால், அவர்களுக்குச் சேரவேண்டிய தொகை எவ்வளவு என்பது முதலில் காட்டப்

படுகிறது. இதற்குக் கடனீட்டுப் பத்திரதாரர்கள் கணக்கில் பற்றும், கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். பின்னர், கீடனீட்டுப் பத்திரதாரர்கட்குப் பணத்தைத் தரும்பொழுது, கடனீட்டுப் பத்திரதாரர்கள் கணக்கில் பற்றும் வங்கிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

பெயரளவு மதிப்பில் கடனீட்டுப் பத்திரங்கள் மீட்கப்படும் பொழுது இப் பதிவு போதுமானதாகும். ஆனுல், இவை முனைமத்தில் மீட்கப்படுமாயின் செய்யவேண்டிய பதிவுகள் :

| | |
|---|---|
| கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | ப |
| கடனீட்டுப் பத்திர மீட்பு முனைமக் கணக்கு | ப |
| வங்கிக் கணக்கு | |

கடனீட்டுப் பத்திர மீட்பு முனைமக் கணக்கில் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிடும்பொழுதே வரவு வைக்கப்பட்டிருக்கும். அவ்வாருயின், அக் கணக்கு ஏடுகளில் இருக்கும். அவ்வாறு இக் கணக்கைக் கடனீட்டுப் பத்திரங்கள் வெளியீட்டின்பொழுது கம்பெனி தொடங்கவில்லையாயின், இப்பொழுது இலாப-நட்டக் கணக்கில் அல்லது பங்கு முனைமக் கணக்கில் பற்றும், கடனீட்டுப் பத்திர மீட்பு முனைமக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

கடனீட்டுப் பத்திரங்களை மீட்பதில் பலவகைகள் உள. அவற்றை ஒவ்வொன்ருகக் காண்போம். குறிப்பிட்ட காலக் கெடுவிற்குப் பின் கடனீட்டுப் பத்திரங்கள் மீட்கப்படுமென்ற நிபந்தனைகளில் அவை வெளியிடப்பட்டிருக்குமாயின், அக் குறிப்பிட்ட காலம் சென்றபின் அவை மீட்கப்படவேண்டும். அப்பொழுது வேண்டியிருக்கும் பண வசதிக்காகக் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிடும் ஆண்டிலிருந்தே ஏற்பாடு செய்தல் சிறப்புடையதாகும். இவ்வாறு ஒவ்வோராண்டும் கடனீட்டுப் பத்திர மீட்புக்காக வகை செய்யவில்லையாயின், அவற்றை மீட்கும் நாளில் கம்பெனி பெருந் தொல்லைக்கு ஆளாகும். எனவே, இலாபத்திலிருந்து ஒவ்வோராண்டும் ஒரு குறிப்பிட்ட தொகையை ஒதுக்கி அதனை வேறு பத்திரங்களில் முதலீடு செய்துவந்தால், மீட்கப்படும் காலத்தில் கம்பெனியின் கையில் மீட்கவேண்டிய தொகையளவிற்கு முதலீடுகள் இருக்கலாம். அந்த முதலீடுகளை விற்பதின்மூலம் தேவையான பணம் கிடைக்கிறது. இதனுல் கடனீட்டுப் பத்திரங்களை மீட்டல் எளிதாகும். இம் முறையைக்

கழிவு நிதிமுறை (Sinking Fund System) அல்லது கடனீட்டுப் பத்திர மீட்பு நிதி முறை (Debenture Redemption Fund System) என்கிறோம். அதுபற்றி இப்பொழுது ஆய்வோம்.

இம் முறையில் முதலில் கடனீட்டுப் பத்திரங்களை மீட்கும் பொழுது எவ்வளவு தொகை தேவைப்படும் என்பதை உணர வேண்டும். அதாவது, கடனீட்டுப் பத்திரங்கள் முனைமத்தில் மீட்கப்படவேண்டியிருப்பின், முனைமத் தொகையையும் அதனுடன் சேர்த்துக் கொள்ளவேண்டும். எடுத்துக்காட்டாக, ரூ. 50,000 கடனீட்டுப் பத்திரங்களை 10 சதவீதம் முனைமத்தில் மீட்க வேண்டியதாயிருப்பின், நமக்குத் தேவையாக இருக்கும் தொகை ரூ. 55,000 ஆகும் $(50,000+50,000\times\frac{10}{100})$. இது எவ்வளவு ஆண்டுகட்குப் பின் மீட்கப்பட வேண்டுமென்பதை உணர்வோம். நாம் செய்யும் முதலீடுகளினின்றும் ஆண்டு ஒன்றுக்கு எத்துணைச் சதவிகித வட்டி கிடைக்கும் என்பதை அறிய வேண்டும். சுருக்கமாகச் சொல்லப்போனால், மீட்கப்படவேண்டிய தொகை, எத்துணை ஆண்டுகளில் மீட்கப்பட வேண்டும், ஒவ்வோராண்டும் முதலீட்டின்மீது எத்துணைச் சதவீத வட்டி கிடைக்குமென்ற விவரங்களை முதலில் காண்கிறோம். இப்பொழுது கடன் கழிவு நிதி வாய்பாட்டின் துணைகொண்டு ஒவ்வோராண்டும் இலாபத்திலிருந்து ஒதுக்கி முதலீடு செய்யவேண்டிய தொகையை அறியலாம். இவ் வாய்பாட்டில் ஒரு குறிப்பிட்ட சதவீத வட்டியில் குறிப்பிட்ட ஆண்டுகள் வரை ஒவ்வோராண்டும் எவ்வளவு முதலீடு செய்தால், குறிப்பிட்ட கால வரையறைக்குப் பின் ரூ. 1 கிடைக்குமென்பதை அறியலாம். எடுத்துக்காட்டாக, ஒவ்வோராண்டும் ரூ. 0.31720856 தொகையை 5 சதவீதம் கூட்டு வட்டியில் முதலீடு செய்தால், மூன்று ஆண்டுகட்குப் பின்னர் ரூ. 1 கிடைக்குமென்று அவ் வாய்பாடு கூறும். நமக்கு மூன்று ஆண்டுகட்குப் பின்னர், எடுத்துக்காட்டாக, ரூ. 6,60,000 தேவையென்று கொண்டால், ஒவ்வோராண்டும் ஒதுக்கவேண்டிய தொகை, அதாவது, முதலீடு செய்யவேண்டிய தொகை ரூ. 2,09,357.65 என்பதைக் கணக்கிட்டுக் கொள்ளலாம்.

5 சதவீதம் கூட்டு வட்டியில் மூன்று ஆண்டுகளில் ரூ. 1 கிடைக்க ஒவ்வோராண்டும் முதலீடு செய்யவேண்டிய தொகை ரூ. 0.31720856.

5 சதவீதம் கூட்டு வட்டியில்
மூன்று ஆண்டுகளில்

$$ரூ.\ 6,60,000\ கிடைக்க = \frac{6,60,000 \times 0.31720856}{1}$$

$$ரூ. = 2,09,357.65$$

இப்பொழுது ஒவ்வோராண்டும் ரூ. 2,09,357.65 இலாபத்திலிருந்து ஒதுக்கி, அத் தொகையை முதலீடு செய்து, அதிலிருந்து பெறும் வட்டியையும், அடுத்த ஆண்டில் ஒதுக்கவேண்டிய தொகையுடன் சேர்த்து மீண்டும் முதலீடு செய்யவேண்டும். பின்னர், மொத்த முதலீடுகளினின்றும் பெறும் வட்டித் தொகையையும் அவ்வாண்டிற்குரிய தொகையையும் சேர்த்து முதலீடு செய்துகொண்டு வரவேண்டும். இவ்வாறு ஒவ்வோராண்டும் ஒதுக்கவேண்டிய இத் தொகையுடன் அவ்வாண்டில் முதலீடுகளினின்றும் பெற்ற வட்டியையும் சேர்த்து மீண்டும் முதலீடு செய்யப்படும். குறிப்பிட்ட காலக்கெடுவிற்குப் பின் கடனீட்டுப் பத்திரங்களைத் திருப்பித் தர நம்மிடம் போதிய அளவிற்கு முதலீடுகள் இருக்கும். இம் முதலீடுகளை விற்ருல், வேண்டிய ரொக்கம் கிடைக்கும். இவ்வகையில் கடன்களைத் திருப்பியடைப்பதற்குத் தேவையான பணம் திரட்டுதல் எளிதாகிறது. இதற்குக் கடன் கழிவுநிதி முறை அல்லது கடனீட்டுப் பத்திர மீட்பு நிதி முறை என்று பெயர்.

இதேபோன்ற முறையை நாம் தேய்மானம் எனும் தலைப்பின் கீழ்க்காணலாம். ஒரு சொத்து ஒன்றினைக் குறிப்பிட்ட காலத்திற்குப் பின் புதுப்பிக்க வேண்டுமாயின் அப்பொழுது தேவையாயிருக்கும் பணத்தைத் திரட்ட இதே முறை பின்பற்றப்படுகிறது. ஒவ்வோராண்டும் இலாப-நட்டக் கணக்கிலிருந்து தேவையான தொகையை ஒதுக்கி, முதலீடு செய்து, அம் முதலீடுகளினின்றும் பெற்ற வட்டியையும் முதலீடு செய்து வந்தால், குறிப்பிட்ட ஆண்டுகட்குப் பின் புதிய சொத்து வாங்கத் தேவையான முதலீடுகள் இருக்குமென்று கூறியிருக்கிறோம். ஆனால், இறுதியில் செய்யவேண்டிய பதிவுகளில் கடனைத் திருப்புவதற்கு உருவாக்கும் கழிவு நிதிக்கும், சொத்தினைப் புதுப்பிக்க உருவாக்கும் கழிவு நிதிக்கும் வேறுபாடுகள் உள. இவற்றைப் பின்னர்க் காண்போம்.

கடனீட்டுப் பத்திரங்களைத் திருப்பித் தருவதற்கு ஏற்படுத்தும் கழிவு நிதி முறையில் செய்யவேண்டிய பதிவுகளை இப்பொழுது ஆய்வோம்.

**(1) முதலாண்டு இறுதியில்**

ஒவ்வோராண்டும் ஒதுக்கவேண்டிய தொகைக்கு இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கில் (Profit and Loss Appropriation Account) பற்றும், கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் கணக்கில் (கழிவுநிதிக்கணக்கில்) (Debenture Redemption Fund Account or Sinking Fund Account) வரவும் வைக்கவேண்டும்.

இத் தொகையினை முதலீடு செய்யும்போழ்து கடனீட்டுப் பத்திர மீட்பு நிதி முதலீட்டுக் கணக்கில் (Debenture Redemption Fund Investment A/c) பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

பிறகு ஒவ்வோரண்டு இறுதியிலும் செய்யவேண்டிய பதிவுகள் :

(1) ஆண்டின் இறுதியில் முதலீடுகளினின்றும், வட்டி பெறுவோம். அதனைப் பதிய, வங்கிக் கணக்கில் பற்றும், கடனீட்டுப் பத்திர மீட்பு நிதி முதலீட்டு வட்டி (Interest on Debenture Redemption Fund Investment) எனும்கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(2) அவ்வாண்டு முதலீட்டினின்றும் கிடைத்த வட்டியையும் கடனீட்டுப் பத்திர மீட்பு நிதியில் சேர்க்கவேண்டுமல்லவா? அதற்குக் கடனீட்டுப்பத்திர மீட்புநிதி முதலீட்டு வட்டிக் கணக்கில் பற்றும், கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(3) அவ்வாண்டிற்குரிய தொகையை ஒதுக்குவதற்கு, இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கில் பற்றும், கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(4) இப்பொழுது இவ்வாண்டு முதலீடுகளினின்றும் பெற்ற வட்டியையும், இவ்வாண்டில் ஒதுக்கப்பெறும் ஆண்டுத் தொகையையும் சேர்த்தத் தொகையை முதலீடு செய்யவேண்டும். இத் தொகைக்குக் கடனீட்டுப் பத்திர மீட்பு நிதி முதலீட்டுக் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

ஒவ்வோராண்டும் இவ்வாறே பதிவுகளைச் செய்யவேண்டும். இறுதியாண்டில், அதாவது, எவ்வாண்டில் கடனீட்டுப் பத்திரங்களை மீட்கவேண்டுமோ, அவ்வாண்டில் மேலே குறிப்பிட்ட நான்காவது பதிவினைச் (முதலீடு செய்வதற்கானப் பதிவினை) செய்யக்கூடாது. காரணம், இவ்வாண்டில் இருக்கின்ற முதலீடு

களை விற்றுப் பணமாக்கப் போகிறோம். எனவே, இப்பொழுது முதலீடு செய்யத் தேவையில்லை. இறுதியாண்டில் மீட்கும் பொழுது பதிவுகள் கீழ்க்கண்டவாறு காணப்படும்.

(1) இறுதியாண்டின் இறுதியில் முதலீடுகளினின்றும் பெறும் வட்டித் தொகைக்கு வங்கிக் கணக்கில் பற்றும், கடனீட்டுப் பத்திர மீட்புநிதி முதலீட்டு வட்டிக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

(2) இப்பொழுது முதலீடுகளினின்றும் பெற்ற வட்டியைக் கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் கணக்கில் சேர்க்க, கடனீட்டுப் பத்திர மீட்பு நிதி முதலீட்டு வட்டிக் கணக்கில் பற்றும், கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(3) இவ்வாண்டில் தொகை ஒதுக்குவதற்கு இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கில் பற்றும், கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

இப்பொழுது இருக்கின்ற முதலீடுகள் அனைத்தையும் விற்கின்றோம்.

(4) முதலீடுகளை விற்றத் தொகைக்கு வங்கிக் கணக்கில் பற்றும் கடனீட்டுப் பத்திர மீட்பு நிதி முதலீட்டுக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

அத் தொகையின் உதவிகொண்டு கடனீட்டுப் பத்திரங்களுக்குப் பணம் திருப்பித் தரப்படும். இதற்குத் தேவையான பதிவு :

(5) கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

கடனீட்டுப் பத்திர மீட்புநிதி முதலீட்டுக் கணக்கு இப்பொழுது பற்றிருப்பையோ, வரவிருப்பையோ காட்டும். முதலீடுகள் அதிகத் தொகைக்கு விற்கப்பட்டிருக்குமாயின், செய்த முதலீட்டினும் கூடுதல் பணம் கிடைத்திருப்பதாகப் பொருள். இது ஆதாயமாகையால், இக் கணக்கு வரவிருப்பைக் காட்டும். முதலீடுகள் குறைவான விலையில் விற்கப்பட்டிருக்குமாயின் இதில் நட்டம் ஏற்பட்டுள்ளதாகப் பொருள். இப்பொழுது இக் கணக்குப் பற்றிருப்பைக் காட்டும். இக் கணக்குக் காட்டும் இருப்பினைப் பற்றிருப்பாயினும் சரி, வரவிருப்பாயினும் சரி, கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் கணக்கிற்கு மாற்றவேண்டும். இதற்குத் தேவையானப் பதிவுகள் :

(6) கடனீட்டுப் பத்திர மீட்பு நிதி முதலீட்டுக் கணக்கு வரவிருப்பைக் காட்டுமாயின் (முதலீடுகள் இலாபத்திற்கு விற்கப் பட்டிருக்குமாயின்), கடனீட்டுப் பத்திர மீட்புநிதி முதலீட்டுக் கணக்கில் பற்றும், கடனீட்டுப்பத்திர மீட்புநிதிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(7) இக் கணக்கு பற்றிருப்பைக் காட்டுமாயின் (முதலீடு கள் குறைந்த விலையில் விற்கப்பட்டிருக்குமாயின்), கடனீட்டுப் பத்திர மீட்புநிதிக் கணக்கில் பற்றும், கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீட்டுக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

இப்பொழுது கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் கணக்கில் மட்டும் இருப்பு காணப்படும். இது ஒவ்வோராண்டும் இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கிலிருந்து ஒதுக்கப்பட்ட இலாபங்களின் மொத்தத் தொகையாகும். கடனீட்டுப் பத்திரங்களை மீட்ட பின்னர், இக் கணக்கிலுள்ள இருப்பைப் பொதுக்காப்பிற்கு மாற்றவேண்டும். கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி ஏற்படுத்தியதன் காரணம், கடனீட்டுப் பத்திரங்களைத் திருப்பித் தருகின்ற ஆண் டில் தேவையான பணம் திரட்டுவதேயாகும். எடுத்துக்காட்டாக, ரூ. 100 கடன் வாங்கி அதனைத் திருப்பி அடைப்பதில் எவ்வித இலாபமோ இழப்போ ஏற்படுவதில்லை. ஆனால், கடனீட்டுப் பத்திர மீட்பு நிதி முறையில் பங்காதாயம் வழங்கக்கூடிய இலா பத்திலிருந்து ஒவ்வோராண்டும் தொகை ஒதுக்கி வந்திருக்கிறோம். இதன் கூட்டுத் தொகையைத்தான் கடனீட்டுப் பத்திர மீட்பு நிதி காட்டுகிறது. எனவே, இதனைப் பொதுக்காப்பிற்கு எடுத்துச் செல்கிறோம்.

### எடுத்துக்காட்டு 46

1969 சனவரி 1-ல் கூட்டுப் பங்குக் கம்பெனி ஒன்று ரூ. 100 மதிப்புள்ள 6 சதவீதம், 5,000 கடனீட்டுப் பத்திரங்களை வெளி யிட்டது. 4ஆம் ஆண்டு இறுதியில் 10 சதவீதம் முனைமத்தில் இவை மீட்கப்பட வேண்டியவை. இதற்கான ஒரு கழிவுநிதி (Sinking Fund) ஏற்படுத்தவேண்டும். முதலீடுகள்மீது 5 சதவீதம் ஆண்டு வட்டி கிடைக்குமென எதிர்பார்க்கப்படுகிறது. 0.235490 ஒவ்வோராண்டும் முதலீடு செய்தால் 4 ஆண்டுகளில் ரூ. 1 கிடைக்குமெனக் கழிவுநிதி வாய்பாடு உணர்த்துகிறது.

4ஆம் ஆண்டிறுதியில் முதலீடுகளை விற்றதில் ரூ. 4,00,000 பெறப்பட்டதென்றும், கடனீட்டுப்பத்திர மீட்புநிதி முதலீட்டி லிருந்து வட்டி பெறுமுன்னர் 1972 திசம்பர் 31-ல் வங்கியிருப்பு ரூ. 1,40,094.45 இருந்ததென்றும் கொண்டு வேண்டிய குறிப் பேட்டுப் பதிவுகளையும் பேரேட்டுக் கணக்குகளையும் தயார் செய்க.

**விடை :**

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1969 | | | ரூ. | ரூ. |
| சன. 1 | வங்கிக் கணக்கு ப | | 5,00,000 | |
| | கடனீட்டுப்பத்திர வெளியீட்டு நட்டக் கணக்கு ப | | 50,000 | |
| | 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 5,00,000 |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு முனைமக் கணக்கு | | | 50,000 |
| | (10 சதவீதம் முனைமத்தில் மீட்கக் கூடிய ரூ.100 மதிப்புள்ள 5,000 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களைப் பெயரளவு மதிப்பில் வெளியிட்டது.) | | | |
| 1969 | | | | |
| திச. 31 | இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கு ப | | 1,29,519.50 | |
| | கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் கணக்கு | | | 1,29,519.50 |
| | (கடனீட்டுப் பத்திர மீட்புக்காக ஒவ்வோராண்டும் ஒதுக்க வேண்டிய தொகை. 5,50,000×0.235490) | | | |
| ,, | கடனீட்டுப்பத்திர மீட்புநிதி முதலீட்டுக் கணக்கு ப | | 1,29,520 | |
| | வங்கிக் கணக்கு | | | 1,29,520 |
| | (ஒதுக்கிய தொகையை ரூ. கிட்டிய மதிப்பில் முதலீடு செய்தது.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1970 | | | ரூ. | ரூ. |
| திச. 31 | வங்கிக் கணக்கு ப<br>கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீட்டு வட்டிக் கணக்கு<br>(ரூ. 1,29,520 மதிப்புள்ள முதலீடுகள் மீது பெற்ற வட்டி.) | | 6,476 | 6,476 |
| ,, | கடனீட்டுப்பத்திர மீட்புநிதி முதலீட்டு வட்டிக் கணக்கு ப<br>கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கு<br>(பெற்ற வட்டியினைக் கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் கணக்கிற்கு மாற்ற.) | | 6,476 | 6,476 |
| ,, | இலாப-நட்டப் பகிர்வு கணக்கு ப<br>கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கு<br>(கடனீட்டுப்பத்திர நிதிக்காக ஒதுக்கவேண்டிய ஆண்டுத் தொகை.) | | 1,29,519.50 | 1,29,519.50 |
| 1970<br>திச. 31 | கடனீட்டுப்பத்திர மீட்புநிதி முதலீட்டுக் கணக்கு ப<br>வங்கிக் கணக்கு<br>(ஆண்டுத்தொகையையும் வட்டியையும் சேர்த்து ரூ. 1,29,519.50+6,476 முதலீடு செய்தது.) | | 1,35,990 | 1,35,996 |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1971 | | | ரூ. | ரூ. |
| திச.31 | வங்கிக் கணக்கு ப | | 13,275.80 | |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீட்டு வட்டிக் கணக்கு | | | 13,275.80 |
| | (ரூ. 2,65,516 மதிப்புள்ள முதலீடுகளின் மீது பெற்ற வட்டி.) | | | |
| ,, | கடனீட்டுப்பத்திர மீட்புநிதி முதலீட்டு வட்டிக் கணக்கு ப | | 13,275.80 | |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கு | | | 13,275.80 |
| | (பெற்ற வட்டியைக் கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கில் சேர்க்க.) | | | |
| ,, | இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கு ப | | 1,29,519.50 | |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கு | | | 1,29,519.50 |
| | (கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக்காக ஒதுக்க வேண்டிய ஆண்டுத் தொகை.) | | | |
| ,, | கடனீட்டுப்பத்திர மீட்புநிதி முதலீட்டுக் கணக்கு ப | | 1,42,795 | |
| | வங்கிக் கணக்கு | | | 1,42,795 |
| | [ஆண்டுத் தொகையையும், வட்டியையும் சேர்த்து (ரூ.1,29,519.50 + 13,275.80) முதலீடு செய்தது.] | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1972 | | | ரூ. | ரூ. |
| திச. 31 | வங்கிக் கணக்கு ப | | 20,415.55 | |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீட்டு வட்டிக் கணக்கு | | | 20,415.55 |
| | (ரூ. 4,68,311 மதிப்புள்ள முதலீடுகள் மீது பெற்ற வட்டி.) | | | |
| ,, | கடனீட்டுப்பத்திர மீட்புநிதி முதலீட்டு வட்டிக் கணக்கு ப | | 20,415.55 | |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கு | | | 20,415.55 |
| | (பெற்ற வட்டியைக் கடனீட்டுப்பத்திர நிதிக் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| ,, | இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கு ப | | 1,29,519.50 | |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கு | | | 1,29,519.50 |
| | (கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக்காக ஒதுக்கவேண்டிய ஆண்டுத்தொகை.) | | | |
| ,, | வங்கிக் கணக்கு ப | | 4,00,000 | |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீட்டுக் கணக்கு | | | 4,00,000 |
| | (கடனீட்டுப்பத்திரங்களை மீட்க முதலீடுகளை விற்றது.) | | | |

**குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)**

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1972 | | | ரூ. | ரூ. |
| திச. 31 | 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு ப | | 5,00,000 | |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு முனைமக் கணக்கு ப | | 50,000 | |
| | கடனீட்டுப் பத்திர தாரர்கள் கணக்கு | | | 5,50,000 |
| | (கடனீட்டுப்பத்திர மீட் பின்போழ்து கடனீட்டுப் பத்திரதாரர்கட்குச் சேர வேண்டிய தொகை.) | | | |
| ,, | கடனீட்டுப் பத்திரதாரர்கள் கணக்கு ப | | 5,50,000 | |
| | வங்கிக் கணக்கு | | | 5,50,000 |
| | (பத்திரதாரர்களுக்குத் தொகை செலுத்தியது.) | | | |
| ,, | கடனீட்டுப்பத்திர மீட்புநிதிக் கணக்கு ப | | 8,311 | |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீட்டுக் கணக்கு | | | 8,311 |
| | (முதலீடுகளை விற்றதில் ஏற்பட்ட நட்டத்தை மீட்பு நிதிக் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| ,, | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கு ப | | 50,000 | |
| | கடனீட்டுப்பத்திர வெளி யீட்டு நட்டக் கணக்கு | | | 50,000 |
| | (கடனீட்டுப் பத்திரத்தை வெளியிடுவதில் ஏற்பட்ட நட்டத்தைக் கடனீட்டுப் பத்திர மீட்பு நிதியி லிருந்து நீக்க.) | | | |

குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1972 | | | ரூ. | ரூ. |
| திச. 31 | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கு ப | | 4,99,934.35 | |
| | பொதுக்காப்பு | | | 4,99,934.35 |
| | (கடனீட்டுப் பத்திரங்களை மீட்டபின், கடனீட்டுப் பத்திர மீட்பு நிதியின் இருப்பைப் பொதுக் காப்பிற்கு மாற்ற.) | | | |

## 6% கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1969 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 5,00,000 | 1969 சன. 1 | வங்கி .. | | 5,00,000 |
| 1970 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 5,00,000 | 1970 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 5,00,000 |
| 1971 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 5,00,000 | 1971 சன. 1 | இருப்பு கீ/கொ | | 5,00,000 |
| 1972 திச. 31 | கடனீட்டுப் பத்திரதாரர்கள் க/கு—மாற்றம் .. | | 5,00,000 | 1972 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 5,00,000 |

பற்று **கடனீட்டுப் பத்திர வெளியீட்டு நட்டக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1969 சன. 1 | கடனீட்டுப்பத்திர மீட்பு முனைமக் க/கு .. | | 50,000 | 1969 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 50,000 |
| 1970 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 50,000 | 1970 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 50,000 |
| 1971 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 50,000 | 1971 திச. 31 | இருக்கு கீ/இ .. | | 50,000 |
| 1972 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 50,000 | 1972 திச. 31 | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் க/கு— மாற்றம் .. | | 50,000 |

**கடனீட்டுப் பத்திர மீட்பு முன்னமக் கணக்கு**

பற்று வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1969 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 50,000 | 1969 சன. 1 | கடனீட்டுப்பத்திர வெளியீட்டு நட்டக் க/கு .. | | 50,000 |
| 1970 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 50,000 | 1970 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 50,000 |
| 1971 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 50,000 | 1971 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 50,000 |
| 1972 திச. 31 | கடனீட்டுப்பத்திரதாரர்கள் க/கு .. | | 50,000 | 1972 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 50,000 |

## இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கு

| பற்று | | | வரவு |
|---|---|---|---|
| | | ரூ. | |
| 1969 | கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் க/கு .. | 1,29,519.50 | |
| 1970 | கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் க/கு .. | 1,29,519.50 | |
| 1971 | கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் க/கு .. | 1,29,519.50 | |
| 1972 | கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் க/கு .. | 1,29,519.50 | |

**கடனீட்டுப் பத்திர மீட்புநிதிக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1969 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 1,29,519.50 | 1969 திச. 31 | இலாப-நட்டக் க/கு .. | | 1,29,519.50 |
| 1970 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 2,65,515.00 | 1970 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 1,29,519.50 |
| | | | | திச. 31 | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீட்டு வட்டிக் க/கு .. | | 6,476.00 |
| | | | | ,, | இலாப-நட்டப் பகிர்வுக் க/கு .. | | 1,29,519.50 |
| | | | 2,65,515.00 | | | | 2,65,515.00 |

பற்று **கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் கணக்கு—(தொடர்ச்சி)** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 | | | | 1971 | | | |
| திச. 31 | இருப்பு கீ/இ .. | | 4,08,310.30 | சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 2,65,515.00 |
| | | | | திச. 31 | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீட்டு வட்டி க/கு .. | | 13,275.80 |
| | | | | ,, | இலாப-நட்டப் பகிர்வுக் க/கு .. | | 1,29,519.50 |
| | | | 4,08,310.30 | | | | 4,08,310.30 |
| 1972 | | | | 1972 | | | |
| திச. 31 | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீட்டுக் க/கு—நட்டம் மாற்றப் பெறுகிறது .. | | 8,311.00 | சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 4,08,310.30 |
| ,, | கடனீட்டுப்பத்திர வெளியீட்டு நட்டக் க/கு—மாற்றம் .. | | 50,000.00 | திச. 31 | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீட்டு வட்டி .. | | 20,415.55 |
| ,, | பொதுக்காப்பு—மாற்றம் .. | | 4,99,934.35 | ,, | இலாப-நட்டப் பகிர்வுக் க/கு .. | | 1,29,519.50 |
| | | | 5,58,245.35 | | | | 5,58,245.35 |

## பொதுக் காப்புக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 4,99,934.35 | 1972 திச. 31 | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் க/கு— மாற்றம் .. | | 4,99,934.35 |
| | | | | 1973 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 4,99,934.35 |

பற்று **கடனீட்டுப் பத்திர மீட்புநிதி முதலீட்டுக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1969 | | | | 1969 | | | |
| திச. 31 | வங்கி .. | | 1,29,520 | திச. 31 | இருப்பு கீ/இ .. | | 1,29,520 |
| 1970 | | | | 1970 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 1,29,520 | திச. 31 | இருப்பு கீ/இ .. | | 2,65,516 |
| திச. 31 | வங்கி .. | | 1,35,996 | | | | |
| | | | 2,65,516 | | | | 2,65,516 |
| 1971 | | | | 1971 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 2,65,516 | திச. 31 | இருப்பு கீ/இ .. | | 4,08,311 |
| திச. 31 | வங்கி .. | | 1,42,795 | | | | |
| | | | 4,08,311 | | | | 4,08,311 |
| 1972 | | | | 1972 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 4,08,311 | திச. 31 | வங்கி .. | | 4,00,000 |
| | | | | ,, | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் க/கு— நட்டம் மாற்றப் படுகிறது | | 8,311 |
| | | | 4,08,311 | | | | 4,08,311 |

## கடனீட்டுப் பத்திர மீட்பு நிதி முதலீட்டு வட்டிக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1970 திச. 31 | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் க/கு— மாற்றம் .. | | 6,476 | 1970 திச. 31 | வங்கி .. | | 6,476 |
| 1971 திச. 31 | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் க/கு— மாற்றம் .. | | 13,275.80 | 1971 திச. 31 | வங்கி .. | | 13,275.80 |
| 1972 திச. 31 | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் க/கு— மாற்றம் .. | | 20,415.55 | 1972 திச. 31 | வங்கி .. | | 20,415.55 |

## கடனீட்டுப் பத்திரதாரர் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 திச. 31 | வங்கி .. | | 5,50,000 | 1972 திச. 31 | 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் க/கு— மாற்றம் .. | | 5,00,000 |
| | | | | | கடனீட்டுப் பத்திரமீட்பு முனைமக் க/கு— மாற்றம் .. | | 50,000 |
| | | | 5,50,000 | | | | 5,50,000 |

**வங்கிக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 | | | | 1972 | | | |
| திச. 31 | இருப்பு கீ/கொ .. | | 1,40,094.45 | திச. 31 | கடனீட்டுப் பத்திர தாரர்கள் க/கு .. | | 5,50,000.00 |
| ,, | கடனீட்டுப் பத்திர மீட்பு நிதி முதலீட்டு வட்டி | | 20,415.55 | ,, | இருப்பு கீ/இ .. | | 10,510.00 |
| ,, | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீட்டுக் க/கு .. | | 4,00,000.00 | | | | |
| | | | 5,60,510.00 | | | | 5,60,510.00 |
| 1973 | | | | | | | |
| சன. 1 | இருப்பு கீ/இ .. | | 10,510.00 | | | | |

## எடுத்துக்காட்டு 47

*1973 ஜுன் 30-ல் கீழ்க்கண்ட இருப்புகளை ஒரு கூட்டுப் பங்குக் கம்பெனியின் ஏடுகள் காட்டின :*

| | ரூ. |
|---|---|
| பங்கு முனைமக் கணக்கு | 20,000 |
| 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் | 3,00,000 |
| கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி (இவ்வாண்டுத் தொகையைச் சேர்க்கா முன்னர்) | 2,85,000 |
| பொதுக்காப்பு (General Reserve) | 25,000 |
| கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீடுகள் : ரூ. 1,25,000-ற்கான 5 சதவீதம் தமிழக அரசு கடன் பத்திரங்கள் (Loan Bonds) ரூ. 1,75,000-ற்கான 4 சதவீதம் கேரள அரசு கடன் பத்திரங்கள் (அவை ரூ. 1,60,000-ற்கு வாங்கப்பட்டிருந்தன.) | |
| வங்கியிருப்பு (முதலீடுகள் மீதான வட்டி பெறுமுன்னர்) | 30,500 |

ஒவ்வோராண்டும் கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக்கு எடுத்துச் செல்லும் தொகை ரூ. 15,000.

1971ஆம் ஆண்டு ஜுன் 30-ல் தமிழக அரசு கடன் பத்திரங்கள் ரூ. 102 வீதமும், கேரள அரசு கடன் பத்திரங்கள் ரூ. 105 வீதமும் விற்கப்பட்டன. கடனீட்டுப் பத்திரங்கள் மீதான அரையாண்டு வட்டி இன்னும் கொடுக்கப்படவில்லை. கடனீட்டுப்பத்திரங்கள் 5 சதவீதம் முனைமத்தில் ஏறிய வட்டியுடன் மீட்கப்பட்டன.

பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்கவும்.

**6% கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 ஜூன் 30 | கடனீட்டுப் பத்திரதாரர்கள் —மாற்றப்படுகிறது .. | | 3,00,000 | 1973 ஜூன் 30 | இருப்பு கீ/கொ .. | | 3,00,000 |

**கடனீட்டுப் பத்திர மீட்பு முனைமக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 ஜூன் 30 | கடனீட்டுப் பத்திரதாரர்கள் .. | | 15,000 | 1973 ஜூன் 30 | பங்கு முனைமக் க/கு .. | | 15,000 |

**கடனீட்டுப் பத்திர வட்டிக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 ஜூன் 30 | கடனீட்டுப் பத்திரதாரர்கள் .. | | 9,000 | 1973 ஜூன் 30 | இலாப-நட்டக் க/கு— மாற்றம் .. | | 9,000 |

## கடனீட்டுப் பத்திரதாரர்கள் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 ஜுன் 30 | வங்கி .. | | 3,24,000 | 1973 ஜுன் 30 | 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரதாரர்கள்— மாற்றம் .. | | 3,00,000 |
| | | | | ,, | கடனீட்டுப்பத்திர மீட்பு முனைமக் க/கு .. | | 15,000 |
| | | | | ,, | கடனீட்டுப்பத்திர வட்டிக் க/கு .. | | 9,000 |
| | | | 3,24,000 | | | | 3,24,000 |

பங்குமுனைமக் கணக்கு

பற்று — வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1974 | | | | 1973 | | | |
| ஜுன் 30 | கடனீட்டுப் பத்திர மீட்பு முனைமக் க/கு .. | | 15,000 | ஜுன் 30 | இருப்பு கீ/கொ .. | | 20,000 |
| ,, | இருப்பு கீ/இ .. | | 5,000 | | | | |
| | | | 20,000 | | | | 20,000 |
| | | | | 1973 | | | |
| | | | | ஜூலை 1 | இருப்பு கீ/கொ .. | | 5,000 |

## கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 சூன் 30 | பொதுக்காப்பு— மாற்றம் .. | | 3,39,500 | 1973 சூன் 30 | இருப்பு கீ/கொ .. | | 2,85,000 |
| | | | | ,, | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீட்டு வட்டி | | 13,250 |
| | | | | ,, | இலாப-நட்டப் பகிர்வுக் க/கு .. | | 15,000 |
| | | | | ,, | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீட்டுக் க/கு— இலாபம் .. | | 26,250 |
| | | | 3,39,500 | | | | 3,39,500 |

**கடனீட்டுப் பத்திர மீட்பு நிதி முதலீட்டுக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 சூன் 30 | இருப்பு கீ/கொ .. | | 2,85,000 | 1973 சூன் 30 | வங்கி .. | | 3,11,250 |
| ,, | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் க/கு—இலாபம் மாற்றப்படுகிறது .. | | 26,250 | | | | |
| | | | 3,11,250 | | | | 3,11,250 |

**கடனீட்டுப் பத்திர மீட்பு நிதி முதலீட்டு வட்டிக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 சூன் 30 | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி—மாற்றம் .. | | 13,250 | 1973 சூன் 30 | வங்கி .. | | 13,250 |

பற்று **வங்கிக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 ஜூன் 30 | இருப்பு கீ/கொ .. | | 30,500 | 1973 ஜூன் 30 | கடனீட்டுப் பத்திரதாரர்கள் .. | | 3,24,000 |
| ,, | கடனீட்டுப் பத்திர மீட்பு நிதி முதலீட்டின் மீதான வட்டி .. | | 13,250 | ,, | இருப்பு கீ/இ .. | | 31,000 |
| ,, | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீட்டுக் க/கு .. | | 3,11,250 | | | | |
| | | | 3,55,000 | | | | 3,55,000 |
| 1973 ஜூலை 1 | இருப்பு கீ/கொ .. | | 31,000 | | | | |

பற்று **பொதுக் காப்புக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 | | | | 1973 | | | |
| ஜூன் 30 | இருப்பு கீ/இ .. | | 3,64,500 | ஜூன் 30 | இருப்பு கீ/கொ .. | | 25,000 |
| | | | | ,, | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் க/கு—மாற்றம் .. | | 3,39,500 |
| | | | 3,64,500 | | | | 3,64,500 |
| | | | | 1973 | | | |
| | | | | ஜூலை 1 | இருப்பு கீ/கொ .. | | 3,64,500 |

**குறிப்பு:** கடனீட்டுப் பத்திர மீட்பு நிதி முதலீட்டின் மீதான வட்டி கீழ்க்கண்டவாறு கணக்கிடப்படுகிறது.

| | | | ரூ. |
|---|---|---|---|
| தமிழக அரசு கடன் பத்திரத்தின் மீதான வட்டி | ... $1,25,000 \times \frac{5}{100}$ | = | 6,250 |
| கேரள ,, ,, ,, | ... $1,75,000 \times \frac{4}{100}$ | = | 7,000 |
| | | | 13,250 |

**முதலீடுகளின் விற்பனை**

| | | | ரூ. |
|---|---|---|---|
| தமிழக அரசு கடன் பத்திரங்கள் | ... $1,25,000 \times \frac{102}{100}$ | = | 1,27,500 |
| கேரள ,, ,, | ... $1,75,000 \times \frac{105}{100}$ | = | 1,83,750 |
| | | | 3,11,250 |

தேயும் சொத்து (Wasting Asset) ஒன்றினைப் புதுப்பிக்க ஏற்படுத்தும் கழிவு நிதிக்கும், பொறுப்பு ஒன்றினைத் தீர்க்குங் கழிவு நிதிக்கும் உள்ள வேறுபாட்டினை இப்பொழுது ஆய்வோம்.

இவ்விரண்டிற்காகவும் ஏற்படுத்தப்படும் கழிவு நிதியின் நோக்கம் ஒன்றே. அதாவது, குறிப்பிட்ட காலத்தில் தேவையான பணத்தைத் திரட்டுவதாகும். சொத்து முழுதும் தேய்ந்த பின்னர் புதிய சொத்து ஒன்று வாங்கவேண்டும். அதற்குப் பணம் தேவைப்படுகிறது. அவ்வாறே கடனீட்டுப் பத்திரங்களை மீட்கும்போழ்தும் பணம் வேண்டியிருக்கிறது. வேண்டிய தொகையைத் தொல்லை சிறிதுமின்றித் திரட்டும் நோக்கத்துடன் இக் கழிவு நிதிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இருப்பினும், இவை இரண்டிற்கும் வேறுபாடுகள் உள.

சொத்து ஒன்றினைப் புதுப்பிக்கும் நோக்குடன் ஏற்படுத்தப் படும், கழிவு நிதிக்கு ஒவ்வோராண்டும் வரவு வைக்கப்படும் தொகையானது, நீக்கவேண்டிய தேய்மானம் போன்றதேயாகும். இத் தொகை இலாபத்தை ஈட்டுவதில் ஏற்படும் ஒரு செலவாகக் கருதப்படுகிறது. எனவே, இத் தொகை இலாப-நட்டக் கணக்கில் பற்றும், கழிவு நிதிக்கணக்கில் வரவும் வைக்கப்படுகிறது. ஆனல், கடனீட்டுப் பத்திரங்களை மீட்பதற்காக ஏற்படுத்தப்படும் கழிவு நிதிக்காக ஒவ்வோராண்டும் ஒதுக்கப்படும் ஆண்டுத் தொகையானது ஏற்பட்ட இலாபத்திலிருந்து ஒதுக்கப்படுவதாகும். எனவேதான், இத் தொகைக்கு இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கில் பற்றும், கழிவு நிதிக் கணக்கில் வரவும் வைக்கப்படுகிறது.

குறிப்பிட்ட காலக் கெடுவிற்குப் பின் முதலீடு விற்றதிலிருந்து பெறும் தொகை, கடனீட்டுப் பத்திரங்களை மீட்பதற்குப் பயன்படுத்தப்படுகிறது. எனவே, குறிப்பிட்ட பொறுப்புக் கணக்கில் (கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கில்) பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். ஆனல், சொத்தினைப் புதுப்பிக்க ஏற்படுத்தப்பட்டுள்ள கழிவு நிதியைப் பொருத்தவரை, முதலீடுகளை விற்ற தொகை, புதிய சொத்து வாங்குவதற்குப் பயன்படுத்தப்படுகிறது. எனவே, பழைய சொத்துக் கணக்கிற்குக் கழிவுநிதிக் கணக்கு மாற்றப்படுவதன்மூலம், சொத்துக் கணக்கும், கழிவுநிதிக் கணக்கும் முடிக்கப்பெறுகின்றன. புதிய சொத்தினை வாங்கும்பொழுது புதிய சொத்துக் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

கடனீட்டுப் பத்திரங்களை மீட்ட பின்னர் இருக்கும் கழிவு நிதியானது ஓர் ஆதாயமாகும். ஒவ்வோராண்டும் ஏற்பட்ட

இலாபத்தில் ஒரு பகுதியை இவ்வாறு சேர்த்து வைத்து வந்திருக்கிறோம். எனவே, பொறுப்புகள் தீர்ந்தவுடன் அம் மொத்தத் தொகையை அதாவது, இக் கழிவு நிதி காட்டும் இருப்பினைப் பொதுக்காப்பிற்கு எடுத்துச் செல்வது வழக்கம்.

## எடுத்துக்காட்டு 48

ரூ. 2,00,000 மதிப்புடைய குத்தகை ஒன்றைப் புதுப்பிக்க ஒரு கழிவு நிதியும், ரூ. 2,00,000 மதிப்புள்ள கடனீட்டுப் பத்திரங்களை மீட்க ஒரு கழிவு நிதியும் இருக்கின்றன. கழிவு நிதி முதலீடுகள் ரூ. 1,85,000-த்திற்கு விற்கப்படுகின்றனவென்று கொண்டு இறுதியாண்டில் உரிய கணக்குகள் எவ்வாறு முடிக்கப் பெறும் என்பதைக் காட்டுக :

**விடை :** அடுத்த பக்கம்

பற்று **குத்தகைக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | இருப்பு கீ/கொ .. | | 2,00,000 | | கழிவு நிதிக் க/கு—<br>மாற்றம் .. | | 1,85,000 |
| | | | | | இலாப-நட்டக் க/கு .. | | 15,000 |
| | | | 2,00,000 | | | | 2,00,000 |

பற்று **கழிவு நிதிக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | கழிவு நிதி முதலீட்டுக் க/கு<br>நட்டம்—மாற்றம் .. | | 15,000 | | இருப்பு கீ/இ .. | | 2,00,000 |
| | குத்தகைக் க/கு—<br>மாற்றப்படுகிறது .. | | 1,85,000 | | | | |
| | | | 2,00,000 | | | | 2,00,000 |

பற்று **கழிவு நிதி முதலீடுகள் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | இருப்பு கீ/கொ .. | | 2,00,000 | | வங்கி .. | | 1,85,000 |
| | | | | | கழிவுநிதிக் க/கு—நட்டம் மாற்றப்படுகிறது .. | | 15,000 |
| | | | 2,00,000 | | | | 2,00,000 |

பற்று **(புதிய) குத்தகைக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | வங்கி .. | | 2,00,000 | | | | |

**குறிப்பு :** கழிவுநிதி முதலீட்டை விற்பதில் ஏற்பட்ட நட்டம் கழிவுநிதிக் கணக்கிற்கு எடுத்துச் செல்லப்படுகிறது. பின்னர், அதிலுள்ள இருப்பு குத்தகைக் கணக்கிற்கு மாற்றப்படுகிறது. அது காட்டும் பற்றிருப்பு, கழிவுநிதி ரூ. 15,000 குறைவாக ஒதுக்கப்பட்டதை உணர்த்துகிறது. எனவே, இது இலாப-நட்டக் கணக்கின் பற்றுப்பகுதிக்கு இவ்வாண்டு எடுத்துச் செல்லப்படுகிறது. இப்பொழுது கடனீட்டுப் பத்திரத்தைத் தீர்க்கும் நோக்குடன் தொடங்கப்பெற்ற கடன் கழிவுநிதி இறுதியாண்டில் எவ்வாறு முடிக்கப்பெறுகிறதென்பதை இனிக் காண்போம்.

**கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு**

பற்று வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | வங்கி .. | | 2,00,000 | | இருப்பு கீ/கொ .. | | 2,00,000 |

**கழிவு நிதிக் கணக்கு**

பற்று வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீட்டுக் க/கு— நட்ட மாற்றம் .. | | 15,000 | | இருப்பு கீ/கொ .. | | 2,00,000 |
| | பொதுக்காப்பு .. | | 1,85,000 | | | | |
| | | | 2,00,000 | | | | 2,00,000 |

## கடனீட்டுப் பத்திர மீட்பு நிதி முதலீட்டுக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | இருப்பு கீ/கொ .. | | 2,00,000 | | வங்கி .. | | 1,85,000 |
| | | | | | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் க/கு—நட்டம் மாற்றப்படுகிறது .. | | 15,000 |
| | | | 2,00,000 | | | | 2,00,000 |

மேலே விவரிக்கப்பட்ட கழிவு நிதி குவியும் கழிவு நிதி (Cumulative Sinking Fund) எனப்படுகிறது. ஏனெனில், ஒவ்வோ ராண்டும் இலாபத்திலிருந்து குறிப்பிட்ட ஒரு தொகையைக் கட்டாயமாக ஒதுக்கி முதலீடு செய்வதுடன் ஒவ்வோராண்டும் முதலீடுகளினின்றும் பெறும் வட்டியும் நிதியில் சேர்க்கப்பட்டு முதலீடு செய்யப்படுகிறது. இவ்வாறு ஆண்டுத் தொகையும், வட்டியும் கூட்டு வட்டியில் முதலீடு செய்யப்பட்டு வருவதால் இது குவியும் கழிவு எனப்படும்.

இவ்வாறு முதலீடுகளினின்றும் பெறும் வட்டியைக் கழிவு நிதிக்கு மாற்றாமலும், மீண்டும் முதலீடு செய்யாமலும் விட்டு விட்டால், அத்தகைய கழிவு நிதி குவியாக் கழிவு நிதி (Non-Cumulative Sinking Fund) எனப்படும். அந் நிலையில் முதலீடுகளி னின்றும் பெறும் வட்டித் தொகையானது சாதாரண ஓர் ஆதாய மாகக் கருதப்பட்டு இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்லப் படுகிறது. ஒவ்வோராண்டும் குறிப்பிட்ட தொகை மட்டில் கழிவு நிதியில் சேர்க்கப்பட்டு முதலீடு செய்யப்படுகிறது. இதைத் தவிர, இவ்விரு முறைகட்கும் வேறு வேறுபாடுகளில்லை.

முதலீடுகளினின்றும் ஒவ்வோராண்டும் பெறும் வட்டி, கழிவு நிதிக்கு எடுத்துச் செல்லப்பட்டு முதலீடு செய்வதில்லையாதலால் ஒவ்வோராண்டும் கழிவு நிதிக்கு ஒதுக்கவேண்டிய தொகை இம் முறையில் கூடுதலாக இருக்கும். எனவே, இவ் விரண்டாவது முறையில் (குவியாக் கழிவு நிதி முறையில்) இலாபப் பகிர்வு கூடுதலாக இருக்கும். இம் முறையில் கீழ்க்கண்டவாறு குறிப் பேட்டுப் பதிவுகள் அமையும்.

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | **முதல் ஆண்டு** | | ரூ. | ரூ. |
| | இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கு ப<br>கழிவு நிதிக் கணக்கு<br>(ஆண்டுத்தொகை ஒதுக்க வேண்டியது.) | | | |
| | கழிவு நிதி முதலீட்டுக் கணக்கு ப<br>வங்கிக் கணக்கு<br>(ஒதுக்கப்பெற்ற தொகையை முதலீடு செய்தது.) | | | |

குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | **இரண்டாவது ஆண்டுக்கும், பிற ஆண்டுகட்கும்**<br>வங்கிக் கணக்கு ப<br>கழிவு நிதி முதலீட்டுக் கணக்கு<br>(முதலீடுகளினின்றும் வட்டி பெற்றது.) | | | |
| | * கழிவு நிதி முதலீட்டு வட்டிக் கணக்கு ப<br>இலாப-நட்டக் கணக்கு<br>(பெற்ற வட்டியை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| | இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கு ப<br>கழிவு நிதிக் கணக்கு<br>(ஆண்டுத் தொகையை ஒதுக்க.) | | | |
| | ** கழிவு நிதி முதலீட்டுக் கணக்கு ப<br>வங்கிக் கணக்கு<br>(ஒதுக்கப்பட்ட தொகையை முதலீடு செய்ய.) | | | |

**குறிப்பு** * குவியும் கழிவு நிதியில் இவ் வட்டி கழிவு நிதிக்கு மாற்றப்படுகிறது.

** குவியும் கழிவு நிதி முறையில் ஒவ்வோராண்டும் ஒதுக்கப்படும் தொகையுடன், அவ்வாண்டில் பெற்ற வட்டித் தொகையையும் சேர்த்து முதலீடு செய்யப் படுகிறது. ஆனால், குவியாக் கழிவு நிதி முறையில் இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கில் ஒவ்வோராண்டும் ஒதுக்கப்பெறும் தொகை மட்டிலேயே முதலீடு செய்யப்படுகிறது.

## கடனீட்டுப் பத்திரங்களை மீட்டல்—காப்பீட்டுத் திட்டாவண முறை (Insurance Policy Method)

மேலே விவரித்த கழிவு நிதி முறையில் ஒவ்வோராண்டும் ஒதுக்கப்பெறும் தொகையைக் கம்பெனியே முதலீடு செய்கிறது. ஆனால், இப்பொழுது இம் முறையில் கடனீட்டுப் பத்திரங்களைத் தீர்க்க எவ்வளவு தொகை தேவையோ அத் தொகைக்கான காப்பீட்டுத் திட்டம் (Insurance Policy) ஒதுக்கப்படுகிறது. ஒவ்வோராண்டும் முனைமத்தொகை செலுத்தப்படும். குறிப்பிட்ட காலக் கெடுவிற்குப் பின்னர், காப்பீட்டுக் கம்பெனி திட்டாவணத்தொகையை வழங்குகிறது. காப்பீட்டுக் கம்பெனியிடமிருந்து பெறும் இத் தொகையைக்கொண்டு தொல்லை சிறிதுமின்றிக் கடன் பத்திரங்களை மீட்டுக்கொள்ளலாம்.

இம் முறையில் ஒவ்வோராண்டும் செலுத்தும் முனைமத் தொகை மீது காப்பீட்டுக் கம்பெனி வட்டி ஏதும் தருவதில்லை. ஆனால், கழிவு நிதி முறையில் கம்பெனி செய்யும் முதலீடுகளுக்கு வட்டி கிடைக்கிறது. எனினும், செலுத்தவேண்டிய முனைமத் தொகை குறைவாகவே இருக்கும். திட்டக்கால முடிவுவரை செலுத்தப்பெற்ற மொத்த முனைமத் தொகையைவிட காப்பீட்டுக் கம்பெனி வழங்கும் திட்டத்தொகை கூடுதலாகவேயிருக்கும். இவ்வாறு காப்பீட்டுக் கம்பெனிக்குச் செலுத்திய தொகைக்கும், காப்பீட்டுக் கம்பெனியிலிருந்து பெறும் தொகைக்கும் உள்ள வேறுபாட்டுத் தொகையைக் கம்பெனி செலுத்திய முனைமத்தின் மீது கிடைத்த வட்டியாக எடுத்துக்கொள்ளலாம். காப்பீட்டுத் திட்டக் கால முடிவில் கிடைக்கும் அம் முழு இலாபத்தொகையை அவ் வாண்டில் மட்டும் காட்டுவதற்கு மாறாக, அதனை ஒவ்வோராண்டும் பெறும் வட்டியாகக் கணக்கிட்டுப் பதிவதைச் சில கணக்காயர்கள் (Accountants) மேற்கொள்கின்றனர்.

### கணக்குப் பதிவுகள்

ஒவ்வோராண்டும் காப்பீட்டுக் கம்பெனிக்குச் செலுத்த வேண்டிய முனைமத்தொகையைப் பதிய, இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கில் பற்றும், கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

பின்னர், முனைமத்தொகையைக் காப்பீட்டுக் கம்பெனிக்குச் செலுத்தும்பொழுது கடனீட்டுப்பத்திர மீட்புத் திட்டாவணக் (Debenture Redemption Policy) கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். ஒவ்வோராண்டும் இப் பதிவுகளை

மீண்டும் மீண்டும் செய்யவேண்டும். காப்பீட்டுத் திட்டத்தின் மீதான முனைமத்தொகை முன்கூட்டியே செலுத்தப்படுவதால், இறுதியாண்டிலும் இப் பதிவினைச் செய்தாக வேண்டும்.

பின்னர், காப்பீட்டுத் திட்டம் முதிர்வடைந்ததும் (இறுதி யாண்டில் காப்பீட்டுக் கம்பெனியிடமிருந்து திட்டத் தொகையைப் பெறும்பொழுது), பெற்ற தொகைக்கு வங்கிக் கணக்கில் பற்றும், கடனீட்டுப்பத்திர மீட்புத் திட்டக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

கடனீட்டுப்பத்திர மீட்புத் திட்டக் கணக்குக் காட்டும் இருப்பைக் கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கிற்கு எடுத்துச் செல்லவேண்டும். இதற்குக் கடனீட்டுப்பத்திர மீட்புத் திட்டக் கணக்கில் பற்றும், கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

ஒவ்வோராண்டும் முனைமத்தொகை மீது வட்டியையும் கணக்கிட வேண்டுமென்று பல கணக்காயர்கள் கூறுவதாகக் கூறியிருக்கிறோம் அல்லவா? இம் முறையில் இந் நடவடிக்கைகளைப் பதிய வேண்டியிருப்பின், ஒவ்வோராண்டும் வட்டிக்கான பதிவினைச் செய்ய, கடனீட்டுப்பத்திர மீட்புத் திட்டக் கணக்கில் பற்றும், கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

ஒவ்வோராண்டும் மேற்சொன்ன பதிவினைச் செய்து வர வேண்டும். அந் நிலையில் இறுதியாண்டில் காப்பீட்டுத் திட்டக் கணக்கு இலாபம் எதையும் காட்டாது என்பதை உணரவேண்டும். கீழ்க்கொடுக்கப்பட்டுள்ள எடுத்துக்காட்டு இவ் வட்டிக்கான பதிவினை நன்கு விளக்கும்.

**எடுத்துக்காட்டு 49**

சேலம் லிமிட்டெட் ரூ. 2,00,000 மதிப்புள்ள 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை 1969 சனவரி 1-ல் வெளியிட்டது. ஒவ்வோராண்டும் திசம்பர் 31-ல் கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக்குத் தொகையை ஒதுக்கி மூன்றும் ஆண்டிறுதியில் இவை மீட்கப்படவேண்டும். இவைகளை மீட்கத் தேவையான ரொக்கத்தினைப் பெறும் நோக்கத்துடன் ஒரு காப்பீட்டுத்திட்டத்தை (Insurance Policy) எடுத்துக்கொள்ள இயக்குநர்கள் முடிவு செய்தனர். செலுத்தவேண்டிய ஆண்டுக்காப்பீட்டுத்தொகை ரூ. 62,821.60. இதன்மீது 3 சதவீதம் ஆண்டுக் கூட்டுவட்டி கணக்கிடப்படவேண்டியது. பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்கவும்.

## 6% கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1969 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 2,00,000 | 1969 சன. 1 | வங்கி .. | | 2,00,000 |
| 1970 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 2,00,000 | 1970 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 2,00,000 |
| 1971 திச. 31 | வங்கி .. | | 2,00,000 | 1971 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 2,00,000 |

**கடனீட்டுப் பத்திர மீட்புநிதிக் கணக்கு**

பற்று | | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1969 | | | | 1969 | | | |
| திச. 31 | இருப்பு கீ/இ .. | | 64,706.25 | திச. 31 | இலாப-நட்டப் பகிர்வுக் க/கு .. | | 62,821.60 |
| | | | | ,, | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதித் திட்டக் க/கு .. (ரூ. 6,28,621.60 மீதான 3 சதவீதம் வட்டி) | | 1,884.65 |
| | | | 64,706.25 | | | | 64,706.25 |
| 1970 | | | | 1970 | | | |
| திச. 31 | இருப்பு கீ/இ .. | | 1,31,353.69 | சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 64,706.25 |
| | | | | திச. 31 | இலாப-நட்டப் பகிர்வுக் க/கு .. | | 62,821.60 |
| | | | | ,, | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதித் திட்டக் க/கு .. (ரூ. 1,27,527.85 மீது 3 சதவீதம் வட்டி) | | 3,825.84 |
| | | | 1,31,353.69 | | | | 1,31,353.69 |

பற்று **கடனீட்டுப் பத்திர மீட்புநிதிக் கணக்கு—(தொடர்ச்சி)** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 | | | | 1971 | | | |
| திச. 31 | பொதுக்காப்பு—மாற்றப்படுகிறது .. | | 2,00,000.00 | சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 1,31,353.69 |
| | | | | திச. 31 | இலாப-நட்டப் பகிர்வுக் க/கு .. | | 62,821.60 |
| | | | | ,, | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதித் திட்டக் க/கு .. (ரூ. 1,94,175.25 மீதான 3 சதவீதம் வட்டி) | | 5,824.71 |
| | | | 2,00,000.00 | | | | 2,00,000.00 |

**கடனீட்டுப் பத்திர மீட்புத் திட்டக் கணக்கு**

(Debenture Redemption Policy Account)

பற்று　　　　　　　　　　　　　　　　　　　　வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1969 சன. 1 | வங்கி முனைமத்தொகை .. | | 62,821.60 | 1969 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 64,706.25 |
| திச. 31 | கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் க/கு—வட்டி .. | | 1,884.65 | | | | |
| | | | 64,706.25 | | | | 64,706.25 |
| 1970 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 64,706.25 | 1970 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 1,31,353.69 |
| ,, | வங்கி முனைமத் தொகை .. | | 62,821.60 | | | | |
| ,, | கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் க/கு—வட்டி .. | | 3,825.84 | | | | |
| | | | 1,31,353.69 | | | | 1,31,353.69 |

## கடனீட்டுப் பத்திர மீட்புத் திட்டக் கணக்கு—(தொடர்ச்சி)

பற்று — வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 | | | | 1971 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 1,31,353.69 | திச. 31 | வங்கி .. | | 2,00,000.00 |
| ,, | வங்கி—முனைமத் தொகை .. | | 62,821.60 | | | | |
| திச. 31 | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் க/கு—வட்டி .. | | *5,824.71 | | | | |
| | | | 2,00,000.00 | | | | 2,00,000.00 |

* வட்டியைக் கணக்கிடின் ரூ. 5,825.26 வரும். ஆனல், காப்புறுதிக் கம்பெனியிடமிருந்து பெறும் திட்டத் தொகையளவிற்குக் கணக்கை முடிக்க ரூ 5,824.71 ஆக வட்டி கணக்கிட்டுச் சரிக்கட்டப்படுகிறது.

கடனீட்டுப் பத்திரங்களை இலாபத்திலிருந்தும் மீட்கலாம்; முதலிலிருந்தும் மீட்கலாம். மேலே விளக்கிய முறைகள் இலாபத்திலிருந்து மீட்கப் படுவதாகும். அதாவது, கடனீட்டுப் பத்திரங்களை மீட்ட பின்னர், அத் தொகைக்கு இலாப-நட்டக் கணக்கிலிருந்து கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கிற்கு மாற்றப்பட வேண்டியிருக்கிறது. ஒவ்வோராண்டும் இவ்வாறு கம்பெனி இலாபத்தின் ஒரு பகுதி கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக்கு ஒதுக்கப்பட வேண்டுவதால், அத் தொகையினைக் கம்பெனி பங்காதாயமாகப் பங்குநர்கட்கு வழங்கமுடியாது. இறுதியில் கடனீட்டுப்பத்திரங்கள் அனைத்தும் மீட்கப்பட்ட பின்னர், இக் கணக்குப் பொதுக்காப்புக் கணக்கிற்கு மாற்றப்படுகிறது. பங்காதாயம் வழங்கப்பெறாத இத் தொகையைக் கடனீட்டுப் பத்திரங்களை மீட்பதற்குப் பயன்படுத்திக்கொள்வதால், கடனீட்டுப் பத்திரதாரர்கட்குத் திரும்பிச் செலுத்தும் தொகையானது கம்பெனியில் இலாபத்தினால் கூடியிருக்கும் ரொக்கத்திலிருந்து கொடுக்கப்படுவதாகப் பொருளாகிறது. எனவே, இம்முறை இலாபத்திலிருந்து கடனீட்டுப் பத்திரங்களை மீட்டல் (Redemption out of Profit) என்று அழைக்கப்படுகிறது.

**முதலிலிருந்து மீட்டல்** (Redemption out of Capital)

இம் முறையில் கடனீட்டுப் பத்திரங்களை மீட்கும்பொழுது, மீட்பதற்கான ஒரே பதிவு மட்டில் போதும். அதாவது, கடனீட்டுப்பத்திரக் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். இலாபத்திலிருந்து கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக்கு ஒதுக்கும் பதிவு இப்பொழுது தேவையில்லை. இதனால், இலாப-நட்டக் கணக்கு எவ் வகையிலும் பாதிக்கப்படுவதில்லை. இலாப-நட்டக் கணக்கில் முழுத் தொகையையும் பங்காதாயமாகவே கம்பெனி வழங்கலாம். அந் நிலையில் கடனீட்டுப் பத்திரங்களை மீட்கும்பொழுது கம்பெனியின் இலாபத்தால் அதிகரித்துள்ள சொத்துகளினின்றும் (ரொக்கத்திலிருந்து) கடனீட்டுப் பத்திரங்களை மீட்டதாகச் சொல்லமுடியாது. எனவேதான், இம் முறை முதலிலிருந்து கடனீட்டுப் பத்திரங்களை மீட்டல் என்று அழைக்கப்படுகிறது.

மேலே விளக்கிய இரண்டு முறைகளின் விளைவுகளைக் கீழ்க் கண்டவாறு விளக்கலாம் :

## இருப்புநிலைக் குறிப்பு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| பங்குமுதல் | 3,00,000 | பலவகைச் சொத்துகள் | 3,30,000 |
| கடனீட்டுப் பத்திரங்கள் | 1,00,000 | வங்கி | 2,00,000 |
| இலாப-நட்டக் கணக்கு | 1,30,000 | | .. |
| | 5,30,000 | | 5,30,000 |

கடனீட்டுப் பத்திரங்கள் இப்பொழுது மீட்கப்படுவதாகக் கொள்வோம். மீட்ட பின்னர், இருப்புநிலைக் குறிப்புக் கீழ்க்கண்டவாறிருக்கும் :

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| பங்குமுதல் | 3,00,000 | பல்வகைச் சொத்துகள் | 3,30,000 |
| இலாப-நட்டக் கணக்கு | 1,30,000 | வங்கி (கடனீட்டுப் பத்திரங்கள் மீட்டபின் ரொக்கம்) | 1,00,000 |
| | 4,30,000 | | 4,30,000 |

மீட்கப்பட்ட கடனீட்டுப் பத்திரங்களின் பெயரளவுத் தொகையளவிற்குப் பொதுக்காப்பிற்கு மாற்றியபின் இருப்புநிலைக் குறிப்புக் கீழ்க்கண்டவாறிருக்கும் :

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| பங்குமுதல் | 3,00,000 | பல்வகைச் சொத்துகள் | 3,30,000 |
| பொதுக்காப்பு | 1,00,000 | வங்கி | 1,00,000 |
| இலாப-நட்டக் கணக்கு | 30,000 | | |
| | 4,30,000 | | 4,30,000 |

மேலே விளக்கிய முறை இலாபத்திலிருந்து கடனீட்டுப் பத்திரங்களை மீட்கும் முறையாகும். எனவேதான், மீட்கப்பட்ட கடனீட்டுப் பத்திரங்களின் தொகையளவிற்கு இலாப-நட்டக் கணக்கிலிருந்து பொதுக்காப்பிற்கு எடுத்துச் செல்லப்படுகிறது.

கடனீட்டுப் பத்திரங்கள் முதல் தொகையிலிருந்து மீட்கப் பட்டிருக்குமாயின், இருப்புநிலைக் குறிப்புக் கீழ்க்கண்டவாறு இருக்கும் :

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| பங்குமுதல் | 3,00,000 | பல்வகைச் சொத்துகள் | 3,30,000 |
| இலாப-நட்டக் கணக்கு | 1,30,000 | வங்கி | 1,00,000 |
| | 4,30,000 | | 4,30,000 |

இலாப-நட்டக் கணக்கில் ரூ. 1,30,000 இருப்பதால், இத் தொகை முழுவதையும் பங்காதாயம் வழங்கக் கம்பெனி முடிவு செய்யின், அவ்வாறே வழங்கிக்கொள்ளலாம். ஆனால், முன்னர் விளக்கிய முறையில் கடனீட்டுப் பத்திரங்களை மீட்ட தொகையளவிற்கு இலாப-நட்டக் கணக்கில் தொகை குறைக்கப் படுகிறது. மூலதனத்திலிருந்து கடனீட்டுப் பத்திரங்களை மீட்கும் முறையில் ரூ. 90,000 இலாபம் வழங்கப்படின் இருப்புநிலை கீழ்க்கண்டவாறிருக்கும் :

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| பங்குமுதல் | 3,00,000 | பல்வகைச் சொத்துகள் | 3,30,000 |
| இலாப-நட்டக் கணக்கு (ரூ. 1,30,000—90,000) | 40,000 | வங்கி | 10,000 |
| | 3,40,000 | | 3,40,000 |

**கடனீட்டுப் பத்திரங்களை மீட்டல்—ஒவ்வோராண்டும் சீட்டெடுக்கும் முறை** (Redemption of Debentures—Annual Drawings)

இதுகாறும் விவரித்த முறை கடனீட்டுப் பத்திரங்களைக் குறிப்பிட்ட காலக் கெடுவிற்குப் பின் மீட்கும் முறையாகும்.

கம்பெனியின் செயல்முறை விதிகள் அதிகாரம் அளிக்குமானால், கம்பெனி இக்காலக் கெடுவிற்கு முன்னரே கடனீட்டுப் பத்திரங் களை மீட்கமுடியும். ஒவ்வோராண்டும் குறிப்பிட்ட தொகையை மீட்டு வரலாம் அல்லது வெளிச்சந்தையில் தன்னுடைய கட னீட்டுப் பத்திரங்களைத் தானே வாங்கிக்கொள்ளலாம். (கம்பெனி யானது தான் வெளியிட்டப் பங்குகளைத் தானே வாங்கிக்கொள்ள முடியாது. ஆனால், தான் வெளியிட்ட கடனீட்டுப் பத்திரங் களைத் தானே வாங்கிக்கொள்ளும் உரிமை பெற்றிருக்கிறது.) ஒவ்வோராண்டும் குறிப்பிட்ட தொகையளவில் கடனீட்டுப் பத்தி ரங்களைக் கம்பெனி மீட்க விரும்பின், கீழ்க்கண்ட முறையில் இதைச் செய்யலாம். கடனீட்டுப் பத்திரங்களுக்குத் தனித்தனி எண்கள் வழங்கப்பட்டிருக்கின்றன. சீட்டுகளில் இவ் வெண்களை எழுதி, எத்துணைக் கடனீட்டுப் பத்திரங்களை மீட்க வேண்டுமோ அத்துணைச் சீட்டுகளைக் குலுக்கி எடுக்கின்றனர். இவ்வாறு குலுக்கி எடுக்கப்படும் சீட்டுக்களிலுள்ள எண்களைக் கொண்ட கடனீட்டுப் பத்திரங்கள் இவ்வாண்டில் மீட்கப்படும். இவ்வாறு மீட்கப்பெறும் கடனீட்டுப் பத்திரதாரர்கட்கு உரிய முன்அறி விக்கை தரப்படும். இதற்குத் தேவையானப் பதிவு: கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

கடனீட்டுப்பத்திர வெளியீட்டில் கண்டுள்ள நிபந்தனைகளின் படியே இவை நீக்கப்படவேண்டும். எடுத்துக்காட்டாக, கட னீட்டுப் பத்திரங்கள் 10 சதவீதம் முனைமத்தில் மீட்கப்பட வேண்டுமென்று நிபந்தனைகள் கூறுமாயின், இவ்வாறு குலுக்குச் சீட்டுமூலம் மீட்கப்படுவதாயின், இக் கடனீட்டுப் பத்திரதாரர் கட்குக் கடனீட்டுப்பத்திரத் தொகையுடன் முனைமத்தொகையை யும் சேர்த்துக் கொடுக்கவேண்டும். இதற்கான பதிவுகளை முன்னரே கூறியிருக்கிறோம்.

## கடனீட்டுப் பத்திரங்களை மீட்டல்—வெளிச் சந்தையில் வாங்கும் முறை (Redemption of Debentures—Market purchase)

கடனீட்டுப் பத்திரங்கள் மாற்றக்கூடியவை. எனவே, பங்கு மாற்றுச் சந்தையில் இவற்றை வாங்கவும், விற்கவும் முடியும். கடனீட்டுப்பத்திர வெளியீட்டு நிபந்தனைகள் அதி காரத்தை வழங்குமாயின், ஒரு கம்பெனி தான் வெளியிட்ட கடனீட்டுப் பத்திரங்களை அவ்வப்பொழுது வெளிச்சந்தையில் வாங்கிக்கொள்ளலாம். கம்பெனி யாரிடமிருந்து கடனீட்டுப் பத்திரங்களை வாங்குகிறதோ, அவருக்குச் சந்தை விலைப்படி ரொக்கம் கொடுத்துத் தன் பொறுப்பினைத் தீர்த்துக்கொள்ளலாம்.

வெளிச்சந்தையில் வாங்குவதன்மூலமாகக் கடனீட்டுப்பத்திரத்தை மீட்கும் முறையில் செய்யவேண்டிய பதிவுகள், ஆண்டுதோறும் குலுக்குச் சீட்டுமூலம் கடனீட்டுப் பத்திரங்களை மீட்கும் முறையில் செய்வது போன்றே அமையும். ஆனால், மீட்கும் நிலையில் வேறுபாடு இருக்கிறது. சந்தை விலைப்படி கடனீட்டுப் பத்திரங்கள் வாங்கப்படுகின்றன. இவ் விலை கடனீட்டுப்பத்திரப் பெயரளவு மதிப்பிற்குக் கூடுதலாகவும் இருக்கலாம்; அல்லது குறைவாகவும் இருக்கலாம். தள்ளுபடியில் கடனீட்டுப் பத்திரங்கள் வாங்கப்பட்டிருக்குமாயின், இத் தள்ளுபடித் தொகை ஆதாயமாகும். எடுத்துக்காட்டாக, ரூ. 100 மதிப்புள்ள கடனீட்டுப் பத்திரத்தை ரூ. 90-க்குக் கம்பெனி வாங்குமாயின், ரூ. 10 ஆதாயம் ஏற்பட்டிருக்கிறது. ரூ. 90 கொடுப்பதன்மூலமாக ரூ. 100 கொடுக்கவேண்டிய பொறுப்பு தீர்க்கப்படுகிறது. பதிவு கீழ்க்கண்டவாறிருக்கும் :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| கடனீட்டுப்பத்திரங்கள் | | | |
| கணக்கு | ப | 100 | |
| வங்கிக் கணக்கு | | | 90 |
| கடனீட்டுப்பத்திர மீட்பு | | | |
| இலாபக் கணக்கு | | | 10 |

இது ஒரு முதலீட்டு இலாபமாகும்.

எனவே, இதனை முதலீட்டுக் காப்புக் கணக்கிற்கு மாற்றுதலே சிறந்ததாகும். எனினும், இலாப-நட்டக் கணக்கிற்கு இதனை எடுத்துச் செல்லவும் எவ்விதச் சட்டத் தடையுமில்லை.

சந்தையில் வாங்கும் கடனீட்டுப் பத்திரத்தின் விலை அதன் பெயரளவு மதிப்பிற்கும் கூடுதலாக இருக்குமாயின், அது ஒரு நட்டமாக அமைகிறது. இந் நட்டத்தினைக் கடனீட்டுப்பத்திர மீட்பு நட்டக் கணக்கிற்கு எடுத்துச்செல்லவேண்டும்.

எடுத்துக்காட்டாக, ரூ. 100 மதிப்புள்ள கடனீட்டுப் பத்திரத்தை ரூ. 105-ற்குக் கம்பெனி வாங்கின், கூடுதலாகக் கொடுக்கப்பட்ட ரூ. 5 நட்டமாகிறது. பதிவு கீழ்க்கண்டவாறிருக்கும் :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| கடனீட்டுப்பத்திரங்கள் | | | |
| கணக்கு | ப | 100 | |
| கடனீட்டுப்பத்திர மீட்பு | | | |
| நட்டக் கணக்கு | ப | 5 | |
| வங்கிக் கணக்கு | | | 105 |

குலுக்குச் சீட்டு முறையிலும், சந்தையில் வாங்கும் முறையிலும் கடனீட்டுப் பத்திரங்களை மீட்கும்பொழுதெல்லாம், மீட்கப்பட்ட கடனீட்டுப்பத்திரங்களின் தொகையளவிற்குக் கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் கணக்கிற்கு மாற்ற வேண்டுமென்பதை மறக்கக்கூடாது. முன்னர் விளக்கியவாறே இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கில் பற்றும், கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். ஒவ்வோராண்டும் கடனீட்டுப் பத்திரங்களை மீட்பதற்கோ அல்லது கடனீட்டுப்பத்திரங்களை வெளிச்சந்தையில் வாங்குவதற்கோ தொகை வேண்டியிருப்பின், கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீட்டினை வேண்டிய அளவிற்கு விற்றுப் பெறலாம். * முன் விளக்கியவாறே வங்கிக் கணக்கில் பற்றும், கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீட்டுக் கணக்கில் வரவும் வைத்து இதற்கான பதிவினைச் செய்யலாம்.

ஒவ்வொரு முறையும் இவ்வாறு முதலீடுகளை விற்கும்பொழுது ஏற்படும் இலாப-நட்டத்தைக் கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கிற்கு எடுத்துச் செல்லவேண்டும். எடுத்துக்காட்டாக, ரூ. 5,000 மதிப்புள்ள முதலீடுகள் ரூ. 4,500-க்கு விற்கப்படுமாயின்; ரூ. 500 நட்டம் ஏற்பட்டிருக்கிறது. இதனைக் கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் கணக்கிற்கு எடுத்துச்செல்ல, கடனீட்டுப் பத்திர மீட்புநிதிக் கணக்கில் பற்றும், கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீட்டுக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

அவ்வாறில்லாமல், ரூ. 5,000 மதிப்புள்ள முதலீடுகள் ரூ. 5,600-க்கு விற்கப்பட்டிருக்குமாயின், ரூ. 600 ஆதாயம் ஏற்பட்டிருக்கிறது. இதனைக் கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கிற்கு எடுத்துச் செல்லவேண்டும். இதற்குக் கடனீட்டுப் பத்திர மீட்பு நிதி முதலீட்டுக் கணக்கில் ரூ. 600-க்குப் பற்றும், கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கில் ரூ. 600-க்கு வரவும் வைக்கவேண்டும்.

இவ்வாறே, முன்அறிவிப்பு கொடுப்பதன்மூலமாக அல்லது வெளிச்சந்தையில் வாங்குவது மூலமாகக் கடனீட்டுப் பத்திரங்களில் ஒரு பகுதியை மட்டுமே மீட்கும்பொழுது கழிவு நிதியின் ஒரு பகுதி மட்டுமே (மீட்கப்பட்ட கடனீட்டுப் பத்திரங்களின் செலுத்தப்பட்ட மதிப்பளவிற்கு மட்டுமே) பொதுக்காப்புக் கணக்கிற்கு மாற்றப்பட வேண்டும்.

### எடுத்துக்காட்டு 50

ஒரு கம்பெனி ஒன்று ரூ. 100 மதிப்புள்ள 6 சதவீதம் 1,000 கடனீட்டுப் பத்திரங்களை வெளியிட்டிருந்தது. அவற்றை

மீட்க கழிவுநிதி (Sinking Fund) ஒன்று ஏற்படுத்தப்பட்டது. வெளிச்சந்தையில் தனது கடனீட்டுப் பத்திரங்களை வாங்கி நீக்கிக் கொள்ளும் உரிமையைக் கம்பெனிக்குக் கடனீட்டுப்பத்திர வெளியீட்டு நிபந்தனைகள் வழங்கியிருக்கின்றன. 1970 ஜூலை 1-ல் 400 கடனீட்டுப் பத்திரங்கள் மீட்கப்பெறுதிருந்தன. கழிவு நிதிக் கணக்கு ரூ. 40,000 வரவிருப்பைக் காட்டியது. இது 5 சதவீதம் ரூ. 55,000 பெயரளவு மதிப்புடைய பத்திரங்களில் முதலீடு செய்யப்பட்டிருக்கிறது.

1970 அக்டோபர் 31-ல் ரூ. 94 வீதம் 250 கடனீட்டுப் பத்திரங்கள் வாங்கப்பட்டு நீக்கப்பட்டன. ரூ. 28,000 மதிப்புடைய முதலீடுகளை விற்று இக் கடனீட்டுப் பத்திரங்கள் மீட்கப்பட்டன. தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளையும், பேரேட்டுக் கணக்குகளையும் தயார் செய்க.

**விடை:**

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 1970 அக். 31 | வங்கிக் கணக்கு ப | | 23,500 | |
| | கழிவு நிதி முதலீட்டுக் கணக்கு | | | 23,500 |
| | (ரூ. 28,000 மதிப்புடைய முதலீடுகளை விற்றதில் கிடைத்த தொகை.) | | | |
| ,, | கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு ப | | 25,000 | |
| | வங்கிக் கணக்கு | | | 23,500 |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு இலாபக் கணக்கு | | | 1,500 |
| | (ரூ. 100 மதிப்புள்ள 250 கடனீட்டுப் பத்திரங்களை ரூ. 94 வீதம் வாங்கியது.) | | | |

குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 1970 அக். 31 | கழிவு நிதிக் கணக்கு ப<br>கழிவு நிதி முதலீட்டுக் கணக்கு<br>(ரூ. 28,000 மதிப்புடைய முதலீடுகளை விற்றதில் ஏற்பட்ட நட்டத்தை மாற்ற.) | | 4,500 | 4,500 |
| ,, | கடனீட்டுப்பத்திர மீட்பு இலாபக் கணக்கு ப<br>கழிவு நிதிக் கணக்கு<br>(ரூ. 100 மதிப்புள்ள 250 கடனீட்டுப் பத்திரங்களை வாங்கி நீக்கியதில் ஏற்பட்ட இலாபத்தைக் கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் கணக்கிற்கு மாற்ற.) | | 1,500 | 1,500 |
| ,, | கழிவு நிதிக் கணக்கு ப<br>பொதுக்காப்புக் கணக்கு<br>(ரூ. 100 மதிப்புள்ள 250 கடனீட்டுப் பத்திரங்களை நீக்கியபின், பொதுக் காப்புக் கணக்கிற்கு அத் தொகையினை மாற்ற.) | | 25,000 | 25,000 |

**விளக்கக் குறிப்பு:**

முதலீடுகளை விற்றதில் ஏற்பட்ட நட்டத்தைக் கீழ்க்கண்டவாறு உணரலாம் :

ரூ. 25,000 மதிப்புடைய கடனீட்டுப் பத்திரங்களை மீட்க ரூ. 23,500 வேண்டியிருக்கிறது. இதற்கான தொகை முதலீடுகளை விற்றுப் பெறப்பட்டது எனக் கொடுக்கப்பட்டிருப்பதால், முதலீடுகளை விற்றதில் ரூ. 23,500 கிடைத்தது என்பதை முதலில் உணரவேண்டும். இது ரூ 28,000 மதிப்புடைய முதலீடுகளை விற்றதால் கிடைத்த தொகை. எனவே, நட்டம் ரூ. 4,500 (ரூ. 28,000—ரூ. 23,500).

## கழிவு நிதிக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1970 | | | | 1970 | | | |
| அக். 31 | கழிவு நிதி முதலீட்டுக் க/கு—நட்ட மாற்றம் .. | | 4,500 | ஜூலை 1 | இருப்பு கீ/கொ .. | | 40,000 |
| ,, | பொதுக்காப்பு .. | | 25,000 | அக். 31 | கடனீட்டுப் பத்திர மீட்பு இலாபம் .. | | 1,500 |
| ,, | இருப்பு கீ/இ .. | | 12,000 | | | | |
| | | | 41,500 | | | | 41,500 |
| | | | | 1970 | | | |
| | | | | நவ. 1 | இருப்பு கீ/கொ .. | | 12,000 |

## கழிவு நிதி முதலீட்டுக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1970 ஜூலை 1 | இருப்பு கீ/கொ .. | | 40,000 | 1970 அக். 31 | வங்கி .. | | 23,500 |
| | | | | ,, | கழிவுநிதிக் க/கு— நட்டம் மாற்றப் படுகிறது .. | | 4,500 |
| | | | | ,, | இருப்பு கீ/இ .. | | 12,000 |
| | | | 40,000 | | | | 40,000 |
| 1970 நவ. 1 | இருப்பு கீ/கொ .. | | 12,000 | | | | |

## 6% கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1970 அக். 31 | வங்கிக் க/கு .. | | 23,500 | 1970 ஜூலை 1 | இருப்பு கீ/கொ .. | | 40,000 |
| ,, | கடனீட்டுப்பத்திர மீட்பு இலாபக் க/கு .. | | 1,500 | | | | |
| | இருப்பு கீ/இ .. | | 15,000 | | | | |
| | | | 40,000 | | | | 40,000 |
| | | | | 1970 நவ. 1 | இருப்பு கீ/கொ | | 15,000 |

**கடனீட்டுப் பத்திர மீட்பு இலாபக் கணக்கு**

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1970 அக். 31 | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் க/கு—மாற்றம் .. | | 1,500 | 1970 அக். 31 | 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் க/கு .. | | 1,500 |

**பொதுக் காப்புக் கணக்கு**

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1970 அக். 31 | இருப்பு கீ/இ .. | | 25,000 | 1970 அக். 31 | கழிவு நிதிக் க/கு .. | | 25,000 |
| | | | | 1970 நவ. 1 | இருப்பு கீ/கொ .. | | 25,000 |

**எடுத்துக்காட்டு 51**

இராபின் லிமிட்டெட் 1957-ல் ரூ. 3,50,000-த்திற்கு 7 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிட்டது. இவை 1967 திசம்பர் 31-ல் 3 சதவீதம் முனைமத்தில் மீட்கப்பட வேண்டியவை.

கடனீட்டுப் பத்திரங்களை சில நிபந்தனைகளுடன் வெளியிட்டது. இவைகளை மீட்க கழிவு நிதி ஒன்றை ஏற்படுத்த வேண்டும். இதற்கு ஒவ்வோராண்டும் இலாபத்திலிருந்து தொகை ஒதுக்கவேண்டும். இவ்வாறு ஒதுக்கப்பட்ட தொகையைக் கம்பெனிக்கு வெளியே ஒவ்வோராண்டும் திசம்பர் 31-ல் முதலீடு செய்யவேண்டும். ஒவ்வோராண்டும் திசம்பர் 31-ல் ஒதுக்கப்படும் தொகையுடன் அவ்வாண்டில் முதலீடுகளினின்றும் பெற்ற வருமானத்தையும் சேர்த்து முதலீடு செய்யவேண்டும்.

கடனீட்டுப்பத்திரங்கள் நிலுவையில் இருக்கும்பொழுது, மீட்பு விலைக்கும் (Redemption Price) கீழ் விலை நிலவுமாயின், கடனீட்டுப்பத்திர பொறுப்புரிமையர் (Debenture Trustees) கடனீட்டுப் பத்திரங்களைச் சந்தையில் வாங்கி நீக்கிக்கொள்ளும் உரிமை பெற்றிருந்தனர். இதற்கு வேண்டிய தொகையைக் கழிவு நிதி முதலீடுகளை விற்றுத் திரட்டிக் கொள்ளவேண்டியது.

1967 சனவரி 1-ல் கழிவு நிதிக் கணக்கு ரூ. 2,09,650 இருப்புக் காட்டியது. அதே தொகையளவில் முதலீடுகள் அடக்க விலையில் இருந்தன. அந் நிலையில் வெளியிலிருந்த கடனீட்டுப் பத்திரங்கள் ரூ. 2,20,000 ஆகும்.

1967 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டில் கீழ்க்கண்ட நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன :

(1) 1967 சனவரி 2-ல் ரூ. 19,500 மதிப்புடைய முதலீடுகளை விற்றதில் ரூ. 21,040 கிடைத்தது. அதே நாளில் ரூ. 20,600 கடனீட்டுப்பத்திரங்கள் ரூ.101 வீதம் (செலவு உள்பட) வாங்கப்பட்டு நீக்கப்பட்டன.

(2) அரையாண்டிற்கான கடனீட்டுப்பத்திர வட்டி 1967 சூன் 30-ல் செலுத்தப்பட்டது.

(3) இவ்வாண்டில் கழிவு நிதி முதலீடுகளினின்றும் பெற்ற வருமானம் ரூ. 10,500 ஆகும்.

(4) மீதியிருந்த கழிவு நிதி முதலீடுகளனைத்தும் ரூ. 2,15,690-க்கு 1967 திசம்பர் 28-ல் விற்கப் பட்டன.

(5) 1967 திசம்பர் 28-ல் அடுத்த அரையாண்டு வட்டி உள்பட கடனீட்டுப் பத்திரங்கள் மீட்கப்பட்டன.

1963 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டிற்கான மேற்கண்ட நடவடிக்கைகளைப் பதியத் தேவையான பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்கவும்.

(C. A. Inter, England 1968-ஐத் தழுவியது)

**விடை :** அடுத்த பக்கம்

விடை :

**கழிவுநிதிக் கணக்கு**

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1967 | | | | 1967 | | | |
| சன. 2 | கடனீட்டுப்பத்திர மீட்பு நட்டக் க/கு—மாற்றம் .. | | 206 | சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 2,09,650 |
| ,, | பொதுக்காப்பு .. | | 20,600 | ,, 2 | கழிவு நிதி முதலீட்டுக் க/கு—இலாபம் .. | | 1,540 |
| திச. 28 | கடனீட்டுப்பத்திர மீட்பு முனைமக் க/கு .. | | 5,982 | திச. 28 | கழிவு நிதி முதலீட்டுக் க/கு இலாபம் .. | | 25,540 |
| ,, | பொதுக்காப்பு .. | | 2,20,442 | ,, 28 | கழிவு நிதி முதலீட்டு வருமானக் க/கு .. | | 10,500 |
| | | | 2,47,230 | | | | 2,47,230 |

**கழிவுநிதி முதலீட்டுக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1967 | | | | 1967 | | | |
| சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 2,09,650 | சன. 2 | வங்கி .. | | 21,040 |
| ,, 2 | கழிவு நிதிக் க/கு—முதலீடுகளை விற்றதில் இலாபம் | | 1,540 | திச. 28 | வங்கி .. | | 2,15,690 |
| திச. 28 | கழிவு நிதிக் க/கு—இலாபம் மாற்றப் படுகிறது .. | | 25,540 | | | | |
| | | | 2,36,730 | | | | 2,36,730 |

## 7% கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1967 சன. 2 | வங்கி .. | | 20,600 | 1967 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 2,20,000 |
| திச. 28 | கடனீட்டுப் பங்கு தாரர்கள் க/கு .. | | 1,99,400 | | | | |
| | | | 2,20,000 | | | | 2,20,000 |

பற்று **கடனீட்டுப் பத்திர மீட்பு நட்டக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1967 சன. 2 | வங்கிக் க/கு .. (கடனீட்டுப் பத்திரங்களை வாங்கியதில் நட்டம்) | | 206 | 1967 சன. 2 | கழிவு நிதிக் க/கு— மாற்றப்படுகிறது .. | | 206 |

பற்று **பொதுக் காப்புக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1967 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 2,41,042 | 1967 சன. 2 | கழிவு நிதிக் க/கு— மாற்றம் .. | | 20,600 |
| | | | | திச. 31 | கழிவுநிதிக் க/கு .. | | 2,20,442 |
| | | | 2,41,042 | | | | 2,41,042 |
| | | | | 1968 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 2,41,042 |

பற்று **கழிவு நிதி முதலீட்டு வருமானக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1967 திச. 31 | கழிவுநிதிக் க/கு—மாற்றம் .. | | 10,500 | 1967 திச. 31 | வங்கி .. | | 10,500 |

பற்று **கடனீட்டுப் பத்திரதார்கள் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1967 திச. 31 | வங்கி .. | | 2,12,361 | 1967 திச. 31 | கடனீட்டுப்பத்திரங்கள் க/கு—மாற்றம் .. | | 1,99,400 |
| | | | | ,, | கடனீட்டுப்பத்திர மீட்பு முனைமக் க/கு .. | | 5,982 |
| | | | | ,, | கடனீட்டுப் பத்திர வட்டி | | 6,979 |
| | | | 2,12,361 | | | | 2,12,361 |

## கடனீட்டுப் பத்திர மீட்பு முனைமக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1967 திச. 31 | கடனீட்டுப் பத்திர தாரர்கள் .. | | 5,982 | 1967 திச. 31 | கழிவு நிதிக் க/கு .. | | 5,982 |

## கடனீட்டுப் பத்திர வட்டிக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப, எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1967 திச. 31 | கடனீட்டுப் பத்திர தாரர்கள் க/கு .. | | 6,979 | 1967 திச. 31 | இலாப-நட்டக் க/கு— மாற்றம் .. | | 6,979 |

**விளக்கக் குறிப்பு :**

(1) ரூ. 20,600 மதிப்புடைய கடனீட்டுப் பத்திரங்களை மீட்டபின், இதே தொகையளவிற்குக் கழிவுநிதிக் கணக்கிலிருந்து பொதுக்காப்பிற்கு மாற்றப்படுகிறது.

(2) கடனீட்டுப்பத்திரங்களை வாங்கியதில் ஏற்பட்ட நட்டம் ரூ. 206, கழிவுநிதிக் கணக்கிற்கு எடுத்துச் செல்லப் படுகிறது.

(3) கடனீட்டுப் பத்திரங்களை வாங்கியதில் ஏற்பட்ட நட்டத்திற்குத் தனிக் கணக்கு வேண்டியதில்லையெனில், நேரடியாகக் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கில் ரூ. 20,806-க்குப் பற்று வைத்து, வங்கிக் கணக்கில் ரூ. 20,806-க்கு வரவு வைத்துவிடலாம். பின்னர், இதில் ஏற்பட்டுள்ள நட்டத்தொகை ரூ. 206-ஐக் கழிவுநிதிக்கு மாற்ற, கழிவுநிதிக் கணக்கில் ரூ. 206-க்குப் பற்றும், கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கில் இத் தொகைக்கு வரவும் வைத்துக் கணக்கைச் செய்யலாம்.

(4) அரையாண்டு வட்டி ஜூன் 30-ல் செலுத்தப்பட்டு விட்டதால், அதற்கான பதிவு கொடுக்கவில்லை.

(5) சனவரியில் ரூ. 20,600 மதிப்புள்ள கடனீட்டுப்பத்திரங்களை மீட்டபின், மீதியுள்ள ரூ. 1,99,400 மதிப்புள்ள கடனீட்டுப் பத்திரங்கள் மீது அரையாண்டு வட்டி செலுத்த வேண்டியுள்ளது. எனவே, இத் தொகை கடனீட்டுப் பத்திரதாரர்கள் கணக்கிற்கு மாற்றப்பட்டுப் பின்னர், அவர்கட்குச் சேர வேண்டிய முழுத் தொகையும் செலுத்தப்படுகிறது.

(6) திசம்பர் 31-ல் கடனீட்டுப் பத்திரங்கள் அனைத்தும் மீட்கப்பட்ட பின், மீட்பு முனைமத் தொகையையும் கழிவு நிதியில் சரிக்கட்டியபின், கழிவு நிதியில் எஞ்சியுள்ள இருப்பு பொதுக்காப்பிற்கு மாற்றப் படுகிறது.

## தன் கடனீட்டுப் பத்திரங்கள் அல்லது சொந்தக் கடனீட்டுப் பத்திரங்கள் (Own Debentures)

கடனீட்டுப் பத்திரங்களை மீட்கும் முறையில் கம்பெனி சந்தையில் தனது கடனீட்டுப் பத்திரங்களை வாங்கி நீக்கிக்

கொள்ளும் முறையை மேலே விவரித்தோம். ஆனல், வெளிச் சந்தையில் வாங்கிய தன் கடனீட்டுப் பத்திரங்களைக் கம்பெனி உடனடியாக நீக்கவேண்டுமென்ற தேவையில்லை. அவற்றை ஒரு முதலீடு போன்றே கருதி வைத்துக்கொள்ளலாம். அதாவது, பிற கம்பெனிகள் கடனீட்டுப் பத்திரங்களில் அல்லது பங்குகளில் அல்லது அரசினர் கடனீட்டுப் பத்திரங்களில் முதலீடு செய்வது போன்று கம்பெனி தனது கடனீட்டுப் பத்திரங்களையே வாங்கி முதலீடுகளுக்கு வைத்துக்கொள்ளலாம். அவ்வாறு, முதலீடாக வைத்துக்கொள்ளும் நோக்குடன் வாங்கும் தங்களுடைய கடனீட்டுப் பத்திரங்களை 'தன் கடனீட்டுப் பத்திரங்களில் முதலீடு' (Investment in Own Debentures) அல்லது 'தன் கடனீட்டுப் பத்திரங்கள்' அல்லது ' சொந்தக் கடனீட்டுப் பத்திரங்கள் ' (Own Debentures) என்று கூறுகிறேம்.

கம்பெனி தன்னுடைய கடனீட்டுப் பத்திரங்களையே முதலீடாகக் கருதி வாங்கும்பொழுது சாதாரணமாகக் கம்பெனி முதலீடு செய்யும்பொழுது செய்யவேண்டிய பதிவுகள் போன்றே செய்யவேண்டும். பொதுவாகக் கீழ்க்கண்டவாறு கணக்குப் பதிவு அமையும் :

முதலீட்டுக் கணக்கு ப
வங்கிக் கணக்கு
(கம்பெனி தன் கடனீட்
டுப்பத்திரங்களிலேயே
முதலீடு செய்தது.)

ஆனல், மேற்சொன்ன பதிவை விட, பொதுவாக எல்லாக் கம்பெனிகளும் பின்பற்றும் பதிவு கீழ்க்கண்டவாறிருக்கும்.

தன் கடனீட்டுப்
பத்திரங்கள் கணக்கு ப
வங்கிக் கணக்கு

தன் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் காண்பிக்கப்பெறும். வெளிச் சந்தையில் மேற்சொன்ன கடனீட்டுப் பத்திரங்களை வாங்கும் முன்னர் இருந்த தொகையளவிற்குக் கடனீட்டுப் பத்திரங்கள் இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகள் பகுதியில் காண்பிக்கப்பெறும்.

பின்னர்க் கம்பெனி தன் கடனீட்டுப் பத்திரங்களில் முதலீடு செய்வதை நீக்கும்பொழுது வேறு பதிவுகளைச் செய்தாகவேண்டும்.

நீக்கப்பெறும் கடனீட்டுப் பத்திரங்களின் முகமதிப்பில் (பெயரளவு மதிப்பிற்கு) கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கில் பற்று வைக்கவேண்டும். இவ்வாறு நீக்கப்பட்ட கடனீட்டுப் பத்திரங்கள் இருப்புநிலைக் குறிப்பில் காட்டப்படும் மதிப்பிற்குத் தன் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கில் வரவு வைக்கவேண்டும். இவ்விரண்டு மதிப்புகளுக்குமுள்ள வேறுபாட்டுத் தொகை, கடனீட்டுப்பத்திரங்களில் நீக்குவதில் ஏற்பட்ட இலாபம் அல்லது நட்டமாகும். இலாபமாயின், கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கில் அல்லது பொதுக்காப்புக் கணக்கில் வரவும், நட்டமாயின், மேற்சொன்ன கணக்குகளில் பற்றும் வைக்கவேண்டும்.

## எடுத்துக்காட்டு 52

ஒரு கூட்டுப் பங்குக் கம்பெனியின் ஏடுகளில் 1972 ஜூன் 30-ல் கீழ்க்கண்ட இருப்புகள் காணப்படுகின்றன :

| | ரூ. |
|---|---|
| 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் | 3,00,000 |
| கடனீட்டுப்பத்திர மீட்புநிதி | 2,10,000 |

கடனீட்டுப்பத்திர மீட்புநிதி முதலீடுகள் :
ரூ. 80,000 மதிப்புள்ள சொந்தக் கடனீட்டுப் பத்திரங்கள் ரூ. 94 வீதம் வாங்கப்பட்டவை.
மீதியுள்ளவை ரூ. 1,42,000 மதிப்புடைய 5 சதவீதம் பத்திரங்கள்.

அந் நாளில் கடனீட்டுப் பத்திரங்கள் அனைத்தும் மீட்கப்பட்டன. 5 சதவீதம் பத்திரங்கள் 99 % வீதம் விற்கப்பட்டன.

குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

**விடை:**

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1972 | | | ரூ. | ரூ. |
| ஜூன் 30 | வங்கிக் கணக்கு ப | | 1,40,580 | |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீட்டுக் கணக்கு | | | 1,40,580 |
| | (கடனீட்டுப் பத்திரங்களை மீட்க 5 சதவீதம் பத்திரங்களை 99 வீதம் விற்றது.) | | | |
| ,, | கடனீட்டுப்பத்திர மீட்புநிதி முதலீட்டுக் கணக்கு ப | | 5,780 | |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கு | | | 5,780 |
| | (முதலீடுகளை விற்றதில் ஈட்டிய இலாபத்தினைக் கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக்கு மாற்ற.) | | | |
| ,, | கடனீட்டுப்பத்திரங்கள் கணக்கு ப | | 2,20,000 | |
| | வங்கிக் கணக்கு | | | 2,20,000 |
| | (நிலுவையிலுள்ள கடனீட்டுப்பத்திரங்களைப் பெயரளவு மதிப்பில் மீட்டது.) | | | |
| ,, | கடனீட்டுப்பத்திரங்கள் கணக்கு ப | | 80,000 | |
| | தன் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 75,200 |
| | தன் கடனீட்டுப்பத்திர நீக்குதல் இலாபக் கணக்கு | | | 4,800 |
| | (தன் கடனீட்டுப்பத்திரங்களை நீக்கியதும், அதில் ஏற்பட்ட இலாபமும்.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1972 | | | ரூ. | ரூ. |
| ஜூன் 30 | தன் கடனீட்டுப்பத்திர நீக்குதல் இலாபக் கணக்கு ப | | 4,800 | |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கு | | | 4,800 |
| | (தன் கடனீட்டுப் பத்திரங்களை நீக்கியதில் ஏற்பட்ட இலாபத்தினைக் கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| ,, | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கு ப | | 2,20,580 | |
| | பொதுக்காப்புக்கணக்கு | | | 2,20,580 |
| | (கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கிலுள்ள இருப்பினைக் காப்புக் கணக்கிற்கு மாற்ற.) | | | |

**விளக்கக் குறிப்பு:**

முதலீடுகளை விற்றதில் ஏற்பட்ட இலாபம் கீழ்க்கண்டவாறு உணரப்படுகிறது :

| | |
|---|---|
| கடனீட்டுப்பத்திர மீட்பு நிதியில் மொத்த முதலீடு | ரூ. 2,10,000 |
| **கழி:** | |
| தன் கடனீட்டுப்பத்திரங்களை வாங்கியது (94 வீதம் ரூ. 80,000 மதிப்புடைய கடனீட்டுப் பத்திரங்கள்) | ரூ. 75,200 |
| ரூ. 1,42,000 மதிப்புள்ள 5 சதவீதம் பத்திரங்கள் வாங்கிய விலை | ரூ. 1,34,800 |

| | |
|---|---|
| 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை விற்ற விலை (ரூ. 1,42,000 மதிப்புள்ள பத்திரங்கள் 99-ல் விற்கப்பட்டன.) | ரூ. 1,40,580 |
| **கழி:** | |
| இவற்றின் வாங்கிய விலை | ரூ. 1,34,800 |
| முதலீடுகளை விற்றதில் ஏற்பட்ட இலாபம் | ரூ. 5,780 |

**தன் கடனீட்டுப் பத்திரங்கள்மீது வட்டி** (Interest on Own Debentures)

தன் கடனீட்டுப் பத்திரங்களை முதலீடுகளாக ஒரு கம்பெனி வைத்திருக்கும்பொழுது மொத்தம் நிலுவையிலுள்ள கடனீட்டுப் பத்திரங்கள், தன் கடனீட்டுப் பத்திரங்களையும் சேர்த்தத் தொகையாகும். எனவே, கம்பெனி தனது மொத்தக் கடனீட்டுப் பத்திரங்கள் தொகை மீது வட்டி வழங்கவேண்டும். இதற்குக் கடனீட்டுப்பத்திர வட்டிக் கணக்கில் பற்றும், வட்டி நிலுவைக் கணக்கில் அல்லது கடனீட்டுப் பத்திரதாரர்கள் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். ஆனால், கம்பெனி கொடுக்கவேண்டியுள்ள இவ் வட்டித் தொகையில் அது வைத்திருக்கும் கடனீட்டுப் பத்திரங்கள் மீதான வட்டி அதற்கே சேரவேண்டியுள்ளது. இவ்வாறு தனக்குச் சேரவேண்டிய வட்டியைச் சரிக்கட்ட ஒரு சரிக்கட்டுப் பதிவுத் தேவைப்படும். இதற்கு வட்டி நிலுவைக் கணக்கில் அல்லது கடனீட்டுப் பத்திரதாரர்கள் கணக்கில் பற்றும், தன் கடனீட்டுப் பத்திர வட்டிக் கணக்கில் (Interest on Own Debentures Account) வரவும் வைக்கவேண்டும்.

கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி இருக்கும்பொழுது, தன் கடனீட்டுப் பத்திரங்கள் மீது தான் பெற்ற வட்டியைக் கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக் கணக்கிற்கு மாற்றவேண்டும். இதற்குத் தன் கடனீட்டுப்பத்திர வட்டிக் கணக்கில் பற்றும், கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி இல்லையெனில், கடனீட்டுப் பத்திர வட்டிக் கணக்குக் காட்டும் பற்றிருப்பை இலாப-நட்டக் கணக்கின் பற்றுப் பகுதிக்கு எடுத்துச் செல்லவேண்டும். இதற்கு இலாப-நட்டக் கணக்கில் பற்றும், கடனீட்டுப்பத்திர வட்டிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். தன் கடனீட்டுப்பத்திர வட்டிக் கணக்குக் காட்டும் வரவிருப்பை இலாப-நட்டக் கணக்கில்

வரவுப் பகுதிக்கு எடுத்துச் செல்லவேண்டும். இதற்குத் தன் கடனீட்டுப்பத்திர வட்டிக் கணக்கில் பற்றும், இலாப-நட்டக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். இவ்வாறாக, இலாப-நட்டக் கணக்கின் பற்றுப் பகுதியில் கடனீட்டுப் பத்திரங்கள் மீது மொத்தம் கொடுத்த வட்டியும், அக் கணக்கின் வரவுப் பகுதியில் தான் வைத்துள்ள கடனீட்டுப் பத்திரங்கள் மீது தனக்கு வந்த வட்டியும் காட்டப்படுகின்றன.

கம்பெனி மொத்தம் கடனீட்டுப் பத்திரங்கள் மீது கொடுக்க வேண்டிய வட்டியிலிருந்து தனக்குச் சேரவேண்டிய வட்டியைக் கழித்து மீதித் தொகைக்குத்தான் பணம் செலுத்த வேண்டியிருக்கிறது. இதற்கு வட்டி நிலுவைக் கணக்கில் பற்றும், அல்லது கடனீட்டுப் பத்திரதாரர்கள் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

**'வட்டியுட்பட', 'வட்டி நீங்கிய' கடன் பத்திரங்கள் ('Cum' Interest and Ex-interest Quotations)**

சில வேளைகளில் கடனீட்டுப் பத்திரங்கள் வெளிச்சந்தையில் வட்டி வழங்கும் நாளன்றிப் பிறநாள்களில் வாங்கப்படுகின்றன. அந் நாள்களில் கடனீட்டுப் பத்திரங்களுக்குக் கொடுக்கப்படும் விலையானது, அதன் மீது பெறவேண்டிய வட்டியினால் பாதிக்கப்படும். எடுத்துக்காட்டாக, வட்டி பெறவேண்டிய நாளுக்கு முன்னர் கடனீட்டுப் பத்திரங்கள் வாங்கப்படுமாயின், அவற்றிற்காகச் செலுத்தப்படும் விலை, அவற்றின் மீது பெறவேண்டிய வட்டியையும் உள்ளடக்கியுள்ளதா என்பதை நோக்கவேண்டும். வட்டியையும் விலை உள்ளடக்கியிருக்குமாயின், அது 'வட்டியுட்பட்ட (Cum-interest) அல்லது பங்காதாயம் உட்பட்ட (Cum-dividend) விலை' எனப்படும். இவ் விரண்டாம் நிலையில் கடனீட்டுப் பத்திரங்களை வாங்கியவர், முன்னர் கம்பெனி வட்டி வழங்கிய நாளிலிருந்து கடனீட்டுப் பத்திரங்களை வாங்கிய நாள் வரைக்குமான வட்டியையும் பெறுவார். எடுத்துக்காட்டாக, ஒரு கம்பெனி நவம்பர் 1-ல் ரூ. 100 மதிப்புடைய ரூ. 1,200-ற்கான 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை 97-ல் வட்டியுள்பட இவற்றை உடனடியாக நீக்கும் நோக்குடன் வாங்குவதாகக் கொள்வோம். வட்டி சூன் 30-லும், திசம்பர் 31-லும்

வழங்கப்படுமென்றும் கொண்டால், செய்யவேண்டிய பதிவுகள் கீழ்க்கண்டவாறிருக்கும் :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | ப | 1,200 | |
| கடனீட்டுப்பத்திர வட்டிக் கணக்கு | ப | 24 | |
| வங்கிக் கணக்கு | | | 1,164 |
| கடனீட்டுப்பத்திர மீட்பு இலாபக் கணக்கு | | | 60 |

ரூ. 1,200 மதிப்புடைய கடனீட்டுப் பத்திரங்களை ரூ. 1,164-க்கு வாங்கியிருக்கிறோம். இதில் ஏற்பட்ட இலாபம் ரூ. 36 ஆகும். இவ் விலை ரூ. 1,164 ஆனது சூலை 1-லிருந்து நவம்பர் 1 வரைக்கும் கம்பெனி வழங்கவேண்டிய வட்டி ரூ. 24-ஐயும் உள்ளடக்கியதாகும்.

$$(\text{ரூ. } 1,200 \times \frac{6}{100} \times \frac{1}{3} = 24).$$

மேற்கண்ட கடனீட்டுப் பத்திரங்களை அதே விலையில், ஆனால், வட்டி நீங்கிய நிபந்தனைகளில் வாங்கப்பெற்றிருப்பின், கம்பெனி இக் கடனீட்டுப் பத்திரங்களை வாங்குவதற்கு ரூ.1,164 கொடுத்ததுடன், சூலை 1-லிருந்து நவம்பர் 1 வரைக்குமான வட்டியையும் வழங்கவேண்டியிருக்கும். எனவேதான், அது கடனீட்டுப் பத்திரங்களைக் கொடுத்த விலையானது இவ் வட்டியை உள்ளடக்காத விலையாகும். ஆக, கம்பெனி தன்னுடைய ரூ. 100 மதிப்புள்ள 12 கடனீட்டுப் பத்திரங்களுக்கு ரூ. 1,164 கொடுத்ததுடன் 4 திங்களுக்கு இன்னும் வட்டியும் கடனீட்டுப்பத்திர தாரர்கட்கு வழங்க வேண்டியிருக்கிறது. ஆக மொத்தம் தன்னிடத்தில் கடனீட்டுப் பத்திரங்களை விற்ற கடனீட்டுப் பத்திர தாரர்க்கு விலையுடன் வட்டித் தொகையும் செலுத்தவேண்டியிருக்கிறது. எனவே, இவ்வாறு வாங்கிய கடனீட்டுப் பத்திரங்களைக் கம்பெனி நீக்கும்பொழுது கீழ்க்கண்ட பதிவுகளைச் செய்ய வேண்டும்:

| | | | |
|---|---|---|---|
| 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | ப | 1,200 | |
| கடனீட்டுப்பத்திர வட்டிக் கணக்கு | ப | 24 | |
| வங்கிக் கணக்கு | | | 1,188 |
| கடனீட்டுப்பத்திர மீட்பு இலாபக் கணக்கு | | | 36 |

## எடுத்துக்காட்டு 53

ஒரு கம்பெனி ரூ. 100 மதிப்புள்ள 3,000 ஐந்து சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிட்டது. வட்டி ஒவ்வொரு அரையாண்டிலும் ஜூன் 30-லும், திசம்பர் 31-லும் செலுத்த வேண்டும். 1972 மே 31-ல் கம்பெனி ரூ. 12,000 மதிப்புள்ள தன் கடனீட்டுப் பத்திரங்களையே 97 வீதம் வாங்கியது.

**கம்பெனியின் ஏடுகளில்**

(i) கடனீட்டுப் பத்திரங்களை வட்டியுள்பட வாங்கியிருப்பின்,

(ii) வட்டி நீங்க வாங்கியிருப்பின்,

(அ) கடனீட்டுப் பத்திரங்களை வாங்கும்பொழுது செய்ய வேண்டிய பதிவுகளையும்,

(ஆ) கடனீட்டுப் பத்திரங்களை மீட்கும்பொழுது செய்ய வேண்டிய பதிவுகளையும் தருக :

**விடை:**

### குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | **(i) வட்டியுட்பட்ட விலையில்** | | | |
| | **(அ) கடனீட்டுப் பத்திரங்களை வாங்கும் போழ்து** | | | |
| மே 31 | தன் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு ப | | 11,390 | |
| | கடனீட்டுப்பத்திர வட்டிக் கணக்கு ப | | 250 | |
| | வங்கிக் கணக்கு | | | 11,640 |
| | (ரூ. 97 வீதம் 120 தன் கடனீட்டுப் பத்திரங்களை வாங்கியது. 5 திங்கட்கு 6 சதவீதம் வீதம் வட்டித் தொகை விலையில் சேர்ந்துள்ளது.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| சூன் 30 | கடனீட்டுப்பத்திர வட்டிக் கணக்கு ப | | ரூ. 50 | ரூ. |
| | இலாப-நட்டக் கணக்கு | | | 50 |
| | (கம்பெனி ஒரு திங்களுக்கு வைத்திருக்கும் கடனீட்டுப்பத்திரங்கள் மீதான வட்டி.) | | | |
| | **(ஆ) கடனீட்டுப்பத்திரங்களை நீக்கும் பொழுது** | | | |
| | 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு ப | | 12,000 | |
| | தன் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 11,390 |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு இலாபக் கணக்கு | | | 610 |
| | (வட்டியுள்பட ரூ. 97 வீதம் 120 தன் கடனீட்டுப்பத்திரங்களைச் சந்தையில் வாங்கி இப்பொழுது நீக்க.) | | | |
| | **(ii) வட்டி நீங்கிய விலையில் (அ) கடனீட்டுப் பத்திரங்களை வாங்கும் போழ்து** | | | |
| மே 31 | தன் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு ப | | 11,640 | |
| | கடனீட்டுப்பத்திர வட்டிக் கணக்கு ப | | 250 | |
| | வங்கிக் கணக்கு | | | 11,890 |
| | (ரூ. 100 மதிப்புள்ள 120 கடனீட்டுப் பத்திரங்களை ரூ. 97 வீதம் வாங்கியது; 5 திங்கட்கு 6% வீதம் வட்டி நீங்கிய விலை.) | | | |

**குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)**

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| ஜூன் 30 | கடனீட்டுப்பத்திர வட்டிக் கணக்கு ப | | 50 | |
| | இலாப-நட்டக் கணக்கு | | | 50 |
| | (ஒரு திங்களாக கம்பெனி வைத்திருந்த 120 கடனீட்டுப் பத்திரங்கள் மீதான வட்டி.) | | | |
| | **(ஆ) வட்டி நீங்கி வாங்கிய கடனீட்டுப் பத்திரங்களை நீக்கும் பொழுது** | | | |
| | 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு ப | | 12,000 | |
| | தன் கடனீட்டுப்பத்திரக் கணக்கு | | | 11,640 |
| | கடனீட்டுப் பத்திர மீட்பு இலாபக் கணக்கு | | | 360 |
| | (ரூ. 100 மதிப்புள்ள கடனீட்டுப் பத்திரங்களை ரூ. 97 வீதம் வட்டி நீங்கிய விலையில் வாங்கியவற்றை இப்பொழுது நீக்க.) | | | |

**கடனீட்டுப் பத்திரங்களை மீட்டல் — மாற்றிக்கொள்ளுதல்**
**(Redemption of Debentures—Conversion)**

சில வேளைகளில் இருக்கின்ற கடனீட்டுப் பத்திரங்கட்கு மாறாகப் பங்குகளையோ அல்லது வேறு புதிய கடனீட்டுப் பத்திரங்களைக் கொடுத்தோ மீட்கும் முறையும் இருக்கின்றது. புதிய

பங்குகள் அல்லது புதிய கடனீட்டுப் பத்திரங்கள் இலாபகர மாக இருப்பின், கடனீட்டுப் பத்திரதாரர்கள் இவ்வாறு தமது கடனீட்டுப் பத்திரங்களை மாற்றிக்கொள்ள உடன்படுவர். இதனை மாற்றிக்கொள்ளும் முறையில் மீட்டல் (Redemption by Conversion) என்கிறோம்.

இவ்வாறு மாற்றிக்கொள்ளக்கூடிய கடனீட்டுப் பத்திரங்களை வெளியிடுவதற்குப் பங்குநர்கள் சிறப்புத் தீர்மானம் நிறைவேற்று வதன்மூலம் அவரது இசைவினை வழங்கவேண்டும். அத்துடன் மைய அரசின் ஒப்புதலும் தேவை.

கடனீட்டுப் பத்திரங்களை மாற்றிக்கொள்வது பற்றிய விவ ரங்கள் தகவல் அறிக்கையில் காணப்படும். தள்ளுபடியில் வெளி யிட்ட பங்குகளைப் பெயரளவு மதிப்பில் வெளியிட்ட பங்குகளாக மாற்ற வேண்டியிருப்பின், மாற்றப்பட்ட பங்கின் மதிப்பு கட னீட்டுப்பத்திரத்தின் மீது செலுத்தப்பட்ட தொகையளவு இருக்க வேண்டும். எடுத்துக்காட்டாக, ரூ. 100 மதிப்புள்ள கடனீட்டுப் பத்திரத்தை 10 சதவீதம் தள்ளுபடியில் வெளியிட்டிருப்பின், இதனை 100 மதிப்புள்ள பங்கு ரூ. 90 செலுத்தப்பட்டதாக வெளியிடலாம். இவ்வாறு வெளியிடுவதால் ரூ. 10 இன்னும் இப் பங்கு மீது கம்பெனி பெறவேண்டியுள்ளது என்பது தெளி வாகும். ரூ. 1,00,000-த்திற்கான கடனீட்டுப் பத்திரங்கள் 10 சதவீதம் தள்ளுபடியில் வெளியிடப்பட்டிருப்பின், இவற்றை மேலே கூறியவாறு ரூ. 100 மதிப்புள்ள 1,000 பங்குகள் பங்கு ஒன்றுக்கு ரூ. 90 வீதம் செலுத்தப்பட்டதென்று வெளியிடலாம் அல்லது முழுதும் செலுத்தப்பெற்ற ரூ. 100 மதிப்புள்ள 900 பங்குகளாக வெளியிடலாம்.

5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களாக மாற்றிக்கொள்வதாயின், 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கில் பற்றும், 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங் கள் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை 6 சதவீதம் முன் னுரிமைப் பங்குகளாக மாற்றிக்கொள்வதாயின், 5 சதவீதம் கட னீட்டுப்பத்திரங்கள் கணக்கில் பற்றும், 6 சதவீதம் முன் னுரிமைப் பங்குமுதல் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

**எடுத்துக்காட்டு 54**

1970 ஜூலை 1-ல் ஒரு கம்பெனி ரூ. 100 மதிப்புள்ள 1,000 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிட்டது.

அவை 6 சதவீதம் முனைமத்தில் மீட்கப்பட வேண்டியவை. கடனீட்டுப் பத்திரங்களை வெளியிட்ட இரு ஆண்டுகட்குள் தங்கள் கடனீட்டுப் பத்திரங்களை ரூ. 100 மதிப்புள்ள 6 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளாக 20 சதவீதம் முனைமத்தில் மாற்றிக் கொள்ளும் உரிமை கடனீட்டுப்பத்திரதாரர்கட்கு வழங்கப்பட்டிருந்தது.

1971 சனவரி 1-ல் 60 கடனீட்டுப் பத்திரங்களை வைத்துள்ள ஒருவர் இவ் வுரிமையைப் பயன்படுத்திக்கொள்ள அறிவிக்கைக் கொடுத்தார். தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக :

**விடை :**

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 1970 | | | | |
| ஜூலை 1 | வங்கிக் கணக்கு ப | | 1,00,000 | |
| | கடனீட்டுப்பத்திர வெளியீட்டு நட்டக் கணக்கு ப | | 6,000 | |
| | 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 1,00,000 |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு முனைமக் கணக்கு | | | 6,000 |
| | (6 சதவீதம் முனைமத்தில் மீட்கக்கூடிய ரூ. 100 மதிப்புள்ள 5 சதவீதம் 1,000 கடனீட்டுப் பத்திரங்களைப் பெயரளவு மதிப்பில் வெளியிட்டது.) | | | |
| 1971 | | | | |
| சன. 1 | 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு ப | | 6,000 | |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு முனைமக் கணக்கு ப | | 360 | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | 6 சதவீதம் முன்னுரிமைப் பங்குமுதல் கணக்கு | | | 5,300 |
| | பங்கு முனைமக் கணக்கு | | | 1,060 |
| | (6 சதவீதம் முனைமத்தில் மீட்கக்கூடிய 60 கடனீட்டுப் பத்திரங்களை ரூ. 100 மதிப்புள்ள 6 சதவீதம் 53 முன்னுரிமைப் பங்குகளாக 20 சதவீதம் முனைமத்தில் மாற்றிக் கொடுத்தது.) | | | |

மேலே காணப்படும் கணக்குகள் கீழ்க்கண்டவாறு இருப்பு நிலைக் குறிப்பில் காணப்படும்.

### இருப்புநிலைக் குறிப்பு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| **பங்கு முதல் :** ஒன்று ரூ. 100 வீதம் 53 ஆறு சதவீதம் முன்னுரிமைப் பங்குகள், முழுதும் செலுத்தப்பெற்றவை | 5,300 | **பல்வகைச் செல்வினம்:** கடனீட்டுப்பத்திர வெளியீட்டு நட்டம் | 6,000 |
| **காப்பும், மிகுதியும்:** பங்கு முனைமக் கணக்கு | 1,060 | | |
| **பிணைக் கடன்:** ஒன்று ரூ. 100 வீதம் 940 ஐந்து சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் | 94,000 | | |
| கடனீட்டுப்பத்திர மீட்புமுனைமக் கணக்கு | 5,640 | | |

**குறிப்பு:** கடனீட்டுப் பத்திதாரர்கட்கு வட்டி செலுத்தவேண்டியிருப்பின், அவ் வட்டித் தொகையை முன்னுரிமைப் பங்குகளாக மாற்றிக்கொள்ள முடியாது என்பதை உணர்தல் நலம்.

## எடுத்துக்காட்டு 55

ஒரு கம்பெனி 1970 சனவரி 1-ல் ரூ. 100 மதிப்புள்ள 5 சதவீதம் 5,000 கடனீட்டுப் பத்திரங்களை வெளியிட்டது. 4 ஆண்டுகட்குப் பின்னர், 3 திங்கள் முன்அறிவிப்புக் கொடுத்துப் பங்குதாரர்கள் விரும்பும் வகையில் கடனீட்டுப் பத்திரங்களை 5 சதவீதம் முனைமத்தில் ரொக்கம் கொடுத்தோ அல்லது பங்குகளை ஒதுக்கியோ அல்லது வேறுவகைக் கடனீட்டுப் பத்திரங்களை வழங்கியோ மீட்டுக் கொள்ளலாம் என்பது கடனீட்டுப்பத்திர வெளியீட்டு நிபந்தனைகளில் ஒன்றாகும்.

1974 சனவரி 1-ல் தேவையான அறிவிக்கை கம்பெனி கொடுத்தது. மே 1ஆம் நாளில் ரொக்கம் கொடுத்தோ, ரூ.100 மதிப்புள்ள 7 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளை 10 சதவீதம் முனைமத்தில் ஒதுக்குவதன்மூலமாகவோ, ரூ. 100 மதிப்புள்ள 7 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை ரூ. 95-ல் வெளியிடுவது மூலமாகவோ கடனீட்டுப் பத்திரங்கள் மீட்கப்படுமென்று கம்பெனி அவ்வறிவிக்கையில் கூறியிருந்தது. 1848 கடனீட்டுப் பத்திரங்களை வைத்திருப்பவர் தன் கடனீட்டுப் பத்திரங்களை 7 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளாக மாற்றிக்கொள்ளவும், 1197 கடனீட்டுப் பத்திரங்களை வைத்திருப்போர் 7 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களாக மாற்றிக்கொள்ளவும், மீதியுள்ளோர் ரொக்கம் வேண்டியும் தங்கள் விருப்புரிமையைத் (option) தெரிவித்தனர்.

மேற்கண்ட நடவடிக்கைகளைப் பதியத் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

**விடை :**

### குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 1970 | | | | |
| சன. 1 | வங்கிக் கணக்கு ப | | 5,00,000 | |
| | கடனீட்டுப்பத்திர வெளியீட்டு நட்டக் கணக்கு ப | | 25,000 | |
| | 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 5,00,000 |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1970 | | | ரூ. | ரூ. |
| சன. 1 | கடனீட்டுப்பத்திர மீட்பு முனைமக் கணக்கு | | | 25,000 |
| | (ரூ. 100 மதிப்புள்ள 5 சதவீத முனைமத்தில் மீட்கக்கூடிய 5,000 கடனீட்டுப்பத்திரங்களை வெளியிட்டது.) | | | |
| 1974 | | | | |
| ஏப். 1 | 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு ப | | 1,84,800 | |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு முனைமக் கணக்கு ப | | 9,240 | |
| | 7 சதவீதம் முன்னுரிமைப் பங்குமுதல் கணக்கு | | | 1,76,400 |
| | பங்கு முனைமக் கணக்கு | | | 17,640 |
| | (ரூ. 100 மதிப்புடைய 1,764 முன்னுரிமைப் பங்குகளை 10 சதவீதம் முனைமத்தில் ஒதுக்கி ரூ. 100 மதிப்புடைய 5 சதவீதம் முனைமத்தில் மீட்கக்கூடிய 1,848 கடனீட்டுப் பத்திரங்களை மீட்டது.) | | | |
| | 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு ப | | 1,19,700 | |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு முனைமக் கணக்கு ப | | 5,985 | |
| | கடனீட்டுப்பத்திர தள்ளுபடிக் கணக்கு ப | | 6,615 | |

குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 1974 ஏப். 1 | 7 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 1,32,300 |
| | (ரூ. 100 மதிப்புள்ள 7 சதவீதம், 1,323 கடனீட்டுப் பத்திரங்களை ரூ. 95 வீதம் வெளியிட்டு ரூ. 100 மதிப்புள்ள 1,197 கடனீட்டுப் பத்திரங்களை 5 சதவீதம் முனைமத்தில் மீட்டது.) | | | |
| | 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு ப | | 1,95,500 | |
| | கடனீட்டுப்பத்திர மீட்பு முனைமக் கணக்கு ப | | 9,775 | |
| | வங்கிக் கணக்கு | | | 2,05,275 |
| | (ரூ. 100 மதிப்புள்ள 1,955 கடனீட்டுப் பத்திரங்களை 5 சதவீதம் முனைமத்தில் ரொக்கம் கொடுத்து மீட்டது.) | | | |

**விளக்கக் குறிப்பு :**

1. முன்னுரிமைப் பங்குகளாக மாற்றிக்கொள்ளல்

| | ரூ. |
|---|---|
| 1848 கடனீட்டுப் பத்திரங்களின் மொத்த் பெயரளவு மதிப்பு | 1,84,800 |
| மீட்கும்போழ்து இவர்கட்குத் தரவேண்டிய மொத்தத் தொகை (5 சதவீதம்) | 9,240 |
| மொத்தம் சேரவேண்டியது | 1,94,040 |

முன்னுரிமைப் பங்கொன்றின்
மதிப்பு = ரூ. 100+10 (முனைமம்)
= ரூ. 110.

ரூ. 110-க்கு ஒதுக்கப்படுவது 1 முன்னுரிமைப் பங்கு

ரூ. 1,94,040-க்கு ஒதுக்கப்படுவது $\frac{1,94,040 \times 1}{110}$

= 1,764 முன்னுரிமைப் பங்குகள்.

2. கடனீட்டுப் பத்திரங்களாக மாற்றிக்கொள்ளல்

| | ரூ. |
|---|---|
| 1,197 கடனீட்டுப் பத்திரங்கட்குச் சேர வேண்டிய மொத்தத் தொகை : | |
| இவற்றின் பெயரளவு மதிப்பு | 1,19,700 |
| **கூட்டு** : மீட்பு முனைமம் | 5,985 |
| சேரவேண்டியது | 1,25,685 |

7 சதவீதம் கடனீட்டுப் பத்திரத்தின்
வெளியீட்டு விலை ரூ. 95

ரூ. 95-க்குக் கிடைப்பது 1 புதிய கடனீட்டுப்பத்திரம்

ரூ. 1,25,685-ற்குக் கிடைப்பது $\frac{1,25,685 \times 1}{95}$

= 1,323, கடனீட்டுப்பத்திரங்கள்

3. ரொக்கம் கொடுத்து மீட்கப்பட்ட கடனீட்டுப் பத்திரங்கள்

| | | |
|---|---|---|
| மொத்த கடனீட்டுப் பத்திரங்களின் எண்ணிக்கை | | 5,000 |
| **கழி:** முன்னுரிமைப் பங்குகளாக மாற்றிக் கொள்ளப்பட்டது | 1,848 | |
| புதிய 7 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களாக மாற்றிக்கொள்ளப்பட்டது | 1,197 | |
| | | 3,045 |
| ரொக்கம் கொடுத்து மீட்கப்பட வேண்டியவை | | 1,955 |

**எடுத்துக்காட்டு 56**

1965 மார்ச் 31-ற்குரிய விஸ்தா லிமிட்டெடின் இருப்புநிலைக் குறிப்பு கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. அதன் அதிகாரம் பெற்ற பங்குமுதல் ரூ. 10,00,000 ஆகும். இது ஒன்று ரூ. 10 மதிப்புடைய 1,00,000 நேர்மைப் பங்குகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| பங்கு முதல் வெளியிட்டது, முழுதும் செலுத்தப்பட்டது | 2,50,000 | பல்வகைச் சொத்துகள் | 9,31,500 |
| முதல்காப்பு | 75,000 | 5,000 தன் கடனீட்டுப் பத்திரங்களின் முதலீடு (பெயரளவு மதிப்பு ரூ. 50,000) | 42,500 |
| பொதுக்காப்பு | 1,25,000 | | |
| இலாப-நட்டக் கணக்கு | 2,40,000 | | |
| கடனீந்தோர் | 1,14,000 | | |
| ரூ. 100 வீதம் 5 சதவீதம்(1965) கடனீட்டுப் பத்திரங்கள் | 2,00,000 | வங்கி | 30,000 |
| | 10,04,000 | | 10,04,000 |

1965 திசம்பர் 31-ல் 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கடனீட்டுப் பத்திரம் ஒன்று ரூ. 10 வீதம் முனைமத்தொகையில் மீட்கப்பட வேண்டியனவையாகும்.

கம்பெனி கீழ்க்கண்டவாறு தீர்மானித்தது :

(அ) 1965 திசம்பர் 31-ல் முடியும் 9 திங்களுக்கான வட்டி கடனீட்டுப் பத்திரங்கள் மீது செலுத்த வேண்டியது.

(ஆ) ஒன்று ரூ. 10 வீதம் பங்கு ஒன்றுக்கு ரூ. 2 முனைமத்தில் 25,000 நேர்மைப் பங்குகளை வெளியிட வேண்டியது. இவை முழுதும் எடுத்துக்கொள்ளப் பட்டு 1965 அக்டோபர் 31-ல் செலுத்தப் பெற்றன.

(இ) புதிய 6 சதவீதம் (1975) கடனீட்டுப் பத்திரங்களைப் பெயரளவு மதிப்பில் ஒதுக்குவதுமூலமாக அல்லது பழைய கடனீட்டுப்பத்திரங்கள் மீது தரவேண்டிய முழுத் தொகைக்கும், ரொக்கம் செலுத்துவது மூலமாக மீட்டுக்கொள்ளக்கூடிய விருப்புரிமையை (option) கடனீட்டுப் பத்திரதாரர்கட்கு வழங்குவது.

ரூ. 1,00,000 மதிப்புள்ள கடனீட்டுப் பத்திரதாரர்கள் அவர்களுடைய பழைய கடனீட்டுப் பத்திரங்கள் மீதானத் தொகையைத் தீர்க்கப் புதியக் கடனீட்டுப் பத்திரங்களைப் பெற்றுக் கொள்வதற்கு அவரது விருப்புரிமையைத் தெரிவித்தனர். தன் கடனீட்டுப் பத்திரங்களிலேயே முதலீடு செய்து இருந்தவை நீக்கப் பட்டன. அனைத்து நடவடிக்கைகளும் 1965 திசம்பர் 31-ல் மேற்கொள்ளப்பட்டன. அப்பொழுது கடனீட்டுப்பத்திரதாரர் கட்குச் செலுத்திய ரொக்கத் தொகையளவிற்கு இலாப-நட்டக் கணக்கிலிருந்து பொதுக்காப்பிற்கு மாற்றப்பட்டது.

(ஈ) மேற்கண்ட நடவடிக்கைகள் அனைத்தையும் நிறைவேற்றிய பின்னர், உள்ள முதல் காப்புக்களை 1965 திசம்பர் 31-ல் நேர்மைப் பங்குநர்கட்கு மேலூதியப் பங்குகளாக வழங்குவதற்குப் பயன் படுத்திக்கொள்ள வேண்டியது.

கம்பெனியின் பேரேடுகளில் மேற்கண்ட நடவடிக்கைகள் எவ்வாறு காணப்பெறும் என்பதைக் காட்டுக.

(1966, May, C. A. Final-ஐத் தழுவியது)

## நேர்மைப் பங்கு முதல் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1965 | | | | 1965 | | | |
| திச. 31 | இருப்பு கீ/கொ .. | | 6,25,000 | ஏப். 1 | இருப்பு கீ/கொ .. | | 2,50,000 |
| | | | | அக். 1 | வங்கி .. | | 2,50,000 |
| | | | | திச. 31 | பங்குநர் மேலூதியக் க/கு .. | | 1,25,000 |
| | | | 6,25,000 | | | | 6,25,000 |

## முதல் காப்புக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1965 | | | | 1965 | | | |
| திச. 31 | பங்குநர் மேலூதியக் க/கு .. | | 75,000 | ஏப். 1 | இருப்பு கீ/கொ .. | | 75,000 |

## பொதுக் காப்புக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1965 திச. 31 | இருப்பு கீ/இ .. | | 1,75,000 | 1965 ஏப். 1 | இருப்பு கீ/கொ .. | | 1,25,000 |
| | | | | ,, | இலாப-நட்டக் க/கு .. | | 50,000 |
| | | | 1,75,000 | | | | 1,75,000 |
| | | | | 1966 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 1,75,000 |

**பற்று — 5% கடனீட்டுப் பத்திரம் (1965) கணக்கு — வரவு**

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1965 திச. 31 | தன் கடனீட்டுப் பத்திரங்கள் க/கு .. | | 42,500 | 1965 ஏப். 1 | இருப்பு கீ/கொ .. | | 2,00,000 |
| | கடனீட்டுப் பத்திர மீட்பு இலாபக் க/கு .. | | 7,500 | | | | |
| | 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரதாரர்கள் க/கு .. | | 1,50,000 | | | | |
| | | | 2,00,000 | | | | 2,00,000 |

**பற்று — 6% கடனீட்டுப் பத்திரம் (1975) கணக்கு — வரவு**

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1965 திச. 31 | இருப்பு கீ/கொ .. | | 1,10,000 | 1965 திச. 31 | 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரதாரர்கள் க/கு | | 1,10,000 |

**5% கடனீட்டுப் பத்திரதாரர்கள் கணக்கு**

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1965 திச. 31 | தன் கடனீட்டுப்பத்திர வட்டி .. | | 1,875 | 1965 திச. 31 | 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் (1965) க/கு .. | | 1,50,000 |
| | 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் (1975) க/கு | | 1,10,000 | ,, | கடனீட்டுப் பத்திர மீட்பு முனைமக் க/கு .. | | 15,000 |
| | வங்கி .. | | 60,625 | ,, | கடனீட்டுப்பத்திர வட்டிக் க/கு .. | | 7,500 |
| | | | 1,72,500 | | | | 1,72,500 |

**கடனீட்டுப் பத்திர மீட்பு முனைமக் கணக்கு**

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1965 திச. 31 | கடனீட்டுப் பத்திரதாரர்கள் க/கு . . | | 15,000 | 1965 திச. 31 | கடனீட்டுப்பத்திர மீட்பு இலாபக் க/கு— மாற்றம் . . | | 7,500 |
| | | | | ,, | இலாப-நட்டக் க/கு . . | | 7,500 |
| | | | 15,000 | | | | 15,000 |

**கடனீட்டுப் பத்திர மீட்பு இலாபக் கணக்கு**

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1965 திச. 31 | கடனீட்டுப்பத்திர மீட்பு முனைமக் க/கு— மாற்றப்படுகிறது . . | | 7,500 | 1965 திச. 31 | 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரம் (1965) க/கு . . | | 7,500 |

பற்று **பங்குநர் மேலூதியக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1965 | | | | 1965 | | | |
| திச. 31 | நேர்மைப் பங்கு முதல் க/கு .. | | 1,25,000 | திச. 31 | முதல் காப்பு .. | | 75,000 |
| | | | | ,, | பங்கு முனைமக் க/கு .. | | 50.000 |
| | | | 1,25,000 | | | | 1,25,000 |

பற்று **பங்கு முனைமக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1965 | | | | 1965 | | | |
| திச. 31 | பங்குநர் மேலூதியக் க/கு.. | | 50,000 | அக். 31 | வங்கி .. | | 50,000 |

பற்று **தன் கடனீட்டுப் பத்திரக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1965 | | | | 1965 | | | |
| ஏப். 1 | இருப்பு கீ/கொ .. | | 42,500 | திச. 31 | 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் (1965) க/கு.. | | 42,500 |

**தன் கடனீட்டுப் பத்திர வட்டிக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1965 திச. 31 | இலாப-நட்டக் க/கு— மாற்றம் .. | | 1,875 | 1965 திச. 31 | கடனீட்டுப் பத்திர தாரர்கள் க/கு .. | | 1,875 |

**கடனீட்டுப் பத்திர வட்டிக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1965 திச. 31 | கடனீட்டுப் பத்திரதாரர்கள் க/கு .. | | 7,500 | 1965 திச. 31 | இலாப-நட்டக் க/கு— மாற்றம் .. | | 7,500 |

**இலாப-நட்டக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1965 திச. 31 | கடனீட்டுப் பத்திர மீட்பு முனைமக் க/கு .. | | 7,500 | 1965 ஏப். 1 | இருப்பு கீ/கொ .. | | 2,40,000 |
| ,, | பொதுக் காப்பு .. | | 50,000 | திச. 31 | தன் கடனீட்டுப்பத்திர வட்டிக் க/கு .. | | 1,875 |
| ,, | கடனீட்டுப் பத்திர வட்டிக் க/கு | | 7,500 | | | | |

# ஒப்புறுதி
# (Underwriting)

பொதுமக்களிடத்தில் வெளியிடும் பங்குகள் அல்லது கடனீட்டுப் பத்திரங்கள் அனைத்தும் எடுத்துக்கொள்ளப்படும் என்று கொடுக்கப்படும் உத்திரவாதம் அல்லது ஏற்கப்படும் பொறுப்பு 'ஒப்புறுதி' எனப்படும். 'பொதுமக்களின் முன்னால் பங்குகள் கொண்டு வரப்படுமுன்னர், வெளியிடப்பட்ட அனைத்துப் பங்குகளை அல்லது ஒப்பந்தத்தில் கண்டுள்ள எண்ணிக்கையளவிற்கான பங்குகளைப் பொதுமக்கள் வாங்க முன்வரவில்லையென்றால், உடன்பாடு செய்துகொண்ட கழிவுத் தொகைக்காக, பொதுமக்கள் வாங்க முன்வராப் பங்குகளைத் தான் வாங்கிக்கொள்வதாக ஒப்புறுதியர் தரும் உறுதிமொழியை உள்ளடக்கிய ஒப்பந்தம் ஒப்புறுதி ஒப்பந்தம்' என நீதிபதி அவர்கள் ஓர் இங்கிலாந்து வழக்கில் கூறியுள்ளதை கெஸ்டன்பர்க் (Gestenberg) என்பவர் கூறுகிறார். மேற்சொன்ன இலக்கணத்திலிருந்து நாம் தெரிந்து கொள்வது :

(1) கம்பெனி வெளியிடும் பங்குகள் அல்லது கடனீட்டுப் பத்திரங்கள் அனைத்தையும் ஒப்புறுதி செய்யலாம்.

(2) அனைத்துப் பங்குகளையும் அல்லது கடனீட்டுப் பத்திரங்களையும் ஒப்புறுதி செய்திருந்தபோதிலும், பொதுமக்கள் அவற்றை வாங்க முன் வராத எண்ணிக்கையளவிற்கு ஒப்புறுதியாளர்கள் கம்பெனியின் பங்குகளை அல்லது கடனீட்டுப் பத்திரங்களை வாங்கின் போதுமானதாகும். எடுத்துக்காட்டாக, ஒரு கம்பெனி வெளியிடும் 15,000 பங்குகளை ஒருவர் ஒப்புறுதி செய்து, 12,000 பங்குகட்கான விண்ணப்பங்கள் பொதுமக்களிடத்தில் இருந்து வந்தன வென்று கொண்டால், ஒப்புறுதியர் 3,000 பங்குகளையே வாங்கவேண்டும். அவ்வாறில்லாமல், 14,500 பங்குகள் வேண்டி விண்ணப்பம் வந்திருப்பின், 500 பங்குகளை ஒப்புறுதியர் வாங்கின் போதும்.

(3) கம்பெனி வெளியிட்ட பங்குகள் அல்லது கடனீட்டுப் பத்திரங்கள் அனைத்திற்கும் விண்ணப்பங்கள் பொதுமக்களிடத்திலிருந்து வந்திருப்பின், ஒப்புறுதியாளர் ஏற்கவேண்டிய பொறுப்பு ஏதுமில்லை. எடுத்துக்

காட்டாக, கம்பெனி வெளியிட்ட 15,000 பங்குகளுக்குப் பொதுமக்களிடத்திலிருந்து விண்ணப்பங்கள் வந்திருப்பின், ஒப்புறுதியர் கம்பெனியில் எவ்விதப் பங்கையும் வாங்கவேண்டியதில்லை.

(4) பொதுமக்களிடமிருந்து அனைத்துப் பங்குகட்கும் அல்லது கடனீட்டுப் பத்திரங்கட்கும் விண்ணப்பங்கள் வந்திருப்பதால் ஒப்புறுதியர் கம்பெனியில் பங்கு அல்லது கடனீட்டுப் பத்திரங்கள் ஏதும் வாங்கவேண்டியதில்லையாயினும், அவர் ஒப்புறுதி செய்த விண்ணப்பங்கள் அனைத்திற்குமான கழிவுத் தொகையை அவருக்குச் செலுத்தவேண்டும்.

இவ்வாறு பங்குகளை அல்லது கடனீட்டுப் பத்திரங்களை ஒப்புறுதி செய்வதற்காக ஒப்புறுதியர்கட்கு வழங்கப்படும் கழிவு ஒப்புறுதிக் கழிவு (Underwriting commission) எனப்படும். இது பற்றிக் கம்பெனிச் சட்டத்தின் 76-வது பிரிவு கீழ்க்கண்டவாறு கூறுகிறது :

(1) கம்பெனியின் செயல்முறை விதிகள் இதற்கு அதிகாரம் வழங்கினுல் மட்டுமே கம்பெனி ஒப்புறுதிக் கழிவைக் கொடுக்கமுடியும்.

(2) இவ்வாறு செலுத்தப்படும் ஒப்புறுதிக் கழிவானது, பங்குகளாயின், பங்கு வெளியீட்டில் 5 சதவீதத்திற்கு மிகக்கூடாது, அல்லது கம்பெனியின் செயல்முறை விதிகள் அதனினும் குறைந்த சதவீதத்தைக் குறிப்பிடுமாயின் அதனினும் மிகக்கூடாது. எடுத்துக்காட்டாக, செயல்முறை விதிகள் ஒப்புறுதிக் கழிவு பங்கு வெளியீட்டு விலையில் 3 சதவீதம் இருக்கவேண்டுமென்று கூறுமாயின், ஒப்புறுதிக் கழிவு 3 சதவீதத்திற்கு மிகக்கூடாது. அதாவது, கம்பெனிச் சட்டம் உயர்ந்தளவு ஒப்புறுதிக் கழிவுக்கு 5 சதவீதத்தைக் குறிப்பிடுகிறது.

(3) கம்பெனி கடனீட்டுப் பத்திரங்களை வெளியிடுமாயின், வெளியீட்டு விலையில் $2\frac{1}{2}$ சதவீதம் அல்லது செயல்முறை விதிகள் குறிப்பிடும் அதனினும் குறைந்த சதவீதத்திற்கு மிகாமல் ஒப்புறுதிக் கழிவு தரப்படும்.

(4) ஒப்புறுதிக் கழிவு பற்றிய விவரம் தகவல் அறிக்கையில் அல்லது தகவல் அறிக்கைக்கு மாற்று அறிக்கையில் கொடுக்கப்பட்டிருக்கவேண்டும்.

பங்கு அல்லது கடனீட்டுப்பத்திர 'வெளியீட்டு விலையில்' குறிப்பிட்ட சதவீதத்தை ஒப்புறுதிக் கழிவாகக் கொடுக்கவேண்டு மென்று கூறப்பட்டிருக்கிறது. எனவே, இவற்றின் பெயரளவு மதிப்பில் இக் கழிவினைக் கணக்கிடல் வழுவாகும். எடுத்துக் காட்டாக, ரூ. 100 மதிப்புள்ள 5,000 பங்குகளைக் கம்பெனி 10 சதவீதம் முனைமத்தில் வெளியிடுவதாகவும், அனைத்துப் பங்கு களும் ஒப்புறுதி செய்யப்பட்டனவென்றும் 3 சதவீதம் ஒப்புறுதிக் கழிவு தரவேண்டுமென்றும் கொண்டால், தரவேண்டிய ஒப் புறுதிக் கழிவு கீழ்க்கண்டவாறு கணக்கிடப்படும்.

| | ரூ. |
|---|---|
| பங்குகளின் வெளியீட்டு விலை : | |
| பங்கு ஒன்று ரூ. 100 வீதம் | |
| 5,000 பங்குகள் | 5,00,000 |
| கூட்டு : | |
| 10 சதவீதம் முனைமம் | 50,000 |
| பங்கு வெளியீட்டு விலை | 5,50,000 |

ஒப்புறுதிக் கழிவு $= 5,50,000 \times \frac{3}{100} =$ ரூ. 16,500

## எடுத்துக்காட்டு 57

ஒரு கம்பெனி ரூ. 1,000 மதிப்புள்ள 200 ஆறு சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை 5 சதவீதம் தள்ளுபடியில் வெளி யிட்டது. அனைத்துக் கடனீட்டுப் பத்திரங்களும் ஒப்புறுதி செய்யப்பட்டன. 2 சதவீதம் ஒப்புறுதிக் கழிவு தரவேண்டும். ஒப்புறுதிக் கழிவினைக் கணக்கிடுக :

**விடை :**

| | ரூ. |
|---|---|
| கடனீட்டுப் பத்திரங்களின் வெளியீட்டு விலை : | |
| வெளியிட்ட கடனீட்டுப் பத்திரங்கள் | 2,00,000 |
| கழி : | |
| கடனீட்டுப்பத்திரத் தள்ளுபடி | 10,000 |
| கடனீட்டுப்பத்திர வெளியீட்டு விலை | 1,90,000 |

ஒப்புறுதிக் கழிவு $= 1,90,000 \times \frac{2}{100} =$ ரூ. 3,800.

**நிலை ஒப்புறுதி** (Firm Underwriting)

இவ்வகை ஒப்புறுதி ஒப்பந்தத்தில் ஒப்புறுதியர்கள் குறிப்பிட்ட எண்ணிக்கைப் பங்குகளை வாங்குவதற்கு ஒப்புறுதியளிக்கிறார்கள். பொதுமக்களுக்கு ஒதுக்கு முன்பாக ஒப்புறுதியர்கட்கு அவ்வொப்பந்தத்தில் குறிப்பிட்டுள்ள பங்குகளைக் கம்பெனி ஒதுக்கீடு செய்யவேண்டும். வெளியிட்ட பங்குகளின் எண்ணிக்கைக்குக் கூடுதலாகவே பொதுமக்களிடமிருந்து விண்ணப்பங்கள் வரினும், முதலில் இவ்வகை ஒப்புறுதியர்க்குப் பங்குகளை ஒதுக்கீடு செய்தாகவேண்டும். இந் நிலையில், வெளியிட்ட எண்ணிக்கைக்கும் கூடுதலாகப் பங்குகள் வேண்டி விண்ணப்பங்கள் வரும்பொழுது பங்கு ஒதுக்குவதில் நிலை ஒப்புறுதியாளர்கள் (Firm underwriters) முன்னுரிமை பெறுகின்றனர். எடுத்துக்காட்டாக, ஒரு கம்பெனி 10,000 பங்குகளை வெளியிடுவதாகவும், அதில் ஒப்புறுதியாளர்கள் 2,000 பங்குகட்கு நிலை- ஒப்புறுதி வழங்கியிருப்பதாகவும் கொண்டால், அவர்கட்கு முதலில் 2,000 பங்குகள் ஒதுக்கவேண்டியிருப்பதால் மீதியுள்ள 8,000 பங்குகளையே பொதுமக்களுக்கு ஒதுக்கவேண்டும்.

**தரகர்** (Broker)

தரகர் என்பவர் பங்கு வாங்க விரும்புபவரையும், பங்கு வெளியிடும் கம்பெனியையும் ஓர் உடன்பாட்டிற்கு வரச் செய்பவராவார். அதாவது, கம்பெனியின் பங்குகளை வாங்குவதற்கு முன்வருபவர்களைக் கொண்டுவந்து பங்கு வாங்கச்செய்வது இவரின் பணியாகும். இவர் ஆற்றும் பணிக்காக வழங்கப்படும் ஊதியம் தரகு (brokerage) எனப்படும். கம்பெனிச் சட்டத்தின் 76-வது பிரிவிற்குத் தரகு வழங்குவதும் உட்பட்டதாகும்.

பொதுமக்கள் கம்பெனியின் பங்குகளை வாங்க முன்வரவில்லையெனில், தரகர் அப் பங்குகளை வாங்கவேண்டுவதில்லை. ஆனால், ஒப்புறுதியாளரோ பொதுமக்கள் வாங்க முன்வராப் பங்குகளை வாங்கும் பொறுப்பினை ஏற்கவேண்டியுள்ளது.

தரகர்மூலமாக வாங்கப்படும் பங்குகட்கான தரகுத் தொகை மட்டிலுமே தரகருக்கு வழங்கப்படும். ஆனால், பொதுமக்களிடமிருந்து அனைத்து பங்குகட்கான விண்ணப்பங்கள் கம்பெனிக்கு வந்தாலும் கூட, அவர்களால் ஒப்புறுதி செய்யப்பட்டப் பங்குகள் மீதான ஒப்புறுதிக் கழிவினைக் கம்பெனி அவர்கட்குக் கொடுத்தாக வேண்டும்.

கம்பெனி ஒப்புறுதிக் கழிவுத் தொகை செலுத்துவதுடன் தரகுத் தொகையும் செலுத்தலாம்.

## குறியிடப்பட்ட விண்ணப்பங்கள் (Marked Applications)

பொதுமக்கள் கம்பெனியிடமிருந்தோ, ஒப்புறுதியரிடமிருந்தோ அல்லது தரகரிடமிருந்தோ பங்கு விண்ணப்பங்களைப் பெறலாம். ஒப்புறுதியரிடமிருந்து அல்லது தரகரிடமிருந்து பெறும் விண்ணப்பங்களில் ஒப்புறுதியாளரின் அல்லது தரகரின் பெயர் குறிப்பிடப்பட்டிருக்கும். இதனுல் ஒவ்வொரு ஒப்புறுதியர் அல்லது தரகர்மூலமாக எத்துணைப் பங்குகட்கான விண்ணப்பங்கள் வந்துள்ளன என்பதை எளிதில் உணரமுடியும். இவ்வகை விண்ணப்பங்கள் குறியிடப்பட்ட விண்ணப்பங்கள் (Marked applications) எனப்படுகின்றன. எவ்வொப்புறுதியரின் அல்லது தரகரின் பெயர் முத்திரையும் தாங்கி இராத விண்ணப்பங்கள் கம்பெனிக்கு நேரிடையாக வந்த விண்ணப்பங்கள் ஆகும். இவை குறியிடப்படாத விண்ணப்பங்கள் (Unmarked applications) எனப்படும். ஒரு ஒப்புறுதியர் மட்டுமே அனைத்துப் பங்குகளையும் ஒப்புறுதி செய்திருப்பின், விண்ணப்பங்கள் குறியிடப்பட்டிருக்கின்றனவா அல்லவா என்பது பற்றிக் கவலையில்லை. காரணம், பங்குகள் நேரிடையாக விண்ணப்பிக்கப்பட்டிருப்பின் அல்லது ஒப்புறுதியாளர்மூலமாக விண்ணப்பிக்கப்பட்டிருப்பின், அவருக்குச் சேரவேண்டிய ஒப்புறுதிக் கழிவு கொடுத்தாகவேண்டும். ஆனுல், ஒன்றுக்கு மேற்பட்ட ஒப்புறுதியாளர்களிருப்பின், விண்ணப்பங்கள் குறியிடப்பட்டுள்ளனவா அல்லவா, ஒவ்வொரு ஒப்புறுதியர்மூலமும் பெற்ற விண்ணப்பங்கள் எவ்வளவு போன்ற விவரங்களை அறிதல் இன்றியமையாதது.

## ஒப்புறுதிக் கழிவு – பதிதல்

முதலில் ஒப்புறுதியருக்குத் தரவேண்டிய ஒப்புறுதிக் கழிவினைக் கணக்கிட்டு அவருக்கு இத் தொகை சேர வேண்டியுள்ளது என்பதற்கான பதிவினைச் செய்யவேண்டும். இதற்குப் பங்கு வெளியீட்டு அல்லது கடனீட்டுப்பத்திர வெளியீட்டு ஒப்புறுதிக் கழிவுக் கணக்கில் பற்றும், ஒப்புறுதியர் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

பின்னர், ஒப்புறுதியருக்குத் தொகை செலுத்தும்பொழுது, ஒப்புறுதியர் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும். தரகுத் தொகையைப் பதிய முதலில் பங்கு வெளியீட்டு அல்லது கடனீட்டுப்பத்திர வெளியீட்டுத் தரகுக் கணக்கில்

பற்றும், தரகர் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். பின்னர்த் தரகர் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

ஒப்புறுதித் தொகையை அல்லது தரகுத் தொகையை ரொக்கமாகச் செலுத்தாமல் கம்பெனி தனது பங்குகள்மூலமாக அல்லது கடனீட்டுப்பத்திரங்கள் மூலமாகச் செலுத்துவதாயின், முதல் பத்தியில் கூறிய பதிவை அடுத்து ஒப்புறுதியர் கணக்கில் அல்லது தரகர் கணக்கில் பற்றும், முதல் கணக்கில் அல்லது கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

கம்பெனி வெளியிட்ட பங்குகட்கும் குறைவாகப் பங்குகள் வேண்டி பொதுமக்களிடமிருந்து விண்ணப்பங்கள் வந்திருப்பின், ஒப்புறுதியர் பொதுமக்கள் எடுத்துக்கொள்ளாத பங்குகளை வாங்கியாகவேண்டுமென்று கூறியிருக்கிறோம். ஒப்புறுதியர் ஏற்கவேண்டியுள்ள இப் பொறுப்பினைப் பதிவதற்கு, ஒப்புறுதியர் கணக்கில் பற்றும், பங்குமுதல் கணக்கில் அல்லது கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

ஒப்பந்தத்தின்படி எடுத்துக்கொண்ட பங்குகள் அல்லது கடனீட்டுப் பத்திரங்கள் மீதான தொகையை ஒப்புறுதியரிடமிருந்து பெறுவதைப் பதிவதற்கு வங்கிக் கணக்கில் பற்றும், ஒப்புறுதியர் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

இவ்வாறு ஒப்புறுதியருக்குச் சேரவேண்டிய ஒப்புறுதிக் கழிவினைக் கொடுத்துவிட்டுப் பின்னர், அவர்கள் ஒப்பந்தத்தின்கீழ் எடுத்துக்கொண்ட பங்குகட்கான தொகையை அவர்களிடமிருந்து பெறுவதற்கு மாறாக, இவ்விரண்டுக்குமுள்ள வேறுபாட்டுத் தொகைக்கான கணக்கினைத் தீர்த்துக்கொள்வதே வழக்கம்.

### எடுத்துக்காட்டு 58

ஒரு கம்பெனி ரூ. 100 மதிப்புள்ள 5,000 நேர்மைப் பங்குகளையும், ரூ. 100 மதிப்புள்ள 5 சதவீதம் 2,000 கடனீட்டுப் பத்திரங்களை 5 சதவீதம் தள்ளுபடியிலும் வெளியிடுகிறது. வெளியிடப்பட்ட பங்குகள், கடனீட்டுப் பத்திரங்கள் முழுவதையும் வளவன் ஒப்புறுதி செய்தார். பங்குகள் மீதும் கடனீட்டுப் பத்திரங்கள் மீதும் ஒப்புறுதிக் கழிவு கம்பெனிச் சட்டம் விதித்துள்ள உயர்ந்தளவு சதவீத அளவில் தரப்படவேண்டும்.

4,800 பங்குகள் வேண்டியும், 1,500 கடனீட்டுப் பத்திரங்கள் வேண்டியும் விண்ணப்பங்கள் வந்தன. இவை அனைத்தும்

ஒதுக்கீடு செய்யப்பெற்று, உடனடியாகப் பணம் செலுத்தப் பட்டது. வளவன் தனது பொறுப்பினை நிறைவேற்றினார்.

வேண்டிய குறிப்பேட்டுப் பதிவுகளையும், பேரேட்டுக் கணக்கு களையும் தந்து இருப்புநிலைக் குறிப்பில் இவை எவ்வாறு இடம் பெறுகிறது என்பதையும் காட்டுக.

**விடை :**

கம்பெனிச் சட்டத்தின் 76-வது பிரிவின்படி பெரும (maximum) ஒப்புறுதித் தொகையாகப் பங்கு வெளியீட்டு விலையில் 5 சதவீதமும், கடனீட்டுப்பத்திர வெளியீட்டு விலையில் $2\frac{1}{2}$ சதவீதமும் தரலாம்.

**குறிப்பேட்டுப் பதிவுகள்**

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | வங்கிக் கணக்கு ப | | 4,80,000 | |
| | நேர்மைப் பங்கு முதல் கணக்கு | | | 4,80,000 |
| | (பொதுமக்களிடமிருந்து பங்கு ஒன்று ரூ. 100 வீதம் 4,800 பங்குகளை முழுத் தொகையும் பெற்றுஒதுக்கீடுசெய்தது.) | | | |
| | வங்கிக் கணக்கு ப | | 1,42,500 | |
| | கடனீட்டுப்பத்திர தள்ளுபடிக் கணக்கு ப | | 7,500 | |
| | 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 1,50,000 |
| | (ஒன்று ரூ. 100 வீதம் 1,500 கடனீட்டுப் பத்தி ரங்களை 5 சதவீதம் தள்ளுபடியில் ஒதுக்கியது முழுத் தொகையும் செலுத்தப்பட்டது.) | | | |

குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | வளவன் ப | | 20,000 | |
| | நேர்மைப் பங்கு முதல் கணக்கு | | | 20,000 |
| | (பொதுமக்கள் வாங்க முன்வராத 200 பங்குகளை ஒப்புறுதியருக்கு ஒதுக்கீடு செய்தது.) | | | |
| | வளவன் கணக்கு ப | | 47,500 | |
| | கடனீட்டுப்பத்திர தள்ளுபடிக் கணக்கு ப | | 2,500 | |
| | 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 50,000 |
| | (பொதுமக்கள் வாங்க முன்வராத 500 கடனீட்டுப் பத்திரங்களை ஒப்புறுதியருக்கு ஒதுக்கியது.) | | | |
| | பங்கு ஒப்புறுதிக் கழிவுக் கணக்கு ப | | 25,000 | |
| | கடனீட்டுப்பத்திர ஒப்புறுதிக் கழிவுக் கணக்கு ப | | 4,750 | |
| | வளவன் | | | 29,750 |
| | (ஒப்புறுதியருக்குச் சேர வேண்டிய கழிவுத் தொகை : ரூ. 5,00,000 மீது 5 சதவீதம் = 25,000 ரூ. 1,90,000 மீது $2\frac{1}{2}$ சதவீதம் = 4,750 | | | |
| | வங்கிக் கணக்கு ப | | 37,750 | |
| | வளவன் | | | 37,750 |
| | (வளவனிடமிருந்து அவருக்குச் சேரவேண்டிய கழிவுத்தொகை போக பெற்றது.) | | | |

பற்று **வங்கிக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | நேர்மைப் பங்கு முதல் க/கு .. | | 4,80,000 | | இருப்பு கீ/இ .. | | 6,60,250 |
| | கடனீட்டுப் பத்திரங்கள் க/கு .. | | 1,42,500 | | | | |
| | வளவன் .. | | 37,750 | | | | |
| | | | 6,60,250 | | | | 6,60,250 |
| | இருப்பு கீ/கொ .. | | 6,60,250 | | | | |

பற்று **நேர்மைப் பங்கு முதல் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | இருப்பு கீ/இ .. | | 5,00,000 | | வங்கிக் க/கு .. | | 4,80,000 |
| | | | | | வளவன் .. | | 20,000 |
| | | | 5,00,000 | | | | 5,00,000 |
| | | | | | இருப்பு கீ/கொ .. | | 5,00,000 |

பற்று **5% கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | இருப்பு கீ/இ .. | | 2,00,000 | | வங்கிக் க/கு .. | | 1,42,500 |
| | | | | | கடனீட்டுப்பத்திரத் தள்ளுபடிக் க/கு | | 7,500 |
| | | | | | வளவன் .. | | 47,500 |
| | | | | | கடனீட்டுப்பத்திரத் தள்ளுபடிக் க/கு | | 2,500 |
| | | | 2,00,000 | | | | 2,00,000 |
| | | | | | இருப்பு கீ/கொ .. | | 2,00,000 |

பற்று **வளவன்** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | நேர்மைப் பங்கு முதல் க/கு .. | | 20,000 | | பங்கு ஒப்புறுதிக் கழிவுக் க/கு .. | | 25,000 |
| | 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் க/கு .. | | 47,500 | | கடனீட்டுப் பத்திர ஒப் புறுதிக் கழிவுக் க/கு .. | | 4,750 |
| | | | | | வங்கி .. | | 37,750 |
| | | | 67,500 | | | | 67,500 |

## பங்கு ஒப்புறுதிக் கழிவுக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | வளவன் .. | | 25,000 | | இருப்பு கீ/இ .. | | 25,000 |
| | இருப்பு கீ/கொ .. | | 25,000 | | | | |

## கடனீட்டுப் பத்திர ஒப்புறுதிக் கழிவுக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | வளவன் .. | | 4,750 | | இருப்பு கீ/இ .. | | 4,750 |
| | இருப்பு கீ/கொ .. | | 4,750 | | | | |

**கடனீட்டுப் பத்திர தள்ளுபடிக் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் க/கு .. | | 7,500 | | இருப்பு கீ/இ .. | | 10,000 |
| | 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் க/கு .. | | 2,500 | | | | |
| | | | 10,000 | | | | 10,000 |
| | இருப்பு கீ/கொ .. | | 10,000 | | | | |

## இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| **பங்கு முதல்:** | | **நடப்புச் சொத்துகள்:** | |
| ரூ. 100 வீதம் 5,000 நேர்மைப் பங்குகள் முழுத் தொகையும் செலுத்தப்பெற்றது .. | 5,00,000 | வங்கி .. | 6,60,250 |
| **பிணைப் பொறுப்புகள்:** | | **பல்வகைச் செலவினம்:** | |
| 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் | 2,00,000 | பங்கு ஒப்புறுதிக் கழிவு .. | 25,000 |
| | | கடனீட்டுப்பத்திர ஒப்புறுதிக் கழிவு | 4,750 |
| | | கடனீட்டுப் பத்திர தள்ளுபடி .. | 10,000 |
| | 7,00,000 | | 7,00,000 |

கடனீட்டுப்பத்திர ஒப்புறுதிக் கழிவுக் கணக்கையும் கடனீட்டுப்பத்திர தள்ளுபடிக் கணக்கையும் ஒன்றாகச் சேர்த்து ஒரே கணக்காக 'கடனீட்டுப்பத்திர வெளியீட்டுச் செலவுக் கணக்கு' (Cost of Issue of Debentures A/c) எனும் கணக்காகவும் காட்டலாம். இவ்வாறு ஒரே கணக்காகக் காட்டக் கீழ்க்கண்ட பதிவுகள் தேவை :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| கடனீட்டுப்பத்திர வெளியீட்டுச் செலவுக் க/கு | ப | 14,750 | |
| கடனீட்டுப்பத்திர ஒப்புறுதிக் கழிவுக் க/கு | | | 4,750 |
| கடனீட்டுப்பத்திர தள்ளுபடிக் க/கு | | | 10,000 |
| (கடனீட்டுப்பத்திர ஒப்புறுதிக் கழிவுக் கணக்கையும் தள்ளுபடிக் கணக்கையும் கடனீட்டுப்பத்திர வெளியீட்டுச் செலவுக் கணக்கிற்கு மாற்ற.) | | | |

**எடுத்துக்காட்டு 59**

ஒரு கம்பெனி ரூ. 100 மதிப்புள்ள 1,000 நேர்மைப் பங்குகளை 10 சதவீதம் முனைமத்தில் வெளியிட்டது. சேரன் 400 பங்குகளையும், சோழன் 600 பங்குகளையும் ஒப்புறுதி செய்தனர். வெளியீட்டு விலை மீது 4 சதவீதம் ஒப்புறுதிக் கழிவு அவர்கட்குத் தரவேண்டியது என்று ஒப்புக் கொள்ளப்பட்டது.

பொதுமக்களிடமிருந்து 700 பங்குகள் வேண்டி விண்ணப்பங்கள் வந்தன. இவற்றில் சேரன் குறியிட்ட விண்ணப்பங்கள் 250, சோழன் குறியிட்டு இருந்தவை 350.

ஒப்புறுதிப் பொறுப்புகள் முழுமையாகத் தீர்க்கப்பட்டன என்று கொண்டு, வேண்டிய குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக :

**விடை :**

குறிப்பேட்டுப் பதிவுகளைத் தரும் முன்னர் வேண்டிய விவரங்களைப் பின்கண்ட முறையில் பெறலாம் :

(1) மொத்தம் குறியிடப்பட்ட விண்ணப்பங்கள் :

| | | | |
|---|---|---|---|
| சேரன் | = | 250 | பங்குகள் |
| சோழன் | = | 350 | ,, |
| மொத்தம் | = | 600 | பங்குகள் |

(2) குறியிடப்படா விண்ணப்பங்கள் :

| | | | |
|---|---|---|---|
| மொத்தம் வந்த விண்ணப்பங்கள் | = | 700 | பங்குகள் |
| கழி : | | | |
| குறியிடப்பட்ட விண்ணப்பங்கள் | = | 600 | ,, |
| மொத்தம் குறியிடப்படா விண்ணப்பங்கள் | = | 100 | பங்குகள் |

(3) பொதுமக்களிடமிருந்து நேரிடையாகக் கம்பெனி பெற்ற இக் குறியிடப்படா விண்ணப்பங்களின் பயனை ஒப்புறுதியர் இருவருக்கும் வழங்கவேண்டும். பின்னரே இவர்களின் மொத்த பொறுப்பினை உணர வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| மொத்தம் வெளியிட்ட விண்ணப்பங்கள் | = | 1000 | பங்குகள் |
| கழி : | | | |
| குறியிடப்படா பங்குகள் | = | 100 | ,, |
| மொத்த பொறுப்பு | = | 900 | பங்குகள் |

(4) தான் எடுத்துக்கொண்ட ஒப்புறுதி வீதத்தில் அம் மொத்த பொறுப்பை இப்பொழுது பிரிக்கவேண் டும் :

சேரன் : சோழன் = 400 : 600

அதாவது, இப் பொறுப்பினைச் சேரனும், சோழனும் 2 : 3

என்ற வீதத்தில் பிரித்துக் கொள்ளவேண்டும்.

| | |
|---|---|
| சேரனின் மொத்த பொறுப்பு : (900 × 2/5) | 360 பங்குகள் |
| சோழனின் மொத்த பொறுப்பு : (900 × 3/5) | 540 ,, |

(5) இப்பொழுது மொத்த பொறுப்பிலிருந்து குறியிடப் பட்ட விண்ணப்பங்களைக் கழித்தால் அவர்கள் இன்னும் ஏற்கவேண்டிய நிகர பொறுப்புத் தெரியும்.

| | | சேரன் | | சோழன் | |
|---|---|---|---|---|---|
| மொத்த பொறுப்பு (4-ல் உள்ளபடி) | = | 360 | பங்குகள் | 540 | பங்குகள் |
| கழி : குறியிடப்பட்ட விண்ணப்பங்கள் | = | 250 | ,, | 350 | ,, |
| நிகர பொறுப்பு | = | 110 | ,, | 190 | ,, |

(6) இப்பொழுது ஒப்புறுதியருக்குச் சேரவேண்டிய ஒப் புறுதிக் கழிவை வெளியீட்டு விலையில் கணக்கிட வேண்டும்.

சேரனுக்குச் சேர வேண்டிய ஒப்புறுதிக் கழிவு :
ஒன்று ரூ. 100 வீதம் 400 பங்குகள் மீது 10 சதவீதம் முனைமத்தில்
= (40,000 + ரூ. 4,000) × 4/100
= 44,000 × 4/100 = ரூ. 1,760

சோழனுக்குச் சேரவேண்டிய ஒப்புறுதிக் கழிவு :
ஒன்று ரூ. 100 வீதம் 600 பங்குகள் மீது 10 சதவீதம் முனைமத்தில்
= (ரூ. 60,000 + ரூ. 6,000) × 4/100
= 66,000 × 4/100 = ரூ. 2,640

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | வங்கிக் கணக்கு ப | | 77,000 | |
| | நேர்மைப் பங்குமுதல் கணக்கு | | | 70,000 |
| | பங்கு முனைமக் கணக்கு | | | 7,000 |
| | (ரூ. 100 வீதம் 10 சத வீதம் முனைமத்தில் 700 பங்குகளுக்கான விண்ணப்பங்கள் பொதுமக்களிடமிருந்து பெற்றது.) | | | |
| | சேரன் ப | | 12,100 | |
| | சோழன் ப | | 20,900 | |
| | நேர்மைப் பங்குமுதல் கணக்கு | | | 30,000 |
| | பங்கு முனைமக் கணக்கு | | | 3,000 |
| | (சேரன் 110 பங்குகட்கும், சோழன் 190 பங்குகட்கும் பொறுப்பேற்க வேண்டியது.) | | | |
| | பங்கு ஒப்புறுதிக் கழிவுக் கணக்கு ப | | 4,400 | |
| | சேரன் | | | 1,760 |
| | சோழன் | | | 2,640 |
| | (சேரனுக்கும், சோழனுக்கும் சேரவேண்டிய ஒப்புறுதிக் கழிவு.) | | | |
| | வங்கிக் கணக்கு ப | | 28,600 | |
| | சேரன் | | | 10,340 |
| | சோழன் | | | 18,260 |
| | (சேரனிடமிருந்தும் சோழனிடமிருந்தும் ஒப்புறுதிக் கழிவுத் தொகை போக, மீதிப் பொறுப்புத் தொகையைப் பெற்றது.) | | | |

**பகுதி ஒப்புறுதி** (Partial Underwriting)

பல வேளைகளில் கம்பெனியின் பங்குகள் அனைத்தும் ஒப்புறுதியாளர்களால் ஒப்புறுதி செய்யப்படுவதில்லை. எடுத்துக் காட்டாக, ஒரு கம்பெனி 20,000 பங்குகளை வெளியிடின் அதில் 15,000 பங்குகளை மட்டில் ஒப்புறுதியாளர்கள் ஒப்புறுதி செய்யலாம். இதனைப் 'பகுதி ஒப்புறுதி' (Partial Underwriting) செய்தல் என்கிறோம். அந் நிலையில் ஒப்புறுதி செய்யப்படாத பங்குகளை, அவற்றை வெளியிடும் கம்பெனியே ஒப்புறுதி செய்வதாகக் கருத வேண்டும். மேற்சொன்ன எடுத்துக்காட்டில், 12,000 பங்குகட்காகக் குறியிட்ட விண்ணப்பங்கள் வருமாயின், அப்பொழுது ஒப்புறுதியாளர்களின் பொறுப்பு 3,000 பங்குகளாகும் (15,000—12,000). இவ்வாறாக, வெளியிட்ட பங்குகளில் சில ஒப்புறுதி செய்யப்படா நிலையில், அனைத்துப் பங்குகட்கும் விண்ணப்பங்கள் கம்பெனி பெறுவதாக வைத்துக்கொள்வோம். இதில் குறியிட்ட விண்ணப்பங்கள் ஒப்புறுதி செய்யப்பட்ட பங்குகளின் எண்ணிக்கைக்குக் குறைவாக இருப்பினும் ஒப்புறுதியாளர் பொறுப்பு ஒன்றினையும் ஏற்கத் தேவையில்லை.

பகுதி ஒப்புறுதி செய்வதில், முதலில் குறியிடப்பெறு விண்ணப்பங்களில் ஒப்புறுதியாளர்களின் பங்குகளைக் கணக்கிட வேண்டும். பின்னர், ஒப்புறுதி செய்யப்பட்ட பங்குகளிலிருந்து இவை கழிக்கப்படவேண்டும். இப்பொழுது மொத்த பொறுப்பு கிடைக்கிறது. ஒப்புறுதியாளரின் பொறுப்பிலிருந்தும் குறியிடப்பட்ட விண்ணப்பங்களைக் கழித்தால் ஒவ்வொருவரும் ஏற்கவேண்டிய பொறுப்பினை உணரலாம்.

ஒரு ஒப்புறுதியாளர் குறியிட்ட விண்ணப்பங்கள் அவர் ஏற்ற பொறுப்பினும் அதிகமாக இருப்பின், அவ்வெச்சம் (மிகுதி) மற்ற ஒப்புறுதியாளர்களுக்கு அவர்களின் மொத்த பொறுப்பு வீதத்தில் பிரித்துக் கொடுக்கப்படவேண்டும்.

**எடுத்துக்காட்டு 60**

ஒரு கம்பெனி பங்கு ஒன்று ரூ. 10 வீதம் 20,000 பங்குகளை 10 சதவீதம் முனைமத்தில் வெளியிட்டது. கம்பன் 10,000 பங்குகளையும் கபிலன் 6,000 பங்குகளையும் ஒப்புறுதி செய்தனர்.

16,000 பங்குகள் வேண்டி விண்ணப்பங்கள் வந்தன. இவற்றில் கம்பன் 6,000 பங்குகட்கான விண்ணப்பங்களையும், கபிலன் 4,000 பங்குகட்கான விண்ணப்பங்களையும் குறியிட்டிருந்தனர். ஒப்புறுதியாளர்களின் பொறுப்புகளைக் கணக்கிடுக.

**விடை :**

(1) மேற்சொன்ன எடுத்துக்காட்டில், கம்பெனி வெளியிட்ட 20,000 பங்குகளில் 4,000 பங்குகள் ஒப்புறுதி செய்யப்படவில்லை. எனவே, ஒப்புறுதி செய்யப்பெறு இப் பங்குகளைக் கம்பெனியே ஒப்புறுதி செய்ததாகக் கொள்வோம்.

இவர்கள் ஏற்றுக்கொண்ட பொறுப்பு விகிதத்தை இப்பொழுது அறியலாம்.

| | | |
|---|---|---|
| கம்பன் ஒப்புறுதி செய்தது | 10,000 | பங்குகள் |
| கபிலன் ஒப்புறுதி செய்தது | 6,000 | ,, |
| கம்பெனி ஒப்புறுதி செய்தது | 4,000 | ,, |
| மொத்தம் | 20,000 | ,, |

விகிதம் : 10 : 6 : 4 அல்லது 5 : 3 :2

(2) மொத்தம் பெற்ற விண்ணப்பங்கள் 16,000 பங்குகள்

**கழி :**

குறியிடப்பட்ட விண்ணப்பங்கள் :

| | | | |
|---|---|---|---|
| கம்பன் | 6,000 | | |
| கபிலன் | 4,000 | 10,000 | ,, |

மொத்தம் குறியிடப் பெறு விண்ணப்பங்கள் 6,000 பங்குகள்

| | கம்பன் | | கபிலன் | |
|---|---|---|---|---|
| மொத்த பொறுப்பு | 10,000 | பங்குகள் | 6,000 | பங்குகள் |
| **கழி :** | | | | |
| குறியிடப்பெறு விண்ணப்பங்கள் (5 : 3 வீதத்தில்) | 3,750 | ,, | 2,250 | ,, |
| | 6,250 | ,, | 3,750 | ,, |
| **கழி :** | | | | |
| குறியிடப்பட்ட விண்ணப்பங்கள் | 6,000 | ,, | 4,000 | ,, |
| | −250 | ,, | +250 | ,, |

கபிலனின் மிகுதிப் பங்குகள் கம்பனுக்கு மாற்றப்படுகிறது.

—250 +250

நிகர பொறுப்பு ஒன்றுமில்லை.

**நிலை ஒப்புறுதியில் கணக்குப் பதிதல்**

நிலை ஒப்புறுதி பற்றி முன்னரே கூறியிருக்கிறோம். அதாவது, நிலை ஒப்புறுதிச் செய்யப்படும் பங்குகளை ஒப்புறுதியாளர்களுக்குப் பொதுமக்களுக்கு வழங்கும் முன்பாக ஒதுக்கவேண்டுமென்று கூறியிருக்கிறோம். எனவே, ஒரு ஒப்புறுதியாளர் தான் ஏற்கவேண்டிய சாதாரண ஒப்புறுதிப் பொறுப்பினை நிலைப் பொறுப்பில் சரிக்கட்டிக் கொள்ளக்கூடாது. போதிய பங்குகட்கு விண்ணப்பங்கள் வரவில்லையெனில், நிலை ஒப்புறுதி செய்யப்பட்ட பங்குகளை வாங்குவதுடன், சாதாரணமாக ஒப்புறுதிச் செய்த பங்குகளையும் வாங்கியாக வேண்டும். எடுத்துக்காட்டாக, ஒருவர் கம்பெனி வெளியிடும் 5,000 பங்குகளில் 4,000 பங்குகளை ஒப்புறுதி செய்வதாகவும், 500 பங்குகளை நிலை ஒப்புறுதிச் செய்வதாகவும் கொள்வோம். இப்பொழுது கம்பெனிக்கு 4,900 பங்குகள் வேண்டி வந்த விண்ணப்பங்களில் குறியிடப்பட்ட விண்ணப்பங்கள் 3,800 பங்குகட்காகுமென்றும் கொள்வோம். ஒப்புறுதியரின் பொறுப்பு கீழ்க்கண்டவாறு தீர்மானிக்கப்படும்.

| | | |
|---|---|---|
| ஒப்புறுதி செய்த பங்குகள் | 4,000 | பங்குகள் |
| **கழி :** | | |
| குறியிடப்பட்ட விண்ணப்பங்கள் | 3,800 | ,, |
| பொறுப்பேற்க வேண்டியது | 200 | ,, |
| **கூட்டு :** | | |
| நிலை ஒப்புறுதி செய்யப்பட்ட பங்குகள் | 500 | ,, |
| ஒப்புறுதியரின் மொத்த பொறுப்பு | 700 | ,, |

**எடுத்துக்காட்டு 61**

ஒரு கம்பெனி வெளியிட்ட 25,000 பங்குகள் கீழ்க்கண்டவாறு ஒப்புறுதி செய்யப்பட்டன.

| | | |
|---|---|---|
| புகழேந்தி | 12,500 | பங்குகள் |
| பூங்குன்றன் | 7,500 | ,, |
| பொழிலன் | 5,000 | ,, |

நிலை ஒப்புறுதிக்காக (Firm underwriting) ஒப்புறுதியாளர்கள் கீழ்க்கண்டவாறு விண்ணப்பம் செய்தனர்.

| | | |
|---|---|---|
| புகழேந்தி | 2,500 | பங்குகள் |
| பூங்குன்றன் | 1,000 | ,, |
| பொழிலன் | 3,500 | ,, |

நிலை ஒப்புறுதிச் செய்யப்பட்ட பங்குகள் நீங்கலாக, ஆனால், குறியிடப்பட்ட விண்ணப்பங்கள் உள்பட, மொத்தம் 12,000 பங்குகட்கு விண்ணப்பங்கள் வந்தன. குறியிடப்பட்ட விண்ணப்பங்கள் கீழ்க்கண்டவாறு இருந்தன.

| | | |
|---|---|---|
| புகழேந்தி | 2,000 | பங்குகள் |
| பூங்குன்றன் | 4,550 | ,, |
| பொழிலன் | 1,450 | ,, |

ஒப்புறுதியர்களின் பொறுப்பினைக் கணக்கிடுக.

**விடை :**

மொத்தம் குறியிடப்பட்ட விண்ணப்பங்கள் :

| | | |
|---|---|---|
| புகழேந்தி | 2,000 | பங்குகள் |
| பூங்குன்றன் | 4,550 | ,, |
| பொழிலன் | 1,450 | ,, |
| மொத்தம் | 8,000 | பங்குகள் |

இப்பொழுது மொத்தம் குறியிடப்பெறு பங்குகளைக் கணக்கிடுவோம்.

நிலை ஒப்புறுதி செய்யப்பட்ட பங்குகளுடன் குறியிடப்பட்ட பங்குகள் மொத்தம் வந்தவை :

| | | |
|---|---|---|
| (அ) நிலை ஒப்புறுதி நீங்கலாக | 12,000 | பங்குகள் |
| (ஆ) நிலை ஒப்புறுதி | 7,000 | ,, |
| மொத்தம் பெற்றவை | 19,000 | ,, |
| கழி : | | |
| மொத்தம் குறியிடப்பட்டவை | 8,000 | ,, |
| மொத்தம் குறியிடப்பெறா விண்ணப்பங்கள் | 11,000 | ,, |

| | புகழேந்தி | பூங்குன்றன் | பொழிலன் | மொத்தம் |
|---|---|---|---|---|
| மொத்த பொறுப்பு | 12,500 | 7,500 | 5,000 | 25,000 |
| **கழி:** | | | | |
| குறியிடப்பெறா விண்ணப்பங்கள் (5 : 3 : 2 வீதத்தில்) | 5,500 | 3,300 | 2,200 | 11,000 |
| | 7,000 | 4,200 | 2,800 | 14,000 |
| **கழி:** | | | | |
| குறியிடப்பட்ட விண்ணப்பங்கள் | 2,000 | 4,550 | 1,450 | 8,000 |
| | 5,000 | +350 | 1,350 | 6,000 |
| ஒப்புறுதி செய்யப்பட்ட அளவினும், பூங்குன்றனின் பகுதி மிகுதியாக இருக்கிறது. இதனை மீதி இருவருக்கும் மொத்த பொறுப்பு வீதத்தில் (5 : 2) பிரித்துக் கொடுக்கலாம் : | 240 | –350 | 100 | — |

| | புகழேந்தி | பூங்குன்றன் | பொழிலன் | மொத்தம் |
|---|---|---|---|---|
| பொதுமக்கள் வாங்க முன்வராப் பங்குகள் மீதான பொறுப்பு | 4,750 | — | 1,250 | 6,000 |
| **கூட்டு :** | | | | |
| நிலை ஒப்புறுதி | 2,500 | 1,000 | 3,500 | 7,000 |
| கம்பெனியிடமிருந்து மொத்தம் பெற வேண்டிய பங்குகள் | 7,250 | 1,000 | 4,750 | 13,000 |

## பயிற்சி

**கடனீட்டுப் பத்திர வெளியீடு** (Issue of Debentures)

1. ஒரு கம்பெனி ஒன்று ரூ. 100 மதிப்புள்ள 5 சதவீதம் 1,000 கடனீட்டுப் பத்திரங்களை வெளியிட்டது. தொகை கீழ்க்கண்டவாறு செலுத்தப்பட வேண்டும் :

| | ரூ. |
|---|---|
| விண்ணப்பத்தின்போழ்து | 20 |
| ஒதுக்கீட்டின்போழ்து | 30 |
| அழைப்பின்போழ்து | 50 (ஒதுக்கீட்டின் பின் நான்கு திங்கள் கழித்து.) |

அனைத்துக் கடனீட்டுப் பத்திரங்களுக்கும் விண்ணப்பங்கள் வர, ஒதுக்கப்பெற்றன. 100 கடனீட்டுப் பத்திரங்கள் வைத்துள்ள ஒருவர் முழுத் தொகையையும் ஒதுக்கலின்போழ்து செலுத்திவிட்டார். பணம் முழுதும் பெறப்பட்டதென்றும், முன்கூட்டிச் செலுத்திய கடனீட்டுப்பத்திர அழைப்புத்தொகை மீது ஆண்டு வட்டி 4 சதவீதம் செலுத்தவேண்டுமென்றும் கொண்டு குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக .

2. ஒரு கம்பெனி ரூ. 10,00,000 மதிப்புள்ள 5 சதவீதம் அடைமான கடனீட்டுப் பத்திரங்களை 96% வெளியிடுகிறது.

வேருெரு கம்பெனி ரூ. 10,00,000 மதிப்புள்ள 4 சதவீதம் அடைமானக் கடனீட்டுப் பத்திரங்களை முகமதிப்பில் வெளியிடு கிறது (இவை 10 ஆண்டுகட்குப் பின் 105 சதவீதத்தில் மீட்கப் பட வேண்டியவை). இவ்விரு கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்புகளிலும் இவை எவ்வாறு காண்பிக்கப்பெறும்?

(C. A. Inter, 1959)

3. வரையறு பொறுப்புடைய ஒரு கம்பெனி ரூ. 1,00,000-த்திற்கு கடனீட்டுப் பத்திரங்களை வெளியிட்டது.

| | | |
|---|---|---|
| (i) | 90 சதவீதத்தில் ரொக்கத்திற்காக வெளியிட்டது | ரூ. 50,000(பெயரளவு மதிப்பில்) |
| (ii) | முதலின செலவினங்கட்காக (capital expenditure) கடனீந்தோருக்குத் தரவேண்டிய ரூ. 20,000-த்தைத் தீர்க்கும் வகையில் வெளியிட்டது. | 25,000 ,, |
| (iii) | துணைப்பிணையமாக வங்கிகட்கு வழங்கியது. | 25,000 ,, |

மேலே சொல்லப்பட்ட (i) (ii) ஆகியவை 10 ஆண்டு இறுதியில் பெயரளவு மதிப்பில் மீட்கப்பட வேண்டியவை. இருப்பு நிலைக் குறிப்பில் இவை எவ்வாறு காண்பிக்கப்பெறும்?

(G. D. A.)

4. ஒரு கம்பெனி ரூ. 1,00,000 மதிப்புள்ள கடனீட்டுப் பத்திரங்களை 6 சதவீதம் தள்ளுபடியில் வெளியிட்டது. ஒவ்வோராண்டும் குலுக்குச் சீட்டு மூலமாக எடுத்து ரூ. 20,000 மதிப்புள்ள கடனீட்டுப் பத்திரங்களை மீட்கவேண்டும். கடனீட்டுப் பத்திரத் தள்ளுபடியை எவ்வாறு கணக்கில் எழுதவேண்டும்?

கம்பெனியின் ஏட்டில் கடனீட்டுப் பத்திரங்கள் இருக்கும் காலம்வரை கடனீட்டுப் பத்திர தள்ளுபடிக் கணக்கைக் காட்டுக .

(C. A. Inter, Nov. 1964)

5. ஒரு கம்பெனி ரூ. 100 மதிப்புடைய 2,000 ஆறு சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை 10 சதவீதம் தள்ளுபடியில் வெளியிட்டது. வெளியிட்டதிலான செலவு ரூ. 2,000. இக் கடனீட்டுப் பத்திரங்கள் 5 ஆண்டுகளில் மீட்கப்படவேண்டும். கடனீட்டுப்பத்திரத் தள்ளுபடியையும், கடனீட்டுப் பத்திர வெளியீட்டுச் செலவையும் ஒவ்வோராண்டும் நீக்கும் முறையைக் காட்டுக.

6. கீழ்க்கண்ட நிலைகளில் குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக :

(அ) ஒரு கம்பெனி ரூ. 1,00,000 மதிப்புள்ள 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களைப் பெயரளவு மதிப்பில் வெளியிட்டால்;

(ஆ) ஒரு கம்பெனி ரூ. 1,00,000 மதிப்புள்ள 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களைப் பெயரளவு மதிப்பில் வெளியிட்டு 10 சதவீதம் முனைமத்தில் மீட்க வேண்டியிருப்பின்;

(இ) ஒரு கம்பெனி ரூ. 1,00,000 மதிப்புள்ள 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை 5 சதவீதம் தள்ளுபடியில் வெளியிட்டு 5 சதவீதம் முனைமத்தில் மீட்க வேண்டியிருப்பின்;

(ஈ) ஒரு கம்பெனி ரூ. 1,00,000 மதிப்புள்ள 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை 10 சதவீதம் தள்ளுபடியில் வெளியிட்டுப் பெயரளவு மதிப்பில் மீட்கவேண்டியிருப்பின்;

(உ) ஒரு கம்பெனி ரூ. 1,00,000 மதிப்புள்ள 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களைப் பெயரளவு மதிப்பில் வெளியிட்டு 10 சதவீதம் முனைமத்தில் மீட்கவேண்டியிருப்பின்;

(ஊ) ஒரு கம்பெனி ரூ. 1,00,000 மதிப்புள்ள 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை 10 சதவீதம் முனைமத்தில் வெளியிட்டுப் பெயரளவு மதிப்பில் மீட்கவேண்டியிருப்பின்.

6. (a) 1962 ஜூலை 2-ல் எமரால்டு கம்பெனி (Emerald Company) (வரையறு பொறுப்புடையது) ரூ. 10 மதிப்புடைய 10,000

6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை ரூ. 9.50 வீதம் வெளியிட்டது. இவை 1982 சூன் 30-ல் பெயரளவு மதிப்பில் மீட்கப்படவேண்டும்.

கடனீட்டுப் பத்திரம் ஒன்றுக்கு ரூ. 3 வீதம் விண்ணப்பத்துடன் செலுத்தவேண்டும். மீதியை ஒதுக்கீட்டின்போழ்து செலுத்தவேண்டும்.

1962 செப்டம்பர் 1 முதல், பெயரளவு மதிப்பில் கணக்கிட்டுத் திசம்பர் 31-லும், சூன் 30-லும் அரையாண்டு வட்டி செலுத்தப்பட வேண்டும்.

15,000 கடனீட்டுப் பத்திரங்கட்கான விண்ணப்பங்கள் வந்தன. விகிதப்படி அவை ஒதுக்கப்பட்டு ஒதுக்கீட்டின்போழ்து செலுத்துவதற்குக் கூடுதலாகப் பெற்ற விண்ணப்பத் தொகை பயன்படுத்தப்பட்டது. 1962 ஆகஸ்ட் 31-ல் இவை ஒதுக்கப்பட்டன. 1962 செப்டம்பர் 7-ல் ஒதுக்கீட்டின்போழ்து பெற வேண்டிய தொகை அனைத்தும் பெறப்பட்டது.

கடனீட்டுப் பத்திரங்கள் நிலுவையிலிருக்கும்வரை தள்ளுபடியைச் சம ஆண்டுத் தவணைகளில் நீக்கப்பட வேண்டுமென்று கொண்டு,

(அ) கடனீட்டுப்பத்திர வெளியீட்டிற்கான நடவடிக்கைகளைப் பதியத் தேவையான பேரேட்டுக் கணக்குகளையும் தந்து,

(ஆ) 1963 சூன் 30-ல் முடியும் ஆண்டிற்கான இலாப-நட்டக் கணக்கில் பற்றுவைக்க வேண்டிய தொகையையும் காட்டுக.

(C. A. Inter, 1964)

## கடனீட்டுப்பத்திர மீட்பு

7. 1968 சனவரி 1-ல் கல்கத்தா வாணிகக் கம்பெனி (வரையறு பொறுப்புடையது) ரூ. 100 மதிப்புள்ள 4,000 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிட்டது. இவற்றை 10 சதவீதம் முனைமத்தில் 5 ஆண்டிறுதியில் மீட்கவேண்டும். இதற்காகக் கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி ஒன்று ஏற்படுத்தப்பட்டது. முதலீட்டின்மீது 5 சதவீதம் ஆண்டுவட்டி கிடைக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. ஒவ்வோராண்டும் 0.1809748

முதலீடு செய்து, அதனின்றும் 5 சதவீதம் ஆண்டுவட்டி கிடைக்கு மாயின், 5 ஆண்டுகளில் அது ரூ. 1 ஆகும் எனக் கழிவுநிதி வாய்பாடு (Sinking Fund Table) உணர்த்துகிறது.

ஐந்தாம் ஆண்டிறுதியில் முதலீடுகள் 97 சதவீதத்தில் விற்கப்பட்டுக் கடனீட்டுப் பத்திரங்கள் மீட்கப்பட்டனவென்று கொண்டு பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்கவும்.

8. X Y லிமிடெட் ரூ. 1,00,000 ஒதுக்குவதற்காகக் கழிவு நிதி ஒன்றை ஏற்படுத்தவேண்டியுள்ளது. ஒவ்வோராண்டும் இதற்கென ஒதுக்கவேண்டிய தொகை ரூ. 9,000. இதனைத் தனது தொழிலுக்கு வெளியே 5 சதவீதம் ஆண்டுவட்டி கிடைக்கக்கூடிய வகையில் ஒவ்வோராண்டிறுதியிலும் முதலீடு செய்கிறது.

முதல் மூன்று ஆண்டுகட்குக் கீழ்க்கண்ட பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்கவும் :

அ. கழிவு நிதிக் கணக்கு;

ஆ. கழிவு நிதி முதலீட்டுக் கணக்கு.

கழிவு நிதியில் முழுத் தொகையும் சேரும்பொழுது கீழ்க்கண்ட நோக்கங்கட்காக ஏற்படுத்தப்பட்டிருப்பின், அது எவ்வாறு மீட்கப்பெறும் என்பதையும் காட்டுக :

(1) சொத்து ஒன்றினைப் புதுப்பிக்கும் நோக்கம்;

(2) பொறுப்பு ஒன்றினை மீட்கும் நோக்கம்.

(I. C. W. A. I. July, 1970)

9. 'A, B, C Limited' 1966 ஏப்ரல் 1ஆம் நாளில் ரூ. 3,00,000 மதிப்புள்ள 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை நிலுவையில் வைத்திருக்கிறது. அந் நாளில் கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி ரூ. 2,50,000-த்தைக் காட்டியது. இது ரூ. 2,95,000 மதிப்புள்ள இந்திய அரசின் (1972) 3 சதவீதம் கடன் பத்திரங்களில் முதலீடு செய்யப்பட்டிருக்கிறது. கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக்கு ஒவ்வோராண்டும் செலுத்தவேண்டிய தொகை ரூ. 41,150.

1967 மார்ச் 31-ல் வங்கியில் ரூ. 70,000 இருந்தது. அந் நாளில் முதலீட்டின்மீது வட்டி பெறப்பட்டது. முதலீடுகள்

அனைத்தும் 83 சதவீதத்தில் விற்கப்பட்டுக் கடனீட்டுப் பத்திரங்கள் செலுத்தப்பட்டன.

1967 மார்ச் 31-ல் முடியும் ஆண்டிற்கான பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்கவும்.

(I. C. W. A. I, July, 1967)

10. 1961 சனவரி 1-ல் மெட்டல் புராடெக்ஸ் லிமிட்டெட் (Metal Products Ltd.) 5 ஆண்டிறுதியில் மீட்கக்கூடிய ரூ. 1,00,000-க்கான கடனீட்டுப் பத்திரங்களை வெளியிட்டது. இதற்காகக் கழிவு நிதி ஒன்று ஏற்படுத்தி, வரி நீங்கிய (Tax-Free) கடன் பத்திரங்களில் முதலீடு செய்யவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

அடக்கவிலை மீது 5 சதவீதம் முதலீடுகளில் வட்டி பெறப்பட்டதென்றும், பெறப்பட்ட வட்டி உடனடியாக மீண்டும் முதலீடு செய்யப்பட்டதென்றும், ஐந்தாண்டிறுதியில் ரூ. 300 நட்டத்தில் முதலீடுகள் விற்கப்பட்டனவென்றும் கொண்டு பேரேட்டுக் கணக்குகளை ஐந்தாண்டுகட்குத் தயாரிக்க.

ஒவ்வோராண்டும் ரூ. 0.180975, 5 சதவீதம் கூட்டுவட்டியில் முதலீடு செய்யப்பட்டுவரின், 5 ஆண்டு இறுதியில் ரூ. 1 கிடைக்குமென்று வாய்பாடு கூறுகிறது.

(I. C. W. A. I, July, 1966)

11. எக்ஸ்போர்ட் இண்டஸ்ட்ரியல் லிமிட்டெடின் (Export Industries Ltd.) கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி ரூ. 16,000-த்தைக் காட்டியது. இது ரூ. 20,000 பெயரளவு மதிப்பில் முதலீடு செய்யப்பட்டிருக்கிறது. கடனீட்டுப் பத்திரங்கள் ரூ. 50,000-திற்கு இருக்கின்றன. ரூ. 10,000 மதிப்புள்ள கடனீட்டுப்பத்திரங்களை 1 சதவீதம் முனைமத்தில் மீட்கும் நோக்குடன் கம்பெனி ரூ. 12,000 பெயரளவு மதிப்புள்ள முதலீடுகளை ரூ. 84-ல் விற்றது. மேற்கண்ட நடவடிக்கைகளைப் பதிய பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்கவும். (வட்டியையும் தரகுத் தொகையையும் விட்டுவிடுக.)

(I.C.W.A.I. Jan. 1966)

12. கெஸ்ட் லிமிட்டெட் (Guest Ltd.) ரூ. 10,00,000 மதிப்புள்ள 1963 சனவரி 1-லோ அல்லது அதற்குப் பின்னரோ 102 % வீதம் மீட்கக்கூடிய கடனீட்டுப் பத்திரங்களை

வைத்துள்ளது. சூன் 30-லும், திசம்பர் 31-லும் அரையாண்டு வட்டி செலுத்தப்பட்டிருக்கிறது.

கம்பெனியின் இலாபத்திலிருந்து கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக்கு ஒவ்வோராண்டும் தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. காப்பு நிதிக்குச் சமமாக முதலீடுகள் அடக்கவிலையில் வாங்கப்பட்டிருக்கின்றன. 1962 திசம்பர் 31-ல் கீழ்க்கண்டவாறு கணக்குகள் இருந்தன:

| | | ரூ. |
|---|---|---|
| (1) | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி | 9,50,000 |
| (2) | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீடு | 9,50,000 |
| (3) | பங்கு முனைமம் | 1,50,000 |
| (4) | இலாப-நட்டக் கணக்கு (வ) | 30,000 |
| (5) | பொதுக்காப்பு | 5,00,000 |
| (6) | வங்கியிருப்பு | 2,00,000 |

1963 சனவரி 1-ல் கடனீட்டுப் பத்திரங்களை மீட்க இயக்குநர்கள் முடிவு செய்தார்கள். முதலீடுகள் ரூ. 9,60,000-ற்கு விற்கப்பட்டன.

தேவையான பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்கவும்.

(Institute of Company Secretaries of India Exam.)

13. என்டர்பிரைஸ் மேனுபேக்சரிங் கம்பெனி லிமிடெட்டின் (Enterprise Manufacturing Company Ltd.) ஏடுகளில் 1965 சூன் 30-ல் கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி ரூ. 75,000 இருப்புக் காட்டியது. அதற்கான முதலீடுகள் கீழ்வருமாறு இருந்தன :

ரூ. 51,000 ஐந்து சதவீதம் போர்க்கடன் (war loan) ரூ. 50,000-ற்கு வாங்கியது.

ரூ. 25,200 ஐந்து சதவீதம் நகராட்சிப் பத்திரங்கள் ரூ. 25,000-ற்கு வாங்கியது.

1965 திசம்பர் 31-ல் வங்கியில் ரூ. 9,000 இருந்தது. அதே நாளில் மேற்சொல்லப்பட்ட முதலீடுகளை விற்றதில் பெற்ற தொகையை வங்கியில் செலுத்தியது. (போர்க்கடன் ரூ. 101 வீதமும், நகராட்சிப் பத்திரம் ரூ. 98½ வீதமும் விற்கப்பட்டன.) இவ்வனைத்துக் கடனீட்டுப் பத்திரங்களையும் வைத்திருந்த நாராயணதாஸ் என்பவருக்குக் கடனீட்டுப் பத்திரங்கள் அனைத்திற்குமான ஒரு காசோலை விடுத்துச் செலுத்தப்பட்டது.

மேற்கண்ட நடவடிக்கைகளைப் பேரேட்டுக் கணக்குகளில் பதிந்து காட்டுக.

(Bombay University)

14. வரையறு பொறுப்புடைய ஒரு கம்பெனி 1958 திசம்பர் 31-ல் ரூ. 5,00,000 மதிப்புள்ள 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை (1955—1959) 101 சதவீதத்தில் மீட்கவேண்டியிருந்தது. கடனீட்டுப்பத்திர மீட்புநிதியில் ரூ. 4,60,000 இருந்தது. 1959 சனவரி 1-ல் கம்பெனி கீழ்க்கண்டவாறு தீர்மானித்தது.

(1) 1970 திசம்பரில் 105 சதவீதத்தில் மீட்கக்கூடிய 4 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களாக மாற்றிக்கொள்ளும் விருப்புரிமையை (Option) இப்பொழுதுள்ள கடனீட்டுப் பத்திரதாரர்கட்கு வழங்குவது;

(2) மீதி ஏதேனும் இருப்பின் அவற்றை மீட்பது;

(3) ரொக்கத்திற்கு 102 சதவீதத்தில் அதற்கேற்ற பெயரளவு மதிப்பிற்கு 4% கடனீட்டுப் பத்திரங்களை வெளியிடுவது.

1959 மார்ச் 1-ல் ரூ. 3,50,000-த்திற்கான பழைய கடனீட்டுப் பத்திரதாரர்கள் புதிய கடனீட்டுப் பத்திரங்கட்கு மாற்றிக்கொள்ளத் தங்கள் விருப்புரிமையைத் தெரிவித்தனர். கம்பெனி பின்னர் மீதியுள்ள கடனீட்டுப் பத்திரங்களை ஒரு முதலீட்டுப் பொறுப்பாண்மை கம்பெனிக்கு (An Investment Trust) வெளியிட்டது. 1959 ஏப்ரல் 1-ல் இதற்கான ரொக்கம் முழுதும் பெறப்பட்டது.

மேற்கண்ட நடவடிக்கைகளையும், அதன் விளைவாகச் செய்ய வேண்டிய மாற்றத்திற்கான நடவடிக்கைகளையும் பதிய குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

15. ஒரு சர்க்கரை ஆலைக் கம்பெனி 1966 சனவரி 1-ல் ரூ. 2,00,000 மதிப்புடைய 10 ஆண்டுகளில் மீட்கக்கூடிய 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிட்டது. இவைகளை மீட்பதற்காகக் குவியாக் கழிவு நிதி (Non-Cumulative Sinking Fund) ஒன்றை ஏற்படுத்த முடிவு செய்தது. 5 ஆண்டுகட்குக் கம்பெனி கழிவு நிதிக்கு எடுத்துச் சென்ற தொகைகளும், முதலீடுகளும் வருமாறு :

**கழிவு நிதிக்கு எடுத்துச் சென்றது**

| | ரூ. |
|---|---|
| 1966 | 20,000 |
| 1967 | 20,000 |
| 1968 | 18,000 |
| 1969 | 15,000 |
| 1970 | ஒன்றுமில்லை. |

**முதலீடு செய்தது**

| | ரூ. |
|---|---|
| 1966 | 15,000 |
| 1967 | 27,000 |
| 1968 | ஒன்றுமில்லை |
| 1969 | 10,000 |
| 1970 | ஒன்றுமில்லை. |

கம்பெனியின் பேரேட்டில் கழிவு நிதிக் கணக்கையும், கழிவு நிதி முதலீட்டுக் கணக்கையும் 5 ஆண்டுகட்குத் தயாரிக்கவும். இம் முதலீடுகளினின்றும் பெறும் வருமானத்தை எவ்வகையில் பதிவு செய்யவேண்டுமென்பதையும் கூறுக.

(Agra, B. Com)

16. ஒரு கம்பெனி வெளிச் சந்தையில் கடனீட்டுப் பத்திரங்களை வாங்கி அதனை நீக்கவும் இதற்குத் தன்னுடைய இலாபத்தினைப் பயன்படுத்திக் கொள்ளவும், தன்னுடைய செயல்முறை விதிகளின்கீழ் அதிகாரம் பெற்றிருக்கிறது. இலாப-நட்டக் கணக்கு ரூ. 90,000 வரவிருப்பைக் காட்டுகிறது. கடனீட்டுப் பத்திரங்கள்

ரூ. 40,000-ற்கு இருக்கின்றன. வங்கியிருப்பு ரூ. 20,000 இருக்கிறது. கடனீட்டுப் பத்திரங்களை வாங்கி நீக்குவதற்கு ரூ. 9,000 செலவிடத் தீர்மானித்தது. அனைத்துக் கட்டணங்களும் உள்பட கடனீட்டுப் பத்திரங்களின் சந்தைவிலை 90 சதவீதம் ஆகும். தேவையான பேரேட்டுக் கணக்குகளைத் தருக.

(S. A. S. 1963)

17. வரையறு பொறுப்புடைய ஒரு கம்பெனி 1966 சனவரி 1-ல் ஒன்று ரூ. 1,00,000 மதிப்புள்ள 200, 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை ரூ. 950-ற்கு வெளியிட்டது. 3 ஆண்டுகட்குள் அப்பொழுதுள்ள கடனீட்டுப் பத்திரதாரர்கள் அவர்களது கடனீட்டுப் பத்திரங்களை ரூ. 100 மதிப்புள்ள 8 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளாக ரூ. 25 முனைமத்தில் மாற்றிக்கொள்ளும் விருப்புரிமையைப் பெற்றுள்ளனர். 1966 திசம்பர் 31-ல் கடனீட்டுப் பத்திரங்களின் மீது ஆண்டுவட்டி கூடியுள்ளது; இது இன்னும் செலுத்தப்படவில்லை. 20 கடனீட்டுப் பத்திரங்களை வைத்திருக்கும் ஒருவர் தன் விருப்புரிமையைப் பயன்படுத்திக் கொள்வதாகக் கம்பெனிக்கு அறிவித்தார்.

தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்பில் இடம்பெறும் கணக்குகளைக் காட்டுக.

(B. Com)

18. புதுவை மிதிவண்டிக் கம்பெனி ரூ. 100 மதிப்புள்ள 7 சதவீதம் 2,000 கடனீட்டுப் பத்திரங்களை வெளியிட்டது. அவற்றை மீட்கக் கழிவுநிதி ஒன்று ஏற்படுத்தப்பட்டது. வெளிச் சந்தையில் கடனீட்டுப் பத்திரங்களை வாங்கி நீக்கிக்கொள்ளும் உரிமையைக் கம்பெனி பெற்றிருக்கிறது. 1973 திசம்பர் 31-ல் 1,200 கடனீட்டுப் பத்திரங்கள் மீட்கப்பட வேண்டியிருந்தன. கழிவு நிதிக் கணக்கு ரூ. 80,000 வரவிருப்பைக் காட்டியது. இது 4 சதவீதம் ரூ. 95,000 பெயரளவு மதிப்புடைய அரசினர் கடனீட்டுப் பத்திரங்களில் முதலீடு செய்யப்பட்டிருந்தது.

சனவரி 5-ல் 92 சதவீதத்தில் 100 கடனீட்டுப் பத்திரங்களும், 95 சதவீதத்தில் 100 கடனீட்டுப் பத்திரங்களும் வாங்கப்பட்டு நீக்கப்பட்டன.

தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளையும், பேரேட்டுக் கணக்குகளையும் தயார் செய்க.

19. 1967 சூன் 30-ல் மார்க்கதரிசி கம்பெனி லிமிட்டெடின் ஏடுகளில் கீழ்க்கண்ட இருப்புகள் காணப்பட்டன :

| | ரூ. |
|---|---|
| 6 சதவீதம் முதல் அடைமானக் கடனீட்டுப் பத்திரங்கள் | 4,00,000 |
| கடனீட்டுப்பத்திர மீட்புநிதி | 4,26,160 |
| ரூ. 2,40,000 - $4\frac{3}{4}$ சதவீதம் அரசினர் கடன், 1970 | 2,42,520 |
| ரூ. 1,90,000 $4\frac{1}{2}$ சதவீதம் அரசினர் கடன், 1978—83 | 1,83,640 |

1967 சூன் 30-ல் கடனீட்டுப் பத்திரங்களை மீட்க, மேற்சொன்ன முதலீடுகள் கீழ்க்கண்டவாறு விற்கப்பட்டன.

$4\frac{3}{4}$ சதவீதம் அரசினர் கடன், 1970 பெயரளவு மதிப்பில்

$4\frac{1}{2}$ சதவீதம் அரசினர் கடன், 1978—83 ரூ. 96-ல். தேவையான கணக்குகளை எழுதி இருப்புக் கட்டுக.

இவை எவ்வாறு கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்பில் காட்டப்படும் என்பதையும் கூறுக.

(M. U. B. Com., 1968)

20. 1960 சனவரி 1-ல் ஒரு கம்பெனி ரூ. 100 மதிப்புள்ள 5,000, 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை ரூ. 94 வீதம் வெளியிட்டது. 1961 ஆம் ஆண்டு முதல் கொண்டு ஓவ்வோராண்டும் வெளிச்சந்தையில் வாங்குவது மூலமாகவோ அல்லது கம்பெனியின் விருப்பப்படிப் பெயரளவு மதிப்பில் சீட்டுகளை எடுப்பதின் மூலமாகவோ ரூ. 20,000 கடனீட்டுப் பத்திரங்களை மீட்கவேண்டுமென்று கடனீட்டுப்பத்திர வெளியீட்டு விதிமுறைகள் கூறுகின்றன. 1960-லும், 1961-லும் கடனீட்டுப்பத்திர தள்ளுபடிக் கணக்கில் ரூ. 5,000 நீக்கப்பட்டது. 1961-ல் கடனீட்டுப் பத்திரம் ஒன்று ரூ. 94 வீதம் ரூ. 6,000 முகமதிப்புடைய கடனீட்டுப் பத்திரங்களையும் ரூ. 92 வீதம் ரூ. 14,000 முகமதிப்புடைய கடனீட்டுப் பத்திரங்களையும் நீக்குவதற்காக வாங்கியது.

கடனீட்டுப்பத்திர மீட்புப் பதிவுகளைத் தருக.

(Bombay University)

21. ஒரு கம்பெனி சில ஆண்டுகட்கு முன்னர் ரூ. 100 வீதம் 1,000 ஆறு சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை ரூ. $97\frac{1}{2}$ வீதம் வெளியிட்டது. இவை 10 ஆண்டு இறுதியில் பெயரளவு மதிப்பில் மீட்கப்படவேண்டும், அல்லது கம்பெனி விரும்பியவாறு 6 திங்கள் முன்னறிவிப்புக் கொடுத்து ரூ. 102 வீதம் மீட்கப் படலாம்.

1966 திசம்பர் 31-ல் கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி ரூ. 53,500-ஐ இருப்பாகக் காட்டியது. இது சராசரி ரூ. 101 விலையில் 5 சதவீதம் ரூ. 42,800 பெயரளவு மதிப்புடைய அரசினர் கடனீட்டுப் பத்திரங்களில் முதலீடு செய்யப்பட்டிருந் தது. ரூ. 10,272 முதலீடு செய்யப்படாமல் ரொக்கமாகவே இருந்தது.

1967 சனவரி 1-ல் மீண்டும் அரசினர் கடன்பத்திரங்களை (Govt. Loan Bonds) வாங்குவதற்கு மாருக, ரூ. 11,000-திற்கான தன்னுடைய கடனீட்டுப் பத்திரங்களேயே செலவு உள்பட ரூ. 10,272-ற்கு வாங்க முடிவு செய்தது.

1967 சூன் 30-ல் ரூ. 40,000 மதிப்புடைய கடனீட்டுப் பத்திரங்களை வைத்திருப்போருக்குக் கம்பெனி 6 திங்கள் முன்னறி விக்கைக் கொடுத்தது. 1967 திசம்பர் 31-ல் ரூ. 40,800 மதிப்புள்ள அரசினர் கடன் பத்திரங்களைப் பெயரளவு மதிப்பில் விற்றுக் கடனீட்டுப் பத்திரங்களை மீட்டது. அத்துடன் தான் வைத்திருக்கும் கடனீட்டுப் பத்திரங்களையும் நீக்கியது.

மேற்கண்ட நடவடிக்கைகட்கு அரசினர் கடன்பத்திரங் கள் மீதான வட்டி 1967 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டு முழுமைக்கும் தன் கடனீட்டுப் பத்திரங்கள் மீதான வட்டி முதலியவற்றிற்கும் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக (அரசினர் கடன்பத்திரங்கள் மீது திசம்பர் 31-லும், கடனீட்டுப் பத்திரங்கள் மீது சூன் 30-லும், திசம்பர் 31-லும் வட்டி செலுத்தப்பட வேண்டுமென்று கொள்க).

(C. A. Inter)

22. இண்டஸ்ட்ரியல் எண்டர்பிரைஸ் லிமிட்டெடின் (Industrial Enterprises Ltd.) 1958 திசம்பர் 31-ற்கான இருப்பு நிலைக் குறிப்புப் பின்கண்ட தகவலை வெளியிட்டது:

| | | ரூ. |
|---|---|---|
| (1) | 5 சதவீதம் 1960 கடனீட்டுப் பத்திரங்கள் | 15,00,000 |
| (2) | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி | 11,63,600 |
| (3) | விசை ஆழி மறு அமர்த்தீட்டு நிதி (Turbine Replacement Fund) | 7,75,700 |
| (4) | முதலீடுகள் : 3 சதவீதம் அரசினர் கடன்பத்திர மீட்பு நிதி ரூ. 11,63,600; விசை ஆழி மறு அமர்த்தீட்டு நிதி ரூ. 7,75,700 | 19,39,300 |
| (5) | விசை ஆழி (Turbine) அடக்கவிலையில் | 10,00,000 |

1959, 1960 ஆகிய ஒவ்வோராண்டுக்கும் கடனீட்டுப் பத்திர மீட்பு நிதிக்கும், விசை ஆழி மறு அமர்த்தீட்டு நிதிக்கும் ஒதுக்கப்பட்டது முறையே ரூ. 2,30,800, ரூ. 87,200. 1960 திசம்பர் 31-ல் கடனீட்டுப் பத்திரங்கட்குத் தொகை செலுத்தப் படவேண்டும். 1960 திசம்பர் 31-ல் அரசினர் கடன்பத்திரங்கள் எவ்வித நட்டமும் இன்றி விற்கப்பட்டனவென்றும், திசம்பர் 31-ல் அரசின் கடன்பத்திரங்கள் மீதான வட்டி உடனடியாக முதலீடு செய்யப்பட்டதென்றும் கொண்டு, மேற்கண்ட கணக்கு களை 1959, 1960ஆம் ஆண்டுகட்குத் தயாரிக்கவும். 1960-ல் பழைய விசைஆழி ரூ. 3,00,000-ற்கு விற்கப்பட்டது. ரூ. 13,00,000-ற்கு ஒரு புதிய விசைஆழி வாங்கப்பட்டது. 1960 திசம்பர் 31-ற்கான இருப்புநிலைக் குறிப்பில் மேற்கண்ட கணக்குகளை எவ்வாறு காட்டுவாய் ?

(C. A. Final)

23. மார்ச்சன்ட்ஸ் லிமிடெட் (Merchants Ltd.) 1957 ஜூலை 1-ல் ஒன்று ரூ. 1,000 மதிப்புடைய 7 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை ரூ. 990 விலையில் வெளியிட்டது. சந்தையில் கடனீட்டுப் பத்திரங்களை வாங்கியோ, சீட்டுகளைக் குலுக்கி எடுத்தோ கடனீட்டுப் பத்திரங்கள் மீட்கப்பட வேண்டு மென்று கடனீட்டுப்பத்திர வெளியீட்டு நிபந்தனை கூறுகிறது.

இவற்றை வெளியிடுவதற்கான செலவு ரூ. 50,000, 1967-ல் நீக்கப்பட்டது. அடுத்த ஆண்டில் கடனீட்டுப்பத்திர தள்ளுபடி முழுதும் நீக்கப்பட்டது.

1966 மார்ச் 1-ல் கம்பெனி ரூ. 975 வீதம் ரூ. 10,00,000-க்கான கடனீட்டுப் பத்திரங்களையும் 1966 மேத் திங்களில் ரூ.980 வீதம் ரூ. 5,00,000 மதிப்புள்ள கடனீட்டுப் பத்திரங்களையும் 1966 சூன் 30-ல் செலுத்தவேண்டிய வட்டியுள்பட (Cum-Interest) வாங்கியது. சூன் 30-லும், திசம்பர் 31-லும் அரையாண்டு வட்டி செலுத்தவேண்டுமென்று கொண்டு கடனீட்டுப் பத்திரங்கள் மீதான வட்டி பற்றிய நடவடிக்கைகள் உள்பட மேற்கண்ட நடவடிக்கைகட்கான பதிவுகளைத் (1957, 1966 ஆகிய ஆண்டு கட்குத்) தரவும்.

(C. A. Inter, Nov, 1966)

24. 1954 சனவரி 1-ல் ரூ. 100 மதிப்புள்ள 20,000 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிட்டது. இவை இரண்டாண்டுகட்குப் பின்னர், இரு திங்கள் அறிவிக்கைக்குப் பின் ரூ. 104-ல் கம்பெனி விரும்பியபோது மீட்கக்கூடியவை. கீழ்க் கண்ட கடனீட்டுப் பத்திரங்களை வெளிச்சந்தையில் கம்பெனி வாங்கியது.

1957 பிப்ரவரி 3-ல் ரூ. 4,000 பெயரளவு மதிப்புடையவை, வட்டியுள்பட்ட விலையில் ரூ. 4,025

1957 சூன் 10-ல் ரூ. 7,000 பெயரளவு மதிப்புடையவை, வட்டி நீங்கிய விலையில் ரூ. 6,915

1952 சூலை 2ஆம் நாள்வரை கடனீட்டுப் பத்திரங்கள் முதலீடுகள் போன்று வைத்திருந்து நீக்கப்பட்டன. 1957, 1958 சூலை 3ஆம் நாள் வரைக்குமான பேரேட்டுக் கணக்குகளைக் கம்பெனியின் ஏடுகளில் தயாரிக்க. ஒவ்வொரு அரையாண்டும் சூன் 30-லும், திசம்பர் 31-லும் வட்டி செலுத்தப்படவேண்டும். வருமானவரியை விட்டுவிடுக.

(C. A. Inter)

25. ஒரு கம்பெனியின் 1967 மார்ச் 31-ற்கான இருப்பு நிலைக் குறிப்பின் சுருக்கம் பக்கம் 722-ல் கொடுக்கப்பட்டிருக்கிறது.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| பங்குமுதல் : | | | |
| ஒன்று ரூ. 10 வீதம் 6 சதவீதம் மீள்தகு முன்னுரிமைப் பங்குகள் | 2,00,000 | நிலைச் சொத்துகள் : (அடக்க விலையில்) தேய்மானம் போக | 4,12,000 |
| ஒன்று ரூ. 10 வீதம் நேர்மைப் பங்குகள் | 4,00,000 | வாணிகநற்பெயர் (Good will) | 2,00,000 |
| | 6,00,000 | | |
| 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் | 3,00,000 | சரக்கிருப்பு | 4,50,000 |
| இலாப-நட்டக் கணக்கு | 2,50,000 | கடனாளிகள் | 2,15,000 |
| நடப்புப் பொறுப்புகள்: வங்கிக் கடன் ரூ. 50,000 கடனீந்தோர் ரூ. 89,000 | 1,39,000 | கடனீட்டுப்பத்திர தள்ளுபடி | 12,000 |
| | 12,89,000 | | 12,89,000 |

கடனீட்டுப் பத்திரங்களையும், முன்னுரிமைப் பங்குகளையும் மீட்பதற்காக முன்னுரிமைப் பங்குநர்கட்கும், கடனீட்டுப் பத்திர தாரர்கட்கும் தாம் வைத்திருக்கும் பங்குகளையும், கடனீட்டுப் பத்திரங்களையும் நேர்மைப் பங்குகளாக ரூ. 12.50 வீதம் மாற்றிக் கொள்ளும் விருப்புரிமையை வழங்கியது.

முன்னுரிமைப் பங்குநரில் பாதிப்பேரும், கடனீட்டுப் பத்திர தாரர்களில் மூன்றிலொரு பங்கினரும் இதற்கு உடன்பட்டனர். ரூ. 12.50 வீதம் 30,000 நேர்மைப் பங்குகளைக் கம்பெனி பொதுமக்களிடம் ரொக்கத்திற்கு வெளியிட்டது. இவ்வாறு திரட்டப்பட்ட நிதியிலிருந்து வங்கிக் கடனை அடைத்தது; மீதியுள்ளதில் மீள்தகு முன்னுரிமைப் பங்குகளையும், கடனீட்டுப் பத்திரங்களையும் மீட்டது. மேற்கண்ட நடவடிக்கைக்கான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து இருப்புநிலைக் குறிப்பு எவ்வாறிருக்கும் என்பதைக் காட்டுக.

(Adapted from Incorporated Accountants)

26. ஆல்ஃபா கம்பெனி லிமிட்டெட் (Alpha Company Ltd.) 1961 சனவரி 1-ல் ஒன்று ரூ. 100 வீதம் 10,000 கடனீட்டுப் பத்திரங்களை 5 சதவீதம் தள்ளுபடியில் வெளியிட்டது. பெயரளவு மதிப்பின்கீழ் விலை நிலவுமாயின், கம்பெனி வெளிச்சந்தையில் எத்துணைக் கடனீட்டுப் பத்திரங்களையும் வாங்கி அவற்றை நீக்கிக் கொள்ளவோ மீண்டும் வெளியிடுவதற்காக அவற்றை வைத்திருக் கவோ கம்பெனிக்கு உரிமையுள்ளது எனக் கடனீட்டுப்பத்திர வெளியீட்டு நிபந்தனைகள் கூறுகின்றன. வெளிச்சந்தையில் விலை பெயரளவு மதிப்பிற்கு எந்த ஆண்டில் கூடுதலாக இருக்கிறதோ, அவ்வாண்டில் மொத்தம் வெளியிட்டதில் 5 சதவீதம் வரை சீட்டுகளைக் குலுக்கி எடுத்துக் கம்பெனி கடனீட்டுப் பத்திரங்களை மீட்கலாம். அத்துடன் மேலும் 5 சதவீதம் அளவிற்குக் குலுக்குச் சீட்டுமூலம் 5 சதவீதம் முனைமத்தில் மீட்கலாம். ஒவ்வோராண் டிலும் சனவரி 1ஆம் நாளன்று கடனீட்டுப் பத்திரங்களுக்கு 6 சதவீதம் வட்டி தரவேண்டும். அவைகளை மீட்பதற்காக ஒரு கழிவு நிதியைக் கம்பெனி ஏற்படுத்தியுள்ளது. இதற்கு ஒவ்வோ ராண்டும் ரூ. 75,000 ஒதுக்கி, அவற்றை 5 சதவீதம் வட்டியில் முதலீடு செய்துவருகிறது. ஒவ்வோராண்டுத் தவணைத் தொகையும் பெயரளவு மதிப்பில் பத்திரங்களில் முதலீடு செய்யப்பட்டிருக் கின்றது. மேற்சொன்னவாறு கடனீட்டுப் பத்திரங்களை மீட்ப தற்கு இம் முதலீடுகளைப் பயன்படுத்திக்கொள்ளக் கம்பெனிக்கு அதிகாரமுண்டு.

அ. கீழ்க்கண்ட நடவடிக்கைகளைப் பதிய தேவையான குறிப் பேட்டுப் பதிவுகளைத் தருக :

(1) 1962 ஏப்ரல் 1 - ரூ 92-ல் வெளிச்சந்தையில் 100 கடனீட்டுப் பத்திரங்களை வாங்கியது. இதற்கு அடக்கவிலையில் 90 % வீதம் ரூ. 12,000-க் கான முதலீடுகளை விற்றது.

(2) 1962 செப்டம்பர் 1 - ரூ. 93 வீதம் 200 கட னீட்டுப் பத்திரங்களை வாங்கியது. இதற்காக அடக்கவிலையில் 93 சதவீதத்திற்கு ரூ. 20,000-க் கான முதலீடுகளை விற்றது.

(3) 1962 திசம்பர் 31 - சீட்டுகளைக் குலுக்கி எடுத்து ரூ. 50,000 மதிப்புள்ள கடனீட்டுப் பத்திரங்களை மீட்டது. கழிவு நிதி முதலீடு அவ்வளவிற்கு மீட்கப்பட்டது.

(4) 1963 ஏப்ரல் 1 - அடக்கவிலே 96 % வீதம் ரூ. 20,000 மதிப்புள்ள கடனீட்டுப்பத்திரங்களை மீண்டும் வெளியிட்டது. மீதியுள்ள ரூ. 10,000 கடன்பத்திரங்களை நீக்கியது.

ஆ. கீழ்க்கண்டவற்றை எவ்வாறு பதிவாய்?

(1) முதலீடுகளை விற்பதில் இலாபம் அல்லது நட்டம்;

(2) கடனீட்டுப் பத்திரங்களை மீட்பதில் இலாபம்;

(3) கடனீட்டுப் பத்திரங்களைக் கட்டாயமாக மீட்பதின் மூலம் செலுத்திய முனைமம்;

(4) வாங்கப்பட்டுள்ள ஆனால், நீக்கப்பெறாத கடனீட்டுப் பத்திரங்கள்;

(5) கழிவு நிதி மீது கூடிவரும் வட்டியில் ஏற்படும் குறைப்பு.

(C. A. Final 1965)

**ஒப்புறுதிக் கழிவு** (Underwriting)

27. ரூ. 100 மதிப்புள்ள நேர்மைப் பங்குகளைப் பெயரளவு மதிப்பிலும் ரூ. 1,000 மதிப்புள்ள 500 கடனீட்டுப் பத்திரங்களை ரூ. 950-லும் ஒரு கம்பெனி வெளியிடுகிறது. அவ் வெளியீடு முழுவதையும் ஜோன்ஸ் கம்பெனி ஒப்புறுதி செய்கிறது. பங்குகள் மீது 4 சதவீதமும், கடனீட்டுப் பத்திரங்கள் மீது 2 சதவீதமும் கழிவுத்தொகை தரவேண்டும். பங்குகள் அனைத்திற்கும் விண்ணப்பங்கள் வந்தன. ஆனால், 400 கடனீட்டுப் பத்திரங்களுக்காக மட்டுமே விண்ணப்பங்கள் வந்தன. அனைத்து விண்ணப்பங்களும் ஏற்றுக்கொள்ளப்பட்டன.

தொகை முழுதும் பெறப்பட்டதென்று கொண்டு, மேற்கண்ட நடவடிக்கைகளைப் பதியத் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து, இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(C. A. Inter, May, 1962)

28. ராமா கம்பெனி ரூ. 100 மதிப்புள்ள 2,000 பங்குகள் வெளியிட்டதைக் கிருஷ்ணன் ஒப்புறுதி செய்கிறார். தரவேண்டிய 5 சதவீதம் கழிவுத்தொகையை 60 சதவீதம் ரொக்கமாகவும், மீதி முழுதும் செலுத்தப்பட்ட பங்குகளாகவும்

கொடுக்கப்பட வேண்டும். 800 பங்குகட்குப் பொதுமக்கள் விண்ணப்பம் செய்திருந்தனர். மீதியுள்ளவற்றை ஒப்புறுதியர் எடுத்துக்கொள்ள வேண்டியிருந்தது. பங்குமாற்றுச் சந்தையில் 15 சதவீதம் தள்ளுபடியில் இப் பங்குகள் விலை கூறப்பட்டன.

கம்பெனி ஏட்டிலும், ஒப்புறுதியர் ஏட்டிலும் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து, ஒப்புறுதியர் ஏட்டில் பங்குக் கணக்கினைத் தயாரிக்கவும்.

(B. Com., Rajasthan, 1971)

29. பங்குகளை ஒப்புறுதி செய்யும் தொழிலை மேற்கொண்டுள்ள '*X*' கம்பெனி லிமிட்டெட், '*A*' கம்பெனி வெளியிட்ட ரூ. 10 மதிப்புள்ள 15,000 பங்குகளை ஒப்புறுதி செய்தது. ஒப்புறுதிக் கழிவு 5 சதவீதம் என ஒப்புக்கொள்ளப்பட்டது. இக் கழிவுத்தொகையை 70 சதவீதம் முழுதும் செலுத்தப்பட்டப் பங்குகளாகவும் மீதியை ரொக்கமாகவும் கொடுக்கவேண்டும். மேற்கண்ட பங்குகளை ஒப்புறுதி செய்வதுடன், '*X*' கம்பெனி மேலும் 2,500 பங்குகட்கு 'நிலை விண்ணப்பம்' (Firm Application) செய்தது.

வெளியிட்ட பங்குகள் அனைத்திற்கும் பொதுமக்களிடமிருந்து விண்ணப்பங்கள் வரவில்லை. ஒப்புறுதிக் கம்பெனி தான் ஒப்புறுதி செய்த பங்குகளில் 30 சதவீதத்தை எடுத்துக்கொள்ள வேண்டியிருந்தது. '*A*' கம்பெனியின் பங்குகள் 12 சதவீதம் தள்ளுபடியில் சந்தையில் விலை கூறப்படுகிறது.

'*X*' கம்பெனி ஏட்டில் தேவையான கணக்குகளைத் தயாரிக்கவும்.

(C. A. Inter, Nov. 1964)

30. '*X*' கம்பெனி லிமிட்டெட் பங்கு ஒன்று ரூ. 10 மதிப்புள்ள ரூ. 10,00,000-ற்கான முதலுடன் அமைக்கப்பட்டது. பங்குகள் அனைத்தும் வெளியிடப்பட்டன. கீழ்க்கண்டவாறு இவை ஒப்புறுதி செய்யப்பட்டன.

| | | |
|---|---|---|
| *M*-35,000 | *N*-30,000 | *O*-20,000 |
| *P*-10,000 | *Q*-3,000 | *R*-2,000 |

குறியிடப்பட்ட விண்ணப்பங்கள் அவை தாங்கியிருக்கும் பெயருள்ளோர் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டியது. கீழ்க்

கண்டவாறு ஒப்புறுதியாளர்கள் குறியிட்ட விண்ணப்பங்கள் வந்தன.

| | | |
|---|---|---|
| M-10,000 | N-22,500 | O-20,000 |
| P-7,500 | Q-5,000 | R-ஒன்றுமில்லை. |

20,000 பங்குகட்குக் குறியிடப்பெறு விண்ணப்பங்கள் வந்தன. ஒவ்வொரு ஒப்புறுதியரும் எடுத்துக் கொள்ளவேண்டிய பங்குகளைக் காட்டும் அறிக்கையைத் தயார் செய்க.

(Institute of Company Secretaries of India, Final Exam. 1971)

31. 'A' கம்பெனியின் அதிகாரம் பெற்ற முதல் ரூ. 50,00,000. பங்கு ஒன்று ரூ. 50 வீதம் 1,00,000 நேர்மைப் பங்குகளாகப் பிரிக்கப்பட்டது. ரூ. 10 முனைமத்தில் 50,000 பங்குகளைக் கம்பெனி வெளியிட்டது. அனைத்துப் பங்குகளும் கீழ்க்கண்டவாறு ஒப்புறுதி செய்யப்பட்டன :

'X' 30,000 பங்குகள் (நிலை ஒப்புறுதி — 5,000 பங்குகள்)
'Y' 15,000 பங்குகள் (நிலை ஒப்புறுதி — 2,000 ,, )
'Z' 5,000 பங்குகள் (நிலை ஒப்புறுதி — 1,000 ,, )

மொத்தம் வெளியிட்டவற்றில் நிலை ஒப்புறுதியுள்பட 45,000 பங்குகட்கு விண்ணப்பங்கள் வந்தன. அவற்றில் கீழ்க்கண்டவாறு குறியிட்ட விண்ணப்பங்கள் இருந்தன :

'X' 16,000 பங்குகள்
'Y' 10,000 ,,
'Z' 4,000 ,,

ஒவ்வொரு ஒப்புறுதியரின் பொறுப்பினையும் கணக்கிடுக.

(Institute of Company Secretaries, Oct. 1969)

32. கீழ்க்கண்டவாறு பங்குகள் ஒப்புறுதி செய்யப்படுகின்றன :

'A' 6,000 பங்குகள்; 'B' 2,500 பங்குகள்; 'C' 1,500 பங்குகள்.

இத்துடன் கீழ்க்கண்டவாறு நிலை ஒப்புறுதி செய்யப்படுகின்றது :

'A' 800 பங்குகள்; 'B' 300 பங்குகள்; 'C' 1,000 பங்குகள்; 10,000 பங்குகள் வெளியிடப்படுகின்றன. நிலை ஒப்புறுதி செய்யப்பட்டவை உள்பட மொத்தம் 7,100 பங்குகட்கு விண்ணப்பங்கள் வந்தன. கீழ்க்கண்ட விண்ணப்பங்கள் குறியிடப்பட்டிருந்தன.

'A' 1,000 பங்குகள்; 'B' 2,000 பங்குகள்; 'C' 500 பங்குகள். ஒப்புறுதியரின் பொறுப்பினைக் கணக்கிடுக.

(C. A. Final)

# 8. கம்பெனிக் கணக்குகள்- தொழிலை வாங்குதல்

## (Acquisition of Business)

புதியதொரு தொழிலைத் தொடங்கும் நோக்குடன் கூட்டுப் பங்குக் கம்பெனி ஒன்று தொடங்கப்பெறலாம் அல்லது நடந்து வரும் தொழில் ஒன்றினை வாங்கும் நோக்குடன் புதிய கம்பெனி தொடங்கப்பெறலாம். ஒரு கூட்டுப் பங்குக் கம்பெனி நடத்தி வரும் தொழிலைப் பிறிதொரு கூட்டுப் பங்குக் கம்பெனி வாங்கும் நடவடிக்கைகளைப் பின்வரும் தலைப்புகளில் காணலாம். தனி வாணிகர் அல்லது கூட்டு நிறுவனம் நடத்திவரும் தொழிலை ஒரு கூட்டுப் பங்குக் கம்பெனி வாங்குவதைப் பற்றியும், ஒரு கூட்டு நிறுவனம் வளர்ந்துவரும் வாணிகத்தின் பயனைச் சிறந்த முறையில் பெற்றிடும் நோக்குடன் கூட்டுப் பங்குக் கம்பெனியாக மாற்றிக்கொள்ளும் நடவடிக்கைகளையும் இவண் ஆய்வோம்.

ஒரு கூட்டு நிறுவனம் தனது தொழிலை ஒரு கம்பெனிக்கு விற்பதைக் கூட்டு நிறுவனம் எனும் தலைப்பின் கீழ்க் காண லாம். தனது தொழிலை விற்கும் நிறுவனத்தின் ஏடுகளில் எவ்வாறு பதிவது என்பதை அங்கே விளக்கியிருக்கிறோம். இப் பொழுது அத் தொழிலை வாங்கும் கம்பெனியின் ஏடுகளில் எவ் வாறு பதிவது என்பதைப் பார்ப்போம்.

தொழிலை வாங்குவதற்குக் கொடுக்கும் விலையைக் 'கொள் முதல் மறுபயன்' (Purchase Consideration) அல்லது 'கொள்முதல் விலை' ( Purchase price) என்கிறோம். இவ் விலையை ரொக்கம் கொடுத்தோ, ஒரு பகுதி ரொக்கமாகவும், மீதி தனது பங்கு களாகவும், கடனீட்டுப் பத்திரங்களாகவும் கொடுத்தோ விலையைச்

செலுத்தல் வழக்கம். ஒரு தொழிலுக்குக் கொடுக்கப்படும் விலையானது அதன் சொத்துகளின் மதிப்பையும், வாணிக நற்பெயரையும், ஏற்றுக்கொள்ளும் பொறுப்புகளையும் பொருத்திருக்கிறது.

**வாணிக நற்பெயர்** (Goodwill)

தொழிலுக்குக் கொடுக்கப்படும் வாணிக நற்பெயரின் மதிப்பைப் பெரும்பாலும் கணக்குகளில் கொடுப்பதில்லை. அதனை நாமே உணரவேண்டும். தொழில் ஒன்றின் சொத்துகளையும் பொறுப்புகளையும் வாங்குவதற்கு மொத்தமாக நாம் தொகை ஒன்று கொடுப்பதாகக் கொள்வோம். இப்பொழுது இவ்வாறு கொடுக்கப்படும் கொள்முதல் விலைக்கும், அத் தொழிலின் நிகர சொத்து மதிப்பிற்கும் (Value of Net Assets) உள்ள வேறுபாட்டுத் தொகையே வாணிக நற்பெயர் எனப்படும். எடுத்துக்காட்டாக, நாம் வாங்கும் தொழிலின் நிகர சொத்து மதிப்பு ரூ. 80,000 என்றும், ஆனால், அதற்காகக் கொடுக்கப்படும் விலை ரூ. 1,00,000 என்றும் கொண்டால், அத் தொழிலை வாங்குவதற்காக நாம் கொடுக்கும் வாணிக நற்பெயர் ரூ. 20,000 ஆகிறது. (நிகர சொத்து மதிப்பு ரூ. 1,00,000; கொள்முதல் விலை ரூ. 80,000). இவ்வாறு நிகர சொத்து மதிப்பினும் கூடுதலாகக் கொடுக்கப்படும் விலையை வாணிக நற்பெயர் கணக்கிற்கு எடுத்துச் செல்லவேண்டும்.

**முதல் காப்பு** (Capital Reserve)

ஒரு தொழிலின் நிகர சொத்து மதிப்பினும் விலை குறைவாகக் கொடுக்கப்படுமாயின், இப்பொழுது அத் தொழிலினை வாங்கும் கம்பெனிக்கு ஆதாயம் ஏற்படுகிறது. இவ்வாதாயத்தினை முதல்காப்புக் கணக்கிற்கு எடுத்துச் செல்லவேண்டும். மேற்சொன்ன எடுத்துக்காட்டில் நாம் வாங்கும் தொழிலிலுள்ள நிகர சொத்துகளின் மதிப்பு ரூ. 80,000 என்றும், நாம் ரூ. 70,000 கொடுத்து அதனை வாங்குவதாகவும் கொண்டால், நமக்கு ரூ. 10,000 ஆதாயம் ஏற்பட்டிருக்கிறது. இதனை முதல்காப்புக் கணக்கிற்கு எடுத்துச் செல்லவேண்டும்.

இதிலிருந்து நாம் உணர்வது : நிகர சொத்து மதிப்பிற்கும், கொடுக்கப்படும் கொள்முதல் விலைக்குமுள்ள வேறுபாட்டுத்தொகை வாணிக நற்பெயராகவும் இருக்கலாம் அல்லது முதல்காப்பாகவும் இருக்கலாம்.

நிகர சொத்து மதிப்பினைக் கணக்கிடும்போழ்து, சொத்துகளை மறு மதிப்பீடு செய்ய வேண்டியிருப்பின், அதனை முதலில் செய்ய வேண்டும். (விற்கும் நிறுவனத்தின் ஏடுகளில் காட்டப்பட்டிருக்கும் சொத்துகளின் மதிப்பை விட அவற்றின் உண்மையான மதிப்பு கூடுதலாகவும் இருக்கலாம்; அல்லது குறைவாகவும் இருக்கலாம். அந் நாளில் அவற்றின் உண்மையான மதிப்பினை முதலில் உணர வேண்டும்). மறு மதிப்பீட்டிற்குப் பின்னுள்ள சொத்துகளி னின்றும் நாம் எடுத்துக்கொள்ளும் பொறுப்பினைக் கழித்தால் கிடைப்பது தொழிலின் நிகர சொத்து மதிப்பாகும்.

## எடுத்துக்காட்டு 62

எழிலன் நடத்திவரும் ஒரு வாணிக நிறுவனத்தை ஒரு கூட்டுப் பங்குக் கம்பெனி ரூ. 1,00,000ற்கு வாங்குகிறது. எழிலனின் இருப்புநிலைக் குறிப்பு கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கிறது.

### இருப்புநிலைக் குறிப்பு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| கடனீந்தோர் | 20,400 | கட்டடம் | 30,500 |
| செலுத்தற்குரிய உண்டியல் | 10,000 | பொறிவகை | 28,000 |
| | | சரக்கிருப்பு | 17,500 |
| எழிலனின் முதல் | 80,000 | முதலீடுகள் | 5,000 |
| | | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டு | 7,500 |
| | | கடனாளிகள் | 15,600 |
| | | வங்கி | 6,300 |
| | 1,10,400 | | 1,10,400 |

வாணிக நற்பெயரைக் (தொழிலின் நன்மதிப்பை) கண்டுபிடிக்கவும்.

**விடை :**

| | | | ரூ. |
|---|---|---|---|
| கம்பெனி எடுத்துக்கொள்ளும் சொத்துகளின் மதிப்பு : | | | |
| கட்டடம் | | | 30,500 |
| பொறிவகை | | | 28,000 |
| சரக்கிருப்பு | | | 17,500 |
| முதலீடுகள் | | | 5,000 |
| பெறுதற்குரிய மாற்றுச் சீட்டு | | | 7,500 |
| கடனாளிகள் | | | 15,600 |
| வங்கி | | | 6,300 |
| | | | 1,10,400 |
| **கழி :** | | | |
| கடனீந்தோர் | ரூ. | 20,400 | |
| செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு | ரூ. | 10,000 | |
| | | | 30,400 |
| நிகர சொத்துகள் | | | 80,000 |

| | |
|---|---|
| கொள்முதல் விலை (purchase price) (கொடுக்கப்படும் விலை). .. .. .. | 1,00,000 |
| **கழி :** | |
| நிகர சொத்து மதிப்பு | 80,000 |
| வாணிக நற்பெயர் | 20,000 |

மேற்சொன்ன எடுத்துக்காட்டில், வங்கியிருப்பையும், செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டையும் தவிர பிற சொத்துகள், பொறுப்புகள் அனைத்தையும் கம்பெனி வாங்கிக்கொள்வதாகவும்,

அதற்கு விலை ரூ. 75,000 கொடுக்கவேண்டுமென்றும் கொள்வோம். இப்பொழுது கணக்கிட வேண்டிய முறை :

| எடுத்துக்கொண்ட சொத்துகளின் மதிப்பு : | ரூ. |
|---|---|
| கட்டடம் | 30,500 |
| பொறிவகை | 28,000 |
| சரக்கிருப்பு | 17,500 |
| முதலீடுகள் | 5,000 |
| பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு | 7,500 |
| கடனாளிகள் | 15,600 |
| | 1,04,100 |
| கழி : | |
| எடுத்துக்கொண்ட பொறுப்புகளின் மதிப்பு : | |
| கடனீந்தோர் | 20,400 |
| நிகர சொத்துகளின் மதிப்பு | 83,700 |
| கழி : | |
| கொடுக்கப்படும் விலை | 75,000 |
| முதல்காப்பு | 8,700 |

இப்பொழுது நிகர சொத்துகளின் மதிப்பு ரூ. 83,700 ஆயினும், கம்பெனி கொடுக்கும் விலை ரூ. 75,000 தான். இவ்வாறு சொத்துகளின் நிகர மதிப்பைவிடக் குறைவாகக் கொடுக்கும் விலை, கம்பெனியைப் பொருத்தவரை ஒரு ஆதாயமாகும். எனவே, இதனை முதல்காப்புக் கணக்கிற்கு எடுத்துச் செல்லவேண்டும்.

மேற்சொன்னவாறு ஒரு குறிப்பிட்ட தொகையை விலையாகக் கொடுக்கவில்லையெனில், தொழிலிலுள்ள சொத்துகளின் நிகர மதிப்பளவிற்கு விலை கொடுக்கப்படும் என்பதை உணர வேண்டும். மேற்சொன்ன எடுத்துக்காட்டில் எழிலனின் நிறுவனத்துக்குக் கம்பெனி ரூ. 1,00,000 தருவதாகவோ அல்லது

ரூ. 75,000 தருவதாகவோ கொடுக்காமல், எழிலன் சொத்துகளையும், பொறுப்புகளையும் கம்பெனி எடுத்துக்கொள்கிறதென்று மட்டுமே கொடுக்கப்பட்டிருப்பின், சொத்துகளின் நிகர மதிப்பிற்குக் கம்பெனி விலை தருவதாகப் பொருள்படும். மேற்சொன்ன எடுத்துக்காட்டில், கம்பெனி தரும் விலை ரூ. 80,000 ஆகும் (சொத்துகளின் மொத்த மதிப்பு ரூ. 1,10,400 – கம்பெனி எடுத்துக்கொள்ளும் பொறுப்புகள் மொத்தம் ரூ. 30,400). இரண்டாம் நிலையில் அதாவது, கம்பெனி வங்கியிருப்பையும், செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டையும் தவிர, பிற பொறுப்புகளையும் கம்பெனி எடுத்துக்கொள்ளும்போழ்து, கம்பெனி தரும் விலை ரூ. 83,700 ஆகும். இவ் வகையில் விலை கணக்கிடும்போழ்து வாணிக நற்பெயரோ, முதல்காப்புக் கணக்கோ எழுவதில்லை.

(1) தொழில் ஒன்றை வாங்கும்போழ்து கொடுக்கும் கொள்முதல் விலைக்குத் தொழில் கொள்முதல் கணக்கில் (Business Purchase a/c) பற்றும், விற்குநர் கணக்கில் (Vendor's Account) வரவும் வைக்கவேண்டும்.

(2) பின்னர், இத் தொழில்கள் மூலமாகக் கம்பெனிக்குக் கிடைக்கும் சொத்துகள் கணக்கில் தனித்தனியாகப் (கம்பெனி மதிப்பிடும் விலையில்) பற்று வைக்கவேண்டும். அத்துடன் தொழில் கொள்முதல் கணக்கில் கொடுக்கப்படும் விலைக்கு வரவு வைக்க வேண்டும்.

இப்பொழுது வரவிற்குரிய தொகைகள் பற்றுத் தொகைகளைவிடக் கூடுதலாக இருப்பின், இவ் வேறுபாட்டுத் தொகைக்கு வாணிக நற்பெயர் கணக்கில் பற்று வைக்க வேண்டும்.

அவ்வாறின்றிப் பற்றுத்தொகைகள் வரவிற்குரிய தொகைகளைவிடக் கூடுதலாக இருப்பின் அவ் வேறுபாட்டுத் தொகைக்கு முதல் காப்புக் கணக்கில் வரவு வைக்கவேண்டும்.

பதிவு கீழ்க்கண்டவாறு இருக்கும் :

பல்வகைச் சொத்துகள்
(தனித்தனியாக) க/கு ப

வாணிக நற்பெயர்
க/கு ப

பல்வகைப் பொறுப்புக்
கணக்குகள்
(தனித்தனியாக)
விற்குநர் க/கு
அல்லது
பல்வகைச் சொத்துகள்
கணக்கு ப
(தனித்தனியாக)
பல்வகைப் பொறுப்புக்
கணக்குகள்
(தனித்தனியாக)
விற்குநர்
முதல்காப்பு

(3) தொழிலை விற்றவரிடம் விலை செலுத்தும்பொழுது, விற்குநர் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கிலும், பங்குமுதல் கணக்கிலும், கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கிலும் வரவும் வைக்க வேண்டும் (விலை ரொக்கமாகவும், பங்குகளாகவும், கடனீட்டுப் பத்திரங்களாகவும் கொடுப்பதாகக் கொண்டால்).

பதிவு கீழ்க்கண்டவாறிருக்கும் :

விற்குநர் ப
வங்கிக் கணக்கு
பங்குமுதல் கணக்கு
கடனீட்டுப் பத்திரங்கள்
கணக்கு

விலையைத் தீர்க்கக் கம்பெனி வழங்கும் பங்குகள் முனைமத்தில் கொடுக்கப்பட்டிருப்பின் உரிய தொகையைப் பங்குமுதல் கணக்கிற்கும், முனைமத் தொகையைப் பங்கு முனைமக் கணக்கிற்கும் எடுத்துச் செல்லவேண்டும். எடுத்துக்காட்டாக, எழிலனுக்கு (விற்குநர்) ரூ. 80,000-ஐப் பங்கு ஒன்று ரூ. 100 வீதம் 10 சத வீதம் முனைமத்தில் 600 பங்குகளும், மீதியை ரொக்கமாகவும் கம்பெனி கொடுப்பதாகக் கொண்டால், கம்பெனியின் ஏட்டில் செய்யவேண்டிய பதிவு :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| எழிலன் | ப | 80,000 | |
| பங்குமுதல் கணக்கு | | | 60,000 |
| பங்கு முனைமக் கணக்கு | | | 6,000 |
| வங்கிக் கணக்கு | | | 14,000 |

**எடுத்துக்காட்டு 63**

சந்துக்குட்டி, அச்சுதன் ஆகிய இருவர் நடத்திவரும் கேரளா அன் கோ-வைத் திருவனந்தபுரம் லிமிட்டெட் எனும் கூட்டுப் பங்குக் கம்பெனி வாங்கியது. கேரளா அன் கோ-வின் 1970 மார்ச் 31-ற்குரிய இருப்புநிலைக் குறிப்பு கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கிறது :

**இருப்புநிலைக் குறிப்பு**

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| செலுத்தற்குரிய | | வங்கி | 2,500 |
| மாற்றுச் சீட்டு | 3,700 | சரக்கிருப்பு | 19,700 |
| கடனீந்தோர் | 12,650 | கடனாளிகள் | 13,650 |
| பொதுக்காப்பு | 5,000 | தட்டெழுத்துப் பொறி | 1,250 |
| முதல் கணக்குகள் : | | | |
| சந்துக்குட்டி | 28,250 | மனைத்துணைப் பொருள் | 2,300 |
| அச்சுதன் | 15,200 | பொறிவகை | 22,400 |
| | | வாணிக நற்பெயர் | 3,000 |
| | 64,800 | | 64,800 |

சொத்துகள், பொறுப்புகள் அனைத்தையும் கம்பெனி எடுத்துக்கொண்டது. இதற்கான மறுபயன் (Consideration) ரூ. 40,830 என ஒப்புக்கொள்ளப்பட்டது. இதில் ரூ. 33,000-ற்கு ஒன்று ரூ. 100 மதிப்புள்ள தனது நேர்மைப் பங்குகளை 10 சதவீதம் முனைமத்திலும், மீதியை ரொக்கமாகவும் கொடுக்கவேண்டியது. திருவனந்தபுரம் கம்பெனி சரக்கிருப்பையும், தட்டெழுத்துப் பொறியையும் முறையே 10 சதவீதம், 20 சதவீதம் குறைத்து மதிப்பிட்டது. பொறி வகையினை ரூ.2 5,000-ற்கு மதிப்பிட்டது. கம்பெனியின் ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

**விடை :**

இப்பொழுது கொடுக்கப்படும் விலை ரூ. 40,830-ஐக் கம்பெனி கீழ்க் கண்டவாறு செலுத்துகிறது. ஒரு பங்கின் மதிப்பு ரூ. 110 [ரூ. 100+10 (முனைமம்)].

ரூ. 110-ற்குக் கொடுப்பது ஒரு பங்கு.
ரூ. 33,000-ற்குக் கொடுப்பது....

$$33,000 \times \frac{1}{110}$$

= 300 பங்குகள்

| | | |
|---|---|---|
| கொள்முதல் மறுபயன் | ரூ. | 40,830 |
| **கழி :** இதற்குக் கொடுக்கும் பங்குகளின் மதிப்பு | ரூ. | 33,000 |
| ரொக்கமாகக் கொடுப்பது | ரூ. | 7,830 |

கம்பெனி எடுத்துக்கொள்ளும் சொத்துகளின் மதிப்பு :

| | | ரூ. |
|---|---|---|
| வங்கி | | 2,500 |
| சரக்கிருப்பு | | 17,730 |
| கடனாளிகள் | | 13,650 |
| தட்டெழுத்துப் பொறி | | 1,000 |
| மனைத்துணைப்பொருள் | | 2,300 |
| பொறிவகை | | 25,000 |
| மொத்த சொத்துகளின் மதிப்பு | | 62,180 |
| **கழி :** செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டு | ரூ. 3,700 | |
| கடனீந்தோர் | ரூ. 12,650 | 16,350 |
| நிகர சொத்துகளின் மதிப்பு | | 45,830 |

| | | |
|---|---|---|
| நிகர சொத்துகளின் மதிப்பு | ரூ. | 45,830 |
| **கழி** : கொள்முதல் மறுபயன் | ரூ. | 40,830 |
| முதல்காப்பு | ரூ. | 5,000 |

கேரளா அன் கோ-வின் இருப்புநிலைக் குறிப்பில் வாணிக நற்பெயர் கணக்கானது ரூ. 3,000 காட்டப்பட்டுள்ளது. எனினும், இதனைக் கணக்கில் எடுத்துக் கொள்ளக்கூடாது. மேற் சொன்னவாறு நிகர சொத்துகளைவிட எவ்வளவு நாம் கூடுதலாகக் கொடுத்திருக்கிறோமா அல்லது குறைவாகக் கொடுத்திருக்கிறோமா என்பதை அடிப்படையாகக் கொண்டு நாம் வாணிக நற்பெயரின் மதிப்பு என்ன என்பதையும் அல்லது முதல் காப்புக் கணக்கில் எவ்வளவு வரவு வைக்கவேண்டுமென்பதையும் உணர வேண்டும். அவ்வேட்டில் நிகர சொத்துகளின் மதிப்பு ரூ. 45,830 ஆக இருந்தபோதிலும் நாம் கொடுக்கும் விலை ரூ. 40,830 தான். அதாவது, ரூ. 45,830 மதிப்புள்ள ஒரு தொழிலினை ரூ. 40,830-ற்கு வாங்கி விடுகிறோம் என்பது பொருள். எனவே, இதில் ஏற்பட்ட ஆதாயம் ரூ. 5,000-ஐ முதல் காப்புக் கணக்கிற்கு எடுத்துச் செல்லவேண்டுமென்பது தெளிவாகும். இப்பொழுது குறிப்பேட்டுப் பதிவுகளைச் செய்யலாம்.

## திருவனந்தபுரம் லிமிட்டெடின் ஏடுகளில்

### குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | தொழில் கொள்முதல் கணக்கு ப | | 40,830 | |
| | கேரளா அன் கோ | | | 40,830 |
| | (....நாளிட்ட ஒப்பந்தத்தின்படி, கேரளா அன் கோவின் தொழிலை ரூ. 40,830-ற்கு வாங்கியது.) | | | |

குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|---|
| | | | | ரூ. | ரூ. |
| | வங்கி | ப | | 2,500 | |
| | சரக்கிருப்பு | ப | | 17,730 | |
| | கடனுளிகள் | ப | | 13,650 | |
| | தட்டெழுத்துப்பொறி | ப | | 1,000 | |
| | மனைத்துணைப்பொருள் | ப | | 2,300 | |
| | பொறிவகை | ப | | 25,000 | |
| | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டு | | | | 3,700 |
| | கடனீந்தோர் | | | | 12,650 |
| | முதல்காப்பு | | | | 5,000 |
| | தொழில் கொள்முதல் | | | | 40,830 |
| | (பல்வகைச் சொத்துகளை யும், பொறுப்புகளையும் எடுத்துக்கொண்டது -மறு மதிப்பீட்டு விலையில்.) | | | | |
| | கேரளா அன் கோ | ப | | 40,830 | |
| | பங்குமுதல் கணக்கு | | | | 30,000 |
| | பங்கு முனைமக் கணக்கு | | | | 3,000 |
| | வங்கிக் கணக்கு | | | | 7,830 |
| | (கொள்முதல் மறுபயனை ஒப்பந்தத்தின்படி தீர்த் தது.) | | | | |

மேற்சொன்னவாறு பதிவதற்குப் பதிலாகச் சிலர் வேறு முறையிலும் இந் நடவடிக்கைகளைப் பதிகின்றனர். அதாவது, தொழிலை வாங்கும்பொழுது முதலில் தொழில் கொள்முதல் கணக்கில் பற்றும், விற்குநர் கணக்கில் வரவும் வைக்கின்றோம். பின்னர்ச் சொத்துகள் கணக்கில் தனித்தனியாகப் பற்று வைத்துத் தொழில் கொள்முதல் கணக்கில் வரவு வைக்கின்றோம். இதற்கு மாறாக, முதல் பதிவையே எழுதாமல் இந் நடவடிக்கைகளைப் பதியலாம். அதாவது, ஒவ்வொரு சொத்துக் கணக்கிலும் தனித் தனியாகப் பற்றும், ஒவ்வொரு பொறுப்புக் கணக்கிலும், விற்குநர்

கணக்கிலும் வரவும் வைக்கவேண்டும். மேற்சொன்ன எடுத்துக் காட்டை இம் முறையில் பதிய கீழ்க்கண்ட பதிவுகள் தேவைப் படும் :

**பதிவுகள்**

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | வங்கி ப | | 2,500 | |
| | சரக்கிருப்பு ப | | 17,730 | |
| | கடனாளிகள் ப | | 13,650 | |
| | தட்டெழுத்துப்பொறி ப | | 1,000 | |
| | மனைத்துணைப்பொருள் ப | | 2,300 | |
| | பொறிவகை ப | | 25,000 | |
| | கேரளா அன் கோ | | | 40,830 |
| | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டு | | | 3,700 |
| | கடனீந்தோர் | | | 12,650 |
| | முதல்காப்பு | | | 5,000 |
| | கேரளா அன் கோ ப | | 40,830 | |
| | பங்குமுதல் | | | 30,000 |
| | பங்கு முனைமம் | | | 3,000 |
| | வங்கி | | | 7,830 |

## எடுத்துக்காட்டு 64

காஞ்சி பட்டுமாளிகை (வரையறு பொறுப்புடையது) ரூ. 5,00,000 அதிகாரம் பெற்ற பங்குமுதலுடன் தொடங்கப் பட்டது. இது ஒன்று ரூ. 10 மதிப்புடைய 25,000 நேர்மைப் பங்குகளாகவும், ஒன்று ரூ. 10 மதிப்புடைய 25,000, 7 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளாகவும் பிரிக்கப்பட்டது. இக் கம்பெனி வேலூர் துணியகத்தினை 1974 சனவரி 1-ல் எடுத்துக்கொண்டது.

1973 திசம்பர் 31-ற்குரிய வேலூர் துணியகத்தின் இருப்புநிலைக் குறிப்பு கீழ்க் கொடுக்கப்பட்டுள்ளது :

## இருப்புநிலைக் குறிப்பு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு | 11,100 | கட்டடம் | 70,000 |
| கடனீந்தோர் | 47,500 | மனைத்துணைப் பொருள் | 10,000 |
| வங்கி மேல்வரைப் பற்று(Bank Overdraft) | 20,000 | சரக்கிருப்பு | 50,700 |
| முதல் கணக்குகள் : | | முதலீடுகள் | 12,500 |
| அப்பர் 65,000 | | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு | 10,400 |
| மணிவாசகர் 55,000 | 1,20,000 | கடனாளிகள் | 45,000 |
| | 1,98,600 | | 1,98,600 |

இதன் விலை ரூ. 1,40,000 என ஒப்புக்கொள்ளப்பட்டது. ரூ. 70,000-ற்கு முழுதும் செலுத்தப்பெற்ற நேர்மைப் பங்கு களாகவும், ரூ. 50,000-ற்கு முழுதும் செலுத்தப்பெற்ற 7 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளாகவும் மீதித் தொகை ரொக்கமாகவும் கொடுத்துக் கொள்முதல் மறுபயனைத் தீர்க்கவேண்டியது.

முதலீடுகளையும், செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுகளையும் தவிர, பிற சொத்துகளையும் பொறுப்புகளையும் காஞ்சி பட்டு மாளிகை எடுத்துக்கொண்டது. கட்டடத்தினைப் பிணையமாகக் கொண்ட ரூ. 25,000-ற்கான கடனீட்டுப் பத்திரங்களைத் துணைப் பிணையமாக (Collateral Security) வழங்கவேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் கம்பெனிக்கு மேல்வரைப்பற்றை மாற்றிக் கொடுக்க வங்கி இசைந்தது.

கம்பெனி கீழ்க்கண்டவாறு சொத்துகளை மறு மதிப்பீடு செய்தது :

கட்டடம் ரூ. 75,000; சரக்கிருப்பு, மனைத்துணைப்பொருள் ஆகியவற்றை ஏட்டு மதிப்பில் 10 சதவீதம் குறைத்து; கடனாளிகள் மீது 5 சதவீதம் ஐயக் கடன் ஏற்படுத்தி.

மீதியுள்ள பங்குகள் அனைத்தும் பொதுமக்களிடத்தில் வெளியிடப்பட்டன. விண்ணப்பத்தின்போழ்து ரூ. 3-ம், ஒதுக்கீட்டின் போழ்து ரூ. 3-ம், அழைப்பின்போழ்து ரூ. 4-ம் செலுத்தப்பட வேண்டும்.

பங்குகள் அனைத்திற்கும் விண்ணப்பங்கள் வர, அவை உரிய முறையில் ஒதுக்கப்பட்டன. 500 முன்னுரிமைப் பங்குகளையும், 1,000 நேர்மைப் பங்குகளையும் வைத்திருக்கும் நாவுக்கரசன் விண்ணப்ப—ஒதுக்கீட்டுத் தொகைகளை மட்டில் செலுத்தியிருந்தார். பிற பங்குகள் மீது பணம் முழுதும் பெறப்பட்டது. உரிய அறிவிக்கைக்குப் பின்னர், மேற்சொன்ன பங்குகள் இழப்பொறுப்பு (forfeiture) செய்யப்பட்டன. அவற்றில் 750 நேர்மைப் பங்குகளையும், 400 முன்னுரிமைப் பங்குகளையும் ஒன்று ரூ. 9 வீதம் கம்பெனி சம்பந்தனிடம் வெளியிட்டது.

அமைப்புச் செலவு (Formation Expenses) ரூ. 1,200 ஆனது என்று கொண்டு, கம்பெனியின் ஏட்டில் குறிப்பேட்டுப் பதிவுகளையும், இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

**விடை :**

| | | | ரூ. |
|---|---|---|---|
| | நிகர சொத்துகளின் மதிப்பு : | | |
| | கட்டடம் | | 75,000 |
| | மனைத்துணைப்பொருள் | | 9,000 |
| | சரக்கிருப்பு | | 45,630 |
| | வரவிற்குரிய உண்டியல் | | 10,400 |
| | கடனாளிகள் | 45,000 | |
| கழி : | ஐயக்கடன் ஒதுக்கு | 2,250 | |
| | | | 42,750 |
| | சொத்துகளின் மொத்த மதிப்பு | | 1,82,780 |
| கழி : | கடனீந்தோர் | 47,500 | |
| | வங்கி மேல்வரைப் பற்று | 20,000 | |
| | | | 67,500 |
| | நிகர சொத்துகளின் மதிப்பு | | 1,15,280 |

| | | ரூ. |
|---|---|---|
| | கொள்முதல் மறுபயன் | 1,40,000 |
| **கழி :** | நிகர சொத்துகள் | 1,15,280 |
| | வாணிக நற்பெயர் ரூ. | 24,720 |

இப்பொழுது தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைச் செய்யலாம்.

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|---|
| | தொழில் கொள்முதல் கணக்கு | ப | | ரூ. 1,40,000 | ரூ. |
| | வேலூர் துணியகம் | | | | 1,40,000 |
| | (....நாளிட்ட ஒப்பந்தத்தின்படி, வேலூர் துணியகத்தின் வியாபாரத்தினை ரூ.1,40,000-ற்கு வாங்கியது.) | | | | |
| | கட்டடம் | ப | | 75,000 | |
| | மனைத்துணைப்பொருள் | ப | | 9,000 | |
| | சரக்கிருப்பு | ப | | 45,630 | |
| | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகள் | ப | | 10,400 | |
| | கடனாளிகள் | ப | | 45,000 | |
| | வாணிக நற்பெயர் | ப | | 24,720 | |
| | கடனாளிகள் மீது ஐயக்கடன் காப்பு | | | | 2,250 |
| | கடனீந்தோர் | | | | 47,500 |
| | வங்கி மேல்வரைப் பற்று | | | | 20,000 |
| | தொழில் கொள்முதல் கணக்கு | | | | 1,40,000 |
| | (மறு மதிப்பீட்டு விலையில் வேலூர் துணியகத்தின் சொத்துகளையும், பொறுப்புகளையும் எடுத்துக்கொண்டது.) | | | | |

**குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)**

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | வங்கி ப | | 1,14,000 | |
| | நேர்மைப் பங்கு விண்ணப்ப-ஒதுக்கீட்டுக் கணக்கு | | | 54,000 |
| | 7 சதவீதம் முன்னுரிமைப் பங்கு விண்ணப்ப-ஒதுக் கீட்டுக் கணக்கு | | | 60,000 |
| | (பங்கு ஒன்றுக்கு ரூ. 3 வீதம் 18,000 நேர்மைப் பங்குகள் மீதும் 20,000 முன்னுரிமைப் பங்குகள் மீதும் விண்ணப்பத் தொகை பெற்றது.) | | | |
| | நேர்மைப் பங்கு விண்ணப்ப-ஒதுக்கீட்டுக் கணக்கு ப | | 1,08,000 | |
| | நேர்மைப் பங்கு முதல் கணக்கு | | | 1,08,000 |
| | (. . . . நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு 18,000 நேர்மைப் பங்குகள் மீதான ரூ. 3 வீதம் விண்ணப்பத்தொகையையும், ரூ. 3 வீதம் ஒதுக் கீட்டுத் தொகையையும் பங்கு முதல் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| | முன்னுரிமைப் பங்கு விண்ணப்ப-ஒதுக்கீட்டுக் கணக்கு ப | | 1,20,000 | |
| | 7 சதவீதம் முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கு | | | 1,20,000 |
| | (. . நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு, | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | பங்கு ஒன்றுக்கு ரூ. 3 வீதம் விண்ணப்பத் தொகையையும், ரூ. 3 வீதம் ஒதுக்கீட்டுத் தொகையையும் முதல் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| | வங்கிக் கணக்கு ப | | 1,14,000 | |
| | நேர்மைப் பங்கு விண்ணப்ப-ஒதுக்கீட்டுக் கணக்கு | | | 54,000 |
| | 7 சதவீதம் முன்னுரிமைப் பங்கு விண்ணப்ப-ஒதுக் கீட்டுக் கணக்கு | | | 60,000 |
| | (பங்கு ஒன்றுக்கு ரூ. 3 வீதம் 18,000 நேர்மைப் பங்குகள் மீதும், 20,000 முன்னுரிமைப் பங்குகள் மீதும் ஒதுக்கீட்டுத் தொகை பெற்றது.) | | | |
| | நேர்மைப் பங்கு இறுதி யழைப்புக்கணக்கு ப | | 72,000 | |
| | நேர்மைப் பங்குமுதல் கணக்கு | | | 72,000 |
| | (. . . . நாளில் இயக்குந ரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 4 வீதம் 18,000 நேர்மைப் பங்குகள் மீது முதலா வதும் இறுதியுமான அழைப்புத் தொகை பெற வேண்டியது.) | | | |

**குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)**

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | முன்னுரிமைப் பங்கு இறுதியழைப்புக் கணக்கு ப | | ரூ. 80,000 | ரூ. |
| | 7 சதவீதம் முன்னுரிமைப் பங்குமுதல் கணக்கு | | | 80,000 |
| | (....நாளில் இயக்குநரவை தீர்மானித்தவாறு பங்கு ஒன்றுக்கு ரூ. 4 வீதம் 20,000 முன்னுரிமைப் பங்குகள் மீது முதலாவதும் இறுதியுமான அழைப்புத்தொகை பெறவேண்டியது.) | | | |
| | வங்கி ப | | 1,46,000 | |
| | நேர்மைப் பங்கு இறுதியழைப்புக் கணக்கு | | | 68,000 |
| | முன்னுரிமைப் பங்கு இறுதியழைப்புக் கணக்கு | | | 78,000 |
| | (பங்கு ஒன்றுக்கு ரூ. 4 வீதம் 17,000 நேர்மைப் பங்குகள் மீதும், 19,500 முன்னுரிமைப் பங்குகள் மீதும் பெற்ற பங்கு இறுதி அழைப்புத் தொகை.) | | | |
| | நேர்மைப் பங்கு முதல் கணக்கு ப | | 10,000 | |
| | நேர்மைப் பங்கு இறுதியழைப்புக் கணக்கு | | | 4,000 |
| | ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டபங்குக் கணக்கு | | | 6,000 |
| | (இறுதியழைப்புத்தொகை செலுத்தத்தவறியதின் காரணமாக, நாவுக்கரசனின் 1,000 நேர்மைப் பங்குகளைப் பறிமுதல் செய்தது.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | 7 சதவீதம் முன்னுரிமைப் பங்குமுதல் கணக்கு ப | | ரூ. 5,000 | ரூ. |
| | முன்னுரிமைப் பங்கு இறுதி அழைப்புக் கணக்கு | | | 2,000 |
| | ஒறுப்பிழப்புச் செய்யப் பட்ட பங்குக் கணக்கு | | | 3,000 |
| | (இறுதியழைப்புத்தொகை செலுத்தத்தவறியதின் காரணமாக நாவுக்கரசன் வைத்திருந்த 500 முன் னுரிமைப் பங்குகளைப் பறி முதல் செய்தது.) | | | |
| | வங்கி ப | | 10,350 | |
| | ஒறுப்பிழப்புச் செய்யப் பட்ட பங்குக் கணக்கு ப | | 1,150 | |
| | நேர்மைப் பங்குமுதல் கணக்கு | | | 7,500 |
| | முன்னுரிமைப் பங்கு முதல் கணக்கு | | | 4,000 |
| | (ஒறுப்பிழப்புச் செய்யப் பட்ட பங்குகளில் 750 நேர்மைப் பங்குகளையும், 400 முன்னுரிமைப் பங்கு களையும் ரூ. 9 வீதம் மீண்டும் வெளியிட்டதில் பெற்ற தொகை.) | | | |
| | ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குக் கணக்கு ப | | 5,750 | |
| | முதல்காப்புக் கணக்கு | | | 5,750 |
| | (ஒறுப்பிழப்புச் செய்யப் பட்ட பங்குகளை மீண்டும் வெளியிட்டதற்குச் சரிக் கட்டியது போக எஞ்சி யுள்ளதை முதல் காப்புக் கணக்கிற்கு மாற்ற.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | வேலூர் துணியகம் ப | | 1,40,000 | |
| | நேர்மைப் பங்குமுதல் கணக்கு | | | 70,000 |
| | 7 சதவீதம் முன்னுரிமைப் பங்குமுதல் கணக்கு | | | 50,000 |
| | வங்கிக் கணக்கு | | | 20,000 |
| | (வேலூர் துணியகத்திற்குத் தரவேண்டிய விலையை ஒன்று ரூ. 10 மதிப்புள்ள 7,000 நேர்மைப் பங்குகளையும், 5,000 முன்னுரிமைப் பங்குகளையும் முழுதும் செலுத்தப்பட்டவையாக வெளியிட்டும், மீதித் தொகைக்கு ரொக்கம் கொடுத்தும் விலையைத் தீர்த்தது.) | | | |
| | தொடக்கச் செலவுக் கணக்கு ப | | 1,200 | |
| | வங்கிக் கணக்கு | | | 1,200 |
| | (அமைப்புச் செலவுகள் ரூ. 1,200 ஆனது.) | | | |

## காஞ்சி பட்டு மாளிகையின்
## 1973 திசம்பர் 31-ற்கான இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | | ரூ. |
|---|---|---|---|---|
| **பங்கு முதல்:** | | **நிலைச் சொத்துகள்:** | | |
| **அதிகாரம் பெற்றது:** | | வாணிக நற்பெயர் .. | | 24,720 |
| ஒன்று ரூ. 10 மதிப்புடைய 25,000 7 சதவீதம் முன்னுரிமைப் பங்குகள் | 2,50,000 | கட்டடம் .. | | 75,000 |
| ஒன்று ரூ. 10 மதிப்புடைய 25,000 நேர்மைப் பங்குகள் .. | 2,50,000 | மனைத்துணைப் பொருள் .. | | 9,000 |
| | 5,00,000 | **நடப்புச் சொத்துகள்:** | | |
| **வெளியிட்டதும், ஒப்புக்கொள்ளப் பட்டதும் :** | | சரக்கிருப்பு .. | | 45,630 |
| ஒன்று ரூ. 10 மதிப்புடைய 24,900 8 சதவீதம் முன்னுரிமைப் பங்குகள் முழுதும் செலுத்தப்பெற்றவை .. | 2,49,000 | கடனாளிகள் .. | ரூ. 45,000 | |
| | | **கழி :** ஐயக் கடன் காப்பு .. | ரூ. 2,250 | 42,750 |
| ஒன்று ரூ. 10 மதிப்புடைய 24,750 நேர்மைப் பங்குகள் முழுதும் செலுத்தப்பெற்றவை .. | 2,47,500 | வங்கி .. | | 3,43,150 |

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| (மேற்கண்ட பங்குகளில் 5,000 8 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளையும் 7,000 நேர்மைப் பங்குகளையும் முழுதும் செலுத்தப் பெற்றவையாக ரொக்கத்திற்கன்றி வேறு மறுபயனுக்காக விற்குநர்க்கு ஒதுக்கப்பெற்றன.) | | **நடப்புச் சொத்துகளும், கடனும்:** | |
| ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குகள் .. | 2,100 | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு .. | 10,400 |
| **காப்பும், மிகுதியும்:** | | **பல்வகைச் செலவினம்:** | |
| முதல் காப்பு .. | 5,750 | தொடக்கச் செலவு .. | 1,200 |
| **பிணைக் கடன்:** | | | |
| வங்கிமேல் வரைப்பற்று .. | 20,000 | | |
| (ரூ. 25,000-ற்கான கடனீட்டுப் பத்திரங்கள் துணைப் பிணையமாக வெளியிடப்பட்டுள்ளன.) | | | |
| **நடப்புப் பொறுப்புகளும், ஒதுக்கும்:** | | | |
| கடனீந்தோர் .. | 47,500 | | |
| | 5,51,850 | | 5,51,850 |

**விற்குநர் பொருட்டுக் கடனாளிகளையும், கடனீந்தோரையும் வாங்கும் கம்பெனி எடுத்துக்கொள்ளல்**

பெரும்பாலும் கம்பெனிகள் தொழில் ஒன்றை வாங்கும் போழ்து அத் தொழில் நிறுவனத்திலுள்ள கடனாளிகளையும் கடனீந்தோரையும் எடுத்துக் கொள்வதில்லை. ஆனால், கடனாளிகள் தொகையைத் தண்டுவதற்கும் (வசூலிப்பதற்கும்) தண்டிய தொகையிலிருந்து கடனீந்தோருக்குச் செலுத்தவும் வாங்கும் கம்பெனி உடன்படுகிறது. கம்பெனி விற்குநர் பொருட்டுத் தண்டிய தொகையிலும், செலுத்திய தொகையிலும் குறிப்பிட்ட சதவீதக் கழிவினைப் பெறுவது வழக்கம். இவ்வாறு கடனாளிகளிடம் தண்டும் பொறுப்பினையும், கடனீந்தோருக்குச் செலுத்தும் பணியையும் விற்குநர் பொருட்டு வாங்கும் கம்பெனி ஏற்றுக் கொள்வதால், இப் பணியில் ஏற்படும் இலாப-நட்டத்தை (வராக் கடன், தள்ளுபடியளவு போன்றவை) விற்குநரே ஏற்றுகவேண்டும். இவற்றைக் கீழ்க்கண்டவாறு பதியவேண்டும் :

**விற்குநர் ஏடுகளில்**

(1) கடனாளிகள் தொகையை வாங்கும் கம்பெனி வசூலுக்காக எடுத்துக்கொள்ளும்பொழுது, வாங்கும் கம்பெனியின் இடைநிலைக் கணக்கில் பற்றும் (Purchasing Company Suspense Account) கடனாளிகள் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

'வாங்கும் கம்பெனியின் இடைநிலைக் கணக்கு' எனும் புதியதொரு கணக்கை இப்பொழுது தொடங்கப்பெறுவதை உணரவேண்டும். **வாங்கும் கம்பெனிக் கணக்கு என்பதும், வாங்கும் கம்பெனியின் இடைநிலைக் கணக்கு என்பதும் வேறு வேறு கணக்குகள்என்பதை மறத்தலாகாது.**

(2) கடனாளிகள் தொகை மீது ஐயக் கடனுக்காகவோ, தள்ளுபடிக்காகவோ காப்பு ஏற்படுத்தப்பட்டிருப்பின், அக் காப்புக் கணக்குகளில் பற்றும், வாங்கும் கம்பெனியின் இடைநிலைக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். எடுத்துக்காட்டாக, கடனாளிகள் ரூ. 10,000 என்றும், ஐயக்கடன் காப்புக் கணக்கு ரூ. 500 வரவிருப்பைக் காட்டுவதாகவும் கொண்டால் பதிவு கீழ்க்கண்டவாறிருக்கும் :

| | | | |
|---|---|---|---|
| ஐயக் கடன் காப்புக் கணக்கு | ப | 500 | |
| வாங்கும் கம்பெனியின் இடைநிலைக் கணக்கு | | | 500 |

(3) அவ்வாறே கடனீந்தோர் கணக்கை வாங்கும் கம்பெனியில் ஒப்படைக்கும்பொழுது கடனீந்தோர் கணக்கில் பற்றும், வாங்கும் கம்பெனி இடைநிலைக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(4) கடனீந்தோர் தொகை மீது காப்பு ஏற்படுத்தப்பட்டிருப்பின், இக் காப்புக் கணக்கை மாற்ற, வாங்கும் கம்பெனி இடைநிலைக் கணக்கில் பற்றும், கடனீந்தோர் மீது தள்ளுபடிக் காப்புக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

மேற்சொன்னவாறு கடனாளிகள் கணக்கையும், கடனீந்தோர் கணக்கையும் மாற்றுவதற்குத் தனித்தனியாகப் பதியாமல் ஒரே பதிவிலும் செய்யலாம். அதாவது, கடனீந்தோர்க் கணக்கில் பற்றும், கடனாளிகள் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். இவ்விரண்டிற்குமுள்ள வேறுபாட்டுத் தொகைக்கு வாங்கும் கம்பெனி இடைநிலைக் கணக்கில் பற்றோ, வரவோ வைக்கவேண்டும். எடுத்துக்காட்டாக, கடனாளிகள் தொகை ரூ. 10,000 ஆகவும், கடனீந்தோர் தொகை ரூ. 7,500 இருப்பதாகவும் கொண்டால் கீழ்க் கண்ட இரு முறையிலும் இவற்றைப் பதியலாம்.

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|---|
| | | | | ரூ. | ரூ. |
| | **முதல் முறை :** | | | | |
| | வாங்கும் கம்பெனி இடைநிலைக் கணக்கு | ப | | 10,000 | |
| | கடனாளிகள் கணக்கு | | | | 10,000 |
| | கடனீந்தோர் கணக்கு | ப | | 7,500 | |
| | வாங்கும் கம்பெனி இடைநிலைக் கணக்கு | | | | 7,500 |
| | **இரண்டாம் முறை :** | | | | |
| | கடனீந்தோர் கணக்கு | ப | | 7,500 | |
| | வாங்கும் கம்பெனி இடைநிலைக் கணக்கு | ப | | 2,500 | |
| | கடனாளிகள் கணக்கு | | | | 10,000 |

இவ்வாறு கடனாளிகள் தொகையையும் கடனீந்தோர் தொகையையும் வாங்கும் கம்பெனியின் கணக்கிற்கு மாற்றிய பிறகு, விற்குநர் மீண்டும் வாங்கும் கம்பெனியிலிருந்து தொகை பெற்றவுடன்தான் பதிவு செய்வர். வாங்குநரிடமிருந்து விவரங்கள் பெற்றவுடன் கீழ்க்கண்டவாறு பதிவுகள் செய்யப்படும்.

(5) வராக் கடன் ஏற்பட்டிருந்தாலும், கடனாளிகளுக்குத் தள்ளுபடி அளிக்கப்பட்டிருந்தாலும், புதிய பொறுப்பு ஒன்றினை விற்குநர்பொருட்டு வாங்குநர் அடைந்திருந்தாலும், வாங்கும் கம்பெனிக்குக் கழிவு கொடுக்கப்பட்டிருந்தாலும் அல்லது வேறு எவ்வகை நட்டமாயிருந்தாலும், அவற்றையெல்லாம் இலாப-நட்டச் சரிக்கட்டுக் கணக்கில் பற்றும், வாங்கும் கம்பெனி இடைநிலைக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். வராக் கடன் என நீக்கப்பட்டிருந்த தொகையை வாங்கும் கம்பெனி வசூலித்திருப்பினும், கடனீந்தோரிடமிருந்து தள்ளுபடி பெற்றிருப்பினும் அல்லது வேறு எவ்வகை ஆதாயம் கிட்டியிருப்பினும், வாங்கும் கம்பெனி இடைநிலைக் கணக்கில் பற்றும், இலாப-நட்டச் சரிக்கட்டுக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(6) இறுதியாக வாங்கும் கம்பெனியிடமிருந்து தனக்குச் சேரவேண்டிய தொகையை விற்குநர் பெறும்பொழுது, வங்கிக் கணக்கில் பற்றும், வாங்கும் கம்பெனி இடைநிலைக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(7) பின்னர், இலாப-நட்டச் சரிக்கட்டுக் கணக்கினை முதல் கணக்கிற்கு மாற்றவேண்டும். இலாப-நட்டச் சரிக்கட்டுக் கணக்கு வரவிருப்பைக் காட்டுமாயின், இலாப-நட்டச் சரிக்கட்டுக் கணக்கில் பற்றும், முதல் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். இது பற்றிருப்பைக் காட்டுமாயின், முதல் கணக்கில் பற்றும், இலாப-நட்டச் சரிக்கட்டுக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

**வாங்கும் கம்பெனியின் ஏடுகளில்**

(1) வசூலிக்கும் நோக்குடன் விற்குநரிடமிருந்து கடனாளிகள் கணக்கை, வாங்கும் கம்பெனி ஏற்கும்பொழுது, விற்குநரின் கடனாளிகள் கணக்கில் (Vendor's Debtors Account) பற்றும், விற்குநர் இடைநிலைக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

கடனாளிகள் தொகை மீது ஐயக்கடன் காப்போ அல்லது தள்ளுபடிக் காப்போ ஏற்படுத்தப்பட்டிருப்பின், அவை பற்றிய பதிவு ஒன்றும் தேவையில்லை.

(2) செலுத்தும் நோக்குடன் கடனீந்தோர் கணக்கை ஏற்றுக் கொள்ளும்பொழுது, விற்குநர் இடைநிலைக் கணக்கில் பற்றும், விற்குநரின் கடனீந்தோர் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

இவ்விரு பதிவுகளுக்கும் மாருக, ஒரே பதிவிலும் இந் நடவடிக்கையைச் செய்யலாம். அதாவது, விற்குநரின் கடனுளிகள் கணக்கில் பற்றும், விற்குநரின் கடனீந்தோர் கணக்கில் வரவும் முதலில் வைக்கவேண்டும். இவ்விரு கணக்குகளுக்குமுள்ள வேறுபாட்டுத் தொகையளவிற்கு விற்குநர் இடைநிலைக் கணக்கில் பற்ருே, வரவோ வைக்கவேண்டும். எடுத்துக்காட்டாக, விற்குநரின் கடனுளிகள் தொகை ரூ. 10,000-மும், கடனீந்தோர் தொகை ரூ. 7,500-ம் இருப்பதாகக் கொண்டால், கீழ்க்கண்டவாறு அதனைப் பதியவேண்டும் :

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | **முதல் முறை :** | | | |
| | விற்குநரின் கடனுளிகள் கணக்கு ப | | 10,000 | |
| | விற்குநர் இடைநிலைக் கணக்கு | | | 10,000 |
| | விற்குநர் இடைநிலைக் கணக்கு ப | | 7,500 | |
| | விற்குநரின் கடனீந்தோர் கணக்கு | | | 7,500 |
| | **இரண்டாம் முறை :** | | | |
| | விற்குநரின் கடனுளிகள் கணக்கு ப | | 10,000 | |
| | விற்குநரின் கடனீந்தோர் கணக்கு | | | 7,500 |
| | விற்குநர் இடைநிலைக் கணக்கு | | | 2,500 |

(3) கடனாளிகளிடமிருந்து வசூல் செய்யும்பொழுது, வங்கிக் கணக்கில் பற்றும், விற்குநரின் கடனாளிகள் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(4) கடனாளிகளுக்குத் தள்ளுபடியளித்திருந்தாலோ அல்லது வராக் கடன் ஏற்பட்டிருந்தாலோ (கடனாளிகளிடமிருந்து வசூலாகாத் தொகையிருப்பின்) விற்குநர் இடைநிலைக் கணக்கில் பற்றும், விற்குநரின் கடனாளிகள் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

எடுத்துக்காட்டாக, ரூ. 10,000 கடனாளிகளிடமிருந்து வசூல் செய்யவேண்டி இருக்கும்பொழுது, அவர்கட்கு அளித்த தள்ளுபடி ரூ. 200 என்றும், அவரிடமிருந்து ரூ. 300 வசூலாகவில்லையென்றும் கொண்டால், வராக்கடன் ரூ. 300 என்று பொருளாகும். இப்பொழுது கீழ்க்கண்டவாறு இந் நடவடிக்கைகளைப் பதியலாம் :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| வங்கிக் கணக்கு | ப | 9,500 | |
| விற்குநரின் கடனாளிகள் கணக்கு | | | 9,500 |
| விற்குநர் இடைநிலைக் கணக்கு | ப | 500 | |
| விற்குநரின் கடனாளிகள் கணக்கு (தள்ளுபடி ரூ. 200-ம், வராக்கடன் ரூ. 300-ம்.) | | | 500 |

(5) முன்னர் வராக் கடன் என நீக்கப்பட்டிருந்த தொகை இப்பொழுது வசூலாயிருப்பின், வங்கிக் கணக்கில் பற்றும் விற்குநர் இடைநிலைக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(6) கடனீந்தோருக்குத் தொகை செலுத்தும்பொழுது, விற்குநரின் கடனீந்தோர் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(7) கடனீந்தோர் தள்ளுபடியளித்திருப்பின், விற்குநரின் கடனீந்தோர் கணக்கில் பற்றும், விற்குநர் இடைநிலைக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(8) வாங்குநர் கூறியிருந்த கடனீந்தோரை விடக் கூடுதலாகத் தொகை செலுத்தவேண்டியிருப்பின் (அதாவது, பொறுப்பு ஒன்றினை விற்குநர் எழுத விட்டுவிட்டதை இப்பொழுது வாங்கும் கம்பெனி செலுத்தவேண்டியிருப்பின்), விற்குநர் இடைநிலைக் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

(9) ஆற்றிய பணிக்காகக் கழிவுபெற வேண்டியிருப்பின், விற்குநர் இடைநிலைக் கணக்கில் பற்றும், கழிவுக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

(10) இறுதியாக விற்குநருக்குச் சேரவேண்டிய தொகையைச் செலுத்தும்பொழுது, விற்குநர் இடைநிலைக் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

## எடுத்துக்காட்டு 65

1974 ஏப்ரல் 1-ல் வரையறு பொறுப்புடைய எஃகுப் பொருள் கம்பெனி குமரனின் தொழிலை வாங்கியது. கடனாளிகளையும், கடனீந்தோரையும் தவிர, பிற சொத்துகள், பொறுப்புகள் அனைத்தையும் எடுத்துக்கொண்டது. அந் நாளில் கடனாளிகள் தொகை ரூ. 40,000 ஆகவும், கடனீந்தோர் தொகை ரூ. 30,000 ஆகவும் இருந்தன. குமரனின்பொருட்டு கடனாளியிடம் தொகையைத் தண்டி (வசூலித்து), கடனீந்தோருக்குச் செலுத்த கம்பெனி ஒப்புக்கொண்டது. தண்டிய தொகை மீது 4 சதவீதமும், கடனீந்தோருக்கு அடைத்த தொகை மீது 2 சதவீதமும் கழிவு கம்பெனிக்குத் தரவேண்டும்.

கடனாளிகளில் $6\frac{1}{2}$ சதவீதம் வசூலாகவில்லை; அளித்த தள்ளுபடி ரூ. 200. வராக்கடன் என நீக்கப்பட்டிருந்த ரூ. 300-க்கான தொகை வசூலாகியது. கடனீந்தோர் கணக்கில் தவறுதலாக விடப்பட்டிருந்த ரூ. 500-க்கான தொகையையும் சேர்த்துச் செலுத்தவேண்டியிருந்தது. ஆயினும், மொத்தத்தில் ரூ. 29,750 செலுத்திக் கடனீந்தோர் கணக்கு நேர் செய்யப்பட்டது. மேற்கண்ட நடவடிக்கைகளைக் குமரனின் ஏடுகளிலும் எஃகுப் பொருள் கம்பெனியின் ஏடுகளிலும் எவ்வாறு பதிவாய் ?

**விடை :**

**குமரனின் ஏடுகளில்**

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | எஃகுப் பொருள் கம்பெனி இடைநிலைக் கணக்கு ப | | ரூ. 40,000 | ரூ. |
| | கடனாளிகள் கணக்கு | | | 40,000 |
| | (கடனாளிகளின் தொகையை வசூலிக்கும் பொருட்டு, வாங்கும் கம்பெனியிடம் ஒப்படைத்தது.) | | | |
| | கடனீந்தோர் கணக்கு ப | | 30,000 | |
| | எஃகுப் பொருள் கம்பெனி இடைநிலைக் கணக்கு | | | 30,000 |
| | (கடனீந்தோருக்குத் தொகை செலுத்தும் பொறுப்பை வாங்கும் கம்பெனியிடம் ஒப்படைத்தது.) | | | |
| | இலாப-நட்டச் சரிக்கட்டுக் கணக்கு ப | | 2,800 | |
| | எஃகுப் பொருள் கம்பெனி இடைநிலைக் கணக்கு | | | 2,800 |
| | (கடனாளித் தொகையில் $6\frac{1}{2}$ சதவீதம் வராக் கடனையும், அளித்த தள்ளுபடி ரூ. 200-ஐயும் பதிய.) | | | |
| | எஃகுப் பொருள் கம்பெனி இடைநிலைக் கணக்கு ப | | 300 | |
| | இலாப-நட்டச் சரிக்கட்டுக் கணக்கு | | | 300 |
| | (நீக்கப்பட்ட வராக் கடன் வசூலானது.) | | | |

குமரனின் ஏடுகளில்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | இலாப-நட்டச் சரிக்கட்டுக் கணக்கு ப | | 500 | |
| | எஃகுப் பொருள் கம்பெனி இடைநிலைக் கணக்கு | | | 500 |
| | (கடனீந்தோர் கணக்கில் விட்டுவிட்டத் தொகையை வாங்கும் கம்பெனி செலுத்தியது.) | | | |
| | எஃகுப் பொருள் கம்பெனி இடைநிலைக் கணக்கு ப | | 750 | |
| | இலாப-நட்டச் சரிக் கட்டுக் கணக்கு | | | 750 |
| | (கடனீந்தோர் அளித்த தள்ளுபடியை இலாப-நட்டச் சரிக்கட்டுக் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| | இலாப-நட்டச் சரிக்கட்டுக் கணக்கு ப | | 2,095 | |
| | எஃகுப் பொருள் கம்பெனி இடைநிலைக் கணக்கு | | | 2,095 |
| | (வாங்குநருக்குச் சேர வேண்டிய கழிவுத் தொகை.) | | | |
| | வங்கிக் கணக்கு ப | | 5,655 | |
| | எஃகுப் பொருள் கம்பெனி இடைநிலைக் கணக்கு | | | 5,655 |
| | (கடனாளிகளிடம் வசூலித்துக் கடனீந்தோருக்குச் செலுத்திக் கழிவு போக எஞ்சிய தொகையை வாங்குநரிடமிருந்து பெற்றது.) | | | |

**விளக்கக் குறிப்பு :**

| | | | ரூ. |
|---|---|---|---|
| (1) | கடனாளியிடம் வசூலித்த தொகை : | | |
| | கடனாளிகள் | | 40,000 |
| கழி : | வராக் கடன் (6½ சதவீதம்) | 2,600 | |
| | அளித்த தள்ளுபடி | 200 | |
| | | | 2,800 |
| | | | 37,200 |
| கூட்டு : | முன்னர் நீக்கப்பட்ட வராக்கடன் திரும்பப் பெற்றது | | 300 |
| | | | 37,500 |
| (2) | கடனீந்தோர் அளித்த தள்ளுபடி : | | |
| | கடனீந்தோர் | | 30,000 |
| கூட்டு : | விட்டுவிட்டப் பொறுப்பை இப்பொழுது தீர்த்தது | | 500 |
| | | | 30,500 |
| கழி : | மொத்தம் கடனீந்தோருக்குச் செலுத்தியது | | 29,750 |
| | அளித்த தள்ளுபடி | | 750 |
| (3) | விற்குநருக்குச் சேரவேண்டிய கழிவு : | | |
| | கடனாளிகளிடம் வசூலான தொகையில் 4 சதவீதம் (37,500 × 4/100) | | 1,500 |
| கூட்டு : | கடனீந்தோருக்குச் செலுத்திய தொகை மீது 2 சதவீதம் (29,750 × 2/100) | | 595 |
| | விற்குநருக்கு மொத்தம் செலுத்திய கழிவுத் தொகை | | 2,095 |

| | | ரூ. |
|---|---|---|
| (4) | எஃகுப் பொருள் கம்பெனியிடமிருந்து (வாங்குநர்) இறுதியாகப் பெற்ற தொகை : | |
| | கடனாளிகளிடம் வசூலான தொகை | 37,500 |
| கழி : | கடனீந்தோருக்குச் செலுத்தியது 29,750 | |
| | எஃகுப் பொருள் கம்பெனிக்குச் சேரவேண்டிய தொகை 2,095 | |
| | | 31,845 |
| | | 5,655 |

**எஃகுப்பொருள் கம்பெனியின் ஏடுகளில்**—(வாங்குநர்)

| நாள் | விவரம் | பே.ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | விற்குநரின் கடனாளிகள் கணக்கு ப | | 40,000 | |
| | விற்குநர் இடைநிலைக் கணக்கு | | | 40,000 |
| | [குமரனின் (வாங்குநர்) பொருட்டு அவர் கடனாளிகள் தொகையைத் தண்டும் நோக்குடன் ஏற்றுக் கொண்டது.] | | | |
| | விற்குநர் இடைநிலைக் கணக்கு ப | | 30,000 | |
| | விற்குநரின் கடனீந்தோர் கணக்கு | | | 30,000 |
| | (விற்குநர்பொருட்டு அவரின் கடனீந்தோருக்குச் செலுத்த கடனீந்தோர் கணக்கு ஏற்றுக் கொண்டது.) | | | |

எஃகுப்பொருள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | விற்குநர் இடைநிலைக் கணக்கு ப | | 2,800 | |
| | விற்குநரின் கடனாளிகள் கணக்கு | | | 2,800 |
| | (கடனாளிகளில் $6\frac{1}{2}$ சதவீதம் வசூலாகாததும், அவர்கட்கு அளித்த தள்ளுபடி ரூ. 200-ம்.) | | | |
| | வங்கிக் கணக்கு ப | | 300 | |
| | விற்குநர் இடைநிலைக் கணக்கு | | | 300 |
| | (நீக்கப்பட்ட வராக்கடன் வசூலானது.) | | | |
| | வங்கிக் கணக்கு ப | | 37,500 | |
| | விற்குநரின் கடனாளிகள் கணக்கு | | | 37,500 |
| | (மொத்தத்தில் கடனாளிகளிடம் வசூலான தொகை.) | | | |
| | விற்குநர் இடைநிலைக் கணக்கு ப | | 500 | |
| | வங்கிக் கணக்கு | | | 500 |
| | (விட்டுவிட்டப் பொறுப்பினை விற்குநர் பொருட்டுச் செலுத்தியது.) | | | |
| | விற்குநரின் கடனீந்தோர் கணக்கு ப | | 750 | |
| | விற்குநர் இடைநிலைக் கணக்கு | | | 750 |
| | (விற்குநர் பொருட்டுக் கடனீந்தோரிடம் பெற்ற தள்ளுபடி.) | | | |

எ∴குப் பொருள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | விற்குநரின் கடனீந்தோர் கணக்கு ப | | 29,750 | |
| | வங்கிக் கணக்கு | | | 29,750 |
| | (விற்குநர் பொருட்டுக் கடனீந்தோருக்கு இறுதியாகச் செலுத்தியது.) | | | |
| | விற்குநர் இடைநிலைக் கணக்கு ப | | 2,095 | |
| | கழிவுக் கணக்கு | | | 2,095 |
| | (கழிவு பெறவேண்டியது: வசூலான கடனுளிகள் தொகையில் 4 சதவீதம் = 37,500 × 4/100 = ரூ. 1,500 கடனுளிகளுக்குச் செலுத்திய தொகையில் 2 சதவீதம் = 29,750 × 2/100 = ரூ. 595.) | | | |
| | விற்குநர் இடைநிலைக் கணக்கு ப | | 5,655 | |
| | வங்கிக் கணக்கு | | | 5,655 |
| | (விற்குநருக்கு இறுதியாகச் சேரவேண்டிய தொகையைச் செலுத்தியது.) | | | |

## எடுத்துக்காட்டு 66

இளங்கோ லிமிட்டெட் ரூ. 3,00,000 அதிகாரம் பெற்ற பங்கு முதலுடன் அமைக்கப்பெற்றது. இது ஒன்று ரூ. 10 மதிப்புடைய 20,000 நேர்மைப் பங்குகளாகவும், ஒன்று ரூ. 100 மதிப்புள்ள 1,000, 8 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளாகவும் பிரிக்கப்பட்டிருக்கிறது. இது சாத்தனுரின் வியாபாரத்தை ரூ. 80,000-ற்கு 1973 சனவரி 1-ல் வாங்கியது. 1972 திசம்பர் 31ஆம் நாளுக்குரிய சாத்தனுரின் இருப்புநிலைக் குறிப்பு கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|
| சாத்தனுரின் முதல் | 95,000 | பொறிவகை | | 30,000 |
| கடனீந்தோர் | 25,000 | கட்டடம் | | 35,000 |
| கடன் | 30,000 | சரக்கிருப்பு | | 32,500 |
| | | கடனாளிகள் | 50,000 | |
| | | **கழி :** காப்பு | 1,500 | 48,500 |
| | | வங்கி | | 4,000 |
| | 1,50,000 | | | 1,50,000 |

கடனாளிகள், கடனீந்தோர் தவிர பிற சொத்துகளையும் பொறுப்புகளையும் இளங்கோ லிமிட்டெட் ஏற்றுக்கொண்டது. விலையினை ரூ. 44,000-ற்கு முழுதும் செலுத்தப்பட்ட நேர்மைப் பங்குகளையும் (10 சதவீதம் முனைமத்தில்), ரூ. 22,000-ற்கு, 8 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளையும் (10சதவீதம் முனைமத்தில்), மீதிக்கு ரொக்கத்தையும் கொடுத்துச் செலுத்தவேண்டியது. மீதிப் பங்குகள் அனைத்தும் 10 சதவீதம் முனைமத்தில் பொதுமக்களிடம் வெளியிடப்பட்டு முழுப்பணமும் பெறப்பட்டது.

ரூ. 100 மதிப்புள்ள 300, 7 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை 5 சதவீதம் தள்ளுபடியில் வெளியிட்டும், மீதிக்கு ரொக்கம் கொடுத்தும் கடன் கணக்கைத் தீர்க்கவேண்டியது.

விற்குநரின் பொருட்டுக் கடனாளிகளிடம் வசூல் செய்து, கடனீந்தோருக்குச் செலுத்த கம்பெனி ஒப்புக்கொள்கிறது.

வசூலான தொகையில் 4 சதவீதமும், கடனீந்தோருக்குச் செலுத்திய தொகையில் 1 சதவீதமும் கழிவு தரவேண்டும். ரூ. 2,500 வராக் கடனாகிறது. ரூ. 300 தள்ளுபடி அளிக்கப்பட்டது. கடனீந்தோர் வழங்கிய தள்ளுபடி ரூ. 150 ஆனால், விற்குநர் தள்ளுபடி செய்திருந்த மாற்றுச்சீட்டு மீது (Bills discounted) ரூ. 250 பொறுப்பு ஏற்கவேண்டியிருந்தது.

சாத்தனாருக்கு மீதித் தொகையை ரூ. 100 மதிப்புள்ள 200, 7 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை 95 சதவீதத்திலும், மீதிக்கு ரொக்கமும் கொடுத்துக் கணக்கைத் தீர்க்கவேண்டியது.

சாத்தனார் ஏடுகளிலும், இளங்கோ லிமிட்டெடின் ஏடுகளிலும் வேண்டிய பேரேட்டுக் கணக்குகளைத் தயாரித்துக் கம்பெனியின் ஏட்டில் இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

**விடை :**

**விளக்கக் குறிப்பு :**

கொள்முதல் மறுபயன் கீழ்க்கண்டவாறு தீர்க்கப்படுகிறது :

| | ரூ. |
|---|---|
| நேர்மைப் பங்குகள் (பங்கு ஒன்று ரூ. 11 வீதம் 4,000 நேர்மைப் பங்குகள்) | 44,000 |
| 8 சதவீதம் முன்னுரிமைப் பங்குகள் (ஒன்று ரூ. 110 வீதம் 200 முன்னுரிமைப் பங்குகள்) | 22,000 |
| ரொக்கம் | 14,000 |
| | 80,000 |

கடனாளியிடம் வசூலித்தது :

| | | | |
|---|---|---|---|
| மொத்தக் கடனாளிகள் தொகை | | | 50,000 |
| **கழி** : வராக்கடன் | ரூ. | 2,500 | |
| தள்ளுபடி | ரூ. | 300 | |
| | | | 2,800 |
| | | | 47,200 |

| கடனீந்தோருக்குச் செலுத்தியது : | | ரூ. |
|---|---|---|
| கடனீந்தோர் மொத்தத் தொகை | | 25,000 |
| **கழி** : வழங்கிய தள்ளுபடி | | 150 |
| | | 24,850 |
| **கூட்டு** : தள்ளுபடி செய்திருந்த மாற்றுச் சீட்டு மீதான பொறுப்பு | | 250 |
| | | 25,100 |

| மொத்தக் கழிவு : | | |
|---|---|---|
| கடனாளிகள் மீது 4 சதவீதம் (47,200×4/100) | | 1,888 |
| கடனீந்தோர் மீது 1 சதவீதம் கழிவு (25,100×1/100) | | 251 |
| | | 2,139 |

| | | |
|---|---|---|
| சாத்தனுருக்குச் சேரவேண்டியது : கடனாளியிடம் வசூலித்தது | | 47,200 |
| **கழி** : | | |
| கடனீந்தோருக்குச் செலுத்தியது | ரூ. 25,100 | |
| கழிவு | ரூ. 2,139 | |
| | | 27,239 |
| | | 19,961 |

| | | |
|---|---|---|
| சாத்தனுருக்கு வெளியிட்ட கடனீட்டுப் பத்திரங்கள் ஒன்று ரூ. 95 வீதம் 200 கடனீட்டுப் பத்திரங்கள் | 200×95 ரூ. | 19,000 |
| சாத்தனுருக்குக் கொடுத்த ரொக்கம் | ரூ. | 961 |
| | ரூ. | 19,961 |

**சாத்தனூர் ஏடுகளில்**
**தீர்வுக் கணக்கு**
(Realisation Account)

பற்று | | | | | | | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 சன. 1 | பொறிவகை .. | | 30,000 | 1973 சன. 1 | ஐயக் கடன் காப்புக் க/கு | | 1,500 |
| | கட்டடம் .. | | 35,000 | | கடன் .. | | 30,000 |
| | சரக்கிருப்பு .. | | 32,500 | | இளங்கோ லிமிட்டெட் .. | | 80,000 |
| | வங்கி .. | | 4,000 | | | | |
| | முதல் க/கு—இலாபம் மாற்றப்பெறுகிறது .. | | 10,000 | | | | |
| | | | 1,11,500 | | | | 1,11,500 |

### கடனாளிகள் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 50,000 | 1973 சன. 1 | இளங்கோ லிமிட்டெட் இடைநிலைக் க/கு .. | | 50,000 |

### கடனீந்தோர் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 சன. 1 | இளங்கோ லிமிட்டெட் இடைநிலைக் க/கு .. | | 25,000 | 1973 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 25,000 |

பற்று **ஐயக் கடன் காப்புக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 சன. 1 | தீர்வுக் க/கு .. | | 1,500 | 1973 சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 1,500 |

பற்று **இளங்கோ லிமிட்டெட் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 சன. 1 | தீர்வுக் க/கு .. | | 80,000 | 1973 சன. 1 | இளங்கோ லிமிட்டெடில் நேர்மைப் பங்குகள் .. | | 44,000 |
| | | | | | முன்னுரிமைப் பங்குகள் .. | | 22,000 |
| | | | | | வங்கி .. | | 14;000 |
| | | | 80,000 | | | | 80,000 |

## சாத்தனாரின் முதல் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1973 | | | | 1973 | | | |
| சன. 1 | இளங்கோ லிமிட்டெடில் நேர்மைப் பங்குகள் ரூ. 44,000 முன்னுரிமைப் பங்குகள் ரூ. 22,000 | | 66,000 | சன. 1 | இருப்பு கீ/கொ .. | | 95,000 |
| | வங்கி .. | | 14,000 | ,, | தீர்வுக் க/கு—இலாபம்.. | | 10,000 |
| | இலாப-நட்டச் சரிக்கட்டுக் க/கு—நட்டம் .. | | 5,039 | | | | |
| | இளங்கோ லிமிட்டெடின் கடனீட்டுப் பத்திரங்கள்.. | | 19,000 | | | | |
| | வங்கி .. | | 961 | | | | |
| | | | 1,05,000 | | | | 1,05,000 |

## இலாப-நட்டச் சரிக்கட்டுக் கணக்கு

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | இளங்கோ லிமிட்டெட் இடைநிலைக் க/கு .. | | | | இளங்கோ லிமிட்டெட் இடைநிலைக் க/கு— பெற்ற தள்ளுபடி .. | | 150 |
| | வராக்கடன் ரூ. 2,500 | | | | | | |
| | தள்ளுபடி ரூ. 300 | | | | முதல் க/கு— மாற்றப்படுகிறது .. | | 5,039 |
| | தள்ளுபடி செய்யப்பட்ட மாற்றுச்சீட்டு மீதான பொறுப்பு .. ரூ. 250 | | | | | | |
| | கழிவு .. ரூ. 2,139 | | 5,189 | | | | |
| | | | 5,189 | | | | 5,189 |

பற்று **இளங்கோ லிமிட்டெடின் இடைநிலைக் கணக்கு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1973 சன. 1 | கடனாளிகள் க/கு .. | | 50,000 | 1973 சன. 1 | கடனீந்தோர் க/கு .. | | | 25,000 |
| | இலாப-நட்டச் சரிக்கட்டுக் க/கு—தள்ளுபடி பெற்றது .. | | 150 | | இலாப-நட்டச் சரிக்கட்டுக் க/கு: | | | |
| | | | | | வராக்கடன் | ரூ. 2,500 | | |
| | | | | | தள்ளுபடி | ரூ. 300 | | |
| | | | | | தள்ளுபடி செய்யப்பட்ட மாற்றுச்சீட்டு மீதான பொறுப்பு | ரூ. 250 | | |
| | | | | | கழிவு | ரூ. 2,139 | | 5,189 |
| | | | | | இளங்கோ லிமிட்டெட் கடனீட்டுப் பத்திரங்கள் | | | 19,000 |
| | | | | | வங்கி .. | | | 961 |
| | | | 50,150 | | | | | 50,150 |

## இளங்கோ லிமிட்டெடின் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு

பற்று வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | இளங்கோ லிமிட்டெட் இடைநிலைக் க/கு .. | | 19,000 | | முதல் க/கு .. | | 19,000 |

## வங்கிக் கணக்கு

பற்று வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| | இளங்கோ லிமிட்டெட் .. | | 14,000 | | சாத்தனாரின் முதல் க/கு | | 14,000 |
| | இளங்கோ லிமிட்டெட் இடைநிலைக் க/கு .. | | 961 | | சாத்தனாரின் முதல் க/கு | | 961 |
| | | | 14,961 | | | | 14,961 |

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | தொழில் கொள்முதல் க/கு ப | | 80,000 | |
| | சாத்தனூர் | | | 80,000 |
| | (....நாளில் செய்த ஒப்பந்தத்தின்படி சாத்தனூரின் தொழிலை வாங்கியது.) | | | |
| | பொறிவகை ப | | 30,000 | |
| | கட்டடம் ப | | 35,000 | |
| | சரக்கிருப்பு ப | | 32,500 | |
| | வங்கி ப | | 4,000 | |
| | வாணிக நற்பெயர் ப | | 8,500 | |
| | கடன் | | | 30,000 |
| | தொழில் கொள்முதல் க/கு | | | 80,000 |
| | (....நாளில் செய்து கொண்ட ஒப்பந்தத்தின் படி சாத்தனூரின் பல்வகைச் சொத்துகளையும் கடனையும் எடுத்துக் கொண்டது.) | | | |
| | வங்கிக் க/கு ப | | 2,64,000 | |
| | நேர்மைப் பங்கு முதல் க/கு | | | 1,60,000 |
| | 8 சதவீதம் முன்னுரிமைப் பங்கு முதல் க/கு | | | 80,000 |
| | பங்கு முனைமக் க/கு | | | 24,000 |
| | (ஒன்று ரூ. 10 மதிப்புடைய 16,000 நேர்மைப் பங்குகளையும், ஒன்று ரூ. 100 மதிப்புடைய 800, 8 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளையும் 10 சதவீதம் முனைமத்தில் வெளியிட்டுப் பணம் முழுவதும் பெற்றது.) | | | |

குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | சாத்தனூர் ப | | 80,000 | |
| | நேர்மைப் பங்கு முதல் க/கு | | | 40,000 |
| | 8 சதவீதம் முன்னுரிமைப் பங்குமுதல் க/கு | | | 20,000 |
| | பங்கு முனைமக் கணக்கு | | | 6,000 |
| | வங்கி | | | 14,000 |
| | (....ஒப்பந்தப்படி கொள் முதல் மறுபயனை 4,000 முன்னுரிமைப் பங்குகளை யும், 200 நேர்மைப் பங்குகளையும் 10 சதவீதம் முனைமத்தில் முழுதும் செலுத்தப்பெற்றவை யாக வெளியிட்டும் மீதிக்கு ரொக்கம் செலுத்தியும் தீர்த்தது.) | | | |
| | கடன் க/கு ப | | 30,000 | |
| | கடனீட்டுப்பத்திர தள்ளு படிக் க/கு ப | | 1,500 | |
| | 7 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் க/கு | | | 30,000 |
| | வங்கிக் க/கு | | | 1,500 |
| | (ஒன்று ரூ. 100 மதிப் புடைய 300, 7 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை 5 சதவீதம் தள்ளுபடியில் வெளியிட்டும் மீதிக்கு ரொக்கம் கொடுத்தும் கடனை அடைத்தது.) | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | சாத்தனுரின் கடனுளிகள் க/கு ப | | 50,000 | |
| | சாத்தனுரின் இடைநிலைக் க/கு | | | 50,000 |
| | (சாத்தனுரின் கடனுளிகளை விற்குநரின் முகவராக இருந்து வசூலுக்காக எடுத்துக்கொண்டது.) | | | |
| | சாத்தனுரின் இடைநிலைக் க/கு ப | | 25,000 | |
| | சாத்தனுரின் கடனீந்தோர் க/கு | | | 25,000 |
| | (சாத்தனுரின் கடனீந்தோரை விற்குநரின் முகவராக இருந்து செலுத்த எடுத்துக் கொண்டது.) | | | |
| | வங்கிக் க/கு ப | | 47,200 | |
| | சாத்தனுரின் கடனுளிகள் க/கு | | | 47,200 |
| | (சாத்தனுரின் கடனுளிகளிடமிருந்து ரூ. 47,200 வசூலானதும்.) | | | |
| | சாத்தனுரின் இடைநிலைக் க/கு ப | | 2,800 | |
| | சாத்தனுரின் கடனுளிகள் க/கு | | | 2,800 |
| | (சாத்தனுரின் கடனுளிகட்கு அளித்த தள்ளுபடி ரூ. 300-ம், வசூலாகாத தொகை ரூ. 2,500-ம்.) | | | |

குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | சாத்தனாரின் கடனீந்தோர் க/கு ப | | ரூ. 24,850 | ரூ. |
| | வங்கிக் க/கு | | | 24,850 |
| | (சாத்தனாரின் கடனீந்தோர்க்குச் செலுத்தித் தீர்த்தது.) | | | |
| | சாத்தனாரின் கடனீந்தோர்க் க/கு ப | | 150 | |
| | சாத்தனாரின் இடைநிலைக் க/கு | | | 150 |
| | (சாத்தனாரின் கடனீந்தோரிடம் பெற்ற தள்ளுபடி.) | | | |
| | சாத்தனாரின் இடைநிலைக் க/கு ப | | 250 | |
| | வங்கிக் க/கு | | | 250 |
| | (சாத்தனார் தள்ளுபடி செய்திருந்த மாற்றுச் சீட்டுகள் மீதான புதிய பொறுப்பை ஏற்க வேண்டியிருந்தது.) | | | |
| | சாத்தனாரின் இடைநிலைக் க/கு ப | | 2,139 | |
| | கழிவுக் க/கு | | | 2,139 |
| | (சாத்தனாரின் கடனாளிகளிடம் வசூலித்துக் கடனீந்தோர்க்குச் செலுத்தியதில் பெற்ற கழிவு : கடனாளிகள் ரூ. $47,200 \times \frac{4}{100} = 1888$ கடனீந்தோர் (24,850+250) ரூ. $25,100 \times \frac{1}{100} = 251$ | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|---|
| | சாத்தனாரின் இடைநிலைக் க/கு | ப | | 19,961 | |
| | கடனீட்டுப்பத்திர தள்ளுபடிக் க/கு | ப | | 1,000 | |
| | 7 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் க/கு | | | | 20,000 |
| | வங்கிக் க/கு | | | | 961 |
| | (சாத்தனாருக்குச் சேர வேண்டிய தொகைக்கு ரூ. 961-க்கு ரொக்கங் கொடுத்தும், மீதிக்கு ரூ. 100 மதிப்புடைய 200 கடனீட்டுப் பத்திரங்களை 5 சதவீதம் தள்ளுபடியில் வெளியிட்டும் கணக்கைத் தீர்த்தது.) | | | | |

**இளங்கோ லிமிட்டெடின்**
**1973 சனவரி 1-ற்கான இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| **பங்கு முதல்:** | | **நிலைச் சொத்துகள்:** | |
| ஒன்று ரூ. 10 மதிப்புடைய 20,000 நேர்மைப் பங்குகள் .. | 2,00,000 | வாணிக நற்பெயர் .. | 8,500 |
| ஒன்று ரூ. 100 மதிப்புடைய 1,000 8 சதவீதம் முன்னுரிமைப் பங்குகள் | 1,00,000 | கட்டடம் .. | 35,000 |
| | | பொறிவகை .. | 30,000 |
| | 3,00,000 | | |
| **வெளியிட்டதும் ஒப்புக்கொள்ளப் பட்டதும்:** | | **நடப்புச் சொத்துகள்:** | |
| ஒன்று ரூ. 10 மதிப்புடைய 20,000 நேர்மைப் பங்குகள் முழுதும் செலுத்தப்பெற்றவை .. | 2,00,000 | சரக்கிருப்பு .. | 32,500 |
| | | வங்கி .. | 2,73,639 |

**1973 சனவரி 1-ற்கான இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)**

| பொறுப்புகள் | | சொத்துகள் | |
|---|---|---|---|
| ஒன்று ரூ. 100 மதிப்புடைய 1,000 8 சதவீதம் முன்னுரிமைப் பங்குகள் முழுதும் செலுத்தப்பெற்றவை .. | 1,00,000 | **பல்வகைச் செலவினம்:** | |
| (மேற்கண்ட பங்குகளில் 4,000 நேர்மைப் பங்குகளையும், 200 முன்னுரிமைப் பங்குகளையும் முழுதும் செலுத்தப்பெற்றவையாக ரொக்கத்திற்கன்றி வேறு மறு பயனுக்காக ஒதுக்கப்பட்டுள்ளன.) | | கடனீட்டுப் பத்திரத் தள்ளுபடி .. | 2,500 |
| **காப்பும் மிகுதியும்:** | | | |
| பங்கு முனைமக் க/கு .. | 30,000 | | |
| இலாப-நட்டக் க/கு (கழிவுக் க/கு) .. | 2,139 | | |
| **பிணைக் கடன்:** | | | |
| 7 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் .. | 50,000 | | |
| | 3,82,139 | | 3,82,139 |

## தொழிலை வாங்கும்பொழுது அதே கணக்கேடுகளில் பதிதல்
(When same books are used)

மேலே விளக்கிய முறை, கூட்டுப் பங்குக் கம்பெனி, தொழில் ஒன்றை வாங்கிப் புதுக் கணக்கேடுகளைத் தொடங்கிப் பதியும் பொழுது பின்பற்ற வேண்டியதாகும். ஆனால், ஒரு கூட்டு நிறுவனம் கூட்டுப் பங்குக் கம்பெனியாக மாற்றிக்கொள்ளும் பொழுது, பெரும்பாலும் இதுகாறும் எழுதிவந்த ஏடுகளிலேயே கணக்குகள் தொடர்ந்து எழுதப்படுகின்றன. இவ்வாறு கம்பெனி அதே ஏடுகளிலேயே கணக்குகளைத் தொடர்ந்து எழுதிவர விரும்பின், கீழ்க்கண்ட பதிவுகளைச் செய்யவேண்டும்.

*(1)* சொத்துகளையும் பொறுப்புகளையும் மறு மதிப்பீடு செய்தல்: கணக்குகள் தொடர்ந்து வைத்திருக்கப்படுவதால், அவற்றை முடிக்கப் பதிவு எதுவும் தேவையில்லை. ஆனால், வாங்கும் கம்பெனி சொத்துகளையும் பொறுப்புகளையும் மறு மதிப்பீடு செய்ய விரும்பின், அவைகளில் ஏற்படும் மாற்றங்களை இலாப-நட்டச் சரிக்கட்டுக் கணக்கு அல்லது மறு மதிப்பீட்டுக் கணக்கு (Revaluation Account) எனும் கணக்கிற்குக் கொண்டு வரவேண்டும். கூட்டாளி ஒருவர் சேரும்பொழுது, கூட்டு நிறுவனத்தில் செய்த பதிவுகள்போன்றே இப்பொழுது செய்யவேண்டும்.

*(2)* இம் மறு மதிப்பீட்டுக் கணக்கினை இப்பொழுது முடிக்கவேண்டும். மறு மதிப்பீட்டுக் கணக்கு வரவிருப்பைக் காட்டுமாயின், சொத்துகளையும் பொறுப்புகளையும் மறு மதிப்பீடு செய்வதில் ஆதாயம் கிட்டியுள்ளதாகப் பொருள். இதனைத் தனியாள் வாணிகராயிருப்பின், அவரின் முதல் கணக்கிற்கும், கூட்டு நிறுவனமாயின் இலாப-நட்டப் பகிர்வு வீதத்தில் கூட்டாளிகளின் முதல் கணக்குகட்கும், விற்குநர் ஒரு கூட்டுப் பங்குக் கம்பெனியாயிருப்பின், பங்குதாரர்கள் கணக்கிற்கும் எடுத்துச் செல்லவேண்டும்.

இம் மறு மதிப்பீட்டுக் கணக்கு, பற்றிருப்பைக் காட்டுமாயின், அதனை மேற்சொன்ன கணக்குகளில் பற்றும், மறு மதிப்பீட்டுக் கணக்கில் வரவும் வைத்து முடிக்கவேண்டும்.

*(3)* கம்பெனி சில சொத்துகளையும் பொறுப்புகளையும் எடுத்துக் கொள்ளாமல் இருக்கலாம். இவ்வாறு கம்பெனி எடுத்துக் கொள்ளாச் சொத்துகளையும் பொறுப்புகளையும் முதல் கணக்கிற்கு (கூட்டு நிறுவனமாயின், இலாப-நட்டப் பகிர்வு வீதத்தில்

கூட்டாளிகளின் முதல் கணக்குகட்கு) எடுத்துச் செல்லவேண்டும். ஆனால், சொத்துகள் ஏடுகளில் காணப்படும் அதே மதிப்பளவில் இருக்குமாயின் (விலை அதனின்றும் கூடாமலும் குறையாமலும் இருக்குமாயின்), அச் சொத்துகளைக் கூட்டாளிகளின் முதல் கணக்குகட்கு முதல் விகிதத்தில் (Capital ratio) எடுத்துச்செல்ல வேண்டும். சொத்தின் மதிப்பு சிறிதும் மாறாது இருந்தால் மட்டுமே இவ்வாறு முதல் வீதத்தில் எடுத்துச் செல்லவேண்டும். ரொக்கத்தைத் தவிர பெரும்பாலும் சொத்துகளின் மதிப்பு மாறிக்கொண்டுதான் இருக்கும்.

விற்குநர் ஒரு கம்பெனியாயிருப்பின், வாங்குநர் எடுத்துக் கொள்ளாச் சொத்துகளை விற்று, அதனின்றும் வாங்குநர் எடுத்துக் கொள்ளாப் பொறுப்புக் கணக்கைத் தீர்க்கவேண்டும்.

விற்குநர் ஏடுகளில் சரிக்கட்டப்படாத இலாபமோ நட்டமோ இருப்பினும் அல்லது காப்புக் கணக்கிருப்பினும், அவற்றை இலாப-நட்டப் பகிர்வு வீதத்தில் முதல் கணக்குகட்கு மாற்ற வேண்டும்.

இவ்வாறு சரிக்கட்டிய பின் முதல் கணக்குகளை முடிக்க வேண்டும். முதல் கணக்கில் அல்லது கூட்டாளிகளின் முதல் கணக்குகளில் அல்லது பங்குதாரரர் கணக்கில் அவை காட்டும் இருப்பிற்குப் பற்று வைத்துப் பங்குமுதல் கணக்கில் (பங்குகள் தரப்படுமாயின் அத் தொகைக்கு) கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கில் (கடனீட்டுப் பத்திரங்கள் வழங்கப்படுமாயின், அத் தொகையளவிற்கு) வங்கிக் கணக்கில் (ரொக்கம் செலுத்தப் பெறுமாயின்) வரவும் வைத்து மேற்சொன்ன கணக்குகளை முடிக்கலாம்.

விற்குநர் கணக்குகளை முடிப்பதற்கும், வாங்கும் கம்பெனியின் ஏடுகளில் கணக்குகளைத் தொடங்குவதற்கும் வேறு பதிவுகள் செய்யப்படுவதில்லை என்பதை உணரவேண்டும்.

மறு மதிப்பீட்டுக் கணக்குத் தொடங்கி அது காட்டும் இருப்பினை முதல் கணக்கிற்கு எடுத்துச் செல்வதற்கான பதிவுக்கும், பின்னர் வாங்கும் கம்பெனி எடுத்துக்கொள்ளாச் சொத்துகளையும் பொறுப்புகளையும் முதல் கணக்குகட்கு மாற்றும் பதிவிற்குப் பதிலாக வேறு முறையிலும் பதியலாம்.

(அ) கொள்முதல் மறுபயன் தொகைக்குத் தொழில் வாங்குதல் கணக்கில் (Purchase of Business Account) பற்று

வைக்கவேண்டும். வெளியிடும் பங்களவிற்குப் பங்குமுதல் கணக்கிலும், வெளியிடும் கடனீட்டுப்பத்திரங்கள் அளவிற்குக் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கிலும், செலுத்தும் ரொக்கத்திற்கு ரொக்கக் கணக்கிலும் வரவு வைக்கவேண்டும்.

(ஆ) முதல் கணக்கையும் அல்லது கூட்டாளிகளின் முதல் கணக்குகளையும் அல்லது பங்குதாரர் கணக்கையும் தொழில் வாங்குதல் கணக்கிற்கு மாற்றவேண்டும். அவ்வாறே, வாங்கும் கம்பெனி எடுத்துக்கொள்ளாச் சொத்துகளையும் பொறுப்புகளையும் மேற்சொன்ன தொழில் வாங்குதல் கணக்கிற்கு மாற்றவேண்டும்.

## எடுத்துக்காட்டு 67

செந்திலும், நாதனும் நடத்திவரும் கூட்டு நிறுவன அமைப்பின் 31–12–1973-ற்குரிய இருப்புநிலைக் குறிப்பு கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது.

### இருப்புநிலைக் குறிப்பு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு | 8,300 | கட்டடம் | 40,000 |
| கடனீந்தோர் | 16,700 | பொறிவகை | 30,000 |
| திருமதி நாதனின் கடன் | 30,000 | மனைத்துணைப் பொருள் | 5,500 |
| முதல் கணக்குகள்: | | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு | 7,500 |
| செந்தில் ரூ. 60,000 | | முதலீடுகள் | 20,000 |
| நாதன் ரூ. 30,000 | | சரக்கிருப்பு | 15,400 |
| | | கடனாளிகள் | 22,000 |
| | 90,000 | வங்கி | 4,600 |
| | 1,45,000 | | 1,45,000 |

செந்திலும் நாதனும் இலாப-நட்டத்தை 3 : 2 வீதத்தில் பகிர்ந்துகொள்கின்றனர். 1974 சனவரி 1-ல் தொழிலினை வரையறு பொறுப்புடைய திருச்செந்தூர் கம்பெனி ரூ. 1,25,000-ற்கு வாங்கிக்கொண்டது. ஒன்று ரூ. 25 மதிப்புடைய தனது 6,250 நேர்மைப் பங்குகளை ரூ. 20 செலுத்தப்பட்டதாக அது வெளியிட்டு விலையைச் செலுத்தவேண்டியது.

கம்பெனி முதலீடுகளையும், பெறுதற்குரிய மாற்றுச் சீட்டுகளையும் திருமதி நாதனின் கடனையும், செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுக்களையும் எடுத்துக்கொள்ளவில்லை. கட்டடம் ரூ. 50,000 மதிப்புடையது எனவும், மனைத்துணைப் பொருள் 10 சதவீதம் குறைந்து மதிப்பிடப்பட வேண்டுமெனவும், சரக்கிருப்பு ரூ. 20,000 மதிப்புடையது எனவும், கடனாளிகள் மீது 5 சதவீதம் ஐயக்கடன் காப்பு ஏற்படுத்த வேண்டுமென்றும் கம்பெனி முடிவு செய்தது. தள்ளுபடி செய்யப்பட்ட மாற்றுச் சீட்டுகள் மீது ரூ. 1,000-ற்கு பொறுப்பிருக்கிறது. அதனைக் கம்பெனி ஏற்றுக் கொண்டது. செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக்களை ரூ. 7,000-ற்கு நாதன் எடுத்துக் கொண்டார்.

முதலீடுகளை ரூ. 15,000 மதிப்பில் கொடுத்தும், மீதித் தொகைக்கு நேர்மைப் பங்குகளை வழங்கியும், திருமதி நாதனின் கடனை அடைக்கவேண்டியது.

கம்பெனி அதே கணக்கேடுகளை வைத்திருப்பதாகக் கொண்டு மேற்கண்ட நடவடிக்கைகட்குத் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

**விடை :**

## குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | மறு மதிப்பீட்டுக் கணக்கு ப | | 7,650 | |
| | மனைத்துணைப்பொருள் | | | 550 |
| | ஐயக் கடன்காப்பு | | | 1,100 |
| | முதலீடுகள் | | | 5,000 |
| | தள்ளுபடி செய்த மாற்றுச்சீட்டு மீது பொறுப்பு | | | 1,000 |
| | (மனைத்துணைப் பொருளும் முதலீடும் மதிப்பிழந்த தற்கும், ஐயக்கடன் காப்பிற்கும், தள்ளுபடி செய்த மாற்றுச்சீட்டுக்கும் ஒதுக்கு ஏற்படுத்தவும்.) | | | |
| | கட்டடம் ப | | 10,000 | |
| | சரக்கிருப்பு ப | | 4,600 | |
| | செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு ப | | 1,300 | |
| | மறு மதிப்பீட்டுக் கணக்கு | | | 15,900 |
| | (கட்டடம், சரக்கிருப்பு ஆகியவை மதிப்புயர்ந்ததையும், செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டுக்குத் தொகை குறைந்ததையும் பதிய.) | | | |
| | மறு மதிப்பீட்டுக் கணக்கு ப | | 8,250 | |
| | செந்திலின் முதல் கணக்கு | | | 4,950 |
| | நாதனின் முதல் கணக்கு | | | 3,300 |
| | (சொத்துகளையும் பொறுப்புகளையும் மறு மதிப்பீடு செய்வதில் | | | |

## குறிப்பேட்டுப் பதிவுகள்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | ஏற்பட்ட ஆதாயத்தினை இலாப-நட்டப் பகிர்வு வீதத்தில் (3 :2) கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு எடுத்துச் சென்றது.) | | | |
| | வாணிக நற்பெயர் ப | | 12,250 | |
| | செந்திலின் முதல் கணக்கு | | | 7,350 |
| | நாதனின் முதல் கணக்கு | | | 4,900 |
| | (தொழிலைக் கூட்டுப் பங்குக் கம்பெனிக்கு விற்றதில் கிடைத்த வாணிக நற்பெயரைக் கூட்டாளிகளின் முதல் கணக்குகட்கு இலாப-நட்டப் பகிர்வு வீதத்தில் எடுத்துச்செல்ல.) | | | |
| | திருமதி நாதனின் கடன் கணக்கு ப | | 30,000 | |
| | முதலீடுகள் | | | 15,000 |
| | நேர்மைப் பங்குமுதல் கணக்கு | | | 15,000 |
| | (ரூ. 20,000 மதிப்புள்ள முதலீடுகளை ரூ. 15,000 மதிப்பில் கொடுத்தும் மீதித் தொகைக்கு நேர்மைப் பங்குகளை வழங்கியும், திருமதி நாதனின் கடனை அடைத்தது.) | | | |

**குறிப்பேட்டுப் பதிவுகள்**—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டு ப | | 7,000 | |
| | நாதனின் முதல் கணக்கு | | | 7,000 |
| | (செலுத்தற்குரியமாற்றுச் சீட்டை ரூ. 7,000 மதிப்பில் நாதன் எடுத்துக் கொண்டது.) | | | |
| | செந்திலின் முதல் கணக்கு ப | | 4,500 | |
| | நாதனின் முதல் கணக்கு ப | | 3,000 | |
| | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டு | | | 7,500 |
| | (கம்பெனி எடுத்துக் கொள்ளாத பெறுதற்குரிய மாற்றுச் சீட்டைக் கூட்டாளிகளின் முதல் கணக்குகட்கு இலாப-நட்டப் பகிர்வு வீதத்தில் எடுத்துச் சென்றது.) | | | |
| | செந்திலின் முதல் கணக்கு ப | | 67,800 | |
| | நாதனின் முதல் கணக்கு ப | | 42,200 | |
| | நேர்மைப் பங்கு முதல் கணக்கு | | | 1,10,000 |
| | (செந்திலும் நாதனும் தங்கட்குச் சேர வேண்டிய தொகைகட்குக் கம்பெனியின் பங்குகளைப் பெற்றது.) | | | |

**விளக்கக் குறிப்பு :**

அ. வாணிக நற்பெயரைக் கீழ்க்கண்டவாறு மதிப்பிடலாம் :

கம்பெனி எடுத்துக்கொண்ட சொத்துகளின் மதிப்பு :

| | | ரூ. |
|---|---|---|
| கட்டடம் | | 50,000 |
| பொறிவகை | | 30,000 |
| மனைத்துணைப் பொருள் | | 4,950 |
| சரக்கிருப்பு | | 20,000 |
| கடனாளிகள் (ஐயக்கடன் போக) | | 20,900 |
| வங்கி | | 4,600 |
| | | 1,30,450 |
| **கழி :** | | |
| கடனீந்தோர் | ரூ. 16,700 | |
| தள்ளுபடி செய்த மாற்றுச்சீட்டு மீதான பொறுப்பு | ரூ. 1,000 | |
| | | 17,700 |
| நிகரச் சொத்துகளின் மதிப்பு | | 1,12,750 |
| கொள்முதல் மறு பயன் (ஒன்று ரூ. 25 மதிப்புள்ள 6,250 நேர்மைப் பங்குகள், பங்கு ஒன்றுக்கு ரூ. 20 வீதம் செலுத்தப் பெற்றவையாக ஒதுக்கியது) | | 1,25,000 |
| **கழி :** | | |
| நிகர சொத்துகளின் மதிப்பு | | 1,12,750 |
| வாணிக நற்பெயர் | | 12,250 |

ஆ. ரூ. 7,000-க்கான பெறுதற்குரிய மாற்றுச் சீட்டைக் கம்பெனி எடுத்துக்கொள்ளவில்லை. இது விற்கப்படவுமில்லை. எனவே, இது கூட்டாளிகளின் முதல் கணக்குகட்கு இலாப-நட்டப் பகிர்வு வீதத்திற்கு எடுத்துச் செல்லப்படுகின்றது.

அதே கணக்கேடுகளை வைத்திருக்கும்பொழுது கடனாளிகளையும் கடனீந்தோரையும் வாங்கும் கம்பெனி எடுத்துக்கொள்ளவில்லையெனில் :

வாங்கும் கம்பெனி பழைய கணக்கேடுகளில் தொடர்ந்து பதிந்து வருவதாகவும், அப்பொழுது கடனாளிகளையும் கடனீந்தோரையும் எடுத்துக்கொள்ளவில்லையென்றும் கொண்டால், கணக்குகளைப் பதியும் முறையை இப்பொழுது காண்போம்.

(1) கடனாளிகளிடம் வசூலித்துக் கடனீந்தோருக்குச் செலுத்தவேண்டிய பொறுப்பை வாங்கும் கம்பெனி ஏற்றுக்கொள்கிறது. எனவே, இவை நிறைவேற்றப்படும் வரை, கடனாளிகள் கணக்கையும், கடனீந்தோர் கணக்கையும் முடிக்கத் தேவையில்லை.

(2) ஆனால், இரண்டு புதிய கணக்குகளைத் தொடங்கிப் பதிய வேண்டும். கடனாளிகளுக்காகக் கடனாளிகள் இடைநிலைக் கணக்கு (Debtors Suspense Account) என்றும், கடனீந்தோருக்காகக் கடனீந்தோர் இடைநிலைக் கணக்கு (Creditors Suspense Account) என்றும் இரண்டு கணக்குகளைத் தொடங்க வேண்டும்.

(3) கடனாளிகளை வசூலுக்காக எடுத்துக்கொள்ளும்பொழுது விற்குநர் கணக்கில் பற்றும், கடனாளிகள் இடைநிலைக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். இவ்வாறு பதியும்பொழுது நாம் கடனாளிகள் கணக்கில் வரவு வைக்காததால், அக் கணக்கு முடிக்கப் பெறுவதில்லையென்பதை உணரவேண்டும். எடுத்துக்காட்டாக, கடனாளிகள் ரூ. 10,000-ஐ வாங்கும் கம்பெனி வசூலுக்காக எடுத்துக்கொள்ளுவதாகக் கொண்டால், செய்ய வேண்டிய பதிவு :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| விற்குநர் கணக்கு | ப | 10,000 | |
| கடனாளிகள் இடைநிலைக் கணக்கு | | | 10,000 |

(4) கடனீந்தோருக்குச் செலுத்தும்பொருட்டுப் புதிய கம்பெனி எடுத்துக்கொள்ளும்பொழுது கடனீந்தோர் இடைநிலைக் கணக்கில் பற்றும், விற்குநர் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். எடுத்துக்காட்டாக, கடனீந்தோர் ரூ. 7,500 செலுத்தும் பொருட்டுக் கம்பெனி எடுத்துக்கொள்ளுவதாகக் கொண்டால், கீழ்க்கண்ட பதிவு செய்யவேண்டும் :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| கடனீந்தோர் இடைநிலைக் கணக்கு | ப | 7,500 | |
| விற்குநர் கணக்கு | | | 7,500 |

கடனீந்தோர் கணக்கில் பற்று வைத்ததால், கடனீந்தோர் கணக்கையும் நாம் முடிப்பதில்லையென்பதை மறத்தலாகாது.

(5) கடனுளியிடம் பணம் வசூல் செய்யும்பொழுது வங்கிக் கணக்கில் பற்றும், கடனுளிகள் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

(6) கடனுளிகட்குத் தள்ளுபடி அளித்திருப்பினும், வராக் கடன் ஏற்பட்டிருப்பினும், தள்ளுபடிக் கணக்கிலும் வராக் கடன் கணக்கிலும் பற்றும், கடனுளிகள் கணக்கில் வரவும் வைக்க வேண்டும். எடுத்துக்காட்டாக, ரூ. 10,000 கடனுளிகளில் தள்ளுபடி அளித்தது ரூ. 250 எனவும், வராக்கடன் ரூ. 350 ஏற்பட்டதெனவும் கொண்டால் கீழ்க்கண்டவாறு பதிவு அமையும் :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| வங்கிக் கணக்கு | ப | 9,400 | |
| தள்ளுபடிக் கணக்கு | ப | 250 | |
| வராக்கடன் கணக்கு | ப | 350 | |
| கடனுளிகள் கணக்கு | | | 10,000 |

இவ்வாறு வசூலித்த தொகை விற்குநருக்குச் சேரவேண்டியுள்ளதாலும், விற்குநரின் கடனுளிகள் மீது ஏற்பட்ட வராக் கடனையும், தள்ளுபடியையும் முடிக்கவேண்டியிருப்பதாலும் கீழ்க் கண்டவாறு வேறொரு பதிவினைச் செய்யவேண்டும்.

| | | |
|---|---|---|
| கடனுளிகள் இடைநிலைக் கணக்கு | ப | (முழுத் தொகை) |
| விற்குநர் கணக்கு | | (வசூலான தொகை) |
| தள்ளுபடிக் கணக்கு | | (அளித்த தள்ளுபடித் தொகை) |
| வராக் கடன் கணக்கு | | (வசூலாகாத் தொகை). |

மேற்சொன்ன எடுத்துக்காட்டிற்குத் தேவையான பதிவு :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| கடனுளிகள் இடைநிலைக் கணக்கு | ப | 10,000 | |
| விற்குநர் கணக்கு | | | 9,400 |
| தள்ளுபடிக் கணக்கு | | | 250 |
| வராக் கடன் கணக்கு | | | 350 |

இவ்வாறு கடனீந்தோருக்கும் செலுத்தவேண்டும். கடனீந்தோருக்குத் தொகை செலுத்தும்பொழுது கடனீந்தோர் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

கடனீந்தோரிடம் தள்ளுபடி பெறும்பொழுது, கடனீந்தோர் கணக்கில் பற்றும், தள்ளுபடிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

பின்னர்க் கடனீந்தோருக்குச் செலுத்திய தொகையை விற்குநர் கணக்கில் சரிக்கட்டுவதுடன் கடனீந்தோர் இடைநிலைக் கணக்கை முடிக்கவேண்டியுள்ளது. இதற்கு விற்குநர் கணக்கில் கடனீந்தோருக்குச் செலுத்திய தொகையளவிற்குப் பற்றும், பெற்ற தள்ளுபடிக் கணக்கில் பற்றும் வைக்கவேண்டும். இவ்விரு தொகைகட்கும் சேர்த்துக் கடனீந்தோர் இடைநிலைக் கணக்கில் வரவு வைக்கவேண்டும்.

எடுத்துக்காட்டாக, கடனீந்தோர் ரூ. 7,500 இருப்பதாகவும், அவர்கட்கு ரூ. 7,300 செலுத்திக் கணக்கை நேர் செய்ததாகவும் கொண்டால் பதிவுகள் கீழ்க் கண்டவாறிருக்கும் :

| | | | ரூ. | ரூ. |
|---|---|---|---|---|
| அ. | கடனீந்தோர் | ப | 7,500 | |
| | வங்கி | | | 7,300 |
| | தள்ளுபடி | | | 200 |
| ஆ. | விற்குநர் | ப | 7,300 | |
| | தள்ளுபடி | ப | 200 | |
| | கடனீந்தோர் இடைநிலைக் கணக்கு | | | 7,500 |

இப்பொழுது விற்குநருக்குச் சேரவேண்டிய தொகையைச் செலுத்தவேண்டும். இதற்கு விற்குநர் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

## எடுத்துக்காட்டு 68

திருப்பதி லிமிட்டெட் வெங்கடேசனின் வியாபாரத்தை வாங்கியது. அவரின் கடனாளிகள் ரூ. 15,000-ஐயும், கடனீந்தோர் ரூ. 9,000-ஐயும் எடுத்துக்கொள்ளவில்லை. ஆயினும், அவர்பொருட்டுக் கடனாளிகளிடம் தண்டி கடனீந்தோருக்குச் செலுத்த ஒப்புக்கொண்டது. ரூ. 500 வசூலாகவில்லை; கடனாளிகட்கு ரூ. 100 தள்ளுபடி அளிக்கப்பட்டது. கடனீந்தோரிடம் ரூ. 8,750 செலுத்திக் கணக்கைத் தீர்த்தது. அதே ஏடுகளை வைத்திருப்பதாகக் கொண்டு, வேண்டிய குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

**விடை :**

**திருப்பதி லிமிட்டெடின் குறிப்பேட்டில்**

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | வெங்கடேசன் ப | | 15,000 | |
| | கடனாளிகள் இடைநிலைக் கணக்கு | | | 15,000 |
| | (கடனாளிகளிடம் வசூல் செய்யவேண்டியது.) | | | |
| | கடனீந்தோர் இடைநிலைக் கணக்கு ப | | 9,000 | |
| | வெங்கடேசன் | | | 9,000 |
| | (கடனீந்தோருக்குச் செலுத்த ஒப்புக் கொண்டது.) | | | |
| | வங்கிக் கணக்கு ப | | 14,400 | |
| | வராக்கடன் கணக்கு ப | | 500 | |
| | தள்ளுபடிக் கணக்கு ப | | 100 | |
| | கடனாளிகள் கணக்கு | | | 15,000 |
| | (கடனாளியிடம் வசூலித்தது ரூ. 10,400, வராக்கடன் ரூ. 500, தள்ளுபடி ரூ. 100.) | | | |

## திருப்பதி லிமிட்டெடின் குறிப்பேட்டில்—(தொடர்ச்சி)

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | கடனாளிகள் இடைநிலைக் கணக்கு ப | | 15,000 | |
| | வெங்கடேசன் | | | 14,400 |
| | வராக்கடன் கணக்கு | | | 500 |
| | தள்ளுபடிக் கணக்கு | | | 100 |
| | (கடனாளிகள் இடைநிலைக் கணக்கை முடிக்க.) | | | |
| | கடனீந்தோர் கணக்கு ப | | 9,000 | |
| | வங்கிக் கணக்கு | | | 8,750 |
| | தள்ளுபடிக் கணக்கு | | | 250 |
| | (ரூ. 8,750 செலுத்திக் கடனீந்தோர் கணக்கைத் தீர்த்தது.) | | | |
| | வெங்கடேசன் ப | | 8,750 | |
| | தள்ளுபடிக் கணக்கு ப | | 250 | |
| | கடனீந்தோர் இடைநிலைக் கணக்கு | | | 9,000 |
| | (கடனீந்தோர் இடைநிலைக் கணக்கை முடிக்க.) | | | |
| | வெங்கடேசன் ப | | 5,650 | |
| | வங்கிக் கணக்கு | | | 5,650 |
| | (கடனாளிகளிடம் வசூலித்துக் கடனீந்தோர்க்குச் செலுத்திய பின் எஞ்சியுள்ள தொகையை வெங்கடேசனுக்குச் செலுத்தியது.) | | | |

## எடுத்துக்காட்டு 69

செல்வம், சேகர் கூட்டாளிகளாக வாணிகம் செய்து வருகின்றனர். அவர்களின் 1967 ஜூன் 30-ற்கான இருப்புநிலைக் குறிப்புக் கீழ்க்கண்டவாறு இருந்தது :

### இருப்புநிலைக் குறிப்பு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| முதல் கணக்குகள் : | | | |
| செல்வம் ரூ. 23,000 | | பல்வகைச் சொத்துகள் | |
| சேகர் ரூ. 12,000 | | | 38,500 |
| | 35,000 | | |
| கடனீந்தோர் | 2,500 | | |
| வங்கி மேல்வரைப் பற்று | 1,000 | | |
| | 38,500 | | 38,500 |

மேற்குறித்த சொத்துகளில் ரொக்கமில்லை; வாணிக நற்பெயர் கணக்குமில்லை.

1967 ஜூலை 1-ல் தூய விலைபொருள் கம்பெனி எனும் பெயருடன் அமைக்கப்பட்ட கம்பெனியானது அத் தொழிலை எடுத்துக்கொண்டது. இக் கம்பெனி ரூ. 1,00,000 அதிகாரம் பெற்ற பங்கு முதலுடன் பதிவு செய்யப்பட்டது. அது ஒன்று ரூ. 10 வீதம் 5,000, 7 சதவீதம் குவிவு முன்னுரிமைப் பங்குகளாகவும், ஒன்று ரூ. 10 வீதம் 5,000 நேர்மைப் பங்குகளாகவும் பிரிக்கப்பட்டிருந்தது. மேலும், கீழ்க்கண்ட ஏற்பாடுகள் செய்யப்பட்டன :

(1) தொழிலிலிருந்து செல்வம் விலகிக் கொண்டார். வாணிக நற்பெயரில் அவரின் பங்கு ரூ. 4,000-த்தைச் சேகருக்கு விற்றுவிட்டார். இது கணக்குகளில் சரிசெய்யப்பட்டது.

(2) வங்கி மேல்வரைப் பற்றைத் தவிர, கூட்டு நிறுவனத்தின் சொத்துகள், பொறுப்புகள் அனைத்தையும் கம்பெனி எடுத்துக்

கொண்டது. வாணிக நற்பெயருக்காகத் தொகை எதுவும் தரவில்லை. ஆனால், சொத்துகள் அனைத்தையும் ஏட்டு மதிப்பிலேயே எடுத்துக்கொண்டது. ரூ. 15,000-ற்கு 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிடுவது மூலமாகவும், 800 முழுதும் செலுத்தப்பெற்ற நேர்மைப் பங்குகளைப் பெயரளவு மதிப்பில் வெளியிடுவதுமூலமாகவும், ரூ. 13,000-ற்கு ரொக்கம் செலுத்துவது மூலமாகவும் மொத்தக் கொள்முதல் மறுபயன் ரூ. 36,000-த்தைத் தீர்த்தது.

(3) கடனீட்டுப் பத்திரங்கள் அனைத்தையும் செல்வம் எடுத்துக்கொண்டார். அவருக்குச் சேரவேண்டிய மீதித் தொகைக்கு ரொக்கம் பெற்றுக்கொண்டார். நேர்மைப் பங்குகள் அனைத்தும் சேகருக்கு ஒதுக்கப்பட்டன.

(4) சேகரின் நண்பரான சேது 1,000, 7 சதவீதம் குவிவு முன்னுரிமைப் பங்குகளைப் பெயரளவு மதிப்பிலும், ரூ. 10 மதிப்புடைய 800 நேர்மைப் பங்குகளை ரூ. 12.50 வீதமும் எடுத்துக்கொண்டார். அனைத்திற்கும் ரொக்கம் முழுதும் செலுத்தப்பட்டது. கம்பெனி ஏற்ற தொடக்கச் செலவுகள் ரூ. 310.

(5) கூட்டு நிறுவனம் வைத்திருந்த எல்லாக் கணக்கேடுகளையும் கம்பெனி வைத்துக்கொண்டது; புதிய வங்கிக் கணக்கு மட்டும் தொடங்கப்பட்டதுடன் புதிய ரொக்க ஏடும் பயன்படுத்தப்பட்டது.

கீழ்க்கண்டவற்றைத் தயாரிக்க :

(1) ரொக்க நடவடிக்கைகளைத் தவிர மேற்கண்ட எல்லா நடவடிக்கைகளையும் பதிவதற்குத் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக;

(2) இரு ரொக்க ஏடுகளிலும் முக்கியமான பதிவுகளைத் தந்து, கூட்டாளிகளின் முதல் கணக்குகளையும்;

(3) கம்பெனியின் தொடக்க இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(C. A. Final-ஐத் தழுவியது)

**விடை :**

## குறிப்பேடு

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1967 | | | ரூ. | ரூ. |
| ஜூலை 1 | சேகரின் முதல் கணக்கு ப | | 4,000 | |
| | செல்வத்தின் முதல் கணக்கு | | | 4,000 |
| | (செல்வம் விலகியவுடன் சேகர் தரவேண்டிய வாணிக நற்பெயரைக் கணக்கில் சரிக்கட்டியது.) | | | |
| ,, | செல்வத்தின் முதல் கணக்கு ப | | 15,000 | |
| | 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் கணக்கு | | | 15,000 |
| | (செல்வத்திற்குச் சேர வேண்டிய தொகையின் ஒரு பகுதியை 6 சதவீதம் கடன்பத்திரங்களை ஒதுக்கித் தீர்த்தது.) | | | |
| ,, | சேகரின் முதல் கணக்கு ப | | 8,000 | |
| | நேர்மைப் பங்கு முதல் கணக்கு | | | 8,000 |
| | (சேகருக்குச் சேரவேண்டிய தொகையை ரூ. 10 மதிப்புடைய 800 நேர்மைப் பங்குகளை முழுதும் செலுத்தப்பட்டவைகளாக ஒதுக்கித் தீர்த்தது.) | | | |

பற்று **பொது ரொக்க ஏடு** வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1967 ஜூலை 1 | 7 சதவீதம் குவிவு முன்னுரிமைப் பங்குமுதல் க/கு (ஒன்று ரூ. 10 வீதம் 1,000 முன்னுரிமைப் பங்குகள்) .. | | 10,000 | 1967 ஜூலை 1 | கூட்டு நிறுவன ரொக்கம் .. | | 13,000 |
| ,, | நேர்மைப் பங்கு முதல் க/கு .. (ஒன்று ரூ. 10 வீதம் 800 நேர்மைப் பங்குகள் மீது பெற்றது.) .. | | 8,000 | ,, | தொடக்கச் செலவுகள் .. | | 310 |
| ,, | பங்கு முனைமக் க/கு .. (பங்கொன்றுக்கு ரூ. 2.50 வீதம் 800 நேர்மைப் பங்குகள் மீதான முனைமம்) .. | | 2,000 | ,, | இருப்பு கீ/இ .. | | 6,690 |
| | | | 20,000 | | | | 20,000 |
| ,, | இருப்பு கீ/கொ .. | | 6,690 | | | | |

பற்று கூட்டு நிறுவன ரொக்க ஏடு வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1967 சூலை 1 | பொது ரொக்கம் .. | | 13,000 | 1967 சூலை 1 | இருப்பு கீ/கொ (வங்கி மேல்வரைப் பற்று) .. | | 1,000 |
| | | | | ,, | செல்வத்தின் முதல் க/கு .. | | 12,000 |
| | | | 13,000 | | | | 13,000 |

**செல்வத்தின் முதல் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1967 | | | | 1967 | | | |
| ஜூலை 1 | 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் .. | | 15,000 | ஜூலை 1 | இருப்பு கீ/கொ .. | | 23,000 |
| ,, | வங்கி .. | | 12,000 | ,, | சேகரின் முதல் க/கு —வாணிக நற்பெயர் .. | | 4,000 |
| | | | 27,000 | | | | 27,000 |

**சேகரின் முதல் கணக்கு**

பற்று | வரவு

| நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1967 | | | | 1967 | | | |
| ஜூலை 1 | செல்வத்தின் முதல் க/கு —வாணிக நற்பெயர் .. | | 4,000 | ஜூலை 1 | இருப்பு கீ/கொ | | 12,000 |
| | சாதாரணப் பங்கு முதல் | | 8,000 | | | | |
| | | | 12,000 | | | | 12,000 |

**தூய விலை பொருள் கம்பெனி** *(வரையறு பொறுப்புடையது)*
**1967 ஜூலை 1ஆம் நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| **பங்கு முதல்:** | | பல்வகைச் சொத்துகள் .. | 38,500 |
| அதிகாரம் பெற்றது : | | | |
| 7 சதவீதம் குவிவு முன்னுரிமைப் பங்குகள் ஒன்று ரூ. 10 வீதம் 5,000 முன்னுரிமைப் பங்குகள் முழுதும் செலுத்தப்பட்டவை .. | 50,000 | வங்கி .. | 6,690 |
| நேர்மைப் பங்குகள் : | | தொடக்கச் செலவுகள் .. | 310 |
| ஒன்று ரூ. 10 வீதம் 5,000 நேர்மைப் பங்குகள், முழுதும் செலுத்தப்பட்டவை .. | 50,000 | | |
| | 1,00,000 | | |
| **வெளியிட்டதும் ஒப்புக்கொள்ளப் பட்டதும் :** | | | |
| ஒன்று ரூ. 10 வீதம் 1,000 ஏழு சதவீதம் குவிவு முன்னுரிமைப் பங்குகள், முழுதும் செலுத்தப் பெற்றவை .. | 10,000 | | |

| | | | |
|---|---|---|---|
| ஒன்று ரூ. 10 வீதம் 1,600 நேர்மைப் பங்குகள், முழுதும் செலுத்தப் பெற்றவை .. | 16,000 | | |
| (மேற்கண்ட பங்குகளில் 800 நேர்மைப் பங்குகள் விற்குநருக்கு முழுதும் செலுத்தப்பெற்றவையாக ரொக்கம் பெருது வெளியிடப் பட்டன.) | | | |
| **காப்பும் மிகுதியும்:** | | | |
| பங்கு முனைமக் க/கு .. | 2,000 | | |
| **பிணைக் கடன்:** | | | |
| 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் | 15,000 | | |
| **நடப்புப் பொறுப்புகள்:** | | | |
| கடனீந்தோர் .. | 2,500 | | |
| | 45,500 | | 45,500 |

**கூட்டுருவாக்கத்திற்கு முந்தைய இலாபம்** (Profit Prior to Incorporation)

நடந்துவரும் ஒரு தொழிலை வாங்கும் நோக்குடன் கம்பெனி தொடங்கப்பெறுவதாகக் கொள்வோம். குறிப்பிட்ட நாளில் தொழிலை அல்லது ஒரு வியாபாரத்தைக் கம்பெனி ஏற்று நடத்தலாம். ஆனால், பல்வகைச் சட்டச் சடங்குகளைப் பின்பற்றி அது கூட்டுருவாக்கச் சான்றிதழைப் (Certificate of Incorporation) பெறவேண்டியுள்ளது. இதனைப் பெற்ற நாளில்தான் கம்பெனி தோன்றியதாகக் கொள்வோம். அது அமைக்கப்பெறுவதற்கு முன்னால் கம்பெனிக்குத் தனிச் சட்ட உரு கிடைப்பதில்லை. ஆயினும், கம்பெனி முறையாக அமைக்கப்பெறுவதற்கு முன்னர் இருந்தே தொழில் ஒன்றை வாங்கி நடத்திவருகிறது. அது வாங்கிய நாளிலிருந்து அத் தொழிலில் ஏற்படும் ஆதாயம் கம்பெனியைச் சேர்ந்ததாகும். எனினும், சட்டத்தின்படி இவ்வாதாயத்தினைக் கம்பெனி பங்காதாயம் (dividend) வழங்குவதற்காகப் பயன்படுத்திக்கொள்ள முடியாது. காரணம், கம்பெனி அமைக்கப்பெறுவதற்கு முன் ஏற்பட்ட ஆதாயம் இது. எனவே, இத்தகைய இலாபத்தை – தொழில் வாங்கிய நாளிலிருந்து அமைப்புச் சான்றிதழ் கிடைக்கும்வரை ஏற்பட்ட ஆதாயத்தை – அமைப்பதற்குமுன் ஏற்பட்ட இலாபம் என்று கூறுகிறோம். பொதுக் கம்பெனியாயின், அமைப்புச் சான்றிதழ் பெறுவதுடன் மேலும் சில விதிமுறைகளைக் கடைப்பிடித்துத் தொழில் தொடக்கச் சான்றிதழையும் (Certificate of Commencement of Business) பெறவேண்டுமென்று கூறியிருக்கிறோமல்லவா? தொழில் தொடக்கச் சான்றிதழ் பெற்ற நாளிலிருந்துதான் தொழில் செயல்படமுடியும். எனவே, இவ்வாறு தனிக் கம்பெனியாயின் அமைப்புச் சான்றிதழ் பெறும் முன்னரும், பொதுக் கம்பெனியாயின், தொழில் தொடக்கச் சான்றிதழ் பெறும் முன்னரும், கம்பெனி ஈட்டும் ஆதாயத்தினைக் 'கூட்டுருவாக்கத்திற்கு முந்தை இலாபம்' (Profit Prior to Incorporation) என்று கூறியிருக்கிறோம். இது ஒரு முதலின ஆதாயம் (Capital Profit) என்கிறோம். இதனைப் பங்குநர்க்குப் பங்காதாயம் வழங்கக் கம்பெனி பயன்படுத்திக்கொள்ள முடியாது. கம்பெனி அமையப்பெறும் வரை ஏற்படுத்தும் இலாபத்தினை அறிய வேண்டுமாயின், கம்பெனி அமைக்கப்பெற்ற நாளில் கணக்குகள் அனைத்தையும் முடித்து இருப்புக்கட்டி இலாப-நட்டக் கணக்கைத் தயாரிக்கவேண்டும். இதற்காகத் தொழிலிலுள்ள சரக்கு முழுவதையும் கணக்கெடுத்து மதிப்பிடவேண்டும். ஆனால், அவையெல்லாம் அவ்வளவு எளிதான செயலன்று. எனவே, கம்பெனி

அமைப்பு நாளில் கணக்குகளை முடிப்பதுமில்லை; சரக்கிருப்பு எடுப்பதுமில்லை; இலாப-நட்டக் கணக்கினைத் தயாரிப்பதுமில்லை. தொழிலைத் தொடர்ந்து நடத்துவதுடன் கணக்குகளிலும் தொடர்ந்து பதிந்து வந்து ஆண்டு இறுதியில், இறுதிக் கணக்குகள் தயாரிக்கப்படுவதுதான் பெரும்பாலும் கடைப்பிடிக்கப்படும் வழக்கமாகும்.

இப்பொழுது ஆண்டு முழுவதற்குமான இலாபத்தினை இலாப-நட்டக் கணக்கு உணர்த்தும். ஆனால், இந்த இலாப-நட்டக் கணக்குக் காட்டும் முழு இலாபத்தையும் பங்காதாயம் வழங்கப் பயன்படுத்திக்கொள்ள முடியாது என்று கூறியிருக்கிறோம். கூட்டுருவாக்கத்திற்கு (incorporation) முன் ஏற்பட்ட இலாபத்தினையும், பின் ஏற்பட்ட இலாபத்தினையும் அறிவதற்குச் சில வழிமுறைகள் இருக்கின்றன. அவற்றை இப்பொழுது ஆய்வோம்.

கம்பெனி அமைவதற்கு முன்னால் நட்டம் ஏற்பட்டிருப்பின், அதைச் சாதாரண வாணிக நட்டமாகக் கருதாமல், அதை ஒரு முதலின நட்டமாகக் கொள்ளவேண்டும். இதனை வாணிக நற்பெயர் கணக்கிற்கு எடுத்துச் செல்லவேண்டும்.

பொதுக் கம்பெனியானது தொழில் தொடக்கச் சான்றிதழைப் பெற்ற பிறகுதான் செயல்படமுடியும். எனினும், இலாபத்தினைப் பிரிக்கும்பொழுது, கம்பெனி கூட்டுருவாக்கத்திற்கு முன் ஏற்பட்ட இலாபம் என்றும், அதன்பின் ஏற்பட்ட இலாபம் என்றுந்தான் பிரிக்கிறோம். எனவே, பொதுக் கம்பெனி தொழில் தொடக்கச் சான்றிதழை எப்பொழுது பெறுகின்றது என்பது பற்றி சிந்திக்கத் தேவையில்லை. எவ்வகைக் கம்பெனியாயினும், கூட்டுருவாக்க நாள்தான் (Date of Incorporation) முக்கியம்.

**கூட்டுருவாக்கத்திற்கு முன் இலாப-நட்டத்தைக் கணக்கிடல்**

அ. முதலில் ஆண்டு முழுவதற்கும் பொதுவான இலாப-நட்டக் கணக்கை வழக்கம்போல் தயாரிக்கவேண்டும்.

ஆ. கீழ்க்கண்ட இரண்டு வீதங்களை முதலில் கணக்கிட்டுக் கொள்ளவேண்டும்.

(i) விற்பனை விகிதம் (Sales ratio) : கூட்டுருவாக்கத்திற்கு முன் உள்ள விற்பனையையும், அதற்குப் பின்னுள்ள விற்பனையையும் கணக்கிட்டு, விற்பனை விகிதத்தைக் கணக்கிடவேண்டும்.

(ii) காலவிகிதம் (Time ratio) : கடந்த இருப்புநிலைக் குறிப்பு நாளிலிருந்து கம்பெனி கூட்டுருவாக்கம் பெற்ற நாள் வரை உள்ள காலம் என்றும், அதற்குப் பின்னுள்ள நாளிலிருந்து ஆண்டுக் கணக்குகளை முடிக்கும் நாள் வரையுள்ள காலம் என்றும் மொத்த காலத்தை இரண்டாகப் பிரிக்கவேண்டும். இப்பொழுது இவற்றின் விகிதத்தைக் கணக்கிடவேண்டும்.

இ. இப்பொழுது கூட்டுருவாக்கத்திற்கு முன்னும், கூட்டுருவாக்கத்திற்குப் பின்னும் ஏற்பட்ட நிகர இலாப-நட்டத்தை உணர்வதற்காக ஓர் அறிக்கையைத் தயார் செய்யலாம்.

(i) முதலில் மொத்த இலாபத்தினை இவ்விரு பகுதிகட்கும் பிரித்து எழுதவேண்டும். இது விற்பனை அடிப்படையில் இருக்கும். எனவே, மொத்த இலாபத்தை விற்பனை விகிதத்தில் இரண்டு காலங்கட்கும் பிரிக்கவேண்டும். இப்பொழுது கூட்டுருவாக்கத்திற்கு முன் ஏற்பட்ட மொத்த இலாபத்தையும், அதற்குப் பின் ஏற்பட்ட மொத்த இலாபத்தையும் அறியமுடிகிறது.

இம் மொத்த இலாபத்திலிருந்து செலவினங்கள் ஒவ்வொன்றையும் கூட்டுருவாக்கத்திற்கு முன் செலவழிந்ததென்றும், அதற்குப் பின் செலவழிந்ததென்றும் பிரிக்கவேண்டும். முன் ஏற்பட்ட செலவுக் கணக்குகளின் மொத்தத்தை அக் காலத்திற்குரிய மொத்த இலாபத்திலிருந்து கழித்துவிடின் கூட்டுருவாக்கத்திற்கு முன் ஏற்பட்ட இலாபம் உணரப்படும். அவ்வாறே அதற்குப் பின் ஏற்பட்ட செலவினங்களின் மொத்தத் தொகையை அக் கூட்டுருவாக்கத்திற்குப் பின் ஏற்பட்ட மொத்த இலாபத்திலிருந்து கழித்துவிடின், அதன் பின் ஏற்பட்ட நிகர இலாபத்தை உணர முடியும். செலவுக் கணக்குகளை இவ்விரு காலங்கட்கும் கீழ்க் கண்ட வீதங்களில் பிரிக்கலாம்.

(ii) விற்பனையை ஒட்டிய செலவுகள் அனைத்தையும் விற்பனை விகிதத்தில் பிரிக்கலாம். எடுத்துக்காட்டாக, அளித்த தள்ளுபடி, வராக்கடன், விளம்பரம், சுமைக்கூலி, விற்பனைக் கழிவு முதலியவை.

(iii) சில செலவுகள் காலத்தின் அடிப்படையில் ஏற்கப் படுகின்றன. சரக்கு விற்பனையானாலும், ஆகாவிடினும் இச் செலவுகளைத் தவிர்க்கமுடியாது. எடுத்துக்காட்டாக, திங்கள் தோறும் செலுத்தும் வாடகை, ஊதியம் போன்றவையும் காலத்தின் அடிப்படையில் கணக்கிடப்படும் தேய்மானம், வட்டி முதலியவையும்.

(iv) சில செலவுகள் கம்பெனிக்கு மட்டுமே உரியதாக இருக்கும். சில கூட்டு நிறுவனங்கள் போன்றவற்றிற்கு உரியன வாக இருக்கும். இவ்வாறு கம்பெனிக்கு மட்டும் உரிய செலவு களைக் கூட்டுருவாக்கத்திற்குப் பின் ஏற்பட்ட செலவாகவும், கூட்டு நிறுவனத்திற்கு மட்டும் உரிய செலவுகளை அதற்குமுன் ஏற்பட்ட செலவாகவும் கொள்ளவேண்டும். எடுத்துக்காட்டாக, இயக்குநர் கட்டணம், கடனீட்டுப் பத்திரங்கள் மீது வட்டி, தொடக்கச் செலவு போன்றவை கம்பெனிக்கு மட்டில் உரிய செலவுகளாகும். அவ்வாறே கூட்டாளிகட்குச் செலுத்திய ஊதி யம் கூட்டு நிறுவனத்திற்கு மட்டுமே உரிய செலவாகும்.

(v) தணிக்கைக் கட்டணம், இது காலத்தின் அடிப்படை யில் கொடுக்கப்படவேண்டும். கம்பெனி அமைக்கப்பட்டதற்கு முன் நிகழ்ந்த நடவடிக்கைகள் அனைத்தும் தணிக்கை செய்யப் படும். எனவே, கால வீதத்தில்தான் இது பிரிக்கப்படவேண்டும். சில வேளைகளில் இது கம்பெனி அமைக்கப்பெற்றபின் எழுவதால், இதனைக் கம்பெனிக்கு மட்டில் உரிய செலவாகக்கொண்டு கூட்டுரு வாக்கத்திற்குப் பின் ஏற்பட்ட செலவாக முழுத்தொகையையும் எடுத்துக்கொள்வதில் தவறில்லை. “Since audit fees arise only when the company is formed, it would be permissible to charge it wholly to the period after incorporation” (Advanced Accounts by M. S. Shukla and T. S. Grewal. Page 141, Second Volume—1972 Editon)

இவ்வாறு கூட்டுருவாக்கத்திற்கு முன் ஏற்பட்ட ஆதாயத் தினைக் கணக்கிட்ட பின், அத் தொகைக்கு இலாப-நட்டக் கணக்கில் பற்றும், கூட்டுருவாக்கத்திற்கு முந்தைய இலாபக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும்.

கூட்டுருவாக்கத்திற்கு முந்தைய இலாபக் கணக்கு இருப்பு நிலைக் குறிப்பில் பொறுப்புகள் பகுதியில் பிற முதலின இலாபங் களுடன் (Capital Profits) காட்டப்பெறும்.

### எடுத்துக்காட்டு 70

மூவேந்தன் லிமிட்டெட் ஏப்ரல் 1-ல் அமைக்கப்பெற்றது. அது சேரன், சோழன், பாண்டியன் நடத்திவரும் தொழிலை 1971 சனவரி 1-ல் வாங்கியது. 1973 திசம்பர் 31-ல் முடியும்

ஆண்டிற்கான இலாப-நட்டக் கணக்கு கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கிறது :

## இலாப-நட்ட கணக்கு

| பற்று | ரூ. | வரவு | ரூ. |
|---|---|---|---|
| ஊதியம் | 24,000 | மொத்த | |
| விளம்பரம் | 2,500 | இலாபம் | 54,500 |
| வாடகை | 3,600 | | |
| காப்பீடு | 1,200 | | |
| தணிக்கைக் கட்டணம் | 800 | | |
| பொதுச் செலவு | 3,600 | | |
| தள்ளுபடி | 400 | | |
| வராக்கடன் | 600 | | |
| சுமைக் கூலி | 300 | | |
| இயக்குநர் கட்டணம் | 2,000 | | |
| தொடக்கச் செலவு | 1,800 | | |
| விற்பனைக் கழிவு | 400 | | |
| விற்குநருக்குச் செலுத்திய வட்டி (Interest paid to vendors) | 300 | | |
| தேய்மானம் | 1,000 | | |
| நிகர இலாபம் | 12,000 | | |
| | 54,500 | | 54,500 |

மேலும் சில விவரங்கள் :

அ. ஆண்டு முழுவதற்குமான மொத்த விற்பனை ரூ. 1,20,000; இதில் மார்ச் 31 வரைக்குமான விற்பனை ரூ. 24,000.

ஆ. வராக்கடன் ரூ. 200. கூட்டுருவாக்கத்திற்கு முன்னுள்ள கடன்களில் ஏற்பட்டது.

இ. விற்குநருக்குச் சேரவேண்டிய தொகை மே 1-ல் கொடுத்துத் தீர்க்கப்பட்டது.

ஈ. சூலை 1-ல் வாங்கிய சொத்துகள் மீதான தேய்மானம் ரூ. 400, தேய்மானத்தில் அடங்கியிருக்கிறது. மேல் கொடுக்கப்பட்ட விவரங்களிலிருந்து கம்பெனி கூட்டுருவாக்கத்திற்கு முன் ஈட்டிய இலாபத்தினையும், அதற்குப் பின் ஈட்டிய ஆதாயத்தையும் கணக்கிடுக.

**விடை:**

| | விகிதம் | கூட்டுருவாக்கத்திற்கு முன் | | கூட்டுருவாக்கத்திற்குப் பின் | |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | ரூ. | ரூ. | ரூ. |
| மொத்த இலாபம் : .. | விற்பனை (1 : 4) | | 10,900 | | 43,600 |
| **கழி:** செலவுகள்— | | | | | |
| ஊதியம் .. | காலம் (1 : 3) | 6,000 | | 18,000 | |
| விளம்பரம் .. | விற்பனை | 500 | | 2,000 | |
| வாடகை .. | காலம் | 900 | | 2,700 | |
| காப்பீடு .. | ,, | 300 | | 900 | |
| தணிக்கைக் கட்டணம் .. | ,, | 200 | | 600 | |
| பொதுச்செலவு .. | ,, | 900 | | 2,700 | |
| தள்ளுபடி .. | விற்பனை | 80 | | 320 | |
| வராக் கடன் .. | .. | 200 | | 400 | |
| சுமைக் கூலி .. | விற்பனை | 60 | | 240 | |
| இயக்குநர் கட்டணம் .. | .. | .. | | 2,000 | |
| தொடக்கச் செலவு .. | .. | .. | | 1,800 | |
| விற்பனைக் கழிவு .. | விற்பனை | 80 | | 320 | |
| விற்குநருக்குச் செலுத்திய வட்டி .. | காலம் (3 : 1) | 225 | | 75 | |
| தேய்மானம் .. | காலம் | 150 | 9,595 | 850 | 32,905 |
| | நிகர இலாபம் .. | | 1,305 | | 10,695 |

**விளக்கக் குறிப்பு :**

**(அ) விற்பனை விகிதம் :**

| | |
|---|---|
| ஆண்டு முழுவதற்குமான மொத்த விற்பனை | ரூ. 1,20,000 |
| கழி : மார்ச் 31 வரைக்குமான விற்பனை (கூட்டுருவாக்கத்திற்கு முன்) | ரூ. 24,000 |
| மார்ச் 31-லிருந்து திசம்பர் 31 வரை (கூட்டுருவாக்கத்திற்குப்பின்) | ரூ. 96,000 |

கூட்டுருவாக்கத்திற்கு முன் : பின்
24,000 : 96,000 = 1 : 4

**(ஆ) கால விகிதம்**

| | |
|---|---|
| சனவரி 1-லிருந்து மார்ச் 31 வரை (கூட்டுருவாக்கத்திற்கு முன்) | 3 திங்கள் |
| ஏப்ரல் 1-லிருந்து திசம்பர் 31 வரை (கூட்டுருவாக்கத்திற்குப் பின்) | 9 திங்கள் |
| கூட்டுருவாக்கத்திற்கு முன் : பின் | 3 : 9 |
| | = 1 : 3 |

**(இ) வாரக் கடன்**

பொதுவாக வராக்கடனை விற்பனை விகிதத்தில்தான் பிரிக்க வேண்டும். ஆனால், இக் கணக்கில் வராக்கடனில் ரூ. 200 அமைப்பிற்கு முன்னுள்ள கடன்களில் ஏற்பட்டதென்று குறிப்பிடப்பட்டுள்ளதால், மொத்த வராக்கடன் தொகையான ரூ. 600-ல், ரூ. 200 கூட்டுருவாக்கத்திற்கு முன் காலத்திற்குரியது என்பது தெளிவாகும். மீதியுள்ள ரூ. 400 பின்னுள்ள காலத்திற்குரியது என்பதை உணரவேண்டும்.

**(ஈ) விற்குநருக்குச் செலுத்திய வட்டி**

விற்குநருக்குச் செலுத்திய வட்டி ரூ. 300 என்று கொடுக்கப்பட்டிருக்கிறது. விற்குநர் நடத்தி வந்த தொழிலைக் கம்பெனி சனவரி 1-ல் வாங்கியது. அவருக்குச் சேரவேண்டிய தொகை மே 1-ல்தான் கொடுத்துத் தீர்க்கப்பட்டிருக்கிறது. அதாவது, சனவரி 1-லிருந்து மே 1 வரை (4 திங்களுக்கு) வட்டி அவருக்குச்

சேரவேண்டியது. எனவே, 4 திங்கட்கு விற்குநருக்குச் செலுத்திய வட்டி ரூ. 300 என்பது புலனாகும். இதில் மார்ச் 31 வரை கூட்டுருவாக்கத்திற்கு முன்னுள்ள காலம். எனவே, முன்னுள்ள காலத்தில் 3 திங்கட்கான வட்டி சேரவேண்டியிருக்கிறது; அதற்குப் பின்னுள்ள காலத்தில் (ஏப்ரல் 1 முதல் மே 1 வரை) ஒரு திங்களுக்கான வட்டி சேரவேண்டியிருக்கிறது. எனவே, விற்குநருக்குக் கொடுத்த வட்டி ரூ. 300-ஐயும் இவ்விரு காலங்கட்கும் பிரிக்கும்பொழுது 3 : 1 என்ற விகிதத்தில் பிரிக்கவேண்டுமென்பது தெளிவாகும்.

## (உ) தேய்மானம்

பொதுவாகத் தேய்மானத்தைக் காலத்தின் அடிப்படையில் தான் பிரிக்கவேண்டும். இக் கணக்கில் தேய்மானம் ரூ. 1,000 எனக் கொடுக்கப்பட்டிருக்கிறது. குறிப்பில் ஜூலை 1-ல் வாங்கிய சொத்துகள் மீதான தேய்மானம் ரூ. 400 எனக் கொடுக்கப்பட்டிருக்கிறது. எனவே, இந்த ரூ. 400 முழுதும் கூட்டுருவாக்கத்திற்குப் பின்னுள்ள காலத்திற்குரியதாகும்.

| | | |
|---|---|---|
| மொத்தத் தேய்மானம் | ரூ. | 1,000 |
| கழி : கூட்டுருவாக்கத்திற்குப் பின்னுள்ள காலத்திற்கு மட்டுமே உரிய தேய்மானம் | ரூ. | 400 |
| ஆண்டு முழுவதற்கும் உரிய தேய்மானம் | ரூ. | 600 |

இப்பொழுது இத் தொகையைத்தான் (ரூ. 600) இரு காலங்கட்கும் கால வீதத்தில் (1 : 3) பிரிக்கவேண்டும்.

| | கூட்டுருவாக்கத்திற்கு முன் ரூ. | கூட்டுருவாக்கத்திற்குப் பின் ரூ. |
|---|---|---|
| ஆண்டு முழுவதுமிருந்த சொத்துகள்மீதான தேய்மானம் | 150 | 450 |
| ஜூலை 1-ற்குப் பிறகு வாங்கிய சொத்துகள் மீதான தேய்மானம் | — | 400 |
| | 150 | 850 |

**விற்பனை விகிதத்தைக் கணக்கிடல்**

பெரும்பாலும் செலவினக் கணக்குகள் விற்பனை விகிதத்தில் பிரிக்கப்படுகின்றன. எனவே, விற்பனை விகிதம் சிறப்பு வாய்ந்த தாகும். மேற்சொன்ன எடுத்துக்காட்டைப்போல் கூட்டுரு வாக்கத்திற்கு முன், அதற்குப் பின்னுள்ள காலங்கட்குத் தனித் தனியாக விற்பனைத் தொகை கொடுக்கப்பட்டிருப்பின், விற்பனை விகிதத்தைக் கணக்கிடல் மிகவும் எளிதாக அமைகின்றது. ஆனால், சிலவேளைகளில் இவ்விரு காலங்கட்குமான விற்பனைத் தொகை களைத் தனித்தனியாகத் தரவில்லையெனில், விற்பனை விகிதத்தைக் கணக்கிடுவதில் ஆழ்ந்த கவனஞ் செலுத்தவேண்டும்.

(1) ஆண்டு முழுதும் விற்பனை சீராக இருக்கிறதென்று கொடுக்கப்பட்டிருப்பின், விற்பனை விகிதத்தைக் காலத்தின் அடிப் படையில் கணக்கிடலாம். எடுத்துக்காட்டாக, கம்பெனி ஏப்ரல் 1, 1973-ல் தொழிலை வாங்கியபோதிலும் அது ஆகஸ்டு 1-ல் தான் அமைக்கப்பட்டதென்று கொள்வோம். ஆண்டு முழுவதற்கு மான மொத்த விற்பனை ரூ. 1,20,000 என்றும், விற்பனை ஒரே சீராக இருந்து வந்திருக்கிறதென்றும் கொள்வோம். இப் பொழுது விற்பனை சீராக இருந்து வந்திருப்பதால், விற்பனை விகிதத்தைக் காலத்தின் அடிப்படையில் கணக்கிடலாம். அமைப் பிற்கு முன்னுள்ள காலம் 4 திங்கள். அமைப்பிற்குப் பின்னுள்ள காலம் 8 திங்கள். எனவே, அமைப்பிற்கு முன்னுள்ள காலத் திற்குரிய விற்பனை ரூ. 40,000 என்பதும், அமைப்பிற்குப் பின் னுள்ள விற்பனை ரூ. 80,000 என்றும் அறியலாம். இவ்விரு விற்பனை விகிதமும் கால விகிதமும் ஒன்றுக இருக்கிறது.

(2) பெரும்பாலும் விற்பனை ஆண்டு முழுதும் சீராக இருப்பதில்லை. சில திங்களில் விற்பனை கூடுதலாக இருக்கலாம். சில திங்களில் விற்பனை மிகவும் குறைந்து இருக்கலாம். எடுத்துக் காட்டாக, மின்விசிறியின் விற்பனை ஏப்ரல், மே, சூன் திங்கள் களில் கூடுதலாக இருக்கும். கம்பளி, போர்வை போன்றவற்றின் விற்பனை குளிர்காலத்தில் (நவம்பர், திசம்பர்) கூடுதலாக இருக் கும். இவ்வாறு விற்பனை செய்யப்படும் பொருளின் தன்மைக் கேற்ப, பருவ காலத்தினையொட்டி விற்பனை மாறுபட்டுக்கொண் டிருக்கும். இதுபோன்ற சூழ்நிலைகளில் ஒவ்வொரு திங்கள் விற்பனை யும், சராசரி விற்பனையில் எத்துணை மடங்கு இருக்கலாம் என் பதைக் கணக்கிட்டு விற்பனை விகிதத்தை மதிப்பிடலாம்.

**எடுத்துக்காட்டு 71**

ஒரு கம்பெனி மே 1-ல் கூட்டுருவாக்கம் பெற்றது. அது சனவரி 1-லேயே நடந்துவரும் ஒரு தொழிலை வாங்கிவிட்டது. முதல் 8 திங்கட்கு ஒவ்வொரு திங்களுக்குமான விற்பனை, அடுத்த 4 திங்களில் ஒவ்வொரு திங்களுக்குமான விற்பனையில் $\frac{1}{4}$ பகுதியே இருந்தது என்றும், ஆண்டு மொத்த விற்பனை ரூ. 60,000 எனவும் கொண்டு கூட்டுருவாக்கத்திற்கு முன் விற்பனைத் தொகையையும், அதற்குப் பின் விற்பனைத் தொகையையும் கணக்கிடுக :

**விடை :**

முதல் 8 மாதங்கட்கு ஒவ்வொரு திங்களும் 1 விற்பனையெனில், அடுத்த 4 திங்களில் ஒவ்வொரு திங்கள் விற்பனையும் 4 ஆகும்.

| | | |
|---|---|---|
| கூட்டுருவாக்கத்திற்கு முன்னுள்ள காலம் மே 1 வரைக்குமான 4 திங்கள் விற்பனை | $4 \times 1 = 4$ | |
| அதற்குப் பின்னுள்ள காலம் மே 1-லிருந்து ஆகஸ்டு 31 வரைக்குமான 4 திங்கள் விற்பனை | $4 \times 1 = 4$ | 20 |
| **கூட்டு** : செப்டம்பர் 1 முதல் திசம்பர் 31 வரைக்குமான 4 திங்கள் விற்பனை | $4 \times 4 = 16$ | |

இப்பொழுது விற்பனை விகிதம் 4 : 20. அதாவது, 1 : 5 என்பதை அறியலாம்.

ஆண்டு மொத்த விற்பனை = ரூ. 60,000.

இதனை 1 : 5 எனும் வீதத்தில் பிரிக்கவேண்டும்.

கூட்டுருவாக்கத்திற்கு முன் விற்பனைத் தொகை = ரூ. 10,000 $(60,000 \times \frac{1}{6})$.

கூட்டுருவாக்கத்திற்குப் பின் விற்பனைத் தொகை = ரூ. 50,000 $(60,000 \times \frac{5}{6})$.

**எடுத்துக்காட்டு 72**

1973 சனவரி 1-ல் நடந்துவரும் தொழிலை ஒரு கம்பெனி எடுத்துக்கொண்டது. ஆனால், கம்பெனி மே 1ஆம் நாளில்தான்

கூட்டுருவாக்கம் பெற்றது. 1973 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான இறுதிக் கணக்குகளைத் தயாரித்தது. விற்பனை ஆண்டு முழுதும் சீராக இல்லை. கூட்டுருவாக்கத்திற்கு முன், அதற்குப் பின் காலத்திற்கான விற்பனை விகிதத்தைக் கீழ்க்கண்ட குறிப்புகளிலிருந்து கணக்கிடவும் :

அ. 1973ஆம் ஆண்டு மொத்த விற்பனை ரூ. 2,40,000.

ஆ. (i) சனவரி, திசம்பர் திங்கள்களில் சராசரி விற்பனையைப்போல் இரு மடங்கு.

(ii) பிப்ரவரி, மே திங்கள்களில் சராசரி விற்பனையில் 3/4 பங்கு.

(iii) சூன், சூலை திங்கள்களில் சராசரி விற்பனையில் பாதியளவு.

(iv) அக்டோபர், நவம்பர் திங்கள்களில் சராசரி விற்பனையைப் போன்று $1\frac{1}{2}$ மடங்கு.

**விடை :**

(1) திங்கள் சராசரி விற்பனையை முதலில் கணக்கிடலாம் :

$$\frac{2,40,000}{12} = \text{ரூ. } 20,000$$

(2) தகவல் கொடுக்கப்பட்டுள்ள திங்கள்கட்கான விற்பனையை இப்பொழுது கணக்கிடலாம் :

| | | | ரூ. | | ரூ. |
|---|---|---|---|---|---|
| சனவரி | 2 | × | 20,000 | = | 40,000 |
| பிப்ரவரி | $\frac{3}{4}$ | × | 20,000 | = | 15,000 |
| மே | $\frac{3}{4}$ | × | 20,000 | = | 15,000 |
| சூன் | $\frac{1}{2}$ | × | 20,000 | = | 10,000 |
| சூலை | $\frac{1}{2}$ | × | 20,000 | = | 10,000 |
| அக்டோபர் | $1\frac{1}{2}$ | × | 20,000 | = | 30,000 |
| நவம்பர் | $1\frac{1}{2}$ | × | 20,000 | = | 30,000 |
| திசம்பர் | 2 | × | 20,000 | = | 40,000 |
| | | | | | 1,90,000 |

(3) தகவல் கொடுக்கப்படாத திங்கள்கட்கான விற்பனைத் தொகையை இப்பொழுது உணரவேண்டும் :

| | ரூ. |
|---|---|
| ஆண்டு மொத்த விற்பனை | 2,40,000 |
| **கழி :** தகவல் கொடுக்கப்பட்ட 8 திங்கள்கட்கான மொத்த விற்பனை | 1,90,000 |
| தகவல் கொடுக்கப்படாத 4 திங்கட்கான மொத்த விற்பனை | 50,000 |

தகவல் கொடுக்கப்படாத ஒவ்வொரு திங்களுக்குமான விற்பனை $= \frac{50,000}{4}$

$= 12,500$

தகவல் கொடுக்கப்படாத திங்கள்கள் : மார்ச், ஏப்ரல், ஆகஸ்ட், செப்டம்பர்.

(4) கூட்டுருவாக்கத்திற்கு முன்னுள்ள காலத்தின் மொத்த விற்பனை :

| | ரூ. |
|---|---|
| சனவரி | 40,000 |
| பிப்ரவரி | 15,000 |
| மார்ச் | 12,500 |
| ஏப்ரல் | 12,500 |
| | 80,000 |

(5) கூட்டுருவாக்கத்திற்குப் பின்னுள்ள காலத்தின் மொத்த விற்பனை:

ஆண்டு மொத்த விற்பனை — கூட்டுருவாக்கத்திற்கு முன்னுள்ள காலத்தின் விற்பனை.

= ரூ. 2,40,000 — 80,000

= ரூ. 1,60,000

(6) விற்பனை விகிதம் : = 80,000 : 1,60,000

= 1 : 2

## எடை ஏறிய விகிதம் (Weighted Ratio)

சில நேரங்களில் சில செலவுகளைப் பொருத்தவரை விகிதம் கணக்கிடும்பொழுது எடை ஏற்றப்பட வேண்டியிருக்கலாம். ஊதியம், கூலி போன்ற செலவினங்கள் சில ஆண்டுகளில் திங்களுக்குத் திங்கள் மாறுபடலாம். அவை ஒவ்வொரு திங்களும் ஒரே தொகையாக இருப்பின், கால விகிதத்தில் இச் செலவுகளைப் பிரித்துக்கொள்ளலாம். நிறுவனத்தைக் கம்பெனி வாங்கிய பின், தொழிலகத்தில் பணியாற்றும் தொழிலர்களின் எண்ணிக்கை மாறியிருப்பின், நிறுவனம் கொடுத்த கூலியும், கம்பெனி கொடுக்கும் கூலியும் மாறுபடும். இதுபோன்ற நிலைகளில், ஒவ்வொரு காலத்திற்கும், தொழிலரின் எண்ணிக்கை, திங்களின் எண்ணிக்கை இவற்றின் பெருக்குத் தொகையையும், இதேபோன்று கூட்டுருவாக்கத்திற்குப் பின்னுள்ள பெருக்குத் தொகையையும் ஒப்பிட்டு விகிதத்தைக் கணக்கிட வேண்டும்.

### எடுத்துக்காட்டு 73

கீழ்க்கண்ட விவரங்களிலிருந்து கூட்டுருவாக்கத்திற்கு முன் காலத்திற்கும் பின்னுள்ள காலத்திற்கும் உரிய எடை ஏறிய கால விகிதத்தைக் கணக்கிடுக. கம்பெனி 1973 நவம்பர் 1-ல் அமைக்கப் பட்டது. ஆனால், 1973 சூலை 1-லேயே ஒரு கூட்டு நிறுவனம் நடத்தி வந்த தொழிலை மேற்கொண்டது. 1974 சூன் 30-ல் தனது இறுதிக் கணக்குகளைத் தயாரித்தது. இவ்வாண்டில் மொத்தம் கொடுத்த கூலி ரூ. 18,000. கூட்டுருவாக்கத்திற்கு முன் தொழிலரின் எண்ணிக்கை 10 எனவும், அதற்குப்பின் 40 எனவும் கொள்க.

**விடை :**

| | |
|---|---|
| சாதாரணக் கால விகிதம் | = 4 திங்கள் : 8 திங்கள் |
| | = 1 : 2 |
| எடை ஏறிய கால விகிதம் | = $(1 \times 10) : (2 \times 40)$ |
| | = 10 : 80 |
| | = 1 : 8 |

கூட்டுருவாக்கத்திற்கு முன் கூலி = ரூ. 2,000 $(18,000 \times \frac{1}{9})$

கூட்டுருவாக்கத்திற்குப்பின் கூலி = ரூ. 16,000 $(18,000 \times \frac{8}{9})$

## பயிற்சி

### தொழிலை வாங்குதல்

1. ஒரு கம்பெனி ரூ. 5,00,000 அதிகாரம் பெற்ற பங்கு முதலுடன் அமைக்கப்பட்டது. இது ஒன்று ரூ. 10 வீதம் 25,000 நேர்மைப் பங்குகளையும், ஒன்று ரூ. 100 வீதம் 2,500 6 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளையும் உடையது. இக் கம்பெனி 'X' என்பவரின் வியாபாரத்தை வாங்கியது. அந் நாளில் அவரின் இருப்புநிலைக் குறிப்பு கீழ்க்காட்டியவாறு இருந்தது :

**இருப்புநிலைக் குறிப்பு**

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| செலுத்தற்குரிய | | ரொக்கம் | 4,500 |
| மாற்றுச் சீட்டு | 3,500 | கடனாளிகள் | 7,500 |
| கடனீந்தோர் | 6,400 | சரக்கிருப்பு | 35,000 |
| முதல் | 1,32,100 | பொறிவகை | 50,000 |
| | | கட்டடம் | 45,000 |
| | 1,42,000 | | 1,42,000 |

இதற்குக் கொடுக்க வேண்டிய விலை ரூ. 1,75,000 எனத் தீர்மானிக்கப்பட்டது. முழுதும் செலுத்தப்பெற்ற ரூ. 50,000-த்திற்கான நேர்மைப் பங்குகளையும், முழுதும் செலுத்தப்பெற்ற ரூ. 50,000-ற்கான முன்னுரிமைப் பங்குகளையும், 10 ஆண்டுகளில் மீட்கக்கூடிய ரூ. 30,000-ற்கான கடனீட்டுப் பத்திரங்களையும் மீதிக்கு ரொக்கம் கொடுத்தும் அவ் விலையைத் தீர்க்கவேண்டியது.

மீதியுள்ள பங்குகள் அனைத்தும் பொதுமக்களிடத்தில் வெளியிடப்பட்டு எடுத்துக்கொள்ளப்பட்டன. 600 நேர்மைப் பங்குகள் மீது பங்கு ஒன்றுக்கு ரூ. 3 வீதம் பணம் செலுத்தப்படவில்லை. பிறவற்றின் மீது தொகை முழுதும் பெறப்பட்டது. இப் பங்குகள் ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டு 20 சதவீதம் தள்ளுபடியில் மீண்டும் வெளியிடப்பட்டன. மேற்கண்ட நடவடிக்கைகளைக் கம்பெனியின் ஏடுகளில் பதியத் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து தொடக்க இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்கவும்.

(Delhi B. A. Com., 1959)

2. வரையறு பொறுப்புடைய ஒரு கம்பெனி ரூ.5,00,000 அதிகாரம் பெற்ற முதலுடன் தொடங்கப்பட்டது. இது ஒன்று ரூ. 10 வீதம் 25,000 நேர்மைப் பங்குகளாகவும், ஒன்று ரூ. 10 வீதம் 25,000, 5 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளாகவும் பிரிக்கப்பட்டது.

அப்துலும், ஆப்ரஹாமும் நடத்திவரும் கூட்டு நிறுவன வியாபாரம் ஒன்றை ரூ. 50,000-ற்கு வாங்கியது. அவர்களின் 1973 திசம்பர் 31-ற்கான இருப்புநிலைக் குறிப்பு கீழ்க் கொடுக்கப் பட்டுள்ளது :

**இருப்புநிலைக் குறிப்பு**

| | | ரூ. | | ரூ. |
|---|---|---|---|---|
| திருமதி ஆப்ரஹாமின் | | | வங்கி | 2,500 |
| கடன் | | 5,000 | கடனாளிகள் | 20,000 |
| கடனீந்தோர் | | 16,000 | தட்டச்சுப் | |
| முதல் கணக்குகள் : | | | பொறி | 2,000 |
| அப்துல் | 26,000 | | சரக்கிருப்பு | 17,500 |
| ஆப்ரஹாம் | 23,000 | | கட்டடம் | 25,000 |
| | | 49,000 | வாணிக | |
| | | | நற்பெயர் | 3,000 |
| | | 70,000 | | 70,000 |

கொள்முதல் மறுபயனைக் கீழ்க்கண்டவாறு கம்பெனி தீர்த்தது :

| | |
|---|---|
| 3,000 நேர்மைப் பங்குகள் | 10 சதவீதம் முனைமத்தில் |
| 1,000, 5 சதவீதம் முன்னுரிமைப் பங்குகள் | 10 சதவீதம் முனைமத்தில் |
| மீதித் தொகைக்கு | ரொக்கம் |

வங்கியிருப்பையும், திருமதி ஆப்ரஹாமின் கடன் கணக்கையும் தவிர, பிற சொத்துகளையும், பொறுப்புகளையும் கம்பெனி கீழ்க்காட்டியவாறு எடுத்துக்கொண்டது :

கடனாளிகளில் 5% ஐயக் கடன் காப்பு ஏற்படுத்தி, தட்டச்சுப் பொறியையும், சரக்கிருப்பையும் முறையே 10 சதவீதம், 5 சதவீதம் குறைத்து.

கட்டடத்தின் மதிப்பில் 20 சதவீதம் உயர்த்தி.

மீதியுள்ள பங்குகளைப் பொதுமக்களிடத்தில் 10 சதவீதம் முனைமத்தில் கம்பெனி வெளியிட்டது. இது விண்ணப்பத்தின் போழ்து ரூ. 2-ம், ஒதுக்கீட்டின்போழ்து ரூ. 3-ம் (முனைமம் உள்பட), மீதி அழைப்பின்போழ்தும் செலுத்தப்படவேண்டும்.

அனைத்துப் பங்குகட்கும் விண்ணப்பங்கள் வர, உரிய முறையில் ஒதுக்கீடு செய்யப்பட்டன. இவற்றில் 400 நேர்மைப் பங்குகள் மீது அழைப்புத் தொகை வராமற்போகவே, அவற்றை ஒறுப்பிழப்புச் செய்து, அவற்றில் 300 பங்குகளை ஒன்று ரூ. 9 விலையில் மீண்டும் வெளியிட்டது.

இந் நடவடிக்கைகளைக் கம்பெனியின் குறிப்பேட்டில் பதிந்து இருப்புநிலைக் குறிப்பைத் தயார் செய்க.

3. அஹமத், ஆறுமுகம் இருவரும் நடத்தி வந்த வியாபாரத்தை 1966 ஜூன் 30-ல் என்டர்பிரைஸ் லிமிடெட் (Enterprise Ltd.) எடுத்துக்கொள்ள ஒப்புக்கொண்டது. அந் நாளிலிருந்த இருப்புநிலைக் குறிப்பின் சுருக்கம் கீழே கொடுக்கப் பட்டுள்ளது :

| | | | ரூ. |
|---|---|---|---|
| | வாணிக நற்பெயர் | | 1,00,000 |
| | நிலமும் கட்டடமும் | | 6,50,000 |
| | பொறிவகை | | 2,80,000 |
| | சரக்கிருப்பு | | 2,40,000 |
| | கடனாளிகள் | | 6,70,000 |
| | | | 19,40,000 |
| கழி : | கடனீந்தோர் | ரூ. 2,80,000 | |
| | மேல்வரைப் பற்று | ரூ. 90,000 | |
| | | | 3,70,000 |
| | முதல் | ரூ. | 15,70,000 |

கொள்முதல் மறு பயன் ரூ. 15,00,000 என ஒப்புக் கொள்ளப்பட்டது. கம்பெனி சொத்துகள் அனைத்தையும், கடனீந்தோருக்கான பொறுப்பையும் ஏற்றுக்கொண்டது. ஆனால்,

வங்கி மேல்வரைப் பற்றை அஹமத்தும், ஆறுமுகமும் தீர்க்க வேண்டியது. கொள்முதல் மறு பயனைக் கணக்கிடுவதில், சரக்கிருப்பு ரூ. 2,10,000 எனவும், பொறிவகை ரூ. 3,00,000 எனவும் மதிப்பிடப்பட்டன. ஐயக் கடன் காப்புக்கு ரூ. 50,000 ஒதுக்கப்பட்டது.

தொழிலை வாங்குவதற்கும், தேவையான நடைமுறை முதலுக்கான நிதியைப் பெறவும் என்டர்பிரைஸ் லிமிட்டெட் ஒன்று ரூ. 10 மதிப்புடைய 2,00,000 நேர்மைப் பங்குகளை ஒன்று ரூ. 11 வீதம் வெளியிட முடிவு செய்தது. இப் புதிய பங்குகளில் அஹமத்தும், ஆறுமுகமும் 50,000 பங்குகளைக் கொள்முதல் மறு பயனின் ஒரு பகுதியாகப் பெற்றுக்கொண்டனர். இப் பங்குகள் 1966 ஜூலை 15-ல் முழுதும் செலுத்தப்பட்டவையாக ஒதுக்கப்பட்டன. இவ்விலையின் மீதித் தொகை 1966 செப்டம்பர் 1-ல் ரொக்கமாகச் செலுத்தப்பட வேண்டியது.

4. A, B, C மூவரும் கூட்டு நிறுவனமாக நடத்திவரும் இருப்புநிலைக் குறிப்பு கீழ்க்கண்டவாறு இருந்தது :

**இருப்புநிலைக் குறிப்பு**

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| A-யின் முதல் | 45,000 | கட்டடம் | 28,000 |
| B-யின் முதல் | 30,000 | பொறிவகை | 14,000 |
| C-யின் முதல் | 15,000 | சரக்கிருப்பு | 26,000 |
| கடனீந்தோர் | 8,000 | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு | 12,000 |
| | | கடனாளிகள் | 18,000 |
| | 98,000 | | 98,000 |

அந்நாளில் தங்கள் கூட்டு நிறுவனத்தைப் புதிதாகத் தொடங்கப்பெற்ற கூட்டுப் பங்குக் கம்பெனிக்கு விற்கின்றனர். ஒன்று ரூ. 100 மதிப்புள்ள 2,000 பங்குகளாகப் பிரிக்கப்பட்டு, ரூ. 2,00,000-ற்குப் பங்குமுதலையுடையதாகக் கூட்டுப் பங்குக் கம்பெனி அமைக்கப்பட்டது. ரூ. 1,00,000-ற்கான கடனீட்டுப்

பத்திரங்களையும் அது வெளியிட்டது. கூட்டு நிறுவனம் முழுவதையும் கம்பெனி எடுத்துக்கொண்டு கீழ்க்கண்டவாறு அதற்குரிய விலையைச் செலுத்த உடன்பட்டது.

| | பங்குகள் | கடனீட்டுப் பத்திரங்கள் | ரொக்கம் |
|---|---|---|---|
| | ரூ. | ரூ. | ரூ. |
| 'A' | 24,000 | 18,000 | 6,000 |
| 'B' | 16,000 | 12,000 | 4,000 |
| 'C' | 8,000 | 6,000 | 2,000 |

மீதியுள்ள பங்குகளும், கடனீட்டுப் பத்திரங்களும் பொது மக்களிடத்தில் வெளியிடப்பட்டன. அனைத்துப் பங்குகட்கும் விண்ணப்பங்கள் வர ஒதுக்கீடு செய்யப்பட்டன. ஜான் வைத்திருக்கும் 200 பங்குகள் மீது பங்கு ஒன்றுக்கு ரூ. 40 வீதம் இறுதி அழைப்புத்தொகை பெறவில்லை. இதைத் தவிர பிறவற்றிற்குப் பணம் முழுதும் பெறப்பட்டது. உரிய அறிவிக்கைக்குப் பின்னர், இப் பங்குகள் பறிமுதல் செய்யப்பட்டுப் பங்கு ஒன்றுக்கு ரூ. 20 தள்ளுபடியில் முழுதும் செலுத்தப்பட்டவைகளாக மீண்டும் வெளியிடப்பட்டன. கம்பெனியின் தொடக்கச் செலவு ரூ. 1,000 ஆனது. வாணிக நற்பெயரையும், தொடக்கச் செலவையும் முழுமையாக நீக்கிக்கொள்ளவும், இருப்புநிலைக் குறிப்பில் கூடுதல் மதிப்பில் கொடுக்கப்பட்டுள்ள பொறிவகைக் கணக்கைக் குறைத்துக்கொள்ளவும், பறிமுதல் செய்யப்பட்ட பங்குத் தொகையிலுள்ள இருப்பினைப் பயன்படுத்திக்கொள்ளவேண்டியது.

கூட்டுப் பங்குக் கம்பெனியின் ஏடுகளில் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து இருப்புநிலைக் குறிப்பைத் தயார் செய்யவும். (Bombay University)

5. மணி அன் கோவின் 1968 மார்ச் 31-ற்கான இருப்புநிலைக் குறிப்பு கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| கடனீந்தோர் | 10,832 | மனைத்துணைப் பொருள் | 537 |
| முதல் கணக்குகள் : | | சரக்கிருப்பு | 6,042 |
| அன்புமணி | 16,435 | கடனாளிகள் | 23,421 |
| அறிவுமணி | 5,824 | வங்கி | 3,091 |
| | 33,091 | | 33,091 |

மணி அன் கோ லிமிட்டெட் எனும் தனிக் கம்பெனி ரூ. 35,000 அதிகாரம் பெற்ற பங்குமுதலுடன் 1967 மார்ச் திங்களில் பதிவு செய்யப்பட்டது. இம் முதல் ஒன்று ரூ. 10 வீதம் 2,500, 7 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளாகவும், ஒன்று ரூ. 10 வீதம் 1,000 நேர்மைப் பங்குகளாகவும் பிரிக்கப் பட்டிருக்கிறது. இது கீழ்க்கண்ட நிபந்தனைகளின் பேரில் மேற் சொன்ன வியாபாரத்தை 1967 ஏப்ரல் 1-ல் எடுத்துக்கொண்டது. வாணிக நற்பெயர் ரூ. 10,000 என மதிப்பிடப்பட்டது. சரக் கிருப்பும், மனைத்துணைப்பொருளும் இருப்புநிலைக் குறிப்பிலுள்ள மதிப்பிலேயே எடுத்துக் கொள்ளப்பட்டன. இதன் விலையை ரொக்கத்தில் செலுத்தவேண்டியது. பொறுப்புகள், கடனாளிகள், வங்கியிருப்பு முதலியவற்றைக் கம்பெனி எடுத்துக் கொள்ளவில்லை. ஆனால், விற்குநரின் முகவராகவிருந்து கடனாளியிடம் வசூல்செய்து பொறுப்புகளைத் தீர்க்கவும், ஒவ்வொரு திங்கள் இறுதியிலும் இவைபற்றித் தெரிவிக்கவும் கம்பெனி ஒப்புக்கொண்டது.

உடனடியாக அன்புமணி 500 நேர்மைப் பங்குகளையும், 1,500, 7 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளையும் எடுத்துக்கொள்ள வேண்டியது. நேர்மைப் பங்குகள் ஒதுக்கப்பட்டவுடன் முழுத் தொகையும் செலுத்தப்படவேண்டும். முன்னுரிமைப் பங்குகள் ஒதுக்கீட்டின்போழ்து ரூ. 5-ம், மீதித் தொகை அழைக்கும் போழ்தும் செலுத்தப்படவேண்டும்.

கொள்முதல் மறு பயன் செலுத்தப்பட்டது. பங்குகள் உரிய முறையில் விண்ணப்பிக்கப்பெற்று ஏப்ரல் 1-ல் ஒதுக்கீடு செய்யப்பட்டன. ஏப்ரல் திங்களில் வாடிக்கையாளரிடமிருந்து பெற்ற மொத்த ரொக்கம் ரூ. 12,397. இதில் ரூ. 504 ஏப்ரல் திங்கட்கான விற்பனைக்குரியதாகும். அத்துடன் நட்ட ஈட்டுத் தொகையாக நீதிமன்றத்தில் இருந்த வழக்கின் காரணமாக ரூ. 3,620 பெறப்பட்டது. இது 1967 மார்ச் 31-ற்கான இருப்பு நிலைக் குறிப்பில் சேர்க்கப்படவில்லை. மொத்தம் செலுத்தியது ரூ. 14,966. இதில் ரூ. 6,865 நிறுவனத்தின் பழைய கடனுக்கு உரியதாகும். மேற்கண்ட நடவடிக்கைக்குத் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து விற்குநர் சரிக்கட்டுக் கணக்கைத் தயார் செய்க.

(G. D. A.-வைத் தழுவியது.)

6. 1966 சூலை 1-ல் நானக் என்பவரிடமிருந்து ஒரு கம்பெனி சில சொத்துகளை வாங்கியது. அவருடைய கடனாளிகள் ரூ. 1,30,000-த்தை வசூலித்து, அதிலிருந்து ரூ. 30,000-ற்கான

அவருடைய பொறுப்புகளைத் தீர்க்கவும் கம்பெனி ஏற்றுக்கொண்டது. இதற்காக வசூலித்த தொகை மீது 3 சதவீதம் கழிவும், செலுத்திய தொகை மீது 1 சதவீதம் கழிவும் கம்பெனிக்குத் தரவேண்டும். கடனாளியிடமிருந்து ரூ. 1,20,000தான் வசூலானது. இதிலிருந்து கடனீந்தோருக்கு ரூ. 28,500 செலுத்திக் கணக்குத் தீர்க்கப்பட்டது. நானக் ரூ. 50,000-ற்கு 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை 95-லும், மீதியை ரொக்கமாகவும் பெற்றார்.

குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

(M. U. B. Com., Sep, 1966)

7. கீட்சும். பைரனும் சேர்ந்து நடத்திவரும் கூட்டு நிறுவன வியாபாரத்தை 1955 சனவரி 1-லிருந்து எடுத்துக் கொள்ளும் நோக்குடன் வரையறு பொறுப்புடைய கவிஞர் கம்பெனி அமைக்கப்பட்டது. அந் நாளில் கூட்டு நிறுவனத்தின் இருப்புநிலைக் குறிப்பு கீழ்க்கண்டவாறிருந்தது :

**இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|---|
| கடனீந்தோர் | | 15,72,200 | நிலம் | 60,000 |
| செலுத்தற்குரிய | | | கட்டடம் | 1,20,000 |
| மாற்றுச்சீட்டு | | 2,36,000 | மனைத்துணைப் | |
| கொடுபடவேண்டிய | | | பொருள் | 8,000 |
| செலவினம் | | 19,500 | பொறிவகை | 3,75,000 |
| வங்கிக் கடன் | | 3,69,000 | கடனாளிகள் | 10,14,000 |
| முதல் கணக்குகள் : | | | பெறுதற்குரிய | |
| கீட்சு | 30,000 | | மாற்றுச்சீட்டு | 5,83,000 |
| பைரன் | 25,000 | | சரக்கிருப்பு | 90,000 |
| | | 55,000 | ரொக்கம் | 200 |
| | | | வங்கி | 1,500 |
| | | 22,51,700 | | 22,51,700 |

சொத்துகள் கீழ்க்கண்ட மதிப்பில் எடுத்துக்கொள்ளப்பட்டன :

நிலம், இருப்புநிலைக் குறிப்பு மதிப்பில்; கட்டடம் ரூ. 40,000; மனைத்துணைப் பொருள் ரூ. 4,000; பொறிவகை ரூ. 2,50,000; கடனாளிகள் 75 சதவீதத்தில்; பெறுதற்குரிய மாற்றுச் சீட்டு ரூ. 4,00,000; சரக்கிருப்பு ரூ. 75,000.

பொறுப்புகளைப் பொருத்தவரை கடனீந்தோர் 50 சதவீதம் பெற்றுத் தீர்த்துக்கொள்ள ஒப்பினர். செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகளை வைத்திருப்போர் தங்களுக்குச் சேரவேண்டிய 25 சதவீதத்தை விட்டுக்கொடுக்க இசைந்தனர். கொடுபடவேண்டிய செலவினம் 50 சதவீதத்தில் தீர்க்கப்பட்டது. வங்கிக் கடன் முழுதும் செலுத்தப்படவேண்டும்.

கொள்முதல் மறுபயன் ரூ. 40,000 எனவும், பாதி ரொக்கமாகவும், பாதி பெயரளவு மதிப்பில் முழுதும் செலுத்தப்பட்ட பங்குகளாகவும் செலுத்த உறுதி செய்யப்பட்டது.

ரூ. 25,00,000 அதிகாரம் பெற்ற பங்கு முதலுடன் கம்பெனி பதிவு செய்யப்பட்டது. இது ஒன்று ரூ. 100 மதிப்புள்ள 25,000 நேர்மைப் பங்குகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

10,000 பங்குகள் (விற்குநருக்குச் செலுத்தவேண்டிய பங்குகள் உள்பட) பெயரளவு மதிப்பில் வெளியிடப்பட்டன. இவற்றின் மீது முழுத் தொகையும் கோரப்பட்டு பணம் முழுதும் பெறப்பட்டது.

கம்பெனி அமைப்பின்பொருட்டு ஏற்ற தொடக்கச் செலவுகள் ரூ. 25,000; பங்கு விற்பனைக்காகக் கொடுத்த கழிவு ரூ. 12,000. கம்பெனியின் தொடக்க இருப்புநிலைக் குறிப்பைத் தயாரிக்க.

(Calicut university, B. Com.,-ஐத் தழுவியது)

8. வரையறு பொறுப்புடைய புதுமைக் காலணிக் கம்பெனி முருகனின் வியாபாரத்தை வாங்கியது. அவரின் கடனாளிகள் ரூ. 20,000-த்தையும், கடனீந்தோர் ரூ. 18,000-த்தையும் எடுத்துக் கொள்ளவில்லை. ஆயினும், அவரின் முகவராயிருந்து கடனாளியிடம் தண்டிக் கடனீந்தோருக்குச் செலுத்த ஒப்புக் கொண்டது. கடனாளிகளில் ரூ. 300 வசூலாகவில்லை; கடனாளி

கட்கு அளித்த தள்ளுபடி ரூ. 230; அத்துடன் முன்னர் வராது என நீக்கப்பட்டிருந்த ரூ. 1,000-ற்கான கடன் இப்பொழுது வசூலாகியது. கடனீந்தோரிடம் ரூ. 16,000 செலுத்திக் கணக்கு நேர் செய்யப்பட்டது. முன்னர் முருகன் வங்கியில் தள்ளுபடி செய்திருந்த உண்டியல் மீதான ரூ,500-ற்கான பொறுப்பைக் கம்பெனி தீர்க்க வேண்டியிருந்தது. வேண்டிய குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

9. பெங்கால் புரொடக்ஸ் லிமிட்டெட் ரூ. 10,00,000 பங்குமுதலுடன் பதிவு செய்யப்பட்டது. இது ஒன்று ரூ. 10 மதிப்புடைய 50,000 நேர்மைப் பங்குகளாகவும், ஒன்று ரூ. 10 மதிப்புடைய 50,000 ஏழரை சதவீதம் முன்னுரிமைப் பங்குகளாகவும் பிரிக்கப்பட்டுள்ளது. அது கீழ்க்கண்ட நிறுவனத்தை ரூ. 2,50,000-ற்குக் கீழ்க்கண்ட இருப்புநிலைக் குறிப்பின் அடிப்படையில் வாங்கியது.

## இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| செலுத்தற்குரிய | | வங்கி | 4,000 |
| மாற்றுச் சீட்டு | 19,000 | பெறுதற்குரிய | |
| கடனீந்தோர் | 80,000 | மாற்றுச்சீட்டு | 5,000 |
| முதல் | 2,20,000 | கடனாளிகள் | 50,000 |
| | | சரக்கிருப்பு | 70,000 |
| | | மனைத்துணைப் | |
| | | பொருள் | 10,000 |
| | | பொறிவகை | 1,20,000 |
| | | கட்டடம் | 60,000 |
| | 3,19,000 | | 3,19,000 |

இதன் விலையை ரூ. 50,000-ற்கு முழுதும் செலுத்தப்பட்ட நேர்மைப் பங்குகளாகவும், ரூ. 50,000-ற்கு முழுதும் செலுத்தப்பட்ட முன்னுரிமைப் பங்குகளாகவும், ரூ, 50,000-ற்கு முழுதும் செலுத்தப்பட்ட கடனீட்டுப் பத்திரங்களாகவும், மீதிக்கு ரொக்கம் கொடுத்தும் தீர்க்கவேண்டியது. மீதியுள்ள பங்குகள் பொது

மக்களிடத்தில் வெளியிடப்பட்டன. விண்ணப்பத்தின்போழ்து ரூ. 2-ம், ஒதுக்கீட்டின்போழ்து ரூ. 4-ம், அழைப்பின்போழ்து ரூ. 4-ம் செலுத்தவேண்டியது. அனைத்துப் பங்குகட்கும் பணம் பெறப்பட்டது. விற்குநருக்குக் கொள்முதல் மறு பயன் உரிய வாறு தீர்க்கப்பட்டது. மேற்கண்டவற்றிற்குக் குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்பைத் தயாரிக்க.

(Delhi B. A. Com., 1964-ஐத் தழுவியது)

10. பட்டேல், சௌத்ரி என்பவர்கள் கூட்டாக நடத்தி வரும் தங்கள் வியாபாரத்தினைக் கலைத்துவிட்டு வரையறு பொறுப்புடைய ஒரு கம்பெனிக்கு விற்க விரும்பினர். 1956 திசம்பர் 31-ல் கூட்டு நிறுவனத்தின் நிலை கீழ்க்கண்டவாறு இருந்தது :

**கூட்டு நிறுவனத்தின் நிலை**

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| கடனீந்தோர் | 21,250 | மனைத்துணைப் | |
| பட்டேலின் முதல் | 34,000 | பொருள் | 3,320 |
| சௌத்ரியின் முதல் | 17,000 | சரக்கிருப்பு | 15,380 |
| | | கடனாளிகள் | 48,450 |
| | | ரொக்கம் | 5,100 |
| | 72,250 | | 72,250 |

மேற்கண்ட வியாபாரத்தை வாங்கும் நோக்குடன் வரையறு பொறுப்புடைய ஒரு கம்பெனி அதிகாரம் பெற்ற பங்குமுதல் ரூ. 2,89,000-த்துடன் பதிவு செய்யப்பட்டது. இம் முதல் ஒன்று ரூ. 100 மதிப்புடைய 1,700 நேர்மைப் பங்குகளாகவும், ஒன்று ரூ. 100 மதிப்புடைய 1,190, 6 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளாகவும் பிரிக்கப்பட்டது. கீழ்க்கண்ட நிபந்தனைகளின் பேரில் தொழில் வாங்கப்பட்டது.

(அ) இருப்புநிலைக் குறிப்பேட்டு மதிப்புகளினின்றும் 10 சதவீதம் குறைத்து மனைத்துணைப் பொருளும், சரக்கிருப்பும் எடுத்துக்கொள்ளப்பட்டன.

(ஆ) நிறுவனத்தின் வாணிக நற்பெயர் ரூ. 10,120 என மதிப்பிடப்பட்டது.

(இ) நிறுவனத்தின் கடனாளிகளையும், ரொக்கத்தையும் கடனீந்தோரையும் கம்பெனி எடுத்துக்கொள்ளவில்லை. ஆனால், நிறுவனத்தின் முகவராக இருந்து கடனாளிகளிடம் தண்டி விற்குநர் பொறுப்புகளைத் தீர்க்கக் கம்பெனி உடன்பட்டது. இப் பணிக்கு விற்குநரின் கடனாளிகளிடமிருந்து வசூலான தொகை மீது 3 சதவீதமும், விற்குநரின் கடனீந்தோருக்குச் செலுத்திய தொகை மீது 2 சதவீதமும் கம்பெனிக்குக் கழிவு தரப்பட வேண்டும்.

வாணிக நற்பெயரை நீக்க இவ்வாறு ஈட்டிய கழிவுத் தொகையைக் கம்பெனி பயன்படுத்திக் கொள்ளவேண்டும்.

(ஈ) கொள்முதல் விலையானது முழுதும் செலுத்தப்பெற்ற நேர்மைப் பங்குகளாகவும், 6 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளாகவும், பங்கு ஒன்றுக்கு ரூ. 10 முனைமத்தில் 3 : 2 என்ற வீதத்தில் கொடுத்துத் தீர்க்கவேண்டும்.

தொழிலை மேற்கொண்ட முதல் இரண்டு திங்கள்களில் விற்குநரின் கடனாளிகளிடமிருந்து ரூ. 36,500 வசூலாகியது. நிறுவனத்தின் ஏடுகளில் வராது என நீக்கப்பட்டிருந்த ஒருவரிடமிருந்து ரூ. 3,500, வசூலான மேற்சொன்ன தொகையில் அடங்கியுள்ளது. கம்பெனி பெற்ற பணத்திலிருந்து விற்குநரின் கடனீந்தோருக்கு ரூ. 21,000 செலுத்திக் கணக்கு முழுதும் தீர்க்கப்பட்டது.

மீதியுள்ள நேர்மைப் பங்குகளையும், முன்னுரிமைப் பங்குகளையும் பங்கு ஒன்றுக்கு ரூ. 10 முனைமத்தில் பொதுமக்களிடம் கம்பெனி வெளியிடுவதாகக் கொண்டு கம்பெனியின் ஏடுகளில் மேற்கண்ட நடவடிக்கைகட்கான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக. கம்பெனியின் தொடக்க இருப்புநிலைக் குறிப்பையும் தருக. அனைத்துப் பங்குகட்கும் தொகை முழுதும் செலுத்தப்பட்டது.

(M. U. B. Com. April, 1961)

(11) நாதன் என்பவரின் 1968 ஜூலை 31-ற்கான இருப்பு நிலைக் குறிப்பு கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கிறது :

**இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| முதல் | 5,27,500 | வில்லங்கமற்ற | |
| கடனீந்தோர் | 4,37,110 | சொத்துகள் | 2,10,000 |
| வங்கி மேல்வரைப் | | பொறிவகை | 3,12,000 |
| பற்று | 1,02,500 | சரக்கிருப்பு | 3,31,110 |
| | 10,67,110 | | 10,67,110 |

மேற்கண்ட தொழிலை 1968 ஆகஸ்ட் 1-லிருந்து எடுத்துக் கொள்ளும் நோக்குடன் நாதன் லிமிட்டெட் எனும் கம்பெனி, ரூ. 1,00,000 அதிகாரம் பெற்ற பங்கு முதலுடன் அமைக்கப் பெற்றது. இது ஒன்று ரூ. 10 மதிப்புடைய 50,000 நேர்மைப் பங்குகளாகவும், ஒன்று ரூ. 50 மதிப்புடைய 10,000, 8 சத வீதம் முன்னுரிமைப் பங்குகளாகவும் பிரிக்கப்பட்டிருக்கிறது

(அ) நாதன் 5,000 நேர்மைப் பங்குகளையும், 5,000 முன்னுரிமைப் பங்குகளையும் ரொக்கத்திற்கு எடுத்துக்கொள்ள வேண்டியது.

(ஆ) வில்லங்கமற்ற சொத்தைத் தவிர பிற எல்லா சொத்து களையும் நாதன் கம்பெனிக்கு ரூ. 5,00,000-ற்கு விற்றுவிட வேண்டியது. கம்பெனி கடனீந்தோருக்கான பொறுப்பினை மட்டும் ஏற்றுக்கொள்ளவேண்டியது. 5,000 முன்னுரிமைப் பங்குகளையும், 25,000 நேர்மைப் பங்குகளையும் முழுதும் செலுத்தப் பெற்றவையாக வெளியிட்டு, விலையைத் தீர்க்க வேண்டியது.

(இ) அமைப்பு செலவிற்கான ரூ. 5,100-ஐக் கம்பெனி செலுத்த வேண்டியது.

மீதியுள்ள பங்குகள் பொதுமக்களிடத்தில் வெளியிடப் பட்டன. அனைத்துப் பங்குகளும் உரிய முறையில் ஒதுக்கப் பட்டன. பங்குப்பணம் முழுதும் பெறப்பட்டது.

கீழ்க்கண்டவற்றைத் தயார் செய்யவும் :

(அ) மேற்கண்ட நடவடிக்கைகளைக் கம்பெனியின் குறிப்பேட்டுப் பதிவில் பதிதல்.

(ஆ) மேற்கண்ட நடவடிக்கைகள் அனைத்தும் முடிந்த பின்னர்க் கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்பினைத் தயார் செய்க.

(M. U. B. Com., Sep, 1968)

12. X, Y, Z மூவரும் நடத்தி வந்த கூட்டு நிறுவனத்தின் 1969 மார்ச் 31-ற்குரிய இருப்புநிலைக் குறிப்பு கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. அவர்கள் 3 : 2 : 1 என்ற விகிதத்தில் இலாப-நட்டத்தைப் பிரித்துக் கொள்கின்றனர்.

**இலாப-நட்டக் கணக்கு**

| சொத்துகள் | ரூ. | ரூ. | பொறுப்புகள் | ரூ. |
|---|---|---|---|---|
| X .... | 70,000 | | நிலமும் | |
| Y .... | 40,000 | | கட்டடமும் | 30,000 |
| Z .... | 20,000 | | பொறிவகையும் | |
| | | 1,30,000 | தளவாடங்களும் | 80,000 |
| பொதுக்காப்பு | | 25,000 | மனைத்துணைப் பொருள் | 10,000 |
| வங்கி மேல்வரைப் பற்று (சரக்கை அடைமானம் செய்தது.) | | 20,000 | சரக்கிருப்பு | 40,000 |
| கடனீந்தோர் | | 15,000 | கடனாளிகள் | 32,500 |
| கொடுபட வேண்டிய செலவு | | 5,000 | வங்கி | 2,500 |
| | | 1,95,000 | | 1,95,000 |

அதிகாரம் பெற்ற பங்குமுதல் ரூ. 2,50,000-த்துடன் கூட்டு நிறுவனத்தைத் தனிக் கம்பெனியாக மாற்றிக்கொள்ள முடிவு செய்தனர். இம் முதல் ஒன்று ரூ. 100 மதிப்புள்ள 2,500 நேர்மைப் பங்குகளாகப் பிரிக்கப்படவேண்டியது. புதிதாக அமைக்கப்பட்ட இக் கம்பெனி கூட்டு நிறுவனத்தை 1–4–69-லிருந்து எடுத்துக்கொள்ளவேண்டியது. கீழ்க்கண்ட நிபந்தனைகட்குக் கூட்டாளிகள் உடன்பட்டனர் :

(அ) கூட்டாளிகட்கு 2,000 பங்குகளை வெளியிட்டுக் கொள்முதல் மறு பயனைத் தீர்க்க வேண்டியது.

(ஆ) வங்கி மேல்வரைப் பற்றினை அடைக்கக் கூட்டாளிகள் ஒப்புக்கொண்டனர்.

(இ) சொத்துகள் கீழ்க்கண்டவாறு மறு மதிப்பீடு செய்யப் பட்டன :

| | | |
|---|---|---|
| (i) | நிலமும் கட்டடமும் | ரூ. 40,000 |
| (ii) | பொறிவகையும் தளவாடமும் | ரூ. 1,00,000 |
| (iii) | மனைத்துணைப்பொருள் | ரூ. 8,000 |
| (iv) | சரக்கிருப்பு | ரூ. 25,000 |

(ஈ) கடனாளியிடமிருந்து ரூ. 30,000 வசூலாகுமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

(உ) கணக்கேடுகளில் எழுதப்பெறுப் பொறுப்புகட்காக ரூ. 5,000 ஒதுக்கவேண்டியது.

கம்பெனியின் ஏடுகளில் தொடக்கப் பதிவுகளைத் தந்து தொடக்க இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்கவும்.

(Institute of Company Secretaries of India, Oct. 69)

13. திரு லால் அவர்களின் சொத்துகளும் பொறுப்பு களும் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன :

| | ரூ. |
|---|---|
| நிலமும், கட்டடமும் | 1,50,000 |
| சரக்கிருப்பு | 1,00,000 |
| வேலை முற்றுப் பொருள் | 43,000 |
| கடனாளிகள் | 55,000 |
| புனைபொருள் உரிமை | 8,000 |
| வங்கி | 5,000 |
| கடனீந்தோர் | 50,000 |
| செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் | 6,000 |

மேற்கண்ட வியாபாரத்தை ரூ. 3,50,000-ற்கு வாங்கும் நோக்குடன் வரையறு பொறுப்புடைய கம்பெனி (லால் லிமிடெட்) அமைக்கப்பட்டது. ரூ. 1,00,000-ற்கு நேர்மைப் பங்குகள், ரூ. 1,00,000-ற்கு முன்னுரிமைப் பங்குகள், ரூ. 1,00,000-ற்கு $4\frac{1}{2}$ சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள், மீதிக்கு ரொக்கம் கொடுத்துக் கொள்முதல் மறுபயனைத் தீர்க்கவேண்டியது. வங்கி இருப்பைத் தவிர திரு. லால் அவர்களின் சொத்துகள் அனைத்தையும் கடனீந்தோருக்குகான பொறுப்புகளையும் கம்பெனி எடுத்துக் கொண்டது.

ஒன்று ரூ. 1 மதிப்புடைய 2,50,000 நேர்மைப் பங்குகளையும், 1,50,000 முன்னுரிமைப் பங்குகளையும் உடையதாகக் கம்பெனியின் பதிவு செய்யப்பட்ட முதல் ரூ. 4,00,000 இருக்க வேண்டும். 50,000 நேர்மைப் பங்குகளையும், மீதியுள்ள முன்னுரிமைப் பங்குகளையும் பொதுமக்களிடத்தில் கம்பெனி வெளியிட்டது. பங்குத் தொகை பங்கு ஒன்றுக்கு விண்ணப்பத்தின் போழ்து 25 காசுகளும், ஒதுக்கீட்டின்போழ்து 25 காசுகளும், ஒதுக்கீட்டுக்கு ஒரு திங்களுக்குப் பின் பங்கு ஒன்றுக்கு 50 காசுகள் வீதமும் செலுத்தப்பட வேண்டும்.

வெளியிட்ட முதல் அனைத்திற்கும் விண்ணப்பங்கள் வந்தன. பங்குகளையும் (விற்குநரின் பங்குகள் உள்பட), கடனீட்டுப் பத்திரங்களையும் 1968 மார்ச் 1-ல் கம்பெனி ஒதுக்கியது. சூன் 30 வரை 200 நேர்மைப் பங்குகள் மீதும், 100 முன்னுரிமைப் பங்குகள் மீதுமான ஒதுக்கீட்டுப் பணமும், அழைப்புப் பணமும் தவிர, பிற பங்குகள்மீதான தொகை முழுதும் பெறப்பட்டது. இயக்குநர்கள் கம்பெனி விற்குநருக்குச் செலுத்தவேண்டிய ரொக்கத்தைச் செலுத்தினர்; தொடக்கச் செலவு ரூ. 5,000 ஆனது. ஒதுக்கீட்டுத் தொகையும், அழைப்புப் பணமும் நிலுவையிலுள்ள பங்குகளை ஒறுப்பிழப்புச் செய்தனர்.

கம்பெனியின் குறிப்பேட்டில் மேற்கண்ட நடவடிக்கைகளைப் பதியக் குறிப்பேட்டுப் பதிவுகளையும், ரொக்க ஏட்டையும், பேரேட்டுக் கணக்குகளையும் தயாரிக்க.

(Chartered Accountants)

14. அதிகாரம் பெற்ற முதல் ரூ. 5,00,000-த்துடன் ஒரு கம்பெனி அமைக்கப்பட்டது. இது ஒன்று ரூ. 10 மதிப்புடைய 25,000 நேர்மைப் பங்குகளாயும், ஒன்று ரூ. 10 மதிப்

புடைய 25,000, 6 சதவீதம் சலுகைப் பங்குகளாகவும் பிரிக்கப் பட்டது. கரம்சந்த் அன் கோவின் வியாபாரத்தை எடுத்துக் கொள்ள முடிவுசெய்தது. இருப்புநிலைக் குறிப்பு கீழ்க்கண்டவாறு இருந்தது :

## இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| செலுத்தவேண்டிய | | வங்கி | 4,500 |
| உண்டியல்கள் | 3,500 | கடனாளிகள் | 7,500 |
| கடனீந்தோர் | 6,400 | காப்பீட்டுத் | |
| முதல் | 1,32,000 | திட்டாவணம் | |
| | | (Insurance Policy) | 4,000 |
| | | சரக்கிருப்பு | 31,000 |
| | | பொறிவகை | 50,000 |
| | | வில்லங்கமற்ற | |
| | | சொத்துகள் | 45,000 |
| | 1,42,000 | | 1,42,000 |

இதற்கான விலை ரூ. 1,75,000 என ஒப்புக் கொள்ளப் பட்டது. ரூ. 50,000-ற்கு முழுதும் செலுத்தப்பட்ட நேர்மைப் பங்குகளாகவும், ரூ. 50,000-ற்கு முழுதும் செலுத்தப்பட்ட 6 சதவிதம் முன்னுரிமைப் பங்குகளாகவும், ரூ. 30,000-ற்கு மீள்தகு கடனீட்டுப் பத்திரங்களாகவும், மீதி ரொக்கமாகவும் செலுத்தப்பட்டது. காப்பீட்டுத் திட்டாவணத்தைக் கம்பெனி எடுத்துக்கொள்ளவில்லை. சரக்கிருப்பையும், பொறி வகையை யும் ஏட்டு மதிப்பினின்றும் 10 சதவீதம் குறைத்தும் வில்லங்க மற்ற சொத்தினை ஏட்டு மதிப்பினும் 20 சதவீதம் கூட்டியும் மதிப்பிடுகிறது. பொறுப்புகள் கம்பெனியால் தீர்க்கப்படும்.

மீதியுள்ள இருவகைப் பங்குகளும் பொதுமக்களிடத்தில் வெளியிடப்பட்டன. அனைத்துப் பங்குகட்கும் கீழ்க்கண்டவை தவிர பணம் முழுவதும் பெறப்பட்டது. தாஸ் வைத்துள்ள 600 நேர்மைப் பங்குகள் மீது இறுதி அழைப்புத்தொகை பங்கு ஒன்றுக்கு ரூ. 3 வீதம் செலுத்தவில்லை. இவை பின்னர் ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டு, 20 சதவீதம் தள்ளுபடியில் மீண்டும்

வெளியிடப்பட்டன. ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குக் கணக்கின் இருப்பு தனியாக வைக்கப்பட்டுக் கடனீட்டுப் பத்திரங்களை மீட்கும் நோக்குடன் பத்திரங்களில் முதலீடு செய்யப்பட்டது.

மேற்கண்ட நடவடிக்கைகளைப் பதியக் குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்பைத் தயாரிக்கவும்.

(Adapted from R. A. First)

15. கோவிந்தராமின் இருப்புநிலைக் குறிப்பு கீழ்க் கொடுக்கப்பட்டுள்ளது :

**1966 திசம்பர் 31-க்கான இருப்புநிலைக் குறிப்பு**

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| கடனீந்தோர் | 31,000 | | பல்வகைச் சொத்துகள் | | 1,05,000 |
| **கழி** : காப்பு | 1,000 | | கடனாளிகள் | 67,200 | |
| | | 30,000 | **கழி** : காப்பு | 2,200 | |
| கடன் | | 20,000 | | | 65,000 |
| கோவிந்தராம் | | 1,20,000 | | | |
| | | 1,70,000 | | | 1,70,000 |

1967 ஏப்ரல் 15-ல் G. S. லிமிடெட் அமைக்கப்பட்டது. கடனாளிகளைத் தவிர பிற சொத்துகள் முழுவதையும், கடனுக்கான பொறுப்பையும் கம்பெனி ஏற்றுக்கொண்டது; விற்குநருக்கு 1967 சனவரி 1-இலிருந்து கொள்முதல் விலையைத் தரும்வரை 6 சதவீதம் ஆண்டுவட்டி வழங்கவேண்டும். கோவிந்தராமின் முதல் கணக்கை G. S. லிமிடெட் நேர்மைப் பங்குகளை வெளியிட்டுத் தீர்க்கவேண்டியது.

கடன் வழங்கியவர்கள் 8 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளை பெற்றுக் கொண்டு தங்கள் கடன்களைத் தீர்த்துக்கொள்ள ஏற்றுக் கொண்டனர். கம்பெனி விற்குநரின் முகவராக இருந்து கடன்களை வசூலிக்க ஒப்புக்கொண்டனர். இதில் ரூ. 63,000 வசூலானது.

இதிலிருந்து இருப்புநிலைக் குறிப்பில் காட்டப்பட்டுள்ள நிகர தொகையளவில் கடனீந்தோருக்கு விற்குநர்பொருட்டுச் செலுத்தினர். மீதியுள்ள தொகையில் ரூ. 10,000-த்தைக் கோவிந்தராமுக்குக் கொடுத்தனர். இன்னும் கோவிந்தராமுக்குச் சேர வேண்டிய தொகையையும், வட்டியையும் ரூ. 25,000-ற்குக் கடனீட்டுப் பத்திரங்கள் 96-ல் வழங்கவேண்டியது. ரொக்கமும் செலுத்தவேண்டியது. புதிய கம்பெனிக்கு 1967 சனவரி 1முதல் ஏப்ரல் 15 வரை ஏற்படும் இலாபத்தை எடுத்துக்கொள்ளும் உரிமையுண்டு. கோவிந்தராம் கணக்கை 1967 மே 31-ல் தீர்த்ததாகக் கொண்டு, G. S. லிமிட்டெடின் தொடக்கப் பதிவுகளையும், கோவிந்தராமின் இறுதிப் பதிவுகளையும் தருக. வருமான வரியை விட்டுவிடுக.

(B. Com., Agra & C. A. Final)

16. 'P' 'Q' 'R' – இவர்களின் இருப்புநிலைக் குறிப்பு புதிதாகத் தொடங்கப்பட்ட கூட்டுப் பங்குக் கம்பெனிக்கு விற்கும் பொழுதுகீழ்க்கண்டவாறு இருந்தது :

**கூட்டுப் பங்குக் கணக்கு**

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| P-யின் முதல் | 90,000 | நிலமும் | |
| Q-யின் முதல் | 60,000 | கட்டடமும் | 56,000 |
| R- ன் முதல் | 30,000 | பொறிவகை | 28,000 |
| கடனீந்தோர் | 16,000 | சரக்கிருப்பு | 52,000 |
| | | பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு | 24,000 |
| | | கடனாளிகள் | 36,000 |
| | 1,96,000 | | 1,96,000 |

கூட்டுப் பங்குக் கம்பெனி ரூ. 4,00,000 முதலுடன் தொடங்கப்பட்டது. இது ஒன்று ரூ. 200 மதிப்புடைய 2,000 பங்குகளாகப் பிரிக்கப்பட்டது. இது ரூ. 2,00,000-ற்கான கடனீட்டுப் பத்திரங்களை 5 சதவீதம் தள்ளுபடியில் வெளியிட்டது. கூட்டு நிறுவனம் முழுவதையும் கம்பெனி எடுத்துக்கொண்டு ரூ. 96,000-ற்கு 480 முழுதும் செலுத்தப்பட்ட பங்குகளாகவும், ரூ. 96,000-ற்கு ரொக்கமாகவும் கொடுத்தது.

கடனீட்டுப் பத்திரங்கள் முழுவதையும் மீதியுள்ள பங்குகளையும் கம்பெனி பொதுமக்களிடத்தில் வெளியிட்டது. 200 பங்குகளை வைத்திருக்கும் '*A*' பங்கு ஒன்றுக்கு ரூ. 80 வீதம் இறுதி அழைப்பினைச் செலுத்தவில்லை. மீதிப் பங்குகள் அனைத்திற்கும் பணம் பெறப்பட்டது. *A*-யின் பங்குகள் ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டு பங்கு ஒன்றுக்கு ரூ. 40 வீதம் தள்ளுபடியில் மீண்டும் வெளியிடப்பட்டன. கம்பெனி ரூ. 2,000 தொடக்கச் செலவு ஏற்றது. ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டத் தொகையின் இருப்பை முதலில் தொடக்கச் செலவுகளை நீக்கவும், பின்னர், கடனீட்டுப்பத்திரத் தள்ளுபடி முழுவதையும் நீக்கவும், இதன் பின்னர் வாணிக நற்பெயரை நீக்கவும் பயன்படுத்த வேண்டியது.

கம்பெனியின் ஏட்டில் குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(R. A. First)

17. 2 : 1 எனும் விகிதத்தில் இலாப-நட்டத்தைப் பகிர்ந்துகொள்ளும் '*A*', '*B*' இருவருடைய வியாபாரத்தை வாங்கும் நோக்குடன் '*C*' லிமிட்டெட் தொடங்கப்பட்டது. *A*,*B* நிறுவனத்தின் 1967 திசம்பர் 31-ற்கான இருப்புநிலைக் குறிப்பு கீழே கொடுக்கப்பட்டுள்ளது :

**இருப்பு நிலைக் குறிப்பு**

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| செலுத்தவேண்டிய | | நிலமும், | |
| உண்டியல் | 7,200 | கட்டடமும் | 40,000 |
| கடனீந்தோர் | 21,600 | பொறிவகை | 20,000 |
| திருமதி *A*-யின் கடன் | 3,200 | சரக்கிருப்பு | 24,000 |
| முதல் : | | கடனாளிகள் | 23,200 |
| *A* ரூ. 64,000 | | பெறுதற்குரிய | |
| *B* ரூ. 40,000 | | மாற்றுச்சீட்டு | 6,400 |
| | 1,04,000 | முதலீடு | 4,800 |
| | | வங்கி | 9,600 |
| | | வாணிக | |
| | | நற்பெயர் | 8,000 |
| | 1,36,000 | | 1,36,000 |

கட்டடம், சரக்கிருப்பு — இவற்றை முறையே ரூ. 45,000, ரூ. 20,000 என மதிப்பிட்டுப் பிற சொத்துகளை ஏட்டு மதிப்பிலும், 'C' லிமிட்டெட் எடுத்துக்கொண்டது. முதலீட்டைக் கூட்டு நிறுவனமே வைத்துக்கொண்டு ரூ. 4,000-ற்கு விற்றது. அவர்கள் திருமதி 'A'-யின் கடனை அடைத்தனர். பிற பொறுப்புகளைக் கம்பெனி எடுத்துக் கொண்டது.

கொள்முதல் மறு பயன் ரூ. 1,51,600 என தீர்மானிக்கப்பட்டது. இதனை ரூ. 76,000-ற்கு 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்களை ரூ. 95-ல் வெளியிட்டும், ஒன்று ரூ. 100 மதிப்புடைய 608 முழுதும் செலுத்தப்பட்ட நேர்மைப் பங்குகளை வெளியிட்டும், மீதித் தொகைக்கு ரொக்கம் கொடுத்தும் தீர்க்க வேண்டியது. கம்பெனி 392 பங்குகளைப் பொதுமக்களிடத்தில் வெளியிட்டது. அனைத்துப் பங்குகட்கும் முழுத் தொகையும் பெறப்பட்டது.

'A' 'B' இவர்களின் ஏடுகளை முடிக்கும் பேரேட்டுக் கணக்குகளைத் தந்து 'C' லிமிட்டெடின் தொடக்கப் பதிவுகளைத் தந்து இந் நடவடிக்கைகள் முடிவு பெற்றவுடன் கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்பைத் தயாரிக்கவும்.

(Adapted from R.A. First)

18. சமமான இலாபத்தினைப் பங்கிட்டுக்கொள்ளும் இராமனும், கிஷோரும் தங்கள் கூட்டு நிறுவனத்தை வரையறு பொறுப்புடைய கம்பெனியாக மாற்றிக்கொள்ள விரும்பினர். 1965 திசம்பர் 31-ற்கான இருப்புநிலைக் குறிப்பு கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

**இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|---|
| கடனீந்தோர் | | 27,000 | கடனாளிகள் | 50,000 |
| கடன் | | 25,000 | பெறுதற்குரிய | |
| வங்கி மேல்வரைப் | | | மாற்றுச் சீட்டு | 7,000 |
| பற்று | | 10,000 | சரக்கிருப்பு | 20,000 |
| காப்புநிதி | | 15,000 | புனைபொருள் | |
| முதல் கணக்குகள் : | | | உரிமை | 5,000 |
| ராமன் | 25,000 | | பொறிவகை | 10,000 |
| கிஷோர் | 25,000 | | நிலமும், | |
| | | 50,000 | கட்டடமும் | 35,000 |
| | | 1,27,000 | | 1,27,000 |

அ. கடந்த 3 ஆண்டு இலாப விழுக்காட்டினைப்போல் (Average) இரு மடங்கு எனக் கூட்டு நிறுவனத்தின் வாணிக நற்பெயர் மதிப்பிடப்பட்டது.

ஆ. கடன் கொடுத்தவர், தன் கடன் அளவிற்கு 6 சத வீதம் முன்னுரிமைப் பங்குகளை எடுத்துக்கொள்ள ஒப்புக்கொண்டார்.

இ. கட்டடமும், பொறிவகையும் முறையே ரூ. 75,000, ரூ. 15,000 என மறு மதிப்பீடு செய்யப்பட்டு எடுத்துக்கொள்ளப் பட்டன.

ஈ. ரூ. 1,00,000-ற்கு 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் 5 சதவீதம் தள்ளுபடியில் வெளியிடப்பட்டன.

உ. கடந்த ஆண்டுகளில் கூட்டு நிறுவனம் ஈட்டிய இலாப விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன :

1962 — ரூ. 20,000; 1963 — ரூ. 23,000; 1964 — ரூ. 26,000 (ஒவ்வோராண்டும் காப்பு நிதிக்கு ரூ. 5,000 ஒதுக்கி, வருமான வரிக்காக முறையே ரூ. 1,500; ரூ. 1,200; ரூ. 2,100 இலாப-நட்டக் கணக்கில் பற்றுவைத்த பிறகு இந்த இலாபங்கள் கணக்கிடப்பட்டன).

ஊ. கடனாளிகளையும், கடனீந்தோரையும் கம்பெனி எடுத்துக் கொள்ளவில்லை. ஆயினும், விற்குநரின் முகவராக இருந்து கடன்களை வசூலித்துக் கடனீந்தோருக்குச் செலுத்த கம்பெனி ஒப்புக்கொண்டது.

எ. வங்கி மேல்வரைப்பற்று செலுத்தப்பட்டது.

ஏ. கூட்டாளிகட்குச் சேரவேண்டியத் தொகை முழுதும் செலுத்தப்பட்டுச் சாதாரண பங்குகளாகக் கொடுக்கப்பட்டது.

கீழ்க்கண்டவற்றைத் தயார் செய்க :

(1) கொள்முதல் மறுபயனை மதிப்பிடும் அறிக்கை.

(2) நடவடிக்கைகள் அனைத்தும் முடிந்துவிட்டனவென்று கொண்டு கம்பெனியின் தொடக்க இருப்புநிலைக் குறிப்பு.

(3) தீர்வுக் கணக்கு (Realisation Account).

(Adapted from C. A. Final)

19. 20 : 17 எனும் விகிதத்தில் இலாப-நட்டத்தைப் பகிர்ந்துகொள்ளும் கூட்டாளிகள் A-யும், B-யும் ஆவர். இவர்கள் ஒவ்வோராண்டும் திசம்பர் 31-ல் கணக்குகளை முடிக்கின்றனர். 1966 மே 1-இல் 'BA' லிமிட்டெட் எனும் கம்பெனி அமைக்கப்பட்டது. மேற்சொன்ன கூட்டாளிகளின் வியாபாரத்தை 1966 சனவரி 1-லிருந்து வாங்கிக்கொள்ளும் நோக்குடன் இக் கம்பெனி அமைக்கப்பட்டது. அவர்கள் ஒப்பந்தத்தில் கண்டுள்ளவை :

(1) கொள்முதல் மறுபயன் : ஒன்று ரூ. 10 வீதம் 3,000 முன்னுரிமைப் பங்குகள் முழுதும் செலுத்தப்பெற்றவை; ஒன்று ரூ. 10 வீதம் 3,600 நேர்மைப் பங்குகள் முழுதும் செலுத்தப் பெற்றவை.

(2) விற்குநர்கள் ரொக்கத்தை வைத்துக்கொள்ள வேண்டியது. கடனாளிகளிடம் வசூலித்துக் கடனீந்தோருக்குச் செலுத்தும் பொறுப்பினைக் கம்பெனியிடம் ஒப்படைக்கவேண்டியது. இவை முடிவுபெறும்வரை ஏதேனும் இருப்பு இருப்பின், அதனைத் தனிக் கணக்கில் வைத்திருக்கவேண்டியது.

(3) ஒவ்வொரு விற்குநரும் அதிகாரம் பெற்ற பங்குமுதலில் பாதியளவிற்கு ரொக்கம் கொடுத்துப் பங்குகள் எடுத்துக்கொள்ள வேண்டியது: 700 நேர்மைப் பங்குகளும், 1,000 முன்னுரிமைப் பங்குகளும்.

கம்பெனியின் செயல்முறை விதிகள், A-யையும், B-யையும் மட்டும் இயக்குநர்களாக நியமித்தன. ஒவ்வொரு திங்களுக்கும் ரூ. 1,000 வீதம் அவர்கட்குக் கட்டணம் உண்டு. 1966 சனவரி 1-லிருந்து கணக்கேடுகள் தொடர்ந்து எழுதப்பட்டு வருகின்றன. கம்பெனி அமைப்புக் காரணமாகவோ அல்லது இத் தொழிலை மேற்கொண்டதன் காரணமாகவோ புதிய பதிவுகள் ஏதும் ஏடுகளில் செய்யப்படவில்லை. 1966 செப்டம்பர் 30-ல் கீழ்க்கண்ட இருப்பாய்வு (Trial Balance) தயாரிக்கப்பட்டது.

## இருப்பாய்வு

| | பற்று | வரவு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| *A* முதல் கணக்கு (1966 சனவரி 1-ல்) | | 30,000 |
| *B* முதல் கணக்கு (1966 சனவரி 1-ல்) | | 28,600 |
| *A* எடுப்பு | 2,500 | |
| *B* எடுப்பு | 3,000 | |
| *A*-ம், *B*-ம் பங்குகள் குறித்து | | 17,000 |
| கட்டடம் | 46,000 | |
| கடனீந்தோர் (1966 சனவரி 1-லிருந்து ரூ. 15,000 முழுதும் செலுத்தப் பட்டுவிட்டது.) | | 7,000 |
| கடனாளிகள் (1966 சனவரி 1-லிருந்து ரூ. 10,000-த்தில், ரூ. 1,000 இன்னும் செலுத்தவேண்டியுள்ளது.) | 10,500 | |
| தொடக்கச் செலவுகள் | 1,500 | |
| பொறிவகையும், இயந்திரமும் (1966 சனவரி 1-ல் இருப்பு ரூ. 12,000.) | 15,000 | |
| மனைத்துணைப்பொருள் (1966 சனவரி 1-ல் இருப்பு ரூ. 3,600.) | 4,600 | |
| கொள்முதலும், விற்பனையும் | 20,000 | 82,000 |
| கூலி | 8,000 | |
| சரக்கிருப்பு | 5,000 | |
| வங்கி (1966 சனவரி 1-ல் ரூ. 5,000) | 35,000 | |
| பல்வகைச் செலவுகள் | 13,500 | |
| | 1,64,600 | 1,64,600 |

முன்னுரிமைப் பங்குகளை *A*-ம், *B*-ம் சமமாக எடுத்துக் கொள்ள உடன்பட்டனர். தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளுக்குப் பின்னர் திருத்தியமைக்கப்பெற்ற இருப்பாய்வைத் தயாரிக்க. கூட்டாளிகள் பங்குகளைப் பகிர்ந்துகொள்ளும் அறிக்கையைத் தயார் செய்க.

(Adapted from C. A. Final-England)

**கூட்டுருவாக்கத்திற்கு முந்தை இலாபம்** (Profit prior to Incorporation)

20. அ. கூட்டுருவாக்கத்திற்கு முன் இலாபம் எவ்வாறு கண்டுபிடிக்கப்படுகிறது? அது எவ்வாறு கணக்கில் எழுதப்படுகிறது ?

ஆ. 'A' கம்பெனி லிமிடெட் 1963 மே 1-ல் அமைக்கப்பட்டது. அது 1963 சனவரி 1-ல் 'X' கம்பெனி லிமிடெட் நடத்தி வரும் தொழில் நிறுவனத்தை வாங்கிக் கொண்டது. 1963 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான இலாப-நட்டக் கணக்கு கீழே கொடுக்கப்பட்டுள்ளது :

**'A' கம்பெனியின் இலாப-நட்டக் கணக்கு**

| பற்று | ரூ. | வரவு | ரூ. |
|---|---|---|---|
| வாடகையும், வரியும் | 12,000 | மொத்த இலாபம் | 1,55,000 |
| காப்பீடு | 3,000 | | |
| மின் கட்டணம் | 2,400 | | |
| ஊதியம் | 36,000 | | |
| இயக்குநர் கட்டணம் | 3,000 | | |
| தணிக்கையர் கட்டணம் | 1,600 | | |
| கழிவு | 6,000 | | |
| விளம்பரம் | 4,000 | | |
| தள்ளுபடி | 3,500 | | |
| அலுவலகச் செலவு | 7,500 | | |
| சுமைக் கூலி | 3,000 | | |
| வங்கிக் கட்டணம் | 1,500 | | |
| தொடக்கச் செலவு | 6,500 | | |
| வராக் கடன் | 2,000 | | |
| கடன் மீது வட்டி | 3,000 | | |
| நிகர இலாபம் | 60,000 | | |
| | 1,55,000 | | 1,55,000 |

1963 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டில் மொத்த விற்பனை ரூ. 5,00,000. 1963 மே 1 முடிய விற்பனை ரூ. 1,50,000; மீதியுள்ள காலத்திற்கு விற்பனை ரூ. 3,50,000.

கம்பெனி கூட்டுருவாக்கத்திற்கு முன் ஈட்டிய இலாபத்தினைக் கணக்கிடுக.

(C. A. Inter, May 64)

21. ஒரு கூட்டு நிறுவனம் நடத்திவரும் வியாபாரத்தை 1956 சனவரி 1-இலிருந்து எடுத்துக்கொள்ள XYZ லிமிட்டெட் எனும் கம்பெனி 1956 ஏப்ரல் 1-ல் அமைக்கப்பட்டது. இதற்கு முன்னுளில் ஏற்படும் இலாபம் முழுதும் கம்பெனிக்குச் சேர வேண்டியது. இதன் விலை ரூ. 50,000-ன் மீது ஆண்டு ஒன்றுக்கு 6 சதவீதம் வீதம் வட்டி தரவேண்டும். இத் தொகை முழுதும் 1956 சூன் 1-ல் செலுத்தி விற்குநர் கணக்கு தீர்க்கப்பட்டது.

1956 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான இலாப-நட்ட அறிக்கை கீழே கொடுக்கப்பட்டுள்ளது :

**இலாப-நட்டக் கணக்கு**

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| நிருவாகச் செலவு | 3,050 | மொத்த வாணிக இலாபம் | 20,000 |
| வராக்கடன் | 200 | | |
| இயக்குநர் கட்டணம் | 1,000 | | |
| விற்குநருக்கு வட்டி | 1,250 | | |
| தொடக்கச் செலவு நீக்கப்பட்டது | 500 | | |
| தேய்மானம் | 1,000 | | |
| நிகர இலாபம் | 13,000 | | |
| | 20,000 | | 20,000 |

நீக்கப்பட்ட வராக்கடனில் ரூ. 100 கம்பெனி எடுத்துக் கொண்டபின்னர் உள்ள கடனுளிகட்கு உரியது. ஈட்டிய இலாபத்தினைக் கூட்டுருவாக்கத்திற்கு முன்னும், அதற்குப் பின்னும் என்று பிரிக்கவும். ஆண்டு முழுவதற்கும், விற்பனை ஒரே சீராக இருந்தது என்று உணரவும்.

(C. A. Inter, Nov. 1959)

22. சுந்தர் பிரதர்ஸ் பிரைவேட் லிமிட்டெட் 1967 சூன் 30-ல் அமைக்கப்பட்டது. இது பல்லவன் பதிப்பகத்தை 1966 திசம்பர் 31-ற்குரிய இருப்புநிலைக் குறிப்பின் அடிப்படையில் 1967 சனவரி 1-லிருந்து எடுத்துக்கொண்டது. 1967 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டிற்குத் தயாரிக்கப்பட்ட கணக்குகள் கீழ்க் கண்டவற்றை வெளிக்காட்டின.

அ. இவ்வாண்டில் ஏற்பட்ட மொத்த இலாபம் ரூ. 2,40,000

ஆ. ஆண்டின் மொத்த விற்பனை ரூ. 12,00,000
இதில் ரூ. 5,40,000 முதல் 6 திங்களுக்கு ஆனது.

இ. இலாப-நட்டக் கணக்கில் பற்று வைக்கப் பட்ட செலவுக் கணக்குகள் கீழ்க்கண்ட வற்றை உணர்த்துகின்றன.

| | | |
|---|---|---|
| இயக்குநர் கட்டணம் | ரூ. | 15,000 |
| வராக்கடன் | ரூ. | 3,600 |
| விளம்பரம் | ரூ. | 12,000 |
| (திங்கள் ஒன்றுக்கு ரூ. 1000 என்ற ஒப்பந்தத்தின் அடிப் படையில்.) | | |
| ஊதியமும் பொதுச்செலவும் | ரூ. | 64,000 |
| நீக்கப்பட்ட தொடக்கச் செலவு | ரூ. | 5,000 |
| கம்பெனி ஓர் அரசியல் கட்சிக்குக் கொடுத்த நன்கொடை. | ரூ. | 5,000 |

கூட்டுருவாக்கத்திற்கு முன் கம்பெனி ஈட்டிய இலாபத்தைக் காட்டும் அறிக்கையைத் தயார் செய்க. கம்பெனியின் கணக்கு களில் அது எவ்வாறு பயன்படுத்தப்பட வேண்டுமென்பதைக் கூறுக.

23. ஒரு கூட்டுப் பங்குக் கம்பெனி 1973 சூலை 1-ல் அமைக்கப்பட்டது. இளம்பரிதி நடத்திவரும் வியாபாரத்தை அது ஏப்ரல் 1-ல் வாங்கியது. 1974 மார்ச் 31-ல் முடியும் ஆண்டிற்கான இலாப - நட்டக் கணக்கு அடுத்த பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ளது :

**இலாப-நட்டக் கணக்கு**

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| விளம்பரம் | 5,000 | மொத்த இலாபம் | 55,000 |
| வாடகை | 3,600 | | |
| சுமைக் கூலி | 800 | | |
| ஊதியம் | 24,000 | | |
| தொடக்கச் செலவு | 3,400 | | |
| வராக்கடன் | 350 | | |
| தள்ளுபடி | 300 | | |
| இயக்குநர் கட்டணம் | 800 | | |
| காப்பீடு | 1,800 | | |
| விற்குநருக்குச் செலுத்திய வட்டி | 1,000 | | |
| தேய்மானம் | 830 | | |
| தணிக்கைக் கட்டணம் | 1,200 | | |
| எழுதுபொருள் செலவும் அச்சுப்பொறியும் | 1,600 | | |
| பொதுச்செலவு | 600 | | |
| கடனீட்டுப்பத்திர வட்டி | 600 | | |
| நிகர இலாபம் | 9,120 | | |
| | 55,000 | | 55,000 |

மேலும் சில விவரங்கள் :

அ. ஆண்டு முழுவதற்குமான மொத்த விற்பனை ரூ. 3,00,000. முதல் 9 திங்கட்கு ஒவ்வொரு திங்கள் விற்பனையையும் அடுத்த 3 திங்களில் ஒவ்வொரு திங்கள் விற்பனையிலும் பாதியாக இருந்தது.

ஆ. வராக் கடனில் ரூ. 150 கூட்டுருவாக்கத்திற்கு முன்னுள்ள கடன்களில் ஏற்பட்டதாகும்.

இ. 1973 சூன் 1-ல் வாங்கிய சொத்துகள் மீதான தேய்மானம் ரூ. 200; 1974 சனவரி 1-ல் வாங்கிய சொத்துகள் மீதான தேய்மானம் ரூ. 150. இவை தேய்மானக் கணக்கில் அடங்கியுள்ளது.

ஈ. விற்குநருக்குச் சேரவேண்டிய தொகை செப்டம்பர் 1-ல் கொடுத்துத் தீர்க்கப்பட்டது.

மேற்கொடுக்கப்பட்ட விவரங்களிலிருந்து கம்பெனி கூட்டுருவாக்கத்திற்கு முன் ஈட்டிய இலாபத்தினையும், அதற்குப் பின் ஈட்டிய இலாபத்தினையும் கணக்கிடுக.

# 9. இறுதிக் கணக்குகள்
## (Final Accounts)

**இலாப - நட்டக் கணக்கு** (Profit and Loss Account)

இருப்புநிலைக் குறிப்புக்கு இருப்பதுபோன்ற எந்த ஒரு குறிப்பிட்ட படிவத்தினையும் இலாப-நட்டக் கணக்கிற்கென சட்டம் வகுக்கவில்லை. பல்வகைத் தொழில்கள், வியாபார அமைப்புகள் அனைத்திற்கும் பொதுவாகப் படிவம் ஒன்றினை வகுத்தலில் தொல்லை இருக்கின்றது. இருப்பினும், கம்பெனியின் இலாப-நட்டக் கணக்கோ, வரவு-செலவுக் கணக்கோ சில உண்மைகளை உணர்த்த வேண்டுமென்று கம்பெனிச் சட்டம் வற்புறுத்துகிறது. அதனை இனிக் காண்போம்.

கம்பெனிச் சட்டத்தில் 209-லிருந்து 223-வது பிரிவுவரை கம்பெனிகள் கட்டாயமாக வைத்திருக்கவேண்டிய கணக்கேடுகள் பற்றியும், ஒவ்வோராண்டும் வெளியிட வேண்டிய இறுதிக் கணக்கறிக்கைகள் பற்றியும் குறிப்பிடுகின்றன. அவற்றை முதலில் பார்ப்போம்.

**இறுதிக் கணக்குகளும் இருப்புநிலைக் குறிப்பும்**

ஒவ்வொரு கம்பெனியும் ஆண்டுப் பொதுக்கூட்டத்தில் தன் நிதி ஆண்டிற்குரிய இலாப-நட்டக் கணக்கினையும், இருப்புநிலைக் குறிப்பையும் வெளியிட வேண்டுமென்று சட்டத்தின் 210-வது பிரிவு கூறுகிறது. இலாப நோக்குடன் செயல்படாத கம்பெனியாயின், இலாப-நட்டக் கணக்கிற்கு மாறாக, வரவு-செலவு கணக்கினை வைக்கவேண்டும். கம்பெனியின் இலாப-நட்டக் கணக்கு அதன் உண்மையான இலாப நிலையைப் படம்பிடித்துக் காட்டுவதாக இருக்கவேண்டும். சட்ட இணைப்பு 6-ல் (Schedule VI to the Act) கண்டுள்ள செய்திகளை முடிந்தவரை உள்ளடக்கி இருக்கவேண்டும். இருப்புநிலைக் குறிப்பினைப் பொருத்தவரை

அதற்கென தனிப் படிவம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதனைப் பின்பற்றி ஒவ்வொரு கம்பெனியும் இருப்புநிலைக் குறிப்பினைத் தயார் செய்யவேண்டும்.

**துணைக் கம்பெனியில் ஈடுபாடு**

212-வது பிரிவின்படி, ஒரு பிடிப்புக் கம்பெனியானது தன் துணைக் கம்பெனிபற்றிய கீழ்க்கண்ட விவரங்களை இருப்புநிலைக் குறிப்புடன் இணைக்கவேண்டும்.

அ. துணைக் கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்பின் 'படி' (copy) ஒன்று.

ஆ. அதன் இலாப-நட்டக் கணக்கின் படி ஒன்று.

இ. அதன் இயக்குநரவை அறிக்கையின் படி ஒன்று.

ஈ. அதன் தணிக்கையர் அறிக்கையின் படி ஒன்று.

உ. துணைப் பிரிவு 3-ல் குறிப்பிட்டவாறு, துணைக் கம்பெனியில் பிடிப்புக் கம்பெனியின் ஈடுபாடு பற்றிய அறிக்கை.

**இருப்புநிலைக் குறிப்பையும், இலாப - நட்டக் கணக்கையும் சான்றளித்தல்**

215-வது பிரிவின்படி, ஒரு கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்பிலும், இலாப-நட்டக் கணக்கிலும் அதன் மேலாண்மை முகவரோ (Managing Agent), செயலர்—கருவூலரோ, மேலாளரோ அல்லது செயலரோ கையெழுத்திட வேண்டும். அத்துடன் இரு இயக்குநர்களும் (மேலாண்மை இயக்குநர் இருப்பின், இவ்விருவரில் அவர் ஒருவராக இருக்கவேண்டும்) அவற்றில் கையெழுத்திடவேண்டும் (அப்பொழுது ஒரு இயக்குநர் மட்டுமே இந்தியாவில் இருப்பின் அவ்வியக்குநர் கையெழுத்திட்டால் போதும்). இருப்புநிலைக் குறிப்பிலும், இலாப-நட்டக் கணக்கிலும் கையெழுத்திடுமுன், அவற்றிற்கு இயக்குநரவை ஒப்புதல் அளிக்கவேண்டும். பின்னரே, தணிக்கையரிடம் அவரின் கையெழுத்திற்காகத் தரவேண்டும்.

**தணிக்கையர் அறிக்கை** (Auditors' report)

கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்புடன் தணிக்கையர் அறிக்கையையும் இணைக்கவேண்டும்.

## இயக்குநரவை அறிக்கை (Boards' report)

கம்பெனியின் பொதுக்கூட்டத்தில் வைக்கப்படும் ஒவ்வொரு இருப்புநிலைக் குறிப்புடனும் இயக்குநரவையின் அறிக்கையினையும் தாக்கல் செய்யவேண்டும். கீழ்க்கண்டவை பற்றிய விவரங்கள் அதில் காணப்படவேண்டும்.

அ. கம்பெனியின் நிலை;

ஆ. காப்புகளுக்கு எடுத்துச் செல்வதற்குத் திட்டமிடப் பட்டுள்ள தொகைகள்;

இ. பங்காதாயம் (dividend) வழங்குவதற்குப் பரிந் துரைக்கப்படும் தொகை;

ஈ. கம்பெனியின் நிதி நிலையைப் பாதிக்கக்கூடிய முக்கிய மான மாற்றங்கள் அல்லது ஏற்றுக்கொண்ட செயல்கள்;

உ. தணிக்கையர் அறிக்கையில் காணப்பட்டுள்ள குறை பாடுகள் பற்றிய முழு தகவல்களும், விளக்கங் களும்.

## கணக்குகளைத் தாக்கல் செய்தல்

220-வது பிரிவின்படி ஆண்டுப் பொதுக்கூட்டத்தில் கம் பெனியின் ஆண்டுக் கணக்குகளைத் தாக்கல் செய்த பின்னர், ஒவ்வொரு கம்பெனியும் (பொதுக் கம்பெனியாயினும், தனிக் கம்பெனியாயினும்), கம்பெனிப் பதிவாளரிடத்தில் இருப்புநிலைக் குறிப்பு, இலாப-நட்டக் கணக்கு ஆகியவற்றின் மூன்று படிகளைத் தாக்கல் செய்யவேண்டும். மேலாண்மை முகவரோ, செயலர்—கருவூலரோ, மேலாண்மை இயக்குநரோ, மேலாளரோ, செய லரோ, இவர்கள் யாரும் இல்லையெனில் கம்பெனியின் இயக்குநர் ஒருவரோ அவற்றில் கையெழுத்திடவேண்டும்.

கம்பெனியின் பொதுக்கூட்டம் கம்பெனியின் கணக்கறிக்கை களை ஏற்றுக்கொள்ளவில்லையெனில், அதுபற்றிய அறிக்கையையும், அதற்கான காரணத்தையும் இருப்புநிலைக் குறிப்புடன் பதிவாள ரிடத்தில் கொடுக்கவேண்டும்.

## இலாப - நட்டக் கணக்குத் தயாரித்தல்

தனியாள் வாணிக அமைப்புகளும், கூட்டு நிறுவனங்களும் வாணிகக் கணக்கென்றும், இலாப-நட்டக் கணக்கென்றும்

பிரித்தோ அல்லது வாணிக, இலாப-நட்டக் கணக்கென்று தலைப் பிட்டு அதனை இரு பகுதிகளாகப் பிரித்தோ இறுதிக் கணக்குகளைத் தயார் செய்கின்றன. ஆனால், கம்பெனி அவ்வாறு வாணிக, இலாப-நட்டக் கணக்கென்று தலைப்பிடாது, **இலாப - நட்டக் கணக்கென்று மட்டுமே** தலைப்பிடுவது வழக்கம்.

கணக்கின் பற்று, வரவு இரு பகுதிகளின் இடப் பகுதிகளி லும் ஒவ்வொரு இனத்துக்கும் எதிரில் சென்ற ஆண்டுத் தொகை களையும் குறிப்பிட வேண்டும்.

நடப்பாண்டுக்குரிய செலவினங்களையும், வரவினங்களையும் மட்டுமே இலாப-நட்டக் கணக்கிற்குக் கொண்டுவர வேண்டும். பிறவற்றைச் சரிக்கட்டவேண்டும்.

இப்பொழுது இலாப-நட்டக் கணக்கின் வரவுப் பகுதியில் காணப்படும் கணக்குகள் பற்றி ஆய்வோம் :

**அ. விற்பனை :** மொத்த விற்பனையிலிருந்து விற்பனைத் திருப்பத்தையும், வாணிக தள்ளுபடியையும், விலை பற்றிய சரிக்கட்டுதலையும் கழித்த பின்னரே விற்பனையைக் காட்டவேண் டும். பணி வழங்குவதில் ஈடுபட்டுள்ள கம்பெனிகள் பணிக்காக மொத்தம் பெற்ற வருமானத்தை விற்பனைக்கு மாறாகக் காட்ட வேண்டும்.

**ஆ. முதலீடுகளிலிருந்து பெறும் வருமானம் :** வாணிக முதலீடுகளினின்று பெற்ற வட்டியையும், பிற முதலீடுகளினின்று பெற்ற வட்டியையும் வெவ்வேறாகக் காட்டவேண்டும். கழிக்கப் பட்ட வருமான வரியையும் குறிப்பிடவேண்டும்.

பிற வட்டிகளினின்றும் முதலீட்டின் மீது பெற்ற வட்டியை வேறுபடுத்திக் காட்டவேண்டும்.

**இ. முதலீடுகளை விற்றதில் ஏற்படும் ஆதாயம் அல்லது இழப்பு :** முன்னரேயுள்ள காப்புகளிலிருந்து அல்லது ஒதுக்கி லிருந்து சரிக்கட்டவில்லையெனில், முதலீடுகளை விற்றதில் ஏற்பட்ட இலாபம் அல்லது நட்டத்தைத் தெளிவாகக் காட்டவேண்டும்.

**ஈ. துணைக் கம்பெனிகளிடம் பெற்ற பங்காதயம் :** இவ்வகைப் பங்காதாயங்களைத் தனியாகக் காட்டவேண்டும். எவ் வகையான இலாபத்திலிருந்து அந்தப் பங்காதாயம் பெறப்பட்டது

என்பதைப் பொருத்துதான் பிடிப்புக் கம்பெனியின் பங்குநர்க்கு அதனை வழங்க முடியும்.

உ. பலவகை வரவினங்களைத் தனித்தனியாகக் காட்ட வேண்டும்.

ஊ. மீண்டும் மீண்டும் நிகழாநடவடிக்கைகளினின்றும் பெறும் இலாபத்தினைத் தனியாகக் காட்டவேண்டும். எடுத்துக் காட்டாக, கணக்கெழுதும் முறையினை மாற்றுவதால் ஏற்படும் ஆதாயம், சரக்கிருப்பை மதிப்பிடும் முறையை மாற்றுவதால் ஏற்படும் ஆதாயம் முதலியவற்றைச் சொல்லலாம்.

**செலவுப் (பற்று) பகுதியில் காணப்படும் கணக்குகள்**

அ. விற்ற சரக்கு அல்லது பயன்படுத்திய சரக்கின் அடக்க விலை.

ஆ. கொள்முதல் : ஓராண்டில் வாங்கிய சரக்குடன் அதன் மீது ஏற்ற நேரடிச் செலவுகள் அனைத்தையும் அதில் கூட்டவேண்டும். எடுத்துக்காட்டு : காப்பீடு, கட்டணம், சுங்கவரி, சரக்ககற்றும் செலவு.

இ. செலவுகள் — கீழ்க்கண்ட இனங்களில் ஏற்ற செலவுகளைத் தனித்தனியாகக் காட்டவேண்டும் :

1. பயன்படுத்திய பண்டங்களும், உதிரியுறுப்புகளும் (consumption of stores and spare parts);
2. விசையும், எரிபொருளும் (power and fuel);
3. வாடகை;
4. கட்டடங்களுக்கான பழுதுபார்க்கும் செலவு;
5. பொறி பழுதுபார்க்கும் செலவு;
6. காப்பீடு;
7. நகராட்சி வரியும், பிற வரிகளும் (வருமான வரியைத் தவிர்த்து);
8. பல்வகைச் செலவுகள்.

**ஈ. ஊழியர்களின் (பணியர்களின்) ஊதியமும், சலுகைகளும்** (Employees' remuneration and benefiits) : இதுபற்றிய செலவுகளைக் கீழ்க்கண்ட தலைப்புகளில் தனித்தனியாகக் காட்ட வேண்டும் :

1. ஊதியம், கூலி, மேலூதியம்;
2. நலக்காப்பு நிதி (Provident Fund), ஒய்வூதிய நிதி (Pension Fund) போன்றவற்றிற்கு வழங்கிய தொகை;
3. ஒதுக்கிலிருந்து அல்லது காப்பிலிருந்து சரிக் கட்டப்படாத தொழிலர், அலுவலர் ஆகியோரின் நலத்திற்கான செலவுகள், [மருத்துவர், செவிலியர் (Nurses) ஆகியோரின் ஊதியங்களையும், மருந்துச் செலவுகளையும் அலுவலர் நலச் செலவுகளில் சேர்த்துக் கொள்ளலாம்].

**உ. கழிவும், தரகும் :** கீழ்க்கண்ட விவரங்களுடன் இவை காட்டப்படவேண்டும் :

1. தனி விற்பனை முகவர்கட்கு (Sole selling agents) கொடுத்த கழிவுத் தொகை;
2. பிற முகவர்கட்குக் கொடுத்த கழிவுத்தொகை;
3. வழக்கமாகக் கொடுக்கும் வாணிகத் தள்ளுபடியல்லாத, விற்பனையின் மீது அளிக்கப்பட்ட பிற தள்ளுபடித் தொகையும், தரகுத் தொகையும்.

**ஊ. கடனீட்டுப் பத்திரங்களின் மீது வட்டி**

கணக்குகள் முடிக்கப்பெறும் ஆண்டு முழுவதற்கும் கடனீட்டுப் பத்திரங்கள் மீதான வட்டி கொடுக்கப்பட்டிருக்கிறதா என்பதைப் பார்க்கவேண்டும். பொதுவாக, அரையாண்டிற்கு ஒருமுறை இவ் வட்டி வழங்கப்படுகிறது. எடுத்துக்காட்டாக, 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் ரூ. 5,00,000 என்றும், கடனீட்டுப்பத்திர வட்டி ரூ. 15,000 என்றும் இருப்பாய்வில் காணப்படின், முதலில் முழு ஆண்டு வட்டி எவ்வளவு என்பதைக் கணக்கிடவேண்டும். ஆண்டுவட்டி ரூ. 30,000 ஆகிறது. எனவே, இன்னும் ரூ. 15,000 தரவேண்டியுள்ளதை ஊகித்துணரலாம்.

இதனைக் கணக்கிற் கொண்டுவர, கீழ்க்கண்ட சரிக்கட்டுப் பதிவை வழக்கம்போல் செய்யவேண்டும்.

| | | |
|---|---|---|
| கடனீட்டுப்பத்திர வட்டிக் க/கு | ப 15,000 | |
| கொடுபடவேண்டிய கடனீட்டுப்பத்திர வட்டி | | 15,000 |

(இலாப-நட்டக் கணக்கின் பற்றுப் பகுதியில், இருப்பாய்வில் கொடுக்கப்பட்டுள்ள கடனீட்டுப்பத்திர வட்டித் தொகை ரூ. 15,000-த்துடன் கொடுபடவேண்டிய வட்டி ரூ. 15,000-த்தையும் சேர்த்து ரூ. 30,000-மாகக் காட்டவேண்டும். இருப்பு நிலைக் குறிப்பில் பொறுப்புகள் பகுதியில் 'பிணையக் கடன்' (Secured Loan) என்னும் தலைப்பின்கீழ்க் கடனீட்டுப் பத்திரக் கணக்குக் காண்பிக்கப்பெறும். **அதன்கீழ்க் "கொடுபட வேண்டிய கடனீட்டுப் பத்திர வட்டி", என்று தனியே காட்ட வேண்டும். கொடுபடவேண்டிய வட்டியைக் கடனீட்டுப் பத்திரத் தொகையுடன் சேர்த்துக் காட்டக்கூடாது.)**

கீழ்க்கண்டோருக்குச் செலுத்திய அல்லது செலுத்தவேண்டிய கடனீட்டுப்பத்திர வட்டியைத் தனித்தனியாகக் காட்ட வேண்டும் :

1. மேலாண்மை இயக்குநர்;
2. மேலாண்மை—முகவர் (Managing Agent);
3. செயலர்—பொருளர்.

இந் நேரத்தில் கொடுபட வேண்டிய வட்டிக்கும் (Interest outstanding), கூடியுள்ள வட்டிக்குமுள்ள (Interest accrued but not due) வேறுபாட்டினை உணர்தல் நலம். கொடுபட வேண்டிய வட்டி என்பதற்குச் செலுத்தவேண்டிய நாள் வந்துவிட்ட காரணத்தால் கொடுக்க வேண்டிய பொறுப்பு ஏற்பட்டுவிட்டது என்று பொருள். ஆனால், ஏறியுள்ள வட்டி (அல்லது கூடியுள்ள வட்டி) என்பதோ, வட்டி செலுத்தற்குரியது; ஆனால், செலுத்த வேண்டிய நாள் இன்னும் வரவில்லை என்பதை உணர்த்துகிறது. எடுத்துக்காட்டாக, மார்ச் 31-ல் ஒரு கம்பெனியின் கணக்குகள் முடிக்கப்பெறுவதகாக் கொள்வோம். திசம்பர் 31-ல் முடியும் அரை ஆண்டிற்கான கடனீட்டுப் பத்திர வட்டி செலுத்தப் பட்டிருக்கிறதென்றால், சனவரி 1-லிருந்து நிதியாண்டு முடியும்

நாளான மார்ச் 31 வரைக்குமான வட்டி செலுத்தவேண்டியுள்ளது. ஆனால், இவ் வட்டித் தொகையை அடுத்த அரை யாண்டு இறுதி நாளான சூன் 30-ல் தான் தரவேண்டும். எனவே, சனவரி 1 முதல் மார்ச் 31 வரைக்குமான மூன்று திங்கள் வட்டியைக் கூடியுள்ள வட்டி (ஏறிய வட்டி) என்கிறோம். இதைச் சரிக்கட்டவேண்டிய பதிவு :

கடனீட்டுப்பத்திர வட்டிக் க/கு ப
கூடியுள்ள (ஏறியுள்ள) வட்டிக் க/கு

கொடுத்துள்ள கடனீட்டுப்பத்திர வட்டியுடன் கூடியுள்ள வட்டித் தொகையைக் கூட்டி இலாப-நட்டக் கணக்கின் பற்றுப் பகுதியில் காட்டவேண்டும். இருப்புநிலைக் குறிப்பில் கூடியுள்ள வட்டித் தொகையை 'நடப்புப் பொறுப்புகள்' (Current Liabilities) என்னும் தலைப்பின் கீழ்க் காட்டவேண்டும்.

**சொத்து ஒன்றினை நிறுவ அல்லது கட்டுவதற்காக வாங்கிய கடன்மீது செலுத்தும் வட்டியை, அச்சொத்து நிறுவப்படும்வரை அல்லது கட்டி முடிக்கும்வரை, அக்குறிப்பிட்ட சொத்துக் கணக்கில் தான் பற்றுவைக்க வேண்டுமேயன்றி, இலாப-நட்டக் கணக்கில் பற்றுவைக்கக் கூடாது என்பதை மறத்தலாகாது.** இச்செயல் முடிவுபெற்றுச் சொத்தினைப் பயன்படுத்தும் நிலைக்குக் கொண்டு வந்த பின்னர் தரும் வட்டியை இலாப-நட்டக் கணக்கில் பற்று வைத்துக்கொள்ளலாம்.

**கடனீட்டுப்பத்திர வட்டி மீதான வருமான வரி**

கடனீட்டுப் பத்திரங்கள் மீது வட்டி செலுத்துவோர், வட்டி மீது வருமான வரியைக் கழித்து அதனை அரசுக்குச் செலுத்த வேண்டும். ஒவ்வோராண்டும் பாராளுமன்றத்தில் நிறைவேற்றப் படும் நிதிச் சட்டம், வருமான வாயிலில் கழிக்க வேண்டிய (tax deductible at source) வரி வீதத்தைக் குறிப்பிடும். இவ் வரியைச் செலுத்தும் வரை, அது ஒரு பொறுப்பாகக் கருதப்படும்.

கீழ்க்கண்டோருக்குச் செலுத்தியுள்ள அல்லது செலுத்த வேண்டிய கடனீட்டுப்பத்திர வட்டி தனித்தனியாகக் காட்டப்பட வேண்டும்.

1. மேலாண்மை இயக்குநர்;
2. மேலாண்மை முகவர்;
3. செயலர்—பொருளர்.

## எ. தேய்மானம் :

சரியான இலாபத்தை அறியவேண்டின், சொத்துகளின் மீதான தேய்மானம், புதுப்பித்தல் செலவு போன்றவற்றை இலாப-நட்டக் கணக்கில் காட்டவேண்டியது இன்றியமையாத தாகும்.

ஓராண்டில் தேய்மானத்திற்குத் தொகை நீக்கப்படவில்லை யெனில் அல்லது வகை செய்யப்படவில்லையெனில், அவ்வுண் மையை இருப்புநிலைக் குறிப்பில் கூறவேண்டும். இதுவரை நீக்கப்படவேண்டிய மொத்த தேய்மானத் தொகையையும் இருப்புநிலைக் குறிப்பில் குறிப்புமூலம் உணர்த்தவேண்டும்.

கூடுதலாக ஒதுக்கப்பட்டுள்ள தேய்மானத்தைக் 'காப்பு' (Reserve) என்னும் தலைப்பில்தான் காட்ட வேண்டுமேயன்றி, 'ஒதுக்கு' (Provision) என்று காட்டுதல் வழுவாகும். **ஒதுக்கு என்பதைச் சொத்துகளினின்றும் கழித்துக் காட்டவேண்டும்; காப்பு என்பதைப் பொறுப்புகள் பகுதியில் காட்டவேண்டும்.**

## ஏ. அரசியல் நன்கொடை

அரசியல் கட்சிகட்கு நன்கொடை வழங்கியிருக்கும் தொகை தனியாகக் காட்டப்படவேண்டும். 1969ஆம் ஆண்டுத் திருத்தம் இத்தகைய நன்கொடையை அறவே தடைசெய்து விட்டது (பிரிவு 293 ஏ).

## ஐ. காப்புகள் (Reserves)

பொதுநலம் கருதி, தனித்தனியாக இவற்றைக் காட்ட வேண்டுவதில்லை என்று மைய அரசு இசைவு அளித்தாலொழிய இவை தனித்தனியாகக் காட்டப்படவேண்டும். காப்புகள் பொது வாகக் கீழ்க்கண்ட தலைப்புகளில் காட்டப்படுகின்றன.

1. முதல் மீட்புக் காப்புக் கணக்கு (Capital Redemption Reserve Account).
2. கழிவு நிதி (Sinking Fund).
3. பொதுக்காப்பு அல்லது குறிப்பிட்டக் காப்பு.

இவை 'ஒதுக்குகளும் காப்புகளும்' என்னும் அத்தியாயத்தில் விவரமாக விளக்கப்பட்டுள்ளன.

### ஒ. பங்காதயம் (Dividend)

செலுத்திய பங்காதாயமும், திட்டமிட்டுள்ள பங்காதாயமும் (Proposed dividend) தனித்தனியாகக் காட்டப்பட வேண்டும். இது குறித்தும் விவரமாக அவ் வத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளது.

### ஓ. மேலாண்மை ஊதியம் (Managerial Remuneration)

இந்தியாவில் கம்பெனிச் சட்டத்தின் ஒரு முக்கிய தன்மையானது மேல்மட்ட நிர்வாகத்திற்கான அலுவலர்களை நியமிப்பதையும், அவர்கட்கு வழங்கும் ஊதியத்தையும் கட்டுப்படுத்துவதாகும். பொதுக் கம்பெனிகளின் மேலாண்மை விரும்பத்தகாதோரின் கையில் சிக்கக் கொள்ளக்கூடாது அல்லது இப் பொறுப்பினை ஏற்கும் தகுதியைப் பெற்றிராதோர் கையில் சிக்கிக் கொள்ளக் கூடாது என்ற காரணமும், பொதுமக்கள் ஈடுபட்டுள்ள இக் கம்பெனிகளின் மேலாண்மைச் செலவு அதன் நிர்வாகத் திறமைக்கு ஏற்றவாறு அமையவேண்டும் என்ற காரணமும் இக் கட்டுப்பாட்டை விளைவித்திருக்கின்றன. மேலாண்மை இயக்குநர், மேலாண்மை—முகவர், செயலர்—கருவூலர், மேலாளர் அனைவரும் மேலாண்மை அலுவலர் எனப்படுவர். இவர்கட்கு வழங்க வேண்டிய ஊதிய விவரத்தினை இனிக் காண்போம்.

### பெரும (உயர்ந்த அளவு) ஊதியம் (Maximum Remuneration)

ஒரு பொதுக்கம்பெனியோ, ஒரு பொதுக் கம்பெனியின் துணைக் கம்பெனியாக விளங்கும் தனிக் கம்பெனியோ தனது இயக்குநர்கட்கு, மேலாண்மை முகவருக்கு, செயலர்—பொருளருக்கு அல்லது மேலாளருக்குக் கொடுக்கக்கூடிய உயர்ந்த அளவு ஊதியம் பற்றி 198-வது பிரிவு விவரிக்கிறது. இவர்கட்கு வழங்கக்கூடிய உயர்ந்த அளவு மேலாண்மை ஊதியம் எந்த நிதி ஆண்டிலும், அந் நிதியாண்டில் கம்பெனி ஈட்டிய நிகர இலாபத்தில் 11 சதவீதத்திற்கு மிகக்கூடாது. மேற்சொன்ன சதவீதம் கீழ்க்கண்ட தொகைகளை உள்ளடக்காது.

1. இயக்குநரவை கூட்டத்திற்கோ, ஏதேனும் குழு ஒன்றின் கூட்டத்திற்கோ வருகை தருவதற்காக இயக்குநருக்குச் செலுத்தப்படும் கட்டணம்.

2. கூடுதல் ஊதியமாக அல்லது செல்வினை ஏற்றதற்காக அல்லது விற்பனை அல்லது கொள்முதல் முகவராகப் பணி புரிந்தமைக்காக செலுத்தும் ஊதியம் அல்லது

ஒப்புறுதிக் கழிவுத் தொகைக்காக மேலாண்மை இயக்குநருக்கு செலுத்தப்படும் தொகை.

(கம்பெனிச் சட்டத்தின் பிரிவுகள் 352, 353, 354, 355, 356, 357, 358, 359, 360, இது குறித்து விளக்குகின்றன).

மேற்குறித்த உயர்ந்த அளவு ஊதிய வரைமுறைக்குட்பட்டு ஒரு கம்பெனி தனது மேலாண்மை அல்லது முழுநேர இயக்கு நருக்கு 309-வது பிரிவின்படி திங்கள் ஊதியமாக (Monthly remuneration) கொடுத்து வரலாம்; அல்லது தனது மேலாள ருக்கு 387-வது பிரிவின்படி அவ்வாறே கொடுத்துவரலாம்.

**குறும ஊதியம்** (Minimum remuneration)

எக் குறிப்பிட்ட நிதியாண்டிலாவது ஒரு கம்பெனி ஈட்டிய இலாபம் போதுமானதாக இல்லையென்றாலும் அல்லது இலாபமே இல்லையென்றாலும் மைய அரசின் முன் ஒப்புதலுடன் தனது மேலாண்மை அலுவலர்கட்கு (இயக்குநர்கள், மேலாண்மைமுகவர், செயலர்—கருவூலர், மேலாளர்) குறைந்த அளவு ஊதியமாக ஆண்டொன்றிற்கு ரூ. 50,000 வரை செலுத்தலாம். இயக்குந ரவை கூட்டத்திற்கான அல்லது குழுக் கூட்டத்திற்கான இயக்கு நர்களின் வருகைக் கட்டணத்தை இது உள்ளடக்காது. மைய அரசின் ஒப்புதலுடன் இக் குறைந்த அளவு ஊதியமான ரூ. 50,000-த்தை மேலும் அதிகமாக்கிக் கொள்ளலாம்.

**மேலாண்மை ஊதியத்தில் சேர்க்கவேண்டிய வசதிகள்** (Perquisites to be included in Managerial remuneration)

மேலாண்மை அலுவலர்கட்காகக் கம்பெனி ஏற்கும் கீழ்க் கண்ட செலவினங்களை மேலாண்மை ஊதியத்தில் சேர்க்கவேண்டும்.

அ. வாடகை பெறுமல் மேலாண்மை அலுவலர்கட்குச் செய்துகொடுக்கும் இடவசதி, வேறு வசதிகள் அல்லது பிற பயன்களுக்காக ஏற்கும் செலவு.

ஆ. மேற்கண்டோருக்கு இனமாக அல்லது சலுகைக் கட்ட ணத்தில் ஏதேனும் பயனை அல்லது வசதியை வழங்குவதற்காகச் செலவிடும் தொகை.

இ. மேற்சொன்னோருக்காக ஏற்கும் செலவு.

ஈ. மேற்சொன்னோரின் ஆயுள்மீது செலுத்தும் காப்பீட்டுறுதி முனைமம் (Life Assurance Premium) அல்லது அன்னார் அல்லது அன்னாரின் துணைவியாருக்கு அல்லது குழந்தைகட்குக் கொடுக்கப்படும் ஆண்டுத் தொகை அல்லது பணிக்கொடை (Annuity or Gratuity).

**இயக்குநரின் ஊதியம்**

309-வது பிரிவு இது குறித்து விளக்குகிறது. ஒரு பொதுக் கம்பெனி அல்லது பொதுக் கம்பெனியொன்றின் துணைக் கம்பெனியாக விளங்கும் தனிக் கம்பெனியின் இயக்குநர்கள் கீழ்க்கண்டவாறு ஊதியம் பெறலாம் :

அ. இயக்குநரவையின் அல்லது ஒரு குழுவின் ஒவ்வொரு கூட்டத்திற்கும் வருகை தருவதற்கான கட்டணம்.

ஆ. ஒரு முழுநேர இயக்குநரோ, மேலாண்மை இயக்குநரோ திங்கள் ஊதியமாகவாவது அல்லது நிகர இலாபத்தில் குறிப்பிட்ட சதவீதத்தின் அடிப்படையிலாவது தனது ஊதியத்தைப் பெறலாம் அல்லது தனது ஊதியத்தின் ஒரு பகுதியைத் திங்கள் ஊதியமாகவும், மறு பகுதியை இலாபத்தின் அடிப்படையிலும் பெறலாம்.

இ. மைய அரசின் ஒப்புதல் இல்லாமல் கீழ்க்கண்ட அளவினும் அவர்களின் ஊதியம் மிகக்கூடாது.

1. ஒரே ஒரு முழுநேர இயக்குநராகவோ, மேலாண்மை இயக்குநராகவோயிருப்பின், ஊதியம் நிகர இலாபத்தில் 5 சதவீதத்திற்கு மிகக்கூடாது.

2. ஒருவருக்குமேல் இருப்பின் அவர்களனைவருக்குமான ஊதியம் நிகர இலாபத்தில் 10 சதவீதத்திற்குமேல் இருக்கக்கூடாது.

3. திங்கள் ஊதியமாகத் தனது ஊதிய தொகையைப் பெறாத ஒரு பகுதிநேர இயக்குநருக்குக் கம்பெனி சிறப்புத் தீர்மானம் நிறைவேற்றிக் கீழ்க்கண்டவாறு ஊதியம் அளிக்கலாம்.

(i) கம்பெனியின் மேலாண்மை அல்லது முழுநேர இயக்குநரோ, மேலாளரோ இருப்பின், கம்பெனியின் இலாபத்தில் 1 சதவீதத்திற்கு மிகாமல் கழிவு வழங்கலாம்.

(ii) மேலாளரோ, மேலாண்மை அல்லது முழுநேர இயக்குநரோ கம்பெனியில் இல்லையென்றால், கம்பெனியின் இலாபத்தில் 3 சதவீதத்திற்கு மிகாமல் கழிவு தரலாம்.

மைய அரசின் இசைவுடன் கம்பெனி பொதுக்கூட்டத்தில் ஒப்புதல் பெற்று மேலே சொன்ன 1 சதவீதம் அல்லது 3 சதவீதத்தை அதிகரிக்கலாம். இதுகுறித்து நிறைவேற்றப்படும் சிறப்புத் தீர்மானம் 5 ஆண்டுகட்குப் பொருந்தும்.

ஈ. 349, 350, 351 பிரிவுகளில் கூறியுள்ளவாறு மொத்த இலாபத்தில் இயக்குநர்களின் ஊதியத்தைக் குறிக்காமல் நிகர இலாபத்தைக் கணக்கிடவேண்டும்.

**உ. கம்பெனியிடம் கழிவு ஏதேனும் பெறும் மேலாண்மை அல்லது முழுநேர இயக்குநர் அக்கம்பெனியின் துணைக்கம்பெனியிடமிருந்து வேறு ஊதியத்தையோ கழிவையோ பெறக்கூடாது.** 310-வது பிரிவின்படி, ஒரு இயக்குநரின் அல்லது மேலாண்மை அல்லது முழுநேர இயக்குநரின் ஊதியத்தை மைய அரசின் ஒப்புதல் பெற்றே அதிகரிக்கவேண்டும்.

எப் பணிக்காகவும் இயக்குநர்க்கு அளிக்கும் ஊதியத்தையும் இயக்குநரின் ஊதியத்தில் சேர்க்கவேண்டும். எனினும், இயக்குநரின் பணித் தொழில் நுட்பத் தன்மை வாய்ந்ததாக இருந்து, அதற்கான தகுதியும் அவர்கள் பெற்றிருப்பதாக மைய அரசு கருதுமாயின், அவர்க்கு அளிக்கும் ஊதியத்தைச் சேர்க்கத் தேவையில்லை.

**உறவினர்களை வேலைக்கு அமர்த்தல்**

இயக்குநர்கள் தங்கள் உறவினர்களைக் கம்பெனியின் மேல் மட்டத்தில் வேலைக்கு அமர்த்தலாம். அவர்களின் தகுதிக்கோ அனுபவத்திற்கோ பொருந்தாத வகையில் மிகவும் கூடுதலான ஊதியம் அளிப்பதன்மூலமாகத் தங்களது ஊதியத்தை மறைமுகமாக உயர்த்திக் கொள்ளலாம். இம் முறைகேட்டினைத் தவிர்க்கும்பொருட்டு 314-வது பிரிவு சில வழிமுறைகளை வகுத்துள்ளது. கம்பெனி சிறப்புத் தீர்மானம் நிறைவேற்றி அதன் இசைவைப் பெறாமல், இயக்குநரின் உறவினர் யாரையும் ரூ. 500 அல்லது அதற்கு மேல் ஊதியம் வழங்கக்கூடிய வேலையிலோ, அத்தகைய ஆதாயம் தரத்தக்க இடத்திலேயோ அமர்த்தக்கூடாது. முதல் முறையாக அமர்த்தப்படும்பொழுதெல்லாம் இத்தகைய

சிறப்புத் தீர்மானம் தேவைப்படும். அத்துடன் பின்னர் மேலும் அதிக ஊதியத்திற்குத் திருப்பி அமர்த்தப்படும்பொழுதும் இச் சிறப்புத் தீர்மானம் வேண்டப்படுகிறது.

கம்பெனி சிறப்புத் தீர்மானம் நிறைவேற்றுமல் ஒரு இயக்குநரின் உறவினர் அக் கம்பெனியின் துணைக் கம்பெனியிலும் பணி ஏற்க முடியாது. அத் துணைக் கம்பெனியிலிருந்து பெறும் ஊதியத்தைப் பிடிப்புக் கம்பெனிக்குச் செலுத்திவிடுவதாயின் இவ்வாறு பணி புரியலாம்.

**செயலர்-கருவூலருக்கு ஊதியம்:** (Remuneration to Secretaries and Treasurers)

மேலாண்மை முகவருக்கு வழங்கும் ஊதியத்தைக் கணக்கிடுவதுபோலவே, இவர்கட்கும் கணக்கிடவேண்டும். கம்பெனியின் நிகர இலாபத்தில் இவர்களின் ஊதியம் $7\frac{1}{2}$ சதவீதத்திற்கு மிகக்கூடாது. இவர்கட்கு ஊதியம் வழங்குவதற்கான இலாபத்தினை 349, 350, 351 பிரிவுகளின்படிக் கணக்கிடவேண்டும்.

**மேலாண்மை முகவருக்கு ஊதியம்** (Remuneration to Managing Agent)

மேலாண்மை முகவர் என்னும் சொல் கீழ்க்கண்டோரையும் உள்ளடக்கும் :

1. ஒரு கம்பெனியின் செயல்முகவர் ஒரு கூட்டு நிறுவனமாக இருப்பின், அந் நிறுவனத்தில் ஒவ்வொரு கூட்டாளியும்,

2. கம்பெனியின் மேலாண்மை முகவர் ஒரு பொதுக் கம்பெனியாக இருப்பின், அக் கம்பெனியின் ஒவ்வொரு இயக்குநரும்,

3. கம்பெனியின் மேலாண்மை முகவர் ஒரு தனிக் கம்பெனியாக இருப்பின், அக் கம்பெனியின் ஒவ்வொரு இயக்குநரும், ஒவ்வொரு உறுப்பினரும்.

348-வது பிரிவின்படி மேற்சொல்லப்பட்ட யாருக்காவது ஊதியமாக அளிக்கப்படும் தொகையை மேலாண்மை முகவருக்குக் கொடுக்கும் ஊதியத்தொகையில் சேர்க்கவேண்டும்.

கம்பெனியின் நிகர இலாபத்தில் மேலாண்மை முகவருக்கு அளிக்கும் ஊதியம் 10 சதவீதத்திற்கு மிகக்கூடாது.

***349, 350, 351*** ஆகிய பிரிவுகளில் காட்டியுள்ளவாறு ஊதியத்தைக் கணக்கிடுவதற்கான இலாபத்தை அறியவேண்டும்.

**மேலாளருக்கு ஊதியம்** (Remuneration to Manager)

அ. திங்கள் ஊதியமாகவோ அல்லது நிகர இலாபத்தில் குறிப்பிட்ட சதவீத அடிப்படையிலோ மேலாளர் தனது ஊதியத்தைப் பெறலாம். அல்லது மேற்சொன்ன இரு முறைகளிலும் தனது ஊதியத்தைப் பெறலாம்.

ஆ. *349, 350, 351* ஆகிய பிரிவுகளில் கூறப்பட்டுள்ளவாறே இங்கும் நிகர இலாபம் கணக்கிடப்படவேண்டும்.

இ. நிகர இலாபத்தில் 5 சதவீதத்திற்கு மிகாமல் இவர்களின் ஊதியம் இருக்கவேண்டும். மைய அரசின் இசைவுடன் கூடுதல் தொகையையும் கொடுக்கலாம்.

**ஊதியம் வழங்குவதற்கான நிகர இலாபத்தைக் கணக்கிடல்**

மேலாண்மை ஊதியத்திற்கும், ஆற்றிய பணிக்கும் தொடர்பு இருத்தல் நலம். ஆற்றிய பணி கம்பெனி ஈட்டும் இலாபத்தால் வெளிப்படுகிறது. எனவே, மேலாண்மை அலுவலர்களின் ஊதியம் பெரும்பாலும் இலாபத்தையொட்டி கணக்கிடப்படுகிறது. இவ்வாறு கணக்கிடும் முறையைக் கம்பெனிச் சட்டத்தின் *349*, ***350, 351*** ஆகிய பிரிவுகள் விளக்குகின்றன.

*1.* சாதாரணமாகக் கணக்கிடப்படும் மொத்த இலபாத்துடன் கீழ்க்கண்டவற்றைக் கூட்டவேண்டும்.

அரசிடமிருந்து அல்லது மையஅரசு அமைக்கும் அல்லது அரசின்பொருட்டு அமைக்கப்பட்டுள்ள அரசு அமைப்புகளிலிருந்து பெறும் உதவித்தொகை (Bounties and subsidies).

*2.* கீழ்க்கண்டவற்றை மொத்த இலாபத்துடன் சேர்க்கக் கூடாது.

அ. கம்பெனி வெளியிட்டுள்ள பங்குகள் மீது அல்லது கடனீட்டுப் பத்திரங்கள் மீது பெற்ற முனைமத்தொகை.

ஆ. ஒறுப்பிழப்புச் (forfeiture) செய்யும் பங்குகளை விற்றதில் பெற்ற ஆதாயம்.

இ. முதலின இலாபம் ( Capital Profit) (கம்பெனியின் தொழில் ஒன்றினை அல்லது அதன் ஒரு பகுதியை விற்றதில் பெற்ற இலாபம் உள்பட).

ஈ. அசையாச் சொத்துகளையோ, நிலைச் சொத்துகளையோ விற்பதால் ஏற்படும் முதலின இலாபம் (Capital Profit).

நிலைச் சொத்து தேய்மானம் நீக்கிய ஏட்டு மதிப்பிற்கும் (Book Value) அதிகமாக விற்கப்பட்டிருப்பின், அந் நிலைச் சொத்தின் அடக்க விலைக்கும் அதன் ஏட்டு மதிப்பிற்கும் உள்ள வேறுபாட்டுத் தொகையளவிற்கு இலாபத்தில் சேர்க்கலாம். அடக்க விலைக்கும் அதிகமாக விற்கப்பட்டிருக்கும் முதலின இலாபத் தொகையை மட்டில் சேர்க்கக்கூடாது. எடுத்துக்காட்டாக, ஒரு நிலைச் சொத்தின் அடக்கவிலை ரூ. 40,000 என்றும், அதன் ஏட்டு மதிப்பு ரூ. 25,000 என்றும் கொள்வோம். அதை இப்பொழுது ரூ. 50,000-ற்கு விற்பதாகக் கொண்டால், முதலின இலாபத்தைக் கீழ்க்கண்டவாறு அறியலாம்.

| | | ரூ. |
|---|---|---|
| விற்பனை விலை | .. | 50,000 |
| **கழி :** அடக்கவிலை | .. | 40,000 |
| விற்றதில் கிடைத்த முதலின இலாபம் | .. | 10,000 |
| நிலைச்சொத்து விற்றவிலை | .. | 50,000 |
| **கழி :** நிலைச்சொத்தின் ஏட்டு மதிப்பு | .. | 25,000 |
| விற்றதில் கிடைத்த மொத்த இலாபம் | .. | 25,000 |
| **கழி :** | | |
| விற்றதில் கிடைத்த முதலின இலாபம் | .. | 10,000 |
| விற்றதில் கிடைத்த வருவாய் இலாபம் (Revenue Profit) | .. | 15,000 |

(அதாவது, அடக்கவிலைக்கும் தேய்மானம் நீக்கிய ஏட்டுமதிப்புக்கும் உள்ள வேறுபாடு)

இப்பொழுதுள்ள முதலின இலாபமான ரூ. 10,000-ஐ இலாபத்தில் சேர்க்கக் கூடாது; ஆனால், வருவாய் இலாபமான ரூ. 15,000-ஐ சேர்த்துக் கொள்ளலாம். ஏட்டு மதிப்புக்கும் குறைவாக விற்கப்படுவதால் எழும் நட்டத்தைப் பற்றி அடுத்து வரும் 10ஆம் இனத்தில் காண்க.

3. கீழ்க்கண்டவற்றைக் கழிக்கவும் :

(1) நடைமுறை வருவாய்ச் செலவுகள் அனைத்தும் (Revenue expenses).

(2) இயக்குநர் ஊதியம்.

(3) கம்பெனியின் அலுவலர்களில் யாருக்கேனும் அல்லது கம்பெனி அமர்த்தியுள்ள பொறிஞர் அல்லது தொழில் வல்லுநர் (Expert) ஆகியோருக்குச் செலுத்திய அல்லது செலுத்தவுள்ள மேலூதியம் அல்லது கழிவுத்தொகை.

(4) மிகுதியாக அல்லது மிகவும் அதிகமான இலாபத்தின்மீது விதிக்கப்படும் வரி என்று மைய அரசினால் அறிவிக்கப்படும் வரி.

(5) சில குறிப்பிட்ட காரணங்களுக்காக வியாபார இலாபத்தின்மீது (Tax on business profit) விதிக்கப்படும் எவ்வரியும் அல்லது சில குறிப்பிட்ட சூழ்நிலை காரணமாக மைய அரசினால் அறிவிக்கப்பட்டு விதிக்கப்படும் எவ் வரியும்.

(6) கம்பெனி வெளியிட்டுள்ள கடனீட்டுப் பத்திரங்களின் மீதான வட்டி.

(7) கம்பெனி செய்திருக்கும் அடைமானத்தின் மீதான வட்டி; தன்னுடைய நிலையான அல்லது நடப்புச் சொத்துகளைப் பிணையமாக வைத்து வாங்கியுள்ள கடன்களின் மீதான வட்டி.

(8) பிணையமற்ற கடன்களின் மீதான வட்டி (Interest on unsecured loans).

(9) அசையா அல்லது அசையும் சொத்துகள் மீது ஏற்ற பழுதுபார்க்கும் செலவுகள் (இப் பழுதுபார்க்கும் செலவு முதலினச் செலவாக இருக்கக் கூடாது).

(10) 350-வது பிரிவில் குறிப்பிட்டுள்ள அளவு வரையான தேய்மானம் 350-வது பிரிவின்படி மேலாண்மை அலுவலர்கட்குத் தரவேண்டிய கழிவினைக் கணக்கிடும்போது, 1961ஆம் ஆண்டைய வருமான வரிச் சட்டத்தின் கீழ்க் கொடுக்கப்பட்டுள்ள வீதத்தின் படிதான் தேய்மானம் கணக்கிடப்படவேண்டும். நிதி ஆண்டிறுதியில் சொத்துகளின் 'தேய்மானம் குறைக்கப்பட்ட மதிப்பின்'

(Written down Value) மீது இவ் விகிதங்களில் தேய்மானம் கணக்கிடப்படவேண்டும். தேய்மானம் என்பது சாதாரணத் தேய்மானத்தைக் குறிக்கும். மேம்பாட்டுத் தள்ளுபடியை (Development Rebate Reserve) அல்லது தொடக்கத்தில் அளிக்கப்படும் சிறப்புத் தேய்மானம் போன்றவற்றை இது குறிக்காது.

சொத்து ஒன்று விற்கப்பட்டாலோ, பயன்படாதென்று ஒதுக்கப்பட்டுவிட்டாலோ (discarded), அழிக்கப்பட்டுவிட்டாலோ அதன் விற்பனை விலைக்கும் கூடுதலாகவுள்ள அதன் ஏட்டு மதிப்பை அவ்வாண்டிலேயே நீக்கிவிடவேண்டும்.

(11) அறநிலையங்கட்கு வழங்கும் நன்கொடை போன்ற நன்கொடைகள்.

(12) சட்டப்படி ஈட்டுத்தொகை அல்லது நட்டஈடு முதலியவை கொடுக்க வேண்டியிருப்பின், அத் தொகை (ஒப்பந்த முறிவின் காரணமாக தரவேண்டிய பொறுப்பினையும் இது குறிக்கும்).

(13) மேல் குறிப்பிடப்பட்டுள்ள பொறுப்பு போன்றவற்றை ஏற்பதற்காக எடுத்துக்கொள்ளும் காப்பீட்டு முனைமம்.

(14) வராக்கடன் என்று கருதி நீக்கப்பட்டத் தொகை அல்லது நடப்பாண்டில் சரிக்கட்டப்பட்டக் கடன்.

கீழ்க்கண்டவற்றைக் கழிக்கக் கூடாது :

(1) மேலாண்மை முகவருக்குச் செலுத்த வேண்டிய ஊதியம்.

(2) 1922ஆம் ஆண்டைய இந்திய வருமான வரிச் சட்டத்தின்கீழ்க் கம்பெனி செலுத்தவேண்டிய வருமான வரியும், கூடுதல் வரியும் (Super Tax).

(3) தானாகவே செலுத்திய ஈட்டுத் தொகை அல்லது நட்டஈட்டுத் தொகை.

(4) முதலின நட்டம் (கம்பெனியின் தொழிலை அல்லது ஒரு பகுதியை விற்பதனால் ஏற்பட்ட நட்டம் போன்றது).

இயக்குநருக்கு அல்லது மேலாண்மை இயக்குநருக்கு அல்லது மேலாளருக்குச் சேரவேண்டிய கழிவுத் தொகையைக் கணக்கிடுவதற்கு இலாபம் எவ்வாறு கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது என்பதை உணர்த்தக்கூடிய ஒரு அறிக்கையையும் இலாப-நட்டக் கணக்குடன் சேர்க்கவேண்டும் என்பதை மறத்தலாகாது.

## மேலாண்மை ஊதியத்தைக் கணக்கிடல்

### எடுத்துக்காட்டு 74

ஒரு கம்பெனியின் 1968 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான இலாப-நட்டக் கணக்கு கீழ்க்காட்டியவாறிருந்தது. அதிலிருந்து மேலாண்மை இயக்குநர்க்குத் தரவேண்டிய ஊதியத்தைக் கண்டுபிடி :

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| ஊதியமும் கூலியும் | 90,000 | மொத்த இலாபம் | 16,99,100 |
| பொதுச்செலவு | 23,400 | பங்குமாற்றுக் கட்டணம் (transfer fees) | 1,000 |
| இயக்குநர் கட்டணம் | 8,000 | கட்டட விற்பனையில் இலாபம் (அடக்கவிலை ரூ. 2,00,000 ஏட்டு மதிப்பு ரூ. 1,50,000) | 75,000 |
| வரியும், வாடகையும் | 15,600 | மைய அரசிடம் பெற்ற உதவித் தொகை | 30,000 |
| ஒப்பந்த முறிவிற்கான ஈட்டுத் தொகை | 10,500 | | |
| தேய்மானம் | 45,000 | | |
| மேம்பாட்டுத் தள்ளுபடிக் காப்பு | 20,000 | | |
| அரசியல் கட்சிகட்கு நன்கொடை | 22,700 | | |
| கடனீட்டுப் பத்திரவட்டி | 30,000 | | |
| வட்டி | 15,000 | | |
| பணிக்கொடைக் காப்பு (Gratuity Reserve) | 20,400 | | |
| வருமானவரி ஒதுக்கு | 11,25,000 | | |
| நிகர இலாபம் | 3,79,500 | | |
| | 18,05,100 | | 18,05,100 |

மேற்கண்ட விவரங்களிலிருந்து, உயர்ந்தளவு மேலாண்மை ஊதியத்தையும், மேலாண்மை இயக்குநர்க்குக் கொடுக்கக்கூடிய ஊதியத்தையும் கணக்கிடுக.

**விடை :**

**நிகர இலாபத்தைக் கணக்கிடல்**

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| இலாப-நட்டக் கணக்கின்படி மொத்த இலாபம் | | 16,99,100 |
| **கூட்டு :** | | |
| கட்டட விற்பனையில் பெற்ற வருவாய் இலாபம் : | | |
| விற்பனை விலை (ஏட்டுமதிப்பு இலாபம்) | 2,25,000 | |
| **கழி :** வாங்கிய விலை அல்லது தொடக்கவிலை | 2,00,000 | |
| விற்பனையில் பெற்ற முதலின இலாபம் (Capital profit) | 25,000 | |
| **விற்பனையில் பெற்ற மொத்த இலாபம் :** | | |
| விற்பனை விலை | 2,25,000 | |
| **கழி :** ஏட்டு மதிப்பு | 1,50,000 | |
| | 75,000 | |
| விற்பனையில் கிடைத்த மொத்த இலாபம் | 75,000 | |
| **கழி :** முதலின இலாபம் | 25,000 | |
| விற்பனையில் கிடைத்த மொத்த வருவாய் இலாபம் (Revenue Profit) | 50,000 | |
| | | 50,000 |
| பங்கு மாற்றுக் கட்டணம் | | 1,000 |
| **கூட்டு :** மைய அரசிடம் பெற்ற உதவித் தொகை | | 30,000 |
| | | 17,80,100 |

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| கழி : | | |
| ஊதியமும், கூலியும் | 90,000 | |
| பொதுச் செலவு | 23,400 | |
| இயக்குநர் கட்டணம் | 8,000 | |
| வரியும் வாடகையும் | 15,600 | |
| ஒப்பந்த முறிவுக்கான ஈட்டுத் தொகை | 10,500 | |
| தேய்மானம் | 45,000 | |
| கடனீட்டுப்பத்திர வட்டி | 30,000 | |
| வட்டி | 15,000 | |
| | | 2,37,500 |
| | | 15,42,600 |

மேலாண்மை இயக்குநர்க்குத் தரவேண்டிய உயர்ந்தளவு ஊதியம் இலாபத்தில் 5 சதவீதம் ஆகும். எனவே,

$$15,42,600 \times \frac{5}{100} = \text{ரூ. } 77,130$$

## எடுத்துக்காட்டு 75

1968 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டிற்கான ஒரு கூட்டுப் பங்குக் கம்பெனியின் இலாப-நட்டக் கணக்கு கீழே கொடுக்கப் பட்டிருக்கிறது. அதிலிருந்து மேலாண்மை இயக்குநருக்கும், பிற இயக்குநர்கட்கும் தரவேண்டிய கழிவுத் தொகையைக் கணக்கிடுக. அவர்களின் கழிவுத் தொகை கம்பெனியின் இலாபத்தில் முறையே 5 சதவீதம், 4 சதவீதம் என்று முடிவு செய்யப்பட்டிருக் கிறது :

| பற்று | | இலாப-நட்டக் கணக்கு | வரவு |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| நிர்வாகச் செலவும் விநியோகச் செலவும் | 50,000 | மொத்த இலாபம் கீ/கொ | 7,00,000 |
| கடன்மீது வட்டி | 75,000 | முதலீடு விற்பனையில் இலாபம் | 10,000 |
| மேலாண்மை இயக்குநரின் ஊதியம் | 18,000 | முதலீடு மீது பங்காதாயம் | 7,500 |
| தேய்மானம் | 40,000 | மாற்றுக் கட்டணங்கள் | 500 |
| இயக்குநர் கட்டணம் | 2,000 | | |
| மீள்தகு முன்னுரிமைப் பங்கு மீட்புக்காப்பு | 50,000 | | |
| வரி விதிப்பு ஒதுக்கு | 3,00,000 | | |
| மேம்பாட்டுத் தள்ளுபடிக் காப்பு | 25,000 | | |
| இருப்பு கீ/இ | 1,58,000 | | |
| | 7,18,000 | | 7,18,000 |

**விடை :**

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| 349-வது பிரிவின்படி இலாபம் இலாப-நட்டக் கணக்கின்படி நிகர இலாபம் | | 1,58,000 |
| **கூட்டு :** | | |
| சேர்க்கக்கூடாத செலவினங்கள் : | | |
| மேலாண்மை இயக்குநரின் ஊதியம் | 18,000 | |
| முன்னுரிமைப் பங்கு மீட்புக் காப்பு | 50,000 | |
| வரி விதிப்பு ஒதுக்கு | 3,00,000 | |
| மேம்பாட்டுத் தள்ளுபடிக் காப்பு | 25,000 | 3,93,000 |
| | | 5,51,000 |
| **கழி:** முதலீடு விற்பனையில் ஆதாயம் | | 10,000 |
| | | 5,41,000 |

மேலாண்மை இயக்குநரின் கழிவு :

$$= 5,41,000 \times \frac{5}{100}$$

= ரூ. 27,050

பிற இயக்குநர்களின் கழிவு :

$$= 5,41,000 \times \frac{2}{100}$$

= ரூ. 10,820

குறிப்பு: 1. கணக்கில் கொடுக்கப்பட்டிருக்கும் தேய்மானத் தொகை ரூ. 40,000 வருமானவரிச் சட்டத்திற்கு உட்பட்டது என்று ஊகிக்கப்படுகிறது.

2. முதலீடு ஒரு நிலைச் சொத்தாகக் கருதப்படுகிறது.

3. கம்பெனிச் சட்டத்தின்படி, கம்பெனிக்கு ஒரு மேலாண்மை இயக்குநர் இருக்கின்ற காரணத்தால், பிற இயக்குநருக்கு நிகர இலாபத்தில் 1% வீதம்தான் தரவேண்டும்; 2% தருதல் சட்டத்திற்கு முரணானதாகும்.

1969 நவம்பர் 11-லிருந்து மேலாண்மை அல்லது முழு நேர அல்லது பகுதிநேர இயக்குநர்களுக்கு அல்லது மேலாளர்கட்குத் தரப்படும் மொத்த ஊதியத் தொகைக்குக் கீழ்க்கண்ட உச்சவரம்பை மைய அரசு கொண்டு வந்துள்ளது.

1. அகவிலைப்படி (Dearness Allowance) அல்லது பிற நிலையான படிகள் உள்பட ஆண்டு ஊதியம் ரூ. 90,000-மும்,

2. நிகர இலாபத்தில் 1 சதவீதத்திற்கு மிகாமல் கழிவு அல்லது ஒப்புக் கொள்ளப்பட்ட ஊதியத்தில் 50 சதவீதம் – இதில் எது குறைவோ அத் தொகையும்.

3. கழிவுத்தொகை மட்டில் தரப்படுமாயின், அது ஆண்டிற்கு ரூ. 1,35,000-ற்கு மேல் செல்லக்கூடாது.

4. இத்துடன் வசதியும் (perquisites) செய்து தரலாம். ஆனால், இவற்றின் மதிப்பு ஆண்டிற்கு ரூ. 30,000 அல்லது ஊதியத்தில் மூன்றில் ஒரு பங்கு, இதில் எது குறைவோ அத் தொகைக்கு மேல் செல்லக் கூடாது.

## எடுத்துக்காட்டு 76

'*X*' என்பவரும், '*Y*' என்பவரும் முறையே அலுவலக மேலாளராகவும் (Office Manager), ஆலை மேலாளராகவும் (Works Manager) ஒரு தனிக் கம்பெனியில் 1965 சனவரி 1-ல் நியமிக்கப்பட்டனர். அவர்கட்குக் கீழ்க்கண்டவாறு கழிவுத் தொகை தரவேண்டும்.

'*X*'-ற்கு '*Y*'-யினுடைய கழிவுத் தொகையைக் கழித்த பின் உள்ள நிகர இலாபத்தில் 5 சதவீதம் கழிவுத் தொகை.

'*Y*'-க்கு '*X*'-னுடைய கழிவுத் தொகையைக் கழித்தபின் உள்ள நிகர இலாபத்தில் 4 சதவீதம் கழிவுத் தொகை.

1966ஆம் ஆண்டிற்கான கம்பெனியின் இலாப-நட்டக் கணக்கு ரூ. 10,00,000 நிகர இலாபத்தைக் காட்டியது. மேற் கண்டவாறு '*X*'-ற்கும் '*Y*'-க்கும் கழிவுத் தொகை ஒதுக்கிய பின்னர், வருமான வரிக்காக ரூ. 5,00,000-மும், காப்பிற்காக ரூ. 2,00,000-மும் ஒதுக்கவும், செலுத்தப்பெற்ற பங்குமுதல் ரூ. 30,00,000 மீது 8 சதவீதம் பங்காதாயம் வழங்கவும் கம்பெனி முடிவு செய்தது. 1966 சனவரி 1-ல் இலாப-நட்டக் கணக்கின் இருப்பு ரூ. 30,000 ஆக இருந்தது.

'*X*'-ற்கும், '*Y*'-க்கும் செலுத்தவேண்டிய கழிவுத் தொகையைக் கணக்கிட்டு 1966ஆம் ஆண்டிற்கான இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கைத் தயாரிக்க.

(C. A. Inter, Nov. 1965)

**விடை :**

**குறிப்பு :** நிகர இலாபம் ரூ. 10,00,000 '*X*'-ற்கும், '*Y*'-க்கும் சேரவேண்டிய கழிவுத் தொகையைக் கணக்கிடுவதற்கு முன்னுள்ளதாகும்.

'கம்பெனி முடிவு செய்தது' என்று கொடுக்கப்பட்டிருப்பது சட்டப்படி தவறாகும். அது 'இயக்குநர்கள் வருமான வரிக்கான ரூ. 5,00,000-ஐ ஒதுக்கினர்; காப்புக்கு ரூ. 2,00,000 மாற்றினர்; செலுத்தப்பெற்ற முதல் ரூ. 30,00,000 மீது 8 சதவீதம் பங்காதாயம் வழங்கப் பரிந்துரை செய்தனர்' என்று இருக்கவேண்டும். மேலும், ஆண்டின் இறுதி நாளில் பங்காதாயத்தினை அறிவிக்க முடியாது. அந் நாளில் இலாப ஈவு வழங்க திட்டமிடப்படும். அடுத்து நடைபெறும் ஆண்டுப் பொதுக்கூட்டத்தில் தான் அது வழங்கப்படுவதாக அறிவிக்கப்படும்.

இப்பொழுது 'X'-ற்கும், 'Y'-க்கும் சேரவேண்டிய கழிவுத் தொகையைக் கணக்கிடலாம்.

'Y'-க்குச் சேரவேண்டிய கழிவுத் தொகை '$a$' எனக் கொள்வோம். இப்போது 'X'-ன் கழிவுத் தொகை

$$= \frac{1}{20}(10{,}00{,}000 - a)$$

$$a = \frac{1}{25}\left[10{,}00{,}000 - \frac{1}{20}(10{,}00{,}000 - a)\right]$$

$$= \frac{1}{25}\left(10{,}00{,}000 - 50{,}000 + \frac{a}{20}\right)$$

$$25a = 9{,}50{,}000 + \frac{a}{20}$$

$$500a = 1{,}90{,}00{,}000 + a$$

$$499a = 1{,}90{,}00{,}000$$

$$a = 38{,}076.$$

எனவே 'Y' க்குச் சேரவேண்டிய கழிவு = ரூ. 38,076

'X' க்குச் சேர வேண்டிய கழிவு $= \frac{5}{100}(10{,}00{,}000 - 38{,}076)$

= ரூ. 48,096.

**1966-ஆம் ஆண்டிற்கான இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கு**
(Profit and Loss Appropriation Account)

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| 'X'-ன் கழிவு | 48,096 | இருப்பு கீ/கொ | 30,000 |
| 'Y'-ன் கழிவு | 38,076 | கழிவும் வரியும் ஒதுக்கப்படுவதற்கு முன் நடப்பாண்டின் நிகர இலாபம் | 10,00,000 |
| வருமானவரி ஒதுக்கு | 5,00,000 | | |
| காப்புக்கு மாற்றம் | 2,00,000 | | |
| வரி கழிப்பதற்குஉட்பட்டதிட்டமிட்டப் பங்காதாயம் | 2,40,000 | | |
| மீதி : இருப்பு நிலைக் குறிப்புக்கு எடுத்துச் செல்லப்படுவது | 3,828 | | |
| | 10,30,000 | | 10,30,000 |

சரியாகச் செய்யவேண்டுமெனில் 'X'-ற்கும், 'Y'-க்கும் சேரவேண்டிய கழிவுத் தொகையையும், வருமான வரி ஒதுக்கினையும் இலாப-நட்டக் கணக்கில்தான் பற்றுவைக்க வேண்டுமே தவிர, இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கில் பற்று வைக்கக்கூடாது. காரணம், இவை இலாபம் ஈட்டுவதற்கான உரிய செலவுகள்.

மேலாண்மை ஊதியத்தைக் கணக்கிடுவதற்காகக் கம்பெனியின் நிகர இலாபத்தை அறியும்பொழுது, பொதுவாக நடைமுறை வருவாயையும் நடைமுறைச் செலவையும் மட்டிலுமே கணக்கில் எடுத்துக்கொண்டாலும் கூட கீழ்க்கண்டவற்றையும் மறத்தலாகாது.

1. முதலின இலாபத்தையும், முதலின நட்டத்தையும் விட்டுவிட வேண்டும். எனினும், நிலைச் சொத்து ஒன்றினை விற்கும்போதோ பயன்படுத்த முடியாதென ஒதுக்கிவிடும்போதோ அல்லது அழிக்கும்போதோ ஏற்படும் முதலின நட்டத்தைத் தேய்

மானத்தின் ஒரு பகுதியாகக் கருதி 350-வது பிரிவின்படி கழிக்க லாம்.

2. (கம்பெனி பெறும் பங்காதாயத்திலும் பத்திரங்கள் மீதான வட்டியினின்றும் வருவாய் வாயிலில் கழிக்கப்பட்ட வருமான வரி உள்பட) வருமான வரியினை கழிக்கக்கூடாது. ஆயினும், கம்பெனி செலுத்தவேண்டிய கூடுதல் வரியைக் கழித்துக் கொள்ளலாம்.

3. பொறுப்புகட்கான ஒதுக்குகளைக் (ஐயக் கடன் காப்பு, செலுத்தவேண்டிய பணிக்கொடைக் காப்பு போன்றவற்றைக்) கழிக்கக் கூடாது. ஆயினும், நீக்கப்பட்ட வராக்கடனையும். செலுத்திய பணிக்கொடையையும் கழித்துக் கொள்ளலாம்.

4. 293 (1) (உ) பிரிவின்கீழ் கம்பெனி வழங்கும் நன் கொடைத் தொகைகளைக் கழித்துக் கொள்ளலாம். இப் பிரிவின் கீழ் ரூ. 25,000 அல்லது கடந்த மூன்றாண்டு இலாப விழுக் காட்டில் 5 சதவீதம் இவற்றில் எது அதிகமோ அத் தொகை வரை வழங்க இயக்குநரவைக்கு உரிமையுண்டு.

5. இலாப-நட்டக் கணக்கில் பற்று வைக்கப்பட்ட தேய் மானத்தை அவ்வாறே கழிக்கக் கூடாது. ஆயினும், 350-வது பிரிவின்படி கணக்கிடப்பட்ட தேய்மானத்தைக் கழித்துக் கொள்ள லாம்.

**வரி விதிப்பு**

வருமான வரியோ, இலாபத்தின் மீது விதிக்கப்படும் தொகையோ வருவாய் ஈட்டும் ஒரு செலவாகத்தான் கருதப்பட வேண்டும் என்று கணக்காயர்கள் பலர் கருதுகின்றனர். ஒவ்வோ ராண்டும் நிதி அமைச்சரின் போக்கினைப் பொருத்து செலுத்த வேண்டிய வரி இருந்தபோதிலும், இலாபம் இல்லையெனில் வரி செலுத்த வேண்டிய பொறுப்பு ஏதும் இல்லையெனினும், வருமான வரியை ஒரு செலவாகக் கருதுவதே சிறந்தது என்று கருதப்படு கிறது. இலாப-நட்டக் கணக்கு தயாரித்த நீண்ட நாள்களுக்குப் பின்னரே செலுத்தவேண்டிய சரியான தொகையை உணர முடியும்; ஆதலால் வரிக்கான பொறுப்பினை மதிப்பிட்டு அதற் காகத் தொகை ஒதுக்கி வைக்கவேண்டும். இத் தொகையினை இலாப-நட்டக் கணக்கில் பற்றுவைத்து (வரிக்கும் மேல்—'above the line') வருமான வரி ஒதுக்கு (Provision for Income Tax) எனும் கணக்கில் வரவு வைக்கவேண்டும். வருமானவரி, சொத்து வரி, மிகுதி இலாப வரி போன்ற பல்வகையான வரிகட்கும் இலாப-நட்டக் கணக்கில் தனித்தனியாகப் பற்றுவைக்கவேண்டும்.

சென்ற ஆண்டுக் கணக்குகளைச் சரிக்கட்ட வேண்டியிருப்பின், அதனை இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கில் (வரிக்கும் கீழ்—'below thi line') பற்றோ, வரவோ வைக்கவேண்டும். இவ்வாறின்றி இலாப-நட்டக் கணக்கிலேயே பற்றோ, வரவோ வைத்தால், அது நடப்பாண்டில் ஏற்பட்ட உண்மையான இலாப-நட்டத்தை உணர்த்தாமற்போகும். 'வரிக்கும் மேல்' (above the line) என்பது இலாப-நட்டக் கணக்கையும், 'வரிக்கும் கீழ்' (below the line) என்பது இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கையும் குறிக்கும் சொற்றொடர்களாகும்.

## இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கு தயாரித்தல்

இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கு தயாரிப்பது குறித்து சட்ட இணைப்பு 6, பகுதி 2 (1) ஏதும் சொல்லவில்லை. ஆனால், ஒவ்வொரு கம்பெனியும் இதனைத் தயாரிப்பது வழக்கம் என்ற உண்மையே இதன் இன்றியமையாமையைப் புலப்படுத்தும். இலாபத்தைப் பயன்படுத்தும் முறையை இக் கணக்கு உணர்த்துகிறது. இதன் மாதிரி கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

### இலாப—நட்டப் பகிர்வுக் கணக்கு

| | | | |
|---|---|---|---|
| காப்புகட்கு மாற்றம் | .. | இருப்பு கீ/கொ (சென்ற ஆண்டுக் கணக்கின் இருப்பு) | .. |
| திட்டமிட்டப் பங்காதாயம் | .. | இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கு (நடப்பாண்டில் இலாபம்) | .. |
| சிறப்புக் காப்புகள் (பங்காதாயம், சமன்செய் காப்பு, கடனீட்டுப் பத்திர கழிவு நிதி போன்றவை) | .. | காப்புக் கணக்குகளினின்றும் மாற்றம் | .. |
| கடந்த ஆண்டுகளில் சரிக்கட்டுதல் (தேய்மானம் நிலுவை) | .. | சென்ற ஆண்டுக் கணக்குகளின் சரிக்கட்டுதல் (கூடுதல் வருமான வரி ஒதுக்கைச் சரிக்கட்டல், கூடுதலாகக் கொடுத்த ஊதியத்தினை வசூலித்தல்.) | .. |
| இருப்பு கீ/இ (இத்தொகை இருப்புநிலைக் குறிப்பிற்கு எடுத்துச் செல்லப் படுகிறது. அடுத்த ஆண்டு இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கில் வரவுப் பகுதியில் காட்டப்படுகிறது.) | .. | | |
| | .. | | .. |

# கம்பெனிச் சட்ட இணைப்பு VI இன் பகுதி 2-ம் 3-ம்

## பகுதி II

குறிப்பிட்ட ஆண்டில் கம்பெனியின் செயல்முறைகளின் விளைவினைத் தெள்ளிதின் உணர்த்தும்வண்ணம் இலாப-நட்டக் கணக்கைத் தயாரிக்கவேண்டும். கம்பெனியின் முக்கிய தன்மைகள் அனைத்தையும், மீண்டும் மீண்டும் நிகழும் நடவடிக்கைகளின் அல்லது ஒரோவழி நடைபெறும் நிகழ்ச்சிகளின் வரவு செலவினங்களையும் அது வெளிக்காட்ட வேண்டும்.

கம்பெனிச் சட்டம் 211 (2)-வது பிரிவின்படி கம்பெனியின் இலாப-நட்டக் கணக்கானது கம்பெனியின் நிதியாண்டில் ஏற்பட்ட உண்மையான இலாப-நட்டத்தைச் சரியாகப் படம்பிடித்துக் காட்ட வேண்டுமென்று கூறுகிறது. அத்துடன் எந்த அளவிற்கு முடியுமோ, அந்த அளவில் ஆறுவது பகுதி (2)-ல் குறிப்பிடப்பட்டுள்ளவற்றைப் பின்பற்றித் தயாரிக்கப்பட வேண்டும். ஆனால், இச் சட்டப்பிரிவு காப்பீட்டுக்கம்பெனிக்கோ, வங்கிக்கம்பெனிக்கோ அல்லது மின்உற்பத்தி, மின் வழங்குதலில் ஈடுபட்டிருக்கும் கம்பெனிக்கோ பொருந்தாது. எவ்வகைக் கம்பெனிகளுக்குத் தனித் தனிச் சட்டங்களின்மூலம் இலாப-நட்டக் கணக்குப் படிவங்கள் கொடுக்கப்பட்டுள்ளனவோ, அவ்வகைக் கம்பெனிகளுக்கு இங்கே குறிப்பிடப்பட்டுள்ளவை பொருந்தா.

1. கம்பெனியின் வரவு செலவுக்குரிய பலவகை இனங்களையும் ஏற்ற தலைப்புகளின் கீழ் எழுதி, இலாப-நட்டக் கணக்குத் தயாரிக்கப்படவேண்டும். குறிப்பிட்ட ஆண்டில் கீழ்க்கண்ட விவரங்களை உணர்த்தவேண்டும்.

அ. கம்பெனியின் மொத்த விற்பனை.

ஆ. 294-வது பிரிவின் கீழ்த் தனி விற்பனை முகவருக்குக் கொடுத்த கழிவு.

இ. பிற முகவர்கட்குக் கொடுத்த கழிவு.

ஈ. வழக்கமாகக் கொடுக்கும் வியாபார தள்ளுபடியன்றி, விற்பனையின் பேரில் வழங்கிய தரகுத் தொகையும், பிற தள்ளுபடித் தொகையும்.

2. அ. உற்பத்தித் துறையில் ஈடுபட்டிருக்கும் நிறுவனங்களாயின், கச்சாப் பொருள்கள் கொள்முதல் செய்ததையும், உற்பத்திச் செய்யப்பட்ட பொருள்களின் தொடக்க இருப்பையும், இறுதிச் சரக்கிருப்பையும் உணர்த்தவேண்டும்.

ஆ. வியாபார நிறுவனங்களாயின், செய்த கொள்முதல் தொகையையும், தொடக்கச் சரக்கிருப்பையும், இறுதிச் சரக்கிருப்பையும் வெளிக்காட்ட வேண்டும்.

இ. பணி ஒன்றை வழங்கும் நிறுவனமாயின், பணியைச் செய்ததில் அல்லது அளிக்கப்பட்டதில் கிடைத்த மொத்த வருமானத்தைக் காட்டவேண்டும்.

ஈ. ஒன்றிற்கு மேற்பட்ட மேற்சொன்ன பணிகளில் ஈடுபட்டிருக்கும் நிறுவனமாயின், தொடக்க இறுதிச் சரக்கிருப்பு, கொள்முதல் இவற்றின் மொத்தத் தொகையையும், வழங்கிய பணியில் பெற்ற மொத்த வருமானத்தையும் கொடுத்தால் போதும்.

உ. வேறு பிற நிறுவனங்களாயின், பெற்ற மொத்த வருமானத்தைப் பலவகைத் தலைப்புகளின் கீழ்க் காட்டவேண்டும்.

3. வேலை முற்றுப் பொருள்களை (Works in Progress) யுடைய எல்லா நிறுவனங்களும் கணக்கு ஆண்டுத் தொடக்கத்தில் முடிக்கப்பெற்ற வேலையின் மதிப்பையும், இறுதியில் அதன் மதிப்பையும் குறிப்பிடவேண்டும்.

4. நிலைச் சொத்துகள் மீது ஒதுக்கப்பட்ட தேய்மானம், புதுப்பித்தல் செலவு முதலியவை. தேய்மானம் ஒதுக்குவதின் வாயிலாக நிலைச் சொத்துகளின் மதிப்பைக் குறைக்கவில்லையெனில், அதை ஒதுக்குவதற்குப் பின்பற்றப்படும் முறையினைத் தெளிவாக்க வேண்டும்.

தேய்மானத்திற்காகத் தொகை ஒதுக்கவில்லையெனில், இவ்வுண்மையை இலாப-நட்டக் கணக்கு வெளிக்காட்ட வேண்டும். சட்டத்தின் 205 (2)-வது பிரிவின்படி கணக்கிட்டு எவ்வளவு தேய்மானம் மொத்தம் ஒதுக்கப்பட வேண்டியுள்ளது என்பதை ஒரு குறிப்பின்மூலம் தெரிவிக்கவேண்டும்.

5. கம்பெனியின் கடனீட்டுப்பத்திரங்கள் மீதான வட்டித் தொகையையும், குறிப்பிட்ட காலத்திற்கென வாங்கப்பட்ட கடன்கள் மீதான வட்டித் தொகையையும் காட்டவேண்டும். அத்துடன் மேலாண்மை இயக்குநர், மேலாண்மை-முகவர், செயலர்—கருவூலர், மேலாளர் போன்றோருக்குச் செலுத்திய அல்லது செலுத்தவேண்டிய வட்டியையும் தனித்தனியாகக் காண்பிக்க வேண்டும்.

6. இலாபத்தின் மீது செலுத்தவேண்டிய வருமான வரித் தொகை.

7. பங்குமுதலைத் திருப்பித் தருவதற்காகவும், கடனை அடைப்பதற்காகவும் ஒதுக்கப்பட்டத் தொகைகளை இது உணர்த்த வேண்டும்.

8. இருப்புநிலைக் குறிப்பைத் தயாரிக்கும் நாளில் இருக்கக் கூடிய பொறுப்புக்கு அல்லாமல் வேறு முக்கியமான காப்புகட்காகத் தொகை ஏதேனும் ஒதுக்கப்பட்டிருக்குமாயின், அல்லது ஒதுக்கப் பட இருக்குமாயின், அதனை உணர்த்தவேண்டும். அவ்வாறு, அத்தகைய காப்புகளினின்றும் திரும்ப எடுத்துக்கொள்ளப்பட்ட தொகையினையும் காட்டவேண்டும்.

9. அ. குறிப்பிட்ட சிலவகைப் பொறுப்புகளைத் தீர்ப்ப தற்காக ஒதுக்கப்பட்டத் தொகையினையும்,

ஆ. இனித்தேவையில்லை என்ற காரணத்தால் அத்தகைய காப்புகளினின்றும் திரும்ப எடுத்துக்கொண்டத் தொகையினையும் இது காட்டவேண்டும்.

10. கீழ்க்கண்ட ஒவ்வொரு இனத்திற்கும் செலவழித்தத் தொகையையும் இலாப-நட்டக் கணக்குக் காட்டவேண்டும்.

அ. பயன்படுத்தியப் பண்டங்களும், உதிரியுறுப்புகளும்;

ஆ. எரிபொருளும், விசையும்;

இ. வாடகை;

ஈ. கட்டடம் பழுதுபார்க்கும் செலவு;

உ. பொறிவகை பழுதுபார்க்கும் செலவு;

ஊ. (i) ஊதியம், கூலி, மேலூதியம்;

(ii) நலக்காப்பு நிதிக்கு அல்லது பிற நிதிகளுக்கு வழங்கிய தொகை.

(iii) முன்னர் இருந்த காப்புத் தொகையிலிருந்து அல்லது ஒதுக்குத் தொகையிலிருந்து சரிக் கட்டாத தொழில் அலுவலர் நலச் செலவு கள்.

**குறிப்பு :**

இதுபற்றிய தகவலை இருப்புநிலைக் குறிப்பில் உரிய காப்புக் கணக்கின் கீழும் கொடுக்கவேண்டும்.

i, ii பற்றி இலாப-நட்டக் கணக்கு கீழ்க்கண்ட விவரங் களையும் தனியாகத் தரவேண்டும்: திங்கள் ஒன்றுக்கு ரூ. 2,000 அல்லது அதற்கு மேற்பட்டத் தொகையினை மொத்தத்தில் ஊதிய மாகப் பெறும் அலுவலர்களின் எண்ணிக்கை.

கம்பெனி ரொக்கமாகக் கொடுக்கும் தொகையையும், ரொக்கமாகவோ அல்லது வேறுவகையிலோ கம்பெனி வழங்கும்

தொகையையும், கம்பெனி அளிக்கும் பலவித வசதிகளின் பண மதிப்பையும் சேர்த்து இவ்வூதியத் தொகையைக் கணக்கிட வேண்டும்.

எ காப்பீடு.

ஏ. வரி, மாநகராட்சி வரி முதலியவை (வருமான வரியைத் தவிர்த்து).

ஐ. பலவகைச் செலவினங்கள்.

ஒ. (அ) முதலீடுகளினின்றும் பெற்ற வருமானம். வட்டி மூலம் பெற்ற பிற வருமானம், வருமானத்தின் தன்மையையும் குறிப்பிடவேண்டும். மேற்சொல்லப்பட்ட வருமானங்கள் மொத்தத் தொகை காட்டப்பட்டிருக்குமாயின், அதனின்றும் கழிக்கப்பட்ட வருமான வரித் தொகை.

(ஆ) காப்புத் தொகையில் சரிக்கட்டப்படாத முதலீடுகள் மீதான இலாப-நட்டம்.

(இ) கம்பெனி வழக்கமாக மேற்கொள்ளாத நடவடிக்கைகளில் ஏற்பட்ட இலாப-நட்டங்களையும், இலாப-நட்டக் கணக்கு காட்டவேண்டும் (தொகை பெரியதாக இருக்குமாயின்).

(ஈ) பலவகை வரவினங்கள்.

ஓ. (அ) துணைக் கம்பெனிகளினின்றும் பெற்ற பங்காதாயம்.

(ஆ) துணைக் கம்பெனிகள் நட்டங்கட்காக ஒதுக்கப்பட்டத் தொகை.

ஔ. செலுத்திய அல்லது திட்டமிட்ட பங்காதாயத் தொகையும் காட்டவேண்டும். அவை வருமான வரி கழிக்கப்படுவதற்குட்பட்டதா அல்லவா என்பதையும் தெளிவாக்க வேண்டும்.

கணக்கு எழுதும் முறையில் ஏற்படுத்திய மாற்றத்தின் காரணமாக இலாப-நட்டக் கணக்கில் காட்டப்பட்டுள்ள பல இனங்களில் ஏற்பட்ட மாற்றத்தொகை (அதிகமாயிருக்குமாயின், காட்டவேண்டும்).

**11.** கீழ்க் கண்டவற்றிற்கோ, இயக்குநர்கட்கோ, (மேலாண்மை இயக்குநருக்கும்), மேலாளருக்கோ ஒதுக்கப்பட்ட அல்லது கொடுக்கப்பட்ட தொகையின் விவரங்களை இலாப-

நட்டக் கணக்குக் காட்டவேண்டும்; அல்லது ஒரு குறிப்பின் மூலமாகவாவது இது தரப்படவேண்டும். சட்டத்தின் 198-வது பிரிவின் கீழ் நிதியாண்டில் இயக்குநர்கட்கு (மேலாண்மை இயக்குநர் உள்பட) அல்லது மேலாளர்க்குக் கொடுக்கப்பட்ட அல்லது கொடுக்கவேண்டிய நிர்வாக ஊதியம்.

12. பிற வட்டிகளும், கழிவுத் தொகையும் (உத்தரவாதக் கழிவுத் தொகையையும் காட்டவேண்டும்) பற்றிய விவரங்கள் தரப்பட வேண்டும்.

**13. ஓய்வூதியம் முதலியவை**

அ. ஓய்வூதியம் (Pension Fund)

ஆ. பணிக்கொடை (Gratuity).

இ. தாம் செலுத்தியுள்ள தொகை, அதன் மீதான வட்டி இதற்கும் மேலாகக் காப்பு நிதியிலிருந்து செலுத்தப்பட்ட தொகை

ஈ. பதவி இழப்பதற்கான நட்ட ஈட்டுத் தொகை.

உ. பதவியினின்றும் ஓய்வு பெற்றதற்காக வழங்கிய மறு பயன்.

14. அ. சட்டத்தின் 349-வது பிரிவின்படி நிகர இலாபத்தைக் கணக்கிடுவதையும் இயக்குநர்கட்கு (மேலாண்மை இயக்குநர் உள்பட) அல்லது மேலாளருக்கு அத்தகைய இலாபத்தில் குறிப்பிட்ட சதவீதத்தில் தரவேண்டியுள்ள கழிவுத்தொகை கணக்கிடுவதையும் உணர்த்தும் ஒரு அறிக்கையும் இலாப-நட்டக் கணக்கில் இருக்கவேண்டும் அல்லது இதனை ஒரு குறிப்பின் மூலமாகவும் காட்டலாம். கழிவுத் தொகை கணக்கிடுவதற்கு வேண்டிய விவரங்கள் அனைத்தையும் இதில் கொடுக்கவேண்டும்.

ஆ. தணிக்கையாளருக்கு அல்லது வேறு வகையில் பணி புரிவதற்காகத் தணிக்கையாளருக்குக் கட்டணமாகவோ அல்லது செலவுகட்காகவோ செலுத்திய தொகையையும் இலாப-நட்டக் கணக்கு உள்ளடக்கி இருக்கவேண்டும்; அல்லது இது பற்றிய விவரமான தகவலை ஒரு குறிப்பு மூலமாகவாவது இலாப-நட்டக் கணக்கு உணர்த்தவேண்டும்.

தொழில் உற்பத்தியில் ஈடுபட்டிருக்கும் நிறுவனங்களாயின், இலாப-நட்டக் கணக்காவது ஒவ்வொருவகைப் பொருள் பற்றிய கீழ்க்கண்ட தகவல்களையும் உள்ளடக்கி இருக்கவேண்டும்; அல்லது தனிக் குறிப்பு மூலமாகவாவது உணர்த்தவேண்டும்.

அ. உரிமம் வழங்கப்பட்டதிறன் (Licensed capacity);

ஆ. நிறுவப்பட்ட திறன். (Installed capacity);

இ. செய்த உற்பத்தி (Actual production);

ஈ. வாங்கிய கச்சாப் பொருள்;

உ. உற்பத்தி செய்த பொருள்களின் தொடக்க, இறுதிச் சரக்கிருப்பு.

சொத்துகளின் மதிப்பு இழப்பிற்காகவோ புதுப்பித்தலுக்காகவோ அல்லது தேய்மானத்திற்காகவோ ஒதுக்கப்பட்டத் தொகையைத் தவிர வேறு வகைகட்குக் கம்பெனி ஒதுக்கிய தொகையினைக் காட்டவேண்டியதில்லை என்று மைய அரசு அறிவுறுத்தலாம். பொதுநலனை முன்னிட்டு இத் தகவலை வெளிக் காட்டக்கூடாது என்றும் கம்பெனியை அது பாதிக்குமென்றும் மைய அரசு கருதின், இவ்வாறு அது கட்டளையிடலாம்.

இலாப-நட்டக் கணக்கில் காணப்படும் எல்லா இனங்கட்கும் உரிய சென்ற ஆண்டுத் தொகைகளையும் இலாப-நட்டக் கணக்கில் கொடுக்கவேண்டும்.

## பகுதி III

**குறிப்புகள் :**

சொத்துகள் மீதான தேய்மானத்திற்காக அல்லது புதுப்பித்தலுக்காக நீக்கப்பட்ட அல்லது ஒதுக்கப்பட்ட தொகையினையும், துல்லியமாகக் கணக்கிட முடியாத தெரிந்த ஒரு பொறுப்புக்காக ஒதுக்கப்பட்டுள்ள தொகையினையும் 'ஒதுக்கு' (Provision) என்னும் சொல் உணர்த்தும். தேய்மானத்திற்காகவோ, புதுப்பித்தலுக்காகவோ அல்லது சொத்தின் மதிப்பு குறைவதற்காகவோ நீக்கப்படும் அல்லது ஒதுக்கி வைக்கப்படும் தொகையையோ அல்லது தெரிந்த பொறுப்புக்காக ஒதுக்கப்படும் தொகையையோ 'காப்பு' (Reserve) என்னும் சொல் உணர்த்தாது.

1. இலாப-நட்டக் கணக்குமூலமாகப் பங்குநர்கட்கு வழங்கக் கூடிய எத் தொகையையும் 'முதற்காப்பு' (Capital Reserve) என்னும் சொல் குறிக்காது. வருவாய்க் காப்பு (Revenue Reserve) என்னும் சொல் 'முதல் காப்பு' அல்லாத பிற காப்புகளைக் குறிக்கும்.

'பொறுப்பு' (Liability) என்னும் சொல், ஏற்றசெலவுக்கான பொறுப்பையும், வழக்கில் உள்ள பொறுப்பையும் நிகழ்வடையாப் பொறுப்பையும் (Contingent liability) உள்ளடக்கும்.

2. தேய்மானத்திற்காக அல்லது புதுப்பித்தலுக்காக அல்லது சொத்துகளின் மதிப்பீட்டிற்காக நீக்கப்பட்ட தொகை அல்லது ஒதுக்கி வைக்கப்பட்டுள்ள தொகை அல்லது தெரிந்த பொறுப்புக்காக ஒதுக்கிவைக்கப்பட்டுள்ள தொகை, தேவைக்கும் அதிகமாக இருக்கிறது என்று இயக்குநர்கள் கருதுவராயின், அவ்வாறு கூடுதலாக ஒதுக்கப்பட்டுள்ள தொகையைக் காப்பாகக் கருதவேண்டுமே தவிர, ஒதுக்காகக் கருதக்கூடாது.

## இருப்பு நிலைக் குறிப்பு (Balance Sheet)

இலாபத்திற்கும், நட்டத்திற்கும் உரிய கணக்குகளை இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் சென்ற பின், மீதியுள்ள பேரேட்டுக் கணக்குகளின் இருப்புகளை வகைப்படுத்தி எழுதப்படும் அறிக்கைக்கு இருப்புநிலைக் குறிப்பு என்று பெயர் என்பதை நாம் அறிவோம். பிற கணக்கிருப்புகளுடன் இலாப-நட்டக் கணக்கு காட்டும் இருப்பும் இதில் இடம்பெறும். சொத்துகளையும், சில பற்றிருப்புக் காட்டும் கணக்குகளையும் இவ்வறிக்கையின் வலப் பகுதியில் 'சொத்துகள்' எனும் தலைப்பின்கீழ்க் காட்டுகிறோம். அவ்வாறே பொறுப்புகளையும், வரவிருப்புக் காட்டும் சில கணக்குகளையும் இடப்பகுதியில் 'பொறுப்புகள்' எனும் தலைப்பின்கீழ்க் காட்டுகிறோம்.

தொழிலில் மொத்தம் முதலீடு செய்த முதலானது எவ்வாறு ஒவ்வோராண்டும் கூடுகிறது அல்லது குறைகிறது என்பதை இருப்புநிலைக் குறிப்பு படம்பிடித்துக் காட்டுகிறது. இடப்புறத்தில் முதல் எவ்வளவு, எங்கிருந்து பெறப்பட்டது என்ற விவரமும், வலப்புறத்தில் அது எவ்வாறு பல்வகைச் சொத்துகளாக உருமாறியிருக்கிறதென்ற விவரத்தையும் இது காட்டுகிறது. குறிப்பிட்ட அந்நாளில் கம்பெனியின் நிதி நிலையை உணர்த்தும் அறிக்கையே இருப்புநிலைக் குறிப்பாகும். சுருக்கமாகச் சொல்லப்போனால், இலாப-நட்டக் கணக்கு, கம்பெனி எவ்வழியில், எவ்வாறு, எங்குச் செல்கிறது என்பதை உணர்த்துகிறது என்று கொண்டால், இருப்புநிலைக் குறிப்புக் குறிப்பிட்ட ஒரு நாளில் கம்பெனி எங்கே நிற்கிறது என்பதை வெளிப்படுத்துகிறது என்று கொள்ளலாம்.

கம்பெனியின் பணம் ஆக்கும் நிலை அல்லது நடைமுறை மூலதனம் எவ்வாறிருக்கிறது என்பதை வெளிப்படுத்துவது இருப்பு நிலைக் குறிப்பின் முக்கியமான பயனாகும். நடப்புப் பொறுப்புகளை விடக் கூடுதலாக இருக்கும் நடப்புச் சொத்துகளின் தொகையை ஒரு தொழிலின் நடைமுறை முதல் என்கிறோம். ஒரு நிறுவனத்

தில் நடப்புப் பொறுப்புகளைவிட நடப்புச் சொத்துகள் அதிகமாக இருக்கிறது என்றால், அது தனது கடன்களை மீட்கக்கூடிய நிலையில் இருக்கிறதென்று பொருளாகும்.

ஒரு கூட்டுப் பங்குக் கம்பெனி தயாரிக்கும் இருப்புநிலைக் குறிப்புக்கும், தனியாள் வணிகர், கூட்டு நிறுவனம் போன்ற அமைப்புகள் தயாரிக்கும் இருப்புநிலைக் குறிப்புக்கும் சில அடிப்படை வேறுபாடுகள் உள.

(1) தனியாள் வாணிகத்தின் முதல் கணக்கு ஒருவருக்கே உரியதாகும்; கூட்டு நிறுவனத்தில் கூட்டாளிகள் ஒப்பியவண்ணம் முதல் தொகைகளைச் செலுத்தியிருக்கின்றனர். ஆனால், கூட்டுப் பங்குக் கம்பெனியிலோ, பங்குநர்கள் பலர் இருக்கின்றனர். ஒரு நிறுவனம் ஈட்டும் இலாபம் தனியாள் வாணிகத்திலும் கூட்டு நிறுவனத்திலும் முதல் கணக்கிற்கு எடுத்துச் செல்லப்படுகிறது. நிகர இலாபம் முதல் கணக்கில் கூட்டப்படுகிறது. நிகர நட்டமாயின், முதல் கணக்கிலிருந்து கழிக்கப்படுகிறது. ஆனால், ஒரு கூட்டுப் பங்குக் கம்பெனியிலோ பங்கு முதலுடன் தொழிலில் ஏற்பட்ட இலாபமும், நட்டமும் இவ்வாறு சரிக்கட்டப்படுவதில்லை. அனைத்திற்கும் ஒதுக்கியது போக எஞ்சியுள்ள இலாபத்தைக் 'காப்பும், மிகுதியும்' (Reserves and Surplus) எனும் தலைப்பின்கீழ் 'இலாப-நட்டக் கணக்கு' எனத் தனியாகக் காட்டப்படுகிறது. நட்டமாயிருப்பின், எதற்காகவும் என்று ஒதுக்கப் பெறாத காப்புக் கணக்கிலிருந்து கழித்துக் காட்டப்பெறும். நடைமுறைக் காப்பு ஏதுமில்லையெனில், இலாப-நட்டக் கணக்கைப் பொறுப்புப் பகுதியில் இவ்வாறு கழித்துக் காட்டுவதற்கு மாறாக, சொத்துகள் பகுதியில் 'பல்வகைச் செலவினம்' (Miscellaneous Expenditure) எனும் தலைப்பின் கீழ்க் காட்டப்படுகிறது.

தனியாள் வாணிக, கூட்டு நிறுவன அமைப்புகளில் இலாப-நட்டக் கணக்கின் தலைப்பு, 'வாணிக, இலாப-நட்டக் கணக்கு' என்று எழுதப்படுகிறது. ஆனால், கம்பெனியில் பொதுவாக 'இலாப-நட்டக் கணக்கு' என்றே எழுதப்படுகிறது. கம்பெனிச் சட்டம் இருப்புநிலைக் குறிப்பு தயாரிக்கும் முறையைச் செவ்விதே விளக்கியிருக்கிறது. அத்துடன் பல்வகைச் சொத்துகளையும், பொறுப்புகளையும் முறைப்படி எழுதவேண்டி குறிப்பிட்ட ஒரு படிவத்தையும் வகுத்துள்ளது. இது சரியாகத் தயாரிக்கப்படுவதற்கும், வேண்டிய விவரங்களை உரிய முறையில் இருப்புநிலைக் குறிப்பு உணர்த்தும் பொருட்டும் ஒவ்வொரு தலைப்பின் கீழும் பல்வகைச் செயல்முறை விதிகளை விவரமாகக் கம்பெனிச் சட்டம் கொடுத்துள்ளது. அதனை இப்பொழுது காண்போம்.

## பிரிவு – 6.
## பகுதி – 1.
(211-ஆவது பிரிவின்படி)

**இருப்புநிலைக் குறிப்பின் படிவம்:**

.................நாளுக்குரிய (எந்நாளுக்கு இவ்விருப்புநிலைக் குறிப்பு தயாரிக்கப்படுகிறதோ, அந்நாளை இங்குக் குறிப்பிடுக)...................................கம்பெனியின் (இங்குக் கம்பெனியின் பெயரைக் குறிப்பிடுக)

**இருப்புநிலைக் குறிப்பு**

| சென்ற ஆண்டுக் குரிய தொகை | பொறுப்புகள் | நடப்பு ஆண்டுக் குரிய தொகை | சென்ற ஆண்டுக் குரிய தொகை | சொத்துகள் | நடப்பு ஆண்டுக் குரிய தொகை |
|---|---|---|---|---|---|
| ரூ. | **பங்கு முதல்:**<br>அதிகாரம் பெற்றது<br>ரூ. . . . . வீதம் . . . . பங்குகள் வெளியிடப்பட்டது. (பலவகை முதலையும், ஒவ்வொரு வகையிலும் கீழ்க் கண்ட விவரங்களையும் குறிப்பிட வேண்டும்.)<br>ரூ. . . . . . . வீதம் . . . . பங்குகள். | ரூ. | ரூ. | **நிலைச் சொத்துகள்:**<br>(அ) வாணிக நற்பெயர்<br>(ஆ) நிலம்<br>(இ) கட்டடம்<br>(ஈ) குத்தகை<br>(உ) ரயில்வே பகுதிகள் | ரூ. |

**எடுத்துக் கொண்டது:**

(பலவகை முதலையும் ஒவ்வொரு வகையிலும் கீழ்க்கண்ட விவரங்களைக் குறிப்பிட வேண்டும்).

ரூ. . . . வீதம் . . . . பங்குகள்.

பங்கொன்றுக்கு ரூ. . . . . . . வரை அழைக்கப்பட்டது.

மேற்கண்ட பங்குகளில் ஒப்பந்தத்தின் தொடர்பாக ரொக்கம் பெறுமல் முழுத்தொகையும் செலுத்தப்பெற்றதாக . . . . பங்குகள் ஒதுக்கப்பட்டிருக்கின்றன.

மேற்கண்ட பங்குகளில் மேலூதியப் பங்குகள் வெளியிட்டதின் ஆதாரத்தைக் குறிப்பிடவும் (இலாபத்தை முதலாக்குதல், காப்புத் தொகை அல்லது பங்கு முனைமத் தொகைக் கணக்கு.)

(ஊ) தளவாடங்களும், பொறி வகையும்

(எ) மனைத்துணைப் பொருள்

(ஏ) சொத்தினை மேம்படுத்துதல் (Development of Property)

(ஐ) புனைபொருள் உரிமை வாணிகக் குறி (Trade Marks)

(ஒ) கால்நடை (Livestock)

(ஓ) வாகனங்கள் (Vehicles)

(ஒவ்வொரு தலைப்பிலும் அடக்கவிலை, நடப்பு ஆண்டில் சேர்த்தது, நீக்கியது, நடப்பு ஆண்டு முடிவு வரை நீக்கப்பட்ட அல்லது ஒதுக்கப்பட்ட தேய்மானம் முதலியவை குறிப்பிடப்படவேண்டும். ஒதுக்கப்பட்ட அல்லது நீக்கப்பட்ட தேய்மானத்தைப் பல்வகைச் சொத்துகளின் மேல் எழுதிக் கழிக்கவேண்டும்.)

## இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)

| சென்ற ஆண்டுக்குரிய தொகை | பொறுப்புகள் | நடப்பு ஆண்டுக்குரிய தொகை | சென்ற ஆண்டுக்குரிய தொகை | சொத்துகள் | நடப்பு ஆண்டுக்குரிய தொகை |
|---|---|---|---|---|---|
| ரூ. | கழி :<br>செலுத்தப்பெறாத பங்கழைப்பு :<br>(1) மேலாண்மை — முகவரால் அல்லது செயலர் — கருவூலரால், மேலாண்மை—முகவர், செயலர்—கருவூலர் ஒரு கூட்டு நிறுவனமாயின், அதன் கூட்டாளிகளால், மேலாண்மை—முகவரோ செயலர்—கருவூலரோ ஒரு தனிக் கம்பெனியாயின், அக் கம்பெனியின் இயக்குநரால் அல்லது உறுப்பினரால்.<br>(2) இயக்குநர்களால்.<br>(3) பிறரால் செலுத்தப்பெறாப் பங்கழைப்புத் தொகை. | ரூ. | ரூ. | ஒவ்வொன்றிலும் அடக்கவிலையைக் கண்டுபிடிக்க முடியவில்லையெனில் ஏட்டிலுள்ள மதிப்பினைக் கொடுத்தால் போதும். இப் பத்தியைப் பொருத்தவரை இச் சட்டம் அமுலுக்கு வந்த நாளில், முன்னர் நீக்கப்பட்ட அல்லது ஒதுக்கப்பட்ட தேய்மானத்தை அல்லது மதிப்பிழப்பைக் கழித்த பின் கம்பெனியின் ஏடுகளிலிருந்த சொத்தின் நிகர மதிப்பாகும். அத்தகைய சொத்து விற்கப்படுமாயின், அதன் விற்பனைத் தொகையைச் இச் சொத்திலிருந்து கழித்துக்காட்டவேண்டும். | ரூ. |

கூட்டு :

பறிமுதல் செய்யப்பட்ட பங்குகள் (தொடக்கத்தில் செலுத்தப்பட்டத் தொகை)

குறிப்பு :

(1) மீள்தகு முன்னுரிமை முதலாயின், அதனை மீட்கக்கூடிய அல்லது மாற்றக்கூடிய நிபந்தனைகளும் அதனை மீட்கும் அல்லது மாற்றும் நாளையும் குறிப்பிடவேண்டும்.

(2) வெளியிடப்படாத முதல் மீது விருப்புரிமையிருப்பின், அவற்றின் விவரம் கொடுக்கப்படவேண்டும்.

(3) முன்னுரிமைப் பங்குகளின் பலவகைப் பற்றிய விவரங்களைக் கொடுக்க வேண்டும்.

இவ் விவரங்கள் பங்கு முதலுடன் கொடுக்கப்படவேண்டும்.

முதல் குறைப்பின் காரணமாகவோ அல்லது சொத்துகளை மறுமதிப்பீடு செய்யப்பட்டதின் காரணமாகவோ தொகை குறைக்கப்பட்டிருப்பின், அத்தகைய முதல் குறைப்பு அல்லது மறு மதிப்பிற்குப் பிறகு ஒவ்வொரு இருப்புநிலைக் குறிப்பும் (முதல் இருப்புநிலைக் குறிப்பிற்குப் பிறகு) அதன் அடக்கவிலைக்குப் பதிலாக குறைக்கப்பட்டத் தொகையையும் குறைக்கப்பட்ட நாளையும் காட்ட வேண்டும்.

குறைக்கப்பட்ட நாளிலிருந்து முதல் ஐந்தாண்டுகள் வரை ஒவ்வொரு இருப்புநிலைக் குறிப்பும் குறைக்கப்பட்ட தொகையையும் காட்ட வேண்டும்.

அவ்வாறே சொத்துகளின் மதிப்பைக் கூட்டியிருப்பின், அவ்வாறு கூட்டப்பட்ட பின்னர் ஒவ்வொரு இருப்புநிலைக் குறிப்பும், சொத்து

## இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)

| சென்ற ஆண்டுக் குரிய தொகை | பொறுப்புகள் | நடப்பு ஆண்டுக் குரிய தொகை | சென்ற ஆண்டுக் குரிய தொகை | சொத்துகள் | நடப்பு ஆண்டுக் குரிய தொகை |
|---|---|---|---|---|---|
| ரூ. | | ரூ. | ரூ. | | ரூ. |
| | துணைக் கம்பெனியாயின், அதன் பிடிப்புக் கம்பெனியும், அதன் இறுதிப் பிடிப்புக் கம்பெனியும், அதன் துணைக் கம்பெனிகளும் வைத்திருக்கும் பங்குகளின் எண்ணிக்கைகளைத் தனித்தனியாகக் கொடுக்கவேண்டும். | | | களின் அடக்கவிலைக்கு மாருக அவ்வாறு அதிகப்படுத்தப்பட்ட தொகையையும் அவ்வாறு அதிகப்படுத்திய நாளுடன் காட்டவேண்டும். சொத்துகளின் மதிப்பைக் கூட்டியபிறகு முதல் ஐந்தாண்டுகள் வரை ஒவ்வொரு இருப்புநிலைக் குறிப்பும் எவ்வளவு தொகை கூட்டப்பட்டது என்பதைக் காட்டவேண்டும். | |
| | நிர்வாகம் சான்றளிக்கும் அத்தகைய பங்கு வைத்திருக்கும் நிலையினைச் சரியென தணிக்கையாளர் சான்றளிக்கத் தேவையில்லை. | | | | |
| | **காப்பும், மிகுதியும்:** (Reserves and Surplus) | | | **முதலீடுகள்:** | |
| | (1) முதல் காப்புகள் | | | முதலீடுகளின் தன்மையையும், அவை வாங்கிய விலையில் அல்லது சந்தை விலையில் காட்டப்படுகிறதா போன்ற விவரங்களையும் மதிப்பிடும் முறையையும் காட்டவேண்டும். | |
| | (2) முதல் மீட்புக் காப்பு. | | | | |

(3) பங்கு முனைமக் கணக்கு
(78ஆவது பிரிவின்படி அதனைப் பயன்படுத்தியிருப்பின், அது பற்றிய விவரங்களை அவ்வாறு பயன்படுத்திய ஆண்டில் கொடுக்கவேண்டும்.)

(4) பிற காப்புகள்.
ஒவ்வொரு காப்பின் தன்மையையும், தொகையையும், குறிப்பிட வேண்டும்.

கழி :

இலாப-நட்டக் கணக்கில் பற்றிருப்பு ஏதேனும் இருப்பின்.

(இலாப-நட்டக் கணக்கின் பற்றிருப்பானது குறிப்பிட்ட எதற்காகவுமில்லாத காப்புகளினின்றும் கழித்துக் காட்டவேண்டும்).

கீழ்க்கண்டவை தனித்தனியாகக் காட்டப்படவேண்டும்.

(1) அரசினர் கடன் பத்திரங்களில் அல்லது பொறுப்புரிமைக் கடனீட்டுப் பத்திரங்களில் முதலீடு செய்தது.

(2) பங்குகளில் அல்லது கடனீட்டுப் பத்திரங்களில் அல்லது பிணை முறிகளில் (Bonds) முதலீடு செய்தது.

(முழுதும் செலுத்தப்பட்ட பங்குகளையும், பகுதி செலுத்தப்பட்ட பங்குகளையும், பலவகைப் பங்குகளையும் தனித்தனியாகக் காட்ட வேண்டும். தனது துணைக் கம்பெனியின் பங்குகளில் கடனீட்டுப் பத்திரங்களில் அல்லது பிணைமுறிகளில் முதலீடு செய்திருப்பின் மேற்கூறிய விவரங்களைத் தனித்தனியே கொடுக்கவேண்டும்.)

## இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)

| சென்ற ஆண்டுக் குரிய தொகை | பொறுப்புகள் | நடப்பு ஆண்டுக் குரிய தொகை | சென்ற ஆண்டுக் குரிய தொகை | சொத்துகள் | நடப்பு ஆண்டுக் குரிய தொகை |
|---|---|---|---|---|---|
| ரூ. | | ரூ. | ரூ. | | ரூ. |
| | (5) மிகுதி (Surplus)<br>அதாவது, கீழ்க்கண்டவற்றிற்கு ஒதுக்கியது போக இலாப-நட்டக்கணக்கு காட்டும்இருப்பு: பங்காதாயம், மேலூதியம் அல்லது காப்புக்கள். | | | (பங்கு மாற்றுச் சந்தையில் விலை குறிப்பிடப்படும் கம்பெனியின் முதலீடுகளின் மொத்தத் தொகையையும், அவற்றின் சந்தை விலையையும் தனித்தனியாகக் காட்ட வேண்டும். | |
| | (6) காப்புகளுடன் கூட்டுவதற்குத் தீர்மானிக்கப்பட்டுள்ள தொகை (Proposed Additions to Reserves). | | | அவ்வாறு பங்கு மாற்றுச் சந்தையில் விலை குறிக்கப்பட்டது கம்பெனியின் முதலீடுகளின் மொத்தந் தொகையையும் காட்டவேண்டும்). | |
| | (7) கழிவு நிதிகள் (Sinking Funds)<br>(ஒவ்வொரு குறிப்பிட்ட தலைப்பின் கீழும் சென்ற இருப்புநிலைக் குறிப்பிலிருந்து, கூட்டிய தொகை | | | (3) நிலையியல் சொத்துகள் (Immovable Properties). | |

யையும், கழித்துள்ள தொகையையும் காட்டவேண்டும். ஒரு காப்பின் தொகையை அதற்காகக் குறிப்பிட்டு, முதலீடு செய்திருந்தால் மட்டுமே அக் காப்புடன் ‘நிதி’ எனும் சொல்லையும் பயன்படுத்தலாம்.

**பிணைக் கடன் :**
(Secured Loans)

(1) கடனீட்டுப் பத்திரங்கள்.

(2) வங்கிகளிடமிருந்து பெற்ற கடன்கள்.

(3) துணைக் கம்பெனிகளிடமிருந்து பெற்ற கடன்கள்

(4) பிற கடன்கள்.

(இயக்குநரிடமிருந்து அல்லது மேலாளரிடமிருந்து பெற்ற கடன்களைத் தனித்தனியாகக் காட்ட வேண்டும்.)

**நடப்புச் சொத்துகளும், கடன்களும், முன் பணமும்:**
(Current Assets, Loans and Advances)

அ. நடப்புச் சொத்துகள்

(1) முதலீடுகள் மீது கூடியுள்ள வட்டி

(2) பண்டங்களும், உதிரியுறுப்புகளும்
(Stores and Spare parts)

(3) விடு கருவிகள்

(4) சரக்கிருப்பு

(5) வேலை முற்றுப் பொருள்
(Work in progress)

(இரண்டாவதையும், நான்காவதையும் பொருத்தவரை சரக்கை மதிப்பிடும் முறையினையும் கச்சாப்

## இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)

| சென்ற ஆண்டுக்குரிய தொகை | பொறுப்புகள் | நடப்பு ஆண்டுக்குரிய தொகை | சென்ற ஆண்டுக்குரிய தொகை | சொத்துகள் | நடப்பு ஆண்டுக்குரிய தொகை |
|---|---|---|---|---|---|
| ரூ. | | ரூ. | ரூ. | | ரூ. |
| | பிணைக் கடன்கள் மீது கூடியுள்ள இன்னும் கொடுக்கவேண்டிய வட்டித் தொகையை 'பிணைக் கடன்கள்' எனும் தலைப்பின்கீழுள்ள அதற்குரிய துணைத் தலைப்பின் கீழ்க் காட்ட வேண்டும்.<br><br>ஒவ்வொரு வகையிலும் ஈட்டின் தன்மையைக் குறிப்பிடவேண்டும்.<br><br>மேலாளரோ, இயக்குநர்களோ, மேலாளர்களும், இயக்குநர்களும், கடன்களுக்கு ஒப்புறுதி அளித்திருப்பின், அது பற்றிய குறிப்பையும் தர வேண்டும்.<br><br>கடனீட்டுப் பத்திரங்களைப் பொருத்தவரை மீட்பு பற்றிய அல்லது மாற்றுதல் பற்றிய நிபந்தனை | | | பொருளையும், சரக்கிருப்பையும் முடிந்தவரை தனித்தனியாகக் காட்டவேண்டும். விலை முற்றுப் பொருள் மதிப்பிடும் முறையையும் குறிப்பிடவேண்டும்.)<br><br>(6) கடனாளிகள் :<br>(அ) ஆறு திங்களுக்கு மேலாக நிலுவையிலுள்ள கடன்கள்.<br>(ஆ) பிற கடன்கள்.<br><br>கழி :<br>ஒதுக்கு (காப்பு)<br><br>(கடனாளிகள் எனும் தலைப்பில் கொடுக்கப்படும் தொகை சரக்கு விற்றதின் காரணமாக அல்லது பணி | |

களையும், அண்மையில் வரக்கூடிய மீட்பு நாளையும் அல்லது மாற்றுதல் நாளையும் குறிப்பிட வேண்டும்.

**பிணையில்லாக் கடன்:**
(Unsecured Loans)

(1) தவணைக் கால வைப்பு.

(2) துணைக் கம்பெனியிடமிருந்து பெற்ற தொகை.

(3) குறுகிய காலக் கடன்கள்.

அ. வங்கியிடமிருந்து.

ஆ. பிறரிடமிருந்து.

(இயக்குநரிடமிருந்தும், மேலாளரிடமிருந்தும் பெற்ற கடன்களைத் தனித்தனியாகக் காட்டவேண்டும். பிணையில்லாக் கடன் மீது கூடியுள்ள ஆனல், இன்னும் செலுத்தவேண்டிய வட்டித் தொகையைப் 'பிணையமற்ற கடன்கள்' என்னும் தலைப்பில் உரிய துணைத் தலைப்பின்கீழ்க் காட்ட வேண்டும்.

ஆற்றியதின் காரணமாக அல்லது பிற ஒப்பந்தங்களின் தொடர்பாக பெறவேண்டிய தொகைகளை உள்ளடக்கலாம். ஆனல், கடனுக அல்லது முன்பணமாக கொடுத்த தொகையை உள்ளடக்காது.

கடனளிகளைப் பொருத்தவரை, கீழ்க்கண்ட விவரங்கள் தனித் தனியாகக் கொடுக்கப்படவேண்டும்.

(அ) முழு பிணையமுடைய, உறுதியாகத் திரும்பி வரக்கூடியது எனக் கருதப்படும் கடன்கள்.

(ஆ) கடனளியின் உறுதிமொழி பத்திரத்தையன்றிப் பிற வேறு பிணையமற்ற ஆனல் உறுதியாகத் திரும்பிவரக்கூடியதென கருதப்படும் கடன்கள்.

(இ) ஐயத்திற்குரியது அல்லது வராது எனக் கருதப்படும் கடன்கள்.

## இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)

| சென்ற ஆண்டுக்குரிய தொகை | பொறுப்புகள் | நடப்பு ஆண்டுக்குரிய தொகை | சென்ற ஆண்டுக்குரிய தொகை | சொத்துகள் | நடப்பு ஆண்டுக்குரிய தொகை |
|---|---|---|---|---|---|
| ரூ. | | ரூ. | ரூ. | | ரூ. |
| | மேலாளராவது, இயக்குநர்களாவது கடன்கட்கு ஒப்புறுதி அளித்து இருப்பின், அதுபற்றிய குறிப்பினைத் தரவேண்டும்.<br><br>(இது தவணைக் கால வைப்பிற்குப் பொருந்தாது.)<br><br>**நடப்புப் பொறுப்புகளும், ஒதுக்குகளும்:**<br>(Current Iiabilities and provisions)<br>அ. நடப்புப் பொறுப்புகள் :<br>(1) ஏற்புகள் (Acceptances)<br>(2) கடனீந்தோர்<br>(3) துணைக் கம்பெனிகள் | | | இயக்குநர்களிடமிருந்து அல்லது கம்பெனியின் பிற அலுவலர்களிடமிருந்து அல்லது மேற்சொன்ன எவரிடமிருந்தாவது பிறருடன் கூட்டாகவோ தனித்தனியாகவோ சேர்ந்துவரவேண்டிய கடன்கள் அல்லது இயக்குநர் கூட்டாளியாகவுள்ள கூட்டு நிறுவனத்திடமிருந்தோ, இயக்குநராகவுள்ள வேறு தனிக் கம்பெனிகளிடமிருந்தோ பெறவேண்டிய கடன்கள்.<br><br>சட்டத்தின் 370 (பி) துணைப் பிரிவின்கீழ் ஒரே நிர்வாகத்திலுள்ள பிற கம்பெனிகளிடமிருந்து பெறவேண்டிய கடன்கள். அக் கம்பெனிகளின் பெயர்களையும் குறிப்பிடவேண்டும். | |

(4) முன்கூட்டிச் செலுத்தியவையும் இன்னும் கொடுக்க வேண்டிய மதிப்பளவிற்குள்ள காலாவதியாகாத தள்ளுபடித் தொகையும்.

எடுத்துக்காட்டு :

கீழ்க்கண்ட கம்பெனிகளில் :

செய்தித்தாள், தீக்காப்பீடு, திரையரங்குகள், மன்றங்கள், கப்பற் கம்பெனிகள் முதலியவை.

(5) உரிமை கோராப் பங்காதாயம் (Unclaimed dividend)

(6) பிற பொறுப்புகள் (ஏதேனும் இருப்பின்).

(7) கடன்கள் மீது கூடியுள்ள ஆனால், இன்னும் செலுத்த வேண்டிய இறுதி வட்டி..

கம்பெனியின் இயக்குநர் அல்லது பிற அலுவலர் நடப்பாண்டில் எப்பொழுதாவது மிக உயர்ந்தளவில் செலுத்த வேண்டியிருந்த கடன் தொகையை ஒரு குறிப்பின் மூலமாக உணர்த்த வேண்டும்.

இத் தலைப்பின் கீழ்க் காட்ட வேண்டிய ஒதுக்கு ஐயத்திற்குரியது என கருதப்படும் கடன் தொகைக்கும் அதிகமாக இருக்கக் கூடாது. முன்னரே ஒதுக்கியுள்ள தொகை மிகுதியாக இருப்பின், பொறுப்புகள் பகுதியில் 'காப்பும், மிகுதியும்' என்னும் தலைப்பின்கீழ் 'ஐயக்கடன் காப்பு' அல்லது வராக்கடன் காப்பு என்னும் தலைப்பின்கீழ்க் காட்ட வேண்டும்.)

(7) (அ) கையிலுள்ள ரொக்கயிருப்பு

(ஆ) வங்கியிருப்புகள்

## இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)

| சென்ற ஆண்டுக்குரிய தொகை | பொறுப்புகள் | நடப்பு ஆண்டுக்குரிய தொகை | சென்ற ஆண்டுக்குரிய தொகை | சொத்துகள் | நடப்பு ஆண்டுக்குரிய தொகை |
|---|---|---|---|---|---|
| ரூ. | | ரூ. | ரூ. | | ரூ. |
| | ஆ. ஒதுக்குகள் (Provisions) | | | அ. அட்டவணையிடு வங்கிகளில் (Scheduled Banks) | |
| | (8) வரி ஒதுக்கு. | | | ஆ. பிறவற்றில் | |
| | (9) திட்டமிடப்பட்டுள்ள பங்காதாயம் (Proposed dividend) | | | (வங்கி இருப்புகளைப் பொருத்த வரை கீழ்க்கண்ட விவரங்களைத் தனித் தனியாகத் தரவேண்டும். | |
| | (10) நிகழ்வடைப் பொறுப்புக்காக (For Contingencies). | | | (அ) அட்டவணையிடு வங்கிகளில் நடப்பாண்டில் அழைப்புக் கணக்குகளில் (Call Accounts), தவணைக் கணக்குகளிலுள்ள இருப்புகள். | |
| | (11) நலக் காப்பு நிதிக்காக. | | | | |
| | (12) காப்பீடு, ஓய்வூதியம் இது போன்ற பிற அலுவலக நலத் திட்டங்களுக்காக. | | | (ஆ) அட்டவணையிடு வங்கிகளிலல்லாமல் பிற வங்கிகளின் பெயர்களும், ஒவ்வொரு வங்கியிலும் நடப்புக் கணக்கில், அழைப்புக் கணக்கில் | |
| | (13) பிற ஒதுக்குகள். | | | | |

இருப்புநிலைக் குறிப்பின் அடிக் குறிப்பாகக் கீழ்க்கண்டவற்றைத் தனித்தனியாகக் காட்ட வேண்டும்.

(1) கம்பெனிக்கு எதிராகவுள்ள, ஆனல் கம்பெனி ஏற்றுக் கொள்ளாத உரிமைகள் (claims against the company not acknowledged as debts)

(2) பகுதி செலுத்தப் பெற்ற பங்குகள் மீது அழையாப்பொறுப்பு. (uncalled liability)

(3) குவியும் முன்னுரிமைப் பங்குகள் மீதான குறிப்பிட்ட பங்காதாய நிலுவை.

(எவ்வளவு காலத்திற்குப் பங்காதாயம் நிலுவையிலுள்ளது அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட வகையான பங்குகள் இருப்பின், ஒவ்வொரு வகைப் பங்குகள் மீதும் நிலுவையிலுள்ள பங்காதாயம் பற்றிய விவரங்களைக் கொடுக்கவேண்டும்.

தவணைக் கணக்கிலுள்ள இருப்புகளும், நடப்பாண்டில் எந் நேரத்திலாவது ஒவ்வொரு வங்கியிலும் மிகவும் அதிகமாகயிருந்த தொகையும்.

(இ) அட்டவணையிடு வங்கிகளில்லாமல் பிற வங்கிகளில் எந்த இயக்குநராவது அல்லது அவரின் உறவினராவது ஈடுபட்டிருப்பாராயின், அவ்வீடுபாட்டின் தன்மை).

ஆ. கடன்களும்

(8) துணை கம்பெனிகளுக்குக் கொடுத்த கடன்களும்.

(9) மாற்றுச் சீட்டுகள்.

(10) ரொக்கம் மூலமாகவோ அல்லது வேறுவகையிலோ திரும்பிப்பெறக்கூடிய முன்பணம். அல்லது இன்னும் பெறவேண்டிய மதிப்பு.

## இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)

| சென்ற ஆண்டுக்குரிய தொகை | பொறுப்புகள் | நடப்பு ஆண்டுக்குரிய தொகை | சென்ற ஆண்டுக்குரிய தொகை | சொத்துகள் | நடப்பு ஆண்டுக்குரிய தொகை |
|---|---|---|---|---|---|
| ரூ. | வருமான வரி கழிக்கப்பட்டதிற்கு முன்னுள்ள இத் தொகையினைக் காட்டவேண்டும். வரி நீங்கிய பங்காதாயமாயின், வருமானவரி நீக்கப் பெற்ற பின்னுள்ள தொகையையும், அது அவ்வாறு காட்டப்பட்டுள்ளதென்பதையும் குறிப்பிட வேண்டும்.)<br><br>(4) முதல் கணக்கின் மீது இன்னும் நிறைவேற்றப்படாதிருக்கும் ஆனல், அதற்கு ஒதுக்கப்பெறாத ஒப்பந்தங்களின் மதிப்பீட்டுத்தொகை<br><br>(5) கம்பெனி நிகழ்வடைப் பொறுப்பு, ஏற்கக்கூடிய பிற பணம். | ரூ. | ரூ, | எடுத்துக்காட்டு :<br><br>(கட்டணங்கள், வரிகள், காப்பீடு முதலியவை.)<br><br>(11) சுங்க அலுவலகத்தில் அல்லது துறைமுகத்தில் வைத்துள்ள இருப்புகள் (கேட்கும்போது செலுத்தக் கூடியதாக இருப்பின்)<br><br>(கடனளிகள் கீழ்க் கொடுக்கப் பட்ட செயல்முறை விதிகள் 'கடன் களும், முன்பணமும்' எனும் தலைப்புக்கும் பொருந்தும். சட்டத்தின் 370 வது பிரிவு அல்லது துணைப் பிரிவு 1'பி'-யில் காட்டியுள்ளவாறு ஒரே | ரூ. |

| | | | |
|---|---|---|---|
| (இயக்குநர்கட்காக அல்லது கம்பெனியின் பிற அலுவலர்கட்காகக் கம்பெனி கொடுத்திருக்கும் ஒப்புறுதித் தொகையையும் குறிப்பிடவேண்டும். முடியுமாயின், ஒவ்வொரு நிகழ்வடைப் பொறுப்பின் பொதுத் தன்மையையும், தொகையையும் முக்கியமானதாக இருப்பின் குறிப்பிடவேண்டும்.) | | மேலாண்மையின் கீழுள்ள பிற கம்பெனிகளிடமிருந்து பெறவேண்டிய தொகைகளையும், அத்தகைய கம்பெனிகளின் பெயர்களையும் கொடுக்க வேண்டும். நடப்பாண்டில் இவற்றில் ஒவ்வொரு கம்பெனியும் எப்பொழுதாவது அதிகமாகக் கொடுக்க வேண்டிய தொகையையும் காட்ட வேண்டும்.)<br><br>**பல்வகைச் செலவினம்:**<br>(Miscellaneous Expenditure)<br><br>நீக்கப்பெறாத அல்லது சரிக்கட்டப் பெறாத அளவிற்கு :<br><br>(1) தொடக்கச் செலவுகள்<br><br>(2) பங்குகள் மீதான அல்லது கடனீட்டுப் பத்திரங்கள் மீதான செலவுகளும், பங்குகளையும் கடனீட்டுப் பத்திரங் | |

## இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)

| சென்ற ஆண்டுக்குரிய தொகை | பொறுப்புகள் | நடப்பு ஆண்டுக்குரிய தொகை | சென்ற ஆண்டுக்குரிய தொகை | சொத்துகள் | நடப்பு ஆண்டுக்குரிய தொகை |
|---|---|---|---|---|---|
| ரூ. | | ரூ. | ரூ. | | ரூ. |
| | | | | களையும் ஒப்புறுதி செய்வதற்கான ஒப்புறுதிக் கழிவும், இவற்றை வாங்குவதற்காகக் கொடுத்த தரகுத் தொகையையும். | |
| | | | | (3) பங்கு வெளியீட்டில் அல்லது கடனீட்டுப் பத்திர வெளியீட்டில் அளித்த தள்ளுபடி. | |
| | | | | (4) அமைப்புக் காலத்தில் (Construction) முதல் தொகையிலிருந்து செலுத்தப்பட்ட வட்டி. (வட்டி வீதத்தையும் கூற வேண்டும்.) | |

(5) சரிக்கட்டப்படாத மேம்பாட்டுச் செலவினம். (Development expenditure not adjusted.)

(6) பிற தொகைகள்

**இலாப-நட்டக் கணக்கு:**

(எதற்கென்றும் குறிப்பிடாத காப்பு ஏதேனும் இருப்பின், அதனைக் கழித்த பிறகு கொண்டு வரப்படும் இலாப-நட்டக் கணக்கின் பற்றிருப்பை இங்குக் காட்டவேண்டும்.)

## குறிப்புகள்

இருப்புநிலைக் குறிப்பினைத் தயாரிப்பதில் பின்பற்ற வேண்டிய சில பொது விதிமுறைகள் :

(1) இப் படிவத்தில் எந்தத் தலைப்பின் கீழோ, துணைத் தலைப்பின் கீழோ கொடுக்கவேண்டிய தகவலை இருப்புநிலைக் குறிப்பிலேயே தருவது அவ்வளவு ஏற்றதாக இல்லையெனில், அத் தகவல்களைத் தனிப் பட்டியல்களில் (Schedules) கொடுத்து அப் பட்டியல்களை இருப்புநிலைக் குறிப்பில் இணைத்துவிட்டால் போதும். இருப்புநிலைக் குறிப்பில் காட்டவேண்டிய இனங்கள் (விவரங்கள்) மிகவும் அதிகமாக இருக்கும்பொழுது, ஒவ்வொரு இனத்தின் கீழும் மொத்தத் தொகையை மட்டும் கொடுத்துவிட்டு, அதன் முழு விவரங்களையும் தனித்தனிப் பட்டியல்களில் கொடுக்கலாம்.

(2) கம்பெனி விரும்பின், ரூபாயுடன் காசுகளையும் காட்டலாம்.

(3) துணைக் கம்பெனிகளாயிருப்பின், பிடிப்புக் கம்பெனி வைத்திருக்கும் பங்கு எண்ணிக்கையையும் இறுதிப் பிடிப்புக் கம்பெனியும் (Ultimate holding Company) அதன் துணைக் கம்பெனிகளும் வைத்திருக்கும் பங்கு எண்ணிக்கையையும் தனித்தனியாகக் காட்டவேண்டும்.

நிர்வாகம் சான்றளிக்கும் இத்தகைய பங்கு வைத்திருப்பது பற்றிய விவரங்கள் சரியெனத் தணிக்கையாளர் சான்றளிக்கத் தேவையில்லை.

(4) பங்கு முனைமக் கணக்கு, 78-வது பிரிவில் கூறியுள்ளவாறு பயன்படுத்தப்படும் முழு விவரங்களை உள்ளடக்கியிருக்க வேண்டும்.

(5) இருப்புநிலைக் குறிப்பு நாளில் ஓராண்டுக்கு மிகாமல் கொடுக்க வேண்டியுள்ள கடன்களைக் குறுகிய காலக் கடன்கள் உள்ளடக்கும்.

(6) நிலைச் சொத்துகளின் மதிப்புகளை அறியுமுன்னர், நீக்கப்பட்ட அல்லது ஒதுக்கப்பட்ட தேய்மானத்தைப் பல்வகைச் சொத்துத் தலைப்பின் கீழும் ஒதுக்கிக் கழிக்கவேண்டும்.

(7) இருப்புநிலைக் குறிப்பு நாளுக்குப் பின்னர், துணைக் கம்பெனிகள் வழங்கும் பங்காதாயத்தினை இதில் சேர்க்கக்கூடாது. ஆனால், இருப்புநிலைக் குறிப்பு நாளில் அல்லது அதற்கு முன்னர் முடிவடையும் காலத்திற்கான பங்காதாயமாக அது இருப்பின், அதனைச் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

(8) இன்னும் நிறைவேற்றப்பெறுதிருக்கும் ஒப்பந்தங்களி னின்றும் பெறக்கூடிய பயன்கள் பற்றிய குறிப்பு இருப்புநிலைக் குறிப்பில் இடம்பெறக்கூடாது. ஆனால், அது பற்றிய சொத்தினை இயக்குநரவையின் அறிக்கையில் காட்டலாம்.

(9) இலாப-நட்டக் கணக்குக் காட்டும் பற்றிருப்பானது முதலில் பொதுக்காப்பிலிருந்து அல்லது குறிப்பிட்ட எதற்கும் ஒதுக்கப்படாக் காப்புகள் இருக்குமாயின், அவற்றிலிருந்து கழித்துக் காட்டவேண்டும்.

(10) கடன்களையும், முன்பணத்தையும் பொருத்தவரை செயல்முகவர் அல்லது செயலர்—கருவூலர் இவர்கள் பிறருடன் தனித்தனியாகவோ அல்லது கூட்டாகவோ சேர்ந்து தரவேண்டிய தொகைகளைத் தனித்தனியாகக் காட்டவேண்டும். அதே மேலாண் மையின் கீழுள்ள பிற கம்பெனிகளிடமிருந்து பெறவேண்டிய தொகைகளையும், அக் கம்பெனிகளின் பெயர்களையும் 370-வது பிரிவின்படி தரவேண்டும். மேலே கூறப்பட்ட ஒவ்வொரு கம்பெனியும் நடப்பாண்டில் எப்பொழுதாவது தரவேண்டியிருந்த உயர்ந்தளவுக் கடன் தொகையையும் கொடுக்கவேண்டும்.

(11) கம்பெனி வெளியிடும் உரிமை பெற்ற கடனீட்டுப் பத்திரங்கள் மீட்கப்பட்டிருப்பின் அதுபற்றிய விவரங்கள்.

(12) கம்பெனியின் பொருட்டுக் கம்பெனியின் கடனீட்டுப் பத்திரங்களை ஒரு பொறுப்புரிமையர் (trustee) வைத்திருப்பின், கடனீட்டுப் பத்திரங்களின் பெயரளவுத் தொகையையும், கம் பெனியின் ஏடுகளில் அவை காட்டப்படும் தொகையையும் குறிப் பிடவேண்டும்.

(13) (முதலீடுகள் எனும் தலைப்பின் கீழோ அல்லது நடப்புச் சொத்துகள் எனும் தலைப்பில் சரக்கிருப்பாகவோ காட்டப்பட்டி டிருப்பின்) முதலீடுகள் பற்றிய அறிக்கை ஒன்றினை இருப்புநிலைக் குறிப்புடன் இணைக்கவேண்டும். அதில் வாணிக முதலீடுகளையும் பிற முதலீடுகளையும் வகைப்படுத்திக் காட்டவேண்டும். அத்துடன்

எக் கம்பெனியின் பங்குகளில் அல்லது கடன்பத்திரங்களில் முதலீடு செய்யப்பட்டிருக்கின்றனவோ, அக் கம்பெனியின் பெயர்களையும், அதே மேலாண்மையிலுள்ள கம்பெனியின் பெயர்களையும் (ஒவ்வொரு கம்பெனியின் மேலாண்மை முகவரின் அல்லது செயலர்—கருவூலரின் பெயருடன்) தனித்தனியாகத் தரவேண்டும். கடந்த இருப்புநிலைக் குறிப்புக்குப் பின்னர் இவ்வாறு பங்குகளிலோ அல்லது கடனீட்டுப் பத்திரங்களிலோ முதலீடு செய்த விவரங்கள் அனைத்தையும் (இவ் விருப்புநிலைக் குறிப்பு நாளில் இம் முதலீடுகள் இருந்தாலும், இல்லாவிட்டாலும்) தரவேண்டும். முதலீட்டுக் கம்பெனியாயிருப்பின் அதாவது, பங்குகளையோ, சரக்கு முதலையோ, கடனீட்டுப் பத்திரங்களையோ அல்லது பிற பிணைமுறிகளையோ (Bonds) வாங்குவதை முக்கிய தொழிலாகக் கொண்டிருக்கும் கம்பெனியாயின், இருப்புநிலைக் குறிப்பு நாளில் தன்னிடமுள்ள முதலீடுகள் பற்றிய விவரங்களைக் கொடுத்தால் போதும்.

தன்னுடைய வியாபாரத்தை அல்லது தொழிலை முன்னேற்றும் நோக்குடன் தன்னுடைய துணைக் கம்பெனியல்லாத பிற கம்பெனியின் பங்குகளில் அல்லது கடனீட்டுப் பத்திரங்களில் முதலீடு செய்வது 'வாணிக முதலீடு' (Trade Investment) எனப்படும்.

(14) தொழில் நடந்துவரும்பொழுது, நடப்புச் சொத்துகளில் அது கொடுக்கப்பட்டிருக்கும் தொகையளவிற்காவது அதன் மதிப்பு இல்லையென இயக்குநரவை கருதுமாயின், இவ்வாறு இயக்குநரவை கருதுகிறது என்ற உண்மையைக் கூறவேண்டும்.

(15) இச் சட்டம் தொடங்கிய முதலாண்டினைத் தவிர பிற ஆண்டுகளில் கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்பில் காணப்படும் எல்லாக் கணக்குகட்கும், சென்ற ஆண்டிலுள்ள தொகைகளையும் கொடுக்கவேண்டும்.

மைய அரசின் இசைவுடன் இருப்புநிலைக் குறிப்பைக் கீழ்க்கண்ட படிவத்திலும் தயாரிக்கலாம். இது அட்டவணைப் படிவம் (Tabular Form) எனப்படும். வழக்கமாகத் தயாரிக்கப்படும் கோடிட்ட படிவம் போன்று இது இருப்பதில்லை. ஆனால், கோடிட்ட படிவத்தில் தயாரிக்கப்படும் இருப்புநிலைக் குறிப்புக்குக் கொடுக்கப்பட்டுள்ள அதே கட்டளைகள் இதற்கும் பொருந்தும்.

## இருப்புநிலைக் குறிப்பின் படிவம்

....நாளுக்குரிய (எந் நாளுக்கு இருப்புநிலைக் குறிப்புத் தயாரிக்கப்படுகிறதோ, அந் நாளினை இங்குக் குறிப்பிடுக.)
..........(கம்பெனியின் பெயரை இங்குக் குறிப்பிடுக).

**கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்பு**

| விவரம் | நடப்பு ஆண்டுக் குரிய தொகைகள் ரூ. | கடந்த ஆண்டுக் குரிய தொகைகள் ரூ. |
|---|---|---|
| (1) | (2) | (3) |
| **பங்கு முதல்:** | | |
| அதிகாரம் பெற்றது: | | |
| ரூ....வீதம்....பங்குகள். | | |
| வெளியிடப்பட்டதும் ஒப்புக் கொள்ளப்பட்டதும் : | | |
| (பலவகை முதலையும், ஒவ்வொரு வகையிலும் கீழ்க்கண்ட விவரங்களை யும் குறிப்பிடவேண்டும்). | | |
| ஒன்று ரூ....வீதம்....பங்குகள். | | |
| பங்கு ஒன்றுக்கு ரூ...... வீதம்.... செலுத்தப்பட்டது. | | |
| மேற்கண்ட பங்குகளில், ஒப்பந்தத் தின் தொடர்பாக ரொக்கம் பெருமல் ஆனல், முழுத் தொகையும் செலுத் தப்பட்டதாக........ பங்குகள் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. | | |
| மேற்கண்ட பங்குகளில் ..பங்குகள் மேலூதியப் பங்குகள் என முழுத் தொகையும் செலுத்தப்பட்டதாக ஒதுக்கப்பட்டிருக்கின்றன. | | |

**கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்பு**—(தொடர்ச்சி)

| (1) | (2) | (3) |
|---|---|---|
| கழி : | | |
| செலுத்தப்பெறுத அழைப்பு. | | |
| (1) இயக்குநர்களால். | | |
| (2) பிறரால். | | |
| கூட்டு : | | |
| ஒறுப்பிழப்புச் (fofeiture) செய்யப்பட்ட பங்குகள் (தொடக்கத்தில் செலுத்தப்பட்ட தொகை). | | |
| **காப்பும் மிகுதியும்** (Reserves and Surplus) | | |
| (1) முதல் காப்பு. | | |
| (2) முதல் மீட்புக் காப்பு. | | |
| (3) பங்கு முனைமக் கணக்கு. | | |
| (4) பிற காப்பு (ஒவ்வொரு வகைக் காப்பின் தன்மையும் தொகையையும் குறிப்பிடவேண்டும்). | | |
| கழி : | | |
| இலாபக் கணக்கின் பற்றிருப்பு (ஏதேனும் இருப்பின்) | | |
| (5) மிகுதி, அதாவது பங்காதாயம், மேலூதியம், காப்புத் தொகை போன்றவற்றிற்கு ஒதுக்கியது போக எஞ்சியுள்ள இலாப-நட்டக் கணக்கின் இருப்பு. | | |
| (6) காப்பிற்கு ஒதுக்க எண்ணியிருப்பது | | |
| (7) கடன் கழிவு நிதி | | |
| **பங்குதாரர்களின் மொத்த நிதி...** | | |

## கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)

| (1) | (2) | (3) |
|---|---|---|
| **பங்குதாரர்களின் நிதியைப் பயன்படுத்தல்** | | |
| **நிலைச் சொத்துகள்** (Fixed Assets) | | |
| கீழ்க்கண்ட இனங்களில் முடிந்தவரை வேறு படுத்திக் காட்டுக : | | |
| அ) வாணிக நற்பெயர் | | |
| ஆ) நிலம் | | |
| இ) கட்டடம் | | |
| ஈ) குத்தகை | | |
| உ) ரயில்வே பகுதிகள் | | |
| ஊ) தளவாடங்களும் பொறி வகையும் | | |
| எ) மனைத்துணைப் பொருள் | | |
| ஏ) சொத்தினை வளப்படுத்தல் (Development of Property) | | |
| ஐ) புனைபொருள் உரிமை, வாணிகக் குறி | | |
| ஒ) கால்நடைகள் | | |
| ஓ) வாகனங்கள் முதலியவை. | | |
| **முதலீடுகள்** | | |
| முதலீடுகளின் தன்மைகளையும் மதிப்பீட்டு முறையையும் குறிப்பிடுக. | | |
| எடுத்துக்காட்டாக, அடக்கவிலை அல்லது சந்தை விலை. | | |
| கீழ்க்கண்டவற்றையும் வேறுபடுத்திக் காட்டுக: | | |
| 1) அரசினர் அல்லது பொறுப்புரிமைக் கடன் பத்திரங்களில் முதலீடு (Trust Debentures). | | |

**கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)**

| (1) | (2) | (3) |
|---|---|---|
| 2) பங்குகள், கடனீட்டுப் பத்திரங்கள், பிணைமுறி போன்றவற்றில் முதலீடுகள் (முழுத் தொகையையும், செலுத்தப் பெற்றப் பங்குகளையும் பகுதி செலுத்தப்பெற்றப் பங்குகளையும் தனித் தனியாகக் காட்டவும். அத்துடன் பலவகைப் பங்குகளையும் தனித் தனியாகக் காட்டவும். மேலும், அவ்வாறே துணைக் கம்பெனியின் பங்குகள், கடனீட்டுப் பத்திரங்கள், பிணை முறிகள் முதலியவற்றில் முதலீடு செய்யப்பட்டதையும் தனித் தனியாகக் காட்டவும்). | | |
| 3) நிலையியல் சொத்துகள் (Immovable Properties) | | |
| நிலைச் சொத்துகள் . . | | |
| **நடப்புச் சொத்துகள், கடன்கள், முன் பணம் முதலியவை** (Current Assets, Loans and Advances) | | |
| அ. நடப்புச் சொத்துகள் | | |
| 1) முதலீடுகள் மீது கூடியுள்ள வட்டி | | |
| 2) பண்டங்களும் உதிரியுறுப்புகளும் | | |
| 3) விடு கருவிகள் (loose tools) | | |
| 4) சரக்கிருப்பு | | |
| 5) வேலை முற்றுப் பொருள் | | |
| 6) கடனாளிகள் | | |
| அ) ஆறு திங்களுக்கு மேல் நிலுவையிலுள்ள கடன்கள். | | |
| ஆ) பிற கடன்கள் | | |

## கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)

| (1) | (2) | (3) |
|---|---|---|
| கழி : காப்பு | | |
| 7) அ) ரொக்கமும் வங்கியும் | | |
| ஆ) வங்கி இருப்புகள் | | |
| அ) வங்கியிலுள்ளவை | | |
| ஆ) பிறவற்றில் | | |
| ஆ) கடன்களும் | | |
| 8) துணைக் கம்பெனிகளுக்கு வழங்கிய கடன்களும் | | |
| 9) மாற்றுண்டியல்கள் | | |
| 10) ரொக்கமாகவோ, பொருள்களாகவோ திரும்பிப் பெறக் கூடியவை அல்லது முன்கூட்டிச் செலுத்தியது. எ. கா. — கட்டணம், வரி, காப்பீடு முதலியவை. | | |
| 11) சுங்க அலுவலகம், துறைமுகம் போன்றவற்றில் வைத்துள்ள இருப்புகள் (கேட்கும்போது செலுத்தக்கூடியவை). | | |
| பலவகைச் செலவினங்கள் : | | |
| (நீக்கப்பெறாத அளவில் அல்லது சரிக் கட்டப்பெறாத அளவில்). | | |
| 1) தொடக்கச் செலவுகள் | | |
| 2) பங்குகளையோ கடனீட்டுப் பத்திரங்களையோ ஒப்புறுதிச் செய்வதற்காகவோ அல்லது எடுக்கச் செய்வதற்காகவோ கொடுக்கப்பட்ட கழிவு அல்லது தரகு போன்ற செலவினங்கள் | | |

## கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)

| (1) | (2) | (3) |
|---|---|---|
| 3) பங்குகள் அல்லது கடனீட்டுப் பத்திரங்களின் வெளியீட்டின் மீது அளித்தத் தள்ளுபடி | | |
| 4) அமைப்புக் காலத்தில் முதலிலிருந்து செலுத்தப்பட்ட வட்டி (வட்டி வீதத்தைக் குறிப்பிடுக). | | |
| 5) சரிக்கட்டப்படாத மேம்பாட்டுச் செலவினம் (development expenditure) | | |
| 6) பிற இனங்கள் (தன்மையைக் குறிப்பிடுக). | | |
| 7) இலாப-நட்டக் கணக்கு | | |
| நடப்புச் சொத்துகள் . . | | |
| **பிணைக் கடன்** | | |
| 1) கடனீட்டுப் பத்திரங்கள் | | |
| 2) வங்கியிலிருந்து பெற்ற கடன்களும் முன்பணமும் | | |
| 3) துணைக் கம்பெனிகளிடமிருந்து பெற்ற கடன்களும் முன்பணமும் | | |
| 4) பிற கடன்களும் முன்பணமும் | | |
| **பிணையில்லாக் கடன்** | | |
| 1) தவணை வைப்புத் தொகை | | |
| 2) துணைக் கம்பெனிகளிடமிருந்து பெற்ற கடன்களும் முன்பணமும் | | |
| 3) அ) வங்கியிடமிருந்து | | |
| ஆ) பிறவற்றிலிருந்து பெற்ற குறுகிய காலக் கடன்களும் முன்பணமும் | | |
| 4) பிற கடன்களும் முன்பணமும் | | |
| அ) வங்கிகளிடமிருந்து | | |
| ஆ) பிறவற்றிலிருந்து | | |

## கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)

| (1) | (2) | (3) |
|---|---|---|
| **நடப்புப் பொறுப்புகளும் ஒதுக்குகளும்** (Current liabilities and Provisions) | | |
| அ. நடப்புப் பொறுப்புகள் : | | |
| 1) செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டுகள் (Bills Payable) | | |
| 2) கடனீந்தோர் | | |
| 3) துணைக் கம்பெனிகள் | | |
| 4) இன்னும் கொடுக்க வேண்டியுள்ள முன்கூட்டிச் செலுத்தப் பெற்றவையும், காலாவதியாகாத தள்ளுபடிகளும் | | |
| எடுத்துக்காட்டு : | | |
| கீழ்க்கண்டவகைக் கம்பெனிகளில்: செய்தித்தாள், தீக்காப்பீடு, திரை அரங்குகள், மன்றங்கள், வங்கிகள், கப்பல் கம்பெனிகள் முதலியவை | | |
| 5) உரிமை கோராப் பங்காதாயம் (Unclaimed dividend) | | |
| 6) பிற பொறுப்புகள் (ஏதேனும் இருப்பின்) | | |
| 7) கூடியுள்ள ஆனல் தவணை நாள் வராத கடன்கள் மீதான வட்டி | | |
| **ஆ. ஒதுக்குகள்** | | |
| 8) வரி விதிப்பிற்கான ஒதுக்கு | | |
| 9) திட்டமிட்டுள்ள பங்காதாயம் | | |
| 10) நிகழ்வடை ஒதுக்கு | | |
| 11) நலக்காப்பு நிதித் திட்டம் | | |
| 12) காப்பீடு, ஓய்வூதியம் போன்ற அலுவலர் நற்பயனுக்கானவை | | |
| 13) பிற ஒதுக்குகள் | | |
| நடப்புப் பொறுப்புகள் . . | | |

**கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)**

| (1) | (2) | (3) |
|---|---|---|
| **நிகர நடப்புச் சொத்துகள்** | | |
| கீழ்க்கண்டவற்றைத் தனித்தனியாகக் காட்டுவதற்காக இருப்புநிலைக் குறிப்பில் அடிக்குறிப்புச் சேர்க்கவேண்டும். | | |
| 1) கம்பெனி மீதுள்ள ஆனல் கம்பெனியால் ஏற்றுக்கொள்ளப் பெருக் கடன்கள் | | |
| 2) பகுதி செலுத்தப்பெற்ற பங்குகள் மீதான அழைக்கப்பெற்ற பொறுப்பு | | |
| 3) குறிப்பிட்ட குவியும் பங்காதாய நிலுவை | | |
| 4) முதல் கணக்கின் மீது இன்னும் நிறைவேற்ற வேண்டியுள்ள ஒப்பந்தங்களின் மதிப்பீட்டுத் தொகை (ஒதுக்கப் பெற்றவை) | | |
| 5) வேறு பணத்திற்காகக் கம்பெனி நிகழ்வடைப் பொறுப்பிலுள்ளது. | | |
| நிகர நிலை, நடப்புச் சொத்துகளின் கூட்டல் தொகை .. | | |

**விளக்கம் :**

கம்பெனிச் சட்டத்தின் படிவத்தில் குறிப்பிட்டுள்ள முங்கியமான தலைப்புகள் கீழ் வருமாறு :—

| பொறுப்புகள் | சொத்துகள் |
|---|---|
| 1. பங்கு முதல் | 1. நிலைச் சொத்துகள் |
| 2. காப்பும் மிகுதியும் | 2. முதலீடுகள் |
| 3. பிணைக் கடன் | 3. நடப்புச் சொத்துகளும் கடன்களும் |
| 4. பிணையில்லாக் கடன் | அ. நடப்புச் சொத்துகள் |
| | ஆ. கடன்கள் |
| 5. நடப்புப் பொறுப்புகளும் ஒதுக்கும் | 4. பல்வகைச் செலவினம் |
| அ. நடப்புப் பொறுப்புகள் | |
| ஆ. ஒதுக்கு | 5. இலாப-நட்டக் கணக்கு |

குறிப்புகளும், விளக்கங்களும் ஏதுமின்றிக் கம்பெனிச் சட்டம் கொடுத்துள்ள இருப்புநிலைக் குறிப்புப் படிவத்தை இப்பொழுது கீழே கொடுக்கிறோம். இவ்வாறு கொடுப்பதால், இதனை நினைவுபடுத்திக்கொள்ளுதல் எளிதாகும்.

| பொறுப்புகள் | சொத்துகள் |
|---|---|
| **1. பங்கு முதல் :** | **1. நிலைச் சொத்துகள் :** |
| கழி : செலுத்தப்பெற்ற அழைப்பு | அ. வாணிக நற்பெயர் |
| கூட்டு : ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குகள் | ஆ. நிலம் |
| **2. காப்பும் மிகுதியும் :** | இ. கட்டடம் |
| 1. முதல் காப்பு | ஈ. குத்தகை |
| 2. முதல் மீட்புக் காப்புக் கணக்கு | உ. இரயில்வே பகுதிகள் |
| 3. பங்கு முனைமக் கணக்கு | ஊ. பொறிவகை |
| 4. பிற நடைமுறைக் காப்பு | எ. மனைத்துணைப் பொருள் |
| கழி : இலாப-நட்டக் கணக்கு பற்றிருப்பு | ஏ. சொத்தின் மேம்பாடு (Development of Property) |
| 5. மிகுதி, அதாவது இலாப-நட்டக் கணக்கின் வரவிருப்பு | ஐ. புனைபொருள் உரிமை வாணிகக் குறி |
| 6. காப்புகட்கு எடுத்துச் செல்ல எண்ணியிருக்கும் தொகை | ஒ. கால்நடை |
| 7. கழிவு நிதி | ஓ. வாகனம் |

| பொறுப்புகள் | சொத்துகள் |
|---|---|
| **3. பிணைக் கடன்** (Secured Loan) | **2. முதலீடுகள்** (Investments) |
| 1. கடனீட்டுப் பத்திரங்கள் | 1. அரசினர் கடன் பத்திரங்கள் |
| 2. வங்கிக் கடன் | 2. பங்குகளில், கடனீட்டுப் பத்திரங்களில் அல்லது பிணை முறிகளில் முதலீடு |
| 3. துணைக் கம்பெனிகளின் கடன் | 3. நிலையியல் சொத்துகள் |
| 4. பிற கடன் | **3. நடப்புச் சொத்துகளும், கடனும், முன் பணமும்** (Current Assets, Loans and Advances) |
| **4. பிணையில்லாக் கடன்** (Unsecured Loan) | அ. நடப்புச் சொத்துகள் |
| 1. தவணைக் கால வைப்பு | 1. முதலீடு மீது கூடியுள்ள வட்டி |
| 2. துணைக் கம்பெனியின் கடன் | 2. பண்டங்களும் உதிரியுறுப்புகளும் (Spare parts) |
| 3. குறுகிய காலக் கடன் : | 3. விடு கருவிகள் (Loose Tools) |
| அ. வங்கியிருலிந்து | |
| ஆ. பிறரிடமிருந்து | |
| 4. பிற கடன் : | 4. சரக்கிருப்பு |
| அ. வங்கியிடமிருந்து | 5. வேலை முற்றுப் பொருள் |
| ஆ. பிறரிடமிருந்து | 6. கடனாளிகள் |

| பொறுப்புகள் | சொத்துகள் |
|---|---|
| **5. நடப்புப் பொறுப்புகளும் ஒதுக்கும்** (Current Liabilities and Provisions) | கழி : ஒதுக்கு |
| அ. நடப்புப் பொறுப்புகள் | 7. ரொக்கம் |
| 1. ஏற்புகள் (செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டு) | 8. வங்கியிருப்பு |
| 2. கடனீந்தோர் | **ஆ. கடன்** |
| 3. துணைக் கம்பெனிகள் | 9. துணைக் கம்பெனிக்குக் கடனும், முன் பணமும் |
| 4. முன்கூட்டிச் செலுத்தப் பெற்றவை | 10. பெறுதற்குரிய மாற்றுச் சீட்டு |
| 5. உரிமைகோராப் பங்காதாயம் (Unclaimed Dividend) | 11. முன்கூட்டிச் செலுத்தியவை |
| 6. பிற பொறுப்புகள் | 12. மேலாண்மை முகவர் அல்லது செயலர் கருவூலரிடம் நடப்புக் கணக்கில் இருக்கும் இருப்பு |
| 7. கடன்மீது கூடியுள்ள ஆனால், தவணைநாள் வராத வட்டி | 13. சுங்க அலுவலகம், துறைமுகம் போன்ற வற்றில் வைத்துள்ள இருப்புகள் |

| பொறுப்புகள் | சொத்துகள் |
|---|---|
| **ஆ. ஒதுக்கு** | **4. பலவகைச் செலவினம்** (Miscellaneous Expenditure) |
| 8. வரி ஒதுக்கு | 1. தொடக்கச் செலவு |
| 9. திட்டமிடப்பட்டுள்ள பங்காதாயம் | 2. பங்கு வெளியீட்டு அல்லது கடனீட்டுப் பத்திர வெளியீட்டு ஒப்புறுதிக் கழிவு அல்லது தரகுத் தொகை |
| 10. நிகழ்வடைப் பொறுப்பு ஒதுக்கு (Provision for Contingent Liability) | 3. பங்கு வெளியீட்டு அல்லது கடனீட்டுப் பத்திர வெளியீட்டுத் தள்ளுபடி |
| 11. நலக்காப்பு நிதித் திட்டம் (Provident Fund Scheme) | 4. அமைப்புக் காலத்தில், முதலினின்றும் கொடுத்த வட்டி |
| 12. காப்பீடு, ஓய்வூதியம் போன்ற பிற அலுவலக நலத் திட்டங்கட்கான ஒதுக்கு | 5. மேம்பாட்டுச் செலவினம் |
| | 6. பிற வகை |
| 13. பிற ஒதுக்குகள் | **5. இலாப - நட்டக் கணக்கு** |

இப்பொழுது இருப்புநிலைக் குறிப்பில் காணப்படும் ஒவ்வொரு கணக்குப் பற்றியும் விளக்குவோம் :

## பொறுப்புகள் பகுதி (Liabilities Side)

### 1. பங்கு முதல்

அதிகாரம் பெற்ற பங்குமுதலை அதாவது, எம் முதல் தொகையுடன் கம்பெனி பதிவு செய்யப்படுகிறதோ, அம் முதல் தொகையை முதலில் குறிப்பிட வேண்டும். அத்துடன் பங்கு முதலானது எத்துணைப் பங்குகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது, ஒவ்வொரு பங்கின் பெயரளவுத் தொகை, பங்குகளின் வகைகள் போன்ற விவரங்கள் அனைத்தும் கொடுக்கப்படவேண்டும்.

வெளியிட்டுள்ள பல்வகைப் பங்குகள் பற்றிய விவரங்களையும் கொடுக்கவேண்டும்.

கம்பெனி வெளியிட்ட பங்குகளில் பொது மக்கள் எடுத்துக் கொண்ட பல்வகைப் பங்குகள் பற்றிய விவரங்களையும், ஒவ்வொரு பங்குகளிலும் அழைக்கப்பட்டுள்ள தொகைகளையும் குறிப்பிட வேண்டும்.

சொத்துகளையோ அல்லது நடந்துவரும் ஒரு தொழிலையோ இப்பொழுது அமைக்கப்படும் கம்பெனி எடுத்துக்கொள்ளும் போழ்து கொள்முதல் மறுபயனுக்காக (Purchase Consideration) ரொக்கம் பெறுமல் வெளியிட்டுள்ள பங்குகள் பற்றிய விவரங்களையும் தனியாகக் குறிப்பிடவேண்டும்.

அவ்வாறே, மேலூதிய பங்குகளைக் கம்பெனி வெளியிட்டிருப்பின், அதுபற்றிய விவரங்களையும், அவ்வாறு மேலூதியப் பங்குகள் எதிலிருந்து வெளியிடப்பட்டிருக்கின்றன என்ற விவரத்தையும் கொடுக்கவேண்டும்.

கம்பெனி பல்வகை முன்னுரிமைப் பங்குகளை வெளியிட்டிருப்பின் (எடுத்துக்காட்டாக, 6 சதவீதம் முதலாவது முன்னுரிமைப் பங்குகள், 8 சதவீதம் இரண்டாவது முன்னுரிமைப் பங்குகள் என வெளியிடப்பட்டிருப்பின்), அப் பங்குகள் பற்றிய விவரங்களையும் தனித்தனியாகக் கொடுக்கவேண்டும்.

மீள்தகு முன்னுரிமைப் பங்குகளை (Redeemable Preference Shares) கம்பெனி வெளியிட்டிருப்பின், அவற்றை மீட்பது

பற்றிய விவரங்களையும், எந்நாளில் அது மீட்கப்படவேண்டும் அல்லது மாற்றிக்கொள்ள வேண்டும் என்ற விவரங்களையும் குறிப்பிடவேண்டும்.

அழைப்பு நிலுவையிருப்பின் (Calls in arrear), அது அழைக்கப்பட்ட பங்கு முதலிலிருந்து கழித்துக் காட்டப்பெற வேண்டும்.

ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டப் பங்குகள் கணக்கைப் பங்கு முதல் எனும் தலைப்பிலேயே கொடுக்கப்படவேண்டும்.

முன்கூட்டி அழைப்புத்தொகை பெற்றிருப்பின், அதனைப் 'பங்கு முதல்' எனும் தலைப்பிலும் காட்டலாம்; அல்லது 'பிணைய மற்ற கடன்' எனும் தலைப்பின் கீழும் காட்டலாம்.

## 2. காப்பும், மிகுதியும் (Reserves and Surplus)

இத் தலைப்பின் கீழ்க் கொடுக்கப்பட்டுள்ள முதல் மூன்று காப்புகளும், அதாவது முதல் காப்பு, 'முதல் மீட்புக் காப்பு' பங்கு முனைமக் கணக்கு — முதலினக் காப்புகள் (Capital Reserves) எனப்படும். பின்னர், கொடுக்கப்பட்டிருக்கும் காப்புகள் வருவாய்க் காப்புகளாகும் (Revenue Reserves).

ஒவ்வொரு காப்பிலும் கடந்த இருப்புநிலைக் குறிப்பிலிருந்து இவ்வாண்டில் சேர்த்த தொகையையும், அக் காப்பிலிருந்து கழித்த தொகையையும் கொடுக்கவேண்டும். இவ் விவரங்களிலிருந்து காப்புக் கணக்கு எவ்வாறு உருவாக்கப்பட்டிருக்கிறது, எவ்வாறு பயன்படுத்தப்பட்டிருக்கிறதென்பதை எவரும் எளிதில் தெரிந்துகொள்ளலாம்.

பொதுவாகப் பங்காதாயத்தினைப் பரிந்துரைக்குமுன், காப்புக் கணக்கிற்கு எடுத்துச் செல்லும் அதிகாரத்தை இயக்குநருக்கு கம்பெனியின் செயல்முறை விதிகள் வழங்குகின்றன. இவ்வாறு காப்புக் கணக்கிற்கு எடுத்துச் செல்லப்படும் தொகை இவ்வாண்டுக் காப்புடன் சேர்த்த தொகையாகக் காண்பிக்கப்படுகிறது. காப்புக் கணக்கிற்கு இயக்குநர்களே எடுத்துச் செல்லாமல், அவற்றைப் பங்குநர்களின் ஒப்புதலுக்கு வைப்பதற்காக இயக்குநர்கள் திட்டமிடும்பொழுது அத் தொகைக்குக் காப்புகளுடன் சேர்க்கத் திட்டமிட்டுள்ள பங்காதாயம் (Proposed dividend) என்று காண்பிக்கப் படுகிறது.

எவ்வாண்டில் பங்கு முனைமக் கணக்குப் பயன்படுத்தப்படுகிறதோ, அவ்வாண்டில் அது பயன்படுத்தப்பட்டிருக்கும் முழு விவரங்களையும் இருப்புநிலைக் குறிப்பில் கொடுக்கவேண்டும்.

முனைமத்தில் பங்குகள் வெளியிடப்பட்டிருக்கும்பொழுது, ஒதுக்குத் தொகையைச் சிலர் செலுத்தத் தவறியதன் காரணமாக முனைமத் தொகையையும் செலுத்தாது இருப்பர். அந் நாளில் முனைமக் கணக்கில் வரவு வைக்கப்பட்டிருந்தும், முனைமத்தொகை நிலுவையில் இருக்கிறது. அப்பொழுது இருப்புநிலைக் குறிப்பில் முனைமக் கணக்கு கீழ்க்கண்டவாறு காட்டப்படும் :

**காப்பும், மிகுதியும்**

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| பங்கு முனைமக் கணக்கு | 10,000 | |
| **கழி** : நிலுவை | 500 | |
| | | 9,500 |

இலாப-நட்டக் கணக்குப் பற்றிருப்பைக் காட்டுமாயின், அதனை எதற்கென்றும் ஒதுக்கப்பெறா வருவாய்க் காப்பிலிருந்து முதலில் கழித்துக் காட்டவேண்டும். பல்வகைக் காப்புகளைப் பற்றி முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம்.

**மிகுதி** (Surplus)

இலாப-நட்டப் பகிர்வுக் கணக்குக் காட்டும் வரவிருப்பை இது குறிக்கிறது. காப்புக் கணக்குகட்கு எடுத்துச் செல்லவேண்டிய தொகைகளை எடுத்துச் சென்றபின், திட்டமிட்டுள்ள இலாப-ஈவிற்கும், ஒதுக்கியபின், எஞ்சியுள்ள தொகை இது. வேறு எதற்கென்றும் ஒதுக்கப்படாத இலாபத் தொகை இது. எனவே, இது பிற வருவாய்க் காப்புகளுடன் இருப்பு நிலைக்குறிப்பில் காட்டப்படுகிறது.

சில கம்பெனிகள் இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கில் இருப்பு எதையும் காட்டாமல் மீதியுள்ள தொகை முழுவதையும் பொதுக் காப்பிற்கு எடுத்துச் சென்றுவிடுகின்றன.

**3. பிணைக் கடன்** (Secured Loan)

இத் தலைப்பின்கீழ் முதலில் கம்பெனி வெளியிட்டுள்ள கடனீட்டுப் பத்திரங்களைக் காட்டவேண்டும். ஒவ்வொரு வகைக்

கடனுக்கும் கொடுத்துள்ள பிணையத்தின் (ஈட்டின்—Security) தன்மையைக் குறிப்பிடவேண்டும். இயக்குநரிடமிருந்தோ, மேலாண்மை முகவரிடமிருந்தோ, செயலர்--பொருளாளரிடமிருந்தோ, மேலாளரிடமிருந்தோ கடன்களைப் பெற்றிருப்பின், அவை தனித்தனியாகக் காட்டப்பட வேண்டும். மேற்சொன்னோர் வாங்கியிருக்கும் கடன்கட்காகப் பொறுப்புறுதியை (Guarantee) கம்பெனி வழங்கியிருப்பின், அவைபற்றிய குறிப்பையும் கொடுக்க வேண்டும்.

ஒவ்வொரு கடன் மீதும் கூடியுள்ள வட்டியை அக் கணக்கின் கீழ்க் காட்டவேண்டும். ஆனால், வட்டி செலுத்தும் தவணை நாள் வராத நிலையில், பிணைக் கடன் எனும் தலைப்பின் கீழ் அவ் வட்டியைக் காட்டக்கூடாது. எடுத்துக்காட்டாக, 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் ரூ. 1,00,000 இருக்கிறதென்றும், திசம்பர் 31-ல் முடியும் அரையாண்டுக்கு வட்டி செலுத்தப்படவில்லையென்றும் கொண்டால், இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகள் பகுதியில் கடனீட்டுப் பத்திரங்கள் எனும் தலைப்பிற்கு அடுத்து இதன் மீது கொடுக்கவேண்டிய வட்டியைக் காட்டவேண்டும். அது கீழ்க்கண்டவாறிருக்கும் :

| | ரூ. |
|---|---|
| 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் | 1,00,000 |
| கடனீட்டுப் பத்திரங்கள் மீது செலுத்தவேண்டிய வட்டி | 3,000 |

கடனீட்டுப் பத்திரங்களை மீட்கவேண்டிய அல்லது மாற்றுதற்குரிய நிபந்தனைகளையும் அவ்வாறு விரைவில் மீட்க இருக்கும் அல்லது மாற்ற இருக்கும் நாளையும் குறிப்பிடவேண்டும். கம்பெனி மீட்டிருக்கும் கடனீட்டுப் பத்திரங்களை மீண்டும் வெளியிடும் உரிமை பெற்றிருக்குமாயின், அது பற்றிய விவரங்களையும் இருப்புநிலைக் குறிப்பில் கொடுக்கவேண்டும்.

### 4. பிணையில்லாக் கடன் (Unsecured Loan)

இருப்புநிலைக் குறிப்பு நாளிலிருந்து ஓராண்டு காலத்திற்குள் திருப்பி அடைக்கவேண்டிய கடன் குறுகிய காலக் கடன் எனப்படும்.

இயக்குநர்களிடமிருந்தோ, மேலாண்மை முகவரிடமிருந்தோ, செயலர்—பொருளரிடமிருந்தோ அல்லது மேலாளரிடமிருந்தோ பெற்றுள்ள பிணையமற்றக் கடனைத் தனித்தனியாகக் காட்ட

வேண்டும். மேற்சொன்னோர் கம்பெனி வாங்கியிருக்கும் இக் கடனுக்குப் பொறுப்புறுதி வழங்கியிருப்பார்களேயானால், இது பற்றிய குறிப்பை அத்துடன் தரவேண்டும்.

பிணையில்லாக் கடன் மீது செலுத்தவேண்டிய வட்டித் தொகையை, இதன்கீழ்க் காட்டவேண்டும். ஆனால், இன்னும் வட்டி செலுத்தும் நாள் வராத நிலையில், இருப்புநிலைக் குறிப்பு நாள்வரை கூடியுள்ள வட்டியை இங்குக் காட்டக்கூடாது.

**5. நடப்புப் பொறுப்புகளும், ஒதுக்கும்** (Current Liabilities and Provisions)

கம்பெனியின் பொறுப்புகள் இருவகைப்படும் :

(1) நீண்டகாலப் பொறுப்புகள்;

(2) நடப்புப் பொறுப்புகள்.

பொறுப்பேற்ற நாளிலிருந்து ஐந்தாண்டுக்குள் செலுத்த வேண்டிய பொறுப்பினை நீண்டகாலப் பொறுப்பு (long term liability) என்கிறோம். கடனீட்டுப் பத்திரங்கள், அடைமானத்தின் மீது பெற்ற கடன்கள் போன்றவை இதில் அடங்கும். பிற பொறுப்புகள் 'நடப்புப் பொறுப்புகள்' எனப்படும்.

'ஒதுக்கு' (Provision) என்பது பற்றிய விவரத்தை முன்னரே கொடுத்திருக்கிறோம். அதாவது, சொத்துகளின் மதிப்பிழப்பிற்காக ஒதுக்கப்படும் தொகையையும், பொறுப்புத் தெரிந்திருந்தும் தொகை எவ்வளவு என்று துல்லியமாகக் கணக்கிட முடியாத பொறுப்புக்கு ஒதுக்கப்படும் தொகையையும் 'ஒதுக்கு' அல்லது 'ஏற்பாடு' எனுஞ்சொல் குறிக்கும். பொறுப்பு ஒன்றினைத் துல்லியமாகக் கணக்கிட முடியுமெனில், அதனைப் பொறுப்பாகக் கொள்ளவேண்டுமேயன்றி, ஒதுக்காகக் கொள்ளக்கூடாது. நடப்புப் பொறுப்புகளிலுள்ள 'கடனீந்தோர்' எனும் சொல் சரக்களித்ததற்காகக் கம்பெனி கொடுக்கவேண்டிய தொகையையும், செலவுகளை ஏற்றதற்காகக் கொடுக்கவேண்டிய தொகையையும், முதலினச் செலவினை (Capital expenditure) மேற்கொண்டதற்காகக் கொடுக்கவேண்டிய தொகையினையும் குறிக்கும்.

'பிற பொறுப்புகள்' எனும் சொல், தொழிலர் தந்துள்ள காப்பு முன்பணத்தையும் (Security Deposit), முகவர்களிடமிருந்து பெற்ற முன்பணத் தொகையையும் பிறர் உரிமை

கோராத வட்டியையும் உள்ளடக்கும். இன்னும் ஒதுக்கப்பெறாத பங்குகள் மீது பெற்றுள்ள தொகையையும், மீட்கப்பட்டுள்ள ஆனால், இன்னும் தொகை செலுத்தப்பெறாக் கடனீட்டுப் பத்திரங்களையும் 'பிற பொறுப்புகள்' (other liabilities) எனும் தலைப்பின் கீழ்க் காட்டலாம்.

'பிற ஒதுக்கு' எனும் சொல் தொழிலருக்கு மேலூதியம் (Bonus) தருவதற்காக ஒதுக்கப்படும் தொகையையும், தொழிலர் விலகியபின் தரவேண்டிய பணிக்கொடைக்காக (gratuity) ஒதுக்கப்படும் தொகையையும், பழுதுபார்த்தல், புதுப்பித்தல் ஆகியவற்றிற்கு ஒதுக்கப்படும் தொகையையும் உள்ளடக்கும்.

**நிகழ்வடைப் பொறுப்புகள்** (Contingent Liability)

இருப்புநிலைக் குறிப்பில் கொடுக்கப்பட்டுள்ள விவரங்களை ஒவ்வொரு கம்பெனியும் கொடுக்கவேண்டும். இவ் விவரங்களை இருப்புநிலைக் குறிப்பின் அடிக்குறிப்பாகக் கொடுக்கலாம்.

பகுதி செலுத்தப்பட்ட பங்குகளைக் கம்பெனி முதலீடாக வைத்திருக்கும்பொழுது, அப் பங்குகள் மீது இன்னும் செலுத்த வேண்டிய தொகையைத் தனியாகக் குறிப்பிடவேண்டும்.

பங்காதாயம் நிலுவையிலிருக்கும்பொழுது, அது எவ்வளவு ஆண்டுகட்கு நிலுவையில் இருக்கிறதென்ற விவரத்தையும், எவ்வளவு தொகை தரவேண்டுமென்கிற விவரத்தையும் கொடுக்க வேண்டும். பல்வகை முன்னுரிமைப் பங்குகளைக் கம்பெனி வெளியிட்டிருக்கும்பொழுது, பங்காதாயம் நிலுவையிலிருப்பின், ஒவ்வொருவகைப் பங்கு மீதான பங்காதாயம் பற்றிய விவரத்தையும் கொடுக்கவேண்டும்.

'பிற நிகழ்வடைப் பொறுப்புகள்' எனும் தலைப்பின் கீழ்த் தள்ளுபடி செய்யப்பட்ட, ஆனால், இன்னும் தவணை நாள் வரப்பெறாத மாற்றுச் சீட்டுகளைக் (Bills) காட்டலாம். அத்துடன், கம்பெனி தந்துள்ள பொறுப்புறுதிகளையும் கொடுக்கலாம். இயக்குநர் பொருட்டோ அல்லது கம்பெனியின் பிற அலுவலர் பொருட்டோ கம்பெனி கொடுத்திருக்கும் பொறுப்புறுதித் தொகையையும் குறிப்பிடவேண்டும்.

## சொத்துகள் பகுதி

### 1. நிலைச் சொத்துகள் (Fixed Assets)

நிலைச் சொத்தின் கீழ் அதன் தொடக்க விலையையும் அத்துடன் இவ்வாண்டில் சேர்த்துள்ள மதிப்பையும், அதிலிருந்து கழிக்க பட்ட விவரத்தையும், மொத்தம் ஒதுக்கப்பட்ட தேய்மானத் தொகையையும் காட்டவேண்டும்.

தொடக்கவிலை என்பது ஒவ்வொரு கணக்காண்டின் தொடக்கத்திலிருந்த சொத்தின் மதிப்பாகும்.

சொத்து ஒன்று விற்கப்படும்பொழுது, விற்பனைத் தொகையை நிலைச் சொத்திலிருந்து கழிக்கவேண்டும். ஓராண்டில் நிலைச் சொத்துடன் கீழ்க்கண்ட காரணங்களால் தொகை சேர்க்கப் படலாம்.

அ. புதிய சொத்துகளை வாங்குதல்.

ஆ. சொத்துகளை மறு மதிப்பீடு செய்து மதிப்பினை உயர்த்தல்.

இ. ஒரு நிலைச் சொத்திலிருந்து இன்னொரு நிலைச் சொத்திற்கு ஒரு கணக்கை மாற்றுதல் (எடுத்துக்காட்டாக, அலுவலகப் பொறிக் கணக்கைப் பொறிவகைக் கணக்கிற்கு மாற்றல்).

ஈ. ஓராண்டில் கீழ்க்கண்ட காரணங்கட்காக நிலைச் சொத்தினின்றும் தொகையைக் கழிக்கவேண்டியிருக்கலாம்.

(1) சொத்து ஒன்றினை விற்றல்.

(2) சொத்து ஒன்றினை வேறு கணக்கிற்கு மாற்றல்.

(3) சொத்துகளை நடப்பாண்டில் மறு மதிப்பீடு செய்ததின் விளைவாகத் தொகையைக் குறைத்தல்.

(4) பங்கு முதலைக் குறைப்பதன் காரணமாகச் சொத்துகளினின்றும் தொகையை நீக்குதல்

ஒவ்வொரு நிலைச் சொத்தின் கீழும் இருப்புநிலைக் குறிப்பின் நாள்வரை மொத்தம் ஒதுக்கப்பட்டுள்ள தேய்மானத் தொகையைக் கழித்துக் காட்டவேண்டும். கடந்த இருப்புநிலைக் குறிப்பு

நாள்வரை ஒதுக்கப்பட்டுள்ள தேய்மானத்தையும், நடப்பாண்டில் ஒதுக்கப்பட்டுள்ள தேய்மானத் தொகையையும் தனித்தனியாகக் காட்டவேண்டுமென்று சட்டம் கூறவில்லை.

நடப்பாண்டில் விற்கப்பட்ட அல்லது பிற கணக்கிற்கு மாற்றப்பட்ட அல்லது தேவையில்லை என ஒதுக்கிவிட்ட அல்லது பிற நிலைச் சொத்துக் கணக்கிற்கு மாற்றப்பட்டுவிட்ட சொத்தின் மீதான தேய்மானத் தொகையை நடப்பாண்டுத் தொடக்கம் வரை ஒதுக்கப்பட்டுள்ள தேய்மானத் தொகையினின்றும் கழித்துக் காட்டவேண்டும்.

ஒரு நிலைச்சொத்தின் மீது தேவையான அளவிற்கும் மேலாகத் தேய்மானம் ஒதுக்கப்பட்டிருக்குமாயின், அவ்வாறு கூடுதலாக ஒதுக்கப்பட்டத் தேய்மானத் தொகையினைப் பொறுப்புகள் பகுதியில் 'காப்பும், மிகுதியும்' எனும் தலைப்பின் கீழ்க் காட்டவேண்டும். மிகவும் கூடுதலாகத் தேய்மானத் தொகை ஒதுக்கப்படுவதன் மூலமாகக் கம்பெனிகள் மறைகாப்பு (Secret Reserves) ஏற்படுத்துவதைத் தவிர்க்கும் நோக்குடன் இவ் விதி செய்யப்பட்டுள்ளது.

பங்காதாயம் வழங்கும் முன்பாக நடப்பாண்டிற்குரிய தேய்மானத் தொகைக்கு மட்டும் அல்லாமல், கடந்த ஆண்டுகட்கான தேய்மானம் நிலுவையில் இருக்குமாயின், அவற்றையும் ஒதுக்க வேண்டும். எனவே, நடப்பாண்டு வரை தேய்மானம் முழுதும் ஒதுக்கப்பட்ட பின்னரே பங்காதாயம் வழங்கவேண்டும் என்பது புலனாகும்(கம்பெனிச் சட்டம் 250-வது பிரிவு).

பங்குமுதலைக் குறைக்கும்பொழுது நிலைச் சொத்துகள் மீது தொகைகள் நீக்கப்பட்டிருப்பின், அல்லது சொத்துகளை மறு மதிப்பீடு செய்ததின் பயனாக மதிப்பு குறைக்கப்பட்டிருப்பின், அவ்வாறு குறைக்கப்பட்ட நாளிலிருந்து ஐந்தாண்டுகள் வரை ஒவ்வொரு இருப்புநிலைக் குறிப்பும், குறைக்கப்பட்ட தொகையையும், குறைக்கப்பட்ட நாளையும் குறிப்பிடவேண்டும். எடுத்துக் காட்டாக, 1972 ஜூலைத் திங்களில் ரூ. 1,00,000 சொத்துகளின் மறு மதிப்பீடு செய்ததின் காரணமாகக் குறைக்கப்பட்டிருப்பதாகக் கொண்டால், சொத்துக் கணக்கு கீழ்க்கண்டவாறு இருப்புநிலைக் குறிப்பில் காட்டப்படும் :

| | ரூ. |
|---|---|
| கடந்த இருப்புநிலைக் குறிப்பின் தொடக்கவிலை (1972 ஜூலைத் திங்களில் சொத்துகளை மறு மதிப்பீடு செய்தபோது ரூ. 1,00,000 நீக்கிய பிறகு.) | 9,00,000 |

இவ்வாறு குறைக்கப்பட்ட ஐந்தாண்டுகளுக்குப் பின்னர் தயாரிக்கப்படும் இருப்புநிலைக் குறிப்புகளில் குறைக்கப்பட்ட தொகையைக் கொடுக்கத் தேவையில்லை. ஆனால், தொடக்க விலைக்கு மாறாக, குறைக்கப்பட்டுள்ள மதிப்பையும், குறைத்த நாளினையும் குறிப்பிடவேண்டும். கடந்த இருப்புநிலைக் குறிப்பின் படி தொடக்கவிலை (1967 மேத் திங்களில் மறு மதிப்பீடு செய்து குறைத்த பிறகு) என்றவாறு காட்டவேண்டும்.

## எடுத்துக் காட்டு 77

கீழ்க் கொடுக்கப்பட்ட விவரங்களிலிருந்து கம்பெனியின் 1972, 1973 திசம்பர் 31ஆம் நாள்களுக்குரிய இருப்புநிலைக் குறிப்புகளில் பொறிவகைக் கணக்கு எவ்வாறு தோன்றும் என்பதைக் காட்டுக :

| | | ரூ. |
|---|---|---|
| அ. | 1971 திசம்பர் 31-ல் பொறிவகையின் அடக்க மதிப்பு | 1,50,000 |
| ஆ. | 1972-ல் மேலும் வாங்கியது | 15,000 |
| இ. | 1972 மேத் திங்களில் சொத்துகளின் மதிப்பு உயர்த்திக் கூட்டிய தொகை | 75,000 |
| ஈ. | 1972-ல் விற்கப்பட்ட பொறிவகையின் அடக்கவிலை | 12,000 |
| உ. | 1973-ல் மேலும் வாங்கியது | 25,000 |
| ஊ. | 1973-ல் விற்கப்பட்ட பொறிவகையின் அடக்க மதிப்பு | 10,000 |
| எ. | 1971 திசம்பர் 31 வரை நீக்கப்பட்ட தேய்மானம் | 45,000 |
| ஏ. | 1972-ல் விற்ற பொறிவகை மீதான தேய்மானம் | 2,000 |
| ஐ. | 1973-ல் விற்ற பொறிவகை மீதான தேய்மானம் | 1,500 |
| ஒ. | 1972-ல் ஒதுக்கிய தேய்மானம் | 10,000 |
| ஓ. | 1973-ல் ஒதுக்கிய தேய்மானம் | 18,500 |

**விடை :**

## 1972 திசம்பர் 31-ற்குரிய இருப்புநிலைக் குறிப்பு

(சொத்துகள் பகுதி)

**பொறிவகை**

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| கடந்த இருப்புநிலைக் குறிப்பின்படி அடக்க மதிப்பு | 1,50,000 | |
| **கூட்டு :** 1972 மேத் திங்களில் சொத்துகளின் மதிப்பை உயர்த்தியது | 75,000 | |
| **கூட்டு :** 1972-ல் மேலும் வாங்கியது | 15,000 | |
| | 2,40,000 | |
| **கழி :** நடப்பாண்டில் விற்ற பொறி வகையின் அடக்கவிலை | 12,000 | |
| | 2,28,000 | |
| **கழி :** இந்நாள் வரை ஒதுக்கிய தேய்மானம் * | 53,000 | |
| | | 1,75,000 |

* தேய்மானம் கீழ்க்காண்டவாறு கணக்கிடப்படுகிறது.

| | ரூ. |
|---|---|
| 1971 திசம்பர் 31வரை ஒதுக்கப்பட்ட தேய்மானம் | 45,000 |
| **கழி :** விற்ற பொறி மீதான தேய்மானம் | 2,000 |
| | 43,000 |
| **கூட்டு :** 1972-ல் ஒதுக்கப்படும் தேய்மானம் | 10,000 |
| ரூ. | 53,000 |

## 1973 திசம்பர் 31-ற்கான இருப்புநிலைக்குறிப்பு

(சொத்துகள் பகுதி)

**பொறிவகை**

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| கடந்த இருப்புநிலைக் குறிப்பின்படி அடக்க மதிப்பு | 2,28,000 | |
| (1972 மேத் திங்களில் சொத்துகளின் மதிப்பை ரூ. 75,000 உயர்த்திய பிறகு.) | | |
| **கூட்டு :** நடப்பாண்டில் மேலும் வாங்கியது | 25,000 | |
| | 2,53,000 | |
| **கழி :** நடப்பாண்டில் விற்கப்பட்ட பொறிவகையின் அடக்கவிலை | 10,000 | |
| | 2,43,000 | |
| **கழி :** இந்நாள்வரை ஒதுக்கப்பட்ட தேய்மானம் | 70,000 | 1,73,000 |

தேய்மானம் கீழ்க்கண்டவாறு கணக்கிடப்படுகிறது :

| | ரூ. |
|---|---|
| 1972 வரை மொத்த தேய்மானம் | 53,000 |
| **கூட்டு :** 1973-ல் ஒதுக்கப்படும் தேய்மானம் | 18,500 |
| | 71,500 |
| **கழி :** 1973-ல் விற்ற பொறிவகையின் மீதான தேய்மானம் | 1,500 |
| மொத்த தேய்மானம் | 70,000 |

## 2. முதலீடுகள் (Investments)

நிலைச் சொத்துகட்கு அடுத்து முதலீடுகள் காட்டப்படும். எந் நோக்கிற்காக அவை வைத்திருக்கப்படுகின்றன என்பதை யொட்டியே அவை நிலைச் சொத்தின் வகையைச் சார்ந்தவையா அல்லது நடப்புச் சொத்தின் (Current Assets) கீழ் வருபவையா என்பதைத் தீர்மானிக்க முடியும். வருமானம் ஈட்டும் நோக்குடன் வாங்கப்பட்டு வைத்திருக்குமாயின் அல்லது துணைக் கம்பெனியின் பங்குகளை வைத்திருப்பதுபோல் வைத்திருப்பின், அவை நிலைச் சொத்தாகக் கருதப்படும். அவ்வாறின்றிக் கம் பெனியின் எளிவரல் சொத்துகளின் (Liquid Assets) ஒரு பகுதியாக அவை கருதப்படுமாயினும், வேண்டியபொழுது அவற்றை விற்று நடைமுறை முதலாகப் பயன்படுத்திக் கொள் வதற்காக அவை வைத்திருக்கப்படினும் அல்லது அவை சரக் கிருப்பாக வைத்திருக்கப்படும்பொழுதும், இம் முதலீடுகள் நடப்புச் சொத்தாகவே கருதப்படும்.

நிலைச் சொத்தாகக் கருதப்படும் முதலீடுகளை மட்டுமே, 'முதலீடுகள்' என்னும் தலைப்பின் கீழ்க் காட்டுகிறோம். சட்டத் தின்படி முதலீடு பற்றிய சில தகவல்களை இருப்பு நிலைக் குறிப்பில் வெளிக்காட்ட வேண்டுமென்று கூறியிருக்கிறோம். அவை வரு மாறு :

அ. அவற்றை மதிப்பிடும் முறை.

ஆ. முதலீடுகளின் வகைகள் (அவை கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தப்படுகின்றன).

(1) அரசினர் அல்லது பொறுப்புரிமைக் கடன் பத்திரங் கள் (Trust Securities).

(2) பங்குகள், கடனீட்டுப் பத்திரங்கள் அல்லது வேறு பத்திரங்கள் (இவை முழுதும் செலுத்தப்பட்ட வையா என்பதுடன் எவ்வகையான பங்குகள் என்ற விவரமும் கொடுக்கப்படவேண்டும்.)

(3) துணைக் கம்பெனியில் முதலீடு செய்த பங்குகள், கடனீட்டுப் பத்திரங்கள் அல்லது பிற பத்திரங்கள் (முழுதும் செலுத்தப்பட்ட பங்குகள், பகுதி செலுத் பெற்ற பங்குகள் என்ற விவரமும் எவ்வகை யான பங்குகள் என்ற தகவலும் தனித்தனியாகத் தரப்படவேண்டும்)

(4) நிலையியல் சொத்துகளில் செய்துள்ள முதலீடு (Investment in Immoveable Properties)

(5) ஒப்புக் கொள்ளப்பட்ட பங்கு மாற்றுச் சந்தையில் ஈடுபடுத்தப்படும் முதலீடுகளா (Quoted investments) அல்லவா என்ற விவரமும் தரப்பட வேண்டும்.

நிலையியல் சொத்துகளில் முதலீடு என்பது நிலையியல் சொத்தின் அடைமானத்தின் பேரில் வழங்கப்பட்ட கடனையும் குறிக்கும்.

**கூட்டு நிறுவனத்தில் முதலீடு**

ஒரு கூட்டு நிறுவனத்தில் கம்பெனியானது ஒரு கூட்டாளியாக இருந்து அதில் முதல் வழங்கியிருப்பின், அம் முதலீட்டினை வியாபார முதலீடாகவே (Trade investment) கொள்ளவேண்டும். அவ்வாறே அது வகைப்படுத்தப்படவேண்டும். அக் கூட்டு நிறுவனத்திலிருந்து பெறும் இலாபத்தினை இலாப-நட்டக் கணக்கின் வரவுப் பகுதியில் வியாபார முதலீட்டினின்றும் பெற்ற வருமானமாகவே காட்டவேண்டும்.

அவ்வாறே ஒரு கம்பெனியின் வியாபாரத்தையோ, தொழிலையோ மேம்படுத்தும் நோக்குடன் அக் கம்பெனியின் பங்குகளிலும் கடனீட்டுப் பத்திரங்களிலும் ஒரு கம்பெனி முதலீடு செய்யுமாயின், அதனையும் வியாபார முதலீடு என்கிறோம். (துணைக் கம்பெனியின் பங்குகளில் முதலீடு செய்வதை இது குறிக்காது.)

துணைக் கம்பெனிகளில் முதலீடு செய்வது வியாபார முதலீட்டு இலக்கணத்திற்கு உட்பட்டிருந்தாலும், அவற்றை இதில் சேர்ப்பதில்லை. காரணம், அவை இருப்புநிலைக் குறிப்பில் தனியாகக் காட்டப்படவேண்டும்.

வியாபார முதலீடுகள், துணைக் கம்பெனியில் செய்துள்ள முதலீடுகள் இரண்டுமே நிலைச் சொத்துகள்தாம்.

**முதலீடுகள் பற்றிய அறிக்கை**

இருப்புநிலைக் குறிப்பில் காட்டப்படும் மேற்கண்ட விவரங்களுடன், முதலீடுகள் பற்றிய அறிக்கையொன்றையும் தனியே தயாரித்து இருப்புநிலைக் குறிப்புடன் இணைக்கவேண்டும். முதலீடுகள் எனும் தலைப்பின் கீழ்க் காட்டப்படும் முதலீடுகளாயினும்

அல்லது நடப்புச் சொத்துகள் என்னும் தலைப்பின் கீழ்ச் 'சரக் கிருப்பாகக்' காட்டப்படும் முதலீடுகளாயினும், அவை பற்றிய கீழ்க்கண்ட தகவல்களை இவ் வறிக்கையில் கொடுக்கவேண்டும்.

(1) வியாபார முதலீடுகள், பிற முதலீடுகள் என்று முதலீடு களை வகைப்படுத்தல்.

(2) எக் கம்பெனியின் பங்குகளில் அல்லது கடனீட்டுப் பத்திரங்களில் முதலீடு செய்யப்பட்டிருக்கிறதோ, அக் கம்பெனி யின் பெயர்களும் அவைகளின் மேலாண்மை முகவர்களின் அல்லது செயலர்—கருவூலர்களின் பெயர்களும்.

(3) ஒவ்வொரு கம்பெனியிலும் செய்துள்ள முதலீட்டின் தன்மையும், அளவும்.

(4) இருப்புநிலைக் குறிப்பு நாளன்று முதலீடுகளனைத்தும் இருந்தாலும், இல்லாவிட்டாலும் நிதியாண்டில் செய்த முதலீடு கள் அனைத்தையும் பற்றிய விவரங்களைத் தரவேண்டும். அதா வது, நடப்பாண்டில் அத்தகைய முதலீடுகள் பற்றிய விவரங்களும் இவ் வறிக்கையில் தரப்படவேண்டும். ஆயினும், முதலீட்டுக் கம்பெனியாயிருப்பின் (Investment Company), இருப்புநிலைக் குறிப்பு நாளன்று கையில் இருக்கவேண்டிய கம்பெனிகளிடையே யான முதலீடு பற்றிய விவரத்தை மட்டும் கொடுத்தால் போதும்.

**ஒரே மேலாண்மையின் கீழ் உள்ள கம்பெனிகள்** (Companies under same management)

கம்பெனிச் சட்டம் 370-வது பிரிவின்படி இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கம்பெனிகள் கீழ்க்கண்ட நிலைகளில் ஒரே மேலாண்மையில் இருப்பதாகக் கொள்ளப்படும்.

அ. கீழ்க்கண்ட பதவிகளில் ஏதேனும் ஒன்றை ஒரு கம் பெனியில் வகிப்பவர், கீழ்க்கண்ட பதவிகளில் ஏதேனுமொன்றை வேறு கம்பெனியிலும் வகித்தால் :

மேலாண்மை முகவர் (Managing Agent);

செயலர்—கருவூலர் (Secretaries and Treasurers);

மேலாண்மை இயக்குநர் (Managing Director);

மேலாளர் (Manager).

மேலாண்மை முகவராக அல்லது செயலர்—கருவூலராக செயல்படும் நிறுவனத்தின் கூட்டாளி அல்லது தனிக் கம்பெனியில் உள்ள இயக்குநர் ஒருவர் மேலாண்மை முகவராக அல்லது செயலர்—பொருளராக செயல்படுதல்.

ஆ. ஒரு கம்பெனியின் இயக்குநர்களில் பெரும்பான்மையோர் தற்போதோ அல்லது கடந்த ஆறு திங்கட்கு முன்போ, வேறு கம்பெனியில் பெரும்பான்மை இயக்குநர்களாக அமைந்திருப்பின்;

இ. மொத்த வாக்குரிமையில் மூன்றில் ஒரு பங்கிற்குக் குறையாமல் இரு கம்பெனிகளிலும் அதே நபரோ அல்லது கம்பெனியோ பெற்றிருப்பின்;

ஈ. ஒரு கம்பெனியின் பிடிப்புக் கம்பெனி அடுத்த கம்பெனியின் அதே நிர்வாகத்தின் கீழ் இருக்குமாயின்;

உ. ஒரு கம்பெனியின் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட இயக்குநர்கள், தங்கள் உறவினர்களுடன் அக் கம்பெனியின் பெரும்பான்மை பங்குகளை வைத்திருக்கும்போதே வேறு கம்பெனியின் பெரும்பான்மை பங்குகளையும் வைத்திருப்பின்.

மேற்சொன்ன நோக்கத்தைப் பொருத்தவரை யாரொருவரின் கட்டளையின்படி ஒரு கம்பெனியின் இயக்குநரவை செயல்படுவது வழக்கமோ அவரும் அக் கம்பெனியின் இயக்குநராகக் கருதப்படுவார்.

### 3. நடப்புச் சொத்துகளும், கடனும், முன்பணமும் (Current Assets, Loans and Advances)

இது 'நடப்புச் சொத்துகள்' என்றும், 'கடன்களும் முன்பணமும்' என்றும் பொதுவாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது.

### அ. நடப்புச் சொத்துகள்

இத் தலைப்பின்கீழ்க் கொடுக்கப்பட்டுள்ள கணக்குகளை இனி ஆய்வோம்.

**(1) முதலீடுகள் மீது ஏறியுள்ள வட்டி :** இருப்புநிலைக் குறிப்பு நாளன்று அறிவிக்கப்பட்டும் ஆனால், கையில் வந்து சேராத பங்காதாயத்தினை இது குறிக்கும். வருமானவரி கழித்துப்

பின் கைக்குக் கிடைத்த நிகர தொகையையே இதில் காட்ட வேண்டும்.

(2) **பண்டங்களும், உதிரியுறுப்புகளும்** (Stores and spare parts): ஆண்டின் இறுதி நாளன்று இருப்பிலுள்ள பண்டங்கள், உதிரியுறுப்புகள் — இவற்றின் தொகையையே இருப்புநிலைக் குறிப்பில் காட்டவேண்டும். பயன்படுத்தப்பட்ட தொகை இலாப-நட்டக் கணக்கில் பற்று வைக்கப்படும். பண்டங்கள், உதிரி உறுப்புகள் — இவற்றின் தொடக்க இருப்பையும், இறுதி இருப்பையும் இலாப-நட்டக் கணக்கில் தனித்தனியாகக் காட்டவேண்டியதில்லை. ஆனால், பண்டங்களை மதிப்பிடும் முறையினை இருப்புநிலைக் குறிப்பில் கட்டாயமாகக் காட்டவேண்டும்.

(3) **விடுகருவிகள்** (Loose Tools): இருப்புநிலைக் குறிப்பில் விடுகருவிகளை மதிப்பிடும் முறையைத் தெரிவிக்கத் தேவையில்லை.

விடுகருவிகள் எனும் கணக்கு ஏதேனும் ஒரு சில கம்பெனிகளின் இருப்புநிலைக் குறிப்புகளில் மட்டுமே காணப்படுகிறது. இதற்குக் காரணம் விடுகருவிகளின் தொகை குறைவாக இருக்குமாயின், அவை பண்டங்கள்—உதிரியுறுப்புகள் எனும் கணக்கில் சேர்க்கப்படுகின்றன. அவ்வாறின்றி, அவற்றின் மதிப்பு மிக அதிகமாக இருக்குமாயின், அவை பொறிவகையில் சேர்க்கப்பட்டு விடுகின்றன.

(4) **சரக்கிருப்பு :** கச்சாப் பொருள்கள், வேலை முற்றுப் பொருள், இறுதிப்பொருள் ஆகியவற்றின் இறுதிச் சரக்கிருப்பினை முடிந்தவரை தனித்தனியாகக் காட்டவேண்டும். ஒவ்வொன்றையும் மதிப்பிடும் முறையையும் கொடுக்கவேண்டும்.

(5) **கடனாளிகள்** (Debtors): விற்ற சரக்கின் காரணமாக வரவேண்டிய தொகை அல்லது ஆற்றிய பணிக்காகக் கிடைக்க வேண்டிய தொகை அல்லது பிற ஒப்பந்தங்களின் காரணமாக வரவேண்டிய தொகை — ஆகியவை மட்டுமே கடனாளிகள் என்னும் தலைப்பின்கீழ்க் காட்டவேண்டும். கடனாக அல்லது முன் பணமாக வழங்கிய தொகையை இதில் சேர்க்கக் கூடாது.

ஆறு திங்கட்கு மேலாக நிலுவையிலுள்ள கடன்களைப் பிற கடன்களினின்றும் வேறுபடுத்திக் காட்டவேண்டும்.

ஐயக் கடனுக்காக ஒதுக்கியுள்ள தொகையைக் கடனாளிகள் தொகையிலிருந்து கழித்துக் காட்டவேண்டும். ஐயத்திற்குரியது என்று கருதப்படும் தொகைக்கும் அதிகமாக இவ் வொதுக்குத் தொகை இருக்கக்கூடாது. தேவைக்கும் அதிகமாக ஒதுக்கப் பட்டுள்ள தொகையை இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகள் பகுதியில் 'காப்பும் மிகுதியும்' என்னும் தலைப்பின்கீழ் 'ஐயக் கடன் காப்பு' என்று காட்டவேண்டும். கீழ்க்கண்ட விவரங்களை இருப்புநிலைக் குறிப்பில் கொடுக்கவேண்டும் :

(1) பிறருடன் சேர்ந்தோ அல்லது தனித்தனியாகவோ இயக்குநர்கள் தரவேண்டிய கடன், நடப்பாண்டில் எப்போதாவது அவர்கள் தரவேண்டிய உயரளவுத் தொகை — ஆகியவற்றையும் குறிப்பிடவேண்டும்.

(2) பிறருடன் சேர்ந்தோ அல்லது தனித்தனியாகவோ மேலாண்மை முகவர்கள், செயலர்—கருவூலர் அல்லது பிற அலுவலர்கள் தரவேண்டிய கடன் (நடப்பாண்டில் எப்போதேனும் மிகவும் அதிகமாகக் கொடுக்கவேண்டிய தொகையையும் குறிப்பிடவேண்டும்).

(3) இயக்குநர் யாரேனும் கூட்டாளியாகவுள்ள கூட்டு நிறுவனம் தரவேண்டியுள்ள கடன்.

(4) யாரேனும் ஒரு இயக்குநர் இயக்குநராகவோ அல்லது ஓர் உறுப்பினராகவோ உள்ள தனிக் கம்பெனி தரவேண்டியுள்ள கடன்.

(5) அதே மேலாண்மையின்கீழ் உள்ள கம்பெனிகள் தரடிய கடன் (ஒவ்வொரு கம்பெனியின் பெயரையும் குறிப்பிடவேண்டும்).

கடனாளிகளைக் கீழ்க் காட்டியவாறு வகைப்படுத்தவேண்டும்.

அ. முழுப் பிணையத்தையும் (Security) பெற்று, உறுதியாகத் திரும்பிப் பெறக்கூடிய கடன்கள்.

ஆ. கடனாளியின் உறுதிமொழியைத் தவிர வேறு பிணையும் ஒன்றினையும் பெற்றிராவிடினும் உறுதியாகத் திரும்பி வரக்கூடியதெனக் கருதப்படும் கடன்கள்.

இ. வராது அல்லது வருவது ஐயத்திற்குரியது எனக் கருபடும் கடன்கள்.

**(6) கையிலுள்ள ரொக்கம் :** ந.உ.க. [நான் உமக்குக் கடன் பட்டிருக்கிறேன் (IOU)] போன்றவற்றைக் கையிலுள்ள ரொக்க மாகக் கருதுவது தவறு. இவற்றையெல்லாம் 'கடன்களும் முன் பணமும்' என்னும் தலைப்பின்கீழ்க் காட்டவேண்டும்.

**ஆ. கடன்களும் முன்பணமும்**

*(1)* துணைக் கம்பெனிகளுக்கு வழங்கியிருக்கும் முன்பணமும் (Advances) கடன்களும் பிடிப்புக் கம்பெனியின் இருப்புநிலைக் குறிப்பில் தனது துணைக் கம்பெனிக்கு வழங்கியுள்ள கடன் பற்றிய விவரத்தைத் தனியாகத் தரவேண்டும்.

*(2)* மாற்றுச் சீட்டுகள் (Bills): கையிலுள்ள பெறுதற் குரிய மாற்றுச் சீட்டுகளையும், வங்கிக்கு வசூலுக்காக அனுப்புள்ள மாற்றுச் சீட்டுகளையும் இங்குக் குறிப்பிடவேண்டும்.

வங்கியில் தள்ளுபடி செய்யப்பட்டுள்ள மாற்றுச் சீட்டுகளின் தவணை நாள் இருப்புநிலைக் குறிப்பு நாளன்று வரவில்லையாயின், அத் தொகைகள் நிகழ்வடைப் பொறுப்பாகக் (Contingent Liability) கொள்ளப்படும். இருப்புநிலைக் குறிப்பில் இது பற்றிக் குறிப்பிடவேண்டும்.

*(3)* முன்பணம்: ரொக்கமாகவோ அல்லது வேறு வகை யிலோ திரும்பிப் பெறத்தக்க முன்பணத்தையும் இது குறிக்கும். அத்துடன் முன்கூட்டிச் செலுத்திய செலவினங்களையும் இது உணர்த்தும்.

*(4)* சுங்க அலுவலகங்கள், துறைமுக நிறுவனங்கள் ஆகிய வற்றிடம் உள்ள இருப்புகள் (Balances with Customs, Port Trust etc.)

இத் தொகைகள் கேட்டவுடன் திருப்பித்தரத்தக்கதாக இருந்தால்தான், இத் தலைப்பின் கீழ்க்காட்டவேண்டும். அவ் வாறு செலுத்தத்தக்கதாக இல்லையாயின், 'அரசுடன்' அல்லது அரசு நிறுவனங்களுடன் வைத்திருக்கும் 'வைப்புத் தொகைகள்' என்று காட்டப்படும்.

*(அ)* சரக்களித்தோர்க்குக் கொடுத்துள்ள முன்பணம்.

(ஆ) முதலினச் செலவினங்களுக்காகக் (Capital expenditure) கொடுத்த முன்பணம்.

(இ) தொழிலர்க்கும், அலுவலர்கட்கும் கொடுத்துள்ள முன் பணம்.

(ஈ) வியாபாரத்தில் கொடுத்துள்ள வைப்புத் தொகை.

(உ) வருமானவரிச் சட்டம் 210-வது பிரிவின்படிச் செலுத்திய வரி.

(ஊ) வருமானவரிச் சட்டத்தின் 141-வது பிரிவின் கீழ்த் தற்காலிகமாகச் செலுத்தப்பட்டிருக்கும் வரி.

(எ) வருமான வரி அலுவலகத்திடமிருந்து திரும்பப் பெற வேண்டிய வரி.

ரொக்கமாகவோ அல்லது வேறு வகையிலோ திரும்பப் பெறவேண்டிய 'முன்பணம்' என்ற கணக்கையும் முன்கூட்டிச் செய்த செலவு என்ற கணக்கையும் ஒன்றுகக் காட்டாமல், தனித்தனியாகக் காட்டவேண்டும்.

நடப்புச் சொத்துகள், கடன், முன்பணம் ஆகியவற்றில் ஏதாவது கூறப்பட்டுள்ள தொகை திரும்ப வராது என இயக்குந ரவை கருதுமாயின், இவ்வுண்மையை இருப்புநிலைக் குறிப்பில் வெளிப்படுத்தவேண்டும்.

## 4. பல்வகைச் செலவினம்

### அ. தொடக்கச் செலவுகள் (Preliminary Expenses)

இது குறித்து முன்னரே விளக்கியிருக்கிறேம். கம்பெனி யொன்றைத் தோற்றுவிப்பதிலும், அமைப்பதிலும் ஆகும் செலவு கள் அனைத்தும் இவ்வாறு அழைக்கப்படுகின்றன. தொடக்க காலத்தில், அதாவது, கம்பெனிதொடங்கப்பட்டபோழ்து பங்கு, கடனீட்டுப் பத்திரங்கள் வெளியீட்டில் ஆன செலவுகளையும் இது உள்ளடக்கலாம். ஆனல், பிறகு வெளியிடப்படும் பங்கு, கடனீட்டுப் பத்திரங்கள் மீதான செலவுகளைத் தனியாகத்தான் காட்டவேண்டும்.

இதில் நடப்பாண்டில் நிற்கவேண்டிய தொகை என சரிக் கட்டில் கொடுக்கப்பட்டிருப்பின், அத் தொகையை இதிலிருந்து

கழித்துக் காட்டவேண்டும். அவ்வாறு நீக்கப்பட்ட தொகையை இலாப-நட்டக் கணக்கில் பற்றுப் பகுதியில் காட்டவேண்டும்.

### ஆ. பங்கு, கடனீட்டுப்பத்திர வெளியீட்டுச் செலவுகள்

பங்குகள், கடனீட்டுப் பத்திரங்கள் மீது செலுத்தியுள்ள கழிவு அல்லது தரகினையும் இச் செலவினங்கள் குறிக்கும்.

### இ. பங்கு, கடனீட்டுப்பத்திரங்கள் மீதான தள்ளுபடி

இது முன்னரே விளக்கப்பட்டிருக்கிறது. 79-வது பிரிவு பங்குகளைத் தள்ளுபடியில் வெளியிடுவதற்குக் கூறுகிறது. ஆனால், கடனீட்டுப் பத்திரங்களைத் தள்ளுபடியில் வெளியிடுவதற்குச் சட்டத் தடைகள் ஏதுமில்லை. எனினும், கடனீட்டுப் பத்திரங்கள் மீது அளித்த தள்ளுபடிகள் பற்றிய விவரங்களைக் கம்பெனிப் பதிவாளரிடத்தில் தாக்கல் செய்யவேண்டும்.

### ஈ. அமைப்புக் காலத்தில் முதலினின்றும் செலுத்திய வட்டி (Interest paid out of Capital during Construction)

இது குறித்து விவரமாக வேறோர் அத்தியாயத்தில் விளக்கப் பட்டிருக்கிறது. இத்தகைய வட்டியினை முதலீட்டுச் செலவாகக் கருதிக் குறிப்பிட்ட நிலைச் சொத்துக் கணக்கில் சேர்க்காவிடில், இத் தலைப்பின்கீழ் இத் தொகை காட்டப்படும்.

### உ. மேம்பாட்டுச் செலவினம் (Development Expenditure)

தேயிலை, காப்பித் தோட்டங்கள், சுரங்கங்கள் அல்லது மிகப் பெரிய தொழிற்சாலைகள் போன்றவை இலாபம் ஈட்டும் நிலையினை அடைவதற்குப் பெரும் முதலைச் செலவிடுவதுடன், நீண்ட காலமும் பிடிக்கலாம். இந் நிறுவனங்கள் இக் காலத்தில் செய்யும் செலவினங்களை முதலீட்டுச் செலவாக 'மேம்பாட்டுச் செலவினம்' என்று பொதுவாகக் குறிப்பிடுவது வழக்கம். பின்னர், இது பல நிலைச் சொத்துகட்குப் பிரித்து எடுத்துச் செல்லப்படும்.

## 5. இலாப-நட்டக் கணக்கு (Profit and Loss Account)

எதற்கென்றும் குறிப்பிடப்படாத காப்பு (uncommitted reserves) ஏதேனுமிருப்பின் அதனைக் கழித்த பின்பும் இலாப-நட்டக் கணக்குப் பற்றிருப்பைக் காட்டுமாயின், அது சொத்துகள் பகுதியில் காட்டப்படும்.

இலாப-நட்டக் கணக்கைப் பொருத்தவரை கீழ்க்கண்ட கருத்துகளை மீண்டும் நினைவு படுத்திக்கொள்வது நலம் :

(1) காப்புகட்கு மாற்றியும், திட்டமிட்டப் பங்காதாயத்திற்கு (dividend) வகை செய்த பின்பும், இலாப-நட்டக் கணக்கில் இருப்பு இருப்பின், அம் மிகுதித் தொகையை இருப்பு நிலைக் குறிப்பில்பொறுப்புகள் பகுதியில் 'காப்பும் மிகுதியும்' என்ற தலைப்பின்கீழ் இலாப-நட்டக் கணக்கென்று காட்டவேண்டும்.

(2) இலாப-நட்டக் கணக்கு பற்றிருப்பைக் காட்டுமாயின் (நட்டம் ஏற்பட்டிருக்குமாயின்), எதற்கென்றும் ஒதுக்கப்பெறு வருவாய்க் காப்பு (uncommitted revenue reserve) இருக்கின்றதா என்று முதலில் நோக்கவேண்டும். அவ் வருவாய்க் காப்பின் தொகையை இலாப-நட்டக் கணக்குக் காட்டும் நட்டத்தைவிடக் கூடுதலாக இருக்குமாயின், இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகள் பகுதியில் வருவாய்க் காப்பினின்றும் நட்டத்தைக் கழித்துக் காட்டவேண்டும்.

(3) அவ்வாறின்றி வருவாய்க் காப்பைவிட, இலாப-நட்டக் கணக்குக் காட்டும் பற்றிருப்பு கூடுதலாக இருப்பின், நட்டத்திலிருந்து வருவாய்க் காப்பினைக் கழித்து மீதித் தொகையை இருப்பு நிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் காட்டவேண்டும்.

(4) வருவாய்க் காப்புகள் ஏதுமில்லா நிலையில், இலாப-நட்டக் கணக்கு பற்றிருப்பைக் காட்டுமாயின், இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் இலாப-நட்டக் கணக்குக் காட்டப்படும்.

**நிகழ்வடைச் சொத்துகள்** (Contingent Assets)

ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சிக்குப் பின் சொத்தாக மாறக் கூடியதை இவ்வாறு அழைக்கிறோம். எடுத்துக்காட்டாக, வருமானவரி அலுவலகத்திடமிருந்து கூடுதலாகக் கட்டியுள்ள வரியைத் தருமாறு கோரியிருக்கலாம். இதனை வருமானவரி அலுவலகம் ஏற்றுக் கொண்டால்தான், நமக்கு அது வரவேண்டிய தொகையாக மாறுகிறது. நமது கோரிக்கையை அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லையெனில், அவர்களிடமிருந்து தொகை ஏதும் பெற முடியாது. அவ்வாறே, நட்டஈடு கோரி நீதிமன்றத்தில் கம்பெனி வழக்குத் தொடுத்திருக்கலாம். இதனையும் நிகழ்வடைச் சொத்தாகவே கருதவேண்டும். காரணம், நீதிமன்றத்தின் தீர்ப்பு

கம்பெனிக்குச் சாதகமாக அமைந்தால் மட்டுமே, நட்ட ஈட்டுப் பணத்தைப் பெறமுடியும்.

இருப்புநிலைக் குறிப்பில் நிகழ்வடைப் பொறுப்புகளைக் காட்ட வேண்டும் என்றுதான் சட்டம் கூறுகிறதேயொழிய, நிகழ்வடைச் சொத்துகள் பற்றி ஏதும் குறிப்பிடவில்லை. சில சூழ்நிலைகளில் நிகழ்வடைச் சொத்துகளைக் காட்டாமல் விட்டுவிடுதலால், இருப்பு நிலைக் குறிப்பு கம்பெனியின் நிதி நிலையைச் சரியாக வெளிக் காட்டத் தவறலாம். எனவே, நிகழ்வடைச் சொத்துகளையும் இருப்புநிலைக் குறிப்பில் குறிப்பிடுதல் நலம்.

**அட்டவணைகள் அல்லது இணைப்புகள் (Schedules)**

கம்பெனிச் சட்டத்தில் கூறியுள்ள விவரங்கள் அனைத்தையுமே இருப்புநிலைக் குறிப்பிலேயே காட்டாமல், ஒவ்வொரு தலைப்பின் கீழும் நிகர தொகையைக் காட்டிவிட்டு அவற்றிற்கான விவரங்களைத் தனித்தனி அட்டவணைகளில் விளக்கிக் கூறி, அவற்றையும் இருப்புநிலைக் குறிப்புடன் இணைப்பது இற்றைக் காலத்தில் பல கம்பெனிகள் பின்பற்றிவரும் வழக்கமாகும். எடுத்துக் காட்டாக நிலைச் சொத்துகள் பற்றிய இணைப்பு, முதலீடுகள் பற்றிய இணைப்பு, கடன் பற்றிய இணைப்பு போன்ற பல இணைப்புகள் இருப்புநிலைக் குறிப்புடன் சேர்க்கப்படுகின்றன.

**இயக்குநர் அறிக்கை**

முன்னரெல்லாம் இந்தியாவிலுள்ள கம்பெனிகள் தங்களது பங்குநர்கட்கு (Shareholders) இலாப-நட்டக் கணக்கையும், இருப்புநிலைக் குறிப்பையும், அத்துடன் மிகவும் சுருக்கமான ஒரு அறிக்கையையும் அனுப்புவது வழக்கம். காப்புக்கு எடுத்துச் செல்வது குறித்தும், பங்காதாயம் வழங்குவது குறித்தும் பரிந்துரை செய்து, 'இருக்கின்ற சூழ்நிலையில் கம்பெனியின் செயல்முறைகள் நிறைவைத் தருகின்றன' என்று கூறுவதுடன் அறிக்கை முடிந்து விடும். வேறுபிற தகவல் ஏதும் அதில் இடம்பெறாது.

தொழிலில் நிலவிய நிலைகளைப் பல்வகைக் கோணங்களிலிருந்தும் படம்பிடித்துக் காட்டுவது இயக்குநர்களின் இன்றியமையாக் கடமையாகும். நிதி, வாணிகம், தொழிலுறவு, வரி விதிப்பு போன்ற சூழ்நிலைகளும், நடப்பாண்டில் கம்பெனி ஏற்க வேண்டியிருந்த பல்வகைத் தொல்லைகளையும், சோதனைகளையும், கம்பெனியின் வளர்ச்சியையும் இயக்குநர்கள் விவரிக்கவேண்டும். நாட்டின் நிதி நிலையும், பொருளாதார சிக்கல்களும் கம்பெனியின்

வளர்ச்சியை எவ்வாறு பாதித்துள்ளன என்பது பற்றியும் அறிக்கையில் விவரமாக இயக்குநர்கள் குறிப்பிடவேண்டும். அடுத்துவரும் ஆண்டுகட்கான கம்பெனியின் வளர்ச்சித் திட்டங்களையும் ஈடுபடவிருக்கும் சிறப்புமிக்க ஒப்பந்தங்கள் குறித்தும் கோடிட்டுக் காட்டுதல் நலம்.

விற்பனை, கூலி, இலாபம், பங்காதாயம் போன்றவை குறித்துப் புள்ளி விவரங்களையும் இயக்குநர் அறிக்கையில் தருதல் சிறப்பானது. கம்பெனிச் சட்டத்தில் 217-வது பிரிவின்படி, கம்பெனியின் பொதுக்கூட்டத்தில் இருப்புநிலைக் குறிப்புடன் இயக்குநர் அறிக்கையையும் தாக்கல் செய்ய வேண்டியது கட்டாயமாகும். கீழ்க்கண்டவை குறித்து இயக்குநர் அறிக்கையில் தகவல் தரவேண்டும்.

அ. கம்பெனியின் நிலை பற்றிய அறிக்கை;

ஆ. இருப்புநிலைக் குறிப்பில் உள்ள காப்புக் கணக்குகட்கு எடுத்துச் செல்ல இயக்குநரவை திட்டமிட்டுள்ள தொகை;

இ. இயக்குநரவை பரிந்துரை செய்யும் பங்காதாய வீதம்;

ஈ. இருப்புநிலைக் குறிப்பிற்குரிய நாளிலிருந்து அறிக்கை நாள்வரை கம்பெனியின் நிதி நிலையைப் பாதிக்கும் சிறப்பான மாற்றங்கள்.

கம்பெனியின் நலனுக்கு ஊறுவிளைவிக்காது என்று இயக்குநரவை கருதுமாயின், கீழ்க்கண்டவை பற்றியும் இயக்குநர் அறிக்கை விவரிக்கலாம்.

அ. நடப்பாண்டில் கம்பெனியின் தொழில் தன்மையில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள்;

ஆ. கம்பெனியின் துணைக் கம்பெனிகளிலோ அல்லது அவை நடத்திவரும் தொழில் தன்மையிலோ ஏற்பட்டிருக்கும் அத்தகைய மாற்றங்கள்;

இ. கம்பெனி ஈடுபட்டுள்ள தொழில் வகைகளில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள், அத்துடன் 217-வது பிரிவின்படி, தணிக்கை அறிக்கையில் கண்டுள்ள குறைபாடுகட்கு அல்லது நிபந்தனைகட்கு அல்லது எதிரான கருத்துகட்கு முழுத் தகவல்களையும்.

வேண்டிய விளக்கங்களையும் இயக்குநரவை தனது அறிக்கையில் குறிப்பிடலாம்.

1966 அக்டோபர் 29-ல் ரிசர்வ் வங்கி வெளியிட்டுள்ள ஆணையின்படி, கம்பெனி பொதுமக்களிடம் பெற்ற வைப்புத் தொகை பற்றிய தகவலையும் இயக்குநர்கள் தங்கள் அறிக்கையில் தரவேண்டும். அவ்வாணையின்படி ஓராண்டிற்குக் குறைந்த காலத்திற்குப் பொதுமக்களிடமிருந்து வைப்புத் தொகையைக் கம்பெனி பெறக்கூடாது என்பதை இவண் நினைவு கூர்தல் நலம். அத்துடன், கம்பெனியின் செலுத்தப்பட்ட பங்குமுதல், அதன் காப்புகள் — ஆகியவற்றின் கூட்டுத் தொகையில் 25 சதவீதத்திற்கு மிகாமல் அத்தகைய காப்புகள் இருக்கவேண்டும். இதுகுறித்து ரிசர்வ் வங்கியில் அரையாண்டு அறிக்கைகளைத் தாக்கல் செய்ய வேண்டும். வைப்புத்தொகை செலுத்துபவர்கள் பற்றிய பதிவேடு ஒன்றினைக் கம்பெனி வைத்திருக்கவேண்டும்.

**பங்குநர்கட்கு அளிக்கும் தகவலை எளிமையாக்கல்**

தங்களுக்குக் கம்பெனி அனுப்பும் இலாப-நட்டக் கணக்கையும் இருப்புநிலைக் குறிப்பையும் படித்துக் கம்பெனியின் நிலையை அறிந்துகொள்ளும் ஆற்றலோ, கணக்கியல் அறிவோ பெரும்பான்மைப் பங்குநர்கட்கு இருப்பதில்லை. எனவே, சாதாரணமானவரும் எளிதில் புரிந்துகொள்ளும் வகையில் வேண்டிய தகவல்களை எளிய முறையில் தருதல் இயக்குநர்களின் கடமையாகும். எனவே, '*T*' வடிவத்தில் கொடுப்பதை விட பங்குதாரர்கட்கு அட்டவணை வடிவத்தில் (Schedule) இத் தகவலை அளித்தல் சிறந்ததாகும். அனைவரும் உணரும் வகையில் எளிய நடையில் தகவல்களும் அறிக்கைகளும் அமையவேண்டும். முக்கியமான புள்ளி விவரங்கள், கூட்டல்—கழித்தல் முறையில் கொடுக்கப்பட்டிருப்பின், அனைவரும் பார்த்ததும் புரிந்துகொள்ள முடியும். எடுத்துக்காட்டாக, நடப்புச் சொத்துகளிலிருந்து நடப்புப் பொறுப்புகளைக் கழித்து, நடைமுறை முதல் தொகையைக் காட்டலாம்.

'*T*' வடிவம் முறையில் இருப்புநிலைக் குறிப்பு தயார் செய்யப்பட்டிருப்பின், பங்குதாரர்களே இவ் விவரங்களைத் தொகுத்துக் கணக்கிட்டுக் கண்டுபிடிக்க வேண்டியிருக்கும். 934 ஆம் பக்க எடுத்துக்காட்டு இதனை நன்கு விளக்கும் :

## 31-12-1972—ல் முடியும் ஆண்டில் வாணிகத்தின் விளைவும், ஈட்டிய இலாபமும்

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| நடப்பாண்டில் விற்பனை (தொடக்கத்திலும் இறுதியிலும் இருந்த இறுதிச் சரக்கிருப்புக்குச் சரிக்கட்டியபின்) | | 25,00,000 |
| **கழி :** உற்பத்திச் செலவு : | | |
| பயன்படுத்திய கச்சாப் பொருள் (சரக்கிருப்புச் சரிசெய்த பின்) | 8,25,000 | |
| ஆலையில் கூலியும், ஊதியமும் | 6,30,000 | |
| பிற ஆலைச் செலவுகள் | 2,75,000 | |
| | | 17,30,000 |
| ஈட்டிய மொத்த இலாபம் | | 7,70,000 |
| **கழி :** ஏற்ற செலவுகள் : | | |
| மேலாண்மைச் செலவு | 1,20,000 | |
| விற்பனைச் செலவு | 1,12,000 | |
| | | 2,32,000 |
| நிகர வாணிக விளைவு | | 5,38,000 |
| **கழி :** நீக்கப்பட்டவை : | | |
| நிலைச் சொத்துகளின் மீது தேய்மானம் | 75,000 | |
| தொடக்கச் செலவு | 10,000 | |
| | | 85,000 |
| வட்டி நீங்கிய நிகர இலாபம் | | 4,53,000 |
| **கழி :** கடனீட்டுப் பத்திர வட்டி | 60,000 | |
| பிற வட்டி | 13,000 | |
| | | 73,000 |

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| கம்பெனி பயன்படுத்திக் கொள்ளக்கூடிய இலாபம் (Profit available for the Company) | | 3,80,000 |
| **கூட்டு :** | | |
| சென்ற ஆண்டிலிருந்து கொண்டு வரப்பட்ட இலாபம் | | 70,000 |
| மொத்தம் கிடைத்த இலாபம் | | 4,50,000 |
| இயக்குநர்கள் கீழ்க்கண்டவாறு இலாபத்தைப் பகிர்ந்தளிக்கத் திட்டமிட்டுள்ளனர் : | | |
| பொதுக்காப்பிற்கு மாற்றம் | 75,000 | |
| பங்காதாயச் சமன்செய்காப்பு | 25,000 | |
| முதல் மீட்புக் காப்பு | 1,00,000 | |
| பங்குநர்கட்குப் பங்காதாயம் | 1,20,000 | |
| | | 3,20,000 |
| அடுத்த ஆண்டிற்கு எடுத்துச் செல்வது | | 1,30,000 |

இவ்வாறு இருப்புநிலைக் குறிப்பையும் எளிய முறையில் தயாரித்துக் காட்டலாம்.

**தணிக்கை அறிக்கை** (Audit Report)

தனது கணக்குகளைக் கம்பெனி தகுதி பெற்ற தணிக்கையாளர்களால் தணிக்கை செய்து கொள்ளவேண்டும். கம்பெனிச் சட்டத்தின் 224-வது பிரிவிலிருந்து 233-வது பிரிவு வரை தணிக்கையாளர்களின் நியமனம், உரிமை, கடமை ஆகியவை பற்றிக் கூறப்பட்டுள்ளன. தாங்கள் தணிக்கை செய்த கணக்குகள் பற்றியும், இலாப-நட்டக் கணக்கு, இருப்புநிலைக் குறிப்பு ஆகியவை குறித்தும் அறிக்கை ஒன்று தயார் செய்து தரவேண்டும். இத் தணிக்கையறிக்கையினை இருப்புநிலைக் குறிப்புடன் இணைத்து ஒவ்வொரு பங்குநர்கட்கும் அனுப்புவது இயக்குநர்களின் கடமை

யாகும். தணிக்கையறிக்கையின் மாதிரி கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது:

கம்பெனியின் 1972 சூன் 30-ல் முடியும் ஆண்டிற்கான இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் நாங்கள் தணிக்கை செய்து கீழ்க்கண்டவாறு அறிவிக்கிறோம்.

1. எங்கள் தணிக்கைக்குத் தேவையான முழுத் தகவலையும் விளக்கங்களையும் பெற்றோம்.

2. எங்கள் கருத்துப்படி சட்டம் வேண்டியவாறு வேண்டிய கணக்கேடுகளைக் கம்பெனி வைத்திருக்கின்றது. (இவ்வேடுகளை ஆய்ந்து பார்த்ததிலும் நாங்கள் தணிக்கை செய்யாத கிளைக் கணக்குகளைத் தணிக்கை செய்த தணிக்கையரின் அறிக்கைகளின்படியும்).

3. இவ்வறிக்கையில் கண்டுள்ள இருப்புநிலைக் குறிப்பும் இலாப-நட்டக் கணக்கும் கணக்குகளுடன் உடன்படுகின்றன. (கிளைகளிடமிருந்து பெற்ற தணிக்கை செய்யப்பட்ட அறிக்கைகளுடனும் உடன்படுகின்றன).

4. கிளைத் தணிக்கையரின் அறிக்கைகள் எங்களுக்கு அனுப்பப்பட்டு, இவ்வறிக்கை தயாரிப்பதில் அவற்றையும் கருத்தில் கொண்டோம்.

5. எங்கள் கருத்துப்படியும், எங்களுக்குத் தந்த தகவல்களின்படியும், விளக்கங்கள்படியும், கணக்குகளும், அத்துடன் இணைக்கப்பட்டுள்ள குறிப்புகளும், பிற ஆவணங்களும் 1956-வது ஆண்டைய கம்பெனிச் சட்டம் கேட்டுள்ள முறையில் வேண்டிய தகவல்களனைத்தையும் கொடுக்கின்றன. அத்துடன் அவை,

அ. இருப்புநிலைக் குறிப்பைப் பொருத்தவரை, 1972 சூன் 30ஆம் நாளில் கம்பெனியின் நிலையையும்,

ஆ. இலாப-நட்டக் கணக்கைப் பொருத்தவரை, அந் நாளில் முடிவுறும் ஆண்டிற்கான இலாபத்தையும் (அல்லது நட்டத்தையும்) உண்மையாகப் படம்பிடித்துக் காட்டுகின்றன.

தணிக்கையாளர்கள்.

## எடுத்துக்காட்டு 78

வரையறு பொறுப்புடைய மூவேந்தர் கம்பெனியின் 1973 சூன் 31-ற்கான இருப்பாய்வு கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கிறது :

அதிலிருந்தும், பின்னர்க் கொடுக்கப்பட்டுள்ள பிற தகவல்களிலிருந்தும் 1973 சூன் 30-ல் முடியும் ஆண்டுக்கான இலாப-நட்டக் கணக்கையும், அந்நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

| | ரூ. |
|---|---|
| அழைப்பு நிலுவை | 1,000 |
| ஊதியம் | 30,800 |
| நிலமும் கட்டடமும் | 1,50,000 |
| வாணிக நற்பெயர் | 50,000 |
| வங்கி மேல்வரைப் பற்று | 15,700 |
| கடனீந்தோர் | 32,300 |
| தொடக்கச் சரக்கிருப்பு | 75,050 |
| விற்பனை | 4,50,000 |
| உள் திருப்பம் | 13,500 |
| கூலி | 50,500 |
| கழிவு | 6,400 |
| வரியும் காப்பீடும் | 5,800 |
| கடன்பத்திர மீட்பு நிதி முதலீட்டு வட்டி | 500 |
| தள்ளுபடி (வ) | 750 |
| கடனீட்டுப்பத்திர வட்டி | 3,000 |
| 6 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் | 1,00,000 |
| கொள்முதல் | 2,50,000 |
| இறக்குமதி வரி | 14,000 |
| மனைத்துணைப் பொருள் | 14,000 |
| பொறிவகை | 1,65,000 |
| கடனீட்டுப் பத்திர மீட்பு நிதி முதலீடு | 20,000 |
| அரசு பிணைமுறிகள் (Government Bonds) | 25,000 |
| இயக்குநர் கட்டணம் | 5,500 |
| இலாப-நட்டக் கணக்கு (வ) | 18,500 |
| ஐயக் கடன் ஒதுக்கு | 2,400 |
| கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி | 20,000 |

| | |
|---|---|
| பொதுக்காப்பு | 15,000 |
| செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டு (Bills Payble) | 10,500 |
| ரொக்கம் | 500 |
| விளம்பரம் | 15,600 |
| கடனாளிகள் | 70,000 |
| பங்கு முதல் (ஒன்று ரூ. 100 வீதம் 4,000 நேர்மைப் பங்குகள், பங்கு ஒன்றுக்கு ரூ. 75 வரை செலுத்தப்பட்டுள்ளது.) | 3,00,000 |

**சரிக்கட்டுக :**

(1) கம்பெனியின் அதிகாரம் பெற்ற முதல் ரூ. 6,00,000. இது ஒன்று ரூ. 100 வீதம் 6,000 நேர்மைப் பங்குகளாக (Equity shares) பிரிக்கப்பட்டிருக்கிறது.

(2) தேய்மானம் நீக்குக :

மனைத்துணைப்பொருள் 10 சதவீதம்;

பொறிவகை 5 சதவீதம்.

(3) கொடுபட வேண்டிய கூலி ரூ. 4,500.

(4) 1973 அக்டோபர் 31-ல் முடியும் ஆண்டுக்குச் செலுத்திய காப்பீட்டு முனைமம் (Insurance Premium) ரூ. 600.

(5) கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீடுகள் மீது ரூ. 500-ம், அரசு பிணைமுறிகள் மீது ரூ. 600-ம் வட்டி கூடியுள்ளது.

(6) ஐயக் கடன் ஒதுக்கினைக் கடனாளிகள் தொகையில் 5 சதவீதம் அளவிற்கு உயர்த்துக.

(7) இறுதிச் சரக்கிருப்பு ரூ. 87,250 என மதிப்பிடப்பட்டது.

(8) செலுத்தப்பெற்ற பங்கு முதல் மீது 10 சதவீதம் பங்காதாயம் வழங்க இயக்குநர்கள் பரிந்துரை செய்திருக்கின்றனர்.

(9) கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக்கு ரூ. 10,000-மும் பொதுக்காப்பிற்கு ரூ. 15,000-மும் எடுத்துச் செல்லவேண்டும்.

## மூவேந்தர் கம்பெனியின் (வரையறு பொறுப்புடையது)

## 1973 ஜூன் 30-ல் முடியும் ஆண்டுக்கான இலாப-நட்டக் கணக்கு

பற்று | வரவு

| சென்ற ஆண்டுக் குரிய தொகை | விவரம் | நடப் பாண்டிற் குரிய தொகை | சென்ற ஆண்டுக் குரிய தொகை | விவரம் | நடப் பாண்டுக் குரிய தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| | தொடக்கச் சரக்கிருப்பு .. | 75,050 | | விற்பனை ரூ. 4,50,000 | |
| | கொள்முதல் .. | 2,50,000 | | கழி : | |
| | கூலி ரூ. 50,500 | | | உள்திருப்பம் ரூ. 13,500 | |
| | கூட்டு : கொடுபட வேண்டியது ரூ. 4,500 | | | | 4,36,500 |
| | | 55,000 | | இறுதிச் சரக்கிருப்பு .. | 87,250 |
| | இறக்குமதி கூலி .. | 14,000 | | | |
| | மொத்த இலாபம் கீ/இ .. | 1,29,700 | | | |
| | | 5,23,750 | | | 5,23,750 |
| | ஊதியம் .. | 30,800 | | | |
| | கழிவு .. | 6,400 | | | |
| | விளம்பரம் .. | 15,600 | | மொத்த இலாபம்கீ/கொ .. | 1,29,700 |

பற்று **1973 சூன் 30-ல் முடியும் ஆண்டுக்கான இலாப-நட்டக் கணக்கு**—(தொடர்ச்சி) வரவு

| சென்ற ஆண்டுக் குரிய தொகை | விவரம் | நடப்பு ஆண்டுக் குரிய தொகை | சென்ற ஆண்டுக் குரிய தொகை | விவரம் | நடப்பு ஆண்டுக் குரிய தொகை |
|---|---|---|---|---|---|
| | வரியும்,காப்பீடும் ரூ. 5,800 | ரூ. | | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீட்டு வட்டி ரூ. 500 | ரூ. |
| | **கழி** : முன்கூட்டிச் செலுத்திய காப்பீடு ரூ. 200 | 5,600 | | **கூட்டு** : கூடியுள்ளது ரூ. 500 | 1,000 |
| | கடனீட்டுப் பத்திர வட்டி ரூ. 3,000 | | | கூடியுள்ள அரசு பிணைமுறிகள் மீது வட்டி .. | 600 |
| | **கூட்டு** : செலுத்த வேண்டியது ரூ. 3,000 | 6,000 | | தள்ளுபடி .. | 750 |
| | இயக்குநர் கட்டணம் .. | 5,500 | | | |
| | தேய்மானம் : மனைத்துணைப் பொருள் ரூ. 1,400 | | | | |
| | பொறிவகை ரூ. 8,250 | 9,650 | | | |
| | ஐயக் கடன் ஒதுக்கு ரூ. 3,500 | | | | |
| | **கழி** : பழைய ஒதுக்கு ரூ. 2,400 | 1,100 | | | |
| | நிகர இலாபம் கீ/இ .. | 51,400 | | | |
| | | 1,32,050 | | | 1,32,050 |

## 1973 ஜூன் 30-க்குரிய இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கு
(Profit and Loss Appropriation Account)

பற்று | | | வரவு

| சென்ற ஆண்டுக் குரிய தொகை | விவரம் | நடப்பாண்டிற் குரிய தொகை | சென்ற ஆண்டுக் குரிய தொகை | விவரம் | நடப்பு ஆண்டுக் குரிய தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| | பொதுக்காப்பு .. | 15,000 | | இருப்பு கீ/கொ .. | 18,500 |
| | கடனீட்டுப் பத்திர மீட்பு நிதி | 11,000 | | நிகர இலாபம் .. | 51,400 |
| | திட்டமிட்ட பங்காதாயம் .. | 29,900 | | | |
| | இருப்பு கீ/இ .. | 14,000 | | | |
| | | 69,900 | | | 69,900 |

## மூவேந்தர் கம்பெனியின் (வரையறு பொறுப்புடையது)
## 1973 சூன் 30-க்கான இருப்பு நிலைக் குறிப்பு

பற்று ... வரவு

| சென்ற ஆண்டுக்குரிய தொகை | பொறுப்புகள் | நடப்பு ஆண்டுக்குரிய தொகை | சென்ற ஆண்டுக்குரிய தொகை | சொத்துகள் | நடப்பு ஆண்டுக்குரிய தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| | **பங்கு முதல்** | | | **நிலைச் சொத்துகள்** | |
| | அதிகாரம் பெற்றது : | | | வாணிக நற்பெயர் .. | 50,000 |
| | ஒன்று ரூ. 100 மதிப்புடைய | | | நிலமும், கட்டடமும் .. | 1,50,000 |
| | 6,000 நேர்மைப் பங்குகள் | 6,00,000 | | பொறிவகை ரூ. 1,65,000 | |
| | | | | **கழி**: தேய்மானம் ரூ. 8,250 | |
| | | | | | 1,56,750 |
| | வெளியிட்டதும், செலுத்தப் | | | மனைத்துணைப்பொருள் 14,000 | |
| | பெற்றதும் : | | | **கழி** : தேய்மானம் ரூ. 1,400 | |
| | ஒன்று ரூ. 100 மதிப்புடைய | | | | 12,600 |
| | 4,000 நேர்மைப் பங்குகள் | | | | |
| | பங்கொன்றுக்கு ரூ. 75 | | | **முதலீடுகள்** | |
| | வரை அழைக்கப்பெற்றது | | | அரசு பிணைமுறிகள் .. | 25,000 |
| | ரூ. 3,00,000 | | | | |
| | **கழி** : அழைப்பு | | | கடனீட்டுப் பத்திர மீட்பு நிதி | 20,000 |
| | நிலுவை ரூ. 1,000 | 2,99,000 | | முதலீடு .. | |

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| **காப்புகளும் மிகுதியும்** | | **நடப்புச் சொத்துகளும் கடன்களும் முன்பணமும்** | |
| பொதுக்காப்பு ரூ. 15,000 | | (அ) நடப்புச் சொத்துகள்: | |
| **கூட்டு :** நடப்பாண்டில் | | கூடியுள்ள வட்டி : | |
| ஒதுக்கியது ரூ. 15,000 | 30,000 | அரசு பிணைமுறி மீது | |
| கடனீட்டுப் பத்திர மீட்புநிதி | | வட்டி ரூ. 600 | |
| ரூ. 20,000 | | கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி | 1,100 |
| **கூட்டு :** நடப்பாண்டில் | | முதலீட்டு வட்டி ரூ. 500 | 87,250 |
| ஒதுக்கியது ரூ. 11,000 | 31,000 | | |
| இலாப-நட்டக் க/கு .. | 14,000 | இறுதிச் சரக்கிருப்பு .. | |
| **பிணைக் கடன் :** | | கடனாளிகள் ரூ. 70,000 | |
| 6 சதவீதம் கடனீட்டுப் | | **கழி** : ஐயக்கடன் | |
| பத்திரங்கள் .. | 1,00,000 | ஒதுக்கு ரூ. 3,500 | 66,500 |
| செலுத்தவேண்டிய கடனீட்டுப் | | ரொக்கம் .. | 500 |
| பத்திர வட்டி .. | 3,000 | | |

## 1973 ஜூன் 30-இற்கான இருப்பு நிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)

| சென்ற ஆண்டுக் குரிய தொகை | பொறுப்புகள் | நடப்பு ஆண்டுக் குரிய தொகை | சென்ற ஆண்டுக் குரிய தொகை | சொத்துகள் | நடப்பு ஆண்டுக் குரிய தொகை |
|---|---|---|---|---|---|
| | **பிணையில்லாக் கடன்** | | | (ஆ) கடன்களும், முன் பண மும் : முன்கூட்டிச் செலுத்திய காப்பீட்டு முனைமம் .. | 200 |
| | வங்கிமேல்வரைப் பற்று .. | 15,700 | | | |
| | **நடப்புப் பொறுப்புகளும் ஒதுக்குகளும்** | | | | |
| | அ. நடப்புப் பொறுப்புகள் | | | | |
| | செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டு | 10,500 | | | |
| | கடனீந்தோர் .. | 32,300 | | | |
| | கொடுபட வேண்டிய கூலி | 4,500 | | | |
| | ஆ. ஒதுக்குகள் : | | | | |
| | திட்டமிட்ட பங்காதாயம் .. | 29,900 | | | |
| | | 5,69,900 | | | 5,69,900 |

## எடுத்துக்காட்டு 79

தமிழ்நாட்டு வாணிக நிறுவனம் லிமிடெட்டின் அதிகாரம் பெற்ற பங்குமுதல் ரூ. 6,00,000. இது பங்கு ஒன்று ரூ. 10 மதிப்புடைய 20,000-8 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளாகவும், ஒன்று ரூ. 10 மதிப்புடைய 40,000 நேர்மைப் பங்குகளாகவும் பிரிக்கப்பட்டுள்ளது.

கீழ்க்கண்ட இருப்புகளிலிருந்து 1974 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான இலாப-நட்டக் கணக்கையும், இலாப நட்டப் பகிர்வுக் கணக்கையும், அந் நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க :

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| **பங்கு முதல்** | | |
| 8 சதவீதம் முன்னுரிமைப் பங்குகள் (Preference Shares) | | 1,00,000 |
| நேர்மைப் பங்குகள் (Equity Shares) | | 2,00,000 |
| நிலமும் கட்டடமும் | 1,60,000 | |
| சரக்கிருப்பு (1974 சனவரி 1) | 90,600 | |
| எடுத்துக்காட்டமைவு (Patterns) | 10,000 | |
| புனே பொருளுரிமை (Patents) | 20,000 | |
| கொள்முதல் | 4,50,000 | |
| திருப்பங்கள் | 6,000 | 7,600 |
| கடனாளிகளும் கடனீந்தோரும் | 60,000 | 52,400 |
| ஊதியம் | 80,200 | |
| கூலி | 1,20,000 | |
| பயணச் செலவுகள் | 5,200 | |
| பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு (Bills Receivable) | 15,000 | |
| பங்கு முனைமம் | | 15,000 |
| மேம்பாட்டுத் தள்ளுபடிக் காப்பு | | 25,000 |
| வருமான வரிக் காப்பு | | 60,400 |
| நடப்பு ஆண்டில் செலுத்திய வருமான வரி | 54,400 | |
| காப்பீடும் வரியும் | 7,500 | |
| விளம்பரம் | 13,600 | |
| தள்ளுபடி அளித்ததும் பெற்றதும் | 3,500 | 4,700 |
| இயக்குநர் கட்டணம் | 12,500 | |

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| எரிபொருள், மின்விசை | 10,400 | |
| முதலீடுகள் (ஜூலை 1, 1974-ல் வாங்கப் பட்ட 8 சதவீதம் பத்திரங்கள்) | 20,000 | |
| பொதுச் செலவுகள் | 18,200 | |
| வராக் கடன் | 5,700 | |
| விற்பனை | | 8,20,000 |
| பிணையமற்ற கடன் | | 10,200 |
| பொறிவகை | 1,25,000 | |
| மோட்டார் வண்டிகள் | 45,700 | |
| எழுதுபொருளும் அச்சுக் கூலியும் | 3,500 | |
| 1974 ஜூன் 30-ல் முடியும் அரை ஆண்டுக்கான இடைக்காலப் பங்காதாயம் : | | |
| முன்னுரிமை ரூ. 4,000 | | |
| நேர்மை ரூ. 10,000 | | |
| | 14,000 | |
| வங்கிக் கடன் (6 சதவீதம் வட்டியில் 1—5—74-ல் வாங்கியது) | | 50,000 |
| ரொக்கம் | 2,500 | |
| வங்கி | 12,300 | |
| சுமைக் கூலி | 5,200 | |
| பங்காதாயச் சமன்செய் காப்பு | | 15,000 |
| இலாப-நட்டக் கணக்கு | | 12,700 |
| பங்கு வெளியீட்டுக் கழிவு | 3,000 | |
| ஐயக் கடன் ஒதுக்கு | | 2,500 |
| வங்கிக் கடன் மீது வட்டி | 1,500 | |

கீழ்க்கண்டவற்றைச் சரிக்கட்டுக :

(1) 1974 திசம்பர் 31-ல் இறுதிச் சரக்கிருப்பு ரூ. 1,25,500 என மதிப்பிடப்பட்டது.

(2) எடுத்துக்காட்டமைவு, புனை பொருளுரிமை, மோட்டார் வண்டிகள் மீது 20 சதவீதம் தேய்மானம் நீக்குக.

(3) செலுத்தவேண்டியவை :

தணிக்கைக் கட்டணம் ரூ. 2,500;

ஊதியம் ரூ. 7,800.

(4) ஐயக் கடன் ஒதுக்கினைக் கடனாளிகளில் 5 சதவீதம் அளவில் வைத்திருக்க; 2 சதவீதம் அளவில் தள்ளுபடிக் காப்பும் ஏற்படுத்துக.

(5) பங்கு வெளியீட்டுக் கழிவுத் தொகையில் $\frac{1}{3}$ பங்கை நீக்குக.

(6) கடந்த ஆண்டுகட்குரிய வருமான வரிக்கான பொறுப்பு ஏதுமில்லை. 1974ஆம் ஆண்டுக்கு வருமான வரிக்காக ரூ. 40,000 ஒதுக்க வேண்டியுள்ளது.

(7) நடப்பு ஆண்டு இலாபத்திலிருந்து கீழ்க்கண்டவாறு தொகை ஒதுக்க இயக்குநர்கள் முடிவு செய்தனர்.

(அ) பங்காதாயம் சமன்செய் காப்பு ரூ. 10,000
மேம்பாட்டுத் தள்ளுபடிக் காப்பு ரூ. 15,000

(ஆ) நேர்மைப் பங்கு மீது 10 சதவீதம் இறுதிப் பங்காதாயமும், முன்னுரிமைப் பங்குமீது மீதி அரை ஆண்டுக்குப் பங்காதாயமும் வழங்க இயக்குநர்கள் பரிந்துரை செய்திருக்கின்றனர்.

(8) தொழிலர் நட்டஈட்டுக் கோரிக்கை ரூ. 3,000-த்தைக் கம்பெனி ஏற்றுக்கொள்ள மறுக்க, அது வழக்கில் உள்ளது.

## தமிழ்நாடு வாணிக நிறுவனம் லிமிடெட்
## 1974 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான இலாப-நட்டக் கணக்கு

பற்று | வரவு

| சென்ற ஆண்டுக்குரிய தொகை | விவரம் | நடப்பு ஆண்டுக்குரிய தொகை | சென்ற ஆண்டுக்குரிய தொகை | விவரம் | நடப்பு ஆண்டுக்குரிய தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| | தொடக்கச் சரக்கிருப்பு .. | 90,600 | | விற்பனை ரூ. 8,20,000 | |
| | கொள்முதல் ரூ. 4,50,000 | | | கழி: திருப்பம் ரூ. 6,000 | |
| | கழி: திருப்பம் ரூ. 7,600 | 4,42,400 | | | 8,14,000 |
| | சுமைக் கூலி .. | 5,200 | | இறுதிச் சரக்கிருப்பு .. | 1,25,500 |
| | கூலி .. | 1,20,000 | | | |
| | எரிபொருள், மின்விசை .. | 10,400 | | | |
| | மொத்த இலாபம் கீ/இ .. | 2,70,900 | | | |
| | | 9,39,500 | | | 9,39,500 |

| | | | | |
|---|---|---|---|---|
| ஊதியம் ரூ. 80,200<br>**கூட்டு :** செலுத்த<br>வேண்டியது ரூ. 7,800 | | 88,000 | மொத்த இலாபம் கீ/கொ | 2,70,900 |
| | | | தள்ளுபடி .. | 4,700 |
| | | | கூடியுள்ள முதலீட்டு வட்டி .. | 800 |
| பயணச் செலவுகள் .. | | 5,200 | | |
| காப்பீடும், வரிகளும் .. | | 7,500 | | |
| விளம்பரம் .. | | 13,600 | | |
| கடனாளிகள் மீது தள்ளுபடி<br>ஒதுக்கு ரூ. 1,140<br>**கூட்டு :** அளித்த<br>தள்ளுபடி ரூ. 3,500 | | 4,640 | | |
| இயக்குநர் கட்டணம் .. | | 12,500 | | |
| செலுத்தவேண்டிய<br>தணிக்கைக் கட்டணம் .. | | 2,500 | | |
| பொதுச் செலவுகள் .. | | 18,200 | | |

பற்று **1974 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான இலாப-நட்டக் கணக்கு—(தொடர்ச்சி)** வரவு

| சென்ற ஆண்டுக் குரிய தொகை | விவரம் | | நடப்பு ஆண்டுக் குரிய தொகை | சென்ற ஆண்டுக் குரிய தொகை | விவரம் | நடப்பு ஆண்டுக் குரிய தொகை |
|---|---|---|---|---|---|---|
| | | | ரூ. | | | ரூ. |
| | புதிய ஐயக் கடன் ஒதுக்கு ரூ. | 3,000 | | | | |
| | **கூட்டு :** வராக்கடன் ரூ. | 5,700 | | | | |
| | | 8,700 | | | | |
| | **கழி :** பழைய ஒதுக்கு ரூ. | 2,500 | | | | |
| | | | 6,200 | | | |
| | எழுதுபொருளும், அச்சுக் கூலியும் .. | | 3,500 | | | |
| | வங்கிக் கடன் மீது வட்டி ரூ. | 1,500 | | | | |
| | **கூட்டு :** செலுத்த வேண்டியது ரூ. | 500 | | | | |
| | | | 2,000 | | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தேய்மானம் : | | | | | |
| எடுத்துக்காட்டமைவுகள் : | | | | | |
| ரூ. | 2,000 | | | | |
| புனைபொருள் உரிமை | | | | | |
| ரூ. | 4,000 | | | | |
| மோட்டார் வண்டிகள் | | | | | |
| ரூ. | 9,140 | | | | |
| | | 15,140 | | | |
| பங்கு வெளியீட்டுக் கழிவு நீக்கப்படுவது | | 1,000 | | | |
| வருமானவரி ஒதுக்கு | | 40,000 | | | |
| நிகர இலாபம் கீ/இ .. | | 56,420 | | | |
| | | 2,76,400 | | | 2,76,400 |

## இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கு

பற்று | வரவு

| சென்ற ஆண்டுக் குரிய தொகை | விவரம் | நடப்பு ஆண்டுக் குரிய தொகை | சென்ற ஆண்டுக் குரிய தொகை | விவரம் | நடப்பு ஆண்டுக் குரிய தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| | இடைக்கால பங்காதாயம் : | | | இருப்பு கீ/கொ .. | 12,700 |
| | முன்னுரிமை ரூ. 4,000 | | | நிகர இலாபம் கீ/கொ .. | 56,420 |
| | நேர்மை ரூ. 10,000 | | | (சென்ற ஆண்டுக்குரிய) வரு | |
| | | 14,000 | | மான வரிக்காப்பில் மிச்சம் | 6,000 |
| | திட்டமிட்ட பங்காதாயம் : | | | | |
| | முன்னுரிமை ரூ. 4,000 | | | | |
| | நேர்மை ரூ. 20,000 | | | | |
| | | 24,000 | | | |
| | பங்காதாயச் சமன்செய் காப்பு | 10,000 | | | |
| | மேம்பாட்டுத் தள்ளுபடிக் காப்பு .. | 15,000 | | | |
| | இருப்பு கீ/இ .. | 12,120 | | | |
| | | 75,120 | | | 75,120 |

**தமிழ்நாடு வாணிக நிறுவனம்**
**1974 திசம்பர் 31-க்குரிய இருப்புநிலைக் குறிப்பு**

| சென்ற ஆண்டுக் குரிய தொகை | பொறுப்புகள் | நடப்பு ஆண்டுக் குரிய தொகை | சென்ற ஆண்டுக் குரிய தொகை | சொத்துகள் | | நடப்பு ஆண்டுக் குரிய தொகை |
|---|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | | ரூ. |
| | **பங்குமுதல் :** | | | **நிலைச் சொத்துகள் :** | | |
| | அதிகாரம் பெற்றது : | | | நிலமும் கட்டடமும் .. | | 1,60,000 |
| | | | | பொறிவகை .. | | 1,25,000 |
| | ஒன்று ரூ. 10 மதிப்புடைய 20,000-8 சதவீதம் முன்னுரிமைப் பங்குகள் .. | 2,00,000 | | புனைபொருள் உரிமை | ரூ. 20,000 | |
| | ஒன்று ரூ. 10 மதிப்புடைய 40,000 நேர்மைப் பங்குகள் .. | 4,00,000 | | **கழி** : தேய்மானம் | ரூ. 4,000 | 16,000 |
| | | | | எடுத்துக்காட்டமைவுகள் | ரூ. 10,000 | |
| | | 6,00,000 | | **கழி**: தேய்மானம் | ரூ. 2,000 | 8,000 |

**1974 திசம்பர் 31-க்குரிய இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)**

| சென்ற ஆண்டுக் குரிய தொகை | பொறுப்புகள் | நடப்பு ஆண்டுக் குரிய தொகை | சென்ற ஆண்டுக் குரிய தொகை | சொத்துகள் | நடப்பு ஆண்டுக் குரிய தொகை |
|---|---|---|---|---|---|
| | **வெளியிடப்பட்ட, செலுத்தப் பெற்ற முதல் :** | ரூ. | | மோட்டார் வண்டிகள் ரூ. 45,700 | ரூ. |
| | ஒன்று ரூ. 10 மதிப்புடைய 10,000-8சதவீதம் முன்னுரிமைப் பங்குகள், முழுதும் செலுத்தப்பெற்றவை .. | 1,00,000 | | **கழி :** தேய்மானம் ரூ. 9,140 | 36,560 |
| | | | | **முதலீடுகள் :** .. | 20,000 |
| | ஒன்று ரூ. 10 மதிப்புடைய 20,000 நேர்மைப் பங்குகள் முழுதும் செலுத்தப் பெற்றவை .. | 2,00,000 | | நடப்புச் சொத்துகளும், கடனும், முன்பணமும் : | |
| | | | | அ. நடப்புச் சொத்துகள் : | |
| | | | | கூடியுள்ள முதலீட்டு வட்டி .. | 800 |
| | | | | இறுதிச் சரக்கிருப்பு .. | 1,25,500 |
| | **காப்புகளும், மிகுதியும் :** | | | கடனாளிகள் ரூ. 60,000 | |
| | மேம்பாட்டுத் தள்ளுபடிக் காப்பு ரூ. 25,000 | | | **கழி :** ஐயக் கடன் காப்பு ரூ. 3,000 | |
| | **கூட்டு :** நடப்பாண்டில் சேர்த்தது ரூ. 15,000 | 40,000 | | ரூ. 57,000 | |
| | பங்கு முனைமம் .. | 15,000 | | **கழி :** தள்ளுபடிக் காப்பு ரூ. 1,140 | 55,860 |

| | | | |
|---|---|---|---|
| பங்காதாயச் சமன்செய் காப்பு ரூ. 15,000 | | வங்கி .. | 12,300 |
| கூட்டு : நடப்பாண்டில் சேர்த்தது ரூ. 10,000 | | ரொக்கம் .. | 2,500 |
| | 25,000 | ஆ. கடனும் முன்பணமும் : | |
| இலாப-நட்டக் கணக்கு .. | 12,120 | பெறுதற்குரிய மாற்றுச் சீட்டு .. | 15,000 |
| **பிணைக் கடன் :** | | **பல்வகைச் செலவினம் :** | |
| வங்கிக் கடன் (கட்டடம், பொறிவகை ஆகியவற்றின் அடைமானத்தின் பேரில்) .. | 50,000 | பங்கு வெளியீட்டுக் கழிவு ரூ. 3,000 | |
| | | **கழி** : நீக்கப்பட வேண்டியது ரூ. 1,000 | |
| செலுத்தவேண்டிய வட்டி .. | 500 | | 2,000 |
| **பிணையில்லாக் கடன் :** | | | |
| கடன் .. | 10,200 | | |

## 1974 திசம்பர் 31-க்குரிய இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)

| சென்ற ஆண்டுக் குரிய தொகை | பொறுப்புகள் | நடப்பு ஆண்டுக் குரிய தொகை | சென்ற ஆண்டுக் குரிய தொகை | சொத்துகள் | நடப்பு ஆண்டுக் குரிய தொகை |
|---|---|---|---|---|---|
| | **நடப்புப் பொறுப்புகளும் ஒதுக்குகளும் :** | ரூ. | | | ரூ. |
| | அ. நடப்புப் பொறுப்புகள் : | | | | |
| | கடனீந்தோர் .. | 52,400 | | | |
| | செலுத்தவேண்டியவை: | | | | |
| | தணிக்கைக் கட்டணம் ரூ. 2,500 | | | | |
| | ஊதியம் ரூ. 7,800 | 10,300 | | | |
| | ஆ. ஒதுக்குகள் : | | | | |
| | வருமானவரி ஒதுக்கு .. | 40,000 | | | |
| | திட்டமிட்ட பங்காதாயம் .. | | | | |
| | முன்னுரிமை ரூ. 4,000 | | | | |
| | நேர்மை ரூ. 20,000 | 24,000 | | | |
| | | 5,79,520 | | | 5,79,52 |

**குறிப்பு :** ரூ. 3,000-க்கான தொழிலர் நட்டஈட்டுக் கோரிக்கை பற்றிய வழக்கொன்று நீதிமன்றத்தில் உள்ளது. கம்பெனி இதனை ஒப்புக்கொள்ளவில்லை.

**விளக்கக் குறிப்பு :**

**1. கூடியுள்ள முதலீட்டு வட்டி**

முதலீடுகள் 1974 ஜூலை 1-ல் வாங்கப்பட்டிருப்பதால், அரையாண்டு வட்டி பெறவேண்டியுள்ளது. எனவே, ரூ. 20,000 மீது 8 சதவீதம் வட்டி அரையாண்டிற்குக் கணக்கிடப்படுகிறது.

**2. வங்கிக் கடன் மீது வட்டி**

வங்கிக் கடன் 1—5—1974-ல் வாங்கப்பட்டது. எனவே, இதன்மீது 8 திங்கட்கான வட்டியை முதலில் கணக்கிடவேண்டும்.

$$50,000 \times \frac{6}{100} \times \frac{8}{12}$$

| | | |
|---|---|---|
| | = ரூ. | 2,000 |
| கழி : முன்னரே செலுத்தியது | ரூ. | 1,500 |
| ∴ இன்னும் செலுத்தவேண்டியது | ரூ. | 500 |

**3. வருமான வரி**

| | ரூ. |
|---|---|
| சென்ற ஆண்டில் வருமான வரிக்காக ஒதுக்கியது | 60,400 |
| **கழி:** அவ்வாண்டு வரி செலுத்தியது | 54,400 |
| சென்ற ஆண்டு ஒதுக்கிய வருமான வரியில் மிச்சமுள்ளது | 6,000 |

சென்ற ஆண்டில் கூடுதலாக ஒதுக்கப்பட்ட இத் தொகை ரூ. 6,000ஐ இவ் வாண்டின் ஆதாயமாகக் கொள்ளவேண்டும். ஆனுல், இது வாணிக நடவடிக்கைகளினுல் உண்டான ஆதாய மன்று. எனவே, இது இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கில் வரவு வைக்கப்படுகிறது.

**4. தொழிலர் நட்ட ஈட்டுக் கோரிக்கை**

இது ஒரு நிகழ்வடைப் பொறுப்பாகும் (Contingent liability) வழக்கில் உள்ளது. இத்தகைய நிகழ்வடைப் பொறுப்புகளை இருப்புநிலைக் குறிப்பின்கீழ் அடிக்குறிப்பாகக் காட்டவேண்டும் என்று கம்பெனிச் சட்டம் கூறுகிறது.

## எடுத்துக்காட்டு 80

கோவை நூற்பாலை லிமிட்டெடின் 1970 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான இருப்பாய்வு கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :

| | | பற்று | வரவு |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| பங்குமுதல் | | | 75,00,000 |
| நிலம் | | 7,30,000 | |
| கட்டடம் | | 13,00,000 | |
| பொறிவகை | | 80,00,000 | |
| கடனாளிகள் (பிணையமற்றது) | | 10,84,000 | |
| சரக்கிருப்பு (1–1–1972) : | | | |
| பஞ்சு | 20,50,000 | | |
| நூல் | 5,50,000 | | |
| துணி | 35,00,000 | | |
| கழிவுப் பஞ்சு (Cotton waste) | 10,000 | | |
| | | 61,10,000 | |
| பொதுக்காப்பு | | | 20,00,000 |
| தேய்மானம் | | | 30,00,000 |
| முதலீட்டுக் காப்பு | | | 1,60,000 |
| வட்டி | | 90,000 | |
| தரகு | | 30,000 | |
| கட்டடம் பழுது பார்க்கும் செலவு | | 20,000 | |
| முன்கூட்டிச் செலுத்திய வருமான வரி | | 25,10,000 | |
| ஐயக் கடன் | | | 40,000 |
| விற்பனைக் கழிவு | | 50,000 | |
| விளம்பரம் | | 40,000 | |
| முதலீடுகள் (சந்தை மதிப்பு ரூ. 32,20,000) | | 30,00,000 | |
| தொழிலர் பணிக்கொடைக் காப்பு | | | 10,00,000 |
| வரி ஒதுக்கு | | | 32,30,000 |
| கடனீந்தோர் | | | 16,70,000 |
| செலுத்தவேண்டிய செலவினங்கள் | | | 90,000 |
| அலுவலர் நலச் செலவுகள் | | 75,000 | |
| இயக்குநர் கட்டணம் | | 20,000 | |
| கொள்முதல் — பஞ்சு | | 1,66,40,000 | |

| | | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|
| பயன்படுத்திய பண்டம் (Stores consumed) | | 25,30,000 | |
| எரிபொருளும், மின்விசையும் | | 18,75,000 | |
| விற்பனை : | | | |
| துணி | 3,24,00,000 | | |
| நூல் | 10,00,000 | | |
| கழிவுப் பஞ்சு | 50,000 | | |
| | | | 3,34,50,000 |
| பொறி வாங்கக் கொடுத்த முன் பணம் | | 50,000 | |
| மனைத்துணைப்பொருள் | | 30,000 | |
| மோட்டார் வண்டிகள் | | 70,000 | |
| மின் அமைப்புகள் | | 1,70,000 | |
| வண்ணந்தூவிப் பொறிகள் (Sprinklers) | | 2,00,000 | |
| முதலீட்டு வட்டி | | | 45,000 |
| முதலீடுகள் மீது பெற்ற பங்காதாயம் | | | 1,50,000 |
| கைவசமுள்ள பண்டம் | | 10,25,000 | |
| காப்பீடு | | 50,000 | |
| ரொக்கம் | | 20,000 | |
| வங்கி நடப்புக் கணக்கு | | 5,40,000 | |
| செலுத்திய வரி | | 30,00,000 | |
| மாற்றுக் கட்டணம் | | | 2,000 |
| இயக்குநர்களிடமிருந்து பெற்ற பிணையற்ற கடன் | | | 7,20,000 |
| வங்கிக் கடன் (சரக்கு அடைமானத்தின் பேரில்) | | | 5,00,000 |
| இலாப-நட்டக் கணக்கு | | | 2,50,000 |
| உரிமை கோராப் பங்காதாயம் | | | 22,000 |
| பொது வைப்புகள் (Public deposits) | | | 10,00,000 |
| பிற அலுவலகச் செலவுகள் | | 4,50,000 | |
| நீக்கப்பெற்ற வராக் கடன் வசூலானது | | | 5,000 |
| இரயில்வேக் கட்டணம் | | 25,000 | |
| கூலியும் மேலூதியமும் | | 35,30,000 | |
| ஊதியம் | | 15,80,000 | |
| முதலீடுகள் விற்றதில் இலாபம் | | | 10,000 |
| | | 5,48,62,000 | 5,48,62,000 |

கீழ்க்கண்டவற்றைச் சரிக்கட்டுக :

1. கம்பெனியின் அதிகாரம் பெற்ற பங்கு முதலானது ஒன்று ரூ. 100 மதிப்புடைய 40,000–6 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளாகவும், ஒன்று ரூ. 100 மதிப்புடைய 60,000 நேர்மைப் பங்குகளாகவும் பிரிக்கப்பட்டிருந்தது. இவற்றில் 2,500 முன் னுரிமைப் பங்குகளும், 50,000 நேர்மைப் பங்குகளும் வெளியிடப் பட்டிருந்தன.

2. 1969 திசம்பர் 31வரை நிலைச் சொத்துகள் மீது ஒதுக்கப்பட்டுள்ள தேய்மானம் வருமாறு :

| | ரூ. |
|---|---|
| நிலம் | — |
| கட்டடம் | 3,00,000 |
| பொறிவகை | 25,30,000 |
| மனைத்துணைப்பொருள் | 10,000 |
| மோட்டார் வண்டிகள் | 30,000 |
| மின் அமைப்புகள் | 40,000 |
| வண்ணந்துவிப் பொறிகள் (Sprinklers) | 90,000 |
| | 30,00,000 |

3. நடப்பு ஆண்டில் பொறிவகை வாங்கியதும் விற்றதும் முறையே ரூ. 25,00,000, ரூ. 15,00,000 ஆகும்.

4. பொறிவகை மீது ரூ. 4,00,000-மும், மோட்டார் வண்டிகள் மீது ரூ. 10,000-மும், மின் அமைப்புகள் மீது ரூ. 20,000-மும் நடப்பு ஆண்டிற்காகத் தேய்மானம் ஒதுக்குக.

5. முதலீடுகள் மீது கூடியுள்ள வட்டி ரூ. 10,000; அறி விக்கப்பட்டும் கைக்கு வந்துசேராத பங்காதாயம் ரூ. 8,000.

6. பொது வைப்புகள் மீது கூடியுள்ள வட்டி ரூ. 75,000.

7. ஏட்டுக் கடன்களில் ரூ. 3,84,000 ஆனவை 6 திங் கட்கு மேலாக நிலுவையிலுள்ளது.

ரூ. 25,000 ஐயக் கடனாகும்.

உறுதியாக வரக்கூடிய கடன்களில் ரூ. 30,000 இயக்குநர்களிடமிருந்து வரவேண்டியது.

(நடப்பு ஆண்டில் உயரளவுக் கடன் ரூ. 1,25,000 இருந்தது).

ரூ. 50,000 கம்பெனியின் அலுவலர்களிடமிருந்து வரவேண்டியது.

(நடப்பு ஆண்டில் உயரளவுக் கடன் ரூ. 1,40,000 இருந்தது.)

8. முதலீடுகள் வாங்கிய விலையில் கீழ்க்கண்டவாறு மதிப்பிடப்பட்டுள்ளன :

| | | ரூ. |
|---|---|---|
| அ. | 7,00,000 மதிப்புள்ள 4 சதவீதம் தமிழக அரசுக் கடன் | 6,00,000 |
| ஆ. | 2,50,000 முக மதிப்புள்ள $4\frac{1}{2}$ சதவீதம் தமிழக மின்வாரியக் கடன் | 2,00,000 |
| இ. | ரூ. 3,50,000 பெயரளவு மதிப்புள்ள 6 சதவீதம் ஆந்திரப் பிரதேச துறைமுகக் கடனீட்டுப் பத்திரங்கள் | 3,00,000 |
| ஈ. | ஒன்று ரூ. 100 மதிப்புடைய 10,000 7 சதவீதம் மைசூர் கெமிக்கல்ஸ் லிமிட்டெடின் முன்னுரிமைப் பங்குகள் | 9,00,000 |
| உ. | ஒன்று ரூ. 100 மதிப்புடைய சேலம் இருப்பாலை லிமிட்டெடின் 9,000 நேர்மைப் பங்குகள் | 10,00,000 |
| | (இவற்றின் சந்தை மதிப்பு ரூ. 52,20,000) | 30,00,000 |

9. மேலாண்மை இயக்குநரின் கழிவுத் தொகைக்காக ரூ. 24.000-மும், வரிக்காக ரூ. 45.00,000-மும் ஒதுக்குக.

10. பொதுக்காப்புக்கு ரூ. 1,50,000-ம், தொழிலர் பணிக்கொடைக் காப்புக்கு ரூ. 50,000-மும் இயக்குநர்கள் மாற்று கின்றனர்.

முன்னுரிமைப் பங்குகள் மீது 6 சதவீதமும், சாதாரணப் பங்குகள் மீது 20 சதவீதமும் பங்காதாயம் வழங்க இயக்குந ரவை பரிந்துரை செய்துள்ளது.

11. 1970 திசம்பர் 31-ல் இறுதிச் சரக்கிருப்புக் கீழ்க்கண்ட வாறு மதிப்பிடப்பட்டது :

| | ரூ. |
|---|---|
| பஞ்சு (அடக்கவிலை அல்லது சந்தைவிலை இதில் எது குறைவாகவுள்ளதோ அதில் மதிப்பிடப்பட்டது) | 20,25.000 |
| நூல் (அடக்கவிலையில்) | 2,10,000 |
| கழிவுப் பஞ்சு (அடக்கவிலையில்) | 5,000 |
| துணி (அடக்கவிலையில்) | 36,80,000 |
| | 59,20,000 |

12. தொழிலர் கோரும் மேலூதியம் ரூ. 4,00,000 ஆகும். ஆனால், கணக்கில் ரூ. 2,50,000-ற்குத் தொகை ஒதுக்கவேண்டும்.

விடை :

## கோவை நூற்பாலை லிமிட்டெடின்

### 1970 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டிற்கான வாணிக இலாப-நட்டக் கணக்கு

| பற்று | | ரூ. | | | வரவு ரூ. |
|---|---|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு : | | | விற்பனை : | | |
| பஞ்சு | 20,50,000 | | துணி | 3,24,00,000 | |
| நூல் | 5,50,000 | | நூல் | 10,00,000 | |
| துணி | 35,00,000 | | கழிவுப் பஞ்சு | 50,000 | |
| கழிவுப் பஞ்சு | 10,000 | | | | 3,34,50,000 |
| | | 61,10,000 | | | |
| கொள்முதல் — பஞ்சு | | 1,66,40,000 | இறுதிச் சரக்கிருப்பு : | | |
| பயன்படுத்திய பண்டம் | | 25,30,000 | பஞ்சு | 20,25,000 | |
| இரயில் கட்டணம் | | 25,000 | நூல் | 2,10,000 | |
| எரிபொருளும், மின்விசையும் | | 18,75,000 | துணி | 36,80,000 | |
| கூலியும், மேலூதியமும் | | 35,30,000 | கழிவுப் பஞ்சு | 5,000 | |
| மொத்த இலாபம் கீ/இ | | 86,60,000 | | | 59,20,000 |
| | | 3,93,70,000 | | | 3,93,70,000 |
| ஊதியம் | | 15,80,000 | மொத்த இலாபம் கீ/கொ | | 86,60,000 |
| அலுவலகச் செலவு | | 4,50,000 | முதலீட்டு வட்டி | 45,000 | |
| கட்டடம் பழுதுபார்க்கும் செலவு | | 20,000 | கூட்டு : கூடியுள்ளது | 10,000 | |
| காப்பீடு | | 50,000 | | | 55,000 |

**வாணிக இலாப-நட்டக் கணக்கு—(தொடர்ச்சி)**

| பற்று | | | வரவு | | |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| அலுவலர் நலச் செலவுகள் .. | | 75,000 | பங்காதாயம் .. | 1,50,000 | |
| இயக்குநர் கட்டணம் .. | | 20,000 | | | |
| விளம்பரம் .. | | 40,000 | கூட்டு : கூடியுள்ளது .. | 8,000 | |
| விற்பனைக் கழிவு .. | | 50,000 | | | 1,58,000 |
| வட்டி .. | | 90,000 | | | |
| தரகு .. | | 30,000 | மாற்றுக் கட்டணம் .. | | 2,000 |
| கொடுபடவேண்டிய மேலாண்மை இயக்குநர் கழிவுத் தொகை .. | | 24,000 | நீக்கப்பெற்ற வராக்கடன் வசூலானது | | 5,000 |
| வருமானவரி ஒதுக்கு .. | | 45,00,000 | | | |
| பொது வைப்புகள் மீது தரவேண்டிய வட்டி .. | | 75,000 | முதலீடுகள் விற்றதில் இலாபம் .. | | 10,000 |
| தொழிலர் மேலூதிய ஒதுக்கு .. | | 2,50,000 | | | |
| தேய்மானம் : | | | | | |
| பொறிவகை .. | 4,00,000 | | | | |
| மோட்டார் வண்டிகள் .. | 10,000 | | | | |
| மின் அமைப்புகள் .. | 20,000 | | | | |
| | | 4,30,000 | | | |
| நிகர இலாபம் கீ/இ .. | | 12,06,000 | | | |
| | | 88,90,000 | | | 88,90,000 |

## 1970 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டிற்காக இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கு

| பற்று | | ரூ. | வரவு | ரூ. |
|---|---|---|---|---|
| பொதுக்காப்பு .. | | 1,50,000 | கடந்த ஆண்டின் இருப்பு கீ/கொ .. | 2,50,000 |
| தொழிலர் பணிக்கொடைக் காப்பு .. | | 50,000 | நடப்பு ஆண்டின் நிகர இலாபம் .. | 12,06,000 |
| திட்டமிட்ட பங்காதாயம் : | | | கடந்த ஆண்டு வரிக் காப்பின் மிகுதி .. | 2,30,000 |
| முன்னுரிமைப் பங்குகள் மீது .. | 1,50,000 | | | |
| நேர்மைப் பங்குகள் மீது .. | 10,00,000 | | | |
| | | 11,50,000 | | |
| நிகர இலாபம் — இருப்புநிலைக் குறிப் பிற்கு எடுத்துச் செல்லப்படுகிறது .. | | 3,36,000 | | |
| | | 16,86,000 | | 16,86,000 |

## கோவை நூற்பாலை லிமிட்டெடின்
## 1970 திசம்பர் 31-ற்குரிய இருப்புநிலைக் குறிப்பு

| | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|
| **பங்கு முதல்:** | | நிலைச் சொத்துகள் : | | |
| | | நிலம் .. | | 7,30,000 |
| அதிகாரம் பெற்றது : | | | | |
| | | கட்டடம் : | | |
| ஒன்று ரூ. 100 மதிப்புடைய 40,000 6 சதவீதம் முன்னுரிமைப் பங்குகள் | 40,00,000 | தொடக்கவிலை .. | 13,00,000 | |
| | | கழி : இதுநாள் வரை தேய்மானம் | 3,00,000 | |
| ஒன்று ரூ. 100 மதிப்புடைய 60,000 நேர்மைப் பங்குகள் .. | 60,00,000 | | | 10,00,000 |
| | 1,00,00,000 | | | |
| | | பொறிவகை : | | |
| வெளியிட்டதும் எடுத்துக் கொண்டதும் : | | கடந்த இருப்புநிலைக் குறிப்பின்படி .. | 70,00,000 | |
| | | கூட்டு : | | |
| ஒன்று ரூ. 100 மதிப்புடைய 25,000 6 சதவீதம் முன்னுரிமைப் பங்குகள் முழுதும் செலுத்தப்பெற்றவை .. | 25,00,000 | நடப்பு ஆண்டில் வாங்கியது .. | 25,00,000 | |
| | | | 95,00,000 | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஒன்று ரூ. 100 மதிப்புடைய 50,000 நேர்மைப் பங்குகள் முழுதும் செலுத்தப்பெற்றவை .. | | 50,00,000 | கழி : நடப்பு ஆண்டில் விற்றது .. | 15,00,000 | |
| | | | | 80,00,000 | |
| **காப்புகளும், மிகுதியும்:** | | | கழி : | | |
| பொதுக்காப்பு : கடந்த இருப்புநிலைக் குறிப்பின்படி .. | 20,00,000 | | இதுநாள்வரை தேய்மானம் .. | 29,30,000 | |
| கூட்டு : நடப்பு ஆண்டில் சேர்த்தது | 1,50,000 | | | | 50,70,000 |
| | | 21,50,000 | மனைத்துணைப் பொருள் கடந்த இருப்புநிலைக் குறிப்பின்படி .. | 30,000 | |
| முதலீடுகள் காப்பு .. | | 1,60,000 | கழி : இதுநாள்வரை தேய்மானம் | 10,000 | |
| ஐயக் கடன் காப்பு .. | | 15,000 | | | 20,000 |
| இலாப-நட்டக் கணக்கு—மிகுதி .. | | 3,36,000 | மின்னமைப்புகள் கடந்த இருப்புநிலைக் குறிப்பின்படி | 1,70,000 | |
| **பிணைக் கடன்:** | | | கழி : | | |
| வங்கிக் கடன் (சரக்கு அடைமானத்தின் பேரில்) .. | | 5,00,000 | இதுநாள்வரை தேய்மானம் | 60,000 | |
| | | | | | 1,10,000 |

## 1970 திசம்பர் 31-ற்குரிய இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)

| | | ரூ. |
|---|---|---|
| **பிணையில்லாக் கடன் :** | | |
| பொது வைப்புகள் .. | | 10,00,000 |
| அதன்மீது கூடியுள்ள வட்டி . | | 75,000 |
| இயக்குநரிடம் பெற்ற கடன் .. | | 7,20,000 |
| **நடப்புப் பொறுப்புகளும், ஒதுக்குகளும்:** | | |
| அ. நடப்புப் பொறுப்புகள் : | | |
| கடனீந்தோர் : | | |
| சரக்கு .. | 16,70,000 | |
| செலவுகள் .. | 90,000 | |
| | | 17,60,000 |
| உரிமைகோராப் பங்காதாயம் | | 22,000 |
| கொடுபடவேண்டிய மேலாண்மை இயக்குநர் கழிவு .. | | 24,000 |
| ஆ. ஒதுக்குகள் : | | |
| வருமானவரி ஒதுக்கு | | 45,00,000 |
| திட்டமிட்ட பங்காதாயம் | | |
| முன்னுரிமை .. | 1,50,000 | |
| நேர்மை .. | 10,00,000 | |
| | | 11,50,000 |

| | | ரூ. |
|---|---|---|
| வண்ணத்தூவிப் பொறிகள், கடந்த இருப்புநிலைக் குறிப்பின்படி | 2,00,000 | |
| கழி : இதுநாள்வரை தேய்மானம் .. | 90,000 | |
| | | 1,10,000 |
| மோட்டார் வண்டிகள், கடந்த இருப்புநிலைக் குறிப்பின்படி .. | 70,000 | |
| கழி : இதுநாள்வரை தேய்மானம் .. | 40,000 | |
| | | 30,000 |
| **முதலீடுகள் :** (வாங்கிய விலையில்) | | |
| 4 சதவீதம் தமிழக அரசு கடன் பத்திரங்கள் .. | 6,00,000 | |
| 4½ சதவீதம் தமிழ்நாடு மின்வாரியக் கடன் .. | 2,00,000 | |
| 6 சதவீதம் ஆந்திர துறைமுகக் கடனீட்டுப் பத்திரங்கள் .. | 3,00,000 | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தொழிலர் பணிக் கொடைக் காப்பு — கடந்த இருப்புநிலைக் குறிப்பின்படி | 10,00,000 | | கூட்டுப் பங்குக் கம்பெனியின் முதலீடுகள் : | | |
| கூட்டு : | | | ஒன்று ரூ. 100 மதிப்புடைய 10,000 7 சதவீதம் மைசூர் கெமிக்கல்ஸ் லிமிட்டெடின் முன்னுரிமைப் பங்குகள் முழுதும் செலுத்தப் பெற்றவை .. | 9,00,000 | |
| நடப்பு ஆண்டில் சேர்த்தது .. | 50,000 | 10,50,000 | ஒன்று ரூ. 100 மதிப்புடைய சேலம் இருப்பாலை லிமிட்டெடின் 9,000 நேர்மைப் பங்குகள் .. | 10,00,000 | 30,00,000 |
| தொழிலர் மேலூதிய ஒதுக்கு .. | | 2,50,000 | (இவற்றின் சந்தை மதிப்பு ரூ. 52,20,000) | | |
| | | | **நடப்புச் சொத்துகளும், கடன்களும், முன்பணமும் :** | | |
| | | | அ. நடப்புச் சொத்துகள் | | |
| | | | முதலீடுகள் மீது கூடியுள்ள வட்டி | | 10,000 |
| | | | அறிவிக்கப்பட்டும் கைக்கு வந்து சேராத பங்காதாயம் .. | | 8,000 |
| | | | கைவசமுள்ள பண்டம் .. | | 10,25,000 |

## 1970 திசம்பர் 31-ற்குரிய இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)

| | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|
| | | சரக்கிருப்பு : | | |
| | | பஞ்சு (அடக்கவிலை அல்லது சந்தைவிலை இதில் எது குறைவோ அதில் மதிப்பிடப்பட்டது .. | 20,25,000 | |
| | | நூல் (அடக்க விலையில்) .. | 2,10,000 | |
| | | துணி (அடக்க விலையில்) .. | 36,80,000 | |
| | | கழிவுப் பஞ்சு (அடக்க விலையில்) .. | 5,000 | |
| | | | | 59,20,000 |
| | | கடனாளிகள் : | | |
| | | ஆறு திங்களுக்கு மேலானது .. | 3,84,000 | |
| | | பிற .. | 7,00,000 | |
| | | | 10,84,000 | |
| | | கழி : | | |
| | | ஐயக் கடன் ஒதுக்கு .. | 25,000 | |
| | | | | 10,59,000 |

| | | |
|---|---|---|
| கடனாளிகள் பற்றிய விவரங்கள் : | | |
| பிணையமற்றது; ஆனால், | | |
| வரக் கூடியது .. | 10,59,000 | |
| ஐயத்திற்குரியது .. | 25,000 | |
| | 10,84,000 | |
| இயக்குநரிடமிருந்து பெற வேண்டியது .. | 30,000 | |
| (நடப்பு ஆண்டிலிருந்த உயரளவுத் தொகை ரூ. 1,25,000) | | |
| மேலாளரிடமிருந்து பெற வேண்டியது, வரக்கூடியது .. | 50,000 | |
| (நடப்பு ஆண்டிலிருந்து உயரளவுத் தொகை ரூ. 1,40,000) | | |
| ரொக்கம் .. | | 20,000 |
| வங்கியிருப்பு .. | | 5,40,000 |

## 1970 டிசம்பர் 31-ற்குரிய இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| | | ஆ. கடன்களும், முன்பணமும் : | |
| | | முன்கூட்டிச் செலுத்திய வருமான வரி .. | 25,10,000 |
| | | பொறிவாங்கக் கொடுத்த முன் பணம் | 50,000 |
| | 2,12,12,000 | | 2,12,12,000 |

**குறிப்பு :** தொழிலர் கோரும் மேலூதியத்திற்கான நிகழ்வடைப் பொறுப்பு ரூ. 1,50,000-ற்கு உள்ளது.

**விளக்கக் குறிப்பு :**

ஐயக் கடன் ஒதுக்கு ரூ. 40,000-ற்குள்ளது. ஆனால், 31—12—1970-ல் கடனாளிகள் தொகையில் ரூ. 25,000தான் ஐயக் கடன் என்று கொடுக்கப்பட்டிருப்பதால், ரூ. 40,000-த்தில் ரூ. 25,000 ஐயக்கடன் ஒதுக்காகும்; மீதியுள்ள ரூ. 15,000 ஐயக்கடன் காப்பாகும்.

இவ்வாறு தேவைக்கும் அதிகமாக ஒதுக்கப்பட்டுள்ள ஐயக்கடன் ஒதுக்கினை 'ஐயக்கடன் காப்பு' (Reserve for doubtful debts) என்று கருதப்படுகிறது. இதனைப் பொறுப்புகள் பகுதியில், 'காப்புகளும் மிகுதியும்' எனுந் தலைப்பின்கீழ்க் காட்டவேண்டும் என்று கம்பெனிச் சட்டம் வற்புறுத்துகின்றது.

**எடுத்துக்காட்டு 81**

பாரத மாதா லிமிட்டெட் எனும் கம்பெனி ரூ. 20,00,000 அதிகாரம் பெற்ற முதலுடன் பதிவு செய்யப்பட்டது. இது ஒன்று ரூ. 100 மதிப்புடைய 5,000, 6 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளாகவும், ஒன்று ரூ. 100 மதிப்புடைய 5,000 நேர்மைப் பங்குகளாகவும் பிரிக்கப்பட்டிருந்தது. 1957 திசம்பர் 31-ல் முன்னுரிமைப் பங்குகள் அனைத்தும், 10,000 நேர்மைப் பங்குகளும் வெளியிடப்பட்டன. அவை அனைத்தும் எடுத்துக்கொள்ளப் பட்டுப் பங்கு ஒன்றுக்கு ரூ. 50 வரை செலுத்தப்பட்டிருந்த 2,000 நேர்மைப் பங்குகளைத் தவிர, பிற பங்குகட்கு முழுத் தொகையும் செலுத்தப்பெற்றிருந்தன. அடுத்த மார்ச் திங்களில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் இசைவளித்தவாறு பங்காதாயத்தைச் செலுத்திய பிறகும், பகிர்வுக்குத் தொகைகள் ஒதுக்கிய பின்னரும், இலாப-நட்டக் கணக்கு ரூ. 18,920-ஐ வரவிருப்பாகக் காட்டியது.

1958 ஆகஸ்டு 1-ல் பகுதி செலுத்தப்பெற்றிருந்த நேர்மைப் பங்குகள் மீது பங்கு ஒன்றுக்கு ரூ. 50 இறுதியழைப்புத் தொகையை இயக்குநர்கள் கோரினர். 100 பங்குகளை வைத்திருக்கும் ஒரு பங்குநரைத் தவிர, பிறர் பங்கழைப்புத் தொகையைச் செலுத்திவிட்டனர். ஆண்டு இறுதிக்குள் அப் பங்குகள் உரிய முறையில் பறிமுதல் செய்யப்பட்டன. 1958 சூலைத் திங்களில் 1958 சூன் 30-ல் முடியும் அரையாண்டுக்கு இருவகைப் பங்குகள் மீதும் இடைக்கால பங்காதாயம் வழங்கப்பட்டது. நேர்மைப் பங்குகள் மீது அவ்வப்போது செலுத்தப்பெற்ற தொகை மீது ஆண்டுக்கு 10 % வீதத்தில் இந்தப் பங்காதாயம் வழங்கப்பட்டது.

மேற்கண்ட நடவடிக்கைகளால் எழும் இருப்புகளுடன் 1958 திசம்பர் 31-ல் கம்பெனியின் ஏடுகளிலிருந்து கீழ்க்கண்ட இருப்புகள் திரட்டப்பட்டன :

| | ரூ. |
|---|---|
| பொறிவகை | 6,69,740 |
| கடனாளிகள் | 4,20,500 |
| நிலம் | 2,58,000 |
| கடனீந்தோர் | 1,47,800 |
| வராக் கடன் காப்பு, ஆண்டுத் தொடக்கத்தில் | 17,500 |

| | ரூ. |
|---|---|
| வராக்கடன் நீக்கப்பட்டது, காப்பில் சரிக்கட்ட வேண்டியது | 14,120 |
| சரக்கிருப்பு | 2,93,500 |
| குத்தகை கட்டடம் | 3,00,000 |
| குத்தகை மீட்பு நிதி, ஆண்டுத் தொடக்கத்தில் | 70,800 |
| குத்தகை மீட்புக் காப்பீட்டுத் திட்டாவணக் கணக்கு, ஆண்டுத் தொடக்கத்தில் (Policy Account for leasehold redemption) | 70,800 |
| இயக்குநர் கட்டணம் | 7,850 |
| வருமானவரிக் காப்பு, ஆண்டுத் தொடக்கத்தில் | 85,500 |
| 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள், ஆண்டுத் தொடக்கத்தில் | 3,00,000 |
| நடப்பு ஆண்டில் செலுத்திய வருமான வரி | 67,850 |
| ஊதியம் | 1,47,890 |
| மனைத்துணைப் பொருள் | 24,500 |
| தேய்மானக் காப்பு | 90,640 |
| தேய்மானம் | 45,780 |
| குத்தகை ஈட்டுறுதித் திட்ட முனைமம் (Premium paid on Leasehold Policy) | 14,200 |
| பொதுச் செலவுகள் | 70,540 |
| வரியும், கட்டணமும் | 17,850 |
| முன்கூட்டிச் செலுத்திய வரி | 3,100 |
| பொதுக்காப்பு | 1,80,000 |
| வாணிக நற்பெயர் | 2,50,000 |
| மொத்த வாணிக இலாபம் | 4,70,620 |
| ரொக்கம், வங்கியிருப்புகள் | 1,40,560 |

*1958 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டிற்கான கம்பெனி யின் இலாப-நட்டக் கணக்கையும், அந்நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் வகுக்கப்பட்ட படிவத்தில் கொடுக்கவும்.*

*கணக்குகளைத் தயாரிக்கும்போழ்து, கீழ்க்கண்டவற்றைக் கருத்திற்கொள்ளவேண்டும் :*

*(அ) நடப்பாண்டிற்கு ரூ. 65,000 வருமான வரி ஒதுக்க வேண்டும். கடந்த ஆண்டிற்கான வரி பொறுப்பு ஏதும் நிலுவை யில் இல்லை.*

*(ஆ) வராக் கடன் காப்பினைக் கடனாளிகள் மீது 3 சத வீதம் அளவில் வைத்திருக்கவும்.*

*(இ) குத்தகை மீட்புத் திட்டாவணக் கணக்கில், அவ்வப் போது அக் கணக்குக் காட்டும் இருப்பின் மீது 2 சதவீதம் ஆண்டு வட்டியைப் பற்று வைக்கவேண்டும்.*

*(ஈ) இந்நாள் வரை பொறிவகை மீது ரூ. 84,420, மனைத் துணைப் பொருள்மீது ரூ. 6,220 தேய்மானம் ஒதுக்கப்பட்டது. இவை தேய்மானக் காப்பில் அடங்கியுள்ளன.*

*(உ) ரூ. 11,795 இலாப-நட்டக் கணக்கின் மிகுதியிருப் பாக அடுத்த ஆண்டிற்கு எடுத்துச் செல்லவேண்டும். இருவகைப் பங்குகள் மீதும் இறுதிப் பங்காதாயத்திற்கு ஒதுக்க இயக்குநர்கள் விரும்புகின்றனர் (நேர்மைப் பங்குகள் மீது ஆண்டிற்கு 12 சத வீதம் வீதத்தில் பங்காதாயம் வழங்கப்படவேண்டும்). திட்ட மிடப்பட்டுள்ள பங்காதாயத்திற்குத் தொகை போதவில்லையெனில் இப் பற்றாக்குறையைச் சரிசெய்யும் அளவிற்குப் பொதுக் காப் பினைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டியது.*

(C. A. May, 1959)

**விடை :**

*இறுதிக் கணக்குகளைத் தயாரிக்குமுன்னர் முதன்முதலில் கணக்கின் இருப்பாய்வைத் தயார் செய்துகொள்ளலாம்.*

## குறிப்புகள்

### 1. முன்னுரிமைப் பங்கு முதல்

*கம்பெனி ஒன்று ரூ. 100 மதிப்புடைய 5,000 முன்னுரிமைப் பங்குகளை வெளியிட்டிருக்கிறது. தொகை முழுதும் செலுத்தப்*

பெற்றிருப்பதால், கம்பெனியின் முன்னுரிமைப் பங்குமுதல் ரூ. 5,00,000 என்பதை உணரவேண்டும் (5,000 × ரூ. 100).

## 2. நேர்மைப் பங்கு முதல்

1957 திசம்பர் 31-ல் 10,000 நேர்மைப் பங்குகள் வெளியிடப்பட்டிருந்தன. இவற்றில் 2,000 பங்குகளைத் தவிர, பிற வற்றிற்கு முழுத் தொகையும் செலுத்தப்பட்டிருந்தது. 1958 ஆகஸ்டு 1-ல் பங்கு ஒன்றுக்கு ரூ. 50 வீதம் இறுதியழைப்புத் தொகை இந்த 2,000 பங்குகள் மீது கோரப்பட்டது. 100 பங்குகள் மீதான அழைப்புத் தொகையைத் தவிர பிற பங்குகள் மீது தொகை முழுதும் பெறப்பட்டது. இப் பங்குகள் உரிய முறையில் பின்னர் ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டனவென்று கொடுக்கப்பட்டிருக்கிறது. எனவே, கம்பெனியின் நேர்மைப் பங்குமுதல் (1958 திசம்பர் 31-ல்) 9,900 முழுதும் செலுத்தப் பட்ட பங்குகளேயாகும். அதாவது, கம்பெனியின் நேர்மைப் பங்குமுதல் ரூ. 9,90,000 ஆகிறது.

## 3. பங்கு ஒறுப்பிழப்புக் கணக்கு (Shares forfeited Account)

பங்கு ஒன்றுக்கு ரூ. 50 வீதம் செலுத்தப்பெற்றிருந்த 100 பங்குகள் ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டன. எனவே, பங்கு ஒறுப்பிழப்புக் கணக்கு ரூ. 5,000 வரவிருப்பைக் காட்டும். (100 × ரூ. 50).

## 4. இடைக்காலப் பங்காதாயம்

அ. முன்னுரிமைப் பங்கு மீது:

ஆண்டுக்கு 6 சதவீத விகிதத்தில் கொடுக்கப்படு கிறது. எனவே,

$$5,00,000 \times \frac{6}{100} \times \frac{1}{2} = \text{ரூ. } 15,000$$

ஆ. நேர்மைப் பங்கு மீது :

அவ்வப்போது செலுத்தப்பெற்றிருக்கும் நேர்மைப் பங்குகள் மீது ஆண்டுக்கு 10 சதவீதம் வீதம் பங்காதாயம் கணக்கிடப்பட வேண்டுமென்று கொடுக்கப்பட்டிருக்கிறது. முதல் 6 திங்களில் ஒன்று ரூ. 100 மதிப்புடைய 8,000 பங்குகள் மீது முழுத் தொகையும் செலுத்தப் பெற்றிருந்தது.

எனவே, இப் பங்குகள் மீது செலுத்தப்பெற்ற தொகை 8,000 × ரூ. 100

= ரூ. 8,00,000

2,000 பங்குகள் மீது மொத்தம் செலுத்தப்பெற்ற தொகை (2,000 × ரூ. 50) ரூ. 1,00,000

முதல் 6 திங்களில் நேர்மைப் பங்குகள் மீது செலுத்தப்பெற்ற தொகை ரூ. 9,00,000

இத் தொகை மீது பங்காதாயம் ஆண்டுக்கு 10 சதவீதம் விகிதத்தில் வழங்கவேண்டும்.

$$= 9,00,000 \times \frac{10}{100} \times \frac{1}{2}$$

= ரூ. 45,000

இடைக்காலப் பங்காதாயம் வழங்கிய பின்னரே 100 நேர்மைப் பங்குகள் ஒறுப்பிழப்புச் செய்யப்பட்டன.

5. சாதாரணமாக இருப்பாய்வில் இறுதிச் சரக்கிருப்பு இடம் பெறுவதில்லை. எனினும், இக் கணக்கில் இதுவும், மொத்த வாணிக இலாபமும் கொடுக்கப்பட்டுள்ளன. கொடுக்கப்பட்ட இருப்பாய்வு தயாரிக்குமுன்னர் வாணிகக் கணக்கு தயாரிக்கப் பட்டுவிட்டதென்பதையும், அதனுடைய இறுதி விளைவினை இம் மொத்த இலாபம் காட்டுகிறது என்பதையும் நாம் உணரவேண்டும். அதாவது, தொடக்கச் சரக்கிருப்பு, கொள்முதல், கொள்முதல் திருப்பம், விற்பனை, விற்பனைத் திருப்பம் போன்ற கணக்குகளும், இறுதிச் சரக்கிருப்பும் சரி செய்யப்பட்டு விட்டன. எனவேதான் இருப்பாய்வில் இறுதிச் சரக்கிருப்பு கொடுக்கப் பட்டிருக்கிறது. இவ்விறுதிச் சரக்கிருப்பை இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகளில் ஒன்றாகக் காட்டினால் மட்டும் போதும். இப்பொழுது 1958 திசம்பர் 31-ற்கான இருப்பாய்வைத் தயார் செய்வோம்.

## 1958 திசம்பர் 31-ற்கான இருப்பாய்வு

| | பற்று | வரவு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| பொறிவகை | 6,69,740 | |
| கடனாளிகள் | 4,20,500 | |
| நிலம் | 2,58,000 | |
| கடனீந்தோர் | | 1,47,800 |
| வராக்கடன் காப்பு, ஆண்டுத் தொடக்கத்தில் | | 17,500 |
| நீக்கப்பட்ட வராக்கடன், காப்பில் சரிசெய்ய வேண்டியது | 14,120 | |
| சரக்கிருப்பு | 2,93,500 | |
| குத்தகைக் கட்டடம் | 3,00,000 | |
| குத்தகை மீட்பு நிதி, ஆண்டுத் தொடக்கத்தில் | | 70,800 |
| குத்தகை மீட்புக் காப்பீட்டுத் திட்டாவணக் கணக்கு, ஆண்டுத் தொடக்கத்தில் | 70,800 | |
| இயக்குநர் கட்டணம் | 7,850 | |
| வருமானவரிக் காப்பு, ஆண்டுத் தொடக்கத்தில் | | 85,500 |
| 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள், ஆண்டுத் தொடக்கத்தில் | | 3,00,000 |
| நடப்பு ஆண்டில் செலுத்திய வருமானவரி | 67,850 | |
| ஊதியம் | 1,47,890 | |
| மனைத்துணைப்பொருள் | 24,500 | |
| தேய்மானக் காப்பு | | 90,640 |
| தேய்மானம் | 45,780 | |
| குத்தகைக் காப்பீட்டுத் திட்டாவண முனைமம் | 14,200 | |
| பொதுச் செலவுகள் | 70,540 | |
| வரியும், கட்டணங்களும் | 17,850 | |

## 1958 திசம்பர் 31-ற்கான இருப்பாய்வு—(தொடர்ச்சி)

| | பற்று | வரவு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| முன்கூட்டிச் செலுத்திய வரிகள் | 3,100 | |
| பொதுக்காப்பு | | 1,80,000 |
| வாணிக நற்பெயர் | 2,50,000 | |
| மொத்த வாணிக இலாபம் | | 4,70,620 |
| ரொக்க, வங்கியிருப்புகள் | 1,40,560 | |
| 5,000, 6 சதவீதம் முன்னுரிமைப் பங்குகள் (ஒன்று ரூ. 100 வீதம் முழுதும் செலுத்தப்பெற்றவை.) | | 5,00,000 |
| 9,900 நேர்மைப் பங்குகள் (ஒன்று ரூ. 100 வீதம் முழுதும் செலுத்தப் பெற்றவை.) | | 9,90,000 |
| பங்கு ஒறுப்பிழப்புக் கணக்கு | | 5,000 |
| இலாப-நட்டக் கணக்கு | | 18,920 |
| இடைக்காலப் பங்காதாயம் (முன்னுரிமைப் பங்குகள்) | 15,000 | |
| இடைக்காலப் பங்காதாயம் (நேர்மைப் பங்குகள்) | 45,000 | |
| | 28,76,780 | 28,76,780 |

விடை :

## பாரத மாதா லிமிட்டெடின்
## 1958 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டிற்கான இலாப-நட்டக் கணக்கு

| | ரூ. | ரூ. | | ரூ. |
|---|---|---|---|---|
| ஊதியம் | | 1,47,890 | வாணிக இலாபம் கீ/கொ | 4,70,620 |
| வரியும், கட்டடங்களும் | | 17,850 | | |
| இயக்குநர் கட்டணம் | | 7,850 | | |
| பொதுச் செலவுகள் | | 70,540 | | |
| குத்தகை மீட்பு நிதி | | 14,200 | | |
| வராக் கடன் காப்பு : | | | | |
| புதியது | 12,615 | | | |
| கூட்டு : | | | | |
| வராக்கடன் | 14,120 | | | |
| | 26,735 | | | |
| கழி : | | | | |
| பழையகாப்பு | 17,500 | | | |
| | | 9,235 | | |
| தேய்மானம் | | 45,780 | | |
| வருமானவரி ஒதுக்கு | | 65,000 | | |
| கடனீட்டுப் பத்திர வட்டி | | 15,000 | | |
| நிகர இலாபம் கீ/இ | | 77,275 | | |
| | | 4,70,620 | | 4,70,620 |

## 1958 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டிற்கான இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| இடைக்காலப் பங்காதாயம் : முன்னுரிமைப் பங்குகள் | 15,000 | இருப்பு கீ/கொ | 18,920 |
| நேர்மைப் பங்குகள் | 45,000 | நடப்பு ஆண்டு இலாபம் கீ/கொ | 77,275 |
| திட்டமிட்ட பங்காதாயம் : முன்னுரிமைப் பங்குகள் | 15,000 | கடந்த ஆண்டு வருமானவரி ஒதுக்கில் மிகுதி | 17,650 |
| நேர்மைப் பங்குகள் | 58,450 | பொதுக் காப்பிலிருந்து மாற்றப்படுவது | 31,400 |
| இருப்பு, இருப்புநிலைக் குறிப்பிற்கு எடுத்துச்செல்லப்படுவது | 11,795 | | |
| | 1,45,245 | | 1,45,245 |

## பாரத மாதா லிமிட்டெடின்
## 1958 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டிற்கான இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | | ரூ. |
|---|---|---|---|---|
| **பங்கு முதல் :** | | **நிலைச் சொத்துக்கள் :** | | |
| *அதிகாரம் பெற்றது :* | | வாணிக நற்பெயர் | | 25,00,000 |
| ஒன்று ரூ. 100 மதிப்புடைய | | நிலம் | | 2,58,000 |
| 5,000, 6 சதவீதம் முன்னுரி | | குத்தகைக் கட்டடம், | | |
| மைப் பங்குகள் | 5,00,000 | வாங்கிய விலையில் | | 3,00,000 |
| ஒன்று ரூ. 100 மதிப்புடைய 15,000 | | பொறிவகை, வாங்கிய | | |
| நேர்மைப் பங்குகள் | 15,00,000 | விலையில் | 6,69,740 | |
| | | **கழி :** இது நாள்வரை | | |
| | 20,00,000 | தேய்மானம் | 84,420 | |
| | | | | 5,85,320 |
| *ஒப்புக் கொண்டது :* | | | | |
| ஒன்று ரூ. 100 மதிப்புடைய 6 சத | | | | |
| வீதம் முன்னுரிமைப் பங்குகள், | | மனைத்துணைப் பொருள் | | |
| முழுதும் செலுத்தப்பெற்றவை | 5,00,000 | வாங்கிய விலையில் | 24,500 | |
| | | **கழி .** இதுநாள்வரை | | |
| ஒன்று ரூ. 100 மதிப்புடைய 9,900 | | தேய்மானம் | 6,220 | |
| நேர்மைப் பங்குகள், முழுதும் | | | | 18,280 |
| செலுத்தப்பெற்றவை | 9,90,000 | | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட பங்குகள் | | 5,000 | **முதலீடுகள் :** | | |
| | | | குத்தகை மீட்பு காப்பீட்டுத் திட்டாவணம் | | 86,700 |
| **காப்புகளும், மிகுதியும் :** | | | **நடப்புச் சொத்துகளும், கடன்களும், முன்பணமும் :** | | |
| பொதுக்காப்பு | 1,80,000 | | அ. **நடப்புச் சொத்துக்கள் :** | | |
| **கழி :** இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் சென்றது | 31,400 | | சரக்கிருப்பு | | 2,93,500 |
| | | 1,48,600 | கடனாளிகள் | 4,20,500 | |
| | | | **கழி :** ஐயக்கடன் ஒதுக்கு | 12,615 | |
| | | | | | 4,07,885 |
| குத்தகை மீட்பு நிதி | 70,800 | | ரொக்க வங்கியிருப்புகள் | | 1,40,560 |
| **கூட்டு :** நடப்பு ஆண்டில் சேர்த்தது | 15,900 | | | | |
| | | 86,700 | | | |
| இலாப-நட்டக் கணக்கு | | 11,795 | | | |

## 1958 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டிற்கான இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| **பிணைக் கடன் :** | | ஆ. **கடன்களும், முன் பணமும்:** | |
| 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் | 3,00,000 | முன்கூட்டிச் செலுத்திய வரி . . | 3,100 |
| கடனீட்டுப்பத்திர வட்டி . . | 15,000 | | |
| **நடப்புப் பொறுப்புகளும், ஒதுக்குகளும்:** | | | |
| அ. நடப்புப் பொறுப்புகள் : | | | |
| கடனீந்தோர் . . | 1,47,800 | | |
| ஆ. ஒதுக்குகள் : | | | |
| வருமானவரி ஒதுக்கு . . | 65,000 | | |
| திட்டமிட்ட பங்காதாயம் : | | | |
| முன்னுரிமைப் பங்குகள் . . | 15,000 | | |
| நேர்மைப் பங்குகள் . . | 58,450 | | |
| | 23,43,345 | | 23,43,345 |

**விளக்கக் குறிப்புகள் :**

**(1) குத்தகை மீட்புத் திட்டக் கணக்கு**

| | ரூ. |
|---|---|
| தொடக்கத்தில் இருந்த இருப்பு | 70,800 |
| **கூட்டு :** ஆண்டுத் தொடக்கத்தில் செலுத்திய முனைமம் | 14,200 |
| | 85,000 |
| ,, ஆண்டிறுதியில் பற்று வைக்கப்படவேண்டிய வட்டி | 1,700 |
| (ரூ. $85{,}000 \times \frac{2}{100} = 1{,}700$) | |
| இறுதியில் இக் கணக்கு காட்டும் இருப்பு | 86,700 |

**(2) குத்தகை மீட்பு நிதிக் கணக்கு**

| | |
|---|---|
| தொடக்கத்தில் இருப்பு | 70,800 |
| **கூட்டு :** இறுதியில் இலாப-நட்டக் கணக்கிலிருந்து எடுத்துச் செல்வது | 14,200 |
| குத்தகை மீட்புத் திட்ட வட்டி (மேலே விளக்கிய வாறு) | 1,700 |
| ரூ. | 86,700 |

**(3) திட்டமிடப்பட்டுள்ள பங்காதாயம்**

**அ. முன்னுரிமை :**

$$5{,}00{,}000 \times \frac{6}{100} \times \frac{1}{2} = \text{ரூ. } 15{,}000$$

பங்குகள் மீது அவ்வப்பொழுது செலுத்தப்பெற்றுள்ள தொகை மீது பங்காதாயம் கணக்கிடப்பட வேண்டுமென்று இக் கணக்கில் கொடுக்கப்பட்டிருப்பதை மறக்க வேண்டாம்.

**ஆ. நேர்மை**

பங்கொன்றுக்கு ரூ. 100 வீதம் 8,000 பங்குகள் மீது முழுத் தொகையையும் செலுத்தப்பெற்றுள்ளதால் (அதாவது ரூ. 8,00,000) இதன்மீது இரு திங்கட்கான பங்காதாயம் செலுத்தப்படவேண்டும்.

மீதியுள்ள 2,000 பங்குகளில் ஒறுப்பிழப்புச் செய்யப்பட்ட 100 பங்குகள் போக, எஞ்சியுள்ள 1,900 பங்குகள் மீது சூலைத் திங்களில் பங்கொன்றுக்கு ரூ. 50 வரைதான் செலுத்தப்பெற்றிருந்தது (ஆகஸ்டு திங்களில் மீதியுள்ள அழைப்புத் தொகை ரூ. 50 வீதம் கோரப்பட்டு வசூலிக்கப்பட்டுவிட்டது). எனவே, இத் தொகை மீது (1,900 × 50 = ரூ. 95,000) ஒரு திங்கட்குரிய பங்காதாயம் செலுத்தப்பட வேண்டும்.

ஆகஸ்டு திங்கள் முதல் 1,900 பங்குகளும் முழுதும் செலுத்தப் பெற்றவையாகிவிட்டன. எனவே, இத் தொகைமீது (1,900 × 100 = ரூ. 1,90,000) 5 திங்கட்குரிய பங்காதாயம் செலுத்தப்படவேண்டும்.

ஆகவே, சாதாரணப் பங்குகள் மீது கீழ்க்கண்டவாறு பங்காதாயம் கணக்கிடப்பட வேண்டும்.

1. $8,00,000 \times \frac{12}{100} \times \frac{6}{12} =$ ரூ. 48,000

2. $95,000 \times \frac{12}{100} \times \frac{1}{12} =$ ரூ. 950

3. $1,90,000 \times \frac{12}{100} \times \frac{5}{12} =$ ரூ. 9,500

ரூ. 58,450

**வினாக்கள்**

1. கம்பெனியொன்றின் இறுதிக் கணக்குகள் எவ்வெவ் வகைகளில் கூட்டு நிறுவனங்களின் இறுதிக் கணக்குகளினின்றும் மாறுபடுகின்றன?

2. இலாப-நட்டக் கணக்கில் இடம்பெறவேண்டிய இனங்கள் யாவை?

3. மேலாண்மை ஊதியத்தைக் கணக்கிடும் முறையை விவரி.

4. கம்பெனிச் சட்டம் வகுத்துள்ள இருப்புநிலைக் குறிப்பு பற்றிய விளக்கந் தருக.

5. சிறுகுறிப்பு வரைக.

1. இயக்குநரவை அறிக்கை
2. தணிக்கையர் அறிக்கை
3. உறவினர்களை வேலைக்கு அமர்த்தல் குறித்த கம்பெனிச் சட்ட விதிகள்.

## பயிற்சி

1. இராம்லால் கம்பெனி லிமிட்டெடின் ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட இருப்பாய்வு கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. தேவையானவற்றிற்குச் சரிக்கட்டியபின், 1969 மார்ச் 31-ல் முடியும் ஆண்டிற்கான வாணிக, இலாப-நட்டக் கணக்கினையும், அந் நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

### பற்றிருப்புகள்

| | | ரூ. |
|---|---|---|
| 1–4–1968-ல் சரக்கிருப்பு | .. | 20,000 |
| ரொக்கம் | .. | 150 |
| சட்டச் செலவு | .. | 500 |
| கடனாளிகள் | .. | 38,000 |
| அலுவலக ஊதியம் | .. | 3,700 |
| கொள்முதல் | .. | 59,000 |
| வராக் கடன் | .. | 500 |
| சுமைக் கூலி | .. | 2,200 |
| கூலி | .. | 6,000 |
| அளித்த தள்ளுபடி | .. | 1,800 |
| வாடகையும், வரியும் | .. | 4,500 |

## பற்றிருப்புகள்—(தொடர்ச்சி)

| | | ரூ. |
|---|---|---|
| வில்லங்கமற்ற சொத்து | .. | 24,000 |
| பொறிவகை | .. | 33,000 |
| தணிக்கையர், இயக்குநர் கட்டணம் | .. | 500 |
| கடனீட்டுப்பத்திர வட்டி (அரையாண்டு) | .. | 300 |
| விற்பனைத் திருப்பம் | .. | 2,000 |
| அழைப்பு நிலுவை | .. | 600 |
| கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி முதலீடு | .. | 3,750 |
| மனைத்துணைப் பொருள் | .. | 4,500 |

## வரவிருப்புகள்

| | | ரூ. |
|---|---|---|
| ஒன்று ரூ. 10 வீதம் 5,000 சாதாரண பங்குகள் | .. | 50,000 |
| கடனீந்தோர் | .. | 21,000 |
| கடனீட்டுப் பத்திரங்கள் | .. | 12,000 |
| கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி | .. | 3,750 |
| விற்பனை | .. | 1,04,000 |
| கொள்முதல் திருப்பம் | .. | 3,100 |
| முன்கூட்டிப் பெற்ற அழைப்பு | .. | 400 |
| வங்கி மேல்வரைப் பற்று | .. | 5,000 |
| வில்லங்கமற்ற சொத்தின் மீது கடன் | .. | 5,750 |

இறுதிச் சரக்கிருப்பு ரூ. 17,000 என மதிப்பிடப்பட்டது. கடனாளிகள் மீது 5 சதவீதம் ஐயக் கடன் காப்பிற்கு ஒதுக்குக.

பொறிவகை மீது 5 சதவீதம் தேய்மானம் நீக்குக.

கடனீட்டுப்பத்திர மீட்பு நிதிக்கு ரூ. 1,000-மும் பங்காதாயச் சமன்செய் நிதிக்கு ரூ. 100-ம் மாற்றவும், மீதியுள்ளதை அடுத்த ஆண்டுக் கணக்கிற்கு எடுத்துச் செல்லவும் இயக்குநர்கள் தீர்மானித்துள்ளனர்.

(M. U. B. Com., Sept. 1970)

2. ஈஸ்ட் கோஸ்ட் கம்பெனி லிமிட்டெட் ரூ. 1,00,000 அதிகாரம் பெற்ற முதலுடன் பதிவு செய்யப்பட்டது. இது ஒன்று ரூ. 50 வீதம் 10,000 நேர்மைப் பங்குகளாகவும், ஒன்று ரூ. 100 வீதம் 5,000 — $9\frac{3}{4}$ சதவீதம் முன்னுரிமைப் பங்குகளாகவும் பிரிக்கப்பட்டது.

1968 திசம்பர் 31-ல் கம்பெனியின் ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட இருப்பாய்வு கீழ்க் கொடுக்கப்பட்டுள்ளது :

**பற்றிருப்புகள்**

| | | ரூ. |
|---|---|---|
| பொறிவகை | .. | 2,85,000 |
| குத்தகைக் கட்டடங்கள் | .. | 7,00,000 |
| கொள்முதல் | .. | 3,80,000 |
| உட்சுமைக் கூலி | .. | 5,000 |
| உள் திருப்பம் | .. | 10,000 |
| பொதுச் செலவு | .. | 35,000 |
| வராக்கடன் | .. | 7,500 |
| சரக்கிருப்பு (1–1–1967) | .. | 1,80,000 |
| நேர்மைப் பங்கு மீது அழைப்பு நிலுவை | .. | 5,000 |
| ஊதியம் | .. | 1,20,000 |
| வெளிச் சுமைக் கூலி | .. | 15,000 |
| விளம்பரச் செலவு | .. | 1,75,000 |
| கடனாளிகள் | .. | 3,00,000 |
| வருமான வரி | .. | 50,000 |
| கூலி | .. | 45,000 |
| வாடகை | .. | 24,000 |
| முன்னுரிமைப் பங்காதாயம் (1966ஆம் ஆண்டிற்கு) | .. | 50,000 |
| மனைத்துணைப் பொருள் | .. | 29,000 |
| ரொக்கம் | .. | 1,000 |

## வரவிருப்புகள்

| | ரூ. |
|---|---|
| நேர்மைப் பங்கு முதல் (8,000 பங்குகள் முழுதும் செலுத்தப் பட்டவை) | .. 4,00,000 |
| முன்னுரிமைப் பங்குகள் | .. 5,00,000 |
| விற்பனை | .. 11,60,000 |
| வெளித் திருப்பம் | .. 5,000 |
| தள்ளுபடி | .. 6,500 |
| கடனீந்தோர் | .. 60,000 |
| வருமான வரிக் காப்பு | .. 60,000 |
| இலாப-நட்டக் கணக்கு (31–12–1966) | .. 2,00,000 |
| வங்கி மேல்வரைப் பற்று | .. 25,000 |

1967 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டிற்கான இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

கீழ்க்கண்டவற்றைச் சரிக்கட்டுக.

அ. பொறிவகை மீது 10 சதவீதம் தேய்மானம் நீக்குக.

ஆ. கடனாளிகள் மீது 2½ சதவீதம் அளவிற்கு வராக் கடன் காப்பை உயர்த்துக.

இ. விளம்பரச் செலவுகளை 5 ஆண்டுகட்கு ஒதுக்குக.

ஈ. இறுதிச் சரக்கிருப்பு ரூ. 2,50,000 என மதிப்பிடப் பட்டது.

(M. U. B. Com., April, 1968)

3. சதீஷ் மேனுபேக்சரிங் கம்பெனி லிமிட்டெடின் 1967 சூன் 30-ற்கான இருப்பாய்வு 991-ம் பக்கம் கொடுக்கப் பட்டிருக்கிறது.

## இருப்பாய்வு

| | | பற்று | வரவு |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| 1966 ஜூன் 30-ல் சரக்கிருப்பு | .. | 7,500 | |
| விற்பனை | .. | | 35,000 |
| கொள்முதல் | .. | 24,500 | |
| உற்பத்திக் கூலி | .. | 5,000 | |
| தள்ளுபடி | .. | 700 | 500 |
| ஊதியம் | .. | 750 | |
| வாடகை | .. | 495 | |
| பொதுச் செலவு | .. | 1,705 | |
| இலாப-நட்டக் கணக்கு (1966 ஜூன் 30) | .. | | 1,503 |
| பங்காதாயம் | .. | 900 | |
| முதல் : ஒன்று ரூ. 10 வீதம் 1,000 பங்குகள் | .. | | 10,000 |
| கடனாளிகளும், கடனீந்தோரும் | .. | 3,750 | 1,750 |
| பொறிவகை | .. | 2,900 | |
| வங்கியிருப்பும், ரொக்கமும் | .. | 1,620 | |
| காப்பு | .. | | 1,550 |
| வராக்கடன் | .. | 483 | |
| | | 50,303 | 50,303 |

அ. 1967 ஜூன் 30-ல் சரக்கிருப்பு ரூ. 8,200.

ஆ. பொறிவகையில் 10 சதவீதம் தேய்மானம் நீக்குக.

இ. கடனாளிகளில் 5 சதவீதம் தள்ளுபடிக் காப்பிற்கு ஒதுக்குக.

ஈ. கடனீந்தோர் மீது 2½ சதவீதம் தள்ளுபடிக் காப்பிற்கு வகை செய்க.

உ. மேலாண்மை இயக்குநருக்கு அவரது கழிவினைக் கழிக்குமுன் உள்ள நிகர இலாபத்தில் 15 சதவீதம் கழிவு தரவேண்டும்.

ஊ. ஆண்டுக்கு ரூ. 540 வீதத்தில் ஒரு திங்கள் வாடகை சூன் 30-ல் தரவேண்டியுள்ளது.

எ. ஆண்டுக்கு ரூ. 75 வீதம் ஆறு திங்கள் காப்பீடு முன் கூட்டிச் செலுத்தப்பட்டிருந்தது.

மேற்கண்டவற்றிற்கு வகைசெய்து, வாணிக இலாப-நட்டக் கணக்கினையும், இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(M. U. B. Com., April 1971)

4. 1967 சூன் 30-ற்கான லாசர் மேனுபேக்சரிங் கம்பெனியின் இருப்பாய்வு கீழ்க் கொடுக்கப்பட்டுள்ளது. கம்பெனியின் பெயரளவு மதிப்பு ரூ. 4,00,000. இது ஒன்று ரூ. 50 வீதம் 4,000 நேர்மைப் பங்குகளாகவும், ஒன்று ரூ. 50 வீதம் 4,000 — 6 சதவீதம் குவிவு முன்னுரிமைப் பங்குகளாகவும் பிரிக்கப்பட்டிருக்கிறது.

**பற்றிருப்புகள்**

| | | ரூ. |
|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு | .. | 66,500 |
| தள்ளுபடி | .. | 3,000 |
| சுமைக் கூலி | .. | 5,750 |
| எடுத்துக்காட்டமைவுகள் (Patterns) | .. | 37,500 |
| வரி | .. | 5,500 |
| புனைபொருள் உரிமையும், வாணிகக் குறிகளும் (Patents and Trade Marks) | .. | 15,000 |
| கொள்முதல் | .. | 1,23,250 |
| கூலி | .. | 1,30,500 |
| நிலக்கரி | .. | 6,300 |
| நிலமும், கட்டடமும் | .. | 1,25,000 |
| பொறிவகை | .. | 75,000 |
| விடுகருவிகள் | .. | 15,000 |
| வாணிக நற்பெயர் | .. | 37,500 |

## பற்றிருப்புகள்—(தொடர்ச்சி)

| | | ரூ. |
|---|---|---|
| கடனாளிகள் | .. | 26,600 |
| பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு | .. | 13,450 |
| விளம்பரம் | .. | 1,500 |
| கழிவு | .. | 6,750 |
| வாணிகச் செலவு | .. | 5,600 |
| பழுதுபார்க்கும் செலவு | .. | 4,650 |
| வராக்கடன் | .. | 2,550 |
| ரொக்கம் | .. | 1,800 |
| கடனீட்டுப்பத்திர வட்டி (31–12–1966-ல் முடியும் அரையாண்டிற்கு) | .. | 1,000 |
| முன்னுரிமைப் பங்காதாயம் (31–12–1966-ல் முடியும் அரையாண்டிற்கு) | .. | 3,000 |
| இயக்குநர் கட்டணம் | .. | 5,000 |
| வங்கி வட்டி | .. | 4,100 |

## வரவிருப்புகள்

| | | ரூ. |
|---|---|---|
| 2,000 நேர்மைப் பங்குகள் | .. | 1,00,000 |
| 2,000 முன்னுரிமைப் பங்குகள் | .. | 1,00,000 |
| 4 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் | .. | 50,000 |
| சதர்ன் பேங்க் லிமிட்டெட் (மேல்வரைப் பற்று) | .. | 75,700 |
| கடனீந்தோர் | .. | 17,800 |
| செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டு | .. | 6,250 |
| விற்பனை | .. | 3,61,700 |
| வாடகை | .. | 3,650 |
| இலாப-நட்டக் கணக்கு | .. | 6,700 |

1968 ஜூன் 30-ல் சரக்கிருப்பு ரூ. 70,800

தேய்மானம் நீக்குக :

பொறிவகை 5 சதவீதம்; விடுகருவிகள் 20 சதவீதம்

எடுத்துக்காட்டமைவு 10 சதவீதம்; புனைபொருள் உரிமையும், வாணிகக் குறிகளும் 10 சதவீதம்; கடனாளிகள் மீது தள்ளுபடிக் காப்பிற்கு $2\frac{1}{2}$ சதவீதமும், வராக் கடன் காப்பிற்கு ரூ. 2,150-ம் ஒதுக்குக.

1967 ஜூன் 30-ல் முடியும் ஆண்டிற்கான வாணிக, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளிற்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(M. U. B. Com., Sept. 1971)

5. தமிழ்நாடு டிரேடிங் கம்பெனி லிமிட்டெடின் அதிகாரம் பெற்ற முதல் ரூ. 10,00,000. இது ஒன்று ரூ. 100 வீதம் 4,000, 6 சதவீதம் குவிவு முன்னுரிமைப் பங்குகளாகவும், ஒன்று ரூ. 100 வீதம் 6,000 நேர்மைப் பங்குகளாகவும் பிரிக்கப்பட்டிருக்கிறது. 1966 மார்ச் 31-ல் தயாரிக்கப்பட்ட இருப்பாய்வு கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கிறது :

**இருப்பாய்வு**

| | பற்று | வரவு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| 4,000 குவிவு முன்னுரிமைப் பங்குகள் .. | | 4,00,000 |
| 4,000 நேர்மைப் பங்குகள் (பங்கொன்றுக்கு ரூ. 75 வீதம் அழைக்கப்பட்டது.) .. | | 3,00,000 |
| 5 சதவீதம் முதலாவது அடைமானக் கடன் பத்திரம் (வில்லங்கமற்ற சொத்து ஈட்டின் பேரில்) .. | | 2,00,000 |
| கடனாளிகளும், கடனீந்தோரும் .. | 2,60,000 | 2,10,000 |
| வில்லங்கமற்ற சொத்து அடக்க விலையில் .. | 4,70,000 | |

**இருப்பாய்வு**—(*தொடர்ச்சி*)

| | பற்று | வரவு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| 1–4–1965-ல் சரக்கிருப்பு .. | 3,41,500 | |
| பொதுக்காப்பு .. | | 98,725 |
| ஊதியம் .. | 1,18,500 | |
| இலாப-நட்டக் கணக்கு .. | | 88,000 |
| வரிவிதிப்பு ஒதுக்கு .. | | 12,000 |
| விநியோகச் செலவுகள் .. | 87,000 | |
| வாடகையும், வரியும் .. | 42,470 | |
| பொதுச் செலவுகள் .. | 38,000 | |
| மனைத்துணைப் பொருள், அடக்கவிலையில் .. | 87,000 | |
| விற்பனை .. | | 10,12,400 |
| கொள்முதல் .. | 6,10,000 | |
| பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு .. | 48,000 | |
| சரக்குக் கட்டணமும், உட்சுமைக் கூலியும் .. | 5,700 | |
| **முதலீடுகள் :** | | |
| கேரளா இரப்பர் கம்பெனி லிமிடெடில் ஒன்று ரூ. 100 வீதம் 700 பங்குகள் .. | 70,000 | |
| கடனீட்டுப் பத்திர வட்டி (30–9–1965-ல் முடியும் அரையாண்டிற்கு) .. | 5,000 | |
| 31–3–1965-ல் முடியும் ஆண்டிற்கான இறுதிப் பங்காதாயம் .. | 23,750 | |
| 30–9–1965-ல் முடியும் அரையாண்டிற்கு முன்னுரிமைப் பங்காதாயம் .. | 12.000 | |
| வங்கி .. | 86,425 | |
| ரொக்கம் .. | 15,780 | |
| | 23,21,125 | 23,21,125 |

கீழ்க் கண்டவற்றைக் கணக்கிலெடுத்துக் கொண்டு, 1966 மார்ச் 31-ல் முடியும் ஆண்டிற்கான இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

அ. 31—3—1966-ல் சரக்கிருப்பு ரூ. 3,27,000 என மதிப்பிடப்பட்டது.

ஆ. வில்லங்கமற்ற சொத்தின் மீது 3 சதவீதமும், மனைத் துணைப்பொருள் மீது 8 சதவீதமும் தேய்மானம் ஒதுக்குக.

இ. ஐயக் கடனுக்காக 5 சதவீதம் ஒதுக்குக.

(M. U. B. Com., April, 1967)

6. ஆஸ்வால்டு கம்பெனி லிமிட்டெட் என்பது ரூ. 1,00,000 அதிகாரம் பெற்ற முதலுடன் பதிவு செய்யப் பட்டது. இம் முதல் ஒன்று ரூ. 100 வீதம் 1,000 நேர்மைப் பங்குகளாகப் பிரிக்கப்பட்டது. கம்பெனியின் ஏடுகளிலிருந்து திரட்டப்பட்டுக் கீழே கொடுக்கப்பட்டிருக்கும் இருப்பாய்வி லிருந்து 1969 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டிற்கான வாணிக, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளிற்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

## இருப்புநிலைக் குறிப்புகள்

| | பற்று | வரவு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| பங்குமுதல் : (800 பங்குகள் வெளியிடப் பட்டு, பங்கொன்றுக்கு ரூ. 75 வீதம் அழைப்புக் கோரப் பட்டிருந்தது) .. | | 60,000 |
| அழைப்பு நிலுவை | 2,000 | |
| வங்கி | 10,000 | |
| ரொக்கம் .. | 4,000 | |
| கடனாளிகளும், கடனீந்தோரும் .. | 18,000 | 9,000 |
| கூலி .. | 5,000 | |
| ஊதியம் .. | 8,000 | |

## இருப்புநிலைக் குறிப்புகள்—(தொடர்ச்சி)

| | பற்று | வரவு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| இடைக்காலப் பங்காதாயம் செலுத்தியது .. | 3,000 | |
| கொள்முதலும், விற்பனையும் | 80,000 | 1,35,000 |
| திருப்பங்கள் .. | 1,200 | 900 |
| கட்டடம் .. | 35,000 | |
| 5 சதவீதம் அடைமானக் கடனீட்டுப் பத்திரங்கள் .. | | 15,000 |
| அலுவலக மனைத்துணைப் பொருள் .. | 5,000 | |
| தள்ளுபடி .. | 800 | 600 |
| ஐயக் கடன் காப்பு .. | | 700 |
| சுமைக் கூலி .. | 1,100 | |
| தொடக்கச் சரக்கிருப்பு .. | 10,000 | |
| வரியும், காப்பீடும் .. | 1,500 | |
| காப்பு நிதி .. | | 10,000 |
| பொறிவகை .. | 25,000 | |
| உரிமை கோராப் பங்காதாயம் .. | | 400 |
| முதலீடுகள் .. | 20,000 | |
| இயக்குநர், தணிக்கையர் கட்டணம் .. | 2,000 | |
| இலாப-நட்டக் கணக்கு .. | | 10,000 |
| | 2,41,600 | 2,41,600 |

கடனீட்டுப் பத்திரம் மீது செலுத்தவேண்டிய வட்டிக்கும், முதலீடுகளின் மீது 5 சதவீதம் வீதம் வரவேண்டிய வட்டிக்கும் வகை செய்க.

இறுதிச் சரக்கிருப்பு ரூ. 9,000 என மதிப்பிடப்பட்டிருக்கிறது. மனைத்துணைப் பொருள் மீதும், பொறிவகை மீதும் 5 சதவீதமும், கட்டடத்தின்மீது $2\frac{1}{2}$ சதவீதமும் தேய்மானம் நீக்குக.

காப்பு நிதியில் ரூ. 8,000 சேர்க்க.

கொடுபட வேண்டிய வரி ரூ. 300.

முன்கூட்டிச் செலுத்தப்பெற்ற காப்பீடு ரூ. 200.

கடனாளிகளில் ரூ. 200 வராக்கடன். கடனாளிகள் மீது 5 சதவீதம் அளவு ஐயக் கடன் காப்பை வைத்திருக்கவேண்டும்.

பங்காதாயச் சமன்செய் நிதிக்கு நிகர இலாபத்தில் 20 சத வீதம் எடுத்துச் செல்லவேண்டும்.

(M. U. B. Com., April, 1970)

7. ஆக்மி லிமிட்டெடின் 1959 திசம்பர் 31-ற்குரிய இருப்பாய்வு கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது :

**இருப்பாய்வு**

| | பற்று | வரவு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| அதிகாரம் பெற்ற, எடுத்துக் கொள்ளப்பட்ட, அழைக்கப் பட்ட, செலுத்தப்பட்ட, முதல் (ரொக்கத்திற்கு) .. | | |
| ஒன்று ரூ. 100 வீதம் 9,000 நேர்மைப் பங்குகள் .. | | 9,00,000 |
| வங்கி மேல்வரைப்பற்று (வில்லங்க மற்ற இடம், கட்டடத்தின் ஈட்டின் பேரில்) .. | | 3,30,000 |
| தவணை வைப்பு .. | | 70,000 |
| கடனீந்தோர் .. | | 1,30,000 |
| வில்லங்கமற்ற நிலம் (அடக்க விலையில்) .. | 1,00,000 | |
| கட்டடம் (தொடக்க விலையில் 3,00,000) .. | 2,60,000 | |
| மனைத்துணைப் பொருள் (தொடக்கவிலை ரூ. 35,000) .. | 30,000 | |
| போக்குவரத்து வண்டிகள் (தொடக்கவிலை ரூ. 1,00,000) .. | 70,000 | |
| சரக்கிருப்பு (சனவரி 1-ல்) .. | 8,40,000 | |

## இருப்பாய்வு—(தொடர்ச்சி)

| | பற்று | வரவு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| கடனாளிகள் (பிணையம் இல்லாத தாயினும் வருமென கருதப் படுவது) .. | 1,90,000 | |
| ரொக்கம் .. | 24,000 | |
| தொடக்கச் செலவுகள் .. | 16,800 | |
| ஊதியமும், கூலியும் .. | 96,000 | |
| வாடகை பெற்றது .. | | 26,000 |
| வரிகள் .. | 14,000 | |
| கட்டடம் பழுதுபார்க்கும் செலவு .. | 6,000 | |
| பல்வகைச் செலவுகள் .. | 44,000 | |
| இயக்குநர் கட்டணம் .. | 4,000 | |
| விற்குநருக்குச் செலுத்திய வட்டி (Interest to Vendors) .. | 35,000 | |
| கொள்முதல் .. | 15,40,000 | |
| விற்பனை .. | | 18,20,000 |
| வாணிக நற்பெயர் (அடக்கவிலையில்) .. | 6,200 | |
| | 32,76,000 | 32,76,000 |

மேலும் சில தகவல்கள் :

(1) 1959 திசம்பர் 31-ல் இறுதிச் சரக்கிருப்பு ரூ. 9,00,000.

(2) 1959 திசம்பருக்கான ஊதியமும், கூலியும் கொடுபட வேண்டியது ரூ. 8,000.

1959ஆம் ஆண்டிற்கான தணிக்கையர் கட்டணம் ரூ. 2,000 தரவேண்டியுள்ளது.

(3) தேய்மானம் கணக்கிடுக :

கட்டடம் 5 சதவீதம்

மனைத்துணைப் பொருள் 6 சதவீதம்

போக்குவரத்து வண்டிகள் 20 சதவீதம்

1959 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டிற்கான இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் 1956ஆம் ஆண்டுக் கம்பெனிச் சட்டத்தில் கொடுக்கப்பட்டுள்ள படிவத்தின்படி தயாரிக்கவும்.

(M. U. B. Com., Sept. 1961)

8. சன்ஃப்ளவர் கம்பெனி லிமிட்டெடின் 1970 திசம்பர் 31-ற்குரிய இருப்புநிலைக் குறிப்பு கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கிறது :

| | | ரூ. |
|---|---|---|
| பங்குமுதல் (அதிகாரம் பெற்றதும், வெளியிட்டதும்) ஒன்று ரூ. 10 வீதம் 60,000 பங்குகள் | .. | 6,00,000 |
| பொதுக்காப்பு | .. | 2,50,000 |
| உரிமைகோராப் பங்காதாயம் | .. | 6,526 |
| கடனீந்தோர் | .. | 36,858 |
| கட்டடம் | .. | 1,00,000 |
| கொள்முதல் | .. | 5,00,903 |
| விற்பனை | .. | 9,83,947 |
| உற்பத்திச் செலவுகள் | .. | 3,59,000 |
| நிர்வாகச் செலவுகள் | .. | 26,814 |
| பொதுச் செலவு | .. | 31,078 |
| பொறிவகை | .. | 2,00,000 |
| மோட்டார் வண்டி | .. | 15,000 |
| மனைத்துணைப் பொருள் | .. | 5,000 |
| சரக்கிருப்பு | .. | 1,72,058 |
| கடனாளிகள் | .. | 2,23,380 |
| முதலீடுகள் | .. | 2,88,950 |
| தேய்மானக் காப்பு | .. | 71,000 |
| ரொக்க இருப்பு | .. | 72,240 |
| இயக்குநர் கட்டணம் | .. | 1,800 |
| இடைக்காலப் பங்காதாயம் | .. | 15,000 |
| வட்டி | .. | 8,544 |
| இலாப-நட்டக் கணக்கு (1970 சனவரி 1-ல்) | .. | 16,848 |
| அலுவலர் நலக் காப்பு நிதி (Staff Provident Fund) | .. | 31,500 |

மேற் கொடுக்கப்பட்டிருக்கும் இருப்புகளிலிருந்தும், கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கும் தகவல்களிலிருந்தும் கம்பெனியின் 1970 திசம்பர் 31-ற்கான இருப்புநிலைக் குறிப்பையும், அந் நாளில் முடியும் ஆண்டிற்கான இலாப-நட்டக் கணக்கையும் தயார் செய்க.

அ. 1970 திசம்பர் 31-ல் கோதுமை, மாவு இவற்றின் சரக்கிருப்பு ரூ. 1,48,680 என மதிப்பிடப் பட்டது.

ஆ. கட்டடத்தின் தேய்மானத்திற்காக ரூ. 10,000-மும், மேலாண்மை முகவரின் கழிவுக்காக ரூ. 6,500-ம், அலுவலர் நலக் காப்பு நிதிக்குக் கம்பெனி வழங்கு வதற்காக ரூ. 1,500-ம் ஒதுக்குக.

இ. முதலீட்டின் மீது கூடியுள்ள வட்டி ரூ. 2,750.

ஈ. தொழிலரின் நட்ட ஈட்டிற்கான ரூ. 2,500-ற்கான உரிமையொன்றைக் கம்பெனி மறுக்கின்றது.

(M. U. B. Com., Sept. 1972)

9. இன்டர் ஸ்டேட் டிஸ்ட்ரிபியூட்டர்ஸ் லிமிட்டெடின் அதிகாரம் பெற்ற பங்குமுதல் ரூ. 7,50,000. இது ஒன்று ரூ. 100 மதிப்புடைய 6 சதவீதம் 3,000 குவிவு முன்னுரிமைப் பங்குகளாகவும், ஒன்று ரூ. 100 மதிப்புடைய 4,500 நேர்மைப் பங்குகளாகவும் பிரிக்கப்பட்டிருக்கிறது. 1959 திசம்பர் 31-ற் கான இருப்பாய்வு கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கிறது.

**1959 திசம்பர் 31-ற்கான இருப்பாய்வு**

| | பற்று | வரவு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| வெளியிட்ட பங்குகள் : | | |
| 3,000-6 சதவீதம் குவிவு முன்னுரிமைப் பங்குகள் .. | | 3,00,000 |
| 3,000 நேர்மைப் பங்குகள் (பங்கொன்றுக்கு ரூ. 75 வீதம் கோரப்பட்டிருக்கிறது) .. | | 2,25,000 |
| வாணிக நற்பெயர் .. | 1,00,000 | |

## 1959 திசம்பர் 31-ற்கான இருப்பாய்வு—(தொடர்ச்சி)

| | பற்று | வரவு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| 5 சதவீதம் முதலாவது அடைமான கடனீட்டுப் பத்திரங்கள் (வில்லங்கமற்ற சொத்துகளின் ஈட்டின் பேரில்) .. | | 2,10,000 |
| கடனாளிகள் .. | 1,67,500 | |
| கடனீந்தோர் .. | | 1,25,520 |
| வில்லங்கமற்ற சொத்துகள் (அடக்க விலையில்) .. | 3,90,000 | |
| சரக்கிருப்பு (1959 சனவரி 1-ல்) .. | 2,41,500 | |
| பொதுக் காப்பு .. | | 82,725 |
| ஊதியம் .. | 1,03,500 | |
| இலாப-நட்டக் கணக்கு .. | | 58,500 |
| வரி ஒதுக்கு .. | | 8,800 |
| விநியோகச் செலவுகள் .. | 1,02,000 | |
| வாடகையும், வரியும் .. | 38,260 | |
| பொதுச் செலவுகள் .. | 21,000 | |
| மனைத்துணைப் பொருள் (அடக்கவிலையில்) | 75,000 | |
| விற்பனை .. | | 9,18,600 |
| கொள்முதல் .. | 4,76,500 | |
| பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு .. | 6,000 | |
| சரக்குக் கட்டணமும், உட்சுமைக் கூலியும் .. | 3,750 | |
| முதலீடுகள் : (ஒன்று ரூ. 100 வீதம் வேறொரு கம்பெனியில் 600 பங்குகள்) .. | 60,000 | |
| கடனீட்டுப்பத்திர வட்டி (1959 சூன் வரையான அரையாண்டுக்கு) .. | 5,250 | |
| 1958ஆம் ஆண்டிற்கான இறுதிப் பங்காதாயம் .. | 20,250 | |
| முன்னுரிமைப் பங்குப் பங்காதாயம் (1959 சூன் 30 வரையான அரையாண்டிற்கு) .. | 9,000 | |
| வங்கி .. | 97,500 | |
| ரொக்கம் .. | 12,145 | |
| | 19,29,145 | 19,29,145 |

கீழ்க் கண்டவற்றைக் கணக்கிலெடுத்துக் கொண்டு 1959 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டிற்கான இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

அ. 1959 திசம்பர் 31-ல் இறுதிச் சரக்கிருப்பு ரூ. 2,15,070 என மதிப்பிடப்பட்டது.

ஆ. 1959 திசம்பர் 31-ற்குப் பிறகு தவணைநாள் உடைய பெறுதற்குரிய மாற்றுச்சீட்டு வங்கியில் தள்ளுபடி செய்யப்பட்டிருக்கிறது.

இ. வில்லங்கமற்ற சொத்துகள் மீது $2\frac{1}{2}$ சதவீதமும், மனைத் துணைப் பொருள் மீது 6 சதவீதமும் தேய்மானம் நீக்கவேண்டும்.

ஈ. முன்னுரிமைப் பங்குகள் மீது இரண்டாவது அரை யாண்டிற்கான பங்காதாயமும் நேர்மைப் பங்குகள் மீது 10 சதவீதம் பங்காதாயமும் வழங்க இயக்குநர்கள் திட்டமிட்டுள்ளனர்.

(C. A. Inter, May, 1960)

10. சிவகாசி ஸ்டாண்டர்டு மேச் ஒர்க்ஸ் லிமிட்டெட் எனும் கம்பெனியின் ஏடுகளிலிருந்து 1962 மார்ச் 31-ல் திரட்டப் பட்ட இருப்புகள் கீழ்க் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றிலிருந்து வாணிக இலாப-நட்டக் கணக்கினையும், இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

| | | ரூ. |
|---|---|---|
| பங்குமுதல் : | | |
| ஒன்று ரூ. 100 மதிப்புடைய 4,500 பங்குகள் முழுதும் செலுத்தப்பெற்றவை | .. | 45,000 |
| விற்பனை | .. | 1,86,000 |
| கடனீந்தோர் | .. | 3,000 |
| கொள்முதல் திருப்பம் | .. | 6,000 |
| பொறிவகை | .. | 30,000 |
| மோட்டார் வண்டி | .. | 2,000 |
| 1961 ஏப்ரல் 1 சரக்கிருப்பு | .. | 13,000 |
| கொள்முதல் | .. | 80,000 |
| மோட்டார் லாரி | .. | 3,800 |
| தொடக்கச் செலவுகள் | .. | 500 |

| | | ரூ. |
|---|---|---|
| பொதுச் செலவுகள் | .. | 1,500 |
| வங்கியிருப்பு | .. | 1,000 |
| செலுத்திய கழிவு | .. | 9,000 |
| வட்டி | .. | 1,000 |
| தொழிலரின் கூலி | .. | 33,000 |
| தொலைபேசி | .. | 250 |
| வங்கிக் கட்டணம் | .. | 150 |
| வாடகை | .. | 4,600 |
| அலுவலக ஊதியம் | .. | 7,000 |
| இயக்குநர் கட்டணம் | .. | 400 |
| விசைக் கட்டணம் (Power Charges) | .. | 5,600 |
| லாரி, கார் செலவுகள் | .. | 3,600 |
| வராக் கடன் | .. | 100 |
| விளம்பரம் | .. | 400 |
| எழுதுபொருளும், அச்சுக் கூலியும் | .. | 250 |
| அஞ்சல் செலவும், தந்தியும் | .. | 700 |
| பழுதுபார்க்கும் செலவு | .. | 1,800 |
| ரொக்கம் | .. | 200 |
| விற்பனைத் திருப்பம் | .. | 12,000 |
| கடனாளிகள் | .. | 28,150 |

மார்ச் 31-ல் சரக்கிருப்பு ரூ. 21,000 என மதிப்பிடப் பட்டது.

மோட்டார் வண்டியின் மீது 15 சதவீதமும், மோட்டார் லாரியின் மீது 20 சதவீதமும், பொறிவகை மீது 5 சதவீதமும் தேய்மானம் நீக்கப்பட வேண்டும்.

தொடக்கச் செலவில் பாதியை நீக்கிவிடுக.

கடனாளிகளில் ரூ. 450-ஐ வராக் கடன் என நீக்கிவிடுக.

நிலுவையிலுள்ள கடனாளிகள் மீது 5 சதவீதம் வராக் கடனுக்காகக் காப்பு ஏற்படுத்துக.

கம்பெனியின் ஏடுகளில் கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கும் பொறுப்புகள் இன்னும் பதிவு ஆகவில்லை.

| | | |
|---|---|---|
| தொழிலரின் கூலி | .. | 3,000 |
| கொள்முதல் | .. | 2,000 |
| காப்பீடு | .. | 300 |
| மின்விசைக் கட்டணம் | .. | 500 |
| விளம்பரம் | .. | 100 |
| தணிக்கைக் கட்டணம் | .. | 500 |
| தொலைபேசிக் கட்டணம் | .. | 25 |

(M. U. B. Com., Special Accounts, April, 1963)

11. 'X' மேனுபேக்சரிங் கம்பெனி லிமிட்டெட் என்பது ரூ. 10,00,000 பெயரளவு முதலுடன் பதிவு செய்யப்பட்டது. ஒன்று ரூ. 10 வீதம் 1,00,000 நேர்மைப் பங்குகளாக (Equity shares) இம் முதல் பிரிக்கப்பட்டிருந்தது. 1963 திசம்பர் 31-ல் கணக்குகள் முடிக்கப்பட்டு, கீழ்க்கண்ட இருப்புகள் திரட்டப் பட்டன.

கணக்கேடுகளை முடிக்குமுன் கீழ்க்கண்டவற்றைச் சரிக்கட்ட வேண்டும் :

தொலைபேசி வாடகை முன்கூட்டிச் செலுத்தப்பட்டது ரூ. 250.

பயணர் கழிவு ரூ. 3,420 தரவேண்டியுள்ளது.

கொடுபடவேண்டிய வாடகை ரூ. 3,790.

கெடுநாள் வராக் காப்பீடு (Unexpired Insurance) ரூ. 5,410.

கடனாளிகள் மீது தள்ளுபடிக்காக ஒதுக்கவேண்டிய தொகை ரூ. 5,000.

கீழ்க்கண்டவாறு தேய்மானம் நீக்குக :

பொறிவகை 10 சதவீதம்; வண்டிகளும், குதிரைகளும் ரூ. 2,140.

1963 திசம்பர் 31-ல் சரக்கிருப்பு ரூ. 3,48,390 என மதிப்பிடப்பட்டது. கட்டடக் கணக்கு முழுவதையும் நீக்கிவிடவும், நடப்பாண்டு இலாபத்திலிருந்து ரூ. 70,000 காப்புக் கணக்கிற்கு மாற்றவும் இயக்குநர்கள் முடிவு செய்தனர். 1963 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டிற்கான வாணிக, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் கீழ்க் கொடுக்கப்பட்ட இருப்புகளைப் பற்று வரவுகளாகப் பிரித்து எழுதிய பின், தயார் செய்யவும் :

| | | ரூ. |
|---|---|---|
| நேர்மைப் பங்கு முதல் | .. | 2,50,000 |
| கடனீட்டுப்பத்திரக் கணக்கு (ஒன்று ரூ. 1,000 வீதம் 200); $4\frac{1}{2}$ சதவீதத்தில் | .. | 2,00,000 |
| சுமைக் கூலி, துறைமுகத் தீர்வை, சரக்குக் கட்டணம் | .. | 47,730 |
| விளம்பரம் | .. | 6,490 |
| எரிபொருள், மின்செலவு, நீர் | .. | 21,630 |
| அஞ்சல் செலவும், பிற செலவுகளும் | .. | 5,900 |
| விலை விவர ஏடும், விலைப் பட்டியலும் (Catalogue and Price Lists) | .. | 4,160 |
| கடனீட்டுப்பத்திர வட்டி | .. | 8,550 |
| இயக்குநர் ஊதியம் | .. | 10,950 |
| கட்டடக் கணக்கு | .. | 9,030 |
| கட்டுமம் (Packing) | .. | 5,420 |
| தொழிலர், மூப்போய்வு நிதி (Employees' Super-annuation Fund) | .. | 42,600 |
| மாற்றுக் கட்டணம் வசூலித்தது | .. | 10 |
| கொள்முதல் திருப்பம் | .. | 37,480 |
| விற்பனை | .. | 17,44,930 |
| பொறி பழுதுபார்க்கும் செலவு | .. | 1,770 |

| | ரூ. |
|---|---|
| குதிரைக் கொட்டில் செலவுகள் (Stable expenses) .. | 9,130 |
| அலுவலகச் செலவுகள், எழுது பொருள், தொலைபேசி முதலியவை .. | 10,220 |
| வங்கிக் கட்டணமும், வட்டியும் .. | 420 |
| பொறிவகை .. | 87,500 |
| 1963 சனவரி 1-ல் சரக்கிருப்பு .. | 3,86,720 |
| ரூ. 50,000-ற்கான பத்திரங்கள் (அடக்கவிலையில்) (தொழிலர் மூப்போய்வு நிதியை முதலீடுசெய்தல்) .. | 43,600 |
| ரொக்கம் .. | 2,100 |
| குதிரைகளும், வண்டிகளும் .. | 7,200 |
| கொள்முதல் ஏட்டின்படி கடனீந்தோர் .. | 43,400 |
| செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டு .. | 3,200 |
| கொள்முதல் .. | 10,26,640 |
| ஆலைக் கூலி .. | 1,27,040 |
| ஊதியமும், பயணர் கழிவும் .. | 1,06,910 |
| வாடகை, வரி, காப்பீடு .. | 31,730 |
| விற்பனைத் திருப்பம் .. | 66,190 |
| தள்ளுபடிக் கணக்கு .. | 27,620 |
| வராக்கடன் நீக்கியது .. | 2,030 |
| சட்டச் செலவுகளும், தணிக்கைக் கட்டணமும் .. | 4,180 |
| மூப்போய்வு நிதிக்குக் கம்பெனியின் பங்களிப்பு .. (Company's Contribution to Superannuation Fund) | 5,160 |
| விற்பனை ஏட்டின்படி கடனாளிகள் .. | 1,98,760 |
| வங்கி .. | 57,840 |

(M. U. B. Com., Sept. 1964)

12. தி பயனீர் மேனுபேக்சரிங் கம்பெனி லிமிட்டெட், பாட்னாவில் ரூ. 15,00,000 பெயரளவு பங்குமுதலுடன் பதிவு செய்யப்பட்டது. அது ஒன்று ரூ. 100 மதிப்புடைய பங்குக ளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. 1969 மார்ச் 31-ல் கம்பெனியின் பேரேட்டு இருப்புகள் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.

| | | ரூ. |
|---|---|---|
| அழைப்பு நிலுவை | .. | 18,750 |
| பொறிவகைகளும், தளவாடங்களும் | .. | 9,00,000 |
| சரக்கிருப்பு (1968 ஏப்ரல் 1) | .. | 1,87,500 |
| மனைத்துணைப் பொருள்கள் | .. | 18,000 |
| கடனாளிகள் | .. | 2,17,500 |
| கட்டடம் | .. | 7,50,000 |
| கொள்முதல் | .. | 4,62,500 |
| இடைக்காலப் பங்காதாயம் செலுத்தியது | .. | 18,750 |
| பொதுச் செலவுகள் | .. | 42,250 |
| கடனீட்டுப்பத்திர வட்டி | .. | 22,250 |
| செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டு | .. | 95,000 |
| பொதுக் காப்பு | .. | 62,500 |
| இலாப-நட்டக் கணக்கு (வ) | .. | 36,250 |
| பங்குமுதல் (முழுதும் கோரப்பட்டது) | .. | 11,50,000 |
| தொடக்கச் செலவுகள் | .. | 12,500 |
| கட்டணம் | .. | 32,750 |
| வாணிக நற்பெயர் | .. | 62,500 |
| கூலி | .. | 2,12,000 |
| ரொக்கம் | .. | 5,875 |
| வங்கியிருப்பு | .. | 95,750 |
| இயக்குநர் கட்டணம் | .. | 14,350 |
| வராக் கடன் | .. | 5,275 |
| ஊதியம் | .. | 36,250 |
| 6சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் | .. | 7,50,000 |
| விற்பனை | .. | 10,37,500 |
| 4 சதவீதம் அரசினர் பிணை முறிகள் | .. | 1,50,000 |
| வராக் கடன் ஒதுக்கு | .. | 8,750 |
| கடனீந்தோர் | .. | 1,25,000 |

1969 மார்ச் 31-ல் சரக்கிருப்பு ரூ. 2,52,500 என மதிப்பிடப்பட்டது.

கீழ்க்கண்டவற்றைச் சரிக்கட்ட வேண்டும் :

(1) தேய்மானம் நீக்குக :

பொறிவகை 10 சதவீதம்;

மனைத்துணைப் பொருள் 5 சதவீதம்.

(2) கட்டடத்தில் புதிய அறைகள் கட்டுவதற்காகச் செலவழித்த ரூ. 2,50,000 கூலியில் அடங்கியுள்ளது. இது குறித்துப் பதிவேதும் செய்யப்படவில்லை.

(3) இறுதிப் பங்காதாயத்திற்கு 5 சதவீதம் அளவில் ஒதுக்கவேண்டும்.

(4) தொடக்கச் செலவுகளில் 20 சதவீதத்தை நீக்கவேண்டும்.

(5) கடனாளிகள் தொகையில் 5 சதவீதம் அளவிற்கு ஐயக்கடன் காப்பு ஏற்படுத்தவேண்டும்.

(6) ரூ. 25,000 பொதுக் காப்பிற்கு மாற்றவேண்டும்.

(7) ரூ. 62,500-ஐ வருமான வரிக்காக ஒதுக்கவேண்டும்.

இலாப-நட்டக் கணக்கினையும், இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கினையும், இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(M. U., B. Com., April, 1974)

13. மெட்ராஸ் இரப்பர் கம்பெனி லிமிட்டெடின் 1963 திசம்பர் 31-ற்கான இருப்பாய்வு அடுத்த பக்கம் கொடுக்கப்பட்டுள்ளது.

## இருப்பாய்வு

| | பற்று | வரவு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| பங்குமுதல் — அதிகாரம் பெற்றது, வெளியிட்டது, எடுத்துக்கொண்டது, செலுத்தப்பட்டது .. | | 20,00,000 |
| குத்தகைத் தோட்டம் (Leasehold Estate) .. | 14,76,900 | |
| மேம்பாட்டுக் கணக்கு 1963 சனவரி 1-ல் (Development Account) .. | 5,93,440 | |
| உற்பத்தி இடத்தைப் பராமரித்தலும், இரப்பர் எடுத்தலும் .. | 3,66,060 | |
| இரப்பர் விளைநிலத்தில் மீண்டும் முதலீடு செய்தது .. | 1,02,120 | |
| கட்டடமும் பொறிவகையும் .. | 2,74,400 | |
| மாடுகள், பண்டங்கள் .. | 21,060 | |
| 1962 திசம்பர் 31-ல் இரப்பர் சரக்கிருப்பு .. | 2,84,820 | |
| இரப்பர் விற்றது .. | | 8,47,940 |
| பல்வகை வரவினம் .. | | 280 |
| இயக்குநர் கட்டணம் .. | 17,000 | |
| தணிக்கைக் கட்டணம் .. | 5,080 | |
| வருமான வரி .. | 48,600 | |
| வைப்புத் தொகை மீது வட்டி .. | | 1,280 |
| மாற்றுக் கட்டணம் (Tranfer Fees) .. | | 200 |
| வங்கியிலும், கையிலும் ரொக்கம் .. | 1,49,760 | |
| கடனாளிகள் .. | 22,040 | |
| கடனீந்தோர் .. | | 91,620 |
| பொதுக்காப்பு .. | | 3,00,000 |
| இலாப-நட்டக் கணக்கு (1962ஆம் ஆண்டிற்கான இறுதிப் பங்காதாயம் செலுத்திய பிறகு இருப்பு) .. | | 1,69,960 |
| 1963 சூலை 31-ல் செலுத்திய இடைக்காலப் பங்காதாயம் .. | 50,000 | |
| | 34,11,280 | 34,11,280 |

கட்டடத்தின் மீதும், பொறிவகை மீதும் 10 சதவீதம் தேய்மானம் ஒதுக்குக.

பொதுக் காப்புக்கு ரூ. 10,000 எடுத்துச் செல்க.

வருமான வரியும், பொதுக் காப்பும் ஒதுக்கு முன்னுள்ள இலாபத்தில் $2\frac{1}{2}$ சதவீதம் அளவில் இயக்குநருக்குக் கூடுதல் ஊதியம் தரவேண்டியுள்ளது.

1963 திசம்பர் 31-ல் இருந்த இரப்பர் சரக்கிருப்பு ரூ. 3,13,720 என மதிப்பீட்டப்படுகிறது.

1963 திசம்பர் 31-ல் முடியும் ஆண்டிற்கான இலாப-நட்டக் கணக்கையும், இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கையும், அந் நாளிற்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(M. U., B. Com., Sept. 1965)

14. மாடர்ன் மேனுபேக்சரிங் கம்பெனி லிமிட்டெடின் கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கும் இருப்பாய்விலிருந்து 1969 சூன் 30-ல் முடியும் ஆண்டிற்கான வாணிக, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளிற்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

பற்றிருப்புகள்

| | | ரூ. |
|---|---|---|
| சரக்கிருப்பு, 1968 சூலை 1 | .. | 13,000 |
| பொறிவகை | .. | 99,270 |
| வில்லங்கமற்ற சொத்து | .. | 15,040 |
| தொடக்கச் செலவுகள் | .. | 832 |
| கடனாளிகள் | .. | 25,000 |
| கூலி | .. | 7,400 |
| ஊதியம் | .. | 2,090 |
| கொள்முதல் | .. | 64,700 |
| வராக் கடன் | .. | 340 |
| இயக்குநர், தணிக்கையர் ஊதியம் | .. | 290 |

## பற்றிருப்புகள்—(தொடர்ச்சி)

| | | ரூ. |
|---|---|---|
| கடனீட்டுப்பத்திர வட்டி | .. | 600 |
| காப்பீடு | .. | 300 |
| வங்கியில் ரொக்கம் | .. | 1,730 |
| ரொக்கம் | .. | 45 |
| 6 சதவீதம் அரசு பிணைமுறி (Government Bonds) | .. | 10,000 |
| இயக்குவிசை | .. | 2,000 |
| கட்டடம் | .. | 45,060 |
| பொதுச் செலவு | .. | 143 |
| பழுதுபார்க்கும் செலவு | .. | 390 |
| அச்சுக் கூலியும், எழுது பொருளும் | .. | 210 |
| வாடகையும், வரியும் | .. | 620 |
| சுமைக் கூலி | .. | 200 |
| பயணச் செலவு | .. | 105 |
| கடனீட்டுப்பத்திரத் தள்ளுபடி | .. | 500 |
| கழிவு நிதி முதலீடு | .. | 25,000 |
| வாணிக நற்பெயர் | .. | 5,000 |
| விடுகருவிகள் | .. | 4,420 |
| உள் திருப்பம் | .. | 470 |
| வங்கிக் கட்டணம் | .. | 15 |
| அளித்த தள்ளுபடி | .. | 130 |
| பொறிவகை மீது தேய்மானம் | .. | 5,500 |
| கட்டடத்தின் மீது தேய்மானம் | .. | 1,500 |

## வரவிருப்புகள்

| | | ரூ. |
|---|---|---|
| எடுத்துக்கொள்ளப்பட்டதும், முழுதும் செலுத்தப்பட்டது மான பங்கு முதல் | .. | 25,000 |
| உரிமை கோராப் பங்காதாயம் | .. | 170 |

| | | ரூ. |
|---|---|---|
| கடனீட்டுப்பத்திர மீட்பு நிதி | .. | 25,000 |
| காப்பு நிதி | .. | 4,760 |
| கொள்முதல் திருப்பம் | .. | 350 |
| செலுத்தற்குரிய மாற்றுச் சீட்டு | .. | 930 |
| கழிவு நிதி முதலீட்டு வட்டி | .. | 800 |
| கடனீந்தோர் | .. | 20,000 |
| பல்வகை வரவினம் | .. | 40 |
| 5 சதவீதம் கடனீட்டுப் பத்திரங்கள் | .. | 30,000 |
| வராக் கடன் காப்பு | .. | 5,000 |
| அரசுப் பிணைமுறி மீது வட்டி | .. | 300 |
| விற்பனை | .. | 98,350 |
| தேய்மான நிதி | .. | 20,240 |
| இலாப-நட்டப் பகிர்வுக் கணக்கு (1968 ஜூலை 1-ல் இருப்பு) | .. | 960 |

கடனாளிகள் மீது 5 சதவீதம் அளவில் வராக் கடன் காப்பை வைத்திருக்க வேண்டும். இயக்குநர் கட்டணத்திற்காக ரூ. 200 கொடுக்கவேண்டியுள்ளது. 1969 செப்டம்பர் 30-ல் முடியும் ஆண்டிற்குக் காப்பீடு செலுத்தப்பட்டுள்ளது. தொடக்கச் செலவு முழுவதையும் நீக்கி விடுக. கடனீட்டுப் பத்திர மீட்பு நிதியில் ரூ. 1,000 சேர்த்துக் கொள்க. ஆண்டிறுதி நாளில் ரூ. 300-க்கான சரக்குப் பெறப்பட்டது. இது இறுதிச் சரக்கிருப்பில் சேர்க்கப்பட்டும், கொள்முதல் ஏட்டில் பதிவாகவில்லை. இறுதிச் சரக்கிருப்பின் மதிப்பு ரூ. 13,700 என மதிப்பிடப்பட்டது. கம்பெனியின் அதிகாரம் பெற்ற முதல் ரூ. 1,50,000. இது ஒன்று ரூ. 10 வீதம் 15,000 நேர்மைப் பங்குகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

(M. U., B. Com., Sept., 1969)

15. கீழே கொடுக்கப்பட்டிருக்கும் கல்கத்தா மாவு மில் கம்பெனி லிமிடெடின் 31—12—1970-ற்கான இருப்பாய்வில்

இருந்து, அந் நாளில் முடியும் ஆண்டிற்கான வாணிக, இலாப-நட்டக் கணக்கினையும், அந் நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க :

## இருப்பாய்வு—31-12-1970

| | பற்று | வரவு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| பங்குகள் : | | |
| எடுத்துக் கொண்டது : | | |
| ஒன்று ரூ. 500 வீதம் 9,000 பங்குகள் (பங்கொன்றுக்கு ரூ. 400 வீதம் கோரப் பட்டிருக்கிறது.) .. | | 36,00,000 |
| அழைப்பு நிலுவை .. | 1,000 | |
| கட்டடம் (அடக்கவிலையில்) 10,00,000 | | |
| கழி : 31–12–69வரை தேய்மானம் 2,00,000 | 8,00,000 | |
| பொறிவகை (அடக்கவிலையில்) 48,00,000 | | |
| கழி : 31–12–69வரை தேய்மானம் 7,50,000 | 40,50,000 | |
| பொதுக்காப்பு .. | | 3,00,000 |
| பங்காதாயச் சமன்செய் நிதி .. | | 1,50,000 |
| வங்கி மேல்வரைப் பற்று (சரக்கிருப்பு ஈட்டின்பேரில்) .. | | 5,00,000 |
| கடனீந்தோர் .. | | 95,000 |
| உரிமைகோரா இலாப ஈவு .. | | 1,200 |
| கொள்முதல் (கோதுமை) .. | 54,00,000 | |
| விசை (Power) .. | 3,15,000 | |
| விற்பனை (மாவு) .. | | 67,60,000 |
| காப்பு வைப்பு (Security Deposit) .. | | 1,20,000 |
| 7½ சதவீதத்தில் இந்திய அரசு கடனில் முதலீடு செய்தது (சந்தை மதிப்பு ரூ. 90,000) .. | 80,000 | |

**இருப்பாய்வு—31-12-1970—***(தொடர்ச்சி)*

| | பற்று | வரவு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| ரொக்கம் .. | 2,100 | |
| வங்கி .. | 14,495 | |
| கோதுமை பெறுவதற்கான முன்பணம் .. | 15,000 | |
| பண்டங்கள் வாங்கியது (Stores purchased) .. | 3,45,000 | |
| கூலி .. | 4,00,000 | |
| வட்டி பெற்றது .. | | 4,020 |
| மாற்றுக் கட்டணம் (Transfer fees) .. | | 750 |
| கடனாளிகள் (இயக்குநர்கள் தர வேண்டியது ரூ. 1,300) .. | 66,100 | |
| இலாப-நட்டக் கணக்கு .. | | 90,225 |
| ஊதியம் .. | 67,500 | |
| வாடகையும், வரியும் .. | 34,000 | |
| வருமானவரி (சென்ற ஆண்டின் இருப்பு) .. | 16,000 | |
| பொதுச் செலவுகள் .. | 47,000 | |
| கொடுபடவேண்டிய ஊதியமும், கூலியும் .. | | 32,000 |
| | 1,16,53,195 | 1,16,53,195 |

அதிகாரம் பெற்ற பங்கு முதல் ஒன்று ரூ. 500 மதிப்புள்ள பங்குகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

கீழ்க்கண்டவற்றிற்கு வகை செய்க :

| | | ரூ. |
|---|---|---|
| அ. | கட்டடத்தின் மீது தேய்மானம் .. | 40,000 |
| ஆ. | பொறிவகை மீது தேய்மானம் .. | 2,00,000 |
| இ. | பொதுக் காப்பிற்கு மாற்றம் .. | 1,50,000 |

| | | ரூ. |
|---|---|---|
| ஈ. பங்காதாயச் சமன்செய் நிதிக்கு மாற்றம் | .. | 1,00,000 |
| உ. விற்பனைக் கழிவு | .. | 1,49,075 |
| ஊ. வங்கி மேல்வரைப் பற்று மீது ஆண்டிற்கு 7 சதவீதம் வீதம் ஆறு திங்கட்கு வட்டி : | .. | |
| முதலீடுகள்மீது ஏறியுள்ள வட்டி | .. | 1,980 |
| இறுதிச் சரக்கிருப்புக் கோதுமை (அடக்க விலையில்) | .. | 10,15,000 |
| மாவு (அடக்க விலையில்) | .. | 2,40,000 |
| பண்டங்கள் (அடக்க விலையில்) | .. | 95,000 |

நடப்பாண்டிற்கான வருமானவரியை விட்டு விடுக

(I. C. W. A. I., July, 1971)

16. 1968 ஏப்ரல் 1-ல் சில்வர் ஓர் கம்பெனி (Silver Ore Company) என்பது ரூ. 6,00,000 முதலுடன் அமைக்கப் பெற்றது. இது ஒன்று ரூ. 10 மதிப்புடைய பங்குகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இவற்றில் 52,000 பங்குகள் வெளியிடப் பட்டு எடுத்துக்கொள்ளப்பட்டன. ஆனால், 100 பங்குகள் மீது பங்கழைப்பு நிலுவையில் இருந்தது. 1969 மார்ச் 31-க்கான இருப்பாய்வு கீழே கொடுக்கப்பட்டிருக்கிறது. அதி லிருந்து வாணிக இலாப-நட்டக் கணக்கினையும், அந் நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க :

**இருப்புநிலைக் குறிப்பு**

| | | பற்று | வரவு |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| வங்கியில் ரொக்கம் | .. | 1,05,500 | |
| பங்கு முதல் | .. | | 5,19,750 |
| பொறிவகை | .. | 40,000 | |
| வெள்ளி விற்பனை | .. | | 1,79,500 |

## இருப்புநிலைக் குறிப்பு—(தொடர்ச்சி)

| | வரவு | பற்று |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| சுரங்கங்கள் .. | 2,20,000 | |
| தொடக்கச் செலவுகள் .. | 6,000 | |
| தவணை வைப்பின் மீது வட்டி, திசம்பர் 31 வரை .. | | 3,900 |
| முதலீடு மீது பங்காதாயம் .. | | 3,200 |
| உரிமை ஊதியம் (Royalties) .. | 10,000 | |
| ரயில்வே வேகன்கள் .. | 17,000 | |
| சுரங்கத் தொழிலருக்குக் கூலி .. | 74,220 | |
| விளம்பரம் .. | 5,000 | |
| பொறிவகைக்கான சுமைக் கூலி .. | 1,800 | |
| மனைத்துணைப் பொருளும், கட்டடமும் .. | 20,900 | |
| நிர்வாகச் செலவுகள் .. | 28,000 | |
| பொறிவகை பழுதுபார்க்கும் செலவு .. | 900 | |
| நிலக்கரியும் எண்ணெயும் .. | 6,500 | |
| ரொக்கம் .. | 530 | |
| முதலீடுகள் (Shares of Tin Mines) பங்குகள் .. | 80,000 | |
| மேற்கண்டதின் மீது தரகு .. | 1,000 | |
| சிண்டிகேட் வங்கியில் 6 சதவீதம் தவணை வைப்பு .. | 89,000 | |
| | 7,06,350 | 7,06,350 |

பொறிவகை, ரயில்வே மீது 10 சதவீதமும், மனைத்துணைப் பொருள், கட்டடம் மீது 5 சதவீதமும் தேய்மானம் நீக்குக.

தொடக்கச் செலவில் மூன்றில் ஒரு பங்கை நீக்கிவிடுக.

1969 மார்ச் 31-ல் வெள்ளி தாதுக்கள் ரூ. 15,000 என மதிப்பிடப்பட்டது.

1968 திசம்பர் 20-ல் பங்கு ஒன்றுக்கு ரூ. 7.50 வீதம் மட்டுமே செலுத்தப்பட்டிருந்த 100 பங்குகளை இயக்குநர்கள் ஒறுப்பிழப்புச் செய்தனர்.

(Mysore, B. Com., 1972)

17. B. G. P. மேனுஃபேக்சரிங் கம்பெனி என்பது 1969 ஏப்ரல் 1-ல் ரூ. 30,00,000 பெயரளவு முதலுடன் பதிவு செய்யப்பட்டது. இது, ஒன்று ரூ. 10 மதிப்புடைய 1,00,000 6 சதவீதம் முன்னுரிமைப் பங்குகளாகவும், ஒன்று ரூ. 10 மதிப்புடைய 2,00,000 நேர்மைப் பங்குகளாகவும் பிரிக்கப்பட்டது. 1970 மார்ச் 31-ல் கம்பெனியின் ஏடுகளிலிருந்து கீழ்க்கண்ட இருப்புகள் திரட்டப்பட்டன.

| | ரூ. |
|---|---|
| சுமைக் கூலியும் உள்வரு சரக்குக் கட்டணமும் | .. 95,460 |
| விளம்பரம் | .. 33,080 |
| எரிபொருள், மின்விளக்கு, நீர் | .. 43,260 |
| விற்ற பொருள்களுக்கான கட்டுமச் செலவுகள் (packing expenses) | .. 10,840 |
| பொறி பழுதுபார்த்த செலவு | .. 3,540 |
| மோட்டார் வண்டிச் செலவுகள் | .. 18,260 |
| அலுவலகச் செலவு, எழுதுபொருள், தொலைபேசி | .. 20,440 |
| நேர்மைப் பங்கு முதல் | ..10,00,000 |
| முன்னுரிமைப் பங்குமுதல் | ..10,00,000 |
| கடனீட்டுப் பத்திரங்கள் : | |
| ஒன்று ரூ. 1,000 வீதம் $5\frac{1}{2}$ % வட்டியில் 400 கடனீட்டுப் பத்திரங்கள் 1969 அக்டோபர் 1-ல் வெளியிடப்பட்டன. வட்டி அரை ஆண்டுக்கு ஒருமுறை செலுத்தப்பட வேண்டியது | .. 4,00,000 |
| இயக்குநர் கட்டணம் | .. 30,000 |
| கட்டடம், வாங்கிய விலையில் | .. 18,060 |
| பொறிவகை, வாங்கிய விலையில் | ..15,84,000 |
| வாணிக நற்பெயர், வாங்கிய விலையில் | .. 1,00,000 |
| 1969 ஏப்ரல் 1-ல் சரக்கிருப்பு | .. 7,73,440 |
| ரொக்கம் | .. 4,200 |

| | | ரூ. |
|---|---|---|
| மோட்டார் வண்டிகள், வாங்கிய விலையில் | .. | 14,400 |
| கொள்முதல் | .. | 20,53,280 |
| கொள்முதல் திருப்பம் | .. | 74,960 |
| ஆலைக் கூலி | .. | 2,54,080 |
| ஊதியம் (மேலாண்மை இயக்குநர் ரூ. 20,000 உள்பட) | .. | 2,00,000 |
| பயணர் கழிவு | .. | 13,820 |
| வாடகை, காப்பீடு | .. | 63,460 |
| விற்பனை | .. | 34,89,860 |
| விற்பனைத் திருப்பம் | .. | 1,32,380 |
| அளித்த தள்ளுபடி | .. | 55,240 |
| நீக்கப்பட்ட வராக் கடன் | .. | 4,060 |
| சட்ட, தணிக்கைக் கட்டணம் | .. | 21,560 |
| விற்பனை பேரேட்டின்படி கடனாளிகள் | .. | 4,12,640 |
| கொள்முதல் பேரேட்டின்படி கடனீந்தோர் | .. | 1,10,360 |
| வங்கி | .. | 1,15,680 |

ஏடுகளை முடிக்குமுன்னர், கீழ்க்கண்ட சரிக்கட்டுதல்களைச் செய்யவேண்டும் :

| | | ரூ. |
|---|---|---|
| (அ) | முன்கூட்டிச் செலுத்திய தொலைபேசிக் கட்டணம் | 60 |
| (ஆ) | பயணர் கழிவு தரவேண்டியது | 5,140 |
| (இ) | வாடகை தரவேண்டியது | 9,000 |
| (ஈ) | கெடுநாள்வராக் காப்பீடு | 300 |
| (உ) | கடனாளிகள் மீது $1\frac{1}{4}$ சதவீதம் அளவில் தள்ளுபடிக்கு ஒதுக்குக | |
| (ஊ) | கீழ்க்கண்டவற்றின் மீது தேய்மானம் நீக்குக : | |
| | பொறிவகை மீது 5 சதவீதம் மோட்டார் வண்டிகள் | 4,280 |
| | கட்டடம் | 860 |

(எ) ஆண்டிறுதியிலிருந்த சரக்கிருப்பு ரூ. 6,96,780 என மதிப்பிடப் பட்டது.

(ஏ) நடப்பு ஆண்டு இலாபத்திலிருந்து ரூ. 1,40,000 காப்புக் கணக்கிற்கு எடுத்துச்செல்ல இயக்குநர்கள் முடிவு செய்தனர்.

1970 மார்ச் 31-ல் முடியும் ஆண்டிற்கான வாணிக, இலாப-நட்டக் கணக்கையும், அந் நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

பங்காதாயம் பற்றியோ, வரி பற்றியோ பொருட்படுத்த வேண்டாம்.

(Calicut University-B. Com., April, 1971)

18. நியூ ஃபேஷன்ஸ் காட்டன் மில்ஸ் லிமிட்டெடின் ஏடுகளிலிருந்து 1957 மார்ச் 31-ற்கான இருப்புகள் கீழே கொடுக்கப் பட்டுள்ளன. இவற்றிலிருந்து 1956 கம்பெனிச் சட்டத்தில் கொடுக்கப்பட்டுள்ள படிவத்தில் இருப்புநிலைக் குறிப்பைத் தயாரிக்கவும். அதனுடன் கடந்த இருப்புநிலைக் குறிப்பு நாளிலிருந்து இலாபப் பகிர்வினை முழு விவரங்களுடன் காட்டுக :

**இருப்பாய்வு**

| | | பற்று | வரவு |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| நிலம் | .. | 85,000 | |
| ஆலை ரொக்கம் | .. | 2,000 | |
| பங்குமுதல் | .. | | 6,30,000 |
| கட்டடம் | .. | 2,12,500 | |
| அழைப்பு நிலுவை | .. | 25,000 | |
| கடனீந்தோர் | .. | | 6,18,000 |
| முதல் காப்பு (Capital Reserve) | .. | | 1,54,000 |
| தொடக்கச் செலவுகள் | .. | 38,000 | |
| பங்குத் தரகு | .. | 4,000 | |

## இருப்பாய்வு—(தொடர்ச்சி)

| | பற்று | வரவு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| பண்டங்களும், உதிரியுறுப்புகளும் (Stores and spare parts) .. | 90,000 | |
| கொடுக்கவேண்டிய கூலி .. | | 9,100 |
| பண்டக்காப்பக வாடகை தரவேண்டியது .. | | 3,500 |
| சரக்கிருப்பு .. | 2,50,000 | |
| கெடுநாள் வராக் காப்பீடு (Unexpired Insurance) .. | 3,200 | |
| அலுவலகத்தில் ரொக்கம் .. | 1,25,000 | |
| தொழிலர் நல நிதி .. | | 15,000 |
| ஊதியம் தரவேண்டியது .. | | 5,000 |
| வராக் கடன் காப்பு .. | | 6,500 |
| வங்கி .. | 62,400 | |
| கால்நடை (Live-stock) .. | 4,500 | |
| பொறிவகை .. | 5,18,000 | |
| விடு கருவிகள் .. | 1,20,000 | |
| கடனாளிகள் .. | 1,25,000 | |
| செலுத்தப்பெறாப் பங்காதாயம் .. | | 3,500 |
| இலாப-நட்டக் கணக்கு (நடப்பு ஆண்டு இலாபத்திற்காக இக் கணக்கில் ரூ. 3,61,200 வரவு வைக்கப்பட்டும், ஏப்ரல் 5-ம் நாளும், அக்டோபர் 3-ம் நாளும், நிறைவேற்றிய தீர் மானத்தின்படி, பகிர்வுக்காகப் பற்று வைக்கப்பட்ட பின்னரும் உள்ள இருப்பு) .. | | 2,20,000 |
| | 16,64,600 | 16,64,600 |

ஆலை ரூ. 15,00,000 முதலுடன் தொடங்கப்பட்டது. ஒன்று ரூ. 100 மதிப்புடைய 15,000 நேர்மைப் பங்குகளாக இம் முதல் பிரிக்கப்பட்டிருந்தது. 15,000 பங்குகளில், 10,000 பங்குகள் வெளியிடப் பட்டன. இவற்றில் 8,400 பங்குகளே எடுத்துக் கொள்ளப்பட்டன. பங்கு ஒன்றுக்கு ரூ. 75 வீதம் அழைக்கப்பட்டிருந்தது. ரூ. 1,25,000-ற்கான கடனுளிகளில் ரூ. 80,000 பிணையம் உடையது; வரக்கூடியது. ரூ. 38,000 பிணையமற்றது; ஆயினும், வரக்கூடியது. ரூ. 5,000 ஐயத்திற்குரியது. ரூ. 2,000 வராக் கடன்.

ரூ. 6,18,000-ற்கான கடனீந்தோரில் ரூ. 59,000 சரக்கு அளித்தமைக்காக (for goods supplied) ஆகும்; ரூ. 4,38,000 வங்கியில் வாங்கிய கடனுக்கானதாகும் (இது கட்டடம், பொறி வகை ஆகியவற்றின் அடைமானத்தின் பேரில் வாங்கப்பட்டது); ரூ. 1,10,000 துணைக் கம்பெனிகட்குச் சேரவேண்டியது; ரூ. 8,000 உற்பத்தி தீர்வைக்கானதாகும்; மீதியுள்ளது பிணையமற்ற கடனீந்தோராகும்.

1956 மார்ச் 31-ற்குரிய இருப்புநிலைக் குறிப்பின்படி உள்ள இலாப-நட்டக் கணக்கின் வரவிருப்பிலிருந்து 1955 — 56ஆம் ஆண்டின் இரண்டாவது அரையாண்டிற்கான இறுதிப் பங்காதாயமாகப் பங்கு ஒன்றுக்கு ரூ. 10 செலுத்த வேண்டுமென்றும், காப்பு நிதிக்கு ரூ. 84,000 எடுத்துச் செல்லவேண்டுமென்றும், தொழிலர் நலநிதிக்கு ரூ. 15,000 எடுத்துச் செல்லவேண்டுமென்றும், ரூ. 38,000 தொடக்கச் செலவிற்காக நீக்கவேண்டுமென்றும் ஏப்ரல் 5-ல் தீர்மானிக்கப்பட்டது. 1956 — 57ஆம் ஆண்டின் முதலாவது அரையாண்டிற்கான இடைக்காலப் பங்காதாயமாகப் பங்கு ஒன்றுக்கு ரூ. 18 வீதம் செலுத்தவேண்டுமென்று அக்டோபர் 3-ல் மேலும் தீர்மானிக்கப்பட்டது.

(C. A.-Nov., 1957)

